# யாழ்ப்பாண அகராதி

## பாகம் – 1

**அ** - *அஃறிணைப்பன்மையீறு, ஆறாவதன் பன்மையுருபு, சாரியை, சுட்டு, இன்மை-எதிர்மறை-குறைவு-தடை-பிறிது-வியப்பு இவற்றைக் காட்டுமோருப சருக்கம், ஓரெழுத்து, பெயரெச்ச விகுதி, வினையெச்ச விகுதி.*

**அஃகரம்** - *வெள்ளெருக்கு.*

**அஃகல்** - *குறைதல், சுருங்கல்.*

**அஃகுபோதம்** - *நிலாமுக்கிப்புள்.*

**அஃகுல்லி** - *சிற்றுண்டி, பிட்டு.*

**அஃகேனம்** - *ஆய்தவெழுத்து, முள்ளில்லாப்பன்றி.*

**அஃது** - *அது.*

**அஃறிணை** - *இழிதிணை.*

**அகக்கடவுள்** - *மனம்.*

**அகக்காழ்** - *ஆண்மரம், உள்வயிரம், வச்சிரக்கல்.*

**அகங்கரித்தல்** - *ஆங்காரங்கொள் ளுதல்.*

**அகங்கரிப்பு** - *மனவெறுப்பு.*

**அகங்களித்தல்** - *மனமகிழ்தல்.*

**அகங்காரக்கிரந்தி** - *ஆணவ மறைப்பு, மாயாபாசமும் மலத்தொடக்கு.*

**அகங்களித்தல்** - *மனமதர்த்தல்.*

**அகங்காரத்திரயம்** - *முக்கியவகங் காரம், முக்கியா முக்கியவகங் காரம், அமுக்கியவகங் காரம் எனமூன்று.*

**அகங்காரம்** - *அகந்தை, உட்கரணம் நான்கினொன்று.*

**அகங்காரி** - *அகங்காரமுடையது.*

**அகங்காழ்** - *அகக்காழ்.*

**அகங்கை** - *உள்ளங்கை.*

**அகசியம்** - *வேடிக்கை.*

**அகசு** - *பகல், பொழுது.*

**அகச்சுட்டு** - *சொல்லகத்து முதனி லையாயமைந்துநிற்குஞ் சுட்டு.*

**அகடம்** - *பொல்லாங்கு, அநீதம்.*

**அகடவிகடம்** - *அபாயம், இரண்டகம், வஞ்சகம்.*

**அகடு** - *உள், நடு, பொல்லாங்கு, வயிறு, சீர், மேடு.*

**அகடூரி** - *பாம்பு.*

**அகணி** - *உள், மருதநிலம், வயல், தெங்குபனைமுதலிய வற்றினார்.*

**அகணிதபஞ்சாங்கம்** - *அலகிடாது சொல்லும்பஞ்சாங்கம்.*

**அகணிதபஞ்சாங்கி** - *கணியாது பஞ்சாங்கஞ் சொல்வோன்.*

**அகணிதம்** - *எண்ணிக்கையின்மை.*

**அகண்** - *அருகு.*

**அகண்டம்** - *எல்லாம், மண்ணகல்.*

**அகண்டன்** - *அருகன், கடவுள், சிவன், விட்டுணு.*

**அகண்டாகண்டன்** - *கடவுள்.*

**அகண்டாகாரவிருத்தி** - *அஞ்ஞான நீக்கிச்சீவசாட்சியைத் தோற்று விப்பது.*

**அகண்டி** - *ஓர்வாச்சியம்.*

**அகண்டிதம்** - *முழுதும், ஏற்றுக் கொள்ளல், கண்டிப்பில்லது, கூறு படாமை.*

**அகதங்காரன்** - *வைத்தியன்.*

**அகதம்** - *ஓர்குழிகை, சுகம்.*

**அகதி** - *தகுதியற்றவன், போக்கற்றவன், வறியவன்.*

**அகதேசி** - *உள்ளூர்யாசகி.*

**அகதேசு** - *பிணியில்லான்.*

**அகத்தி** - *ஒரு மரம்.*

**அகத்திணை** - *உள்ளொழுக்கம்.*

**அகத்திணைப்புறம்** - *கைக்கிளையும் பெருந்திணையும்.*

**அகத்தியன்** - *சத்தவிருடிகளிலொரு வன்.*

**அகத்தியம்** - *அவசரம், தேவை.*

**அகத்தியா** - *ஆழம், எட்டாமை.*

**அகத்தீடு** - *கைக்குள் விட்டணைத்தல்.*

**அகத்துறுப்பு** - *உள்ளியல்.*

**அகநிலை** - *கடவுள்.*

**அகந்தை** - *ஆங்காரம், செருக்கு.*

**அகப்படுத்தல்** - *உட்படுதல், கிடைத் தல், கிட்டுதல், சிக்குதல்.*

**அகப்பற்று** - *மனவிருப்பு.*

**அகப்பா** - *அகழி, மதிலுண்மேடை, மதில்.*

**அகப்பாடு** - *அகப்படுதல், உண்ணி கழ்ச்சியானது.*

**அகப்பாட்டுவண்ணம்** - *முடியாது போன்றுமுடிவது.*

**அகப்பாட்டுறுப்பு** - *திணைமுதற்று றையீறாகக் கூறப்படு முறுப்புப் பன்னிரண்டும்.*

**அகப்புறக்கைக்கிளை** - *காமஞ்சால விளைமைத்தன்மையுடைய தலைமகள் பக்கத்துத்தலைமகன் குறிப்பினை யறியாது அவளோடு மேன்மேலுங் கூறுவது.*

**அகப்புறத்திணை** - *கைக்கிளையும் பெருந்திணையும்.*

**அகப்புறப்பாட்டு** - *மடலேறுதன் முதலாகத்தபுதார்நிலையீறாகச் சொல்லப்பட்டவியற்பெயர்க் கோடாமையாம்.*

**அகப்புறப்பெருந்திணை** - *அகன்று ழிக்கலங்கன் முதலாகத் தலைவி யுந்தானும் வனமடைந்து நோற்ற லீறாகச் சொல்லப் பட்டனவும் பிறவுங்கூறுதலாம்.*

**அகப்புறப்பொருள்** - *கைக்கிளையும் பெருந்திணையும்.*

**அகப்பு** - *தாழ்வு.*

**அகப்பை** - *சட்டுவம்.*

**அகப்பொருட்கோவை** - *ஓர்பிரபந்தம்.*

**அகப்பொருள்** - *ஓரிலக்கணம், அஃது உண்ணிகழ்ச்சியான சிற்றின்பத்திற் குரிய வெழுதிணையைக் கூறும்.*

**அகமகிழ்ச்சி, அகமலர்ச்சி** - *ஆனந்தம், மனமகிழ்ச்சி.*

**அகமம்** - *மரப்பொது.*

**அகமரிஷணம்** - *அகங்கையுணீர் விட்டுமூக்கு நுதியில் வைத்துச் செபித்தல்.*

**அகமருடணம்** - *நீர்க்குணின்று செய்யு மோர் செபம்.*

**அகம்** - *இடம், உள், தானியம், பள்ளம், பாவம், பூமி, மரப்பொது, மனம், வீடு, ஆன்மா, உபத்திரவம், ஏழனுருபு, ஓர்மரம், குணா குணம், சூரியன், பாம்பு, மலை, வருத்தம்.*

**அகம்படியார்** - *உள்வேலைக்காரர், ஓர் சாதியார்.*

**அகம்பிரமம்** - *ஆங்காரம், நாமேபிரமமெனல்.*

**அகம்மதி** - *அறியாமை, தற்பிரியம்.*

**அகம்மியம்** - *பத்திலட்சங் கோடி கோடிகோடாகோடி.*

**அகரம்** - எழுத்தின் சாரியை, ஓரெழுத்து, பார்ப்பனச்சேரி, மருத நிலத்தூர், வீடு.

**அகராதி** - அகரமுதலெழுத்துக்களாற் றொடங்குஞ் சொற் கோவை.

**அகரீஷணம்** - துக்கம், வெறுப்பு.

**அகரு** - அகில்.

**அகருதம்** - வீற்றிருத்தல்.

**அகர்த்தத்துவம்** - அழிக்குந்தத்துவம், செயலின்மை.

**அகர்த்தனன்** - குள்ளன்.

**அகர்த்தா** - பஞ்சகோசங் கட்கன்னியன்.

**அகர்த்தியம்** - கிருத்துவம்.

**அகர்ப்பதி, அகர்ம்மணி** - சூரியன்.

**அகர்ம்முகம்** - வைகறை.

**அகலக்கட்டை** - அகலமற்றது.

**அகலம்** - மார்பு, விசாலம், விரிவு, தரவை.

**அகலர்** - சண்டாளர்.

**அகலல்** - நீங்கல், பிரிதல், விசாவித்தல், விருத்தித்தல்.

**அகலவுரை** - விரித்துரை, அஃது இலக்கணமும் இலக்கியமு மெடுத்துக் காட்டிப் பொருள் விரித்துரைப்பது.

**அகலிகை** - பஞ்சகன்னிகைகளி லொருத்தி.

**அகலிடம்** - பூமி.

**அகலியம்** - மரப்பொது.

**அகலுதல்** - அகன்றுபோதல், நீங்குதல், விரிதல்.

**அகலுள்** - அகலம், ஊர், நாடு, பெருமை.

**அகல்** - அல்குல், தகழி, நீங்கென் னேவல்.

**அகல்வு** - அகலம், அகலல்.

**அகல்வோர்** - ஈனர்.

**அகவலுரிச்சீர்** - ஈரசைச்சீர்.

**அகவலோசை** - ஆசிரியப்பாவிற் குரியவோசை.

**அகவல்** - அழைத்தல், ஆசிரியப்பா, ஆடல், ஒரு சந்தம், மயிற்குரல்.

**அகவற்சுரிதகம்** - ஆசிரியச்சுரிதகம்.

**அகவற்பா** - ஐந்துபாவினொன்று, அஃது நாற்சீரான்வருமள படியாயும் இயற்சீர்பயின்றும் அயற் சீர் விரவியுந் தன்றளை தழுவியும் பிறதளை மயங்கியும் கருவிளங் கனிகூவிளங்கனியென்னு மிரு சீர்கலவாது மூன்று முதலிய பல வடிகொண்டுமுடிவது.

**அகவற்றுள்ளல்** - வெண்டளையுங் கலித்தளையும் விரவிவருவது.

**அகவற்றூங்கல்** - ஒன்றாதவஞ்சித் தளையான்வருவது.

**அகவிதழ்** - உள்ளிதழ்.

**அகழான்** - ஓரெலி.

**அகழி** - அகழ்.

**அகழெலி** - அகழான்.

**அகழ்** - அகழி, தோண்டென்னேவல்.

**அகழ்தல்** - தோண்டல்.

**அகளங்கமூர்த்தி** - புத்தன்.

**அகளங்கம்** - சீதாங்கபாஷாணம்.

**அகளங்கன்** - கடவுள், மாசிலான், புத்தன்.

**அகளம்** - தாழி, மிடா.

**அகளி** - தாழி, மிடா.

**அகறல்** - அகலம், கடத்தல்.

**அகற்றுதல்** - அகலப்பண்ணுதல், துரத்துதல், விரித்தல்.

**அகனம்** - கனமில்லாதது.

**அகன்மக்கத்திருப்பிரயோகம்** - செயப் படுபொருளிலாவினை, (உம்) நடந்தான்.

**அகன்மணி** - தெய்வமணி.

**அகன்றில்** - ஒருபட்சி, ஆண் அன்றில்.

**அகன்னம்** - செவிடு.

**அகாசரம்** - *அறியாமை.*

**அகாண்டபாதசாதம்** - *சாதமரணம்.*

**அகாதம்** - *நீந்துபுனல், பள்ளம், வஞ்சகம்.*

**அகாதன்** - *வஞ்சகன்.*

**அகாதத்துவம்** - *ஆழம்.*

**அகாதம்** - *முந்து.*

**அகாதிதம்** - *பட்சித்தல்.*

**அகாத்தியம்** - *பொல்லாங்கு வஞ்சனை.*

**அகாத்துமசை** - *பார்வதி.*

**அகாரணம்** - *காரணமின்மை.*

**அகாரணன்** - *ஏதுவில்லான்.*

**அகாரத்திரயவித்தை** - *பஞ்சாக்கர வித்தைகளினொன்று.*

**அகாரம்** - *ஓரெழுத்து, வீடு.*

**அகாரி** - *கடவுள்.*

**அகாரியம்** - *காரியமற்றது, துற் செய்கை.*

**அகாலமிருத்து** - *அநியமமரணம்.*

**அகாலம்** - *அவகாலம், நியமமல்லாத காலம், பஞ்சகாலம்.*

**அகி** - *இரும்பு, பாம்பு, இராகு, ஈயம், சூரியன், பிரயாணி.*

**அகிகாந்தம்** - *காற்று.*

**அகிகை** - *பட்டுப்பருத்தி.*

**அகிஞன்** - *தரித்திரன்.*

**அகிதம்** - *இதமின்மை, உரிமையின்மை, தீமை, பகை, தியானம், போசனம்.*

**அகிதர்** - *பகைவர்.*

**அகிபதி** - *சேடன்.*

**அகிபுசம்** - *கலுழன், மயில்.*

**அகிபேனம்** - *அவின், பாம்பினஞ்சு.*

**அகிரன்** - *சூரியன், தீ.*

**அகிருதம்** - *முற்றாவேலை.*

**அகிருதித்துவம்** - *அந்தக்கேடு.*

**அகிருத்தியம்** - *தப்பானசெய்கை.*

**அகிலம்** - *எல்லாம், பூமி.*

**அகிலாண்டம்** - *சருவாண்டம், பூவண்டம்.*

**அகில்** - *ஓர்மரம், பஞ்சவிரையி னொன்று.*

**அகிற்கூட்டு** - *ஏலம், கருப்பூரம், காசுக்கட்டி, சந்தனம், தேன்.*

**அகீர்த்தி** - *துற்கீர்த்தி.*

**அகுடம்** - *கடுகுரோசனி.*

**அகுணம்** - *குணமின்மை, குறைவு, துற்குணம்.*

**அகுதி** - *அகதி.*

**அகுப்பியம்** - *பொன், வெள்ளி.*

**அகும்பை** - *கவுழ்தும்பை.*

**அகுலீனம்** - *குலவீனம்.*

**அகூடகந்தம்** - *பெருங்காயம்.*

**அகேசன்** - *மொட்டையன்.*

**அகேது** - *முகாந்திரமின்மை.*

**அகைத்தல்** - *அடித்தல், அறுத்தல், எழுச்சி, ஒடித்தல், செலுத்தல், முரித்தல், வருந்துதல், உயர்த்தல்.*

**அகைப்பு** - *அடி, அறுத்தல், எழுச்சி.*

**அகைப்புவண்ணம்** - *அறுத்தறுத் தொழுகும்வண்ணம்.*

**அகோ** - *அதிசயச் சொல்.*

**அகோசரம்** - *அறியொணாமை, காணப்படாமை.*

**அகோடம்** - *கழுகு.*

**அகோதாரை** - *மிகப்பொழிதல்.*

**அகோரம்** - *உக்கிரம், உட்டணம், கொடுமை, சிவனைம் முகத் தொன்று.*

**அகோராத்திரம்** - *பகலிரா.*

**அகோரை** - *உட்டணநாள்.*

**அக்ககன்னம்** - *அட்சரேகை.*

**அக்கசாலையர்** - *கம்மாளர், தட்டார்.*

**அக்கடி** - *அலைவு, இடைஞ்சல், வருத்தம்.*

**அக்கணம்** - *பொரிகாரம், வெண்காரம்.*

**அக்கண்டே** - *அக்காளே.*

**அக்கதம்** - *அட்சதை, பங்கப்படாதது, பழு தின்மை.*

**அக்கதயோனி** - *கன்னி.*

**அக்கதேவி** - *சோனைப்புல்லு.*

**அக்கதூர்த்தன்** - *அத்தநாசஞ் செய்வோன்.*

**அக்கந்து** - *புறக்கந்து.*

**அக்கபாடம்** - *மற்களரி.*

**அக்கப்பாடு** - *நிலையழிவு, மரக்கலச்சேதம், மோசம்.*

**அக்கமம்** - *பொறாமை.*

**அக்கமுன்றி** - *கண்.*

**அக்கம்** - *அருகு, உருத்திராட்சம், கண் கயிறு, தானியவிலை, தான்றி, பொன், ஆன்மா, உப்பு, ஓர்நிறை, சில்லு, சொக்கட்டான்காய், ஞானம், துரிசு, தேருறுப்பு, தேர், பாம்பு, வழக்கு.*

**அக்கரசுதகம்** - *ஓர்மிறைக்கவி.*

**அக்கரம்** - *எழுத்து, ஓர்நோய், ஆகாயம், பிறவியறுத்தல்.*

**அக்கரன்** - *சிவன், திருமால், பிரமம்.*

**அக்கராந்தம்** - *எழுத்தொலி.*

**அக்கவாடம்** - *மற்களரி.*

**அக்கரவிலக்கணம்** - *எழுத்தியல்பு, கலை ஞானமறுபத்தினான்கி னொன்று.*

**அக்கராரம்பம்** - *எழுத்துப் பயில வைத்தல்.*

**அக்களித்தல்** - *மனமகிழ்தல்.*

**அக்களிப்பு** - *மனமகிழ்ச்சி.*

**அக்கறை** - *காரியம், குற்றம்.*

**அக்கன்** - *நாய், கருடன், குருடன்.*

**அக்காகிரம்** - *பண்டியச்சு, பண்டியின் முற்பக்கம்.*

**அக்காதேவி** - *மூதேவி.*

**அக்காரம்** - *கருப்புக்கட்டி, சருக்கரை, மாமரம்.*

**அக்காள்** - *தமக்கை.*

**அக்கிக்கல்** - *ஓரிரத்தினம்.*

**அக்கி** - *உட்டணம், ஓர்நோய், கண்.*

**அக்கிதாரை** - *கண்மணி.*

**அக்கிபடலம்** - *கண்ணோயு ளொன்று.*

**அக்கியாதம்** - *மறைவு.*

**அக்கியாதவாசம்** - *மறைந்திருத்தல்.*

**அக்கியாதி** - *துற்கீர்த்தி.*

**அக்கியானம்** - *அறிவின்மை, ஞானமின்மை.*

**அக்கியானி** - *அறிவீனன், ஞானமில்லாதவன்.*

**அக்கிரகரம்** - *கைநுனி, வலக்கை.*

**அக்கிரகாரம்** - *பிராமணவீதி.*

**அக்கிரசங்கை** - *அக்கிரசம்பாவனை, முன்றொடை.*

**அக்கிரசந்தானி** - *நமன்கணக்கு.*

**அக்கிரசன்** - *அண்ணன், பிராமணன்.*

**அக்கிரசன்மன்** - *அண்ணன், பிரமா, பிராமணன்.*

**அக்கிரசாதகன், அக்கிரசாதி** - *பார்ப்பான்.*

**அக்கிரநிரூபணம்** - *முன்னிருபித்தது.*

**அக்கிரபாகம்** - *நுனி, முதற்பங்கு, முன்பக்கம்.*

**அக்கிரபாணி** - *கைநுனி, வலக்கை.*

**அக்கிரசம்பாவனை** - *முதன்மரியாதை.*

**அக்கிரபூசை** - *முதன்மைப்பூசை, முதன்மையுபசாரம்.*

**அக்கிரமம்** - *கொடுமை, ஒழுங்கின்மை.*

**அக்கிரமாமிசம்** - *இரத்தாசயம்.*

**அக்கிரம்** - *நுனி.*

**அக்கிராதம்** - *கோபமின்மை.*

**அக்கிராத்தம்** - *கைநுதி - வலக்கை.*

**அக்கிராந்தம்** - *சேம்பு.*

**அக்கிராரம்** - *அக்கிரகாரம், விளை நிலம்.*

**அக்கிரியன்** - *தமையன்.*

**அக்கிரு** - *விரல்.*

**அக்கிரேவனம்** - *காட்டோரம்*

**அக்கிள்** - *கைக்குழி.*

**அக்கினி** - *செங்கொடுவேலி, நெருப்பு, பித்தம், பொன், மூலாக்கினி.*

**அக்கினிகணம்** - *தீப்பொறி, நிரை நேர்நிரைக்கணம்.*

**அக்கினிக்கட்டு** - *அக்கினித்தம்பனம்.*

**அக்கினிகருப்பம்** - *கடனுரை, சூரிய காந்தம்.*

**அக்கினிகருப்பன்** - *குமரன்.*

**அக்கினிகோணம்** - *தென்கீழ்.*

**அக்கினிகோத்திரம்** - *தீ, நெய், யாக மிருபத்தொன்றினொன்று.*

**அக்கினிசகன்** - *காற்று.*

**அக்கினிசகாயம்** - *காற்று.*

**அக்கினிசன்மன்** - *குமரன்.*

**அக்கினிசாலம்** - *ஓர்பூடு.*

**அக்கினிசிகம்** - *அம்பு, வாணம், விளக்கு.*

**அக்கினிசேகரம்** - *மஞ்சள்.*

**அக்கினிச்சுவாலை** - *தீக்கொழுந்து.*

**அக்கினிட்டோமம்** - *யாகமிருபத் தொன்றினொன்று.*

**அக்கினிதிரேதை** - *திரியாக்கினி.*

**அக்கினித்திராவகம்** - *ஓர் திராவகநீர்.*

**அக்கினித்தம்பம்** - *ஓர்வித்தை, கலை ஞானமறுபத்தினான்கி னொன்று, நெருப்புத்தூண்.*

**அக்கினித்தம்பனம்** - *நெருப்புச் சுடாமற்செய்யும் வித்தை.*

**அக்கினித்தூண்** - *தீப்பிழம்பு.*

**அக்கினிநாள்** - *கொடியநாள்.*

**அக்கினிபரிச்சதம்** - *ஓமோபகரணம்.*

**அக்கினிபரீட்சை** - *மழுவேந்தன் முதலிய வித்தை.*

**அக்கினிபோஷணம்** - *வைசுவ தேவ பூசை.*

**அக்கினிப்பிரத்தரம்** - *தீக்கல்.*

**அக்கினிமணி** - *சூரியகாந்தம்.*

**அக்கினிமண்டலம்** - *மும்மண்டலத் தொன்று அஃது மூலாதார முதனா பிக்க மலமளவும்.*

**அக்கினிமாருதி** - *அகத்தியன்.*

**அக்கினிமுகம்** - *சேங்கொட்டை.*

**அக்கினிமுகன்** - *தீ, பார்ப்பான்.*

**அக்கினியாகாரம்** - *ஓமசாலை.*

**அக்கினியாதானம்** - *ஓமாக்கினி வளர்த்தல்.*

**அக்கினியாதேயம்** - *நித்தியதீ வளர்த்தல், யாகமிருபத்தொன்றி னொன்று.*

**அக்கினியாலயம்** - *அக்கினியாகாரம்.*

**அக்கினியின்குணம்** - *ஆலசியம், தாகம், நித்திரை, பசி, மைதுனம்.*

**அக்கினியின்கோபம்** - *பித்தம்.*

**அக்கினியுற்பாதம்** - *விண்வீழ்கொள்ளி.*

**அக்கினியோகம்** - *அக்கினிக்குரிய யோகம்.*

**அக்கினிவருத்தனம்** - *தீவளர்த்தல்.*

**அக்கினிவல்லபம்** - *கீல்.*

**அக்கினிவாகம், அக்கினிவாகு** - *புகை.*

**அக்கினிவிசர்ப்பம்** - *விரணக்கொதி.*

**அக்கினிவீசம், அக்கினிவீரியம்** - *பொன்.*

**அக்கு** - *எருத்துத்திமில், எலும்பு, கண், சங்குமணி, பலகறை.*

**அக்குத்து** - *சந்தேகம், மையம்.*

**அக்குரன்** - *இடையெழுவள்ளலி லொருவன்.*

**அக்குருக்கி** - *சயரோகம்.*

**அக்குறோணி** - *படையிலோர் தொகை, அஃது அரிகம்மூன்று கொண்டது.*

**அக்கை** - *முன்பிறந்தாள், அன்னை.*

**அக்கோ** - *அதிசயச்சொல், இரக்கச் சொல்.*

**அக்கோடகம், அக்கோடம்** - *கடுக்காய்.*

**அக்கோணி** - *பத்துநூறாயிரத்தொன் பதினாயிரத்து முந்நூற்றைம்பது காலாளும் அறுபத்தையாயிரத்து, அறுநூற்றறுபதுகுதிரையும் இருபத்தையாயிரத்து எண்ணூற் றெழுபது இரதமும் இருபத்தொ ராயிரத்து எண்ணூற்றெழுபது யானையுங் கொண்டது.*

**அக்கோபம்** - *உறுதி, யானைகட்டுந் தூண்.*

**அக்கௌகிணி** - *அக்கோணி.*

**அங்ககம்** - *அங்கம்.*

**அங்ககாரம்** - *அங்கசேட்டை, அபி நயம்.*

**அங்கசங்கம்** - *புணர்ச்சி.*

**அங்கசம்** - *உதிரம், உரோமம், காமம், நோய்.*

**அங்கசன்** - *மன்மதன்.*

**அங்கணம்** - *சலதாரை, சேறு, பொரி காரம், மதகு, முற்றம், வெண்காரம், பத்துமுழத்தளவு.*

**அங்கணன்** - *அருகன், சிவன், மிருத பாஷாணம், விட்டுணு.*

**அங்கணி** - *காளி, பார்ப்பதி.*

**அங்கண்** - *அவ்விடம்.*

**அங்கதம்** - *தோளணி, பழிச்சொல், பாம்பு, பொய், யானையுணவு, மார்பு.*

**அங்கதி** - *கொடை, தீ, நோய், பார்ப் பான், பிரமா, வாயு, விட்டுணு.*

**அங்கதை** - *தென்றிசையானைக்குப் பெண்யானை.*

**அங்கநியாசம்** - *அனுட்டானமுறையி லொன்று.*

**அங்கபடி** - *குதிரையங்கபடி.*

**அங்கபாலி, அங்கபாலிகை** - *கட்டித் தழுவுதல்.*

**அங்கப்பிரதட்சணம்** - *சரீரத்தாலு ருண்டுலம் வருகை.*

**அங்கமாலை** - *ஓர்பிரபந்தம்.*

**அங்கம்** - *அடையாளம், அவயவம், உடல், உறுப்பு, எலும்பு, ஓர்தேயம், கட்டில், சாயல், பதினெண் பாடையிலொன்று, பாவனை, வேதாங்கம், அத்தியாயம், அலங் கரிப்பு, ஆறங்கம், ஓர் விளையாட்டு, குற்றம், சமீபம், தங்குமிடம், தாளப் பிரமாணம்பத்தினொன்று, பரதவுறுப்பு ளொன்று, மனம், வரி.*

**அங்கரட்சணி** - *யுத்தகவசம்.*

**அங்கராகம்** - *பூசும்பரிமளம்.*

**அங்கரூகம்** - *உரோமம்.*

**அங்கர்** - *அங்கதேசத்தார்.*

**அங்கர்கோமான்** - *கன்னன்.*

**அங்கலாய்ப்பு** - *பேராசை.*

**அங்களி** - *கற்றாளை.*

**அங்கவம்** - *பழவற்றல்.*

**அங்கவிட்சேபம்** - *அபிநயம்.*

**அங்கவித்திகை** - *கணிதம்.*

**அங்கனாகணம்** - *மாதர்கூட்டம்.*

**அங்கனை** - *பெண், ஓரிராசி, வட திசை யானைக்குப் பெண்யானை.*

**அங்காடி** - *கடைவீதி.*

**அங்காதிபாதம்** - *ஓர்வைத்தியநூல், முழுவுடம்பு.*

**அங்காத்தல்** - *வாய்திறத்தல்.*

**அங்காப்பு** - *அண்ணாத்தல், வாய் திறத்தல்.*

**அங்காரகன்** - *செவ்வாய், நெருப்பு.*

**அங்காரவல்லி** - *குறிஞ்சி.*

**அங்காரதானிகை** - *சூட்டடுப்பு, தீச் சட்டி.*

**அங்காரபரிபாசிதம்** - *பொரிக்கறி.*

**அங்காரம்** - *கரி, தீ.*

**அங்காரன்** - *அங்காரகன்.*

**அங்காரிகை** - *கரும்பு.*

**அங்காவணம்** - *பஞ்சதருவின்பந்தர்.*

**அங்கி** - *அங்கத்தையுடையது, கார்த்திகை நட்சத்திரம், சட்டை, தீ.*

**அங்கிகரித்தல்** - *ஏற்றுக்கொள்ளுதல், தழுவிக்கொள்ளுதல்.*

**அங்கிகரிப்பு** - *ஏற்றுக்கொள்ளல்.*

**அங்கிகாரம்** - *அங்கிகரித்தல்.*

**அங்கிசம்** - *உபநிடத முப்பத்திரண்டி னொன்று, கூறு, பங்கு, வமிசம்.*

**அங்கிஷபாதி** - *சிறுபுள்ளடி.*

**அங்கிஷம்** - *வமிசம், வாழை.*

**அங்கிடுதத்தி** - *நாடோடி, நிலை கெட்டவன்.*

**அக்கிட்டோமம்** - *கோமேதகம்.*

**அங்கிதம்** - *உடற்றழும்பு.*

**அங்கிநாள்** - *அத்தநாள்.*

**அங்கிரகம்** - *சரீரநோ.*

**அங்கிரி** - *கால், மரமூலம், மூன்றுகாலிருடி.*

**அங்கினி** - *கற்றாழை.*

**அங்கிரிநாமகம்** - *மரமூலம்.*

**அங்கீகரணம்** - *சம்மதித்தல்.*

**அங்கீகரித்தல்** - *ஏற்றுக்கொள்ளல், சம்மதித்தல்.*

**அங்கீகாரம்** - *சம்மதி, வாக்குத்தத்தம்.*

**அங்கு** - *அவ்விடம்.*

**அங்குசகிரகன்** - *யானைப்பாகன்.*

**அங்குசதாரி** - *தாளகம், யானைப் பாகன், விநாயகன்.*

**அங்குசபாசமேந்தி** - *விநாயகன்.*

**அங்குசபாணி** - *காளி, விநாயகன், வீரபத்திரன்.*

**அங்குசன்** - *சரகாண்டபாஷாணம்.*

**அங்குசம்** - *தோட்டி, வாழை.*

**அங்குசவி** - *கொள்.*

**அங்குடம்** - *துறப்பு.*

**அங்குஷடம்** - *பாண்டுவியாதி.*

**அங்குட்டம்** - *குறளுரு, பெருவி.*

**அங்குட்டான்** - *விரலுறை.*

**அங்குரகம்** - *கூடு.*

**அங்குரம்** - *முளை, உரோமம், தளிர், நங் கூரம், நீர்.*

**அங்குரார்ப்பணம்** - *முளையிடுதல்.*

**அங்குரி** - *விரல்.*

**அங்குரித்தல்** - *முளைத்தல்.*

**அங்குரீயம்** - *அங்குலியம்.*

**அங்குலம்** - *விரற்கிடை, பெருவிரல், விரல்.*

**அங்குலி** - *விரல், ஐவிரலிச்செடி, துதிக்கை நுனி.*

**அங்குலியம்** - *மோதிரம்.*

**அங்குலிசந்தேசம்** - *விரனொடித்தல்.*

**அங்குலிதோரணம்** - *திரிபுண்டரம்.*

**அங்குலித்திரம்** - *விரற்புட்டில்.*

**அங்குலிபஞ்சகம்** - *ஐந்துவிரல்.*

**அங்குலித்திராணம்** - *விரற்புட்டில்.*

**அங்குலிமுகம்** - *விரனுனி.*

**அங்குலிமுத்திரை**- *முத்திரைமோதிரம்.*

**அங்குலிமோடனம்** - *விரனொடித்தல், விரலாற்றெறித்தல்.*

**அங்குலீகம், அங்குலீயகம்** - *மோதிரம்.*

**அங்கூசம்** - *அங்குசம்.*

**அங்கூடம்** - *அம்பு, கீரி.*

**அங்கூரம்** - *தளிர்.*

**அங்கை** - *உள்ளங்கை.*

**அங்கோலம்** - *அழிஞ்சில்.*

**அங்ஙனம், அங்ஙன்** - *அவ்விடம், அவ்விதம்.*

**அங்சம்** - *அமிசம்.*

**அசகம்** - *வரையாடு.*

**அசகவம்**-சிவன்வில்,அஃது இருதலை திருமாலும் நடுப்பிரமனுமா யிருப்பது.

**அசங்கச்சித்தன்**- அஞ்ஞானமனத்தன்.

**அசக்கல்** - கட்டல்.

**அசங்கதம்** - ஒழுங்கின்மை, பொய்.

**அசங்கதம்** - வெறுப்பு.

**அசங்கதி** - இணக்கமின்மை, ஒவ் வாமை.

**அசங்கமம், அசங்கியம்** - அசட்டை, இகழ்ச்சி, பவித்திரமின்மை, புலவி.

**அசங்கம்** - விரோதம், தனிமை, நிச்சயம், பயமின்மை.

**அசங்கற்பம்** - உண்மை, முன்னி தானிப்பின்மை.

**அசங்கன்** - அஞ்ஞானன், ஒட்டாத வன்.

**அசங்குதல்** - அசைதல்.

**அசங்கை** - சங்கையீனம்.

**அசங்கோசம்** - அடக்கமின்மை.

**அசசீவிகன்** - ஆட்டுக்காரன்.

**அசஞ்சலம்** - ஐயம், திடாரிக்கம்.

**அசஞ்சிதன்** - முத்தன்.

**அசடர்** - கீழ்மக்கள்.

**அசடு** - இசடு, இரும்புமுதலிய வற்றிற் பெயருமசடு.

**அசட்டை** - பராமுகம், மதியாமை.

**அசதாசாரம்** - துன்னடை.

**அசதி** - அயர்ச்சி, சிரித்துப்பேசல், மறதி, வசவி.

**அசதீசுதன்** - சோரபுத்திரன்.

**அசத்தியம்** - பொய்.

**அசத்திலட்சணம்** - அசம்பவம்.

**அசத்துரு** - சந்திரன், மித்துரு.

**அசத்தை** - சூனியம், பிரவஞ்சம், பொய்.

**அசந்தம்** - உயிரெழுத்தில் முடியுஞ் சொல்.

**அசந்தானம்** - சந்தானமின்மை, பிரி வினை.

**அசந்தி** - சந்தியின்மை.

**அசந்தோஷம்** - வெறுப்பு.

**அசபன்** - இடையன், பிரதிவாதி.

**அசப்பியம்** - சபைக்கடாதசொல்.

**அசமபாதை** - சேனைநடக்கும்வழி.

**அசமஞ்சசம்** - வித்தியாசம்.

**அசமந்தம்** - மந்தக்குணம், மலையத்தி.

**அசமன்** - சமனின்மை.

**அசமானம்** - உவமையின்மை.

**அசமுசாரி** - சுத்தசைதன்னியன்.

**அசமோதம்** - ஓமம்.

**அசம்** - ஆடு, ஈரஉள்ளி, சந்தனம், மூவருடநெல், ஆட்டுக்கடா, ஆடு, துடங்கல், மூவருடனல், அடிபடு தல், திரிதல்.

**அசம்பவம்** - அதிசயம், சூனியம், மாறுகொளக்கூறல், அஃது நூற்குற்ற மூன்றினொன்று.

**அசம்பாவனை** - அறியக்கூடாமை.

**அசம்பாவி** - அடிப்பலம், அத்திபாரம்.

**அசரியம்** - அழிவின்மை, சினேகம்.

**அசரீரன்** - காமன்.

**அசம்பாவிதம்** - சம்பவிக்கக்கூடாதது.

**அசம்பிரேட்சியகாரித்துவம்** - ஆராயாது செய்தல்.

**அசம்பிரேட்சியம்** - ஆராய்வின்மை.

**அசம்போகம்** - அனுபலமின்மை.

**அசம்மானம்** - அசங்கை.

**அசரம்** - இருவகைத்தோற்றத்தின் ஒன்று, அஃது நடையில்லது, ம், சாரல், ஒன்றும், போர்க் களம்.

**அசராது** - கொன்றை, எழும்பாத கிடை, பிரியா.

**அசலம்** - அம்பு, இரும்பு, படைக்க லம், மலை.

**அசலன்** - அசைவற்றிருப்பவன்.

**அசரீரி** - *அரூபி, ஆகாயவாணி, சரீர மற்றது, துக்கொள்ளுதல்.*

**அசலகால்** - *தென்றல்.*

**அசலம்** - *அசையாநிலை, பூமி, மலை.*

**அசலனம்** - *அசைவின்மை.*

**அசலம்ல்** - *ஒன்றன்மேலொன்றுவை.*

**அசலனி** - *தொடுத்தல், மலை.*

**அசலவிளை** - *மடைப்பள்ளி.*

**அலவுதல்** - *உண்டுபண்ணுதல், கொல்லல், சமைத்தல்.*

**அசலன்** - *கடவுள்.*

**அசலாதிபன்** - *மலையரசன்.*

**அசலை** - *மலை.*

**அசல்** - *சீலை, பூமி.*

**அசவை** - *பெருவிரலடி.*

**அசறு** - *சேறு.*

**அசற்பதம்** - *ஆகாதவழி, துன்னடை.*

**அசன்** - *காமன், சிவன், பிரமன், விட்டுணு.*

**அசன்மானம்** - *அசங்கை.*

**அசன்னியம்** - *சகுனம்.*

**அசன்னிதி** - *தூரம், நம்பிக்கை.*

**அசாகசம்** - *அமைதி, பொய்.*

**அசாகை** - *களி, புற்கை.*

**அசாக்கிரதை** - *சோம்பு மறவி.*

**அசாசனம்** - *அரசாட்சியின்மை, ஆளுகையின்மை.*

**அசாசீவி, அசாபாலகன்** - *ஆட்டு வாணிகன்.*

**அசாதனம்** - *நிலைநிறுத்தாமை.*

**அசாதாரணம்** - *பொதுவின்மை.*

**அசாத்தியம்** - *சந்தேகம், பெரு வழக்கற்றது, முடிக்கக்கூடாதது.*

**அசாபல்லியம்** - *உறுதி, திடம்.*

**அசாரம்** - *ஆமணக்கு.*

**அசாவாமை** - *தளராமை.*

**அசாவேரி** - *ஓரிராகம்.*

**அசி** - *அவமதிச்சிரிப்பு, ஆயுதப் பொது, வாள், யுத்தம்.*

**அசிக்கல்** - *அரும்பொருள்.*

**அசிதம்** - *சிவாக மிருமபத்தெட்டி னொன்று, அபரபக்கம், கருமை, சனி.*

**அசிதன்** - *சிவன், திருமால், புத்தன்.*

**அசிதாம்புருகம், அசிதோற்பலம்** - *நீலோற்பலம்.*

**அசிதை** - *அவுரி.*

**அசித்தி** - *அத்தாட்சியற்றது, தவறு.*

**அசித்திரன்** - *கள்வன்.*

**அசிந்தம்** - *பத்திலட்சங் கோடி கோடாகோடி.*

**அசிந்தியம்** - *ஓரெண்.*

**அசிந்தை** - *புலனின்மை.*

**அசிபத்திரகம்** - *கரும்பு.*

**அசிபத்திரம்** - *கரும்பு, படையுறை, வானலகு.*

**அசிபத்திரவனம்** - *ஓர்நரகம்.*

**அசிரப்பிரவை** - *மின்னல்.*

**அசிரம்** - *உடல், காற்று, தவளை, முற்றம், விடயம்.*

**அசிரவணம்** - *செவிடு.*

**அசிரன்** - *சூரியன், தீ.*

**அசிராபை** - *மின்னல்.*

**அசிருபாடம்** - *உதிரப்பெருக்கு.*

**அசினபத்திரிகை** - *வௌவால்.*

**அசினம்** - *தோல்.*

**அசினயோனி** - *மான்.*

**அசீதகரன்** - *சூரியன்.*

**அசீரணம்** - *சமியாமை, யௌவனம்.*

**அசீர்** - *ஆயத்தம், தளபாடம்.*

**அசீவம்** - *சூனியம், மரணம்.*

**அசீவனி** - *சூனியம்.*

**அசு** - *பிராணவாயு.*

**அசுகம்** - *காற்று, துக்கம்.*

**அசுகுசுப்பு** - *அருவருப்பு.*

**அசுகுணி** - *ஓர்வகைக்கரப்பன்.*

**அசுகை** - *எழில், ஐயம்.*

**அசுசமன்** - *அன்பன், கணவன்.*

**அசுசி** - *அருவருப்பு, சுசியின்மை, அவகீர்த்தி.*

**அசுணம்** - *கேகயப்புள்.*

**அசுணமா** - *கேகயப்புள்.*

**அசுதாரணன்** - *சிவன்.*

**அசுதை** - *விடம்.*

**அசந்தரம்** -*அடாமை, அலவட்சணம்.*

**அசுத்தம்** - *சுத்தமின்மை.*

**அசுத்தாவி** - *சுத்தமில்லாவரூபி, பசாசு.*

**அசுபதி** - *ஓர் நாள்.*

**அசுபம்** - *குதிரை, பாவம்.*

**அசுமாற்றம்** - *அசுகை, சயிக்கினை, சிலமன்.*

**அசுமேதம்** - *ஓர் யாகம்.*

**அசும்பு** - *கிணறு, பொல்லாநிலம், வழுக்குநிலம்.*

**அசுரகுரு** - *சுக்கிரன்.*

**அசுரசந்தி** - *இரணியவேளை.*

**அசுரமணம்** - *எண்வகைமணத் தொன்று, அஃது பெண்ணுக்குப் பொன் பூட்டிப் பெண்ணின் சுற்றத்திற்குப் பொன்வேண்டுவன கொடுத்துக் கொள்வது.*

**அசுரநாள்** - *மூலநாள்.*

**அசுரமந்திரி** - *சுக்கிரன்.*

**அசுரரிபு** - *விட்டுணு.*

**அசுரை** - *இராசி, இருள், வேசி.*

**அசுவசாத்திரம்** - *அசுவபரிட்சை நூல்.*

**அசுரர்** - *அவுணர்.*

**அசுவகினி** - *அச்சுவினி.*

**அசுவகெந்தி** - *அமுக்கிரர்.*

**அசுவசட்டிரம்** - *நெரிஞ்சி.*

**அசுவசாந்தி** - *ஓரியாகம்.*

**அசுவசாரத்தியம்** - *குதிரைச்சாரதித் துவம்.*

**அசுவசாலை** - *குதிரைப்பந்தி.*

**அசுவசாபம்** - *குதிரைக்குட்டி.*

**அசுவத்தம்** - *அத்திமரம், அரசு.*

**அசுவத்தாமன்** - *சிரஞ்சீவிஏழ்வரி லொருவன் அவன் துரோணன் மகன்.*

**அசுவந்தம்** - *அடுப்பு, மரணம், முடிவு, வயல்.*

**அசுவபரி** - *அலரி.*

**அசுவபரிட்சை** - *கலைஞானமறுபத்தி னான்கினொன்று.*

**அசுவபாலன்** - *குதிரைப்பாகன்.*

**அசுவமியம்** - *குதிரைப்பாஷாணம்.*

**அசுவமேதம்** - *ஓர் யாகம்.*

**அசுவமேதிகம், அசுவமேதியம்** - *அசுவ மேத யாகத்திற்குப் பக்குவமான குதிரை.*

**அசுவம்** - *குதிரை, குதிரைப்பற் பாஷாணம்.*

**அசுவினி** - *அச்சுவினிநாள்.*

**அசுவை** - *அத்தாட்சியற்றது.*

**அசுழம்** - *நாய்.*

**அசூசம், அசூசி** - *ஆசூசம்.*

**அசூதி** - *பிறப்பின்மை, மலடி.*

**அசூயனம்** - *அசூயை, அவதூறு.*

**அசூயை** - *பொறாமை.*

**அசூரி** - *வைசூரி.*

**அசேதனம்** - *அறிவின்மை.*

**அசேவனம்** - *அசட்டைபண்ணல், கீழ்ப்படியாமை, விலகுதல்.*

**அசேவை** - *அசங்கை, விலகல்.*

**அசை** - *அசைநிலை, அசையென் னேவல், இசைப்பிரிவு, இரை மீட்பு, சொல்லுறுப்பு, அலகொன் றேனு மிரண்டே னுங்கொண்டு*

*சீர்க்குறுப் பாய் வருவது, ஆட்டு மறி, பிரகிருதி மாயை.*

**அசைகபாதன்** - *பன்னோருருத் திரரி லொருவன்.*

**அசைச்சீர்** - *தளைகொளற்கிடனா கிஓரசையேசீராயுநிற்பது.*

**அசைச்சொல்** - *அசை நிறைக்குஞ் சொல்.*

**அசைதல்** - *ஆடுதல், இருத்தல், உலாவல், கலங்குதல், சோம்பல், தங்கல், துவளல், பயப்படுதல்.*

**அசைதன்னியம்** - *அறியாமை, சடத் துவம், ஞானக்குருடு.*

**அசைத்தல்** - *ஆட்டல், ஓசையெடுத் தல், கட்டல்.*

**அசைநிலை** - *அசைச்சொல்.*

**அசைப்பு** - *அசைதல், இறுமாப்பு, சொல், சொல்லுதல்.*

**அசைநிலையோகாரம்** - *ஈற்றசை யோகாரம், (உம்) கேண்மினோ.*

**அசையடி** - *அம்போதரங்கம்.*

**அசையந்தாதி** - *அடிஈற்றசைவருமடி முதலசையாகத் தொடுத்திருப்பது.*

**அசையாமணி** - *ஆராய்ச்சிமணி.*

**அசைவாடுதல்** - *அசைதல், உலாவுதல்.*

**அசைவு** - *ஆட்டம், ஓர்வகைத்தூக்கு, சலனம், பெயர்ச்சி.*

**அசைவெட்டுதல்** - *இரைமீட்டல்.*

**அதோகதளிர்மணி** - *சௌந்திகப்பது மாரகமணி.*

**அசோகம்** - *ஒருமரம், சோகமின்மை, வாழை, மன்மதன்கணையி னொன்று.*

**அசோகவனம்** - *வாழைவனம்.*

**அசோகன்** - *அருகன்.*

**அசோகு** - *அசோகமரம்.*

**அசோசம்** - *கவலையின்மை.*

**அசௌசம்** - *ஆசூசம், சூதகம்.*

**அசௌரியம்** - *வீரமின்மை.*

**அச்சக்குறிப்பு** - *பயப்பாட்டுக்குறி.*

**அச்சடியன்** - *ஓர்வகைச் சாயப் புடைவை.*

**அச்சபல்லம்** - *கரடி.*

**அச்சமுள்ளோன்** - *பயமுடையோன்.*

**அச்சம்** - *அகத்தி, இலேசு, பயம், மகடூஉக்குணம் நான்கினொன்று, ஓரலங்காரம், கடைப்படு தான மேழினொன்று, அஃது அச்சத்தா னீதல், கரடி, பழிங்கு, முன்புறம்.*

**அச்சயன்** - *கடவுள்.*

**அச்சல்** - *ஆச்சல், தரம்.*

**அச்சவாரம்** - *ஆய்த்தப்பணம், உறுதிப்பணம்.*

**அச்சறுக்கை** - *எச்சரிக்கைப்பத்திரம்.*

**அச்சன்** - *தந்தை.*

**அச்சாணி** - *அச்சுருவாணி.*

**அச்சாரம்** - *அச்சவாரம்.*

**அச்சி** - *ஓர்தேயம்.*

**அச்சு** - *அடையாளம், உடல், உயி ரெழுத்து, எழுத்து, கட்டளைக் கருவி, பண்டியச்சு, நெய்வார் கருவியினொன்று.*

**அச்சுக்கம்பு** - *துப்பாக்கிக் கம்பு.*

**அச்சுதம்** - *அறுகுவெள்ளரிசி கூட்டி யணிவது, கெடுதலின்மை.*

**அச்சுதன்** - *அழியாமையுள்ளோன், கடவுள், மூத்தோன், விட்டுணு.*

**அச்சுதன் முன்னர்வந்தோன்** - *பல தேவன்.*

**அச்சுப்பலகை** - *நெய்வார்கருவியி னொன்று.*

**அச்சுரம்** - *நெருஞ்சில்.*

**அச்சுருவாணி** - *தேரகத்திற்செறிகதிர்.*

**அச்சுலக்கை** - *துலாவினடுவச்சுமரம்.*

**அச்சுவத்தம்** - *அரசமரம்.*

**அச்சுவமுகாதனம்** - *கால்மடித்து இரண்டு முழந்தாளினும் முழங்கை*

*களை யூன்றி இரண்டுள்ளங்கைகளையுங் கன்னத்திலே வைத்திருப்பது.*

**அச்சுவம்** - *குதிரை.*

**அச்சுவினி** - *அசுபதி.*

**அச்சுவினிநாள்** - *அசுபதி.*

**அச்சுறல்** - *பயப்படுதல்.*

**அச்சுறை** - *உடம்பு.*

**அச்சேர** - *அதிசயச்சொல், இரக்கச்சொல்.*

**அஞர்** - *அறிவிலார், துன்பம்.*

**அஞலம், அஞல்** - *கொசுகு.*

**அஞ்சணங்கியம்** - *பஞ்சவிலக்கியம்.*

**அஞ்சணங்கம்** - *பஞ்சவிலக்கணம்.*

**அஞ்சதி** - *காற்று.*

**அஞ்சலம்** - *சீலைத் தொங்கல், வாளுறை.*

**அஞ்சம்** - *அன்னம்.*

**அஞ்சலி** - *கும்பிடல், வண்டுகொல்லி, வந்தனை, வெளவால், வறட்சுண்டில், பேதை.*

**அஞ்சலிகாரிகை** - *ஓர்பூடு, சித்திரப்பாவை.*

**அஞ்சலிவந்தனம்** - *கும்பிட்டு வணங்கல்.*

**அஞ்சற்சூழச்சி** - *குங்குமபாஷாணம்.*

**அஞ்சலிகை** - *வெளவால்.*

**அஞ்சல்** - *தரங்கல், தரிப்பினெல்லை, தோல்வி, பயப்படுதல்.*

**அஞ்சனக்கல்** - *கருநிமிளை.*

**அஞ்சனக்கோல்** - *அஞ்சனந்தீட்டுங்கோல்.*

**அஞ்சனபாஷாணம்**- *விளைவுபாஷாணமுப்பத்திரண்டி னொன்று.*

**அஞ்சனம்** - *இருள், கறுப்பு, மேற்றிசையானை, மை.*

**அஞ்சனவண்ணன்** - *திருமால்.*

**அஞ்சனன்** - *இந்திரன், சனி, விட்டுணு.*

**அஞ்சனாலா** - *கருங்காக்கணம், நீலோற்பலம்.*

**அஞ்சனாவதி** - *வடகீழ்த்திசை யானைக்குப் பெண்யானை.*

**அஞ்சனி** - *காயா.*

**அஞ்சனை** - *அனுமன்றாய், வடதிசை யானைக்குப் பெண்யானை.*

**அஞ்சாப்பட்டயம்** - *இரட்சண்ணிய பத்திரிகை.*

**அஞ்சாவிரா** - *பெருங்குமிள்.*

**அஞ்சானனம்** - *சிங்கம், சிங்கவிராசி.*

**அஞ்சானன்** - *சிவன்.*

**அஞ்சி** - *எசமானன்.*

**அஞ்சிக்கை** - *அச்சம்.*

**அஞ்சிட்டன்** - *சூரியன்.*

**அஞ்சிதமுகம்** - *வருத்தமாற்றாதிரு தோண்மேற்றலைசாய்தல்.*

**அஞ்சிதம்** - *உண்டாதல், பொருந்தல், தலையசைத்தல், பூசித்தல், வணக்கம்.*

**அஞ்சிதவணி** - *தற்குறிப்பலங்காரம்.*

**அஞ்சீரம்** - *அத்தி, அத்திப்பழம்.*

**அஞ்சுகம்** - *கிளி.*

**அஞ்சுமான்** - *சிவாகமமிருபத்தெட்டி னொன்று, துவாதசாதித்தரி லொருவன்.*

**அஞ்ஞத்துவம்** - *அஞ்ஞானம்.*

**அஞ்ஞன்** - *அறிவிலான்.*

**அஞ்ஞானம்** - *ஞானமின்மை, தெய்வ அறிவின்மை.*

**அஞ்ஞை** - *அறிவிலான், இலலாடத்தானம்.*

**அடகு** - *இலைக்கறி, கடன்கோடற்கு வைத்தவீடு.*

**அடக்கம்** - *அடங்கிய காரியம், அடங்கிய பொருள், உயிரொடுங்கியிருத்தல், ஒடுக்கம், கருத்து, மனவமைதி.*

**அடக்கம்பண்ணுதல்** - *சேமஞ்செய்தல், பிரேத முதலியவற்றைப் புதைத்தல்.*

**அடங்கலர்** - *பகைவர்.*

**அடங்கல்** - *அமைதல், எல்லாம், சுருங்கல்.*

**அடக்கல்** - *ஒடுக்கல், கீழ்ப்படியப் பண்ணல்.*

**அடங்கன்முறை** - *கோவிற்பதிகம்.*

**அடங்காப்பற்று** - *அடங்காதவர் களிருக்குமூர்.*

**அடதாளம்** - *சத்ததாளதல்.*

**அடந்தை** - *ஓர்தாளம்.*

**அடப்பம்** - *சாமான்பை.*

**அடம்** - *இனம், பொல்லாங்கு, சஞ் சாரம், போகுதல்.*

**அடர்** - *அடரென்னேவல்.*

**அடர்தல்** - *நெருங்கல்.*

**அடம்பாரம்** - *இடம்பம், பரப்பம், பிரபலியம்.*

**அடம்பு** - *அடம்பங்கொடி.*

**அடரார்** - *பகைவர்.*

**அடர்ச்சி, அடர்த்தி** - *நெருக்கம்.*

**அடர்த்தல்** - *நெருக்கல்.*

**அடர்ந்தேற்றம்** - *கொடுமை, கிடை.*

**அடர்ந்தேற்றி** - *இட்டேற்றம், நெருக்கம்.*

**அடர்பு** - *செறிவு, நெருக்கம்.*

**அடர்ப்பம்** - *நெருக்கம்.*

**அடர்ப்பு** - *நெருக்கம், போர்.*

**அடலம்** - *மாறாமை.*

**அடலார்** - *பகைவர்.*

**அடலி** - *வெள்ளாட்டி.*

**அடலை** - *சாம்பல், போர்க்களம், மாறாமை.*

**அடல்** - *கொல்லுதல், சமை, பொருதல், வலி, வெற்றி.*

**அடவி** - *காடு, சோலை.*

**அடவிகன்** - *வனவாசி.*

**அடனம்** - *அலைந்துதிரிதல், போகுதல்.*

**அடனி** - *வின்னுனி.*

**அடாணா** - *ஓரிராகம்.*

**அடாத்தியம்** - *அடாதது.*

**அடாத்து** - *தகாதது, பொருந்தாதது, முறைகேடானது.*

**அடாவந்தி** - *இட்டேற்றம், வாரா வந்தி.*

**அடி** - *அடியென்னேவல், ஆதி, கடவுள், கால், காற்சுவடு, கீழ், செய்யுளூறுப் பினொன்று, தாது, அடியோன், முன், மூலம், வமிசமூலம்.*

**அடிகள்** - *கடவுள், குரு, தலைவன், முனிவர், மூத்தோன்.*

**அடிக்கீழ்ப்படுத்தல்** - *அடக்கி நடத்தல், ஆண்டுகொள்ளல்.*

**அடிக்குடி** - *அடிச்சேரி.*

**அடிக்குடில்** - *அடிச்சேரி.*

**அடிக்கொள்ளுதல்** - *தொடக்கம் பண்ணுதல்.*

**அடிக்கோலுதல்** - *இடம்பிடித்தல்.*

**அடிசில்** - *சோறு.*

**அடிச்சேரி** - *அடிக்குடில்.*

**அடிதலை** - *அடிமுடி, வரலாறு.*

**அடிதல்** - *அடிபடுதல்.*

**அடித்தலம்** - *அத்திவாரம், கால்.*

**அடித்தளம்** - *அத்திவாரம், வீட்டினிற் பரப்பு.*

**அடித்தல்** - *அதுக்கல், அறைதல்.*

**அடிபெயர்தல்** - *விலகுதல்.*

**அடிப்படுதல்** - *அமைதல்.*

**அடிப்படுத்தல்** - *கீழ்ப்படுத்தல்.*

**அடிப்பற்றுதல்** - *கறிமுதலிய சுண்டுதல்.*

**அடிப்பலம்** - *மூலபலம்.*

**அடிப்பற்று** - *சோறுமுதலிய பாண்டத் திற்பற்றுகை, பாறையுப்பு.*

**அடிப்பாடு** - *வழி.*

**அடிப்பாய்தல்** - *ஓர்விளையாட்டு.*

**அடிப்பார்த்தல்** - *ஏதுப்பார்த்தல்.*

**அடிப்பிடித்தல்** - *ஏதுப்பிடித்தல், கறி முதலியசுண்டல், முதற்பிடித்தல்.*

**அடிப்போடுதல்** - *இடம்பண்ணுதல்.*

**அடிமடக்கு** - *பாதமடக்கு.*

**அடிமயக்கு** - *பாதமயக்கு.*

**அடிமறிமண்டிலவாசிரியப்பா** - *அகவற்பாவினுளொன்று, அஃது எல்லாவடியு மளவொத்து எவ்வடியைமுதனடுவிறுதியாகக் கொள்ளினு மோசையும் பொருளும்வழுவாதுநிற்பது.*

**அடிமறிமாற்றுப்பொருள்கோள்** - *பொருள்கோளெட்டினொன்று. அஃது யாதானு மோரடியை யிறுதி நடு முதல்களில் வேண்டிய விடத்துக் கூட்டிப் பொருளிசை மாட்சி மாறாது பொருள் கொள்வது, (உம்) அலைப்பான் பிறிதுயிரையாக்கலுங் குற்றம் விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ் சொலற்பால வல்லாத சொல்லலுங் குற்றங் கொலற்பாலுங்குற்றமேயாம், இதனை மாறிக்காண்க.*

**அடிமறிமொழிமாற்றுப்பொருள்கோள்** - *பொருள் கோளினொன்று, அஃது அடிகளை யேற்புழிக் கூட்டிப் பொருள் கொள்வது. (உம்) படுபயன் வெஃகிப்பழிபடுவ செய்யார் நடுவன்மை நாணுபவர் என்பதனுள் நடுவன்மை நாணுபவர் படுபயன் வெஃகிப் பழிபடுவ செய்யார் எனக்கூட்டிக்காண்க.*

**அடிமுகனை** - *துவக்கம்.*

**அடிமுடி** - *காலுந்தலையும், வரலாறு.*

**அடிமுரண்டொடை** - *அடிதோறு முதற்கட் சொல்லேனும் பொருளேனு மறுதலைப் பட்டுவருவது, (உம்) இருள் பரந்தன்னமா நீர் மருங்கினிலவுக்கு வித்தன்ன.*

**அடிமை** - *சிறை, தொண்டு.*

**அடிமோனைத்தொடை** - *அடிகடோறு முதலெழுத் தொன்றி வருவது.*

**அடியந்தாதி** - *நின்ற பாட்டினீற்றடி வரும் பாட்டின் முதலடியாகப் பாடல்.*

**அடியல்** - *சொரிதல், (உம்) கதிரடிந்தது, தொடர்.*

**அடியளபெடைத்தொடை** - *அடிதோறு முதன் மொழிக்கண் அளபெடுத்து வருவது.*

**அடியனாதி** -*தொன்று தொட்டுள்ளது.*

**அடியார்** - *அடிமைகள்.*

**அடியாறு** - *தொன்றுதொட்ட வரலாறு.*

**அடியியைபுத்தொடை** - *அடியினிறுதி தோறுநின்றவெழுத்தேனுஞ் சொல்லேனுமொன்றிவருவது.*

**அடியெதுகைத்தொடை** - *அடிதோறு மிரண்டாமெழுத்தொன்றிவருவது.*

**அடிவரையறை, அடிவாறு** - *அடியாறு.*

**அடிவிடுதல்** - *பாண்டங்களினடிப் பொருத்துவிடுதல்.*

**அடுக்கணி** - *ஓரலங்காரம், அஃது சொல்லும் பொருளுமடுக்கி வருவது.*

**அடுக்காலாத்தி** - *அடுக்குத்தீபம்.*

**அடுக்குத்தொடர்** - *ஒருமொழியேபல முறையடுக்கிவருவது, அஃது அசை நிலையினும் பொருணிலையினு மிசை நிறையினு மிரண்டு முதனான் களவுமடுக்கி வரும் - (உம்) அன்றேயன்றே அசைநிலை, தீதீதீ பொருணிலை, வருகவருக வருகவருக விசைநிறை.*

**அடுசிலைக்காரம்** - *செந்நாயுருவி.*

**அடுத்தல்** - *கிட்டல், சம்பவித்தல், சார்தல், சேர்த்தல்.*

**அடுத்தி** - *வட்டி.*

**அடுப்பு** - *அச்சம், தீவாய்த்தானம், பரணி.*

**அடுவல்** - *வரகுந்நெல்லுங்கலப்பு.*

**அடை** - *அடுத்தல், அடைகிடத்தல், அடையென்னேவல், உவமை, தோசை.*

**அடைகட்டி** - *அடைமண்.*

**அடைகலம்** - *சேமக்கலம்.*

**அடைகல்லு** - *கம்மப்பட்டடை.*

**அடைகாத்தல்** - *அடைகிடத்தல்.*

**அடைகாய்** - *ஊறுகாய்.*

**அடைகிடத்தல்** - *குஞ்சுபிறப்பிக்க முட்டையைக்காத்தல், நீங்கா திருத்தல்.*

**அடைகுளம்** - *வாய்க்காவில்லாத குளம்.*

**அடைகுறடு** - *பட்டடை.*

**அடைகோட்டை** - *வெளிபோகப் பெறாததடை.*

**அடைக்கத்து** - *அடைகிடக்குங் கோழியிடுஞ்சத்தம்.*

**அடைக்கலக்குருவி, அடைக்கலான் குருவி** - *ஊர்க்குருவி.*

**அடைக்கலம்** - *அடைக்கலப் பொருள், சரண்புகல், புகலிடம்.*

**அடைக்காய்** - *பாக்கு.*

**அடைசல்** - *நெருக்கம், அடைசுதல்.*

**அடைசீலை** - *பாழச்சீலை.*

**அடைசுதல்** - *ஒதுக்குதல், ஒதுங்குதல், கொடுப்புக்குள் வைத்துக் கொள்ளுதல், செருகுதல், நெருக்குதல், நெருங்குதல்.*

**அடைசுபலகை** - *செருகிவெளி யடைக்கும்பலகை.*

**அடைசுவலை** - *ஓர்விதவலை.*

**அடைசொல்** - *அடைமொழி, விசேடணமொழி.*

**அடைச்சுதல்** - *மலர்சூட்டடல்.*

**அடைதல்** - *அடைகுதல், ஒதுங்குதல், கூடுதல், சேருதல், பெறுதல்.*

**அடைத்தல்** - *சேர்த்தல், தடுத்தல், மழைவிடாது பெய்தல், மறியற்படுத்தல், வெளியை மறைத்தல், வேலியடைத்தல்.*

**அடைந்தார்** - *அடைக்கலம் புகுந்தோர், மித்திரர்.*

**அடைந்தோர்** - *உறவோர்.*

**அடைப்பன்** - *ஓர்வியாதி.*

**அடைப்பு** - *அடைக்கப்பட்டது, அடைத்தற்றன்மை, அடைத்தற் றொழில், சரளிமுதலியவற்றி னடைப்பு, கதவு.*

**அடைப்பை** - *வெற்றிலைப்பை.*

**அடைப்பைக்காரன்** - *பிளவுசுருளெடுத்துக் கொடுப்போன்.*

**அடைமண்** - *கலப்பையிலடைந்த மண்.*

**அடைமானம்** - *உவமை, வழிவகை.*

**அடைமொழி** - *விசேடனமொழி.*

**அடைய** - *எல்லாம்.*

**அடையடுத்தவாகுபெயர்** - *ஒரு பொருளதன் புறத்துப்பண்பாய் நின்றவடையோடு கூடியாகு பெயராய் வழங்குவது, (உம்) புகையிலைநட்டான்.*

**அடையலர், அடையார்** - *பகைவர்.*

**அடையல்** - *அடைகுதல், அடைந்து, வருவது, எல்லாம்.*

**அடையாளம்** - *அறிகுறி, குறிப்பு, சின்னம், மாதிரி.*

**அடைவு** - *ஈடு, உபமானம், எல்லாம், முறை, விதம்.*

**அட்சகன்னம்** - *நேர்முக்கோணத்தி னெடுவரி.*

**அட்சதை –** *மங்கலவரிசி.*

**அட்சபாடனம்** - *திரைப்படல்.*

**அட்சய** - *ஓர் வருடம்.*

**அட்சயம்** - *கேடின்மை.*

**அட்சம்** - *அக்கம்.*

**அட்சரசஞ்சன், அட்சரசணன், அட்சர சனன்** - *எழுத்துக்காரன்.*

**அட்சரசனனி** - *இலேகிணி.*

**அட்சரசீவிகன்** - *எழுத்துக்காரன்.*

**அட்சரதூலிகை** - *இலேகிணி.*

**அட்சரமுகன்** - *மாணாக்கன்.*

**அட்சரசுத்தி** - *உச்சரிப்புத்திருத்தம், எழுத்துத்திருத்தம்.*

**அட்சரம்** - *எழுத்து, வேதப்பொருள்.*

**அட்சாவினியாசம்** - *எழுத்து, வேதம்.*

**அட்சி** - *கண்.*

**அட்டகணம்** - *செய்யுட்குரியவெண் கணம், அவை ஆகாயம், இயமானன், சூரியன், தீ, நிலம், நீர், மதி, வாயு, இவற்றுள் முன்னைய நான்கு நீக்கி மற்றையநன்று.*

**அட்டகணிதம்** - *எண்கணிதம், அவை கனமூலம், கனம், குணனம், சங்கலிதம், பாகாரம், வருக்கமூலம், வருக்கம், விபகலிதம்.*

**அட்டகம்** - *எட்டின்கூட்டம், வடமொழியினோர்பிரபந்தம்.*

**அட்டகருமம்** - *வசியமுதலிய எண் வித்தை.*

**அட்டகாசம்** - *பெருநகை.*

**அட்டகிரி** - *அட்டகுலமலை, அவை இமையம், ஏமகூடம், கந்தமாதனம், கைலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தம்.*

**அட்டகுணம்** - *கடவுட்குரிய எண் குணம், அவை இயல்பாகவே பாசங்களினீங்குதல், இயற்கையுணர் வினனாதல், தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, முற்றுமுணர்தல், வரம்பிலின்பமுடைமை.*

**அட்டகுற்றம்** - *மலசகிதர்க்குரிய குணம் எட்டு, அவை அந்த ராயம், ஆயு, கோத்திரம், ஞானா வரணியம், தரிசனாவரணியம், நாமம், மோகநீயம், வேதநீயம்.*

**அட்டகை** - *அட்டமி, பிதிர் வணக்கம், யாகமிருபத்தொன்றி னொன்று.*

**அட்டகை** - *அட்டமி, பிதிர் வணக்கம், யாகமிருபத்தொன்றி னொன்று*

**அட்டசித்தி** - *எண்சித்தி, யோகசித்தர்க் குரிய எண்சித்தி, அஃது அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி பிராகாமியம், ஈசத்துவம், வசித் துவம்.*

**அட்டசுபம்** - *அட்டமங்கலம், எண் வகைமங்கலம், அவை இணைக் கயல், கண்ணாடி, சாமரம், கொடி, தோட்டி, நிறை குடம், முரசு, விளக்கு.*

**அட்டதயாவிருத்தி** - *பிறரையந் தீர்த் தல், தீமைக்கஞ்சல், பிறர் துயர்க் கிரங்கல், நன்மைகடைப் பிடித் தல், பிறர் கருமத்திற்குடன்படல், பிறர்கரும முடிக்கவிரைதல், பிறர்க்குப் பொருள் வரவையுவத் தல் பிறர்செல்வம் பொறுத்தல்.*

**அட்டதனம்** - *யோககியர்க் குரியபே றெட்டு, அவை அழகு, குணம், ஆயு, குலம், சம்பத்து, வித்தை, விவேகம், தனம்.*

**அட்டதாது** - *எண்வகைலோகம், அவை பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம் தரா, வங்கம், துத்தநாகம்.*

**அட்டதானபரிட்சை** -*வைத்தியரறி குறியெட்டு, அவை நாடி, முகம், மலம், அமுரி, கண், நா, சரீரம், தொனி.*

**அட்டதிக்கயம்** - *அட்டகுலயானை, அவை கிழக்காதி முறையே ஐராபதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம்.*

**அட்டதிக்கு** - *எட்டுத்திசை, அவை கிழக்கு, தென்கீழ், தெற்கு, தென்*

*மேல், மேற்கு, வடமேல், வடக்கு, வடகீழ்.*

**அட்டதிக்குப்பாலகர்** - *திக்குக்காவலர் அவர் கிழக்காதிமுறையே, இந்திரன், அங்கி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.*

**அட்டநாகம்** - *எண்வகைமாநாகம், அவை அனந்தன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்கன், பதுமன், மகாபதுமன், வாசுகி.*

**அட்டபந்தனம்** - *திக்குக்கட்டு.*

**அட்டபரிசம்** - *எண்வகையூறு, அவை ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல்.*

**அட்டபாலகர்** - *அட்டதிக்குப்பாலகர்.*

**அட்டபாலகர்குறி** - *திக்குப்பாலகரடையாளம் அவை இந்திராதி முறையே, இடி, புகை, சீயம், ஞாளி, இடபம், கழுதை, யானை, காகம்.*

**அட்டபோகம்** - *எண்போகம், அவை அணிகலன், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசனம்.*

**அட்டப்பிரமாணம்** - *அளவையெட்டு, அவை அனுமானம், அபாவம், அருத்தாபத்தி, ஆகமம், உவமானம், ஐதீகம், சம்பவம், பிரத்தியட்சம்.*

**அட்டமங்கலம்** - *எண்வகைமங்கலம், ஓர்பிரபந்தம்.*

**அட்டமணம்** - *எண்வகைமணம், அவை ஆசுரம், ஆரிடம், இராக்கதம், காந்தருவம், தெய்வம், பிரசாபத்தியம், பிரமம், பைசாசம்.*

**அட்டமி** - *எட்டாந்திதி.*

**அட்டமூர்த்தம்** - *ஈசுரன்வடிவமெட்டு, அவை நிலம், நீர், தீ, கால், வெளி, சூரியன், சந்திரன் இயமானன்.*

**அட்டமூர்த்தி** - *சிவன்.*

**அட்டம், அஷடம்** - *அருகிடம், எட்டு, அண்ணம், மேல் வீடு.*

**அட்டமூர்த்திதரன்** - *சிவன்.*

**அட்டம்பாரித்தல்** - *பக்கலில் விசாலித்தல்.*

**அட்டயோசம்** - *அரைபொடி.*

**அட்டலோகம்** - *அட்டதாது.*

**அட்டவசுக்கள்** - *எண்வகைவசுக்கள், எண்வகைவசுக்கள், அவர் அனலன், அணிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன்.*

**அட்டவணை** - *சொல்லப்பட்ட காரியத்தினொழுங்கு, சேர்க்கப்பட்டது.*

**அட்டவதானம்** -*ஒரேசமயத்திலெட்டுக் காரியத்தையவ தானித்தல்.*

**அட்டவருக்கம்** - *நற்சீரகம், கருஞ்சீரகம், அசமோதம், மிளகு, திப்பிலி, சுக்கு, இந்துப்பு, பெருங் காயம்.*

**அட்டவூறு** - *எண்வகையூறு, அவை சருச்சரை, சீர்மை, தண்மை, திண்மை, நொய்மை, மென்மை, வன்மை, வெம்மை.*

**அட்டவெற்றி** - *எண்வகைவெற்றி, அவை, பகைநிரைகவர்தல், பகைவர்கவர் நிரைமீட்டல், பகைமேற்செல்லல், பகை முன்னெதிரூன்றல், தன்னரண் காத்தல், பகைவரரண் வளைத்தல், பொருதல், போர் வெல்லல், இவற்றிற்கு முறையே மாலை, வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை.*

**அட்டவைசுவரியம்** - *எண்வகைச் செல்வம், எண்வகைச் செல்வம், அஃது அடிமை, இரா சாங்கம், சுற்றம், நெல், பொன், மக்கள், மணி, வாகனம்.*

**அட்டனம்**- *சக்கராயுதம்.*

**அட்டாங்கநமஸ்காரம்** - *எட்டுறுப்பு நிலந்தோயவணங்கல்.*

**அட்டாங்கயோகம்** - *யோகமுறையெட்டு. அவை ஆதனம், இயமம், சமாதி, தாரணை, தியானம், நியமம், பிரத்தியாகாரம், பிராணாயாமம்.*

**அட்டாங்கவந்தனம்** - *எண்வகையுறுப்பு நிலந்தோயவணங்கல், அவை இருகால், இருகை, இருதோள், நெற்றி, மார்பு.*

**அட்டாதுட்டி** - *அடர்ந்தேற்றம், தாறுமாறு.*

**அட்டாபதபத்திரம்** - *பொற்றகடு.*

**அட்டாபதம்** - *எண்காற்புள், கதவின்றாள், பொன், வன்னப்புடைவை.*

**அட்டாபந்தனம்** - *திக்குபந்தனம்.*

**அட்டாலம்** - *அட்டாலை.*

**அட்டாலிகாகாரன்** - *கற்சிற்பன்.*

**அட்டாலை** - *அட்டாளை.*

**அட்டாளகம், அட்டாளம்** - *மேல்வீடு.*

**அட்டாளிகை** - *மேன்மாடம்.*

**அட்டாளை** - *சிறாம்பி.*

**அட்டி** - *அதிமதுரம், இருப்பை, செஞ்சந்தனம், தடை, பருப்பு.*

**அட்டிகம்** - *சாதிக்காய்.*

**அட்டிகை, அட்டியல்** - *உட்கட்டு.*

**அட்டில்** - *அடுக்களை.*

**அட்டு** - *சமைக்கப்பட்டது, செய்தது, அணை, மதிப்பு, வியங் கோள் விகுதி*

**அட்டை** - *ஓர் செந்து.*

**அட்டோலிக்கம்** - *ஆடம்பரம், ஆரவாரம், மகிழ்ச்சி.*

**அணங்கம்** - *இலட்சணம்.*

**அணங்காட்டு** - *சன்னதம்.*

**அணங்கு** - *அச்சம், அணங்கென்னேவல், அழகு, ஆசை, கொலை, தெய்வப்பெண், தெய்வம், தேவர்க் காடுங்கூத்து, நோய், பெண்மகள், வருத்தம்.*

**அணங்குதல்** - *வருந்துதல்.*

**அணம், அணரி** - *கீழ்வாய்ப்புறம், மெல்வாய்.*

**அணல்** - *கீழ்வாய், மிடறு.*

**அணவல்** - *கிட்டல், பொருந்தல்.*

**அணவு** - *அணவென்னேவல், நடு.*

**அணவுதல்** - *கிட்டல், புணர்ச்சி.*

**அணாப்புதல்** - *ஏய்த்தல்.*

**அணி** - *அடுக்கு, அணியென்னேவல், அலங்காரம், அழகு, ஆபரணம், ஏர்ச்சீர், ஒழுங்கு, ஓரிலக்கணம், நன்மை, நிரை, படைவகுப்பு, பெருமை, மாலை, எல்லை.*

**அணிகம்** - *சிவிகை.*

**அணிகலம்** - *ஆபரணம், கம்மாளர் கருவி, பணிமுட்டு.*

**அணிகலன்** - *ஆபரணம்.*

**அணிதல்** - *அலங்கரித்தல், பூணல், அணிந்துநிற்றல், தரித்தல், படைவகுத்தல்.*

**அணிநுண**ா - *அன்னவன்னா.*

**அணிந்துரை** - *பாயிரம்.*

**அணிப்படுத்தல்** - *அணியப் படுத்துதல், சிங்காரித்தல்.*

**அணிமா** - *அட்டசித்தியினொன்று, அஃதுஆன்மாப்போலாதல்.*

**அணிமை** - *நுட்பம்.*

**அணியம்** - *ஆயத்தம், தளபாடம், படவின்முன்பக்கம், படைவகுப்பு.*

**அணியல்** - *மாலை, அணிதல்.*

**அணியிலக்கணம்** - *பஞ்சவிலக்கணத் தொன்று.*

**அணிலன்** - *அட்டவசுக்களிலொருவன்.*

**அணில்** - *வெளில்.*

**அணிவகத்தல்** - *படைவகுத்தல்.*

**அணிவகுப்பு** - *படைவகுப்பு.*

**அணிவடம்** - *மாதர் கழுத்தணியினொன்று.*

**அணு** - உயிர், சிறுமை, நுண்மை, இனம், பரமாணு.

**அணுகலர்** - அயலார், பகைவர்.

**அணுகல்** - கிட்டல்.

**அணுகன்** - சமர்த்தன்.

**அணுக்கம் –** சந்தனம்.

**அணுச்சைவம்** - சைவம்பதினாறினொன்று.

**அணுபை** - மின்னல்.

**அணுமை** - சமீபம்.

**அணுவெழுத்து** - இனவெழுத்து.

**அணுரேணு** - சிறுதூளி.

**அணை** - அணையென்னேவல், உதவி, கரைப்பொது, செய்கரை, மெத்தை, வரம்பு.

**அணைசொல்** - துணைச்சொல்.

**அணைதல்** - சேர்தல், புணர்தல், அவிதல்.

**அணைத்தல்** - அடுத்துக்கொள்ளுதல், அவித்தல், சேர்த்தல், தழுவுதல்.

**அணையாடை** - சாணைச்சீலை.

**அணோக்கம்** - மரப்பொது, மேனோக்கம்.

**அண்** - அண்ணென்னேவல், மேல்.

**அண்டகம்** - பீசம்.

**அண்டகன்** - அண்ணகன்.

**அண்டகடாகம்** - அண்ட கோளவோடு.

**அண்டகை** - அப்பவருக்கம்.

**அண்டகோசம்** - அண்டசொரூபசாத்திரம், எல்லை, பழத்தோல், பழம், பீசம்.

**அண்டகோளம்** - அண்டஉண்டை.

**அண்டங்காக்கை** - ஓர்வகைக்காகம்.

**அண்டசம்** - முட்டையிற்பிறப்பன.

**அண்டப்பார்த்தல்** - பொருந்தப்பார்த்தல்.

**அண்டம்** - ஆகாயம், உலகம், பீசம், முட்டை, தலையோடு.

**அண்டயோனி** - சூரியன்.

**அண்டரண்டபட்சி** - பெரும்பறவை.

**அண்டரண்டம்** - பலவண்டங்களும்.

**அண்டர்** - இடையர், பகைவர், வானோர்.

**அண்டலர், அண்டார்** - பகைவர்.

**அண்டல்** - அண்டுதல், அழுந்தல், கிட்டுதல், சேர்தல்.

**அண்டவாணர்** - ஆகாயவாசிகள்.

**அண்டவாயு** - ஓர்நோய்.

**அண்டா** - பெருஞ்சட்டி.

**அண்டிகம்** - செந்நாய்.

**அண்டிரன்** - மனுஷன்.

**அண்டுதல்** - நெருக்கல்.

**அண்டில்** - கண்ணிற்பற்றும்பூச்சி.

**அண்டை** - அயல், அருகிடம், பீறலடைக்குந் துண்டு.

**அண்ணகன்** - பீசம்வாங்கப்பட்டவன்.

**அண்ணம்** - உண்ணா, கீழ்வாய்ப்புறம், மேல்வாய்.

**அண்ணல்** - அரசன், சார்தல், தமையன், பெருமை, பெருமையிற் சிறந்தோன், முல்லைநிலத் தலைவன், அருகன், சிவன், புத்தன்.

**அண்ணன்** - முன்பிறந்தான்.

**அண்ணா** - உண்ணா.

**அண்ணாக்கு** - உண்ணாக்கு.

**அண்ணாத்தல்** - அங்காத்தல், மேனோக்கல்.

**அண்ணாந்தாள்** - தலை நிமிர்ந்திருக்கப் பூட்டுங்கயிறு.

**அண்ணாவி** - உலாத்தி, புலவன், மூத்தோன்.

**அண்ணி** - தமையன்மனைவி.

**அண்ணிசு** - அணுமை.

**அண்தல்** - சார்தல்.

**அண்முதல்** - கிட்டுதல்.

**அண்மை** - அணுமை.

**அண்மைச்சுட்டு** - சமீபத்திலிருக்கும் பொருளைச்சுட்டிக்காட்டல்.

**அண்மைவிழி** - சமீபத்திலிருப்ப வரையழைத்தல்.

**அதகணம்** - நாசகணம்.

**அதகடி** - அதட்டு.

**அதகம்** - மருந்து.

**அதக்குதல்** - குதப்புதல்.

**அதங்கம்** - ஈயம்.

**அதசம்** - ஆன்மா, காற்று, மரவுரி.

**அதசு** - கேள்வி, நாசம்.

**அதடம்** - செங்குத்து.

**அதட்டம்** - அரவுயிர்ப்பு, அரவினச் சுப்பல்லு.

**அதட்டல்** - உரப்புதல், உறுக்குதல்.

**அதப்யிம்** - சபைக்கடாதசொல்.

**அதமசரீரம்** - கற்பகதரு.

**அதமபிருதகன்** - காக்காரன்.

**அதமம்** - கடைத்தரம், நீதித்தப்பு.

**அதமவிமிசதி** - அதமவருடமிருபஃது.

**அதமாங்கம்** - கால்.

**அதம்** - அத்தி, கொலை, தாழ்வு, பள்ளம், பின்பு.

**அதரபானம், அதரமதம்** - இதழூறல்.

**அதரம்** - உதடு, கீழுதடு, நிதம்பம்.

**அதராமிர்தம்** - அதரபானநீர்.

**அதராவலோகம்** - இதழதுக்கல்.

**அதரிசனம்** - காணப்படாமை, குருடு, மறைதல்.

**அதரிசனன்,அதரிசி**- கடவுள், குருடன்.

**அதரித்திரன்** - கன்னன், தரித்திர மில்லான்.

**அதருமம்** - பாவமான செய்கை, நீதி கேடு.

**அதர்** - நீளக்கிடங்கு, நுண்மணல், புழுதி, வழி.

**அதர்கொளல்** - வழிப்பறித்தல்.

**அதர்கோள்** - வழிப்பறி.

**அதர்க்கம்** - குதர்க்கம்.

**அதர்மாசாரி** - துராசாரி.

**அதர்மாத்திகாயம்** - காரணகாயத் தொன்று.

**அதர்வக்கிரம், அதர்வம்** - உபநிடத முப்பத்திரண்டினொன்று.

**அதர்வணம்** - நான்காம்வேதம்.

**அதலமூலி** - ஆடுதின்னாப்பாலை.

**அதலம்** - கீழேழுலகினொன்று.

**அதவம்** - பின்பு.

**அதவா** - அல்லாமல்.

**அதவாபட்சம்** - அல்லாதபட்சம்.

**அதவிடம்** - அதிவிடயம்.

**அதவு** - அத்தி, நெய்.

**அதளை** - அடை.

**அதழ்** - பூவிதழ்.

**ஆதள்** - களகம்பளம், தோல்.

**அதறுதல்** - உதிர்த்தல்.

**அதனப்பிரசங்கி** - அகங்காரி.

**அதாதிரு** - உலோபி.

**அதனம்** - மிகுதி.

**அதன்மம்** - நீதிகேடு.

**அதி** - மிகுதிப்பொருளைக் காட்டு மடைசொல், அதிதி.

**அதிகசிதம், அதியசிதம்** - பெருநகை.

**அதிகடம்** - யானை.

**அதிகதம்** - வாயு.

**அதிகதை** - பயனில்பேச்சு.

**அதிகந்தம்** - ஓர் வாசனைப்புல், கெந்தகம், சண்பகப்பூ.

**அதிகண்டம்** - நித்தியயோகத்தொன்று.

**அதிகப்பிரசங்கம்** - அதிகப்படப் பேசுதல், தன்மேம்பாட்டுரை.

**அதிகம்** - இலாபம், குருக்கத்தி, படை, பொலிவு, மிகுதி, அடையாளம், உதாரணங்களைப் பலவாகப் பிரயோகித்தல்.

**அதிகரணம்** - *இடம், உரித்து, ஏழுனுருபு, கேள்வி, மேன்மை.*

**அதிகரித்தல்** - *அதிகப்படுதல், விசேடித்தல்.*

**அதிகரிப்பு** - *அதிகரித்தல்.*

**அதிகன்** - *ஆதிக்கன், சிவன்.*

**அதிகாசம்** - *பெருநகை.*

**அதிகாந்தம்** - *செவ்வானம்.*

**அதிகாயன்** - *இராவணன் மக்களிலொருவன்.*

**அதிகாரதலைவன்** - *அதிகாரி.*

**அதிகாரப்புறனடை** - *அதிகாரத்துளெஞ்சியதற்கோர்விதியாய்நிற்பது.*

**அதிகாரம்** - *அதிகரித்தல், உத்தியோகம், தத்துவம், உரித்து, ஒழுங்கு, சிலாக்கியம், நூற்கூறுபாடு, பண்பு, விருத்தியுரை பதினான்கினொன்று.*

**அதிகாரவுரை** - *நூலுரை பதினான்கினொன்று.*

**அதிகாரி** - *அதிபதி, நூல்கேட்டற்குரியோன், நூல் செய்வித்தோன், பாட்டுடைத் தலைவன்.*

**அதிகிரமம்** - *அசட்டை, அதிகப்படல், எதிர், மீறுதல்.*

**அதிகிருசசிரம்** - *ஓர்விரதம், அஃது ஆறுநாள் ஒவ்வோர் பிடியன்னமுண்டுமேன் மூன்று நாளுபவாசித்திருப்பது.*

**அதிகும்பை** - *பொற்றலைக் கையாந்தகரை.*

**அதிகுணன்** - *கடவுள், நற்குணன்.*

**அதிக்குதி** - *ஒவ்வாதநடை, கொடுமையானநடை.*

**அதிங்கம்** - *அதிமதுரம்.*

**அதிசங்கலிதம்** - *சங்கலிதசங்கலிதம்.*

**அதிசயச்சொல்** - *வியப்புமொழி.*

**அதிசஞ்சயம்** - *திரவியக்குவியல்.*

**அதிசசத்திரகம், அதிசசத்திரம்** - *காளான்.*

**அதிசந்தானம்** - *பொய்.*

**அதிசயம்** - *அற்புதம், ஓரலங்காரம், நூதனம், புதுமை, மாயை யாக்கைக்குரிய பதினெண் குற்றத்தொன்று.*

**அதிசயன்** - *அருகன்.*

**அதிசயவிரக்கச் சொல்** - *இரக்கத்தோடு கூடியவியப்புமொழி.*

**அதிசயோத்தி** - *மிகக்கூறல்.*

**அதிசரித்தல்** - *தூரமாய்ப்போதல், மிகுகதியாய்நடத்தல்.*

**அதிசருச்சனம்** - *கொடுத்தல், கொடை, கொலை.*

**அதிசாமியை** - *வெண்குன்றிச்செடி.*

**அதிசாரம்** - *கிரகநடை, ஓர்பேதிநோய்.*

**அதிசாரவக்கிரம்** - *கிரகவக்கிரத்தொன்று.*

**அதிசித்திரம்** -*மார்க்கசடப் பிரமாணத்தொன்று, அஃது கால்மாத்திரை யோர் களையாகக்கொண்டது.*

**அதிட்சேபம்** - *அனுப்புதல், நிந்தைப்படுத்தல்.*

**அதிசீக்கிரம்** - *மிகுசுறுக்கு.*

**அதிசூக்குமம்** - *சூக்குமத்திற்சூக்குமம்.*

**அதிட்டம்** - *நல்லனுபோகம், நல்வினைப்பயன்.*

**அதிட்டானசைதன்னியம்** - *பிரமம்.*

**அதிட்டானம்** - *நிலை, இடம் காரியத்திற்குக் காரணம், சில்லு, பட்டினம், விதித்தல்.*

**அதிட்டித்தல்** - *நிலைப்படுத்தல்.*

**அதிதாதிரு** - *ஈகையாளன்.*

**அதிதானம்** - *கொடை.*

**அதிதி** - *சிராத்தத்திற்கொவ்வாததிதி, பரதேசி, புதியவன், தேவரையீன்றாள், பூமி.*

**அதிதிகிரியை** - *விருந்தோம்பல்.*

**அதிதிசேவை** - *விருந்தோபசாரம்.*

**அதிதிப்பம்** - *பசியின்மை.*

**அதிதிநாள்** - *புநர்பூசநாள்.*

**அதிதூதர்** - *அதிகப்பிரதானவிசேடங்களையறிவிக்க உலகத்துக்கனுப்பப்படுவோர்.*

**அதிதேவன்** - *கடவுள்.*

**அதிதேவதை** - *அதிகாரதேவதை.*

**அதிபதி** - *இராசா, தலைவன்.*

**அதிபத்தியம்** - *அதிகாரம், ஆளுகை.*

**அதிபரன்** - *சத்துருவைவென்றவன்.*

**அதிபலம்** - *நேர்வாளம், மிகுபலன்.*

**அதிபன்** - *இராசன், எசமான், எப்பொருட்குமிறைவன்.*

**அதிபாதகம்** - *கொடும்பாதகம்.*

**அதிபாரம்** - *மிகுபாரம்.*

**அதிபாதம்** - *எதிரிடை, மீறுதல்.*

**அதிபாரகம்** - *கோவேறுகழுதை.*

**அதிபாரகன்** - *மிகுநிபுணன்.*

**அதிபானம்** - *மதுபானம்.*

**அதிமதுரம்** - *ஓர்சரக்கு, வெண்குன்றி.*

**அதிமலம்** - *மாவிலிங்கு.*

**அதிபூதம்** - *பிரகிருதிமாயை.*

**அதிமாத்திரம்** - *மிகுதி.*

**அதிமாயம்** - *மாயையின்மை.*

**அதிமானுடன்** - *உத்தமபுருடன் சிரஞ்சீவி.*

**அதிமிதி** - *அதிக்குதி.*

**அதிமித்திரன்** - *கணவன்.*

**அதிமோகம்** - *அனேகம், ஒருதலைக்காமம்.*

**அதியட்சன்** - *கண்காணி.*

**அதியம்** - *அதிகம், ஓர்மருந்து.*

**அதிரசம், அதிரதம்** - *ஓர்பண்ணிகாரம், ஓர் பானம், நால்வகைத்தேரினொன்று.*

**அதிரதர்** - *முழுத்தேரரசர்.*

**அதிரதி** - *அதிரதன்.*

**அதிரல்** - *அதிர்தல், விரிதூறு.*

**அதிராத்திரம்** - *யாகமிருபத்தொன்றினொன்று.*

**அதிராயம்** - *அதிசயம்.*

**அதிரிசம்** - *காணப்படாததன்மை, குருடு.*

**அதிரிசயம்** - *கலைஞானமறுபத்தினான்கினொன்று.*

**அதிரிசனம்** - *அதரிசனம்.*

**அதிரிசன்** - *குருடன்.*

**அதிருத்தி** - *திருத்தியின்மை.*

**அதிரேகம்** - *அதிசயம், மேற்பட்டது, மிகுதி.*

**அதிரோகணி** - *ஏணி.*

**அதிரோகம்** - *ஓர்காசம்.*

**அதிலோகம்** - *உலகம்.*

**அதிவசனம்** - *பேர்.*

**அதிர்** - *அதிரென்னேவல், ஒலி, பயம்.*

**அதிர்ச்சி** - *அதிகப்படுதல், ஆரவாரம், குமுறல், பயம்.*

**அதிர்தல்** - *குமுறுதல், நடுங்கல்.*

**அதிர்த்தல்** - *அதட்டல், குமுறல், சொல்லுதல்.*

**அதிர்ப்பு** - *அச்சம், அதிரல், ஆரவாரம், நடுக்கம்.*

**அதிர்வெடி, அதிர்வேட்டு** - *ஓர் வெடி.*

**அதிவாசம்** - *உபவாசத்திற்கு முதனாள், கிருத்தியாரம்பச் சடங்கினொன்று, மிகுமணம், அயல், இடம், வீடு.*

**அதிவாசனம்** - *வாசனாபிஷேகம்.*

**அதிவாதம்** - *பெருங்காற்று.*

**அதிவாலகன்** - *குழந்தை.*

**அதிவிடயம்** - *ஓர் மருந்து.*

**அதிவியதை** - *மிகுவேதனை.*

**அதிவியாத்தி** - *அருத்தாபத்தி, மிகக்கூறல்.*

**அதிவெள்ளைச்சிந்தூரம்** - *பறங்கிப்பாஷாணம்.*

**அதிவேகம்** - *மிகுகதி.*

**அதிவேதனம்** - *மனைவியைவிடவேறொருத்தியை விவாகம் பண்ணுதல்.*

**அதீசன்** - *எசமான்.*

**அதீசாரம்** - *அதிசாரம்.*

**அதீச்சுரபதவி** - *நவவிலாசசபைக் குரியவதிகாரம்.*

**அதீச்சுரன், அதீச்சுவரன்** - *அரசன், கடவுள்.*

**அதீட்சணதை** - *மழுங்கல்.*

**அதீதப்பிரமம்** - *கடவுள்.*

**அதீதம்** - *எட்டாதது, கடந்தது, மேற் பட்டது, குரல்முன்னுந் தாளம் பின்னு மாய்வருவது, பொன்.*

**அதீதர்** - *வானோர், முனிவர், மேலோர்.*

**அதீதவேதன்** - *வேதநிபுணன்.*

**அதீதியம்** - *ஆசையின்மை.*

**அதீந்திரியம்** - *புலனுக்கெட்டாதது.*

**அதீரம்** - *கரையின்மை.*

**அதீரை** - *அமையாதவள், மின்னல்.*

**அதீனத்துவம்** - *இட்டம்.*

**அதீனம்** - *உரித்து.*

**அது** - *அஃது, ஆறாவதனொருமை யுருபு.*

**அதுக்கம்** - *அடிப்பு, ஒதுக்கம், குழிவு.*

**அதுக்கல்** -*அடித்தல், அடைசுதல்.*

**அதுங்கல்** - *ஒதுங்கல், குழிதல்.*

**அதுலம்** - *உவமையின்மை, ஓரெண்.*

**அதுலன்** - *ஒப்பிலி, கடவுள்.*

**அதுலிதம்** - *அசைவின்மை.*

**அதுல்லியம்** - *ஒப்பின்மை.*

**அதெந்து** - *யதெந்து.*

**அதெநன்மையம்** - *நூதனம்.*

**அதைத்தல்** - *தாக்கிமீளல், வீங்கல்.*

**அதைப்பு** - *தாக்கியெழுதல், வீக்கம்.*

**அதோ** - *கீழ், படர்க்கைச்சுட்டு.*

**அதோகதி** - *நரகம், இறங்குதல், பள்ளம்.*

**அதோங்கம்** - *குதம், யோனி.*

**அதோசாதி** - *கீழ்சாதி.*

**அதோபாகம்** - *கீழ்ப்பக்கம்.*

**அதோபுவனம்** - *கீழுலகம்.*

**அதோமாயை** - *ஓர் மாயை.*

**அதோமுகம்** - *ஆற்றுநீர்க்கழிமுகம், கீழ்நோக்கியமுகம்.*

*அதோமுகி - கவிழதும்பை.*

**அதோவாயு** - *அபானவாயு.*

**அதோலம்பம்** - *தூங்குதல், நிறுதிட்ட வரி.*

**அதோலோகம்** - *கீழுலகம்.*

**அதோலதனம்** - *அதோமுகம்.*

**அத்** - *ஒன்று பாதி.*

**அத்தகடகம்** - *கைவளை.*

**அத்தகண்டாதனம்** - *ஒருகால் மேனீட்டி ஒருகைகொண்டு நீட்டின காலைக்கட்டி மற்றைக் கையை நிலத்தூன்றியிருப்பது.*

**அத்தகோரம்** - *நெல்லி.*

**அத்தசந்திரன்** - *வாலசந்திரன்.*

**அத்தசகாயம்** - *பொருளுதவி.*

**அத்தசதம்** - *நூறாண்டு.*

**அத்தசாமம்** - *நடுச்சாமம்.*

**அத்தசித்திரம்** - *மார்க்கசடப் பிர மாணத்தொன்று, அஃது அரை மாத்திரை யோர்களையாகக் கொண்டது.*

**அத்தநாசம்** - *பொருளழிவு.*

**அத்தபாகம்** - *பாதி.*

**அத்தடி** - *அடிக்கெடுதல், அந்தரிப்பு.*

**அத்தப்பிரகரன்** - *கரந்துறைகோளி னொன்று, நாலேகானாழிகை கொண்டது.*

**அத்தமண்டபம்** - *கோவிலினடு மண்டபம்.*

**அத்தமம்** - *அத்தமிப்பு.*

**அத்தமனம், அஸ்தமனம்** - *அத்தமன காலம், அத்தமித்தல்.*

**அத்தமானியம்** - *கண்டதிற்பாதி யிறைதருதல்.*

**அத்தமித்தல்** - *அற்றுப்போதல், உட்குதல், படுதல், மறைதல்.*

**அத்தமேற்காலாதனம்** - *இருகாலும் மேலுறமடக்கியக் காலிரண்டை யுங்கையாற்பற்றிக் கிடப்பது.*

**அத்தம்** - *அருநெறி, ஓர் நாள், ஓர் மலை, கண்ணாடி, காடு, கை, சொற்பொருள், பாதி, பொன், வழி, ஆண்டு, முகில்.*

**அத்தர்** - *வாசனைப்பண்டம், வன வாசர்.*

**அத்தலைபொருந்தி** - *ஓர் பூடு.*

**அத்தவாரணம்** - *போதுமெனல்.*

**அத்தவாளம்** - *உல்லாசம், காடு, போர்வை.*

**அத்தவேடணை** - *பொருளிச்சை.*

**அத்தன்** - *கடவுள், குரு, பிதா, மூத்தோன், அருகன், சிவன்.*

**அத்தாட்சி** - *ஒப்பனை, திட்டாந்தம்.*

**அத்தாணி** - *வேந்திருக்கை.*

**அத்தாதிக்கம்** - *பாதிக்கதிகப்பட்டது.*

**அத்தாதுரம்** - *பொருளாசை.*

**அத்தாப்பித்தல்** - *உரப்பிநெருக்கல்.*

**அத்தார்ச்சனை** - *திரவியசம்பாத்தியம்.*

**அத்தார்த்தம்** - *அரைவருடம், பொரு ணிமித்தம்.*

**அத்தான்** - *மைத்துனன்.*

**அத்தி** - *என்பு, ஓர்மரம், கடல், கண்ணில் நிற்கும் ஒரு நரம்பு, கருவிளை, கொலை, பாதிசெய் யென்னேவல், யானை, வெருக மரம், அக்காள், திப்பிலி, பிடியன் யானை, மலை.*

**அத்திகோலம்** - *அழிஞ்சில்.*

**அத்திகை** - *அக்காள்.*

**அத்திக்கன்னி** - *வெருகமரம்.*

**அத்திசம்** - *நீர்முள்ளி.*

**அத்திசயனன்** - *விட்டுணு.*

**அத்திசுரம்** - *ஓர் நோய்.*

**அத்தித்தல்** - *பாதிசெய்தல்.*

**அத்தித்திப்பிலி** - *யானைத்திப்பிலி.*

**அத்திநந்தனி** - *பார்வதி.*

**அத்திநவ்நீதகம்** - *சந்திரன்.*

**அத்திபஞ்சரம்** - *முழுவென்பு.*

**அஸ்திபாரம்** - *அத்திவாரம்.*

**அத்திமண்டூகி** - *முத்துச்சிப்பி.*

**அத்தியக்கினி** - *சீதனம், வடவாமு காக்கினி.*

**அத்தியக்கினிட்டோமம்** - *யாகமிருபத் தொன்றினொன்று.*

**அத்தியசனம்** - *ஏகோத்திட்டவூண்.*

**அத்தியட்சரம்** - *பிரணவம்.*

**அத்தியட்சன்** - *அதிகாரி.*

**அத்தியந்தகோபம்** - *மிகுகோபம்.*

**அத்தியயம்** - *அத்தியாயம், ஆக்கினை, இக்கட்டு, ஒருபொருளின் பேதத் தை ஐயத்துடனறிதல், நட்டம், பொல்லாங்கு, மரணம், மீறுதல்.*

**அத்தியந்தம்** - *ஓரெண், மட்டற்றது, மிகுதி.*

**அத்தியயனம், அத்தியாகரணம்** - *வேதமோதல், படித்தல்.*

**அத்தியவசயித்தல்** - *ஒருபொருளின் கணியல்பாய் நிகழுந் தன்மையை யொழித்துத்தானெடுத்தபொருண் மேலேற்றிச்சொல்லல், தற் குறிப்புச் செய்தல்.*

**அத்தியவசாயம், அத்தியவசாயிதம்** - *தானெடுத்துக் கொண்டது, முயற்சி.*

**அத்தியாசனம்** - *ஏகோதிட்டம்.*

**அத்தியாபகன்** - *வேதமோதுவிப் போன்.*

**அத்தியாகரணம்** - *தொக்குநின்றதை நிரப்புதல்.*

**அத்தியாகாரம்** - *குற்றம், மிகுபோசனம்.*

**அத்தியாசம்** - *சாட்டுதல், வித்தியாசம், வீற்றிருத்தல்.*

**அத்தியாசாரம்** - *முறைவழு.*

**அத்தியாத்துமா** - *ஆன்மா, கடவுள்.*

**அத்தியாத்துமிகநூல்** - *அத்தியான் மிகநூல்.*

**அத்தியாத்துமிகம்** - *கடவுட்கடுத்தது.*

**அத்தியாபனம்** - *ஓதுவித்தல், வேத மோதுவித்தல்.*

**அத்தியாயம்** - *இலக்கியச் செய்யுட் பகுதி, வேதநூலை விரித்த விலக் கியத்தின் கூறுபாடு, வேதம்.*

**அத்தியாயனம்** - *வேதமோதல்.*

**அத்தியாரோகணம், அத்தியாரோகம்** - *ஏறுதல்.*

**அத்தியாரோபனம்** - *ஒன்றையொன்றி லேற்றல்.*

**அத்தியாவாகனிகம்** - *சீதனம்.*

**அத்தியான்மிகநூல்** - *பதிநூல், அஃது சாங்கியம், பாஞ்சவியம், வேதாந் தம் எனப்படும்.*

**அத்தியூடன்** - *சிவன்.*

**அத்தியானமீகநூல்** - *மூவகைச் சாத்திரம்.*

**அத்திரதர்** - *காற்றேரரசர்.*

**அத்திரதேவர்** - *ஆயுததேவர்.*

**அத்திரபரிட்சை** - *கலைஞானமறு பத்தினான்கினொன்று, வில் வித்தை.*

**அத்திரம்** - *அம்பு, இலந்தை, கழுதை, குதிரை, கைவிடுபடை, மலை, முன்விடுமம்பு.*

**அத்திராசம்** - *பயமின்மை.*

**அத்திராதரம், அத்திராபரம்** - *அம்புக்கூடு.*

**அத்திரி** - *உலைத்துருத்தி, ஒட்டகம், கணை, கழுதை, குதிரை, தரும நூல் பதினெட்டினொன்று, மலை, விண், ஓரிருடி, சூரியன்.*

**அத்திரிகீலை** - *பூமி.*

**அத்திரிசாதன்** - *சந்திரன், முதன் மூன்று வருணத்தான்.*

**அத்திரிசாரம்** - *இரும்பு.*

**அத்திரிசிருங்கம்** - *சிகரம்.*

**அத்திரீசன்** - *இமையம், சிவன்.*

**அத்திரு** - *அரசு.*

**அத்திலை** - *செருப்படை.*

**அத்திரோகம்** - *மெத்தெனவு.*

**அத்திவாரம்** - *அடி, அடியுரம்.*

**அத்தினாபுரம்** - *அஸ்தனாபுரி.*

**அத்தினி** - *நால்வகைப் பெண்களி னொருத்தி, பெண்யானை.*

**அத்து** - *அசைச்சொல், அரைநாண், அரைப்பட்டிகை, இசைப்பு, சாரியை, சிவப்பு, செவ்வை, தைப்பு.*

**அத்துகமானி** - *அரசு.*

**அத்துகம்** - *ஆமணக்கு.*

**அத்துச்சம்** - *சரியுச்சம்.*

**அத்துதல்** - *இசைத்தல், பொருந்தல்.*

**அத்துமம்** - *அரத்தை.*

**அஸ்து** - *அப்படியாக.*

**அத்துருக்கம்** - *அகழ்சூழ்ந்த கோட்டை.*

**அத்துவகமனம்** - *பிரயாணம்பண்ணல்.*

**அத்துவசோதனை** - *பிரமசோதனை செய்தல்.*

**அத்துவம்** - *இரண்டொன்றாயிருத் தல், ஒன்றிப்பு, சிவப்பு, வழி.*

**அத்துவர்** - *பிரமஞானிகள்.*

**அத்துவாக்கியம்** - *கருஞ்சீரகம்.*

**அத்துவாசைவம்** - *ஓர்சைவம்.*

**அத்துவாந்தம்** - *காலைமாலை வெளிச்சம்.*

**அத்துவாமூர்த்தி** - *பிரபஞ்சத்திற் கலந்து நின்றுசேட்டிப்போன்.*

**அத்துவானம்** - *செவ்வானம்.*

**அத்துவிதம்** - *ஒன்றிப்பு.*

**அத்துவை** - கோழையினது மூழை யினதுங்கலப்பு, தெரு, நேரம்.

**அத்தூரம்** - மரமஞ்சள்.

**அத்தை** - தலைவி, மாமி, முன்னிலை யசைச்சொல், அக்காள், மாதா.

**அத்தோ** - அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல்.

**அத்தோதையம்** - அருந்தோதையம்.

**அநங்கம்** - இருவாட்சி, மல்லிகை.

**அநரவன்** - வேந்தோன்றியன்.

**அநயம்** - அதிட்டகீனம், தீங்கு, வருத்தம்.

**அநாயகம்** - முதன்மையின்மை.

**அநிகம்** - சங்கம்மூன்று கொண்ட படை.

**அநிக்கிரகம், அநிக்கிரகித்தல்** - காத்தல்.

**அநித்தியம்** - நிலையின்மை, பொய்.

**அநிட்டை** - உறுதியின்மை.

**அநிதானம்** - அனாதாரம்.

**அநித்தியசமம்** - உதாரணத்தால் ஞாயம்பேசல்.

**அநியதம்** - அழிவுள்ளது, விலக்கியது.

**அநியமம்** - சந்தேகம், துன்னடை, விலக்கியது.

**அநிமாலினம்** - சாவு.

**அநியம்** - வுவமை, நியமித்தவுவமை யை விலக்கிப்பிறிது மொரு பொருளைக்கூட்டி உவமிப்பது. (உம்) மதுவராக விரேநின்வா யொப்ப தன்றியது போல்வதுண் டெனினுமாம்.

**அநியாயம்** - நியாயமின்மை.

**அநிரதம்** - சத்துரூபத்துக் கன்னிய மாகுமாயை.

**அநிருத்தபதம்** - ஆகாயம்.

**அநிருத்தன்** - அடங்காதவன், மன் மதன் மகன்.

**அநிருமலம்** - அழுக்கு.

**அநீசம்** - மரியாதை.

**அநீதம்** - நீதமின்மை.

**அநீதர்** - கீழ்மக்கள், நீதியற்றோர்.

**அநீதி** - நீதிகேடு.

**அநுக்காரம், அநுசாரம்** - ஒப்புமை.

**அநுசிதம்** - தகுதியின்மை.

**அநுதார்த்தம்** - உரூபகத்தினொன்று.

**அந்** - அன்.

**அந்தகசயன்** - சிவன்.

**அந்தகம்** - ஓர் சன்னிநோய்.

**அந்தகரிபு** - சிவன்.

**அந்தகன்** - அழிப்போன், இயமன், குருடன், சனி, ஓரிராக்கதன், சவுக் காரம்.

**அந்தகாசுகிருதன்** - சிவன்.

**அந்தகாரம்** - இருள், நரகம்.

**அந்தகாரி** - சிவன்.

**அந்தகோளம்** - நெல்லி.

**அந்தகூபம்** - தூர்ந்தகிணறு.

**அந்தக்கரணம்** - அந்தர்க்கரணம்.

**அந்தக்கிரகம்** - உள்வீடு.

**அந்தசடம்** - வயிறு.

**அந்தணரறுதொழில்** - ஈதல், ஏற்றல் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட் பித்தல்.

**அந்தணர்** - பார்ப்பார், முனிவர்.

**அந்தணர்வாக்கு** - வேதம்.

**அந்தணன்** - சனி, பார்ப்பான், வியாழன், அருகன், கடவுள், சிவன், பிரமன்.

**அந்தணாளர்** - அரசர்க்குறுதிச் சுற்றத்தினொருவர், பார்ப்பார்.

**அந்ததமசம்** -மிகுவிருள்.

**அந்தஸ்து** - நிருவாகம்.

**அந்தப்புரம்** - மன்றேவியில்லம்.

**அந்தமந்தம்** - உறுப்புக்கேடு, கூர்மை யின்மை, செப்பமின்மை.

**அந்தம்** - *அழகு, ஆகாயம், ஒழுங்கு, கடை, கத்தூரி, சாவு, முடிவு, அவையவம், இருள், எல்லை, சமீபம், சுபாவம், சோறு, நிச்சயம், நீர்.*

**அந்தரகணம்** - *ஆகாயகணம்.*

**அந்தரகாமி** - *ஆகாயமார்க்கமாய்ச் செல்லுங்குதிரை.*

**அந்தரங்கம்** - *இரகசியம், ஏகாந்தம், மனம், ஆலோசனை, உள்ளாக உடையது.*

**அந்தரசைவம்** - *ஓர்சைவம்.*

**அந்தரபவனி** - *ஆகாயகதி.*

**அந்தரதிசை** - *சாதகதிசைகளி னொன்று.*

**அந்தரநடனர்** - *கழாயர்.*

**அந்தரமிசிரம்** - *ஓர்நரகம்.*

**அந்தரம்** - *அளவு, ஆகாயம், ஆதர வின்மை, இடை, இருள், உள் வெளி, கூட்டம், தனிமை, தீமை, தேவர்கோயில், பேதம், முடிவு, மேகம், விக்கினம், அந்தரிப்பு, இடம், உடுப்பு, உவமை, கடவுள், காலம், சேடம், சொந்தம், நடு, நிமித்தம், பிழைப்பு, புருவத்தினடு, வெளி.*

**அந்தரவல்லி** - *கருடன்கிழங்கு.*

**அந்தரவாசம்** - *கொட்டைப்பாசி.*

**அந்தரவீச்சு** - *அந்தரிப்பு, பொறுப் பின்மை.*

**அந்தராபத்தியை** - *கருப்பிணி.*

**அந்தராயம்** - *இடையூறு, தீமை.*

**அந்தராளம்** - *நடு.*

**அந்தராளன்** - *அனுலோமத் தந்தைக் குப்பிரதிலோமத் தாயிடத்திற் பிறந்தபிள்ளை.*

**அந்தரி** - *அந்தரியென்னேவல், துற்கை, பார்வதி.*

**அந்தரிட்சம்** - *ஆகாயம்.*

**அந்தரிதம்** - *சேடம்.*

**அந்தரித்தல்** - *அலைதல், நிலை கெடுதல், மனந்தடுமாறல்.*

**அந்தரியாகம்** - *உட்பூசை.*

**அந்தர்** - *உள், மறைவு.*

**அந்தரியாமி** - *ஆன்மா, கடவுள், சீவசாட்சி.*

**அந்தரிலம்பம்** - *ஒடுங்கிய முக்கோணம்.*

**அந்தரிலயம்** - *துரியாதீதம்.*

**அந்தரீட்சம்** - *ஆகாயம்.*

**அந்தரீபம்** - *தீவு.*

**அந்தரேணம்** - *நடு.*

**அந்தர்க்கதம்** - *இடையில்வருதல்.*

**அந்தர்க்கரணம்** - *உட்கருவி.*

**அந்தர்ச்சடரம்** - *இரைக்குடர்.*

**அந்தர்ச்சரீரம்** - *உள்ளிந்திரியம்.*

**அந்தர்த்தகனம்** - *மதுநீர்வடித்தல்.*

**அந்தர்த்தானம்** - *உள், மறைவிடம்.*

**அந்தர்த்துவாரம்** - *உட்கதவு.*

**அந்தர்ப்பிரகிருதி** - *உள்ளிந்திரியம்.*

**அந்தர்ப்புரம்** - *அரசன்றேவியில்லம், உள்வீடு.*

**அந்தலை, அந்தலைப்பு** - *முடிவு.*

**அந்தளம்** - *கவசம்.*

**அந்தன்** - *குருடன், சனி.*

**அந்தாதிச்சா** - *மகராதியாறினும் வந்தசாபலம்.*

**அந்தாதித்தல்** - *அந்தாதியாகத் தொடுத்தல்.*

**அந்தாதித்தொடை** - *அடிதோறு மிறுதிக் கணின்றவெழுத்தேனு மசையேனுஞ் சீரேனுஞ் சொல் லேனுமடியேனு மற்றையடிக்காதி யாகவருவது.*

**அந்தாதிமடக்கு** - *ஓரடியினிறுதி யுமற்றையடியின் முதலும் பல பொருளொருமொழியான் மடங்கி வருவது.*

**அந்தாதி** - *கடவுள், நின்ற பாட்டினிறுதியும் வரும் பாட்டின் முதலும் ஒன்றாய்வருமோர்தொடை.*

**அந்தாளிபாடை** - *ஓர்பண்.*

**அந்தி** - *அந்தியென்னேவல், இரா, மாலையாகாலம், முத்தெருக் கூடுமிடம், அக்காள், பொருத்து, முடிவு.*

**அந்திகம்** - *அயல், கொளுகொம்பு, பக்கம்.*

**அந்திகாசிரயம்** - *தாவரம்.*

**அந்திகாவலன்** - *ஓர் தேவதை.*

**அந்திகை** - *அக்காள், அடுப்பு, இரவு, ஓர் கண்ணோய், சமீபம், பெண்.*

**அந்தித்தல்** - *பொருந்தல், பொருமுதல், மந்தப்படுதல்.*

**அந்திமந்தாரை** - *ஓர் பூமரம்.*

**அந்திமான்** - *இடையெழுவள்ளலிலொருவன்.*

**அந்தியம்** - *முடிவு.*

**அந்தியகருமம்** - *சாச்சடங்கு.*

**அந்தியகாலம்** - *மரணகாலம்.*

**அந்தியபம்** - *இரேவதி.*

**அந்தியவருணம்** - *நாலாம்வருணம்.*

**அந்திரம்** - *குடர்.*

**அந்திரன்** - *வேடன்.*

**அந்தியர்** - *கீழ்மக்கள்.*

**அந்தியேட்டி** - *மரணயாகம்.*

**அந்திவண்ணன்** - *சிவன்.*

**அந்தில்** - *அசைச்சொல், அவ்விடம்.*

**அந்து** - *நெல்வண்டு, கிணறு, பாதகிண்கிணி.*

**அந்துகம்** - *சங்கிலி, யானைச்சங்கிலி, பாதகிண்கிணி.*

**அந்துளிதுந்துளியார்த்தல்** - *சூகையாடல், பதைபதைத்தல்.*

**அந்தூகம்** - *யானைப்பாதகிண்கிணி.*

**அந்தேசம்** - *அந்தரிப்பு, அபலம்.*

**அந்தேவாசி** - *சண்டாளன், மாணாக்கன்*

**அந்தைமந்தை** - *மந்தக்குணம்.*

**அந்தோ** - *அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல்.*

**அபகடம்** - *அவகடம்.*

**அபகரித்தல்** - *வஞ்சனையாய்க் கவர்தல்.*

**அபகம்** - *மரணம்.*

**அபகரணம்** - *அபகரிப்பு, வழுச்செய்கை.*

**அபகருமம்** - *துற்கருமம், நெருக்கிடை, பொல்லாங்கு.*

**அபகளங்கம்** - *நீங்காவசை.*

**அபகம்** - *அவயவம்.*

**அபகாதம்** - *கொல்லல்.*

**அபகாரம்** - *நன்மைக்குத்தீமைசெய்தல், களவு, கொடுங் கோன்மை, தவறு, நட்டம், பொல்லாங்கு, வன்னம்.*

**அபகாரி** - *நன்றியீனன்.*

**அபகிருதி** - *எதிரிடை, துற்செய்கை, நெருக்கிடை.*

**அபகீர்த்தி** - *துற்கீர்த்தி, நிந்தை.*

**அபகுண்டனம்** - *சுற்றல்.*

**அபக்கியாதி** - *நிந்தை, பழி.*

**அபக்கிரமம்** - *புகலிடம், போதல்.*

**அபக்கிரியை** - *தீங்கு, துற்செய்கை.*

**அபக்கிரோசம்** - *நிந்தித்தல்.*

**அபக்குவம்** - *பக்குவமின்மை.*

**அபசகுனம்** - *துன்னிமித்தம்.*

**அபசத்தம்** - *அவசத்தம்.*

**அபசங்கம்** - *பாதம்.*

**அபசதம்** -*கீழ்மை.*

**அபசயம்** - *தோல்வி, பலவீனம்.*

**அபசரணம்** - *வெளிச்செல்லுதல்.*

**அபசரம்** - *அகற்றுதல், சீக்கிரகதி.*

**அபசருச்சனம்** - *கொல்லுதல், நன்கொடை, பிறவிநீங்கல், விடுதல்.*

**அபசரிதம்** - ஒழுக்கவீனம்.

**அபசவ்வியம்** - இடப்பக்கம், தற்சனிக்கும் அங்குட் டத்திற்குநடு.

**அபசாரம்** - துன்னடை, குறைவு, துற்செய்கை, வெளிச்செல்லுதல்.

**அபசாரி** - ஒழுக்கந்தப்பினவள், வேசி.

**அபசிதம்** - ஆசரித்தல், செலவிடல்.

**அபசித்துமூர்த்தம்** - எட்டாமூர்த்தம்.

**அபசேதிரு** - ஆராதூரிக்காரன்.

**அபச்சாயை** - தள்ளுபடிச்சாயை.

**அபஞ்சீகிருதம்** - தனித்தனியேநிற்கும் பூதங்கள்.

**அபடி** - திரைப்படாம்.

**அபடு** - சாமர்த்தியமின்மை.

**அபடுகரணம்** - புலக்குறைவு.

**அபட்சணம்** -நோன்பு.

**அபட்சதை** - எதிர்.

**அபட்சம்** - வெறுப்பு.

**அபட்டகம், அபட்டம்** - அங்குசநுனி.

**அபதாந்தரம்** - சமீபம்.

**அபதானகம், அபதானம்** - சுத்தநடை, மேன்றொழில், வலி.

**அபதூறு** - துற்கீர்த்தி.

**அபத்தம்** - தவறு, பொய், மோசம்.

**அபதேசம்** - இலக்கு, உபாயம், காரணம், கீர்த்தி, திக்கு, வஞ்சம், வேடம்.

**அபதேவதை** - பைசாசம்.

**அபத்தி** - பத்தியின்மை.

**அபத்திச்சந்தம்** - பசியின்மை.

**அபத்தியசத்துரு** - நண்டு.

**அபத்தியதை** - மருத்துவிச்சி.

**அபத்தியபதம்** - யோனி.

**அபத்தியம்** - பிள்ளை.

**அபத்தியாவிக்கிரயி** - மகவைவிற்பவன்.

**அபத்தியானம்** - பொல்லாங்கு.

**அபத்திரபம்** - வெட்கக்கேடு.

**அபத்திரவியம்** - அசுத்தம், கலப்பு.

**அபதுதியுருபகம்** - பொருளைமறுத்துவமையுடம்படுத் துரைப்பது. (உம்) கையல்லக் காந்தண்மலர்.

**அபநயனம்** - அழிதல், அழித்தல், எடுத்துக்கொள்ளுதல், கடனிறுத்தல்.

**அபநீதம்** - அபகரிக்கப்பட்டது, இறுக்கப்பட்டது.

**அபநோதம்** - அகற்றுதல்.

**அபமம்** - சூரியன்தக்கணாயனத்திலாகுதல் உத்தராயணத்திலாகுதலிறங்குதல்.

**அபமரணம்** - துன்மரணம்.

**அபமானம்** - துற்கீர்த்தி.

**அபம்** - எதிர், கீழ்மை, பிரிவு, வித்தியாச முதலியதைக் காட்டு மோருப சருக்கம்.

**அபயங்கொடுத்தல்** - அடைக்கலமாயேற்றுக் கொள்ளுதல்.

**அபயசம்** - துற்கீர்த்தி.

**அபயதன்** - தற்காப்போன்.

**அபயதானம், அபயப்பிரதானம்** - அடைக்கலம்.

**அபயஸ்தம்** - அபயகரம்.

**அபயமிடுதல்** - அடைக்கலம்புகுதல், முறையிடுதல்.

**அபமார்க்கம்** - துன்மார்க்கம், நாயுருவி, புன்சமயம்.

**அபமிருத்து** - அபமரணம்.

**அபயகரம், அபயாத்தம், அபையார்த்தம்** - பயந்தீரவமைக்குங்கை.

**அபயம்** - அச்சமின்மை, அடைக்கலம், ஓலம், கிருபை, செவ்வியம், தயை, உலகமுடிவு.

**அபயர்** - படைவீரர்.

**அபயவாக்கு** -அஞ்சேலெனல்.

**அபயன்** - கடவுள், சோழன், வீரன், அச்சமறுத்தோன், அருகன், பயமற்றவன்.

**அபரசன்** - *பின்னோன்.*

**அபரஞானம்** - *வாலஞானம்.*

**அபரஞ்சி** - *ஒடவைத்தபொன்.*

**அபரதி** - *தாமதித்தல்.*

**அபரத்துவம்** - *எதிர், பின்.*

**அபரநாதம்** - *எதிரொலி.*

**அபரபக்கம்** - *சந்திரன்பிற்பக்கம்.*

**அபரமார்க்கம்** - *நாயுருவி.*

**அபரம்** - *கவசம், நரகம், பிணக்கு, பிற்பக்கம், பின், முதுகு, யானைப் பின்கால், எதிர், பிந்தினது.*

**அபரலோகம்** - *மோட்சம்.*

**அபராசிதன்** - *அரன், அரி.*

**அபராணம்** - *ஏற்பாடு, பின்னேரம்.*

**அபராதம்** - *குற்றம், தெண்டம், பிழை.*

**அபராத்திரம்** - *கடைச்சாமம்.*

**அபரிசரம்** - *தூரம்.*

**அபரிச்சதம்** - *நிருமாணம்.*

**அபரிச்சேதம்** - *ஒழுங்கின்மை, பிரி வின்மை.*

**அபரிட்காரம்** - *சீர்கேடு.*

**அபரிணயனம்** - *இல்லொழுக் கத்திருத்தல்.*

**அபரிணீதை** - *விவாகஞ் செய்யாத வள்.*

**அபரிபாடி** - *ஒழுங்கின்மை.*

**அபரிபூதம்** - *முதிராதது.*

**அபரிமாணம்** - *அளவில்லாதது.*

**அபரிமிதம்** - *அளவின்மை, எல்லை யின்மை, பெருமை.*

**அபலம்** - *பலவீனம், பலனற்றது, கதவின்றாள்.*

**அபரியாயம்** - *ஒழுங்கின்மை.*

**அபரூபம்** - *அவலட்சணம்.*

**அபரோட்சஞானம்** - *பிரமசைதன்னிய தரிசனம்.*

**அபரோட்சன்** - *பிரமசைதன்னிய தரிசனன்.*

**அபவருக்கம்** - *முத்தி, நிறைவேற்றம், பலம், முடிவு, விடுதல்.*

**அபலாடிகை** - *தாகம்.*

**அபலாபம்** - *உருக்கம், வஞ்சகம்.*

**அபவரணம்** - *மூடி.*

**அபவருச்சனம்** - *நன்கொடை, பிறவி நீங்கல், விடுதல்.*

**அபவருத்தம்** - *அழித்தல்.*

**அபவருத்தனம்** - *அகற்றுதல், கலக்கு தல், சுருக்குதல்.*

**அபவனம்** - *நந்தனவனம்.*

**அபவாகம்** - *அருத்தாபத்தி, உள்ளறை.*

**அபவாதம்** - *ஒவ்வாப்பேச்சு, பழிச் சொல், குற்றச்சாட்டு, தடை, வெள்ளை.*

**அபவாதயோகம்** - *குற்றஞ்சொல்லல்.*

**அபவாரணம்** - *மறைவு, மரணம்.*

**அபவிதவ்வியம்** - *அசம்பவம்.*

**அபவித்திரம்** - *அசுத்தம்.*

**அபவித்திரன்** - *அசுத்தன்.*

**அபவியயமானம்** - *கடனிறாமை, செலவிடல்.*

**அபவியயம்** - *ஆராதூரித்தனம்.*

**அபவிருத்தி** - *குறைவு.*

**அபாகசாகம்** - *இஞ்சி.*

**அபாகம்** - *முதிராமை.*

**அபாகரணம்** - *கடனிறுத்தல்.*

**அபாக்கியம்** - *நிற்பாக்கியம்.*

**அபாங்ககம்** - *கடைக்கண்.*

**அபாங்கம்** - *கடைக்கண்பார்வை, திலகம்.*

**அபாசங்கம்** - *அம்புக்கூடு.*

**அபாசம்** - *ஆசையின்மை, குற்றம்.*

**அபாசிரயம்** - *பந்தர்.*

**அபாசீனம்** - *தெற்கு.*

**அபாஷணம்** - *அமைதி, பேச்சின்மை.*

**அபாடவம்** - *அந்தக்கேடு, நோய்.*

**அபாணிக்கிரகணம்** - *விவாகமின்மை.*

**அபாண்டம்** - *அபாத்திரம், நிந்தை.*

**அபாதானம்** - *ஐந்தாம் வேற்றுமைப் பொருள்.*

**அபாத்திரம்** - *பாத்திரவீனம்.*

**அபாத்திரீகரணம்** - *சுயதருமம்விட்டு அன்னியதருமஞ்செய்தல்.*

**அபாபம்** - *இன்மை, ஒவ்வாமை, மரணம்.*

**அபாம்பதி** - *சமுத்திரம்.*

**அபாயம்** - *சதியோசனை, மோசம், வஞ்சகம், அழிவு, எழுச்சி, நட்டம், பிரிவு.*

**அபாரணை** - *உண்ணாமை.*

**அபாரம்** - *அளவின்மை, எல்லைப் படாதது, கடவுள், கேடு.*

**அபார்த்தகரணம்** - *கள்ளவழக்கு.*

**அபாவஅளவை** - *இல்லாததற்குவமை.*

**அபாவப்பிரமாணம்** - *ஓரளவை, அஃது இயல்பாயில்லதனை யில்லை யெனக் கோடல்.*

**அபாவம்** - *இன்மை, ஓரளவை, அபாபம்.*

**அபாவர்த்தனம்** - *திருப்புதல்.*

**அபாவனை** - *தியானமின்மை,நிந்தனை.*

**அபானம்** - *குதம்.*

**அபானவாயு** - *கீழ்நோக்கிச்செல்லும் மூச்சு.*

**அபானன்** - *தசவாயுவினொன்று.*

**அபி** - *கண்டனை, கதிப்பு, கேள்வி, சந்தேகம், சமீபம், பிரிவு, மேன் மை, விருப்பம் இவற்றைக் காட்டு மோருபசற்கம்.*

**அபிகதம்** - *சமீபித்தல்.*

**அபிகமம்** - *சமீபம்.*

**அபிகரிசனம்** - *தேய்த்தல்.*

**அபிகாதம்** - *உபாதி, காயப்படுத்தல்.*

**அபிகாதி** - *சத்துரு.*

**அபிகாயம்** - *அழற்சி, ஓர்காசம், சீற்றம், மனவேகம்.*

**அபிகாரம்** - *கொள்ளையிடல், நெய், படைக்கலந்தரித்தல்.*

**அபிகிதத்துவம்** - *மேற்கோள்.*

**அபிகிதம்** - *முன் சொல்லப்பட்டது.*

**அபிக்கியை** - *அழகு, அழைத்தல், கீர்த்தி, நாமம்.*

**அபிக்கிரகம்** - *திருடுதல், போர்க்கறை கூவுதல்.*

**அபிக்கிரணம்** - *எதிர்கொள்ளல்.*

**அபிக்கிரமம்** - *ஏறுதல், சருவுதல்.*

**அபிசங்கம்** - *குற்றச்சாட்டு, கூட்டம், சத்தியம், சபிப்பு, தழுவுதல்.*

**அபிசத்தி** - *துற்கீர்த்தி.*

**அபிசந்தாபம்** - *யுத்தம்.*

**அபிசந்தானம்** - *அணாப்புதல், இணக்கம், பற்றுதல்.*

**அபிசந்தி** - *அணாப்பு, இணக்கம், காரியம்.*

**அபிசம்** - *சங்கம்.*

**அபிசம்பந்தம்** - *சங்கிரதம், நல்லிணக் கம்.*

**அபிசம்பாதம்** - *சாபம், யுத்தம்.*

**அபிசரன்** - *தோழன்.*

**அபிசவம்** - *கஞ்சி.*

**அபிசவனம்** - *முழுகுதல்.*

**அபிசற்சனம்** - *கொலை, நன்கொடை.*

**அபிசனம்** - *கீர்த்தி, பிறந்ததேயம், வமிசத்தலைமை, வமிசம்.*

**அபிசாதகுலம்** - *நற்குலம்.*

**அபிசாதம்** - *தகைமையானது.*

**அபிசாபம்** - *குற்றச்சாட்டு, சபிப்பு, வீண்.*

**அபிசாபனம்** - *சபித்தல்.*

**அபிசாபிவாரம்** - *இச்சித்தல்.*

**அபிசாரகம்** - *மந்திரத்தாற்கொல்லல்.*

**அபிசாரணம்** - *சந்தித்தல், சமீபித்தல்.*

**அபிசாரமந்திரம்** - *மோகனமந்திரம்.*

**அபிசாரம்** - *நியமிப்பு, பெலன், மோகனம், யுத்தம்.*

**அபிசாரவோமம்** - *மாரணஓமம்.*

**அபிஷதம்** - *மருந்து.*

**அபிஷேகம்** - *திருமுழுக்கு, முழுக்கு.*

**அபிசாரி** - *மோகஸ்திரீ, மோகனவித்தைக்காரன்.*

**அபிசாரிகை** - *பிறர்சம்பந்தஸ்திரீ.*

**அபிசாரிதம்** - *மோகிக்கப்பட்டது.*

**அபிசித்தாந்தம்** - *சித்தாந்தஞ் சொல்லத் தொடங்கிவே றொன்றைச் சொல்லுதல்.*

**அபிசித்து** - *அபசித்து.*

**அபிசுதம்** - *கஞ்சி.*

**அபிஞ்ஞானம்** - *அடையாளம், அறிவு, கறை.*

**அபிடங்கம்** - *சாபம்.*

**அபிடேகம்** - *திருமுழுக்கு.*

**அபிதம்** - *இரட்சித்தல்.*

**அபிதாபம்** - *கலக்கம், மிகுவெப்பம்.*

**அபிதாவனம்** - *பின்றொடர்தல்.*

**அபிதானம்** - *பெயர், பேச்சு, பொருணூல்.*

**அபிதிற்சை** - *விருப்பம்.*

**அபிதேயம்** - *நாமம், பொருளுள்ள சொல்.*

**அபிதேயாகிதம்** - *பயனில்சொல்.*

**அபித்தியானம்** - *இச்சித்தல், தியானித்தல்.*

**அபித்தியை** - *இச்சை.*

**அபித்துரோகம்** - *குரூரம்.*

**அபிநந்தை** - *விருப்பம்.*

**அபிநயம்** - *கூத்து, கைமெய்காட்டுதல், அலங்கரிப்பு, உபசரணை, காமக் குறிப்பு.*

**அபிநயர்** - *கூத்தர்.*

**அபிநயித்தல்** - *அபிநயஞ்செய்தல்.*

**அபிநிட்கிரமணம்** - *கக்குதல், புறப்படல்.*

**அபிநிடபத்தி** - *முடிவு.*

**அபிநிரியாணம்** - *படையெழுச்சி.*

**அபிநிவேசம்** - *சங்காவியம், படிப்பு முயற்சி.*

**அபிநீதி** - *சயிக்கை, சினேகம்.*

**அபிலவிருக்கம்** - *தில்லைமரம்.*

**அபிபவம்** - *கீழ்ப்படுத்தல்.*

**அபிப்பிரணயம்** - *தயவு, நிவிர்த்தி.*

**அபிப்பிராயச்சந்தம்** - *அபிப்பிராயம்.*

**அபிநவம்** - *அதிசயம், புதுமை.*

**அபிப்பிராயம்** - *உட்கருத்து, எண்ணம்.*

**அபிமதம்** - *சம்மதம், அன்பு, சமத்து, விருப்பம்.*

**அபிமந்திரணம், அபிமந்திரித்தல்** - *ஒன்றிலேமந்திரவுருவேற்றல், அழைத்தல், ஆலோசித்தல்.*

**அபிமந்திரம்** - *செபித்தல்.*

**அபிமரம்** - *கொலை, மறியல், யுத்தம்.*

**அபிமர்த்தம்** - *ஊர்க்கொள்ளை, தேய்த்தல், யுத்தம்.*

**அபிமன்னு** - *வாளபிமன்.*

**அபிமானம்** - *களிப்பு, மதிப்பு, மானம், அறிவு, ஆணவ மறைப்பு, உருக்கம், கொலை, பெருமை.*

**அபிமானவிருத்தி** - *அகங்காரம்.*

**அபிமானி** - *அபிமானமுடையோன்.*

**அபிமானிதம்** - *புணர்ச்சி.*

**அபிமானித்தல்** - *அளவிடல்.*

**அபிமானு** - *அறிவு, உருக்கம், பெருமை.*

**அபிமுகம்** - *நேர்முகம், முகதா.*

**அபியரதி** - *சத்துரு.*

**அபியவகிரீஷணம்** - *கல்லிப்பிடுங்கல்.*

**அபியிதகருத்தன்** - *எழுவாய்க் கருத்தன்.*

**அபியிதம்** - *சொல்லல்.*

**அபியுத்தம்** - *பகையெதிர்கொள்ளல்.*

**அபியூட்சணம்** - *அமைத்தல்.*

**அபியோகம்** - *தடை, தண்டனை, போர்க்கறைகூவுதல், முயற்சி, முறைப்பாடு, யுத்தம்.*

**அபியோகி** - *குறைகூறுவோன்.*

**அபிரங்கி** - *கருநெல்லி.*

**அபிரட்சை** - *சருவரட்சணம்.*

**அபிரதி** - *சந்தோஷம், தொழில்.*

**அபிரயோசனம்** - *பிரயோசனமற்றது.*

**அபிராமம்** - *அழகு.*

**அபிராமி** - *சரச்சுவதி, பார்வதி, சத்தமாதர்களிலொருத்தி.*

**அபிருசி** - *கீர்த்திப்பிரியம், விருப்பம்.*

**அபிரூபன்** - *காமன், சந்திரன், சிவன், திருமால், பண்டிதன்.*

**அபிலாசம்** - *விருப்பம்.*

**அபிலாபம்** - *பேச்சு.*

**அபிலிகிதம், அபிலேகனம்** - *எழுதுதல்.*

**அபிவந்தனம்** - *வந்தனஞ்சொல்லுதல்.*

**அபிவாக்கியம்** - *கொண்டுபோதல், செலுத்துதல்.*

**அபிவியாத்தம்** - *பரம்புதல்.*

**அபிவியாத்தி** - *சருவவியாபகம்.*

**அபிவிருத்தி** - *வருத்திப்பு.*

**அபினி** - *அபின்.*

**அபின்னதை** - *முழுமை.*

**அபின்** - *ஓர் மருந்து.*

**அபின்னம்** - *ஒற்றுமை பேதமின்மை, முழுவிலக்கம்.*

**அபின்னாசத்தி** - *பங்கப்படாமை.*

**அபீகன்** - *கணவன், புலவன்.*

**அபீசு** - *கிரணம்.*

**அபீடனம்** - *நோயின்மை, பட்சம்.*

**அபீட்சணம்** - *அமைதல்.*

**அபீட்டம், அபீஷடம்** - *விரும்பப்பட்டது.*

**அபீட்டிதம்** - *துதித்தல்.*

**அபீட்பம்** - *வைதல்.*

**அபீதம், அபீதி** - *பயமின்மை.*

**அபீமானம்** - *அபிமானம்.*

**அபீரன்** - *இடையன்.*

**அபீரு** - *அச்சமிலான், வைரவன்.*

**அபுத்தம்** - *உண்ணாதது.*

**அபுத்திரன்** - *பிள்ளையில்லாதவன்.*

**அபுனராவிருத்தி, அபுனர்ப்பவம்** - *பிறவிநீங்கல்.*

**அபூதவுவமை** - *முன்பில்லதனையுவமையாக்கியுரைப்பது (உம்.) சகலகமலங்களினழ கெலாந் திரண்டிடினிவண் முகத்துக் கொப்பு.*

**அபூபம்** - *அப்பவருக்கம்.*

**அபூரணகாலசம்** - *முதிராமற் பிறந்தது.*

**அபூரணி** - *பட்டுப்பருத்தி.*

**அபூருவம்** - *நூதனம்.*

**அபெத்தன்** - *பந்தமகன்றோன்.*

**அபேட்சை** - *ஆசை, எச்சரிப்பு, சங்கை, சமயம்.*

**அபேதசைவம்** - *ஓர் சைவம்.*

**அபேதம்** - *பேதமின்மை.*

**அபேனம்** - *அவின்.*

**அபைசுனம்** - *நிதார்த்தம்.*

**அபையம்** - *அபயம்.*

**அபோகண்டம்** - *அமைதி, அவலட்சணம், குழந்தை, பயங்கரம்.*

**அபோகம்** - *ஐயந்தீர்த்தல், ஞாயம் பேசுதல், போகமின்மை.*

**அபோகார்த்தம்** - *விபரீதவுரை.*

**அபோக்கியம்** - *அனுபவியாமை.*

**அபோசனம்** - *உபவாசம்.*

**அபோதம்** - *அக்கியானம்.*

**அப்தோரியாமம்** - *யாகமிருபத்தொன்றி னொன்று.*

**அப்பம்** - *அடை, சிற்றுண்டி, புட்டுத் திருப்பிப்பூடு.*

**அப்பறாத்தோணி** - *அம்புக்கூடு.*

**அப்பல்** - *அணிதல், அப்புதல், மோதல்.*

**அப்பளம்** - *ஒருவகைப்பண்ணிகாரம்.*

**அப்பறாத்தூணி** - *அம்புக்கூடு.*

**அப்பன்** - *தந்தை.*

**அப்பாட்டன்** - *முப்பாட்டன்.*

**அப்பாலி** - *பாவமற்றவன்.*

**அப்பிதம்** - *மேகம்.*

**அப்பியங்கம், அப்பியங்கனம்** - *முழுக வெண்ணெய்பூசுதல், உடம்பில் வாசனை யூட்டல், பிண்ணாக்கு, மை தீட்டல்.*

**அப்பியங்கஸ்நானம்** - *எண்ணெய் முழுக்கு.*

**அப்பியசனம், அப்பியசித்தல்** - *அப் பியாசித்தல்.*

**அப்பியசூயகன்** - *அழுக்காறுடை யோன்.*

**அப்பியஞ்சனம்** - *எண்ணெய், எண் ணெய்பூசல்,மைதீட்டல், வாசனை யூட்டல்.*

**அப்பியந்தரம்** - *உள்வீதி, உள்ளிடம்.*

**அப்பியமிதம்** - *துன்பம்.*

**அப்பியர்த்தனை** - *மன்றாட்டு, வணக்கம்.*

**அப்பியவகரணம்** - *தின்றல்.*

**அப்பியவகாரம்** - *தின்றல்.*

**அப்பியற்சனம்** - *வணக்கம்.*

**அப்பியற்சை** - *வணக்கம்.*

**அப்பியாகதன்** - *விருந்தன்.*

**அப்பியாகமம்** - *அயல், எழும்புதல், கொலை, சேருதல், யுத்தம், வைராக்கியம்.*

**அப்பியாகமனம்** - *சந்தித்தல்.*

**அப்பியாகாதம்** - *சருவுதல்.*

**அப்பியாகாரம்** - *களவு.*

**அப்பியாசம்** - *பரிட்சை.*

**அப்பியாசையோகம்** - *தியானம்.*

**அப்பியாதானம்** - *துவக்கம்.*

**அப்பியாமர்த்தம்** - *யுத்தம்.*

**அப்பியுதையம்** - *சம்பவிப்பது, திருவிழா, வத்திப்பு.*

**அப்பியுத்தானம்** - *உயர்ச்சி, எழும்பு தல், கீர்த்தி, சூரியோதையம்.*

**அப்பியுபகமம்** - *சமீபித்தல், சேர்த் திக்கை, வாக்குத்தத்தம்.*

**அப்பியுப்பத்தி** - *தயவு, தற்காப்பு.*

**அப்பியுபாயம்** - *பொருத்தம்.*

**அப்பியுற்பத்திகை** - *உபகாரம்.*

**அப்பிரகம்** - *ஓர்வகை லோகக்கல்.*

**அப்பிரகம்பதை** - *அசைவின்மை.*

**அப்பிரகிருட்டம்** - *காக்கை.*

**அப்பிரசம்** - *மலடு.*

**அப்பிரசாதம்** - *தயவின்மை.*

**அப்பிரசாதை** - *மலடி.*

**அப்பிரசித்தம்** - *பிரபவியமின்மை, விளக்கமின்மை.*

**அப்பிரதாபம்** - *எளிமை, மங்கல்.*

**அப்பிரதானம்** - *முக்கியமின்மை, விளக்கமின்மை.*

**அப்பிரதானி** - *பிரதானமற்றவன்.*

**அப்பிரதிகாரம்** - *பதிலின்மை.*

**அப்பிரதிபத்தி** - *அசட்டை, தவறு, நிதானிப்பின்மை.*

**அப்பிரதிரதன்** - *யுத்தவீரன்.*

**அப்பிரத்தியயம்** - *சந்தேகம்.*

**அப்பிரபிசாசகம், அப்பிரபிசாசம்** - *இராகு.*

**அப்பிரபுட்பம்** - *நீர்.*

**அப்பிரமாதங்கம்** - *இந்திரன் யானை.*

**அப்பிரமாதம்** - *சுறுசுறுப்பு.*

**அப்பிரமாணிகம்** - *ஒவ்வாநியாயம், பிரமாணிக்கத்தகாதது.*

**அப்பிரமேயம்** - *அளவிடப்படாதது, ஓரெண்.*

**அப்பிரமை** - *கீழ்த்திசையானைக்குப் பெண்யானை.*

**அப்பிரமாபிரியம்** - *ஐராவதம்.*

**அப்பிரமாலை** - *முகில்நிரை.*

**அப்பிரமேயன்** - *அறியப்படாதவன்.*

**அப்பிரம்** - *மேகம், ஆகாயம், பொன், முகில்.*

**அப்பிரயோசனம், அப்பிரயோசிகம்** - *பிரயோசனமின்மை.*

**அப்பிரவத்தகம்** - *செயலின்மை.*

**அப்பிரவிருத்தன்** - *விருத்தியற்றவன்.*

**அப்பிராகிருதம்** - *பிரதானமானது, மேலானது.*

**அப்பிராஞ்ஞும்** - *அறிவின்மை.*

**அப்பிராணம்** - *மரணம்.*

**அப்பிராணி** - *அப்பாவி, வஞ்சகமற்றவன்.*

**அப்பிராந்தி** - *குழப்பமின்மை.*

**அப்பிரீதி** - *சத்துருத்தனம், வெறுப்பு.*

**அப்புத்திரட்டி** - *கட்டுக்கொடி.*

**அப்புருவம்** - *உப்பு, நவசாரம்.*

**அப்பு** - *அப்பென்னேவல், அம்பு, கடல், தந்தை, நீர்.*

**அப்புதல்** - *கும்முதல், சாத்துதல், பூசுதல்.*

**அப்புவின்கோபம்** - *சேத்துமம்.*

**அப்புறாத்தூணி** - *சரகாண்ட பாஷாணம்.*

**அமங்கலம்** - *மங்கலமற்றது.*

**அமங்கலி, அமங்கலை** - *கைமை.*

**அமசடக்கம்** - *அடக்கம்.*

**அமச்சன்** - *மந்திரி, வியாழம்.*

**அமச்சு** - *மந்திரி, மந்திரித்தன்மை.*

**அமடு** - *மடிப்பு, பொல்லாங்கு.*

**அமட்டு** - *உருட்டு, புரட்டு.*

**அமட்டுதல்** - *உருட்டுதல், புரட்டுதல்.*

**அமணர்** - *சமணர், மதிகேடர்.*

**அமண்** - *சமண்சமயம், சமணருக்குரியது.*

**அமயம்** - *காலம்.*

**அமண்டம்** - *ஆமணக்கு.*

**அமதம்** - *நோய், மரணம்.*

**அமம்** - *நோய்.*

**அமரசிலைக்கந்தம்** - *வைப்புப் பாஷாணமுப் பத்திரண்டினொன்று.*

**அமரத்துவம்** - *அழியாமை.*

**அமரபாதிரு** - *இந்திரன்.*

**அமரம்** - *ஓர்நோய், கிரந்தநிகண்டு, அழிவின்மை, இரசம் சுத்தம் வெண்மை.*

**அமரர்** - *பகைவர், வானோர்.*

**அமரர்மாத**ர் - *தெய்வப்பெண்.*

**அமரார்** - *பகைவர்.*

**அமராங்கனை** - *தேவப்பெண்.*

**அமராசயம்** - *கருப்பை.*

**அமராத்திரி** - *மகாமேரு.*

**அமராபகை** - *ஆகாயகங்கை.*

**அமராபதம்** - *தேவுலகு.*

**அமராவதி** - *தேவலோகம்.*

**அமராவதியோன்** - *இந்திரன்.*

**அமரி** - *அமிழ்து, சிறுநீர், துற்கை, விடம், கற்றாழை.*

**அமரிக்கை** - *அடக்கம், ஆறுதல்.*

**அமரிஷணம்** - *கோபம்.*

**அமருதல்** - *அடங்குதல்.*

**அமரேசன், அமரேசுவரன்** - *இந்திரன்.*

**அமரை** - *இந்திரனகர், கருப்பை, கொப்பூழ்க்கொடி, வீடு.*

**அமர்** - *அமரென்னேவல், போர், மதில், மூர்க்கம், வெறி.*

**அமர்கொள்ளுதல்** - *மூர்க்கவெறியடைதல்.*

**அமர்க்களம்** - *ஆரவாரம், பம்பல், போர்க்களம்.*

**அமர்தல்** - *அடங்குதல், அமைதல், இருத்தல், படிதல், பெருமை, பொருந்தல், பொலிவு, மிகுதி.*

**அமர்த்தல்** - *அடக்கிக்கொள்ளுதல், அமரச்செய்தல், பொருதல்.*

**அமலகமலம்** - *கோசலம்.*

**அமலசாந்தம்** - *சுண்ணாம்பு, பசுவின் சாணம்.*

**அமலம்** - *அழகு, அழுக்கின்மை, வெண்மை.*

**அமலல்** - *சேர்தல், நெருங்கல், பொருந்தல்.*

**அமலன்** - *கடவுள், மலமிலி, அருகன், சிவன், விட்டுணு.*

**அமலை** - *ஒலி, சோறு, மலமில்லாதவள், மிகுதி, இலக்குமி, கொப்பூழ்க் கொடி, பார்ப்பதி.*

**அமல்** - *செறிவு.*

**அமளி** - *ஆரவாரம், மக்கட்படுக்கை, மெத்தை.*

**அமளை** - *ஓர் பூண்டு.*

**அமனி** - *தெரு.*

**அமனோயோகம்** - *கவனமின்மை.*

**அமாசயம்** - *அன்னநந்தண்ணீர் தங்குமிடம்.*

**அமாதானம்** - *அடக்கம், சேமம்.*

**அமாத்தியர்** - *தந்திரிகள், மந்திரிகள்.*

**அமாநசியம்** - *உபாதி.*

**அமாமசி, அமாவசி** - *அமரவாசி.*

**அமார்க்கம்** - *துன்மார்க்கம், நாயுருவி, மார்க்கவிரோதம்.*

**அமாவாசி** - *சூரியனுஞ்சந்திரனுங் கூடும்நாள், அஃது, கிருட்டிண பக்கத்திற்பதினைந் தாந்திதி.*

**அமானம், அமிதம்** - *அளவின்மை.*

**அமானனம்** - *அவசங்கை.*

**அமானி** - *பொது.*

**அமானிதை** - *மரியாதை.*

**அமிசகம்** - *நாள்.*

**அமிசகன்** - *பங்காளி, பங்கு.*

**அமிசம்** - *அன்னம், செல்வாக்கு, தோள், நிதார்த்தம், பங்கு, பாகை, பின்னம், விவாகம்.*

**அமிசனம்** - *பிரித்தல்.*

**அமிசாமம், அமிசாமியம்** - *பிரமாவின் மானதவாவி.*

**அமிசு** - *அணு, சூரியன், பிரவை.*

**அமிசுகம்** - *இலை, நல்லாடை.*

**அமிச்சை** - *ஞானம்.*

**அமிதாவல்** - *ஆசைப்பெருக்கம்.*

**அமித்திரர்** - *பகைவர்.*

**அமித்துரு** - *சத்துரு.*

**அமிரம்** - *மிளகு.*

**அமிருதம்** - *அமிர்தம்.*

**அமிருதை** - *திப்பிலி, துளசி, மது.*

**அமிர்தசஞ்சீவனி** - *உயிர் தருமருந்து, குற்றுயிர் தருமருந்து.*

**அமிர்தசாரம்** - *கற்கண்டு.*

**அமிர்தசோதரம்** - *குதிரை.*

**அமிர்ததரங்கிணி** - *சந்திரகிரணம்.*

**அமிர்தபிந்து** - *உபநிடத முப்பத்திரண்டினொன்று.*

**அமிர்தவல்லி** - *சீந்தில்.*

**அமிர்தன்** - *மரணமற்றவன்.*

**அமிர்தாகரணன்** - *கருடன்.*

**அமிர்தாசனர்** - *தேவர்.*

**அமிர்தாரிவளை** - *சங்கநிதி.*

**அமிர்தாவல்** - *ஆசைப்பெருக்கம்.*

**அமிர்தம்** - *அமிழ்தம், மூர்ச்சைதீர்த்துயிர் தருமருந்து, இனிப்பு, உணவு, சோறு, தேவவூண், நஞ்சு, நீர், நெய், பாக்கியம், பால், பொன், மரணமின்மை, முத்தி, மோர், யாகசேடம்.*

**அமிழ்தம், அமிழ்து** - *அமுதம், இனிமை, மங்கலச் சொல்லினொன்று.*

**அமிழ்தல்** - *அமிழ்ந்தல், தாழ்தல்.*

**அமிழ்த்தல்** - *தாழ்த்தல்.*

**அமிழ்ந்தல்** - *அழுந்தல், தாழ்தல்.*

**அமீவம்** - *பாவம், வருத்தம்.*

**அமுக்கடி** - *மந்தாரம், முட்டாயிருத்தல், மூடமாயிருத்தல், மூடிக்கொள்ளுதல்.*

**அமுக்கல்** - *உள்ளேயமிழ்ந்தப் பண்ணல், கீழேயமரப் பண்ணுதல்.*

**அமுக்கனங்கிழங்கு** - *ஓர் மருந்து.*

**அமுக்கன்** - *நித்திரையிலமுக்குமாவி.*

**அமுக்கு** - *அமர்த்தித்தள்ளுதல்.*

**அமுக்குரவு, அமுக்குரா** - *ஓர் செடி.*

**அமுங்கல்** - *அழுந்தல், தாழ்தல்.*

**அமுசம்** - *சிறுசெருப்படை.*

**அமுணங்கம்** - *அடக்கமின்மை.*

**அமுதகதிரோன்** - *சந்திரன்.*

**அமுதகம்** - *நீர், பாற்கடல், முலை.*

**அமுதகிரணன்** - *சந்திரன்.*

**அமுதசருக்கரை** - *சீந்தில்மா.*

**அமுதகுண்டை** - *இரப்போர்கலம்.*

**அமுதகுலர்** - *இடையர், சான்றார்.*

**அமுதங்கம்** - *கள்ளி, சதுரக்கள்ளி.*

**அமுதபார்வை** - *பிரியநோக்கு, புணர்ச்சி நோக்கு.*

**அமுதமேந்தல்** - *புண்ணியமொன்பதினொன்று.*

**அமுதம்** - *இனிமை, திரிபலை, தேவருணவு, நீர், பால், பெருமை, போசனம், முத்தி, வேண்டல், உயிர்தருமருந்து, சேடம், மூளை.*

**அமுதயோகம்** - *சுபயோகம்.*

**அமுதர்** - *இடையர், வானோர்.*

**அமுதவல்லி** - *சீந்தில், வள்ளிநாயகி.*

**அமுதவெழுத்து** - *சொன்முதலிலே வரத்தக்க சுபவெழுத்து.*

**அமுதாம்பரமணி** - *கௌத்துவமணி.*

**அமுதாரி** - *பூனைக்காலி.*

**அமுது** - *அமிழ்து, சுவை, சோறு, நீர், பால்.*

**அமுதுசெய்தல்** - *புசித்தல்.*

**அமுதுறை** - *எலுமிச்சைக்கனி.*

**அமுத்தம்** - *கையாயுதம்.*

**அமுத்தி** - *இட்டமின்மை.*

**அமுரி** - *சிறுநீர்.*

**அமுரியுப்பு** - *ஓருப்பு.*

**அமூர்த்தம், அமூர்த்தி** - *உருவமின்மை.*

**அமேதநீக்கி** - *கற்றாளை.*

**அமேத்தியம்** - *அசுத்தம்.*

**அமை** - *அமாவாசி, அமையென்னேவல், மூங்கில்.*

**அமைச்சர்** - *மந்திரிகள்.*

**அமைச்சு** - *மந்திரி, மந்திரித்தனம்.*

**அமைதல்** - *அடங்கதல், சம்பவித்தல், சம்மதித்தல், நிறைதல், பொருந்தல்.*

**அமைதி** - *அடக்கம், அமரிக்கை, சமையம், நிகழ்ச்சி, பொருத்தம், மாட்சிமை.*

**அமைத்தல்** - *அமையப்பண்ணுதல், சமைத்தல், செய்தல், நியமித்தல்.*

**அமைப்பு** - *அனுபோகம், நியமிப்பு, விதி.*

**அமையம்** - *காலம், சமையம்.*

**அமையுமென்றல்** - *ஆகட்டுமென்றல், வேண்டாமென்றல்.*

**அமைவடக்கம்** - *அமசடக்கம்.*

**அமைவர்** - *ஞானிகள், முனிவர்.*

**அமைவன்** - *அடக்கமுடையோன், அருகன்.*

**அமைவு** - *அடக்கம்.*

**அமோகம்** - *பெருகுந்தன்மை, மிகுதி, மோகநீயம்.*

**அமோட்சம்** - *அடிமைத்தனம், மறியல்.*

**அம்** - *அசைச்சொல், அழகு, இடைச்சொல், சாரியை, நீர், மேகம், தன்மைமுன்னிலையுளப் பாட்டுப்பன்மைவினைவிகுதி, (உம்) வந்தனம், தொழிற்பேர்*

*விகுதி, (உம்) தோற்றம், பண்புப் பேர்விகுதி (உம்) நலம்.*

**அம்பகம்** - *எழுச்சி, கண், சேம்பு.*

**அம்பட்டத்தி** - *நாவிதப்பெண்.*

**அம்பட்டன்** - *நாவிதன்.*

**அம்பணத்தி** - *துற்கை.*

**அம்பணம்** - *ஆமை, துலாக்கோல், நீர், மரக்கால், வாழை.*

**அம்பணவர்** - *ஓர் சாதியார்.*

**அம்பரம்** - *ஆகாயம், கடல், சீலை, திசை, பரவெளி.*

**அம்பராந்தம்** - *திக்காந்தம், புடைவையினோரம்.*

**அம்பராம்புயம்** - *கடற்றாமரை, பதுமநிதி.*

**அம்பரீசம்** - *எண்ணெய்ச்சட்டி, போர்.*

**அம்பரீசன்** - *சிவன், திருமால்.*

**அம்பரை** - *ஓர் நிமிளை.*

**அம்பரைநாதம்** - *அப்பிரகம்.*

**அம்பர்** - *அவ்விடம், ஓர் மருந்து.*

**அம்பலம்** - *சவை, சித்திரகூடம்,வெளி.*

**அம்பலவிருக்கம்** - *தில்லைமரம்.*

**அம்பல்** - *பழிமொழி, புறங்கூறல்.*

**அம்பாயம்** - *அக்கப்பாடு, உபாதி.*

**அம்பாரம்** - *அடுக்கு, குவியல்.*

**அம்பாரி** - *அவுதா.*

**அம்பாலிகை** - *தருமதேவதை, பாண்டுவின்றாய், பார்வதி, மாதா.*

**அம்பால்** - *தோட்டம்.*

**அம்பாவணம்** - *சாபம்.*

**அம்பி** - *இறைகூடை, ஓடம், சலசூத்திரம், தாம்பு, தெப்பம், மரக்கலம், மிடா.*

**அம்பிகேயகன், அம்பிகேயன்** - *கணபதி, கந்தன், திரிதராட்டிதன்.*

**அம்பிகை** - *காளி, தருமதேவதை, பார்வதி, திரிதராட்டிரன்றாய், மாதா.*

**அம்பிகைதனயன்** - *குமரன், விநாயகன், வீரபத்திரன்.*

**அம்பிகைபாகன்** - *சிவன்.*

**அம்பு** - *எலுமிச்சை, கணை, தளிர், நீர், மூங்கில், மேகம், சரகாண்டபாஷாணம்.*

**அம்புகிராதம்** - *முதலை.*

**அம்புக்கட்டு** - *அத்திரக்கட்டு.*

**அம்புக்குப்பி** - *அம்புக்குழைச்சு.*

**அம்புக்கூடு** - *ஆவநாழி.*

**அம்புசம்** - *தாமரை.*

**அம்புசன்மம்** - *தாமரை.*

**அம்புசாதம்** - *தாமரை.*

**அம்புசாதன்** - *பிரமன்.*

**அம்புதம்** - *நீர், மேகம்.*

**அம்புதி** - *சமுத்திரம்.*

**அம்புநிதி** - *சமுத்திரம்.*

**அம்புயம்** - *இறைகூடை, தாமரை.*

**அம்புபிரசாதனம்** - *தேற்றாங்கொட்டை.*

**அம்புரம்** - *கீழ்வாயிற்படி.*

**அம்புராசி** - *கடல்.*

**அம்புரோகிணி** - *தாமரை.*

**அம்புலி, அம்புலிமான்** - *சந்திரன்.*

**அம்புவாகம்** - *முகில்.*

**அம்புவாகினி** - *பாதிரிப்பூ.*

**அம்போசசனி, அம்போசயோனி** - *பிரமன்.*

**அம்போசம்** - *சந்திரன், தாமரை.*

**அம்போதம், அம்போதரம்** - *முகில்.*

**அம்போதரங்கம்** - *அஃது நாற்சீரடியு முச்சீரடியுமிருசீரடி யுமாய்த் தாழிசைக்குந் தனிச்சொற்கு நடுவேயேனும் அராகத்திற்குந்தனிச் சொற்குநடுவேயேனுநிற்பது, கலிப்பாவினோருறுப்பு.*

**அம்போதரங்க, வொத்தாழிசைக் கலிப்பா** - *கலிப்பாவித்துளொன்று, அஃது வண்ணக வொத்தாழிசைக்*

*கலிப்பாவுறுப்பின் அராகமொழிந்த ஐந்துறுப்பையுங் கொண்டு வருவது.*

**அம்போதி** - *கடல், காற்று, பாட்டினருத்தம்.*

**அம்போநிதி, அம்போராசி** - *சமுத்திரம்.*

**அம்போருகம்** - *தாமரை.*

**அம்ம** - *உரையசைச்சொல், கேளெனல்.*

**அம்மணம்** - *தூஷணவார்த்தை, நிருவாணம்.*

**அம்மம்** - *முலை.*

**அம்மல்** - *சமியாக்குணம், மந்தாரம், மூடம், விறைப்பு.*

**அம்மனை** - *அம்மானை, தாய்.*

**அம்மாபச்சரிசி** - *சிற்றிலைப்பாலாவி, சீதேவியார்செங்கழுநீர்.*

**அம்மாறு** - *பெருங்கயிறு.*

**அம்மானை** - *ஓர் பிரபந்தம், ஓர் விளையாட்டு.*

**அம்மான்** - *தகப்பன், மாமன்.*

**அம்மி** - *அரைகல்லு, மாமி.*

**அம்மிமிண்டி** - *அமசடக்கி, சுறுக்கிலே பேசாதவன்.*

**அம்மியம்** - *கள், காளம், சிறுசின்னம்.*

**அம்மியை** - *மிண்டுத்தனம்.*

**அம்மிரம்** - *மாமரம்.*

**அம்மில்சாரம்** - *கரடி.*

**அம்மிலம்** - *புளி, புளிப்பு.*

**அம்மிலவிருட்சம்** - *புளியமரம்.*

**அம்மிலிகை** - *புளியமரம்.*

**அம்முதல்** - *அடைத்தல், உண்டல், மூடுதல்.*

**அம்மெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**அம்மை** - *அழகு, தவப்பெண், தாய், வசூரி, வருபிறப்பு, தருமதேவதை, பார்வதி.*

**அம்மைவனப்பு** - *சிலவாய மெல்லிய சொற்களால் ஒள்ளிய பொருண் மேற்செய்யப்படுவது, (உம்) அறிவினானாகுவ தொன்றுண்டோ பிறிதினோய் தன்னோய் போற்போற்றாக்கடை.*

**அயக்கதையம்** - *இருப்புலக்கை.*

**அயக்களங்கு** - *இரும்புருக்கியமணி.*

**அயக்காந்தம்** - *ஊசிக்காந்தம்.*

**அயக்கிருதி** - *காந்தக்கல்.*

**அயசிந்தூரம்** - *இரும்புச்சிந்தூரம்.*

**அயசு** - *உருக்கு, பொல்லாநிலம்.*

**அயத்தினம்** - *முயற்சியின்மை.*

**அயத்தொட்டி** - *வைப்புப்பாஷாணத் தொன்று.*

**அயமரம்** - *அலரி.*

**அயமேதம்** - *ஓர்யாகம்.*

**அயம்** - *ஆடு, இரும்பு, குதிரை, குளம், சேறு, நல்வினை, நிலம், நீர், விழா, அதிட்டம்.*

**அயம்பற்றி** - *காந்தம்.*

**அயர்** - *அயரென்னேவல், வருத்தம், வாட்டம்.*

**அயர்ச்சி** - *உணர்வழிவு, மறதி.*

**அயர்தல்** - *செய்தல், சோர்தல், தளர்தல்.*

**அயர்தி** - *உணர்வழிவு, மறதி.*

**அயர்த்தல்** - *அயர்வு, மறத்தல்.*

**அயர்ப்பு** - *மறதி, மறப்பு.*

**அயர்வு** - *அகலம், உன்மத்தம், சோம்பு, தளர்வு, வருத்தம், வெறுப்பு.*

**அயர்வுயிர்த்தல்** - *வருத்தந்தீர்தல்.*

**அயலவன்** - *அண்டையான், பிறன்.*

**அயல்** - *அருகிடம், இடம்.*

**அயவாகனன்** - *தீத்தெய்வம்.*

**அயவு** - *அகலம்.*

**அயனகாலம்** - *சூரியன் ஒரு அயனத்தைச்சுற்றி வருங்காலம்.*

**அயனசலனம்** - *கிரகங்கள் மையவரியிலிருந்துபக்கவரிக் குத்திரும்புதல்.*

**அயனம்** - *ஆண்டிற்பாதி, பிறப்பு, வழி, பருதி, பூ, வேதம்.*

**அயனாள்** - *உரோகணிநாள்.*

**அயனூருவிலுதித்தோர்** - *வைசியர்.*

**அயன்** - *அருகன், பிரமன்.*

**அயன்பதத்துதித்தோர்** - *சூத்திரர்.*

**அயன்முகத்துதித்தோர்** - *பார்ப்பார்.*

**அயன்வாவி** - *மானதம்.*

**அயன்றோளுதித்தோர்** - *சத்திரியர்.*

**அயாவுயிர்த்தல்** - *பெருமூச்சுவிடல்.*

**அயானம்** - *சுபாபம்.*

**அயிக்கம்** - *ஐக்கம்.*

**அயிணம்** - *மான்றோல்.*

**அயிப்பை** - *ஓர்செடி.*

**அயிரம்** - *கண்டசருக்கரை.*

**அயிராச்சுரபி** - *காமதேனு.*

**அயிராணி** - *இந்திராணி, பார்பதி.*

**அயிராவணம், அயிராவதம்** - *இந்திரன் யானை, கீழ்திசை யானை.*

**அயிராவதப்பாகன்** - *இந்திரன்.*

**அயிரி** - *நெட்டிப்புல், மீன்முள்ளரிந் திடு கத்தி.*

**அயிரை** - *ஓர் மீன்.*

**அயிர்** - *சருக்கரை, நுண்மணல், நுண்மை, அயிரென்னேவல்.*

**அயிர்க்கடு** - *அங்குசம்.*

**அயிர்த்தல்** - *எழில்பிடித்தல், ஐயப் படுதல்.*

**அயிர்ப்பு** - *சந்தேகம்.*

**அயிலல், அயிறல்** - *உண்டல்.*

**அயுகலம்** - *தனிமை.*

**அயில்** - *அழகு, இரும்பு, உண்ணென் னேவல், கூர்மை, கைவேல், கோரை, நாஞ்சில்.*

**அயினி** - *சோறு.*

**அயின்றல்** - *உண்டல்.*

**அயுதம்** - *பதினாயிரம்.*

**அயுத்தம்** - *ஓரலங்காரம், பொருத்த மில்லாதது.*

**அயுத்தி** - *பிரிவினை,முறைகேடு.*

**அயோகம்** - *தகுதியின்மை, பிரிவினை, முயற்சி, வெறுப்பு.*

**அயோகவிவச்சேதம்** - *தெளிவே காரம்.*

**அயோகனம்** - *சுத்தியல்.*

**அயோகன்** - *தாரமிழந்தவன்.*

**அயோக்கிரம்** - *உலக்கை, சுத்தியல்.*

**அயோக்கியம்** - *யோக்கியவீனம்.*

**அயோசனம்** - *பிரிவினை.*

**அரக்கர்** - *இராட்சதர், அசுரர்.*

**அரக்கல்** - *அரைத்தல், தேய்த்தல், புடைபெயர்ச்சி.*

**அரக்காம்பல்** - *செவ்வாம்பல்.*

**அரக்கி** - *இராக்கதஸ்திரீ.*

**அரக்கு** - *அரக்கென்னேவல், சாராயம், சிவத்தமெழுகு, சிவப்பு, தேன்.*

**அரக்குதல்** - *அரைத்தல், அழித்தல், இருப்புவிட்டுப்பெயர்த்தல்.*

**அரங்க** - *முற்றாக.*

**அரங்கசீவகன்** - *வண்ணக்காரன்.*

**அரங்பூமி** - *நாடகசாலை, போர்க்களம்.*

**அரங்கம்** - *ஆற்றிடைக்குறை, கூத்துப் பயிலிடம், சத்திரம், சபை, சாலை, சிலம்பக்கூடம், சூது பயிலிடம், போர்க்களம், சீரங்கம், நடனம், நாடக சாலை, நிறம், போர்க்களம்.*

**அரங்கல்** - *அழுந்தல், அழிதல்.*

**அரங்கு** - *இடம், ஓரில், சபை, சூதாடற்குவகுத்த அறை, போர்க் களம், அரங்கென்னேவல், யாற்றி டைக்குறை.*

**அரங்கேற்றம்** - *சபையிலேறுதல்.*

**அரங்கேற்றுதல்** - *சபையிலேறச் செய்தல்.*

**அரசச்சின்னம்** - *இராசரீக்கவடை யாளம்.*

**அரசறுதொழில்** - *ஈதல், உலகோம் பல், ஓதல், படை பயிற்றல், பொரு தல், வேட்டல்.*

**அரசர்க்குக்குழு** - *அரசரைச் சூழ்வோர்.*

**அரசர்க்குத்துணைவர்** - *அரசர்க்குப் போர்த்துணைவர்.*

**அரசர்க்குறுதிச்சுற்றம்** - *இராசாக்களுக்கு உயிர்த்துணைவர், அவர் அந்தணாளர், நிமித்திகப்புலவர், நட்பாளர், மடைத்தொழிலர், மருத்துவக் கலைஞர்.*

**அரசர்மன்னன்** - *துரியோதனன்.*

**அரசன்** - *இராசன், எப்பொருட்கு மிறைவன், எழுத்துத்தானமைந்தி னொன்று, வியாழம்.*

**அரசன்விருத்தம்** - *ஓர் பிரபந்தம்.*

**அரசாட்சி** - *இராசரிக்கம், இராசா வினாளுகை.*

**அரசாணி** - *அரசங்கால் நாட்டும் மேடை, இராசாத்தி.*

**அரசி** - *இராசாத்தி, தலைவி.*

**அரசியலாறு** - *அரசர்க்குரிய வியலாறு, அவை அமைச்சு, அரண், குடி, கூழ், நட்பு, படை.*

**அரசியல்** - *இராசரிக்கமுறை.*

**அரசு** - *இராசா, இராச்சியபாரம், ஓர்மரம், துவர்பத்தினொன்று, நாடு, வியாழம்.*

**அரசுநீழலிலிருந்தோன்** - *புத்தன்.*

**அரட்டம்** - *பாலைநிலம்.*

**அரட்டர்** - *குறுநிலமன்னர்.*

**அரட்டுகம், அரட்டுசம்** - *தசநாடகத் தொன்று.*

**அரணம்** - *கதவு, கவசம், காவற்காடு, கோட்டை, தொடுதோல், மஞ்சம், மதில், வேலி, வேல், அழகு, காவல், காவற்சாலை..*

**அரணாம்பரம்** - *மதில், வேலி.*

**அரணி** - *கவசம், தீக்கடைகோல், மதில், அரணியென்னேவல், ஓர் பூடு, காடு, சூரியன், தீத்தட்டிக் கல், நெருப்புறுகாடு.*

**அரணித்தல்** - *காவல்செய்தல், முறைத்தல்.*

**அரணிப்பு** - *அடைப்பு, முறைப்பு, வயிரிப்பு, அழகு, காவல்.*

**அரணியகதலி** - *காட்டுவாழை.*

**அரணியசடகம்** - *காட்டுக்கவுதாரி.*

**அரணியசாரணை** - *காட்டிஞ்சி.*

**அரணியம்** - *காடு.*

**அரணியவரணி** - *பெருங்காடு.*

**அரணை** - *ஓர் செந்து.*

**அரண்** - *அழகு, காவல், காவற்காடு, கோட்டை, மதில்.*

**அரண்மனை** - *உண்மனை, கோட்டை, மன்றேவியில்லம்.*

**அரதனம்** - *அகன்மணி, சிலம்பணி, நவமணிப்பொது.*

**அரதி** - *வெறுப்பு, கோபம், திருத்தி யின்மை, வருத்தம்.*

**அரதேசி** - *அகதேசி.*

**அரத்தம்** - *இரத்தம், சிவப்பு, செங் கடம்பு, செங்கழுநீர், செங்குவளை, செம்பஞ்சு, செம்பரத்தம், செம் பருந்து, செம்மெழுகு, செம்மை, பவளம், பொன்.*

**அரத்தனம்** - *இரத்தினம்.*

**அரத்தன்** - *செவ்வாய்.*

**அரத்தி** - *செவ்வல்லி.*

**அரத்தை** - *ஓர் மருந்து, ஓர்செடி.*

**அரத்தோற்பலம்** - *செங்குவளை.*

**அரந்தை** - *துன்பம்.*

**அரபி** - *கடுக்காய்.*

**அரபொடி** - *இரும்புத்தூள்.*

**அரமகளிர்** - *தெய்வப்பெண்பொது.*

**அரமனை** - *இராசமனை.*

**அரமியம்** - *நிலாமுற்றம்.*

**அரமுறி** - *ஓர் செடி.*

**அரம்** - *ஒரு கருவி, குகை, பாதலம், உறை, கதவு.*

**அரம்பிலம்** - *பாதாளம்.*

**அரம்பை** - *தெய்வப்பெண், வாழை மரல்.*

**அரரி** - *கதவு.*

**அரரு** - *சத்துரு.*

**அரலை** - *கடல், கழலை, கோட்டை.*

**அரவக்கொடியோன்** - *துரியோதனன்.*

**அரவணிந்தோன்** - *சிவன்.*

**அரவணைத்தல்** - *ஆதரித்தல், சேர்த்துக்கொள்ளுதல்.*

**அரவம்** - *ஆயிலியம், ஒலி, சிலம்பு, பாம்பு, பேரொலி.*

**அரவிந்தம்** - *தாமரை, மன்மதன் கணையினொன்று.*

**அரவு** - *பாம்பு.*

**அரவுநாள்** - *ஆயிலியநாள்.*

**அரளி** - *பீநாறி.*

**அரற்றுதல்** - *அழுதல், ஒலித்தல்.*

**அரன்** - *எப்பொருட்குமிறைவன், சிவன், பன்னொருருத்திரரிலொருவன்.*

**அரனிடத்தவள்** - *பார்ப்பதி.*

**அரன்மகன்** - *குமரன், விநாயகன், வீரபத்திரன்.*

**அரா** - *அராவென்னேவல், பாம்பு.*

**அராகம்** - *அடங்காமை, அவா, ஓர் பண், வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா வினோருறுப்பு, சிவப்பு, பாலையாழத்திறம், பொன், முடுகியல், பரதவுறுப்புளொன்று.*

**அராகவொத்தாழிசைக்கலிப்பா** - *வண்ணகவொத்தாழிசைச்கலிப்பா.*

**அராதி** - *சத்துரு.*

**அராதியங்கம்** - *முறியடித்தல்.*

**அராத்தல்** - *அராத்துதல், நினைப்பூட்டுதல், மிண்டுதல்.*

**அராநட்பு** - *வேண்டாவெறுப்பு.*

**அராபதம்** - *வண்டு.*

**அராமம்** - *சோலை, பயிர்.*

**அராமி** - *கெட்டவள், கெட்டவன்.*

**அராலம்** - *மதயானை, கொடுவாள்.*

**அராலை** - *வேசி.*

**அராவைரி** - *கருடன், மயில்.*

**அரி** - *அடர்பு அரிசி, அரித்தல், அரியென்னேவல், ஆயுதப்பொது, ஈர்வாள், உட்டுளைட்பொருள், ஐமை வடிவு, ஒளி, கடல், கட்டில், சண்வரி, கள், காற்று, கிள்ளை, குதிரை, குரங்கு, குற்றம், கூர்மை, சக்கிரம், சந்திரன், சிங்கம், சிங்கவிராசி, சிலம்பின் பருக்கைக்கல், சிலம்பு, சூரியன், செம்மறியாட்டுக்கடா, சோலை, தவளை, தீ, தேர், தேவேந்திரன், நமன், நிறம், நெருக்கம், நெற்கதிர், பகை, பச்சை, படுக்கை, பறை, பன்றி, பாம்பு, புகை, பொன், மரகதம், மரவயிரம், மலை, மழைத்தூவல், மாலை, மூங்கில், வண்டு, வரி, வலி, விசி, சத்துரு, சில்லு, சிவன், திருமால், வெற்றி.*

**அரிகண்டபுலவர்** - *காளமேகப் புலவர்.*

**அரிகண்டம்** - *ஓர்விரதவேடம், தொந்தரை, நவகண்டத்தி லொன்று.*

**அரிகரபுத்திரன்** - *ஐயன்.*

**அரிகரப்பன்** - *ஓர்கரப்பன்.*

**அரிகல்** - *மகாமேரு.*

**அரிகளவம்** - *நதி.*

**அரிகள்** - *பகைவர்.*

**அரிகுரல்** - *கரகரத்தகுரல்.*

**அரிகூடம்** - *கோபுரவாயில், கோபுரவாயில்மண்டபம்.*

**அரிக்கட்டு** - *அரிவிக்கட்டு.*

**அரிக்கண்சட்டி** - *அரிசியரிக்கிறசட்டி.*

**அரிக்குதல்** - *அரித்துப்போடுதல், பேச்சினால்வருத்துதல்.*

**அரிசயம்** - *எலுமிச்சை, கொன்றை மரம்.*

**அரிசம்** - *மிளகு.*

**அரிசனம்** - *மஞ்சள்.*

**அரிசா** - *பெருங்குமிள்.*

**அரிசி** - *தண்டுலம்.*

**அரிச்சந்தனம்** - *ஐந்தருவிலொன்று.*

**அரிச்சந்திரன்** - *அறுவகைச்சக்கிர வத்திகளிலொருவன், இடையெழு வள்ளலி மொருவன்.*

**அரிச்சுவடி** - *அரிவரியேடு.*

**அரிச்சனை** - *பூசனை.*

**அரிச்சிகன்** - *சந்திரன்.*

**அரிச்சுனம்** - *எருக்கு, மருதமரம்.*

**அரிஷம்** - *உரோமப்புளகம்.*

**அரிடணம்** - *நித்தியயோகத்தொன்று.*

**அரிடிகம்** - *சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.*

**அரிட்சி** - *பயம்.*

**அரிட்டசூதனன்** - *விட்டுணு.*

**அரிட்டம்** - *கள், காக்கை, கேடு, சென் மத்தோஷம், பங்கம், முட்டை, மோர், வெண்காயம், அதிட்டம், அந்தர்ப்புரம் - உற்பாதம், சுபம், புள்ளி, வம்பு, வேம்பு.*

**அரிட்டானகம்** - *பயங்கரம்.*

**அரிட்டித்தல்** - *கொல்லல்.*

**அரிணம்** - *சிவப்பு, பொன், மான், யானை, வெள்ளை, கடல்.*

**அரிணி** - *வஞ்சிக்கொடி.*

**அரிணை** - *கள்.*

**அரிதகி** - *கடுக்காய்மரம்.*

**அரிதம்** - *திக்கு, பசும்புன்னிலம், பச்சை, பொன்னிறம், மஞ்சள்.*

**அரிதல்** - *அறுத்தல்.*

**அரிதாரம்** - *ஓர்மருந்து.*

**அரிதாலம்** - *அரிதாரம்.*

**அரிதாளம்** - *நவதாளத்தொன்று.*

**அரிதாள்** - *ஒட்டு.*

**அரிது** - *அரியது, பச்சை.*

**அரிதை** - *வன்மம்.*

**அரித்தல்** - *அணில், எலி முதலிய வறுத்தல், புன்முதலியவற்றைத் தூசுதுகள் நீக்கியெடுத்தல், மா முதலியவற்றைப் பிரித்தொழுக்கு தல்.*

**அரித்திரம்** - *கந்தம், மஞ்சள், சுக்கான்.*

**அரித்திராபம்** - *பொன்னிறம்.*

**அரித்து** - *அரித்தலைச் செய்தென் னேச்சம், பச்சை.*

**அரித்தை** - *கிலேசம், துன்பம்.*

**அரிநிம்பம்** - *மலைவேம்பு.*

**அரிந்தமன்** - *விட்டுணு.*

**அரிபாலுகம்** - *தற்கோலம்.*

**அரிபிளவை** - *ஓர் சிலந்தி.*

**அரிபுதை** - *இரவு.*

**அரிப்பிரியை** - *இலக்குமி.*

**அரிப்பு** - *அரித்தல், குற்றம், தினவு.*

**அரிப்புக்காரன்** - *பொன் முதலிய வற்றைத் தெரிக்கிறவன்.*

**அரிப்பெட்டி, அரிபெட்டி** - *மாமுதலிய வற்றையரிக்கும் பெட்டி.*

**அரிமஞ்சரி** - *குப்பைமேனி.*

**அரிமருகன்** - *விநாயகன்.*

**அரிமா** - *சிங்கம், சிங்கவிராசி.*

**அரிமாநோக்கு** - *செய்யுணிலை சூத்திர நிலையினொன்று.*

**அரியணை** - *சிங்காசனம்.*

**அரிமுகச்சிவிகை** - *சிங்கத்தலைச் சிவிகை, அஃது சமயவாதிகளை வென்றவாசிரியர்களேறுவது.*

**அரியணைச்செல்வன்** - *அருகன்.*

**அரியமன்** - *துவாதசாதித்தரிலொரு வன்.*

**அரியமா** - *ஓர் பிதிர்தேவதை, சூரியன்.*

**அரியம்** - *வாச்சியம்.*

**அரியயற்கரியோன்** - *சிவன்.*

**அரியல்** - *அரிதல், கள்.*

**அரில்** - *குற்றம், சிறுதூறு, பகை, பிணக்கு.*

**அரிவட்டம்** - *அரிகண்டம்.*

**அரிவரி** - *அரிச்சுவடி, எழுத்து வருக்கம்.*

**அரிவாட்கள்ளன்** - *கூன்வாள் பிடிக் குங்கைப் பறண்டையில் வருநோ.*

**அரிவிக்கள்ளன்** - *அரிவிபிடிக் குங்கைப் பிடிப்பு.*

**அரிவாட்சொண்டன்** - *ஓர்கொக்கு.*

**அரிவாள்** - *கூன்வாள்.*

**அரிவி** - *அரிகதிர்.*

**அரிவிக்கள்ளன்** - *கைப்பறண்டை யில்வருந்நோ.*

**அரிவை** - *இருபத்தைந்து வயதுப் பெண், தெய்வப்பெண், பெண் பொது.*

**அரிள்** - *பயம்.*

**அரு** - *அணு, அருவப்பொருள், அறிவு, கடவுள்.*

**அருகம்** - *சமணமதம், யோக்கியம்.*

**அருகர்** - *அனுசரிதர், சமணர்.*

**அருகல்** - *அணைதல், கிட்டுதல், குறைதல், சாதல், சுருங்குதல்.*

**அருகனைமுடிதரித்தரள்** - *தரும தேவதை.*

**அருகன்** - *சங்காத்தி, சயினர்களின் தேவகுரு, பக்குவன்.*

**அருகி** - *கள், பக்குவி.*

**அருகியரத்தம்** - *பூனைக்காலி.*

**அருகு** - *அருகென்னேவல், சமீபம், பக்கம்.*

**அருகுறல்** - *கிட்டல்.*

**அருக்கல்** - *அச்சம், அருமைப் படுத்துதல், குறைத்தல்.*

**அருக்கசூனு** - *யமன்.*

**அருக்கசோதரம்** - *இந்திரன் யானை.*

**அருக்கதானம்** - *பொற்காணிக்கை.*

**அருக்கத்தி** - *வருத்தம்.*

**அருக்கந்தன்** - *சிவன், பௌத்தன்.*

**அருக்கபாதபம்** - *நிம்பம்.*

**அருக்கமண்டலம்** - *சூரியமண்டலம்.*

**அருக்கம்** - *எருக்கு, இலை, கனம், சேரென்னேவல், நிலவிறை, குறைவு, சூரியன், திரவியம், துன்னி மித்தம், நீர்க்காக்கை, படிகம்.*

**அருக்களித்தல்** - *அருவருத்தல்.*

**அருக்களிப்பு** - *அருவருப்பு.*

**அருக்கனிலை** - *காணாக் கோளி ரண்டினிலை, சூரியனிலை.*

**அருக்கன்** - *காணாக்கிரகங்களிலி ரண்டு, சூரியன், இந்திரன்.*

**அருக்காணி** - *அருக்குகிறவன், அருக் குதல்.*

**அருக்கியம்**-*பூசனைமுறையுளொன்று.*

**அருக்கு** - *அருக்கென்னேவல், அருமை.*

**அருக்கேந்துசங்கமம்** - *அமாவாசியை.*

**அருக்கோபலம்** - *சூரியகாந்தம், பளிங்கு.*

**அருங்கலம்** - *அரசர்க்குரியபொருள்.*

**அருங்கலைநாயகன்** - *புத்தன்.*

**அருங்கிடை** - *பட்டினி.*

**அருச்சகன்** - *சம்பாத்தியகாரன்.*

**அருச்சயம்** - *அருச்சனை, அருச்சிக்கத் தக்கது.*

**அருச்சயோகம்** - *பூசை.*

**அருச்சனம்** - *சம்பாத்தியம், வணக்கம்.*

**அருச்சனை** - *பூசனை.*

**அருச்சிகன்** - *கோவிற்பட்டன்.*

**அருச்சிதம்** - *தேட்டம், வணக்கம்.*

**அருச்சித்தல்** - *புண்ணியமொன்பதி னொன்று, அஃது பூசித்தல்.*

**அருச்சிப்பு** - *அருச்சனை.*

**அருச்சியப்பிரபுத்துவம்** - *அருச்சிக்கப் படத்தக்கமுதன்மை, தேவநவ விலாசசபைக்குரியமுதன்மை.*

**அருச்சுனம்** - *எருக்கு, பொன், மருது, வெண்மை.*

**அருஞ்சிறை** - *கடுஞ்சிறை, நரகம்.*

**அருட்குடையோன்** - *கடவுள், அருகன்.*

**அருட்சி** - *அருளுதல்.*

**அருட்சித்தி** - *இரசம், சிவசத்தியி னொன்று.*

**அருட்சோதி** - *கடவுள், கவுரி பாஷா ணம்.*

**அருட்டி** - *அச்சம்.*

**அருட்டுதல்** - *எழுப்புதல், ஏவி விடு தல், சாக்கிரதையாகப்பண்ணுதல், நித்திரைதெளிவித்தல்.*

**அருணசாரதி** - *சூரியன்.*

**அருணம்** - *ஆடு, எலுமிச்சு, தேயமன் பத்தாறினொன்று, பதினெண் பாடையினொன்று, மான், மிகு சிவப்பு, கருமைகலந்தசிவப்பு, செவ்வானம் - விடியல்.*

**அருணலோசனம்** - *புறா.*

**அருணவம்** - *கடல்.*

**அரணவூரி** - *இந்திரகோபம்.*

**அருணன்** - *சூரியன், சூரியன்சாரதி, புதன்.*

**அருணாக்கிரசன்** - *கருடன்.*

**அருணினம்** - *திருநாமப்பாலை.*

**அருணினைவு** - *மனதினற்குண மூன்றினொன்று.*

**அருணோதயம்** - *சூரியோதயம், வைகறைப்பொழுது.*

**அருத்தகங்கை** - *காவிரியாறு.*

**அருத்தசந்திரபாணம்** - *பிறைமுகாத் திரம்.*

**அருத்தசந்திரம்** - *மணிற்றோகைக் கண்.*

**அருத்தசந்திரன்** - *அட்டமியிற் சந்திரன், இளம்பிறை.*

**அருத்தகாமம்** - *பொருளாசை.*

**அருத்தசாமம்** - *நடுரா.*

**அருத்தநாள்** - *பாதிநாள்.*

**அருத்தநிசா** - *அத்தசாமம்.*

**அருத்தபதி** - *குபேரன்.*

**அருத்தபாகை** - *வேதநூற்பொருள்.*

**அருத்தப்பிரயோகம்** - *திரவியங்களை எடுத்துப்பாவித்தல்.*

**அருத்தப்பிராத்தி** - *அத்தார்ச்சனை.*

**அருத்தம்** - *கருத்து, சொற்பயன், பாதி, பிரயோசனம், பொன்.*

**அருத்தலாபம்** - *திரவியசம்பாத்தியம்.*

**அருத்தலோபம்** - *சத்தவிசனத்தொன்று, அஃது கொடாமை.*

**அருத்தல்** - *உண்பித்தல்.*

**அருத்தனம்** - *நிந்தை.*

**அருத்தனை** - *பிச்சைகேட்டல்.*

**அருத்தவேதம்** - *உபவேத நான்கி னொன்று.*

**அருத்தவிற்பத்தி** - *பயன் சொல்லல்.*

**அருத்தன்** - *கடவுள்.*

**அருத்தாங்கீகாரம்** - *அரைமனம்.*

**அருத்தாதிகாரன், அருத்தாகிகாரி** - *உக்கிராணகாரன்.*

**அருத்தாந்தரன்னியாசம்** - *எதிர்க் கருத்து.*

**அருத்தாந்தரம்** - *கருத்துப்பிரிவு.*

**அருத்தாபத்தி** - *பொருட் குறிப்பு உள்ளது, இலேசுவிதி, அஃது கடல்வாசி யென்றுளிமரக்கல னெனக் கொளல்.*

**அருத்தானம்** - *தோத்திரஞ்செய்தல்.*

**அருத்தி** - *ஆசை, உண்பித்தென்னு மெச்சம், கூத்து, பாதம், பாதிசெய் யென்னேவல்.*

**அருத்திதம்** - *பிட்சைத்திரவியம்.*

**அருத்தித்தல்** - *பாதிசெய்தல்.*

**அருத்துதல்** - *உண்பித்தல்.*

**அருத்துரு** - *ஆராய்வு, நுணுக்கம்.*

**அருத்தேந்து** - *அத்தசந்திரன்.*

**அருத்தோதையம்** - *குருஅத்தமிக்கச் சூரியனுதிக்கும் முகுர்த்தம்.*

**அருத்தோபார்ச்சனம்** - *பொருளீட்டல்.*

**அருநெல்லி** - ஓர்மரம்.

**அருநெறி** - சுருங்கியவழி, வாயில், நரகம், பாலைநிலம்.

**அருந்ததி** - ஒருநட்சத்திரம், வசிட்டன் மனைவி.

**அருந்தல்** - அருமையாதல், புசித்தல்.

**அருந்தவர்** - முனிவர்.

**அருந்துதன்** - வேதனைசெய்வோன்.

**அருந்துதி** - அருந்ததி.

**அருப்பகன்** - இளந்தை, மூடன்.

**அருப்பம்** - உரோமக்கிளர்ச்சி, ஊர், கள், காடு, கொலை, கோட்டை, துக்கம், தொடரி, நோய், பிட்டு, மருதநிலத்தூர், மா, முகரோமம், மோர், வழுக்குநிலம், பனி, பிள்ளை.

**அருப்பலம்** - அனிச்சமரம்.

**அருப்பு** - தயிர்.

**அருப்புத்துருப்பு** - அருந்தல்.

**அருமதாளம்** - நவதாளத்தொன்று.

**அருமந்த** - அரிய மருந்தன்ன.

**அருமலதி** - ஓர் பண்.

**அருமை** - அரியதன்மை, எளிதாய்க் கிடையாதது, மேன்மை.

**அரும்பல்** - முகிழ்த்தல், முளைத்தல்.

**அரும்பாலை** - ஓரிராகம்.

**அரும்பு** - அரும்பென்னேவல், பூ வரும்பு, பொன்முதலியவற்றாற் செய்தவரும்பு, முகை.

**அரும்புதல்** - பொடித்தல், முகைத்தல், தோன்றுதல்.

**அரும்பூட்டு** - ஒட்டு, போந்தும் போதாதிருப்பது.

**அரும்பொருவினை** - எண்வகை மணத்துளொன்று.

**அரும்பொருள்** - அரியகருத்து தெரி வானபொருள்.

**அருவம்** - அருந்தல், உருவமில்லாதது.

**அருவருப்பு** - அரோசிகம்.

**அருவல்** - சற்றுச்சற்றாய்ப்போதல், சருவுதல்.

**அருவா** - கொடுந்தமிழ்நாட்டி னொன்று.

**அருவாவடதலை** - கொடுந் தமிழ் நாட்டினொன்று.

**அருவி** - அரிவி, கழிமுகம், தினைத் தாள், மலையின்வீழாறு.

**அருவுதல்** - அருவிமுதலியன பாய்தல், குறைதல், சருவுதல்.

**அருளகம்** - வெள்ளெருக்கு.

**அருளரசி** - குடசப்பாலை.

**அருளல்** - அசைதல், கிருபைசெய்தல், கொடுத்தல், நித்திரைவிழித்தல், காத்தல், சிட்டித்தல், சொல்லல்.

**அருளவம்** - பெருமரம்.

**அருளாபு** - சாறணை.

**அருளாளிவேந்தன்** - கடவுள், அருகன்.

**அருளிச்செய்தல்** - அனுக்கிரகித்தல், கிருபைசெய்தல், கொடுத்தல்.

**அருளூறுதி** - வேம்பு.

**அருள்** - ஈயென்னேவல், கொடை, சாத்துவிதகுணத்தொன்று, அஃது, கிருபை, உமை.

**அருள்விருட்சம்** - பஞ்சதாரு.

**அரூபகம்** - உருபமின்மை.

**அரூபதை** - அவலட்சணம்.

**அரூபம்** - உருவமற்றது, குறைவு, வெறுமை, ஆகாயம்.

**அரூபி** - உருபமற்றது, கடவுள்.

**அரேசகண்டு** - கரணைக்கிழங்கு.

**அரேசிகம்** - வாழை.

**அரேணுகம்** - கடுக்காய்வேர், வால் மிளகு.

**அரை** - அரையென்னேவல், இடை, பாதி.

**அரைக்கச்சு, அரைக்கச்சை** - இடைக் கச்சு.

**அரைகல்** - அம்மி.

**அரைக்கால்** - *எட்டிலொன்று.*

**அரைசிலை** - *அம்மி.*

**அரைச்சதங்கை** - *ஓரிடையணி.*

**அரைச்சல்லடம்** - *அரைச்சட்டை.*

**அரைஞாண்** - *அரைவடம்.*

**அரைத்தல்** - *அரக்குதல், அரைக்குதல், அழித்தல், தேய்த்தல், வியாதி யிலழுந்துதல்.*

**அரைநலம்** - *விதைநருங்காது குறை யாயிருக்கு நலம்.*

**அரைநா** - *முதலை.*

**அரைநாவை** - *திரும்பினநாவை, வாக்கு.*

**அரைநூல்** - *அரைச்சதங்கை, அரை ஞாண்.*

**அரைநெக்கல்** - *அரைத்திட்டம் பழுத்தது.*

**அரைப்பட்டிகை** - *மாதரிடையணியி லொன்று.*

**அரைப்பு** - *அரைத்தல், இருப்பைப் பிண்ணாக்கு.*

**அரைமூடி** - *பெண்பிள்ளைக்களரை யிற்றரிக்கு மோர்பணி.*

**அரையல்** - *அரைக்கப்பட்டது, துவையல்.*

**அரையனாடுதல், அரையனிடுதல்** - *அரைத்துத்துகளாக்கல்.*

**அரையன்** - *அரசன், துகளிதம்.*

**அரையாப்பு** - *அரையிலேயுண்டாகு மோர்கட்டு.*

**அரைவடம்** - *அரைஞாண், பனை யேற்றுக் காரரரையிற்கட்டு மோர் கயிறு.*

**அரைவயிரக்கண்** - *கம்மாளர்கருவி யினொன்று.*

**அரைவயிறன்** - *அரையரிசிநெல்.*

**அரைவாய்** - *தேய்ந்தவாய்.*

**அரோ** - *அசைச்சொல்.*

**அரோகம்** - *சுகம்.*

**அரோசகம், அரோசிசம்** - *அருவருப்பு, சமியாக்குணம்.*

**அரோசனம்** - *அருவருப்பு, பிரியவீனம்.*

**அரோசிகம்** - *அசுத்தம், அருவருப்பு.*

**அரோசிப்பு** - *அருவருப்பு.*

**அரோதனம்** - *அழுகை, சூழ்தல், தடை, படைவளைப்பு.*

**அலகம்** - *யானைத்திப்பிலி.*

**அலகரி** - *பெருக்கு.*

**அலகிடல்** - *அளவிடுதல், எழுத் தெண்ணியோசை கூட்டுதல், கணித்தல்.*

**அலகு** - *ஆயுதப்பொது, எண், கதுப்பு, கத்தியிற்கூர்ப்புறம், துடைப்பம், நுளம்பு, நென்மணி, பயிர்க்கதிர், பலகறை, பறவை மூக்கு, மகிழம் விதை, பாவோட நிரைக்குந்தடி.*

**அலகுஞ்சம்** - *நுளம்பு.*

**அலகுநிலை** - *பாக்குச்சுநிலை.*

**அலகுபனை** - *ஆண்பனை.*

**அலகுபனை** - *ஓர்பனை.*

**அலகை** - *பிசாசம், கற்றாழை.*

**அலகைக்கொடியாள்** - *காளி.*

**அலகைமுலையுண்டோன்** - *கண்ணன்.*

**அலக்கணம்** - *அதிட்டவீனம், இலக் கணவீனம்.*

**அலக்கண்** - *துன்பம்.*

**அலக்கு** - *கிளை.*

**அலங்கம்** - *மதிளினோருறுப்பு.*

**அலங்கரணம்** - *அலங்கரிப்பு, அலங் காரம்.*

**அலங்கரித்தல்** - *சோடித்தல்.*

**அலங்கலம்** - *அசைதல்.*

**அலங்கல்** - *அசைவு, இரக்கம், ஒழிசெய் தல், கலுழ்தல், தளிர், பூமாலை.*

**அலங்கனாரி** - *முத்துச்சிப்பி.*

**அலங்காரத்திருவிழா** - *விசேடத்திரு விழா.*

**அலங்காரநைபேத்தியம்** - *மண்டபப் படி.*

**அலங்காரபஞ்சகம்** - *ஓர்பிரபந்தம்.*

**அலங்காரம்** - *அணி, அணியிலக் கணம், அழகு, உவமை, ஓர்நூல், கட்டழகு, கலைஞானமறுபத்தி னான்கினொன்று, ஆபரணம், சிறப்பு, வாசகச்சிறப்பு.*

**அலங்கிருதம்** - *அலங்கிருதி, அலங் காரம்.*

**அலங்கை** - *துளசி.*

**அலங்கோலம்** - *ஒழுங்கின்மை, கோலக்கேடு.*

**அலசல்** - *அலசுதல், அலைவு, கழுவு தல், சோம்பல்.*

**அலசுதல்** - *கழுவுதல், தளர்தல்.*

**அலசகம்** - *உதரவாயு.*

**அலசத்துவம்** - *சோம்பு.*

**அலசம்** - *ஓதம், ஓர்மரம்.*

**அலஞ்சரம்** - *மட்சாடி.*

**அலட்சியம்** - *அற்பமானது, கணிசக் குறைவானது.*

**அலட்டி** - *பிதற்றுக்காரன்.*

**அலட்டுச்சன்னி** - *பிதற்றுச்சன்னி.*

**அலட்டுதல்** - *இடைவிடாமற் பேசி வருத்துதல், பிதற்றுதல்.*

**அலத்தகம், அலத்தம்** - *செம்பஞ்சு.*

**அலந்தலை** - *துன்பம்.*

**அலத்தல்** - *அங்கலாய்த்தல், துன்பம்.*

**அலத்தி** - *நுளம்பு, அங்கலாய்ப்பு, துன்பு.*

**அலந்தை** - *குளம், துன்பம்.*

**அலப்பாரித்தல்** - *ஆற்பரித்தல்.*

**அலப்புதல்** - *அலட்டுதல், ஆரபாரித் தல், குழப்புதல்.*

**அலமரல்** - *அச்சம், சுழலல், துன்பம், வருந்தல்.*

**அலமலத்தல்** - *அங்கலாய்த்தல், ஏம்ப வித்தல்.*

**அலமாத்தல்** - *அங்கலாய்த்தல், கலங்கல், கழலல்.*

**அலம்** - *அமையுமென்றல், அலமரல், கலப்பை, சஞ்சலம், தேள், விருச்சிக விராசி, தேட்கொடுக்கு, பொன்னரி தாரம்.*

**அலம்பல்** - *அலக்குத்தடி, ஒலித்தல், கழுவல், ததும்பல், தளம்பல், வீண்பேச்சுப்பேசுதல்.*

**அலம்புசம்** -*உவாந்தித்தல், விரித்தகை.*

**அலம்புடை, அலம்புருடை** - *காதுற் றிருக்குமோர் நரம்பு.*

**அலயம்** - *நிராலயம்.*

**அலரி** - *அழகு, ஓர் பூமரம், கண்வரி, சூரியன், தேனீ, நீராவி, பூப்பொது.*

**அலருதல்** - *மலர்தல், விரிதல்.*

**அலர்** - *நீர், பலரறிந்துபழிதூற்றல், பழிச்சொல், பூமாலை, மலரென் னேவல், மலர்ந்தபூ.*

**அலர்ச்சி** - *அலர்தல்.*

**அலர்ந்தபூ** - *கொற்றான், மலர்ந்தபூ.*

**அலர்தல்** - *அலருதல்.*

**அலர்த்தி** - *அலர்ச்சி.*

**அலர்மகள்** - *இலக்குமி, சரச்சுவதி.*

**அலர்முகராகம்** - *பரதவுறுப்பு ளொன்று.*

**அலலியம், அலானம்** - *கலப்பை.*

**அலவல்** - *கதாய், கந்தை.*

**அலவன்** - *ஆணண்டு, கடகவிராசி, சந்திரன், நண்டு, பூனை.*

**அலறல்** - *அழுதல், ஒலித்தல், கதறல், கூப்பிடல், சிதறுதல்.*

**அலன்றல்** - *சாதல்.*

**அலாசம்** - *நாப்புற்று.*

**அலாதம்** - *நெருப்புக்கொள்ளி.*

**அலாபம்** - *தீமை, நட்டம்.*

**அலாபு** - *சுரை.*

**அலாயுதன்** - *பலபத்திரன்.*

**அலாரம்** -*கதவு.*

**அலாரி** - *அலரி.*

**அலி** - *இயமன், தீ, நறுவிலிமரம், பலதேவன், பேடி, வெளிற்றுமரம்.*

**அலிகம்** - *நெற்றி.*

**அலிஞ்சரம்** - *மட்சாடி.*

**அலிந்தம்** - *அளிந்தம், முற்றம்.*

**அலிபகம்** - *கருவண்டு, தேள், நாய்.*

**அலியெழுத்து** - *ஒற்றெழுத்து.*

**அலுக்குத்து** - *ஓர் காதணி.*

**அலுக்குலைதல்** - *அடுக்குக் குலைதல் கொலுகொலுத்தல்.*

**அலுக்கொலு** - *குலைவு.*

**அலுசிலும்பல்** - *ஒழுங்கின்மை, குழம்பல்.*

**அலுமம்** - *புளிப்பு.*

**அலைமகள்** - *இலக்குமி.*

**அலுத்தல்** - *சலித்தல் வெறுத்தல்.*

**அலுப்பு** - *அயர்வு, சலித்துப்போதல், வெறுப்பு.*

**அலுவல்** - *வேலை.*

**அலுவீகம்** - *வில்வம்.*

**அலேகம்** - *பஞ்சலோகமணல், வெள்ளேடு.*

**அலோகனம்** - *அதரிசனம்.*

**அலோபம்** - *மரியாதை, வெறுப்பு.*

**அலை** - *அலையென்னேவல், கடல், கருமணல், திரை, புனற்றிரை.*

**அலைக்கழித்தல்** - *உலைவுபண்ணுதல்.*

**அலைசடி** -*அலைவு, சோவி, துன்பம்.*

**அலைசல்** - *தொந்தறை.*

**அலைசுதல்** - *அலையல், சோம்பல்.*

**அலைசோவி** - *அலைக்கழிவு.*

**அலைச்சல்** - *உலைவு.*

**அலைதல்** - *அலையல், சோம்பல், துன்பம், வருந்துதல்.*

**அலைத்தல்** - *உலைத்தல், சலனப் படுத்தல்.*

**அலைத்துவம்** - *மிகுதி.*

**அலைப்பு** - *அலைத்தல், கூத்தின் விகற்பம்.*

**அலையல்** - *அலைதல், சோம்பல், துன்பம், வருத்தம்.*

**அலைவாய்க்கரை** - *கடற்கரை.*

**அலைவு** - *அலைதல்.*

**அலோசி** - *பசளை.*

**அல்** - *அல்லென்னேவல், இரவு, இருள், உடலெழுத்து ஓர்விகுதி, மதில், வியங்கோள்விகுதி, எதிர் மறைவிகுதி,(உம்) அஞ்சல்,சாரியை, (உம்) தொடையல், இருதிணை முக்கூற்றொருமைத் தன்மை விகுதி, (உம்) நடப்பல, தொழிற் பெயர்விகுதி, (உம்) வரல், வியங் கோள்விகுதி, (உம்) வகுத்தனர் கொளலே.*

**அல்கல்** - *இரா, சுருங்கல், தங்கல், தரித்திரம், நாள், வறுமை.*

**அல்குல்** - *பெண்குறியின்மேற்பக்கம்.*

**அல்லகண்டம்** - *துன்பம்.*

**அல்லம்** - *இஞ்சி.*

**அல்லரியல்** - *கண்ணறை, கண்ணறையுள்ளது.*

**அல்லல்** - *துன்பம், முடைதல்.*

**அல்லவை, அல்லன** - *ஒழிந்தன, தீயன, தீமை, பயனில்லாப் பொருள்.*

**அல்லாதது** - *ஆகாதது, ஒழிந்தது.*

**அல்லாதார், அல்லார்** - *ஒழிந்தோர், தீயோர்.*

**அல்லி** - *அகவிதழ், ஆம்பல், இராகாயாமரம், பூந்தாது.*

**அல்லிப்பிஞ்சு** - *பூவிழாதபிஞ்சு.*

**அல்லியம்** - *இடையரூர், விட்டுணு கூத்து.*

**அல்லுச்சில்லுப்படுதல்** - *குலைதல், சிதறுண்டிருத்தல்.*

**அல்லை** - *அல்லாயென்னு முன்னிலை யொருமைக்குறிப்புவினைமுற்று, ஓர்கொடி.*

**அல்லோன்** - *ஒழிந்தோன், சந்திரன்.*

**அல்வழி** - *வேற்றுமையொழிநிலை.*

**அல்வழிப்புணர்ச்சி** - *வேற்றுமை யொழிநிலைத்தொடர்.*

**அவகடம்** - *தந்திரம், வஞ்சகம், எதிரிடை, பொல்லாங்கு.*

**அவகணிதம்** - *அவமானம்.*

**அவகண்டம்** - *முகப்பரு.*

**அவகதி** - *அறிவு.*

**அவகரணம்** - *அபகரித்தல்.*

**அவகர்த்தனம்** - *சீவுதல், தறித்தல்.*

**அவகாசம்** - *சமயம், தகுதி, திராணி, இடம், சமையம், பொக்கிஷ சாலை, வெளி.*

**அவகாதம்** - *அவமானம், கொல்லு தல், நெல்லுக்குத்தல்.*

**அவகாரம்** - *அழைத்தல், பதிதத்துவம், யானைமீன்.*

**அவகாலம்** - *கெடுகாலம்.*

**அவகிரந்தனம்** - *சத்தமிட்டழுதல்.*

**அவகிருத்தியம்** - *அமங்கலகாரியம், துற்செய்கை.*

**அவகீதம்** - *நிந்தை, வசைப்பாட்டு.*

**அவகீர்த்தி** - *கட்டசாத்தியகுணம், தீக்குணம், துற்கீர்த்தி.*

**அவகீனம்** - *தேள்.*

**அவகுஞ்சனம்** - *வளைவு.*

**அவகுடாரம்** - *எதிர்.*

**அவகுணம்** - *தீக்குணம்.*

**அவகுண்டனம்** - *இழுத்தல், சூழ்தல், முக்காடு.*

**அவகுண்டியம்** - *இழுத்தல், சுற்றல்.*

**அவகேலம், அவகேலனம், அவகேலிதம்** - *அவசங்கை.*

**அவகோரணம்** - *பொருதல்.*

**அவக்கியாதை** - *அவமானம்.*

**அவக்கிரகணம்** - *அவசங்கை, தடை.*

**அவக்கிரகம்** - *ஏற்றுக்கொள்ளுதல், சுபாபம், நிந்தை, பற்றுதல்.*

**அவக்கிரயம்** - *அநீதவிலை.*

**அவக்கிராகம்** - *சபிப்பு.*

**அவக்கிரியை** - *அசட்டை.*

**அவசகுணம்** -*துற்சகுணம்.*

**அவசதம்** - *கல்லூரி.*

**அவசேசி** - *காயாதமரம்.*

**அவசேடம்** - *மிச்சம், முடிவு.*

**அவக்கியாதி** - *சங்கையீனம், துற்கீர்த்தி.*

**அவக்குணம்** - *அவகுணம்.*

**அவக்குறி** - *துற்குறி, மரணக்குறி.*

**அவக்கொடை** - *வீண்கொடை.*

**அவக்கொலை** - *துன்மரணம்.*

**அவசங்கை** - *சங்கையீனம்.*

**அவசத்தம்** - *அமங்கலவோசை, இன்னாவோசை.*

**அவசம்** - *பரவசம், மயக்கம்.*

**அவசயம்** - *கைகூடாமை, தோல்வி, நட்டம்.*

**அவசரம்** - *சுறுக்கு, மிகுதேவை, ஆண்டு, ஆலோசனை, சமையம், மழை.*

**அவசனம்** - *அமைதி.*

**அவசாதம்** - *இழைப்பு, கட்டளை, தைரியக்குறைவு, நிந்தை, முடிவு.*

**அவசாயம்** - *நிச்சயம், நிறைவேறு தல், முடிவு.*

**அவசாரம்** - *அப்பிரயோசனம், வேசித்தனம்.*

**அவசாரணம்** - *நடத்துதல்.*

**அவசாரி** - *வேசி.*

**அவசானம்** - *எல்லை, மரணம், முடிவு.*

**அவசிதம்** - *அறிந்தது, முடிந்தது.*

**அவசித்து** - *உத்திராடத்துக்குந் திருவோணத்துக்குந் நடுநாள்.*

**அவசியம்** - *அவசரம், ஆவத்து, நிச்சயம், பிதிராசாரம்.*

**அவசேகம்** - *தெளித்தல்.*

**அவசேடம்** - *மிச்சம், முடிவு.*

**அவசுத்தம்** - *சுத்தமின்மை.*

**அவச்சா** - *துன்மரணம்.*

**அவச்சாயை** - *தள்ளுபடிச்சாயை.*

**அவச்சின்னம்** - *பிரிவு.*

**அவச்சுரிதகம், அவச்சுரிதம்** - *குதிரைக் கனைப்பு.*

**அவச்சேதகம்** - *அவச்சேதம்.*

**அவச்சேதம்** - *எல்லை, ஒன்றற்குரியன, நறுக்குதல், பங்கு.*

**அவச்சேதனம்** - *நறுக்குதல், பகுத்தறிதல்.*

**அவடி** - *குழி.*

**அவடு** - *கிணறு, குழி, பிடர்.*

**அவட்சயம்** - *அழிவு, நட்டம்.*

**அவணன்** - *திண்ணியன், வீணன்.*

**அவணி** - *நன்மை.*

**அவண்** - *அவ்விடம்.*

**அவதந்திரம்** - *சதியோசனை, மடிப்பு.*

**அவதரணம்** - *இறக்குதல், துப்பாசி செய்தல்.*

**அவதரம்** - *சமையம், தறுவாய்.*

**அவதரித்தல்** - *கருவிற்புகுதல், தங்கல், பிறத்தல்.*

**அவதாதம்** - *வெண்மை.*

**அவதாரணம்** - *மண்வெட்டி, தாபித்தல், நிதானித்தல்.*

**அவதாரம்** - *உற்பத்தி, தெண்டம், பிரித்தல், பிறப்பு, மறுபாஷைப் படுத்தல்.*

**அவதாவனம்** - *பின்றொடர்தல்.*

**அவதானம்** - *கிரகித்தல், நிதானம், நினைவு.*

**அவதி** - *அளவு, ஆவத்து, எல்லை, வருத்தம், இணக்கம், கவனம், காலம், கிடங்கு, முடிவு.*

**அவதிக்காரகம்** - *நீக்கப் பொருளைக் காட்டுமுருபுடைப்பெயர்.*

**அவதீரணம்** - *அவசங்கை.*

**அவதூதம்** - *முழுத்துறவு.*

**அவதூதன்** - *ஓர் சன்னியாசி.*

**அவதூறு** - *நிந்தை, பிறர்பழிகூறல்.*

**அவதூனனம்** - *அகற்றல், அசைத்தல், கலங்குதல், மிதித்தல்.*

**அவதோகம்** - *பால்.*

**அவத்தம்** - *ஆபாத்துடையது, பொய்.*

**அவத்தியம்** - *பாவம்.*

**அவத்திரங்கம்** - *கடை.*

**அவத்திரியம்** - *ஆபத்து.*

**அவத்தை** - *ஆபத்து, சாக்கிரமுதலிய உயிர்நிலையுபாதி, மரணஉபாதி.*

**அவத்தைப்பிரயோகம்** - *கலைஞான மறுபத்தினான்கி னொன்று.*

**அவநம்பிக்கை** - *நம்பிக்கையீனம்.*

**அவநாசி** - *ஓர்தலம், கலைமகள்.*

**அவநாயகம்** - *இறக்குதல்.*

**அவநிதம்** - *தோத்திரித்தல்.*

**அவநிந்தை** - *தூஷணம்.*

**அவநியாயம்** - *அநீதம்.*

**அவநீதம்** - *அநீதம்.*

**அவநுதியுருபகம்** - *ஓரலங்காரம், அஃது சிறப்பினதும் குணத்தினதும் பொருளினது முண்மையை மறுத்துப்பிறிதொன்றாகவுரைப்பது.*

**அவந்தி** - *சத்தபுரியினொன்று, தேசமன்பத்தாறினொன்று.*

**அவந்திகை** - *அவந்தி, கிளி.*

**அவந்திசோமம்** - *காடி.*

**அவபத்தி** - *பத்தியின்மை, வீண்பத்தி.*

**அவபத்தியம்** - *இச்சாபத்தியம், விடு பத்தியம்.*

**அவபாசம்** - *வெளிச்சம்.*

**அவபாதம்** - *படுகுழி.*

**அவபாதனம்** - *வெட்டுதல்.*

**அவபோதகன்** - *உபாத்தி, எழுச்சி செய்வோன்.*

**அவபோதம்** - *அறிவு, விழிப்பு.*

**அவப்பிரஞ்சம்** - *இழிசனர்மொழி.*

**அவப்பெயர்** - *துற்கீர்த்தி.*

**அவப்பொழுது** - *வீண்பொழுது.*

**அவமதி** - *நிந்தை.*

**அவமதிப்பு** - *மதியாமை.*

**அவமரணம்** - *துன்மரணம்.*

**அவமரியாதை** - *மரியாதைத்தப்பு.*

**அவமாதாங்குசம்** - *மதயானை.*

**அவமானம்** - *இழிவு, மானகீனம்.*

**அவமானிதம்** - *அவமானம்.*

**அவமிருத்து** - *துன்மரணம்.*

**அவமோசனம்** - *இட்டமாக்கல், கக்குதல்.*

**அவம்** - *பயனின்மை, வீண்.*

**அவம்போதல்** - *வீண்போதல்.*

**அவயம்** - *அழுகை, இலாமிச்சு, நன்மையின்மை.*

**அவயவம்** - *உடல், உறுப்பு.*

**அவயவவுருவகம்** - *அவயவத்தை யுருவகஞ்செய்து அவயவியை வாழாவுரைப்பது (உம்) புருவச் சிலைகுனித்துக்கண்ணம்பேனுள்ள முருவத்துரந்தாரொருவர்.*

**அவயவி** - *உறுப்பு, பல சினைகளை யடக்கிய ஒருமுதல்.*

**அவயவியுருவகம்** - *அவயவியை யுருவகஞ் செய்து அவயவத்தை வாழாவுரைப்பது. (உம்) விழி மதர்ப்ப மூரலளிக்கும் வதனாம் புயம்.*

**அவரசன்** - *தம்பி.*

**அவரம்** - *அபரம்.*

**அவரை** - *ஓர் கொடி, கொள்ளு துவரை முதிரை முதலாயின.*

**அவரோகணம்** - *ஏறுதல்.*

**அவரோகம்** - *இறங்குதல், ஏறுதல், சுவர்க்கம், விழுது.*

**அவரோகி** - *ஆல்.*

**அவரோதம்** - *அரண்மனை, உள் மண்டபம், தடை, வேலி.*

**அவரோதனம்** - *உள்மாளிகை, தடை.*

**அலரோபணம்** - *அத்மித்தல், இறங்கு தல், கெடுத்தல்.*

**அவலம்பம்** - *தாவரம், தூங்கல், நிறு திட்டவரி, புகலிடம்.*

**அவலட்சணம்** - *அழகின்மை, இலட்சணக்கேடு, ஒழுங்கின்மை.*

**அவலம்** - *ஓரலங்காரம், அஃது துயரந் தோன்றக் கூறுவது, கிலேசம், துன்பம், வருத்தம்.*

**அவலித்தல்** - *வருந்தல்.*

**அவலீலை** - *விளையாட்டு.*

**அவலுஞ்சனம்** - *கிழித்தல்.*

**அவலுண்டனம்** - *உருளல்.*

**அவலேசம்** - *அற்பம், ஆபத்து, சிறுமை.*

**அவலேகனம்** - *நக்குதல்.*

**அவலேபம்** - *அலங்காரம், பூசுதல், பெருமை.*

**அவலேபனம்** - *துணிவு.*

**அவலோகம், அவலோகனம்** - *பார்வை.*

**அவல்** - *ஓர்சிற்றுணவு, குளம், பள்ளம்.*

**அவவிசுவாசம்** - *விசுவாசகீனம், பொய்விசுவாசம்.*

**அவவியாத்தி** - *பொருண்மாறு படக் கூறல், அஃது நூற்குற்ற மூன்றி னொன்று.*

**அவளிகை** - *இடுதிரை.*

**அவற்கம்** - *கஞ்சி.*

**அவனதி** - *குனிதல்.*

**அவனம்** - *அலங்கரித்தல், இருத்தல், கொல்லல், செய்தல், தழுவுதல், தற்காத்தல், தாங்குதல், திருத்தி, தீவிரம், பட்சம், பிடித்தல், பெலன், விருத்திப்பு, விருப்பம்.*

**அவனேசனம்** - *கழுவுதல்.*

**அவனி** - *பூமி.*

**அவனிபாரகன்** - *இராசா.*

**அவனுதி** - *ஓரலங்காரம்.*

**அவன்** - *உயர்திணை யாண்பா லொருமைப் படர்க்கையிடத்துப் பெயர்ச்சுட்டு.*

**அவன்னியம்** - *உபமானப்பொருள்.*

**அவா** - *அவாவென்னேவல், ஆசை, ஆசைப்பெருக்கம், இறங்குதல்.*

**அவாசி** - *தெற்கு.*

**அவாஸ்தம்** - *புறங்கை.*

**அவாந்தரம், அவாந்தரை** - *உள்ளடங்கியது.*

**அவாந்திரம்** - *மத்தியகாலம், வெறுவெளி.*

**அவாந்திரை** - *வெறுமை.*

**அவாரபாரம்** - *சமுத்திரம்.*

**அவாரம்** - *ஆற்றங்கரை.*

**அவாவின்மை** - *வெறுப்பு.*

**அவாவுதல்** - *இச்சித்தல், இறங்குதல், சார்தல்.*

**அவி** - *அவியென்னேவல், சோறு, தேவருணவு, நெய், ஆடு, எலி, காற்று, சூரியன், தலைவன், மதில், மலை.*

**அவிகடம்** - *ஆட்டுமந்தை.*

**அவிகம்** - *இரத்தினம்.*

**அவிகாயம்** - *எரிச்சல், ஓர்காசம், வேகம்.*

**அவிகாரம்** - *விகாரமின்மை.*

**அவிகாரன்** - *ஆட்டுக்காரன்.*

**அவிகாரி** - *மாறாதவன்.*

**அவிக்கிரமம்** - *பராக்கிரமமின்மை.*

**அவிசாரம்** - *புத்திகேடு.*

**அவிசு** - *பச்சரிசிச்சோறு, தேவருணவு.*

**அவிசுவாசம்** - *விசுவாசமின்மை.*

**அவிச்சி** - *அபேட்சை.*

**அவிச்சின்னம்** - *இடைவிடாமை, பிரிவின்மை.*

**அவிச்சை** - *அறியாமை, மனமயக்கு, வெறுப்பு.*

**அவிஞ்ஞதை** - *அறியாமை.*

**அவிஞ்ஞாதம்** - *அறியப்படாதது.*

**அவிடி** - *திரைச்சீலை.*

**அவிட்டம்** - *ஓர் நாள்.*

**அவிதல்** - *அடுப்பில்வேகுதல், அமைதல், அழிதல், கெடுதல், தணிதல், வருந்தல், வேகுதல்.*

**அவிதானம்** - *ஒழுங்கின்மை.*

**அவித்தம்** - *உண்மை.*

**அவித்தம்** - *அறியப்படாதது, வறுமை.*

**அவித்தல்** - *அழித்தல், கெடுத்தல், தணித்தல், வருத்தல், வேகுவித்தல்.*

**அவித்தியசம்** - *சூதம்.*

**அவித்தியம்** - *அறியாமை, மாயை.*

**அவித்துருமம்** - *இலுப்பை.*

**அவித்தை** - *அஞ்ஞானம், பஞ்சமாயையினொன்று, மனமயக்கு.*

**அவிநயசாலை** - *நாடக அரங்கு.*

**அவிநயம்** - *ஓர் நூல், கூத்து, நாடக அரங்கம்.*

**அவிநயர்** - *ஓர் நூலாசிரியர், நாடகர்.*

**அவிநிகமம்** - *அநியாயத்தான் வந்த தீர்ப்பு.*

**அவிநீதை** - *கற்பில்லாள், பரஸ்திரீ.*

**அவிபடம்** - *கம்பளி.*

**அவிபவனம்** - *மேற்கொள்ளுதல்.*

**அவிபன்னம்** - *அதிட்டவீனம், குற்றம்.*

**அவிபாகம்** - *அசீரணம், அனுபவியாத வினை, இளமை.*

**அவிபாச்சியத்துவம்** - *பிரிக்கக்கூடாமை.*

**அவிபரவனம்** - *அதரிசனம்.*

**அவிபூதி** - *அவசங்கை.*

**அவிப்பாகம்** - *தேவருணவு.*

**அவிமுத்தம்** - *காசி.*

**அவிமுத்தேசன்** - *காசீசுவரன்.*

**அவியல்** - *அவிந்தது, உட்டணம், ஓர்கறி.*

**அவியாகிருதம்** - *பிரமத்தோடு பிரிவின்றி நிற்பது.*

**அவியாத்தம், அவியாத்தியம்** - *பிரிந்திருப்பது.*

**அவியோகம்** - *கூட்டம்.*

**அவிரதம்** - *எப்பொழுதும், இடையின்மை.*

**அவிரோதச்சிலேடை** - *ஓரலங்காரம், அஃது முன்னர்விரோதித்த பொருளைப் பின்னரும் விரோதியாமற் சிலேடிப்பது.*

**அவிரோதம்** - *விரோதமின்மை.*

**அவிர்தல்** - *ஒளிசெய்தல், பீறல்.*

**அவிவாதம்** - *இணக்கம்.*

**அவிவேகம்** - *புத்திக்குறைவு.*

**அவிவேகி** - *அறிவீனன், மதிகீனன், மந்தன்.*

**அவிழ்தல்** - *நெகிழ்தல், விரிதல்.*

**அவினா** - *நீக்கமற்றது, வெளியற்றது.*

**அவினாபாவம்** - *ஒன்றற்கேயுள்ளது, ஓரளவை.*

**அவிழ்த்தல்** - *அலர்த்தல், அவிழச் செய்தல், கட்டுநீக்கல்.*

**அவுடதம்** - *ஔஷதம்.*

**அவுபலபாஷாணம்** - *விளைவு பாஷாண முப்பத்திரண்டி னொன்று.*

**அவுணர்** - *அசுரர்.*

**அவுதா** - *யானைமேற்றவிசு.*

**அவுரி** - *ஓர் செடி.*

**அவேட்சை** - *இணக்கம், கவனம், பார்த்தல்.*

**அவேத்தியம்** - *பசுக்கன்று.*

**அவை** - *அவையென்னேவல், அவ், கூட்டம், சவை, புலவர்.*

**அவைகரணம்** - *தோண்டல், மூடல்.*

**அவைத்தல்** - *நெரித்தல், நென்முதலியகுத்தல்.*

**அவையடக்கம்** - *சவைமுன்றன்னைத் தாழ்த்தல்.*

**அவையல்** - *திரட்சி.*

**அவையவம்** - *உறுப்பு.*

**அவையவவுருவகம்** - *ஓரலங்காரம், அஃது அவையவத்தை யுருவகஞ் செய்து அவையவியைவாழா கூறுவது.*

**அவையவியுருவகம்** - *ஓரலங்காரம் அஃது அவையவியையுருவகஞ் செய்து அவையவத்தைவாழா கூறுவது.*

**அவ்** - *அவை.*

**அவ்விடம்** - *அந்தவிடம்.*

**அவ்வியஞ்சனம்** - *அடையாளமற்றது, கொம்பிலாமிருகம்.*

**அவ்வியதி** - *குதிரை.*

**அவ்வியதிதி** - *இரவு, பூமி.*

**அவ்வியத்தம்** - *கோடிகோடிகோடி கோடாகோடி, விளங்கக்காணப் படாதது, அதரிசனமானது, ஆன்மா, கடவுள், பிரமம்.*

**அவ்வியத்தன்** - *சிவன், மன்மதன், மூடன், விட்டுணு.*

**அவ்வியம்** - *மனக்கோட்டம், அடைமொழி.*

**அவ்வியாகிருதம்** - *பிரமத்தோடு பிரிவற்றது, மாயை.*

**அவ்வியாகிருதன்** - *செகறகாரண சாட்சியானவன்.*

**அவ்வியாசம்** - *நிதார்த்தம்.*

**அவ்வுதல்** - *அவாவிவிழுதல், அழுந்துதல்.*

**அவ்வை** - *ஔவையார், தாய்.*

**அழகாரம்** - *பேச்சுச்சித்திரம், மதுரம்.*

**அழகியவாணன்** - *ஓர் நெல்.*

**அழகு** - *சருக்கரை, யௌவனம், ஒழுங்கு,பதினாறுபேறினொன்று.*

**அழகுவனப்பு** - *செய்யுள்வனப் பெட்டினொன்று, அஃது செய்யுட் சொல்லாகிய திரி சொற்களினா லோசை பெறப்பாடுவது.*

**அழத்தியன்** - *பெருங்காயம்.*

**அழலவன்** - *அக்கினி, சூரியன், செவ்வாய்.*

**அழலாடி** - *சிவன்.*

**அழலிக்கை** - *பொறாமை.*

**அழலுதல்** - *எரிதல், கன்றல், வெப்பங் கொள்ளல்.*

**அழலேந்தி** - *சிவன்.*

**அழலோன்** - *சூரியன், செவ்வாய், தீ.*

**அழல்** - *அழலென்னேவல், கேட்டை நாள், செவ்வாய், தீ, நரகம், வெப்பம்.*

**அழற்கண்ணன்** - *உருத்திரன், சிவன்.*

**அழற்கண்வந்தோன்** - *முருகன், வீர பத்திரன்.*

**அழற்குத்துதல்** - *வேகமானநாற்றம் வீசுதல்.*

**அழற்சி** - *அழுக்காறு, வெப்பம்.*

**அழற்பால்** - *எருக்கு.*

**அழற்றி** - *அழற்சி, எரிவு.*

**அழற்பிரவை** - *ஏழ்நரகவட்டத் தொன்று. அஃது தீநிலம்.*

**அழற்றுதல்** - *எரிதல், சுடுதல்.*

**அழனம்** - *பிணம்.*

**அழனாகம்** - *ஓர் பாம்பு.*

**அழன்** - *பிணம்.*

**அழிகட்டு** - *சாட்டு, மாற்று.*

**அழிகரு** - *அழிப்புக்காரன், சிதைந்து போகிறகருப்பம்.*

**அழிச்சாட்டியம்** - *அலைவு.*

**அழிஞ்சில்** - *ஓர்மரம்.*

**அழிதல்** - *கெடுதல்.*

**அழிதூ** - *அலி.*

**அழித்தல்** - *கெடுத்தல், முத்தொழிலி னொன்று, அஃது சங்கரித்தல்.*

**அழிபுண்** - *ஆறாமிகுபுண்.*

**அழிப்பாளி** - *அழிப்புக்காரன்.*

**அழிப்பு** - *தொலைப்பு.*

**அழிமதி** - *கெடும்பு, மிஞ்சின செலவு.*

**அழிமுதல்** - *முதலழிவு.*

**அழிம்பன்** - *புரட்டன்.*

**அழிம்பு** - *அழிவு, சேதம், நட்டம்.*

**அழியாமை** - *அழிவின்மை.*

**அழிவழக்கு** - *கள்ளநியாயம், புரட்டு நியாயம்.*

**அழிவி** - *கழிமுகம்.*

**அழிவு** - *கழிமுகம், குற்றம், கேடு.*

**அழுகண்ணி** - *ஓர் பூடு.*

**அழுகல்** - *அழுகினது, அழுதல்.*

**அழுகுசப்பாணி** - *ஓர்விஷநோய்.*

**அழுகுசற்பம்** - *ஓர் விஷச்செந்து.*

**அழுகுணி** - *அழுபிள்ளை.*

**அழுகுதல்** - *பதனழிதல்.*

**அழுகை** - *அழுதல்.*

**அழுக்கணவன்** - *ஓர் புழு, புழுக்கூடு.*

**அழுக்கல்** - *அச்சக்குறிப்பு.*

**அழுக்கறல்** - *அழுக்காறடைதல், அழுக்குநீங்கல்.*

**அழுக்கறுத்தல்** - *பொறாமை கொள் ளல்.*

**அழுக்காறாமை** - *பொறாமையடை யாமை.*

**அழுக்காமை** - *ஓராமை.*

**அழுக்காறு** - *பொய், பொறாமை.*

**அழுக்கு** - *அசுத்தம், ஆமை, ஊத்தை, மாசு.*

**அழுங்கல்** - *அச்சம், அலையல், அழு தல், அழுந்தல், ஆரவாரித்தல், இரங்கல், ஒலித்தல், ஒளிமழுங் கல், கெடுதல், சோம்பல், துன்பம், நோய், வருத்தம்.*

**அழுங்கு** - *அழுங்கென்னேவல், ஆமை, ஓர் மிருகம்.*

**அழுதல்** - இரங்கல்.

**அழுத்தம்** - உலோபத்தனம், ஒப்பம்.

**அழுத்தல், அழுத்துதல்** - அழுந்தச் செய்தல், பதித்தல், பாராட்டுதல்.

**அழுந்தல்** - அழுந்துதல், உத்தரித்தல், பதிதல், வருந்தல்.

**அழுந்து** - அழுந்தென்னேவல், நீராழம்.

**அழுப்பு** - சோறு.

**அழுப்புகம்** - தேவலோகம்.

**அழுவம்** - அப்பவருக்கம், அழுக்கு நிலம், கடல், நடுக்கம், நாடு, பரப்பு, பெருமை, மலைமேற் கோட்டை, முரசு, வழுக்குநிலம்.

**அழை** - அழையென்னேவல்.

**அழைக்கை** - கூவுகை.

**அழைத்தல்** - கூவுதல், வாவெனல்.

**அழைப்பு** - அழைத்தல்.

**அளகபந்தி –** கேசபாரம்.

**அளகம்** - நீர், பன்றிமுள், பெண் மயிர், மயிர்க்குளற்சி.

**அளகாதிபதி, அளகாதிபன்** - குபேரன்.

**அளகு** - கார்த்திகைநாள், கோழி கூகையல்லாத புள்ளின்பெண்.

**அளகை** - குபேரனகர்.

**அளகையாளி** - குபேரன்.

**அளக்கர்** - உப்பளம், கடல், கார்த்தி கைநாள், குழைசேறு, நீள்வழி, பூமி.

**அளக்கல்** - அளக்குதல்.

**அளக்கார்** - உப்பமைப்போர்.

**அளக்குதல், அளத்தல்** - அளவிடல், எண்ணல், பிரமாணித்தல், மதித்தல், வரையறுத்தல்.

**அளத்தி** - நெய்தநிலப்பெண்.

**அளபு** - அளபெடை, ஓரலங்காரம் அஃது அளபெடையாய்வருவது.

**அளபெடை** - எழுத்துக்கடத்தமாத் திரையினீண்டொலித்தல்.

**அளபெடைவண்ணம்** - அளபெடை பயின்று வருவது.

**அளப்பளத்தல்** - பிதற்றல்.

**அளப்பு** - அலப்பு, அளத்தல், பிதற்று.

**அளப்புதல்** - அலப்புதல், குளப்புதல்.

**அளமளைதல்** - அளவளாதல்.

**அளம்** - உப்பளம், கூர்மை, நெருக்கம்.

**அளவடி** - நாற்சீரான்வருஞ் செய்யுள்.

**அளவடிவிருத்தம்** - நாற்சீரோரடி யாய் வரும் விருத்தம்.

**அளவர்** - அளப்போர், உப்பமைப் போர்.

**அளவல்** - கலத்தல்.

**அளவழித்தாண்டகம்** - எழுத்தலகு மெழுத்துமொவ்வாது வருமோர் பிரபந்தம்.

**அளவளத்தல், அளவளாதல், அள வளாவுதல்** - கலத்தல்.

**அளவறுத்தல்** - வரையறுத்தல்.

**அளவிடுதல்** - மதித்தல்.

**அளவிடை** - அளவு, நிருவாகம், நிறை, மட்டறிதல்.

**அளவியற்றாண்டகம்** - இருபத்தே ழெழுத்துமுதலாக வுயர்ந்த வெழுத்தடியினவாய் எழுத்துங் குருவுமிலகுவு மொத்தவருமோர் பிரபந்தம்.

**அளவு** - எண்முதலியநான்களவு, வரையறை, பிரமாணம்.

**அளவுப்பண்புத்தொகை** - அளவுப் பண்புருவுதொக்குநிற்பது, (உம்) நாற்பொருள்.

**அளவெண்** - அளவடி ஓரடியாக நான்கடி வருவது.

**அளவை** - அளவு, அறிதல், எல்லை, நாள், பிரமாணம், எடுத்தல், எண்ணல், முகத்தல், நீட்டல், எனு நான்கள வை, பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் எனு மூவளவை, ஓர் நூல்.

**அளவையாகுபெயர்** - *எடுத்தல், எண்ணல், நீட்டல், முகத்தல், எனுமளவைப் பெயர் அதனை யடைந்த பொருட்காவது.*

**அளறு** - *குழைசேறு, நரகம்.*

**அளறுதல்** - *சிதர்தல்.*

**அளாவுதல்** - *கலத்தல் சேர்ந்துபற்றல்.*

**அளி** - *அளியென்னேவல், அன்பு, கள், காய், குளிர்ச்சி, கொடை, மது, வண்டு, சாளரம், பாணம்.*

**அளிகம்** - *கட்டழகு, நெற்றி.*

**அளிதல்** - *உருகுதல், கனிதல், வார்தல்.*

**அளித்தல்** - *காத்தல், கொடுத்தல், நெருங்கல், பாதீடு.*

**அளிந்தம்** - *கோபுரவாயிற்றிண்ணை, முற்றம்.*

**அளியர்** - *அன்புள்ளோர், எளியோர்.*

**அளீகதை** - *பொய்.*

**அளீகம்** - *நெற்றி, பிரியக்கேடு, பொய்.*

**அளுக்கல்** - *அச்சக்குறிப்பு.*

**அளுங்கு** - *அழுங்கு.*

**அளை** - *குழையென்னேவல், தயிர், புற்று, மலைக்குகை, மோர், வளை, ஏழாம்வேற்றுமையுருபு, வெண்ணெய்.*

**அளைகுதல்** - *கலக்குதல்.*

**அளைதல்** - *கலத்தல், குழைதல்.*

**அளை மறிபாப்புப்பொருள் கோள்** - *பொருள்கோளெட்டினொன்று, அஃது செய்யுளிறுதி மொழியாவ தடியாவதச் செய்யுளின் முதலினு நடுவினும் பொருள்கொண்டு வரு வது, (உம்) தாழ்ந்தவுணர் வின ராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்சூழ்ந்த வினை யாக்கை சுடவிழிந்து நாற்கதியிற் சுழல் வார்தாமு மூழ்ந்த பிணி நலிய முன் செய்தவினையென்றே முனிவார் தாமும் வாழ்ந்த பொழுதி னேவா னெய்து நெறி முன்னி முயலாதாரே யெனவரும்.*

**அளைவு** - *குழைவு, கலப்பு.*

**அள், அள்ளு** - *அள்ளென்னேவல், கன்னம், காது, கூர்மை, நெருக்கம், பற்றிரும்பு, உயர்திணைப்பெண் பாற் படர்க்கை யொருமைவிகுதி.*

**அள்ளல்** - *அள்ளுதல், குழைசேறு, சத்தராகங்களினொன்று.*

**அள்ளுதல்** - *அள்ளல், நெருங்கல்.*

**அள்ளை** - *பிசாசம்.*

**அற** - *அறும்படி, தீர, முற்ற.*

**அறக்காடு** - *சுடுகாடு.*

**அறக்கொடியோன்** - *கடவுள்.*

**அறங்கை** - *அகங்கை.*

**அறச்சாலை** - *தருமச்சத்திரம்.*

**அறச்செல்வி** - *பார்வதி.*

**அறத்தளி** - *அந்தர்ப்புரம்.*

**அறத்தின்மூர்த்தி** - *தருமதேவதை.*

**அறத்தின்மைந்தன்** - *தருமபுத்திரன்.*

**அறத்துறுப்பு** - *அறத்தினதங்கம்.*

**அறத்துறுப்பெட்டு** - *அறஞ்செய்யும் விதமெட்டு, அஃது அழிந்தோரை நிறுத்தல், அறம் விளக்கல், ஐயப் படாமை, பழியை நீக்கல், மயக்க மின்மை, பேரன்புடைமை, விருப் பின்மை, வெறுப்பின்மை.*

**அறத்தைக்காப்போன்** - *ஐயன்.*

**அறத்தொடுநிற்றல்** - *கையறுதோழி கண்ணீர் துடைத்துழிக்கலுழ் தற் காரணங்கூறன முதலாகக் கனை யிருளவன வரக்கண்டமை கூற லீறாகிய வேழும்.*

**அறநிலைப்பொருள்** - *நெறி வழி நின்று தத்தம் நிலையினால் முயன்றுபெறு பொருள்.*

**அறநிலையறம்** - *தத்தம்வருணத்திற் பிறளாது நிலைபெறப் பாது காத்தல்.*

**அறநிலையின்பம்** - *ஒழுக்கமுங் குண முங்குலமும் பருவமு மொத்த கன்னியைத்தீவேட்டில்லத்திருத்தல்.*

**அறப்பால்** - *அறத்துப்பகுதி.*

**அறப்புறம்** - *அறச்சாலை.*

**அறமுறியப்பார்த்தல்** - *முற்றமுடியப் பார்த்தல்.*

**அறம்** - *கையறம், தருமம், தீமை, நூற் பயனான்கினொன்று, பெரியோ ரியல்பினொன்று.*

**அறம்விளக்கல்** - *அறத்தைப்பிர பலியப்படுத்தல்.*

**அறம்புறம்** - *அகம்புறம், அடிதலை, உட்புறம், தடுமாற்றம்.*

**அறல்** - *அறுதல், கடற்றிரை, கரு மணல், சிறுதூறு, நீர், விழவு.*

**அறவர்** - *பெரியோர், முனிவர்.*

**அறவரி** - *அறவிடுதல்.*

**அறவன்** - *புத்தன்.*

**அறவாக்கல்** - *அறவிடுதல்.*

**அறவாழியந்தணன்** - *அரன், அரி, அருகன், கடவுள்.*

**அறவாழிவேந்தன் – கடவுள்.**

**அறவான்** - *அறவு.*

**அறவிடுதல்** - *அறவாக்குதல், தண்டுதல்.*

**அறவு** - *அறுபட்டஇடம், ஒடிவு, கடவை.*

**அறவுளி** - *முடிவு.*

**அறவுளிபார்த்தல்** - *தீர்ப்புப் பண்ணு தல், முற்றுங்கெடுத்தல்.*

**அறவை** - *அனாதம்.*

**அறவைச்சோறு** - *அனாதருக்கன்னங் கொடுத்தல்.*

**அறவைத்தல்** - *புடமிடுதல்.*

**அறவைத்தூரியம்** - *அனாதருக்குப் புடைவைகொடுத்தல்.*

**அறவைப்பிணஞ்சுடுதல்** - *அனாதப் பிரேதத்துக்கு ஈமக்கடன் செய்தல்.*

**அறவோர்** - *துறவோர், பார்ப்பார், முனிவர்.*

**அறவோன்** - *அருகன்.*

**அறளை** - *அரிகண்டம், ஓர்வியாதி.*

**அறன்** - *அறம்.*

**அறன்கடை** - *பாவம்.*

**அறாவிலை** - *கடுவிலை.*

**அறிகுறி** - *அடையாளம்.*

**அறிகை** - *அறிதல்.*

**அறிக்கை** - *அறிவித்தல், அறிவு, கட்டுப்பாடு.*

**அறிக்கைபண்ணுதல்** - *அறிவித்தல், கட்டுப்படுத்தல்.*

**அறிக்கைப்பத்திரம்** - *அறிவித்தல், காவற்பத்திரம்.*

**அறிஞர்** - *அறிவுடையோர், புலவர், முனிவர்.*

**அறிஞன்** - *அறிவுள்ளோன், புதன்.*

**அறிதுயிலமர்ந்தமூர்த்தி** - *விட்டுணு.*

**அறிதுயில்** - *ஞானானந்தல், யோக நித்திரை.*

**அறிமடம்** - *அறிந்துமறியார் போன்றி ருத்தல்.*

**அறிமுகம்** - *கண்டபழக்கம்.*

**அறியாமை** - *அறிவீனம், முத்தி விக்கினம் மூன்றினொன்று.*

**அறியாவினா** - *பஞ்சவினாவினொன்று.*

**அறிவினா** - *அறிவொப்புக்காண்டல்.*

**அறியான்வினாவல்** - *பஞ்சவினாவி னொன்று.*

**அறிவர்** - *அறிஞர், கம்மாளர்.*

**அறிவழி** - *கள், பிசாசம்.*

**அறிவனாள்** - *உத்திரட்டாதி.*

**அறிவன்** - *அருகன், அறிவுடை யோன், உத்திரட்டாதி, கடவுள், செவ்வாய், புதன்.*

**அறிவித்தல்** - *அறிவிப்பு.*

**அறிவிப்பு** - *பிரசித்தம்.*

**அறிவிலார்** - *மூடர்.*

**அறிவின்மை** - *அசேதனம்.*

**அறிவீனம்** - *அஞ்ஞானம், அறியாமை.*

**அறிவு** - *அறிதல், ஆடூஉக்குணம் நான்கினொன்று, உணர்வு, கல்வி.*

**அறிவுகூடு** - *நினைத்திருக்கத் தக்க தாகச் செய்ததீமை.*

**அறிவொப்புக்காண்டல்** - *பஞ்ச வினாவினொன்று.*

**அறுகரிசி** - *அட்சதை.*

**அறுகால்** - *வண்டு.*

**அறுகு** - *ஆண்புலி, ஓர்புல், சிங்கம், யாளி, யானை.*

**அறுகுணன்** - *கடவுள்.*

**அறுகுதராசு** - *சிறுதராசு.*

**அறுகுறை** - *கவந்தம்.*

**அறுசமயத்தோர்க்குண்டி** - *அறமுப் பத்திரண்டினொன்று.*

**அறுசரம்** - *ஓசையாழ்.*

**அறுதலி** - *மங்கிலியமிழந்தவள்.*

**அறுதல்** - *அறப்பட்டது, அறல், கைம் பெண், தோசி.*

**அறுதி** - *சாவு, சொந்தம், தீர்ப்புவிலை.*

**அறுதிச்சாதனம்** - *அறுதியுறுதி.*

**அறுதொழிலோர்** - *பார்ப்பார்.*

**அறுதொழில்** - *அறுவகைத்தொழில், அஃது உழவு, சிற்பம், தொழில், வரைவு, வாணிபம், விச்சை.*

**அறுத்தல்** - *அரிதல், அறச்செய்தல்.*

**அறுந்தறுவாய்** - *உறுந்தறுவாய், தற் சமயம்.*

**அறுபதம்** - *கையாந்தகரை, வண்டு.*

**அறுப்பு** - *அரிகை, மங்கிலியமிழத்தல்.*

**அறுப்புக்காலம்** - *அரிவிவெட்டுக் காலம்.*

**அறுமர்** - *எண்ணெய்வாணிவர்.*

**அறுமின்** - *கார்த்திகைநாள்.*

**அறுமீன்காதலன்** - *குமரன்.*

**அறுமுகன்** - *குமரன்.*

**அறும்பு** - *கொடுமை, பஞ்சகாலம்.*

**அறுவகைப்பொருள்** - *வினைச் சொற்கள் கொள் பொருளாறு, அஃது கருவி, காலம், செயப்படு பொருள், செயல், செய்பவன், நிலம்.*

**அறுவாய்** - *கார்த்திகைநாள்.*

**அறுவிகாரம்** - *செய்யுள்விகாரமாறு, அவை குறுக்கல், தொகுத்தல் நீட்டல், மெலித்தல், வலித்தல், விரித்தல்.*

**அறுவான்** - *அறவு.*

**அஅவை** - *சித்திரைநாள், சீலை.*

**அறை** - *அடி, எழுத்தினோசைச் சொல், கண்ணறை, சிற்றில், சொல், திரை, தூக்கங்கள், பறையடித்தல், பறையறையென்னேவல், பாறை, மலையுச்சி, முளைஞ்சு, அறுந்தது, குறை.*

**அறைகுதல்** - *அடித்தல், கொல்லுதல்.*

**அறைகூவல்** - *பொரவழைத்தல்.*

**அறைக்கீரை** - *ஓர் கீரை.*

**அறைதல்** - *அடித்தல், சொல்லல், பறையடித்தல், கடாவல்.*

**அறைபோதல்** - *கீழறுத்தல்.*

**அற்கம் காணிக்கை** - *திரவியம், நீர்க் காக்கை, விலை, வெண்டுளசி.*

**அற்கல்** - *அறிவுடைமை, நிலை பெறுதல்.*

**அற்கன்** - *அருக்கன்.*

**அற்காதிபன்** - *திரவியாதிபன்.*

**அற்காமை** - *அறிவின்மை, நிலை யாமை.*

**அற்கியம்** - *அருக்கியம்.*

**அற்சகன்** - *அருச்சகன்.*

**அற்சனம்** - *அருச்சனம்.*

**அற்சனை** - *அருச்சனை.*

**அற்சி** - *சுவாலை.*

**அற்சிகன்** - *கோவிற்பட்டன்.*

**அற்சித்தல்** - *அருச்சித்தல்.*

**அற்சியம்** - *அருச்சியம்.*

**அற்பகம்** - *குழந்தை.*

**அற்பகன்** - *குழந்தை, மூடன்.*

**அற்பகெந்தம்** - *செந்தாமரை.*

**அற்பகேசி** - *வசம்பு.*

**அற்பபதுமம்** - *செந்தாமரை.*

**அற்பபத்திரம்** - *ஓர்துளசி.*

**அற்பம்** - *சிறுமை, நாய், அணு, பஞ்சு, பனி, பிள்ளை, புகை.*

**அற்பரம்** - *மக்கட்படுக்கை.*

**அற்பருத்தம்** - *வாழை.*

**அற்பர்** - *கீழ்மக்கள்.*

**அற்பிதம்** - *காணிக்கை, பலி.*

**அற்புதம்** - *அதிசயம், அழகு, ஓரலங் காரம், ஓரெண், பாவக்குண மொன்பதினொன்று.*

**அற்பு** - *அரிது, அற்பம்.*

**அற்புதமூர்த்தி** - *அருகன், கடவுள்.*

**அற்புதர்** - *கம்மாளர்.*

**அற்றடி** - *அடிகேடு.*

**அற்றடிப்படுதல்** - *அடிகெடுதல்.*

**அற்புதவுருவகம்** - *ஓரலங்காரம், அஃது உவமைக் கியல்பல்லாதவற்றை யுள்ளதாயெடுத்துருவகப் படுத்து வது.*

**அற்புதவுவமை** - *ஓரலங்காரம், அஃது பொருட்குள இயல்பை யெடுத்துக் காட்டி இவ்வியல்புகளெல்லாங் குறித்தவுவமைக் குளவேலொப் பாமெனக் கூறுவது.*

**அற்புதன்** - *கடவுள்.*

**அற்றம்** - *அச்சம், சமயம், சோர்வு, மறைவு, மெலிவு.*

**அற்றார்** - *இறந்தோர், தரித்திரர்.*

**அற்றான்** - *இறந்தோன், தரித்திரன்.*

**அற்று** - *உவமையுருபு, சாரியை, (உம்) பலவற்றுக்கோடு, அத்தன்மைத்து.*

**அனகங்காரம்** - *பெருமையின்மை.*

**அற்றை** - *அன்று, சிறுமை.*

**அனகம்** - *பாவமின்மை, மாசின்மை, கீழானது.*

**அனகன்** - *கடவுள், அருகன்.*

**அனங்கம்** - *இருவாட்சி, உடலின்மை, மல்லிகை, அறிவு, ஆகாயம்.*

**அனங்கன்** - *உடலிலான், கடவுள், மதன்.*

**அனசனம்** - *உபவாசம்.*

**அனசூயம்** - *எரிச்சவின்மை.*

**அனஞ்சனம்** - *ஆகாயம்.*

**அனட்சம்** - *குருடு.*

**அனதிகாரி** - *உரித்தற்றவன்.*

**அனத்தம்** - *நாசம், பயனில்லாமை.*

**அனந்தசயனன்** - *விட்டுணு.*

**அனந்தரம்** - *நிதம், பிரிவின்மை, பின்பு, மேல்.*

**அனந்தஞானி** - *கடவுள், பார்வதி, பிரமன்.*

**அனந்தம்** - *அளவின்மை, ஆகாயம், ஓரெண், பொன், முடிவிலாமை, அந்தங்கெட்டது.*

**அனந்தர்** - *நித்திரை, பித்து, மயக்கம், மயிர்ச்சூட்டு.*

**அனந்தலோசனன்** - *கடவுள், புத்தன்.*

**அனந்தல்** - *நித்திரை.*

**அனந்தவாதம்** - *ஓர்நோய்.*

**அனந்தன்** - *அட்டநாகத்தொன்று, கடவுள், அரன், அரி, அருகன், பலதேவன், பிரமன், புத்தன்.*

**அனந்தை** - *பார்வதி, பூமி.*

**அனபரன்** - *பிரமன்.*

**அனபாயம்** - *நிரபாயம்.*

**அனப்பியாசம்** - *அப்பியாசமின்மை.*

**அனபியிதகருத்தன்** - *மூன்றனுருபின் கருத்தன்.*

**அனர்த்தம்** - *பயனிலாச்சொல், பய னின்மை, பொல்லாங்கு.*

**அனலம்** - *உட்டணம், சிவாகம மிருபத்தெட்டி னொன்று, வடவாக்கினி.*

**அனலல்** - *கனலல்.*

**அனலன்** - *அக்கினி, அஷடவசுக் களிலொருவன்.*

**அனவி** - *சூரியன்.*

**அனலேறு** - *இடி.*

**அனலொடுவேந்தன்** - *கார்முகில் பாஷாணம்.*

**அனல்** - *அக்கினி, இடி, உட்டணம், உணர்வு, உயிர்வேதனையி னொன்று, அனலென்னேவல்.*

**அனல்காவி** - *சூரியகாந்தக்கல்.*

**அனல்வென்றி** - *தங்கம்.*

**அனவசரம்** - *விடுதலின்மை.*

**அனவதானம்** - *அவதானக்கேடு.*

**அனவஸ்தானம்** - *உறுதியின்மை, துன்னடை.*

**அனவரதம்** - *எப்பொழுதும்.*

**அனற்றல்** - *கனலல்.*

**அனற்று** - *அனற்றென்னேவல், திருணம்.*

**அனன்னியசன்** - *மனோபவன்.*

**அனாகதம்** - *ஆறாதாரத்தொன்று, அஃது இதயத்தானம், அறிவுக் கதீதமானது.*

**அனாகாரம்** - *உருபின்மை, பசி யினால் வருந்தல்.*

**அனாகாலம்** - *பஞ்சகாலம்.*

**அனாசரணம்** - *துன்னடை.*

**அனாசரித்தல்** - *ஆசரிப்பின்மை.*

**அனாசாரம்** - *ஆசாரமின்மை, நிருவாணம்.*

**அனாசிரயம்** - *பற்றின்மை.*

**அனாதபம்** - *கூதிர், நிழல்.*

**அனாதம்** - *அந்தரித்தது, ஆதரவற்றது.*

**அனாதரம்** - *அவசங்கை, ஆதர வின்மை.*

**அனாதி** - *ஆதிக்குமுந்தினது, ஓர் சைவம், கடவுள், துடக்கமில்லா தது, ஆதியின்மை, சிவன்.*

**அனாதிசைவம்** - *சைவம்பதினாறி னொன்று.*

**அனாதித்துவம்** - *நித்தியம்.*

**அனாதிநாதர்** - *நவநாதசித்தரி லொருவர்.*

**அனாதிமுத்தன்** - *அநித்தியமில்லா ஞானி.*

**அனாதிரேகம்** - *வியப்பின்மை.*

**அனாதீனவம்** - *நிராதீனம்.*

**அனாதுரம்** - *வெறுப்பு.*

**அனாதேயம்** - *ஆதேயமற்றது, ஏற்றுக் கொள்ளத்தகாதது.*

**அனாஸ்தை** - *அவசங்கை, நிலை யின்மை.*

**அனாந்தம்** - *அழகின்மை.*

**அனாமயம்** - *நோயின்மை.*

**அனாமயன்** - *நோயிலான்.*

**அனாயதம்** - *சமீபித்தது, நீளமற்றது.*

**அனாயாசம்** - *இலகு, சோம்பின்மை.*

**அனாமிகை** - *ஆழிவிரல்.*

**அனாரம்பம்** - *துவக்கமின்மை.*

**அனாரதம்** - *எப்போழ்தும்.*

**அனாரோக்கியம்** - *நோய்.*

**அனார்ச்சபம்** - *வளைவு, வியாதி.*

**அனாவிருட்டி** - *மழையில்லாமை, வரட்சி.*

**அனாவிலன்** - *சுக்கிரன்.*

**அனிகம்** - *அனீகம்.*

**அனிச்சம்** - *அனிச்சை.*

**அனிச்சை** - *ஓர் பூடு, ஓர் மரம், விருப்பின்மை.*

**அனிட்டம்** - *பிரியவீனம், இட்ட மின்மை.*

**அனிலசகன்** - *தீ*

**அனிலாமயம்** - *வாதநோய்.*

**அனித்தம்** - *அநித்தியம், அழிவுள்ளது.*

**அனியமச்சிலேடை** - *நியமத்தின் மேலுமோர்நியமச் சிலேடை (உம்) சிறைபயில்வ புட்குலமேதீம் புனலுமன்ன.*

**அனியமவுவமை** - *ஓரலங்காரம், அஃது நியமித்தவுவமையை விலக்கியதனோடு பிறிதுமொரு பொருள் கூட்டியுரைப்பது (உம்) கவிரே நின்வாயொப்பதன்றியது போல வுண்டெனினுமாம்.*

**அனியாயம்** - *நியாயக்கேடு.*

**அனிலநாள்** - *சோதிநாள், வியாகநாள்.*

**அனிலம்** - *காற்று, பிறப்பு.*

**அனிலன்** - *அட்டவசுக்களிலொருவன், வாயு.*

**அனீகம்** - *படையிலோர்தொகை, கவலையின்மை, படை, யுத்தம்.*

**அனீகிதம்** - *அசந்தோஷம்.*

**அனீகினி** - *சேனை, தாமரை, படையிலோர்தொகை, அஃது இரண்டாயிரத்து நூற்று எண்பத்தேழு யானையும் அவ்வளவு இரதமும் ஆறாயிரத்து அஞ்ஞூற்று அறுபத்தேழு குதிரையும் பதினாயிரத்துத் தொளாயிரத்து முப்பத்தை ந்துகாலாளுங்கொண்டது.*

**அனீசன்** - *தலைவனில்லாதவன், விட்டுணு.*

**அனீசுவரவாதி** - *தேவனில்லையென்பவன்.*

**அனீதர்** - *கீழ்மக்கள்.*

**அனு** - *அடையாளம், கதுப்பு, கூட, தொடர்ச்சி, அற்பம், பின், கீழ், பங்கு, தனிமை, சமீபம், ஒழுங்கு, இவற்றைக் காட்டு மோருபசருக்கம், மோனை.*

**அனுகதம்** - *ஈட்டப்பட்டது. கூடிப் போதல், பின்வருவது.*

**அனுகதனம்** - *சம்பாஷனை.*

**அனுகமனம்** - *கூடப்போதல், பின் போதல்.*

**அனுகம்** - *செஞ்சந்தனம்.*

**அனுகம்பை** - *உருக்கம்.*

**அனுகரணம்** - *உவமை, செயல் விளங்க நிற்பது.*

**அனகரணவோசை** - *ஒலிக்குறிப்பு.*

**அனுகருஷணம்** - *அழைத்தல், கவர்ச்சி.*

**அனுகவீனன்** - *இடையன்.*

**அனுகற்பம்** - *பதில்.*

**அனுகன்** - *கணவன்.*

**அனுகாமி** - *தோழன்.*

**அனுகூலம்** - *காரியசித்தி, கிருபை, சம்மதம், பட்சம்.*

**அனுக்கம்** - *அனுங்குதல், சந்தனம், சோம்பு, பயம், பாம்பு, வருத்தம்.*

**அனுக்காட்டல்** - *சாடைகாட்டல்.*

**அனுக்காட்டுதல்** - *சாடைகாண்பித்தல்.*

**அனுக்கியடித்தல்** - *ஓர் விளையாட்டு.*

**அனுக்கிரகம்** - *கிருபை.*

**அனுக்கிரகித்தல்** - *கிருபைசெய்தல்.*

**அனுக்கிரமணம்** - *தொடர்ந்துபோதல்.*

**அனுக்கிரமணிகை** - *பொருளட்டவணை.*

**அனுக்கிரமம்** - *ஒழுங்கு.*

**அனுங்குதல்** - *அசைதல், சிணுங்குதல், புரள்தல்.*

**அனுக்கை** - *விடை.*

**அனுங்கல்** - *அனுங்குதல், முட்டுதல், வருந்தல், வாடல்.*

**அனுசங்கம்** - *உருக்கம், புணர்ச்சி.*

**அனுசந்தானம்** - *ஆராய்வு, விடாயோகம்.*

**அனுசந்தித்தல்** - *தியானித்தல்.*

**அனுசயம்** - *பற்று, மனஸ்தாபம், வன்மம்.*

**அனுசரணம், அனுசரணை** - இணக்கம், போதல், வழக்கம்.

**அனுசரன்** - தோழன், வேலைகாரன்.

**அனுசரித்தல்** - சார்ந்து நடத்தல், மேற்கொண்டு நடத்தல், வழிபடுதல்.

**அனுசன்** - தம்பி.

**அனுசாசகன்** - ஆள்பவன்.

**அனுசாசனம், அனுசாஸ்தி** - கட்டளை.

**அனுசாதன்** - தம்பி.

**அனுசாதை** - தங்கை.

**அனுசாரம்** - அடுத்துநடத்தல் ஆசரிப்பு, தொடர்தல், சுபாபம், தத்துவம், நடபடி, பலன், வழக்கம்.

**அனுசாரி** - உதவிக்காரன், சார்ந்து நடப்பவன், வழிபடுகிறவன்.

**அனுசிதம்** - அசுத்தம், தகுதியின்மை.

**அனுசிந்தை** - தியானித்தல்.

**அனுசை** - தங்கை.

**அனுசோகம், அனுசோசனம்** - துக்கம்.

**அனுச்சிட்டம்** - சுத்தம்.

**அனுச்சுவரம்** - முதனிலையாய் நின்றொலி தரும்விந்தெழுத்து.

**அனுடம்** - ஓர்நாள்.

**அனுட்டணம்** - சத்தவிசனத்தொன்று, அஃது சோம்பு.

**அனுட்டானம்** - அனுட்டிப்பு, தகுதி, துவக்கம், நிலை நிறுத்தல்.

**அனுட்டித்தல்** - ஆசரித்தல்.

**அனுட்டிப்பு** - ஆசரிப்பு.

**அனுதமம்** - சிரேட்டமானது.

**அனுதரம்** - ஏற்றுமதிக்கூலி, படகேறுதல், மெலிவு.

**அனுதரிசனம்** - பானபாத்திரம்.

**அனுதரித்தல்** - அணைத்தல், படகிலேற்றல், மெலிதல்.

**அனுதாத்தம்** - வேதநூற்பகுதி, படுத்தலோசை.

**அனுதாபம்** - ஒன்றிற்கிரங்கல்.

**அனுதாயம்** - மனந்திரும்புதல்.

**அனுதாரம்** - இல்லொழுக்கம், பிசுனித்தனம்.

**அனுதாவனம்** - பின்றொடர்தல்.

**அனுதினம்** - எப்போழ்தும்.

**அனுத்தமம்** - அதமம்.

**அனுத்தம்** - பொய்.

**அனுத்தரம்** - ஒவ்வாமறுமொழி.

**அனுத்தானம்** - முகங்குப்புறக்கிடத்தல்.

**அனுத்தியோகம்** - முயற்சியின்மை.

**அனுத்துவாகம்** - பிரமசரியச்சன்னியாசம்.

**அனுத்தேகம்** - விருப்பின்மை.

**அனுநயம்** - விருந்தோம்பல்.

**அனுநாசிகை** - மெல்லினம்.

**அனுநாதம்** - எதிரொலி.

**அனுபதிதம்** - இறங்குதல், போதல்.

**அனுபஸதானம்** - இன்மை.

**அனுபஸதி** - இன்மை.

**அனுபஸதியேது** - ஓரளவை, அஃது குளிரின்மை பனியின்மை காட்டுதல் போலும்.

**அனுபந்தம்** - ஒன்றிப்பு, தொடர்வினைக்கட்டு, ஒற்றுமை, காரண காரக சம்பந்தம், கூடுதல், முகனை.

**அனுபந்தன்** - குழந்தை, மாணாக்கன்.

**அனுபந்தி** - தாகம், விக்கல்.

**அனுபமை** - தென்மேற்றிசை யானைக்குப் பெண்யானை, மேன்மை, உவமையின்மை.

**அனுபயோகம்** - பிரயோசனமற்றது.

**அனுபல்லவம்** - பதத்தில் முதற்சிற்றடி.

**அனுபல்லவி** - பல்லவிக்கயற்பல்லவி.

**அனுபவப்படல்** - உற்றறிதல்.

**அனுபவம்** - அனுபோகம், சுகபோகம், அனுபோகம், தோற்றுதல், பிறத்தல்.

**அனுபவித்தல்** - துய்த்தல்.

**அனுபவிப்பு** - அனுபோகம்.

**அனுபாதகம்** - *பெருங்குற்றம்.*

**அனுபானம்** - *உடன்பருகுவது, மருந் தனுபானம்.*

**அனுபிவம்** - *அபிநயம், நிச்சயம்.*

**அனுபூதி** - *பிரமாணங்களைக் கொண்டறிந்தவறிவு.*

**அனுபோகம்** - *அனுபவிப்பது.*

**அனுபோகித்தல்** - *அனுபவித்தல்.*

**அனுப்பிராசம்** - *அனுராகம், வழி யெதுகை, விரகம்.*

**அனுப்பு** - *அனுப்புவது, அனுப்பென் னேவல்.*

**அனுப்புதல்** - *போகவிடுதல்.*

**அனுமக்கொடியோன்** - *அருச்சுனன்.*

**அனுமதி** - *சம்மதி, பௌரணை, ஒழுங்கு, கட்டளை, சதுர்த்தசி, சம்மதி.*

**அனுமந்தன்** - *அனுமான்.*

**அனுமரணம்** - *அடுத்திறத்தல், உடன் கட்டையேறுதல்.*

**அனுமானப்பிரமாணம்** - *ஓரளவை, அஃது அனுமானத்தால் அன மேயத்தை யறிதல்.*

**அனுமானம்** - *காரியத்தாற் காரணத் தையறிவிக்கிற ஓர்பிரமாணம், கூட்டு, சந்தேகம், ஓர் பிரமாணம், அஃது உரைத்தவற்றைப் பிரமாண மாகக்கொண்டுரையாதபொருளை யறிதல்.*

**அனுமானாபாசம்** - *சந்தேகப் பிர மாணம்.*

**அனுமானானுமானம்** - *கருதலனு மானம்.*

**அனுமானிதம்** - *குதிரைக்கனைப்பு.*

**அனுமானித்தல்** - *ஆர்த்தல், ஐயப் படுதல், குதிரைகனைத்தல்.*

**அனுமானோத்தி** - *நியாயசாஸ்திரம்.*

**அனுமான்** - *அஞ்சனைகுமரன், சிற்ப நூல்முப்பத்திரண்டினொன்று.*

**அனுமிதி** - *அனுமானம்.*

**அனுமித்தல்** - *அனுமானித்தல்.*

**அனுமேயம்** - *ஓரளவை, அஃது அனு மானித்தறியப்படுபொருள்.*

**அனுமை** - *கண்ணின்புறவருகு, அருந் தாபத்தி.*

**அனுமோதனம்** - *இன்பம், உவகை.*

**அனுயோகம்** - *கண்டனை, கேள்வி, தியானம், மன்றாடுதல்.*

**அனுயோசனம்** - *கேள்வி.*

**அனுரஞ்சகம்** - *திருத்தியாதல்.*

**அனுரஞ்சனம்** - *அன்பு, உருக்கங் காட்டுதல்.*

**அனுரதம்** - *பற்று, விருப்பம்.*

**அனுரதி** - *அன்பு.*

**அனுராகபோகம்** - *காமானுபவம்.*

**அனுராகமாலை** - *ஓர்பிரபந்தம்.*

**அனுராகம்** - *அன்னியோன்னியப் பிரியம், தொடர்ந்தவிருப்பு, காமம்.*

**அனுருபம்** - *இணக்கம், தடை, மத்தி யட்சம்.*

**அனுரோதகம்** - *சம்மதித்தல்.*

**அனுரோதம்** - *பிறர்கருமம் முடித்தல்.*

**அனுலாபம்** - *கூறியதுகூறல்.*

**அனுலேபகம், அனுலேபம்** -*அபிடேகம்.*

**அனுலேபனம்** - *அபிஷேகம் பண்ணல், வாசனையூட்டல்.*

**அனுலோமசன்** - *அனுலோமன்.*

**அனுலோமன்** - *உயர்குலத் தந்தைக்கு மிழி குலத்தாய்க்கும் பிறந்த பிள்ளை.*

**அனுவசனம்** - *ஒத்தவாக்கியம்.*

**அனுவதித்தல்** - *சொன்ன நியாயத்தை யேதிரும்பச் சொல்லல்.*

**அனுவர்த்தனம்** - *கடமைப்படுத்தல், பலன்.*

**அனுவழி** - *புதன்.*

**அனுவாகாரியம்** - *பிதிர்கருமம்.*

**அனுவாக்கியை** - *வேதமந்திரம்.*

**அனுவாசம், அனுவாசனம்** - *அன்பு, கூடியிருத்தல், வாசனையூட்டடல், வேலைச் சாலை.*

**அனுவாசிதம்** - *வாசனை யூட்டப் பட்டது.*

**அனுவாதம்** - *முற்குறித்த பொருளைப் பற்றித் திரும்பச் சொல்லும் நியாயம், சம்மதம், நிந்தை.*

**அனுவாதேயன்** - *அடையப் படாதவன்.*

**அனுவாரோகணம்** - *உடன்கட்டை யேறுதல்.*

**அனுவிரசனம்** - *வழிவிட்டனுப்பல்.*

**அனுவிருத்தி** - *உபசரணை, புறனடை.*

**அனுற்பத்தி** - *தவறு, பிறப்பின்மை.*

**அனூடன்** - *விவாகம் பண்ணாதவன்.*

**அனூபசம்** - *இஞ்சி.*

**அனூபம்** - *ஈரம்.*

**அனூனம்** - *முழுமை.*

**அனூரு** - *புதன், முடவன், அருணன்.*

**அனேகம்** - *ஒன்றுக்குமேற்பட்டது.*

**அனேகாங்கவுருவகம்** - *ஓரலங்காரம், அஃது ஒன்றனங்கம் பலவற்றையு முருவகஞ் செய்துரைப்பது.*

**அனேகாகாரம்** - *பலமாதிரி.*

**அனேகாந்திகபேதம், அனேகாந்திகம்** - *அனைகாந்திகம்.*

**அனேடமூகம்** - *அணாப்பு, செவிடு மூமையும்.*

**அனை** - *ஓர்மீன்.*

**அனைகாந்திகம்** - *ஓரலங்காரம், அஃது காரணகாரியமொன்றற் கொன்று மாறு படக்கூறுவது.*

**அனைக்கியம்** - *அன்னியோன்னிய விரோதம், பன்மை.*

**அனைக்குமம்** - *ஐக்ககுறைவு, பன்மை.*

**அனைசுவரியம்** - *வறுமை.*

**அனைதாய்** - *நடுக்குறைவார்த்தை.*

**அனைத்து** - *அவ்வளவு, எல்லாம்.*

**அனைய** - *உவமையுருபு.*

**அனைவரும்** - *எல்லாரும்.*

**அன்** - *உயர்திணையாண்பாற் படர்க்கை யொருமைவிகுதி, சாரியை, இன்மைப்பொருள், எதிர்மறைப் பொருள், பிறிதின் பொருளிவை களைக்காட்டு மோருப சருக்கம்.*

**அன்பன்** - *நாயகன், பத்தன்.*

**அன்பு** - *ஆசை, தயை, நேசம், பெரியோரியல்பினொன்று.*

**அன்மயம்** - *சந்தேகம்.*

**அன்மொழி** - *பிறமொழி.*

**அன்மொழித்தொகை** - *வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகையென்னுந் தொகைநிலைத் தொடர் மொழிகளின் புறத்து அவையல்லாதபிற மொழிகள் தொக்குநிற்பன, (உம்) பொற்றொடி.*

**அன்மை** - *அல்லாமை, தீமை.*

**அன்வயம்** - *அன்னுவயம்.*

**அன்றில்** - *ஓர் புள், மூலநாள்.*

**அன்று** - *அசைச்சொல், அந்நாள், அல்ல.*

**அன்ன** - *உவமையுருபு.*

**அன்னகந்தி** - *வயிற்றுளைவு.*

**அன்னகோட்டகம்** - *களஞ்சியம்.*

**அன்னகோட்டகன்** - *சூரியன், விட்டுணு.*

**அன்னகோட்டம்** - *பண்டாரம்.*

**அன்னக்கொடியோன்** - *பிரமன்.*

**அன்னசத்திரம்** - *அன்னசாலை.*

**அன்னசலம்** - *தாபரம்.*

**அன்னசாரம்** - *கஞ்சி.*

**அன்னசுத்தி** - *நெய்.*

**அன்னதன், அன்னதாதிரு** - *அன்னங் கொடுப்பவன்.*

**அன்னதாதா** - *அன்னங் கொடுக்கிறவன்.*

**அன்னதானம்** - *அன்னக்கொடை.*

**அன்னதாழை** - *ஓர் தாழை.*

**அன்னத்தூவி**-*பஞ்சசயனத் தொன்று, அஃது அன்னஇறகு.*

**அன்னபூமி** - *சோற்றுக்கும்பம்.*

**அன்னபேதி** - *ஓர்மருந்து.*

**அன்னப்பிராசனம்** - *சோறூட்டல்.*

**அன்னமயகோசம்** - *பஞ்சகோசத் தொன்று, அஃது உடல்.*

**அன்னமயம்** - *உடல், போசனமுள்ளது.*

**அன்னமலம்** - *கஞ்சி.*

**அன்னமுரசு** - *சோறிட இடும்பறை.*

**அன்னம்** - *ஓர்புள், கவரிமா, சோறு, தயாவிருத்தி பதினான்கி னொன்று, அஃது உணவு கொடுத்தல், சாப்பாடு, தானியம்.*

**அன்னரசம்** - *உணாக்களிற்றேகத்திற் சேருஞ்சாரம்.*

**அன்னரேகை** - *ஓர்கைவரை.*

**அன்னர்** - *அத்தன்மையர்.*

**அன்னலார்** - *பெண்கள்.*

**அன்னவம்** - *கடல்.*

**அன்னவாசயம்** - *உணாவசிக்குமிடம்.*

**அன்னவிகாரம்** - *இந்திரியக்கழிவு.*

**அன்னவூர்தி** - *சரச்சுவதி, பிரமன்.*

**அன்னவூறல்** - *அன்னரசம்.*

**அன்னவேதி** - *ஓர்பூடு.*

**அன்னாதன்** - *வளர்ப்புப்பிள்ளை.*

**அன்னாபிடேகம், அன்னாபிஷேகம்** - *ஓரபிஷேகம்.*

**அன்னியகுணசகனம்** - *தயாவிருத்தி பதினான்கினொன்று, அஃது பிறர் குணத்தழுக்காறின்றிப் பொறுத்தல்.*

**அன்னியசன்மம்** - *மறுபிறப்பு.*

**அன்னியசாகன்** - *பதிதன்.*

**அன்னியதாகர்த்தத்துவம்** - *ஒன்றை யொன்றாக்குந் தத்துவம்.*

**அன்னியதாசித்தி** - *அன்னியகாரணங் கொண்டு சுய காரணத்தானாய காரியத்தை மறுத்தல்.*

**அன்னியபுட்டம்** - *குயில்.*

**அன்னியபிருதம்** - *குயில்.*

**அன்னியமம்** - *நியமமல்லாதது.*

**அன்னியம்** - *அயல், குயில், வித்தியாசம்.*

**அன்னியர்** - *ஈனர், பிறச்சாதியார், பிறர்.*

**அன்னியோன்னியகலகம்** - *அன்னியோன்னியவிரோதம்.*

**அன்னியோன்னியவிரோதம்** - *பகை.*

**அன்னியோன்னியம்** - *ஐக்கம், ஒன்றற் கொன்றிருக்கிற சம்பந்தம்.*

**அன்னுபாஷாணம்** - *வாதுசொன்ன பொருளையறிந் தனுமதியாதிருத்தல்.*

**அன்னுவயம்** - *காரணகாரிய சம்பந்தம், சேர்த்திக்கை, வமிசம்.*

**அன்னுவயவிலக்கணம்** - *கருத்தா, கருமம், கிரியை, விசேடணம், விசேடியம் இவற்றின் சம்பந்தம்.*

**அன்னுவாசனம்** - *அனுவாசனம்.*

**அன்னுவாதேயம்** - *கணவன் வழியார் கொடுத்த நன்கொடை.*

**அன்னுவாரோகணம்** - *அனுவாரோகணம்.*

**அன்னை** - *அக்காள், தாய், தோழி.*

**அன்னோ** - *அதிசயச்சொல், இரக்கச் சொல்.*

**அன்னோன்றி** - *பெலனற்றவன்.*

## ஆ

**ஆ** - *அஃறிணைப் படர்க்கை யெதிர் மறைப்பலவின் விகுதி, ஆச்சா மரம், ஆதலைச் செய்யென்னேவல், இச்சை, இரக்கம், எதிர்மறை,*

எருமை பசு மரையிவற்றின் பெண், ஓரெழுத்து, ஓர்வினை யெச்சவிகுதி, சொல் விசை, வியப்பு, விலங்கின் பெண் பொது, வினா, அந்தம், இணைப்பு, உருக்கம், குறைவு, பிரிப்பு, இவற்றைக் காட்டு மோருபசருக்கம்.

**ஆஅ** - அதிசயச்சொல், அதிசய விரக்கச்சொல், இரக்கச்சொல்.

**ஆக** - உவமையுருபு, முழுவதும்.

**ஆகடியம்** - அநியாயம், கொடுமை.

**ஆகண்டலன்** - இந்திரன்.

**ஆகதம்** - கந்தைப்புடைவை, புதுப் புடைவை.

**ஆகமப்பிரமாணம்** - மூவளவையி னொன்று, அஃது தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை யெனப்படும்.

**ஆகமமலைவு** - தருமநூல் சொல்லிய வாறேசொல்லாது பிறளக் கூறுவது.

**ஆகமம்** - ஆகமநூல், கல்வி, மரப் பொது, மிகுத்தல், முதல்வன் வாக்கு, உறுதிக்கடுதாசி, ஓர் சாத்திரம், சேருதல், தருமநூல், தோன்றல் விகாரம்.

**ஆகமனகாலம்** - சங்கிராந்தி, பிரசவ காலம்.

**ஆகமனம்** - வந்துசேருதல்.

**ஆகமன்** - சிவன்.

**ஆகம்** - உடல், மார்பு, பாரை.

**ஆகம்பிதமுகம்** - சினத்தானுஞ் சம்மதியானும் மேற்கீழ்த் தலை யாட்டல்.

**ஆகம்பிதம்** - சம்மதக்குறிகாட்டும் முகம்.

**ஆகரணம்** - ஏவுதல், பிடித்தல்.

**ஆகரம்** - உறைவிடம், குற்றுவாள், சுரங்கம், திரள், மண்வெட்டி, மேலானது.

**ஆகரன்** - கள்வன்.

**ஆகரி** - ஓரிராகம்.

**ஆகருஷணம், ஆகருஷித்தல்** - இழுத் தல்.

**ஆகருணனம்** - கேட்குதல்.

**ஆகருடணம்** - அழைத்தல், கலை ஞான மறுபத்தினான்கினொன்று.

**ஆகருடணை** - அழைத்தல்.

**ஆகல்** - ஆகுதல்.

**ஆகலனம்** - எண்ணுதல், பிடித்தல், விருப்பம்.

**ஆகவபூமி** - போர்க்களம்.

**ஆகவம்** - சீலை, போர்.

**ஆகவனீயம்** - வேதாக்கினி மூன்றி னொன்று.

**ஆகவனம்** - பலி.

**ஆகற்பகம்** - இருள், பச்சாத்தாபம், மதிகெடல், முடிச்சு.

**ஆகற்பம்** - அதிகப்படுத்தல், அலங் காரம், நோய்.

**ஆகனம்** - கன்னக்கருவி, பாரை.

**ஆகனிகம்** - எலி, பன்றி, மண்ணகழ் கருவி.

**ஆகனிகன்** - ஒட்டன், கள்வன்.

**ஆகன்னம்** - காது.

**ஆகா** - எதிர்மறைப் பன்மைப் படர்க்கை வினைமுற்று கந்தருவர், வியப்புச்சொல்.

**ஆகாக்களங்கு** - மிறுதாறுசிங்கி, அஃது முப்பத்திரண்டு பாஷாணத் தினொன்று.

**ஆகாங்கிசை, ஆகாங்கிஷை** - மிகு விருப்பு.

**ஆகாசகபாலம், ஆகாசகபாலி** - புரளிக் காரன்.

**ஆகாசகபாலி** - மிகவல்லபன்.

**ஆகாசக்கத்தரி** - ஓர்கத்தரி.

**ஆகாசக்கல்** - சூரியகிரணத்தணு.

**ஆகாசதீபம்** - தீபாபலித்தீபம்.

**ஆகாசத்தாமரை** - *அந்தரத்தாமரை, பொய்.*

**ஆகாசப்பட்சி** - *சாதகப்புள்.*

**ஆகாசமண்டலம்** - *பரதவுறுப்பு ளொன்று.*

**ஆகாசமயம்** - *சூனியம்.*

**ஆகாசமார்க்கம்** - *அந்தரவழி.*

**ஆகாசம்** - *அந்தரம், வெளி, இடம், ஓர்பூதியம்.*

**ஆகாசயானம்** - *அந்தரகமனரதம்.*

**ஆகாசவல்லி** - *ஓர்கொடி, சீந்தில்.*

**ஆகாசவாசிகள்** - *அந்தரசஞ்சாரிகள், பதினெண்கணத்தினொன்று.*

**ஆகாசவாணி** - *அசரீரி வார்த்தை.*

**ஆகாசேசன்** - *இந்திரன்.*

**ஆகாதம்** - *அடி, குளம், கொலை, கொலைக்களம்.*

**ஆகாத்தியம்** - *பொல்லாங்கு.*

**ஆகாமியம்** - *அக்கிரமம், முக்கன்மத்தி னொன்று.*

**ஆகாயகணம்** - *நிரையசை யிரண்டு நேரசையொன்றுமாக வருவது (உம்) திரையெறிநீர்.*

**ஆகாயகமனம்** - *அந்தரமார்க்கமாய்ப் போதல், கலைஞான மறுபத்தி னான்கினொன்று.*

**ஆகாயகருடன்** - *சீந்தில்.*

**ஆகாதனம்** -*கொலை, கொலைக்களம்.*

**ஆகாயத்தின் கூறுபாடு** - *இராகம், துவேசம், பயம், மோகம், இலச்சை என்பன.*

**ஆகாயபதவி** - *திருச்சங்குப்பதவி.*

**ஆகாயப்பிரவேசம்** - *அந்தரத்துட் புகுதல், கலைஞானமறு பத்தி னான்கினொன்று.*

**ஆகாயமாஞ்சி** - *சிறுசடமாஞ்சி.*

**ஆகாயம்** - *அட்டமூர்த்தத்தொன்று, பஞ்சபூதியத்தொன்று, வான்.*

**ஆகாயவழுதலை** - *ஓர்வழுதுணை.*

**ஆகாயவீதி** - *நட்சத்திரவீதி.*

**ஆகாரகுத்தி** - *மாசாலம்.*

**ஆகாரசம்பவம்** - *நிணம்.*

**ஆகாரணம்** -*அழைத்தல்.*

**ஆகாரதாகம்** - *வீடுசுடுதல்.*

**ஆகாரம்** - *நெய், போசனம், மனைப் பொது, வடிவு, அடையாளம், ஓரெழுத்து.*

**ஆகாரி** - *உயிர், பூனை.*

**ஆகாவம்** - *நீர்த்தொட்டி, யுத்தம்.*

**ஆகிஞ்சனம்** - *தரித்திரம்.*

**ஆகிரதம்** - *வணங்கல்.*

**ஆகிரம்** - *விரிவு.*

**ஆகிருதி** - *அங்கம், மாதிரி, அடிதோறு மிருபத்திரண்டு அசை கொண்டு நான்கடியாய் முடியும் பாட்டு, உடல்.*

**ஆகிருநந்தனம்** - *புன்குமரம்.*

**ஆகு** - *எலி, கொப்பூழ், சாமரை, பெருச்சாளி, கள்வன், பன்றி.*

**ஆகுகன்** - *கணபதி.*

**ஆகுஞ்சனம்** - *அடக்குதல், குவித்தல், விளைத்தல்.*

**ஆகுண்டிதம்** - *கோழை.*

**ஆகுதம்** - *உயிர்க்குறுதிசெய்தல்.*

**ஆகுதி** - *ஓமாக்கினியினெய்விடுதல், பலி.*

**ஆகுபாஷாணம்** - *வெள்ளைப் பாஷாணம்.*

**ஆகுபுகு** - *பூனை.*

**ஆகுபெயர்** - *சம்பந்தமானவொன்றின் பெயர் மற்றொன்றிற்கு வழங்கு வது.*

**ஆகுரதன்** - *கணபதி.*

**ஆகுலத்துவம், ஆகுலம், ஆகுலி** - *கலக்கம்.*

**ஆகுலம்** - *ஆரவாரம், ஒலி, துன்பம், வருத்தம்.*

**ஆகுலித்தல்** - *அழுதல், ஆரவாரித்தல், வருந்துதல்.*

**ஆகுவாகனன்** - *விநாயகன்.*

**ஆகுளி** - *சிறுபறை.*

**ஆகுனி** - *வாதமெண்பதினொன்று.*

**ஆகூதம்** - *அழைப்பு, கருத்து, விருப்பம்.*

**ஆகேடகம்** - *வேட்டை.*

**ஆகோடிபம்** - *தடை, மறியல்.*

**ஆக்கச்சொல்** - *ஆக்கம் பெற்று வருஞ்சொல்.*

**ஆக்கஞ்செப்பல்** - *பத்தவத்தையி னொன்று, அஃது தன்மன வருத் தத்தைப் பிறர்க்குரைத்தல்.*

**ஆக்கதம்** - *முதலை.*

**ஆக்கம்** - *ஆகுதல், இலக்குமி, இலாபம், எழுச்சி, கொடிப் படை, செலவம், படைவகுப்பு, பொன்.*

**ஆக்கல்** - *சமைத்தல், செய்தல், படைத்தல்.*

**ஆக்கவினை** - *ஆக்கத்தால் வரும் வினைச்சொல்.*

**ஆக்கவினைக்குறிப்பு** - *ஆக்கச்சொல் விரிந்தேனுந்தொக்கேனு நிற்பது (உம்) பெரியன்.*

**ஆக்கவும்மை** - *ஆக்கத்தைக் காட்டு மிடைச்சொல் (உம்) பாலுமாம் மருந்துமாம்.*

**ஆக்கியம்** - *நாமம்.*

**ஆக்கியாதம்** - *சொல்லல்.*

**ஆக்கியாபித்தல்** - *கட்டளையிடல்.*

**ஆக்கியானம்** - *கட்டுக்கதை.*

**ஆக்கியோன்** - *செய்தோன், படைத்தோன்.*

**ஆக்கிரகம்** - *கடுங்கோபம், தத்துவம், தாபரிப்பு, மேற்கொள்ளுதல்.*

**ஆக்கிரந்திதம்** - *குதிரையின் விரைவு நடை.*

**ஆக்கிரமம்** - *ஆங்காரம், சூரம், பொல்லாங்கு, அடைதல், எதிர்த்தல், கடத்தல், சுமத்தல், பரப்பல், விரித்தல்.*

**ஆக்கிரகாயணி** - *யாகமிருபத்தொன்றி னொன்று.*

**ஆக்கிரகித்தல்** - *உக்கரித்தல், தரபரித்தல், வெல்லல்.*

**ஆக்கிரமித்தல்** - *ஆங்காரம் பண்ணுதல்.*

**ஆக்கிரயணம்** - *யாகமிரு பத்தொன்றி னொன்று.*

**ஆக்கிராணம்** - *மூக்கு, மூக்குப் பொடி, திருத்தி, மணத்தல்.*

**ஆக்கிராணவிந்திரியக்காட்சி** - *ஓரளவை, அஃது கந்தமறிதல்.*

**ஆக்கிராணவிந்திரியம்** - *மூக்கு.*

**ஆக்கிராணித்தல்** - *மூக்கிற்றூளிடுதல்.*

**ஆக்கிராந்தி** - *கடந்துபோதல், மேற்கொள்ளுதல்.*

**ஆக்கிராயணம்** - *விளைவுகாவல் செய்தல்.*

**ஆக்கிரிஷம்** - *கோபம்.*

**ஆக்கிரீடம்** - *ஆராமம், பொழுது போக்கு.*

**ஆக்கிரோசகம், ஆக்கிரோசம்** - *ஆணை, சாபம், துற்பாவனை.*

**ஆக்கிரோசனம்** - *சாபம்.*

**ஆக்கினாகரணம்** - *கீழ்ப்படிதல்.*

**ஆக்கினாகரன்** - *ஏவல்செய்வோன்.*

**ஆக்கினாசக்கரம்** - *ஆணை, செங்கோன் முறைமை.*

**ஆக்கினாபங்கம்** - *கீழ்ப்படியாமை.*

**ஆக்கினாபத்திரம்** - *கட்டளைச் சட்டம்.*

**ஆக்கினிஸநானம்** - *எழுவகை ஸநானத்தொன்று, அஃது விபூதி யுத்தூளன மாய்ப் பூசுதல்.*

**ஆக்கினேயம்** - *பதினெண்புராணத் தொன்று, அஃது அக்கினி புராணம்.*

**ஆக்கினை** - *கட்டளை, தண்டனை, ஆறாதாரத்தொன்று, அஃது இலாடத்தானம்.*

**ஆக்குதல்** - *ஆகச்செய்தல், சமைத்தல்.*

**ஆக்குரோசம்** - *கோபம், மூர்க்கமான சத்தம்.*

**ஆக்குரோசனம்** - *வைதல்.*

**ஆக்குவயம்** - *நாமம்.*

**ஆக்கொல்லி** - *ஓர்புழு, தில்லைமரம்.*

**ஆக்கை** - *உடம்பு.*

**ஆங்க** - *ஓரிடைச்சொல், அஃது அசை நிலை, (உம்) ஆங்கத் திறனலயாங் களற, இடப்பொருள், (உம்) ஆங்காங்காயினுமாக.*

**ஆங்காரம்** - *இறுமாப்பு, செறு.*

**ஆங்காரி** - *செருக்கன்.*

**ஆங்காரித்தல்** - *செருக்குதல், மூர்க்கங் காட்டுதல்.*

**ஆங்காலம்** - *ஆகுங்காலம்.*

**ஆங்கிரம்** - *அட்டாதசவுபபுராணத் தொன்று.*

**ஆங்கீரச** - *ஓர் வருடம்.*

**ஆங்கிரசம்** - *தருமநூல் பதினெட்டி னொன்று.*

**ஆங்கிரசன்** - *சத்தவிருடிகளிலொரு வன்.*

**ஆங்கு** - *அசைச்சொல், (உம்) விருந் தொக்கறானென்றாங்கு அவ் விடம் உவமைச்சொல் (உம்) மகற் கண்டதாய்மறந் தாங்கு.*

**ஆங்ஙனம்** - *அங்ஙனம்.*

**ஆசகவம்** - *சிவன்வில்.*

**ஆசகாரம்** - *சிவனேறு.*

**ஆசங்கம்** - *அடர்த்தி, கூட்டம், சேர்த்திக்கை.*

**ஆசங்கித்தல்** - *அய்யங்கொள்ளல்.*

**ஆசங்கை** - *அய்யம், பயம்.*

**ஆசத்தி** - *சம்பாத்தியம், தத்துவம்.*

**ஆசந்தன்** - *விட்டுணு.*

**ஆசந்தி** - *பாடை.*

**ஆசமனம்** - *உட்கொள்ளல், சிறுக நீருட்கொள்ளல்.*

**ஆசமன்கம்** - *துப்பற்காளாஞ்சி.*

**ஆசமனியம்** - *ஆசமனஞ் செய்தற் குத்தகுதியானநீர்.*

**ஆசமித்தல்** - *நீர் முதலியவற்றைச் சிறுகவுட் கொள்ளல்.*

**ஆசம்** - *சிரிப்பு, இருக்கை, உரைகல், நெய், வில்லு.*

**ஆசயம்** - *தங்குமிடம், அதிட்டம், ஆதனம், இட்டம், இரைக்குடர், குணம், சுபாவம், புகலிடம், மனம்.*

**ஆசரணம்** - *ஆசரணை.*

**ஆசரணை** - *ஆசரிப்பு, வழிபாடு.*

**ஆசரித்தல்** - *கைக்கொள்ளுதல், கொண்டாடுதல், வழிபடுதல்.*

**ஆசரிப்பு** - *கொண்டாட்டம், வழிபாடு.*

**ஆசரிப்புக்கூடாரம்** - *வழிபாட்டுப் படாம் வீடு.*

**ஆசவத்திரு** - *பனைமரம்.*

**ஆசவம்** - *கள்.*

**ஆசவுசம்** - *ஆசூசம்.*

**ஆசறுதி** - *முடிவு.*

**ஆசனம்** - *இராசசின்னத்தொன்று, இருப்பு, பீடம்.*

**ஆசனவாயில்** - *மலவாயில்.*

**ஆசனனகாலம்** - *பின்னேரம், மரண வேளை.*

**ஆசனனம்** - *பின்பொழுது.*

**ஆசனன்** - *சுக்கிரன்.*

**ஆசனாத்தம்** - *நிலைக்கண்ணாடி.*

**ஆசாகி** - *சீந்தில்.*

**ஆசாடம், ஆஷாடம்** - *ஆடிமாதம், முருக்கு.*

**ஆசாட்டம்** - *அசுகை, தோற்றம்.*

**ஆசாதிதம்** - *பெறுபேறு.*

**ஆசாபங்கம்** - *நம்பிமோசம் போதல்.*

**ஆசாபந்தம்** - *சிலம்பிநூல், நம்பிக்கை.*

**ஆசாபாசம்** - *ஆசைமயக்கம், ஆசையாகிய கட்டு.*

**ஆசாரசாவடி** - *ஆசாரவாயில், பொதுச் சாவடி.*

**ஆசாரபோசன்** - *பெருந்தேகி.*

**ஆசாரம்** - *அரசிருக்கை, ஒழுக்கம், சீலை, சுத்தம், பெருமழை, வழி பாடு, கட்டளை, படை வளைப்பு, முப்பொருளினொன்று, அஃது அறப்பொருள், வழக்கம்.*

**ஆசாரவாயில்** - *வெளிவாயில்.*

**ஆசாரியவிருத்தனம்** - *ஆசாரியதிகாரம்.*

**ஆசாரி, ஆசாரியன்** - *உவாத்தி, கம்மாளன், குரு, பணிக்கன்.*

**ஆசாரியாபிடேகம்** - *குருவுத்தியோகத் திற்கு நியமித்தல்.*

**ஆசாள்** - *தலைவி.*

**ஆசானுவாகு** - *உத்தமபுருடன், முழந்தாளளவு நீண்டகையுடையோன்.*

**ஆசான்** - *உவாத்தி, கம்மாளன், குமரன், குரு, சுக்கிரன், தலைவன், பணிக்கன், பாலையாழ்த்திறம், மூத்தோன், வியாழம், அருகன்.*

**ஆசி** - *வாழ்த்து, ஆசியென்னேவல், சமநிலம், நிந்தை, யுத்தம்.*

**ஆசிகன்** - *வாட்காரன்.*

**ஆசிக்கல்** - *காகச்சிலை.*

**ஆசிடை** - *கூட்டம், சீலை, வாழ்த்து.*

**ஆசிடை** - *ஆசாக இடையிட்டுக் கொண்ட சொல்.*

**ஆசிடையிட்டெதுகை** - *பதத்தின் முதலெழுத்திற்கு மிரண்டாமெழுத்திற்குமிடையே பிறிதோர் மெய்பெற்றுவழங்கு மெதுகை (உம்) ஆ வேறு பால்வேறு.*

**ஆசிதம்** - *ஆசனம், நகரம், பத்துப் பறை கொண்டது.*

**ஆசிதையன்** - *நாவிதன்.*

**ஆசித்தல்** - *விரும்பல்.*

**ஆசிப்பு** - *ஆசை.*

**ஆசியபத்திரம்** - *தாமரை.*

**ஆசியம்** - *அவமதிச்சிரிப்பு, முகம், அவ்விடம், முகம், வாய்.*

**ஆசியாசவம்** - *உமிழ்நீர்.*

**ஆசிரபம்** - *மூலநட்சத்திரம்.*

**ஆசிரம்** - *இடம், தீ.*

**ஆசிரயம்** - *இடம், இருத்தல், கொழுகொம்பு, சமீபம், புகலிடம், வழக்கு, வாசம்.*

**ஆசிரயன்** - *தற்காப்போன்.*

**ஆசிரியத்தளை** - *ஆசிரியப் பாவிற்குரியதளை, அஃது மாநாள் என்னும் வாய்பாடுகளின் பின்னேரசையும் விளமலர் என்னும் வாய்பாடுகளின் பின்னிரையசையும் வருவது.*

**ஆசிரியத்தாழிசை** - *அகவற்பாவினத்துளொன்று, அஃது எனைத்துச் சீரானுந்தம் முளளபொத்து மூன்றடியாய்த் தனித்தேனும் ஒருபொருண் மேல் மூன்றடுக்கியேனும் வருவது.*

**ஆசிரியத்துறை** - *அகவற்பாவினத்துளொன்று, அஃது எனைத்துச் சீரானும் வருமடி நான்குடைத்தாய் ஈற்றயலடி குறைந்தேனுமிடை மடங்கியேனு முதலடியுமூன்றாமடியுங் குறைந்தேனும் வரும்.*

**ஆசிரியநிலைவிருத்தம்** - *அடிமறியாதேவருவது.*

**ஆசிரியமண்டலவிருத்தம்** - *அடிமடியாகவருவது.*

**ஆசிரியப்பா, ஆசிரியம்** - *ஐந்துபாவினொன்று அஃது அகவல், இணக்கம், உடன்பிடிக்கை, உபத்திரவம், இருத்தல், கொளுகொம்பு.*

**ஆசிரியவசனம்** - *குருவாக்கியம், பதினான்குரையிலோருரை.*

**ஆசிரியவிருத்தம்** - *ஓர் கவி, அகவற் பாவினத்துளொன்று, அஃது அள பொத்தகழி நெடிலடிநான்கினான் வருவது.*

**ஆசிரியவுரிச்சீர்** - *அகவற்குரியசீர்.*

**ஆசிரியன்** - *உவாத்தி, குரு, நுலாசிரியன்.*

**ஆசிலேடம்** - *ஆலிங்கனம்.*

**ஆசினி** - *ஆகாயம், ஈரப்பலா, மரவயிரம், மரவுரி.*

**ஆசீயம்** - *கருஞ்சீரகம்.*

**ஆசீர்வசனம்** - *ஆசிகூறல்.*

**ஆசீர்வாதம்** - *வாழ்த்து.*

**ஆசீவகர்** - *சமண்முனிவர்.*

**ஆசீவம், ஆசீவனம்** - *சீவனம்.*

**ஆசு** - *அற்பம், இருகுறணேரிசை முன்னிற்பது, இலக்கு, கவசம், குற்றம், கைக்கவசம், சடுதி, நாற்கவியினொன்று, முப்பத்திரண்டு பாஷாணத்தொன்று, ஆசுமணை, கைக்கருவி, பற்றாசு, வெண்பாவினிடையிட்டுக் கொண்ட சொல்.*

**ஆசுகம்** - *அம்பு, காற்று, பறவை.*

**ஆசுகவி** - *நாற்கவியினொன்று அஃது பொருளடி பாவணி முதலியன கொடுத்து மற்றொருவன் பாடுகவெனப் பாடுங்கவி.*

**ஆசுகன்** - *காற்று.*

**ஆசுகி** - *புட்பொது.*

**ஆசுபத்திரி** - *ஓர்மரம்.*

**ஆசுமணை** - *நூல்சுற்றுங்கருவி.*

**ஆசுரதம்** - *சம்மதித்தல்.*

**ஆசுரம்** - *பெண்ணுக்குஞ் சுற்றுத்துக்கும் வேண்டுவன கொடுத்துக் கொள்ளும் மணம்.*

**ஆசுரவைத்தியம்** - *இரணவைத்தியம்.*

**ஆசுரி** - *இரணவைத்தியன்.*

**ஆசுவயம்** - *வேதநுட்பம்.*

**ஆசுவயுசி** - *யாகமிருபத்தொன்றினொன்று.*

**ஆசுவலாயநீயம்** - *உபநிடதம் முப்பத்திரண்டினொன்று.*

**ஆசுவினம், ஆசுவீசம்** - *ஐப்பசிமாதம், ஐப்பசி.*

**ஆகுசம்** - *சூதகம்.*

**ஆசூடனம்** - *உரிஞுதல்.*

**ஆசெதுகை** -*ஆசிடை யிட்டெதுகை.*

**ஆசேசனம்** - *தெளித்தல்.*

**ஆசை** - *திசை, பொன், மனத்தீக்குணம் மூன்றினொன்று, மாயை யாக்கைபதினெண்குற்றத்தொன்று, விருப்பம், அன்பு, நீளம்.*

**ஆசைப்பெருக்கம்** - *அவா.*

**ஆசையறுத்தல்** - *மனதினற்குணந் நான்கினொன்று, அஃதுவிருப்பகற்றல்.*

**ஆசோத்தியம்** - *ஆயாசமின்மை.*

**ஆசோதை** - *இளைப்பாறல்.*

**ஆசௌசம்** - *அசுத்தம், ஆசூசம், தீட்டு.*

**ஆச்சரியம்** - *அதிசயம்.*

**ஆச்சா** - *ஓர் மரம்.*

**ஆச்சாட்டு** - *சிற்றீரம்.*

**ஆச்சாதம், ஆச்சாதனம்** - *உறை, புடைவை, மூடி, மேலங்கி.*

**ஆச்சி** - *தாய்.*

**ஆச்சிபூச்சி** - *ஓர் விளையாட்டு.*

**ஆச்சியம்** - *நெய்.*

**ஆச்சிரமம்** - *நிலை, பன்னசாலை.*

**ஆச்சிரமி** - *ஆச்சிரமத்தையுடையோன்.*

**ஆச்சிரயம்** - *ஒருவனையடுத்திருத்தல்.*

**ஆச்சிராமம்** - *ஆளுகைசெல்லுமிடம்.*

**ஆச்சிலை** - *கோமேதகம்.*

**ஆச்சுரிதகம்** - *குதிரைக்கனைப்பு, நொடித்தல்.*

**ஆச்சேதம், ஆச்சேதனம்** - *நறுக்குதல், வெட்டுதல்.*

**ஆச்சோதனம்** - *வேட்டை.*

**ஆஞ்சனேயன்** - *அனுமான்.*

**ஆஞ்சான்** - *அந்தரிப்பாயசைவது, கட்டிச்சாம்புங்கயிறு, நிறுக்குங் கருவிகளின் கயிறு, மரக்கலப்பாய் கட்டுங்கயிறு.*

**ஆஞ்சி** - *அலையல், ஏலம், கூத்து, சோம்பல், விளையாடல்.*

**ஆஞ்சில்** - *ஓர் விதப்பூடு.*

**ஆஞ்செலகை** - *கப்பல், தெப்பம்.*

**ஆஞ்ஞை** - *ஆஞ்ஞை ஆறாதாரத் தொன்று, அஃது நெற்றித்தானம்.*

**ஆடகத்தி** - *குங்குமபாஷாணம்.*

**ஆடகம்** - *துவரை, நால்வகைப் பொன்னுளொன்று, பொன்.*

**ஆடகி** - *துவரை.*

**ஆடகூடம்** - *செப்புமலை.*

**ஆடம்** - *இருபதுகொத்துக் கொண்ட ஓரளவு.*

**ஆடம்பரம்** - *இடம்பம், வேடிக்கை, கண்மடல், கோபம், சந்தோஷம், துவக்கம், பெருமை, போர்ப்பறை, யானை பிளிறொலி.*

**ஆடரி** - *சுப்பிரமணியன்.*

**ஆடல்** - *அசைதல், குளித்தல், கூத்தாடல், செய்தல், சொல்லல், நயச்சொல், புணர்தல், பொருதல், விளையாடல், கூத்து, வார்த்தை, விசயம்.*

**ஆடவர்** - *ஆண்மக்கள், இளையோர், பிராயம் முப்பத்திரண்டிற்குந் நாற் பத்தெட்டிற்கு மிடைப்பட்டவர் இவர் மன்னரெனவும் படுவர், புருடர்.*

**ஆடவவிருத்தம்** - *வயதுநாற்பத் தெட்டிற்கும் அறுபதிற்குமுடான பருவம், இஃது மூத்தோனெனவும் படும்.*

**ஆடவள்** - *பெண், விருத்தை.*

**ஆடவன்** - *புருடன், வயது முப்பத்தின் மேல் நாற்பத்தெட்டுக்குட்பட்ட வன்.*

**ஆடவை** - *மிதுனவிராசி, ஏவல், பெண்.*

**ஆடாதோடை** - *பாவட்டை.*

**ஆடி** - *உத்திராடநாள், ஓர் மாதம், கண்ணாடி, காற்று.*

**ஆடிப்பட்டம்** - *ஆடிப்பருவத்திற் பயிரிடல்.*

**ஆடு** - *அசம், ஆடென்னேவல், மறி யாடு, மேடவிராசி, வெற்றி, கூத்து, கூர்மை.*

**ஆடுகால்** - *துலாநிற்குமரம்.*

**ஆடுதல்** - *ஆடல்.*

**ஆடுதின்னாப்பாலை** - *ஓர் கொடி.*

**ஆடுதொடை** - *தொடையின் கீழ்ப் புறம்.*

**ஆடுபந்தர்** - *நடைப்பந்தர்.*

**ஆடுமாலை** - *ஓரிடத்துந்தரித்திராதவர்.*

**ஆடூஉ** - *ஆண்மகன்.*

**ஆடூவறிசொல்** - *ஆண்பால்மொழி.*

**ஆடை** - *சித்திரைநாள், சீலை, பால் முதலியவற்றினாடை, போர்வை.*

**ஆடையொட்டி** - *ஒட்டுப்புல், சீலைப் பேன்.*

**ஆடோபம்** - *பெருமை, வாயு.*

**ஆட்காட்டி** - *ஓர் புள், சுட்டுவிரல்.*

**ஆட்கொல்லி** - *கொலைகாரன், பணம்.*

**ஆட்கொள்ளுதல்** - *அடிமைக் கொள் ளுதல், உருக்கொள்ளுதல்.*

**ஆட்சபணம்** - *உபவாசம்.*

**ஆட்சபாடிகன்** - *நியாயாதிபதி.*

**ஆட்சபாதன்** - *தருக்கசாத்திரி.*

**ஆட்சாரணம்** - *குற்றச்சாட்டு, நிந்தனை.*

**ஆட்சாரம்** - *குற்றச்சாட்டு.*

**ஆட்சி** - *ஆண்மை, ஆளுகை, உரிமை, நிலையினொன்று, நன்னிமித்தம், பழக்கம், முயற்சி.*

**ஆட்சேபகம்** - *குற்றச்சாட்டு, நோய், வலி.*

**ஆட்சேபனம்** - *எதிர்நியாயம்.*

**ஆட்சேபம்** - *தடைபண்ணுதல், நியாயத்தைத் திரும்பத்திரும்பக் கொடுத்தல், வழக்குரைத்துத் தள்ளுதல்.*

**ஆட்சேபித்தல்** - *தடை, மறுத்தல்.*

**ஆட்டமடித்தல்** - *ஓர் விளையாட்டு.*

**ஆட்டம்** - *அசைவு, அலைவு, உவமையுருபு, சூதாடுதல், சூதுமுதலியவற்றினோமுறைவிளையாட்டு, தன்மை.*

**ஆட்டல்** - *அசைத்தல், கூத்தாட்டுதல், நடப்பித்தல்.*

**ஆட்டி** - *ஆட்டுவோன், தலைவி, பெண்.*

**ஆட்டு** - *அலைப்பு, ஆடுந்தன்மை, ஆட்டுந்தன்மை, ஆட்டென்னேவல், கூத்து, தத்துவம்.*

**ஆட்டுக்கல்** - *அமுத பாஷாணத்தினொன்று.*

**ஆட்டுக்காற்கல்** - *கொக்கைக்கல்.*

**ஆட்டுதல்** - *ஆடச்செய்தல்.*

**ஆட்டுவாகனன்** - *அக்கினிதேவன்.*

**ஆட்டுவாணிபன்** - *கசாப்புக்காரன்.*

**ஆட்டை** - *ஆண்டு.*

**ஆட்படுதல்** - *அடிமைப்படுதல், தலைப்படுதல்.*

**ஆணம்** - *அன்பு, ஆணவம், குழம்பு, கொள்கலம்.*

**ஆணர்** - *நன்மை, பாணர், வளமை.*

**ஆணவமலம்** - *அறியாமை, சுபாபமயக்கம், மும்மலத்தொன்று, மூலமலம், அஃது உடம்பையானென்றிருக்கை.*

**ஆணவம்** - *ஆங்காரம், நான்பெரியவனென்கிறகுணம், மூலமலம்.*

**ஆணாள்** - *ஆண்டன்மையுடைய பெருநாள்.*

**ஆணி** - *உரையாணி, எழுத்தாணி, காயாணி, தைக்கிறவாணி, முதன்மை, மேன்மை, எல்லை, வாளலகு.*

**ஆணிக்குருகு** - *அடிக்குருகு.*

**ஆணிச்சீ** - *மூலச்சிதல்.*

**ஆணித்தங்கம்** - *உயர்ந்தபொன்.*

**ஆணித்தரம்** - *முதற்றரம்.*

**ஆணிமுத்து** - *வயிரமுத்து.*

**ஆணெழுத்து** - *குற்றெழுத்து.*

**ஆணை** - *அடையாளம், ஏவல், சத்தியம், சபதம், தடுத்தல், நிண்ணயம், மெய், வெற்றி.*

**ஆணையாசக்கரம், ஆணையாசக்கிரம்** - *அரசாட்சித் தத்துவம்.*

**ஆணையிடுதல்** - *சத்தியம்பண்ணல்.*

**ஆணைவழிநிற்றல்** - *வேளாண்மை மாந்தரியல்புளொன்று.*

**ஆண்** - *ஆண்பாற்பொது, ஆண்மகன், தலைமை.*

**ஆண்குமஞ்சான்** - *குங்குலியம்.*

**ஆண்குறி** - *ஆடவக்குறி.*

**ஆண்டகை** - *இராசா, சிறந்தோன், வீரன்.*

**ஆண்டகைமை** - *ஆண்டன்மை, வீரம்.*

**ஆண்டண்டு** - *காதிற்புறவருகு.*

**ஆண்டலை** - *கோழி, படைத்தலைவன்.*

**ஆண்டலைக்கொடியோன்** - *குமரன்.*

**ஆண்டவன்** - *அரசன், ஆளுகைசெய்கிறவன், எசமான், கடவுள்.*

**ஆண்டளப்போன்** - *வியாழம்.*

**ஆண்டி** - *தவசி, பண்டாரம், யாசகி.*

**ஆண்டிச்சி** - *பண்டாரத்தி.*

**ஆண்டு** - *அவ்விடம், வருடம்.*

**ஆண்டை** - *அவ்விடம், எசமான்.*

**ஆண்டையர்** - *மனிதர்.*

**ஆண்டொழின்மைந்தன்** - *அருச்சுனன்.*

**ஆண்பால்** - *ஆண்பகுதி, புல்லிங்கம்.*

**ஆண்பாற்பிள்ளைக்கவி** - *காப்பு முதற் சிறுதேரீறாய்ச் சொல்லப் படும் பத்துறுப்புக்களும் பப்பத்து விருத்தத்தான் முடியப் பாடுவது.*

**ஆண்மகன்** - *ஆணிற்சிறந்தோன், மகன், மனிதன்.*

**ஆண்மரம்** - *அகவயிரமுள்ளமரம், செம்மரம்.*

**ஆண்மாரி** - *மூர்க்கமுடையாள்.*

**ஆண்மை** - *ஆண்டன்மை, திடன், மனமுயற்சி, மெய், வலி.*

**ஆண்மைச்சினைப்பெயர்** - *ஆண் பாலையே விளக்கிநிற்குஞ் சினைப் பெயர், (உம்) முடவன்.*

**ஆண்மைச்சினைமுதற்பெயர்** - *ஆண் பாலையே விளக்குஞ்சினை முதற் பெயர் (உம்) முடக்கொற்றன்.*

**ஆண்மைமுதற்பெயர்** -*ஆண் பாலையே விளக்கி நிற்குமுதற் பெயர், (உம்) சாத்தன்.*

**ஆண்மைமுறைப்பெயர்** - *ஆண் பாலையே விளக்கிவரு முறைப் பெயர் (உம்) தந்தை.*

**ஆண்வழி** - *தந்தைவழி.*

**ஆதங்கம்** - *ஆபத்து, உபத்திரவம், கலகம், தீங்கு, காய்ச்சல், நோய், பயம், பறையொலி.*

**ஆதஞ்சனம்** - *அழித்தல், உபத்திரவம், உறையிடல், தீவிரம், பஸ்ம மாக்கல்.*

**ஆதண்** - *நோய், வருத்தம்.*

**ஆதண்டை** - *காற்றோட்டி.*

**ஆதபத்திரம்** - *குடை.*

**ஆதபம், ஆதவம்** - *ஒளி, குடை, வெயில்.*

**ஆதபவாரணம்** - *குடை.*

**ஆதபன்** - *சூரியன்.*

**ஆதம்** - *ஆதரவு, கூந்தற்பனை, விருப்பு.*

**ஆதரம்** - *அன்பு, ஆசை, ஊர், சங்கிப்பு, சிலம்பு, கேள்வு, சங்கை, துவக்கம்.*

**ஆதரவு** - *அன்பு, தாபரம், விருப்பம்.*

**ஆதரவுசெய்தல்** - *அன்புபண்ணுதல், தாங்குதல்.*

**ஆதரிசம்** - *பளிங்கு, வியாத்தி.*

**ஆதரிசனம்** - *கண்ணாடி.*

**ஆதரித்தல்** - *அன்புவைத்தல், சங்கித் தல், தாபரித்தல்.*

**ஆதர்** - *அறிவிலார், குருடர்.*

**ஆதலை** - *உதவி, தாபரிப்பு.*

**ஆதல்** - *ஆகுதல், கல்விநூல், கூத்து, தெரிதல், நுணுக்கம்.*

**ஆதவம்** - *ஒளி.*

**ஆதவன்** - *சூரியன், பார்ப்பான்.*

**ஆதளை** - *ஆமணக்கு, மாதளை, ஆயாசம்.*

**ஆதனம்** - *ஆசனம், சீலை, நிலைமை, பார்வை, விசாலம்.*

**ஆதன்** - *அறிவிலான், உயிர், குரு, குருடன், அருகன்.*

**ஆதாயம்** - *இலாபம், நன்மை.*

**ஆதாரகாரகம்** - *தானப் பொருளைக் காட்டு முருபுடைப்பெயர்.*

**ஆதாரம்** - *அடி, அத்திபாரம், ஈடு, உடல், காக்குதல், தாபரம், நிலை, மழை, தானம், பாத்தி, வாய்க்கால்.*

**ஆதாளி** - *இரைச்சல், கலக்கடி, சத்தம், புரட்டல், வீம்புபேசல்.*

**ஆதாளித்தல்** - *ஆயாசப்படுதல்.*

**ஆதானம்** - *இஸ்தாபனம், ஈடு, ஏற்றுக் கொள்ளுதல், சங்கற்பித்தல், பெறுதல்.*

**ஆதானிகம்** - *கருப்பாதானம்.*

**ஆதி** - *இறைவன், எப்பொருட்கு மிறைவன், ஓர் தாளம், கடவுள், சூரியன், நேரோடல், பழமை, பிரதானம், மண்டிலமாயோடல்,*

*மிருதபாஷாணம், முதல், அதிசியம், இடம், ஈடு, எழுவாய், சூத்திரம், தொன்மை வனப்பு, அஃது பழங் கதை கூறுதல், மனவிருப்பம்.*

**ஆதிகடுஞ்சனி** - *மகம்.*

**ஆதிகம்** - *சிறுகுறிஞ்சா.*

**ஆதிகரன்** - *பிரமன்.*

**ஆதிகாரணகாரியம்** - *முதற்காரியத் தாற் காரியப்படுவது.*

**ஆதிகாரணம்** - *முதற்காரணம்.*

**ஆதிகாரணவகத்திணை** - *முதற் காரணவகத்திணை, (உம்) மண் ணாலாய குடம்.*

**ஆதிக்கடுஞ்சாரி** - *நவச்சாரம்.*

**ஆதிக்கம்** - *உயர்ச்சி, முதன்மை.*

**ஆதிக்கல்பேதம்** - *அன்னபேதி.*

**ஆதிக்கன்** - *பெரியவன், மேன்மகன்.*

**ஆதிக்குடி** - *சவர்க்காரம்.*

**ஆதிக்குரு** - *முப்பூ, அஃது பஞ்ச லோகங்களைப் பேதிக்கச் செய்வது.*

**ஆதிசாரம்** - *சிற்பநூன் முப்பத்தி ரண்டினொன்று.*

**ஆதிசைவம்** - *சைவம்பதினாறி னொன்று.*

**ஆதிச்சரக்கு** - *சூதம்.*

**ஆதிச்சனி** - *மகநாள்.*

**ஆதிட்டம்** - *சேடம்.*

**ஆதிட்டி** - *பிரமசாரி.*

**ஆதிதாரணம்** - *ஈடு.*

**ஆதிதேவன்** - *நாராயணன்.*

**ஆதித்தமணி** - *சூரியன், முத்து.*

**ஆதித்தமண்டலம்** - *மும்மண்டலத் தொன்று, அஃது இதயகமல முதற் கண்டத்தானமளவும்.*

**ஆதித்தம்** - *காவிக்கல், துருசு.*

**ஆதித்தர்** - *வானோர்.*

**ஆதித்தன்** - *சூரியன்.*

**ஆதித்தன்கூர்மை** - *இலவண பாஷாணம்.*

**ஆதித்தன்மத்திமச்சா** - *ஆதித்தனுக்குக் கற்கடக முதலாறிராசியிற் கண்டசா.*

**ஆதித்தியசா** - *ஆதித்தனுடையசா வாக்கியம்.*

**ஆதித்தியம்** - *உபசரணை, கவனித்தல்.*

**ஆதித்தியன்** - *சூரியன், தேவன்.*

**ஆதிநாதர்** - *நவநாதசித்தரிலொருவர்.*

**ஆதிநூல்** - *முதனூல், வேதம்.*

**ஆதிபத்தியம்** - *அதிகாரம், தலைமை.*

**ஆதிபன்** - *இராசா, எப்பொருட்கு மிறைவன்.*

**ஆதிபத்தியம்** - *தத்துவம், மகத்துவம்.*

**ஆதிபுங்கவன்** - *அருகன்.*

**ஆதிபுங்கவன்** - *கடவுள், அருகன்.*

**ஆதிபூதம்** - *அதிட்டான பூதம்.*

**ஆதிபோகம்** - *ஈடுவைத்ததைப் பாவித் தல்.*

**ஆதிமகாகுரு** - *துரிசு.*

**ஆதிமகாநாதம்** - *உலோகமணல்.*

**ஆதிமடக்கு** - *ஓரலங்காரம்.*

**ஆதிமுதல், ஆதிமூலம்** - *எல்லாவற் றிற்குமுன், முதன்முதல், கடவுள்.*

**ஆதிமூர்த்தி, ஆதியங்கடவுள்** - *கடவுள், அருகன்.*

**ஆதியந்தம்** - *அடிமுடி, முதற்றொ டங்கி முடியுமட்டும்.*

**ஆதியரிவஞ்சம்** - *போகபூமியாறி னொன்று.*

**ஆதியெழுத்து** - *முதலெழுத்து, அஃது உயிர்பன்னிரண்டு மெய் பதி னெட்டும்.*

**ஆதியொடிடைமடக்கு** - *ஓரலங்காரம், அஃது நான் கடிகளுளடியின் முத லினுமிடையினு மடக்கு வருவது.*

**ஆதியொடுகடைமடக்கு** - *அஃது அடி களுள்முதலும்கடைமக்கிவருவது, ஓரலங்காரம்.*

**ஆதிரம்** - *நெய்.*

**ஆதிரவிச்சிலை** - *காவிக்கல்.*

**ஆதிரன்** - *பெரியோன்.*

**ஆதிராச்சியம்** - *ஏகாதிபத்தியம்.*

**ஆதிரை** - *திருவாதிரை.*

**ஆதிரௌத்திரம்** - *சௌவீரம்.*

**ஆதிவராகன்** - *விட்டுணு.*

**ஆதிவருணர்** - *பார்ப்பார்.*

**ஆதிவிந்து** - *நீலபாஷாணம், மழை.*

**ஆதிவிராகன்** - *அருகன், சிவன், சோரபாஷாணம்.*

**ஆதிவிராட்டியம்** - *வெள்ளைப் பாஷாணம்.*

**ஆதிவிருத்திசந்தி** - *மொழிக்கு முதனின்றஇ-ஈ-ஏ-ஐயாகவும் உ-ஊ-ஒ- ஔவாகவும் அகரம் ஆகார மாகவும் இரு ஆராகவுந்திரிவது.*

**ஆதீபனம்** - *கோலஞ்செய்தல்.*

**ஆதீனம்** - *ஆஸ்தி, உடைமை, உரிமை, வமிசம், ஆளுகை.*

**ஆதினவம்** - *கீழ்ப்படியாமை, மீறுதல்.*

**ஆது** - *ஆறனுருபு, யானையைப் பாகர் தட்டுமோசை, தெட்பம்.*

**ஆதுரம்** - *அவா, நோய்.*

**ஆதுரன்** - *ஆசையுற்றோன், நோயுற் றோன்.*

**ஆதுலர்க்குச்சாலையளித்தல்** - *அற முப்பத்திரண்டினொன்று.*

**ஆதுலன்** - *தரித்திரன்.*

**ஆதுவம்** - *கள்.*

**ஆதெரிசம்** - *கண்ணாடி.*

**ஆதேசம்** - *ஆதாயம், திரிபு, ஒழுங்கு, கீரகசாரம், பதில், புத்தி.*

**ஆதேயம்** - *ஆதாயம், தாங்கப்படுவது.*

**ஆதொண்டை** - *காற்றோட்டி.*

**ஆதோரணர்** - *துரத்துகிறவர்கள், யானைப்பாகர்.*

**ஆத்தன்** - *கடவுள், கூட்டாளி, சங்காத்தி, சினேகிதன், தோழன், பெரியவன், அருகன், சிவன்.*

**ஆத்தா** - *அணிநுணா.*

**ஆத்தாடியுள்ளான்** - *ஓர் குருவி.*

**ஆத்தாள்** - *தாய், பார்ப்பதி*

**ஆத்தானம்** - *ஆபத்து, கோபுரவாயில், தருமசவை.*

**ஆஸ்தானம்** - *கொலு, கோபுரவாயில், மண்டபம், நீதித்தலம்.*

**ஆஸ்தி** - *ஆதனம், சம்பத்து, பாக்கியம்.*

**ஆத்தி** - *ஒருமரம்.*

**ஆத்திசூடி** - *சிவன்.*

**ஆத்தியன்** - *சிவன்.*

**ஆத்தியோபாந்தம்** - *ஆதியந்தம்.*

**ஆத்திரதம்** - *இஞ்சி.*

**ஆத்திரம், ஆத்திரவம், ஆத்திரி, ஆத்திரியம்** - *ஆவத்து.*

**ஆத்துமகத்தியை, ஆத்துமகன்னம்** - *தற்கொலை.*

**ஆத்துமகம்** - *பிறத்தல்.*

**ஆத்துமகாதம்** - *தற்கொலை.*

**ஆத்துமசந்தேகம்** - *உள்ளையம்.*

**ஆத்துமசன்** - *மகன்.*

**ஆத்துமஞானம்** - *ஆத்துமாவையறிதல்.*

**ஆத்துமசுத்தி** - *பஞ்சசுத்தியினொன்று.*

**ஆத்துமசை** - *மகள்.*

**ஆத்துமஞ்ஞன்** - *தன்னையுந் தலை வனையுமறிபவன்.*

**ஆத்துமதரிசம்** - *பளிங்கு.*

**ஆத்துமதரிசனம்** - *ஆத்துமநிலை யறிதல்.*

**ஆத்துமபுத்தர்** - *பூனைக்காலி.*

**ஆத்துமபுத்தி** - *சீவசாட்சி, சுயவறிவு, தன்னறிவு.*

**ஆத்துமம், ஆற்றுமம், ஆத்துமா, ஆற்றுமா** - *பிராணன், மனம்.*

**ஆத்துமயோனி** - *காமன், சிவன், பிரமன், விட்டுணு.*

**ஆத்துமலட்சணம்** - *ஆத்துமாவின்சுபாவக்குணம், அஃது அனந்தம், சத்து, சித்து.*

**ஆத்துமவசம்** - *தன்னடக்கம்.*

**ஆத்துமா** - *கரடிக்குட்டி, அறிவு, ஆன்மா, உடல், உறுதி, காற்று, சீவன், சுபாபம், சூரியன், தீ, பிரமன், புத்தி, மகன்.*

**ஆத்தை** - *ஈன்றாள்.*

**ஆநின்று** - *நிகழ்காலவிடைச்சொல், (உம்) நடவாநின்றான்.*

**ஆந்திகை** - *அக்காள்.*

**ஆந்தரங்கம்** - *இரகசியம், உச்சிதம்.*

**ஆந்திரம்** - *ஓர்பாடை, சாதிநான்கினொன்று, தேயமன்பத்தாறினொன்று, மரணம்.*

**ஆந்தை** - *ஓர்பறவை, பஞ்சபட்சியினொன்று.*

**ஆபகை** - *ஆறு.*

**ஆபச்சைவன்** - *அட்டவசுக்களிலொருவன்.*

**ஆபணம்** - *கடை, கடைவீதி.*

**ஆபணியம்** - *கடைவீதி.*

**ஆபதம்** - *ஆபத்து.*

**ஆபதோத்தாரணன்** - *வயிரவன்.*

**ஆபத்தம்** - *பிரதிட்டை.*

**ஆபத்தம்பம்** - *தருமநூல்பதினெட்டினொன்று.*

**ஆபத்து, ஆவத்து** - *அவசரம், பெரியதேவை, மிகுவருத்தம்.*

**ஆபந்தம்** - *அலங்காரம், உருக்கம், கட்டு, நுகம்.*

**ஆபரணக்கடைப்புணர்வு** - *பின்கோக்கி.*

**ஆபரணம்** - *சீலை, பூணாரம், சத்தாவத்தையினொன்று, அஃது இருபத்தைந்து தத்துவங்களையுமொன்றற்கொன்று பேதந்தெரியவொட்டாமல் மறைத் திருப்பது.*

**ஆபற்சன்னியாசம்** - *ஆபத்துக்காலத்திற்பெறுந்துறவு.*

**ஆபனம்** - *மிளகு.*

**ஆபனிகன்** - *வேடன்.*

**ஆபாகம்** - *அடுப்பு, குயக்கலஞ்சுடுசூழை.*

**ஆபாசம்** - *போலி, மிகுவிருப்பம், எண்ணம், நியாயம், பிரவை, பொய்.*

**ஆபாதசூடம்** - *உச்சிதொடங்கியுள்ளங்கால்மட்டும்.*

**ஆபாதமத்தகம், ஆபாதமத்தம்** - *பாதாதிகேசம்.*

**ஆபாடம்** - *பாயிரம்.*

**ஆபாலி** - *பேன்.*

**ஆபானம்** - *மதுக்கடை.*

**ஆபிலவனம்**-*நீர்தெளித்தல், முழுகுதல்.*

**ஆபீரன்** - *இடையன்.*

**ஆபீனம்** - *சிற்பர்வீதி, பசுவின்மடி, கிணறு, கொழுப்பு.*

**ஆபூடம்** - *துத்தநாகம்.*

**ஆபூப்பியம்** - *மா.*

**ஆபோகம்** - *அனுபவம், பாம்பின்படம், பூரணம், முயற்சி.*

**ஆபோசனம்** - *போசனம்.*

**ஆபோதனம்** - *அறிவு, போதித்தல்.*

**ஆப்பம்** - *கும்பவிராசி.*

**ஆப்பி** - *சாணி.*

**ஆப்பிரச்சனம்** - *வழியுபசாரம்.*

**ஆப்பு** - *மரம்பிளக்குங்கருவி.*

**ஆப்பேறல்** - *ஆப்பேறினபிரிவு.*

**ஆமசிராத்தம்** - *பச்சைப்படி கொடுக்கிறசிராத்தம்.*

**ஆமசூலை** - *வயிற்றுவலி.*

**ஆமணக்கமுத்து** - *ஆமணக்கங்கொட்டை.*

**ஆமணக்கு** - *ஓர் செடி.*

**ஆமணத்தி** - *கோரோசனை.*

**ஆமண்டம்** - *ஆமணக்கு.*

**ஆமம்** - *ஓர் நோய், பச்சை, நோய், மலவரட்சி.*

**ஆமயம்** - *சாணி, நோய்.*

**ஆமயாவித்துவம்** - *அசீரணம்.*

**ஆமரி** - *வசனம்.*

**ஆமலகமலம்** - *ஆகாசதாமரை.*

**ஆமலகம்** - *நெல்லிமரம், பளிங்கு.*

**ஆமல்** - *மூங்கில்.*

**ஆமா** - *காட்டுப்பசு.*

**ஆமாகோளம்** - *கடுக்காய்ப்பூ.*

**ஆமாங்கு** - *ஆம்படி, தகுதி, விபரீதம்.*

**ஆமாசயம்** - *இரைக்குடா, சமித்தல.*

**ஆமாதிசாரம்** - *வயிற்றுளைவு.*

**ஆமாத்தியா** - *ஆலோசனைக்காரர், குரு, தந்திரிகள், வைத்தியர்.*

**ஆமிசம்** - *அனுபவம், இச்சித்தல், கைக்கூலி, போசனம், மாமிசம், விருப்பம்.*

**ஆமிரம்** - *மாமரம், புளிப்பு.*

**ஆமிரேடனம்** - *கூறியது கூறல்.*

**ஆமிலம்** - *புளிப்பு, புளியமரம்.*

**ஆமிலிகை** - *புளி, புளிப்பு.*

**ஆமுகம்** - *துவக்கம், முகனை.*

**ஆமுகர்** - *நந்திதேவர்.*

**ஆமுத்தி** - *மோக்கம்.*

**ஆமுத்து** - *ஆவின்பல்லிற்பிறந்த முத்து.*

**ஆமுநாயம்** - *பாரம்பரை, வேதம்.*

**ஆமூலாக்கிரம்** - *வேர்முதற்கிளை பரியந்தம்.*

**ஆமேற்பில்லூரி** - *கடுக்காய்ப்பூ.*

**ஆமோசனம்** - *காலுதல், பிரகாசித்தல்.*

**ஆமை** - *இராசசின்னத்தொன்று, கூர்மம், வாசனை.*

**ஆமையாழ்** - *செல்வழியாழ்த்திறம்.*

**ஆமோதம்** - *உவகை, மிகுமணம்.*

**ஆம்** - *ஆமெனல், இடைச்சொல், ஈரம், உவமையுருபு, நீர், தன்மை முன்னிலையுளப் பாட்டுப்பன்மை வினைவிகுதி (உம்) சொல்வாம் அசைச்சொல் (உம்) பணியுமாம்.*

**ஆம்பலரி** - *சூரியன், முதலை.*

**ஆம்பல்** - *அல்லி, இசைக்குழல், ஊதிடு கொம்பு, கள், சந்திரன், துன்பம், பண், மூங்கில், யானை, அடைவு, ஓரெண்.*

**ஆம்பி** - *இறைகூடை, ஒலி, காளான்.*

**ஆம்பியம்** - *இரதம்.*

**ஆம்பிரம்** - *புளிப்பு, புளிமா, மாமரம்.*

**ஆம்பிலம்** - *கள், புளிப்பு, புளியமரம்.*

**ஆம்பு** - *காஞ்சொறி.*

**ஆம்புலம்** - *சூரை.*

**ஆம்பூறு** - *சுரை.*

**ஆயக்கல்** - *காரக்கல்.*

**ஆயசம்** - *ஆயுதம், இரும்பு.*

**ஆயதம்** - *அகலம், நீளம், முட்டை வடிவம்.*

**ஆயதனம்** - *பலிபீடம், வாசம் வீட்டி னுட்டளம்.*

**ஆயதி** - *எதிர்காலம், நீளம், பொருத்து, மகத்துவம், மனக்கட்டு.*

**ஆயத்தம்** - *எத்தனம்.*

**ஆயத்தி** - *உருக்கம், எல்லை, நன் னடை, நாள், நீளம், பெலன்.*

**ஆயத்துறை** - *தீர்வைத்துறை.*

**ஆயமுக்கரவன்** - *குபேரன்.*

**ஆயம்** - *ஆதாயம், கடமை, சுங்கம், சூதாடுகருவி, சூதுதாயம், தாய், தோழி, நாணி, நீளம், மகளிர் கூட்டம், மல்லரி, வரவு, வழக்கம்.*

**ஆயர்** - *இடையர்.*

**ஆயனம்** - *ஆண்டிற்பாதி, வருடம்.*

**ஆயாசம்** - *இளைப்பு, சோர்வு, தயிரியக்கெடு, துக்கம், முயற்சி.*

**ஆயாமம்** - *அகலம், நீளம்..*

**ஆயாள்** - *வளர்க்குந்தாய், தாயைப் பெற்றவள், தாய்.*

**ஆயானம்** - *சுபாபக்குணம்.*

**ஆயி** - *தாய்.*

**ஆயிரங்கண்ணன்** - *இந்திரன்.*

**ஆயிரங்கதிரோன், ஆயிரங்கிரணன்** - *ஆதித்தன்.*

**ஆயிரஞ்சோதி** - *சூரியன்.*

**ஆயிரநாமன்** - *சிவன், திருமால்.*

**ஆயிரம்** - *பத்துநூறு.*

**ஆயிலியம்** - *ஓர் நாள்.*

**ஆயில்** - *ஆயிலியநாள், ஓர்மரம்.*

**ஆயிளை** - *கொடுவாட்டலை.*

**ஆயிழை** - *பெண்.*

**ஆயினிமேனி** - *பச்சைக்கல்.*

**ஆயினும்** - *இடைச்சொல்.*

**ஆயு, ஆயுகம், ஆயுசு, ஆயுள்** - *வயது, வைத்தியம்.*

**ஆயுண்மான்** - *நித்தியயோகத்தொன்று.*

**ஆயுதபரிட்சை** - *படைக்கலப்பயிற்சி.*

**ஆயுதபூசை** - *படைக்கலப்பூசை.*

**ஆயுதம்** - *உபகரணம், படைக்கலப் பொது.*

**ஆயுதாகாரம்** - *ஆயுதசாலை.*

**ஆயுரு** - *பரிகாரவித்தை.*

**ஆயுர்வேதம்** - *ஆயுள்வேதம்*

**ஆயுவின்மை** - *ஈச்சுரனெண்குணத் தொன்று, அஃது செனனமரண மின்மை.*

**ஆயுள்** - *வைத்தியன்.*

**ஆயுள்வேதம்** - *வைத்தியசாத்திரம்.*

**ஆயுள்வேதியர்** - *வைத்தியர்.*

**ஆயே** - *ஓர் வியப்புச்சொல்.*

**ஆயோகம்** - *கரை, பூசனை.*

**ஆயோசனம்** - *பிடித்தல், முயற்சி.*

**ஆயோதம், ஆயோதனம்** - *சேனை, போர்.*

**ஆய்** - *ஆயென்னேவல், இடையர்க் குரியது, முன்னிலை யொருமை விகுதி, ஏவல்விகுதி, (உம்) கேளாய், ஓர்விளியுருபு (உம்) கிள்ளாய் தாய் முன்னிலை யொருமை முற்று வினைவிகுதி (உம்) சென்றாய்.*

**ஆயக்குழல்** - *வேய்ங்குழல், இடைய ரூது குழல், அஃது கொன்றையங் குழல், முல்லையங் குழல் வேய்ங் குழல்.*

**ஆய்ச்சல்** - *அச்சல், பறிப்பு.*

**ஆய்ச்சி** - *இடைச்சி, தாய்.*

**ஆய்ச்சியர்** - *இடைச்சியர்.*

**ஆய்தம்** - *அஃகேனம், சிறுமை, நுண்மை.*

**ஆய்தல்** - *ஆராய்தல் தெரிதல், தேர்தல், நுண்மை, பறித்தல்.*

**ஆய்த்தல்** - *ஆச்சுப்பார்த்தல்.*

**ஆய்ந்தோர்** - *அறிவுடையோர், பார்ப்பார், புலவர்.*

**ஆய்ப்பாடி** - *இடையரூர்.*

**ஆய்ப்பு** - *அசைப்பு, வீச்சு.*

**ஆய்மலர்** - *தாமரை.*

**ஆய்வு** - *அகலம், அழகு, ஆராய்தல், நுட்பம், வருத்தம்.*

**ஆரகம்** - *இரத்தம்.*

**ஆரகூடம், ஆரகூலம்** - *பித்தளை.*

**ஆரகேரம்** - *வாகுவலையம்.*

**ஆரகோரம்** - *கொன்றை.*

**ஆரஞா** - *அருந்துயர், துக்கம்.*

**ஆரட்சகன்** - *இடையன், சேகண்டிக் காவற்காரன்.*

**ஆரணம்** - *மங்கலச் சொல்லி னொன்று, வேதத்தின் ஞான பாகை, வேதம்.*

**ஆரணவாணர்** - *பிராமணர்.*

**ஆரணன்** - *பிரமன்.*

**ஆரணி** - *காளி, பார்பதி, சுழல்காற்று.*

**ஆரணியம், ஆரண்ணியம்** - *காடு, பற்றை.*

**ஆரதம்** - *சுத்தபோசனநிலை.*

**ஆரதி** - *ஆலாத்தி.*

**ஆரத்தியம்** - *ஒளி.*

**ஆரநாலகம், ஆரநாலரம்** - *காடி.*

**ஆரம்** - *ஆட்டதள், ஆத்திமரம், ஆபரணம், ஓர்பாணம், கடம்பு, கோடகசாலை, சந்தனமரம், சந்தனம், நந்தனவனம், படப் பொறி, பட்சிகளுடைய கழவரி, பதக்கம், பித்தளை, பூமாலை, மாதரணிவடம், முத்து, முத்து மாலை, கீச்சுக்கிட்டம், கோணம், சனி, செவ்வாய், நுனி.*

**ஆரம்பம்** - *ஒலி, துவக்கம், பேரொலி, கொலை, பாயிரம், பெருமை, முயற்சி.*

**ஆரலம்** - *பகை.*

**ஆரல்** - *ஓர் பூடு, ஓர் மீன், கார்த்திகை நாள், செவ்வாய், நெருப்பு, மதில்.*

**ஆரவம்** - *ஒலி.*

**ஆரவாரம்** - *ஒலி, கிளர்ச்சி, கொண் டாட்டம், பேரொலி.*

**ஆராதனம்** - *சமைத்தல், சம்பாத் தியம், நிறைவேற்றம், வணங்கல்.*

**ஆராதனை** - *பூசனை, வணக்கம்.*

**ஆராதி** - *சத்துரு.*

**ஆராதித்தல்** - *பூசித்தல்.*

**ஆராதியம்** - *சமீபம்.*

**ஆராத்திரியர்** - *பார்ப்பார்.*

**ஆராலிகன்** - *பாகதாரி.*

**ஆராவம்** - *ஆர்வம்.*

**ஆராதூரி** - *அழிப்புக்காரன், அழிவு.*

**ஆராதூரித்தனம்** - *அழிக்கிறகுணம்.*

**ஆராத்திரிகம்** - *ஆலாத்திவிளக்கு.*

**ஆராப்பத்தியம்** - *அரும்பத்தியம், அற்பம்.*

**ஆராமம்** - *சோலை, பூந்தோட்டம்.*

**ஆராய்ச்சி** - *ஆராய்தல், விசாரிப்புக் காரன்.*

**ஆராய்ச்சிமணி** - *இராசவாசலிலே கட்டிய வசையாமணி.*

**ஆராய்தல்** - *தெரிதல், தேடல்.*

**ஆராய்வு** - *விசாரிப்பு.*

**ஆரி** - *சோழன், மேன்மை, பார்ப்பனி, மாலை.*

**ஆரிடம்** - *ஆகமம், இருஷிகள்வாக்கு, ஒன்று இரண்டு பசுவுமெருதும் வாங்கிக் கன்னியைத் தீமுன்னர்க் கொடுக்கும் மணம், நூல், பூசை, வழக்குநிலம்.*

**ஆரிடர்** - *சமணர், முனிவர்.*

**ஆரியக்கூத்து** - *பாவைக்கூத்து.*

**ஆரிதம்** - *தருமநூல்.*

**ஆரியபுத்திரன்** - *கணவன்,குருபுத்திரன்.*

**ஆரியப்பாவை** - *சித்திரப்பாவை.*

**ஆரியம்** - *அழகு, இமையமலைக்கும் பொதியமலைக்குந்நடுத்தேசம், செல்வம், பண்டம், வடமொழி.*

**ஆரியரூபன்** - *எத்தன்.*

**ஆரியர்** - *ஆசிரியர், ஆரியதேசத் தவர், குருமார், பார்ப்பாரிலோர் பேதத்தோர், புலவர், மிலேச்சர், வைத்தியர்.*

**ஆரியவராடி** - *ஓர்பண்.*

**ஆரியவேளாகொல்லி** - *கொல்லித் திறத்தினொன்று.*

**ஆரியன்** - *அறிவுடையோன், ஐயன், குரு, சூரியன், புலவன், மிலேச்சன், வைத்தியன்.*

**ஆரியை** - *காளி, துற்கை, பார்வதி.*

**ஆரியைதனயன்** - *குமரன், வயிரவன், விநாயகன், வீரபத்திரன்.*

**ஆரீரம்** - *சிற்றீரம்.*

**ஆரு** - *குடம், நண்டு, பன்றி.*

**ஆருகதம்** - *அருகசமையம், நாவன் மரம்.*

**ஆருகதன்** - *அருகசமையத்தவன்.*

**ஆருணி** - *உபநிடதம் முப்பத்திரண்டி னொன்று.*

**ஆருதல்** - *ஆர்தல்.*

**ஆருத்திரை** - *திருவாதிரை.*

**ஆருபதம்** - *பித்தளை.*

**ஆருப்பியம்** - *வங்கமணல்.*

**ஆருவம்** - *நீர்.*

**ஆரூடம்** - *ஏறுதல்.*

**ஆரூபம்** - *அமையாமை, நீங்காமை.*

**ஆரை** - *ஓர் பூடு, புற்பாய், மதில்.*

**ஆரைப்பற்றி** - *உடும்பு.*

**ஆரோகணம்** - *ஏறுதல், கற்படி, தாழ் வாரம், எழும்புதல், ஏணி.*

**ஆரோகம்** - *அளவு, ஏறுதல், சகனம், நீளம், பாரம், மாதரிடை.*

**ஆரோக்கியம்** - *சுகம், சௌக்கியம்.*

**ஆரோபணம்** - *ஏறுதல், உயர்த்தல், ஒப்புவித்தல், நாட்டுதல், வில் வளைத்தல்.*

**ஆரோபம்** - *ஒன்றைவேறொன்றா யறிதல், சுட்டுதல், ஏறுதல், வைத்தல்.*

**ஆரோபிதம்** - *உண்டாக்கினது, நிறுத் தினது, வைத்தது.*

**ஆரோபித்தல்** - *தாபித்தல்.*

**ஆர்** - *அருமை, ஆத்தி, ஆரென் னேவல், உயர்திணைப் பன்மைப் படர்க்கை விகுதி, ஐந்துருவாணி, கூர்சோதி, தேர்ப்பண்டியகவாய், நிறைவு, பாகு, பூமி, யாரென் வினா.*

**ஆர்கதி** - *திப்பிலி.*

**ஆர்கலி** - *கடல், மழை.*

**ஆர்கவிவாரணம்** - *வெள்ளை யானை.*

**ஆர்க்கம்** - *இரத்தம், பெறுபேறு.*

**ஆர்க்கு** - *ஓர் மீன்.*

**ஆர்க்குவதம்** - *கொன்றைமரம்.*

**ஆர்க்கை** - *கட்டுதல், துரும்பு, வரிச்சு.*

**ஆர்ச்சவம்** - *உண்மை, நேர்மை.*

**ஆர்ச்சனம், ஆர்ச்சனை, ஆர்ச்சிதம்** - *சம்பாத்தியம், பாதுகாத்தல், வழியுப சாரம், விருந்தோம்பல்.*

**ஆர்தல்** - *அனுபவித்தல், இணைத்தல், உடைத்தாயிருக்குதல், குடித்தல், தங்குதல், நிறைதல், புசித்தல்.*

**ஆர்த்தநாதம்** - *புலம்பல்.*

**ஆர்த்தபம்** - *மகளிர்சூதகம்.*

**ஆர்த்தர்** - *எளியவர், துயருறுவோர், பெரியோர், யோகிகள்.*

**ஆர்த்தல்** - *அணிதல், ஒலித்தல், ஒளி வீசிமின்னுதல், கட்டல், பொரு தல், பொருத்தல்.*

**ஆர்த்தவம்** - *புட்பம்.*

**ஆர்த்தி** - *துன்பம், மகிழ்ச்சி, விருப்பம், வின்னுதி.*

**ஆர்த்திகை** - *துன்பம்.*

**ஆர்த்தி** - *வின்னுதி.*

**ஆர்த்தியம்** - *காட்டுத்தேன்.*

**ஆர்த்திரகம்** - *இஞ்சி.*

**ஆர்த்திரசாகம்** - *இஞ்சி.*

**ஆர்த்துதல்** - *நிறைத்தல், நிறைவேற்று தல், புசிப்பித்தல்.*

**ஆர்பதம்** - *நீழல், வண்டு.*

**ஆர்ப்பதம், ஆற்பதம்** - *சாரம், பச் செனவு.*

**ஆர்ப்பரவம்** - *இரைச்சல்.*

**ஆர்ப்பரித்தல்** - *ஆரம்பித்தல்.*

**ஆர்ப்பரிப்பு** - *ஆரம்பம்.*

**ஆர்ப்பு** - *கட்டு, சிரிப்பு, நுண்ணியன, பேரொலி, போர்.*

**ஆர்மதி** - *கற்கடகவிராசி, நண்டு.*

**ஆர்மை** - *கூர்மை, மதில்.*

**ஆர்வமொழி** - *ஓரலங்காரம்.*

**ஆர்வம்** - *அன்பு, ஆசை, ஒலி, சீலை, நரகம், கடைப்படுதானமேழி னொன்று, அஃது அன்புமுதலிய வற்றானளித்தல்.*

**ஆர்வலன்** - *அன்புடையோன், நாயகன், மித்திரன்.*

**ஆர்வு** - *ஆராய்தல், உண்டல், குடித் தல், நிறைவு.*

**ஆர்வை** - *கோரைப்பாய்.*

**ஆலகண்டன்** - *சிவன்.*

**ஆலகாலம்** - *நஞ்சு, விடம்.*

**ஆலக்கட்டி** - *துருசு.*

**ஆலக்கொடிச்சி** - *அரிதாரம்.*

**ஆலசம்** - *சோம்பு.*

**ஆலசியம்** - *சோம்பு, தாமதம்.*

**ஆலத்தி, ஆலாத்தி** - *அட்ட மங்கலத் தொன்று, நீராஞ்சனம்.*

**ஆலம்** - *அம்புக்கூடு, ஓர் மரம், கலப்பை, நீர், பாம்பினஞ்சு, மலர்ந்தபூ, மழு, மழை, நஞ்சு, மஞ்சளுஞ்சுண்ண முங்கலந்த நீர்.*

**ஆலம்பம்** - *ஆதாரம் பற்றுக்கோடு, ஆலயம், தேவர்கோயில், யானைக் கூடம், வீடு, தூங்கல், நிறுதிட்ட வரி, புகலிடம்.*

**ஆலலம்** - *கூறை.*

**ஆலல்** - *ஆடல், ஒலித்தல், சேருதல், மயிற்குரல்.*

**ஆலவட்டம்** - *கால்செயவட்டம்.*

**ஆலவணியம்** - *அவலட்சணம்.*

**ஆலவாலம்** - *பாத்தி வயல்.*

**ஆலனந்தலன்** - *திருமால்.*

**ஆலா** - *ஓர் பட்சி.*

**ஆலாங்கட்டி** - *மழைக்கட்டி.*

**ஆலாதம்** - *நெருப்புக்கொள்ளி.*

**ஆலாத்து** - *அம்மாறு, ஓர் புள், கப்பல், வௌவாற் கொடி முடியுங் கயிறு.*

**ஆலாபம்** - *அலப்பு, சம்பாஷணை.*

**ஆலாபனம்** - *சம்பாஷித்தல்.*

**ஆலாபித்தல்** - *அலப்புதல், சம்பாஷித் தல்.*

**ஆலானம்** - *கட்டு, கயிறு, யானை கட்டுந்தறி.*

**ஆலாலம்** - *விடம், வௌவால்.*

**ஆலி** - *அமுதம், ஆலாங்கட்டி, களி யென்னேவல், கள், காற்று, மழை, மழைத்துளி, தோழி, வமிசம், வரம்பு, வரிவிடமுள்ளன.*

**ஆலிங்கனம்** - *தழுவல்.*

**ஆலிஞ்சரம்** - *நீர்ச்சாடி.*

**ஆலித்தல்** - *களித்தல், தூறல்.*

**ஆலிந்தம்** - *திண்ணை, முற்றம்.*

**ஆலீடம்** - *வலக்கால்மண்டலித்திடக் கான்முந்துறுந்நிலை.*

**ஆலீனகம்** - *துத்தநாகம்.*

**ஆலு** - *நீர்க்குடம்.*

**ஆலுதல்** - *ஆலல், தொங்குதல்.*

**ஆலை** - *கரும்பாலை, கரும்பு, கள், கிட்டி.*

**ஆலேகனம்** - *எழுத்து.*

**ஆலேகனி** - *எழுத்தாணி, வரைகோல்.*

**ஆலேபம், ஆலேபனம்** - *ஓர் கந்ததயிலம்.*

**ஆலைவாய்** - *மதுரை.*

**ஆலோகம்** - *பார்வை, பிரபை, முகமன்.*

**ஆலோகனம்** - *பார்வை.*

**ஆலோகன்** - *தெளிந்தபுத்திமான்.*

**ஆலோசனை** - *யோசனை.*

**ஆலோசித்தல்** - *யோசித்தல்.*

**ஆலோடனம்** - *கலக்குதல், கலப்பு.*

**ஆலோலம்** - *நீரொலி, புள்ளோச்சு மொலி, கலக்குதல்.*

**ஆலோலிதமுகம்** - *ஆசையான் மலர்ந்தமுகமா யொருவனை யழைத்தல்.*

**ஆலோலிதம்** - *சந்தோஷம், விருப்பம்.*

**ஆலோன்** - *சந்திரன்.*

**ஆல்** - *அசைச்சொல், ஆமெனல், ஆலென்னேவல், ஓர்மரம், துவர்பத்தி னொன்று, மூன்றனுருபு.*

**ஆல்வாடுதல்** - *சிறுகக்காய்தல்.*

**ஆவகம்** - *சத்தவாயுவினொன்று.*

**ஆவகை** - *யாறு.*

**ஆவசதம்** - *வீடு.*

**ஆவசம்** - *சத்தமுகிலினொன்று.*

**ஆவட்டங்கொட்டல்** - *ஆவாய் கத்துதல்.*

**ஆவடுதுறை** - *திருவாவடுதுறை.*

**ஆவட்டை** - *ஓர்பூண்டு.*

**ஆவணம்** - *அடையாளம், உரிமை, உரிமைப்பத்திரம்,கடை,கடை வீதி, தெரு, தேர்மொட்டுப் பொருந்திய பீடம், புநர்பூசம், கரை.*

**ஆவணி** - *அவிட்டநாள், ஓர் மாசம்.*

**ஆவணீயம்** - *கடை, கடைவீதி.*

**ஆவனியம்** - *கடைவீதி.*

**ஆவதம்** - *ஆவர்த்தம்.*

**ஆவதத்தம்** - *ஆபத்துக்காலத்துக்கென்று வைத்ததிரவியம், சத்த முகிலினொன்று.*

**ஆவத்து** - *இக்கட்டு, உபத்திரவம்.*

**ஆவகாளி** - *அம்புக்கூடு.*

**ஆவம்** - *அம்புக்கூடு, குங்குமமரம், நாணி.*

**ஆவணம்** - *கரை.*

**ஆவரகம்** - *திரைச்சீலை, மூடி.*

**ஆவரணசத்தி** - *பசு, பதி, பாச மூன்றையும் பேதந்தெரியாது மறைப்பது.*

**ஆவரணம்** - *ஈட்டி, கோட்டை, சீலை, மறைவு, பரிசை, மூடி, மேற்புடைவை, வேலி.*

**ஆவரி** - *அம்பு.*

**ஆவரை** - *ஆவிரை.*

**ஆவர்த்தகம்** - *சுழலுதல், சுழல் காற்று, பிடருரோமம், மயிர்முடி, மனக்கலக்கம்.*

**ஆவர்த்தம்** - *சத்தமேகத்தொன்று, அஃது நீர்பொழிவது, சுழல் காற்று, சுழி, மயிர் முடி.*

**ஆவர்த்தனம்** - *உருக்குதல், கடைதல், கலக்குதல், சுழற்றுதல், பழக்கம்.*

**ஆவலங்கொட்டல்** - *வாயாலார்த்தாடல்.*

**ஆவலம்** - *கொல்லை.*

**ஆவலர்** - *காதலர், நாயகர்.*

**ஆவலாதி** - *அங்கலாய்ப்பு, ஆசை.*

**ஆவலி, ஆவளி** - *இரேகை, ஒழுங்கு, தொடர்ச்சி, வமிசம்.*

**ஆவலித்தல்** - *ஆசைப்படுதல், கொட்டாவிவிடுதல்.*

**ஆவலிப்பு, ஆவல்** - *ஆசை, பேராசை, வளைவு.*

**ஆவளித்தல்** - *ஆவலித்தல்.*

**ஆவளிப்பேச்சு** - *ஆதரவற்றபேச்சு, ஒழுங்கற்றபேச்சு.*

**ஆவறி** - *அங்கலாய்ப்பு.*

**ஆவாகனம்** - *தாபனம், அழைத்தல்.*

**ஆவாகித்தல்** - *தாபித்தல்.*

**ஆவாசம்** - *வீடு.*

**ஆவாபம்** - *கைவளை, கூத்தினோர் விகற்பம், பாத்தி, விரைதானியம்.*

**ஆவாபனம்** - *நெய்வார்தறி, வடிக் கயிறு.*

**ஆவாய்கத்துதல்** - *இல்லையென்று, சொல்லித்திரிதல்.*

**ஆவாரை** - *ஆவரை, நிலவாகை.*

**ஆவாலம்** - *வெளவால், பாத்தி.*

**ஆவி** - *அரூபி, ஆன்மா, உயிரெழுத்து, உயிர், உயிர்ப்பு, குளம், தேவதிரீத்துவத்தி னொன்று, பிட்டு, புகை, வாசனை, வெப்பம்.*

**ஆவிடை** - *சத்திரூபம்.*

**ஆவிதம்** - *துறப்பணம்.*

**ஆவித்தல்** - *கொட்டாவிவிடுதல்.*

**ஆவிப்பதங்கம்** - *வைப்புச்சரக்கு.*

**ஆவிபதம்** - *புறாமுட்டை.*

**ஆவிபத்தம்** - *போர்முட்டி.*

**ஆவிபத்திரம்** - *புகையிலை.*

**ஆவியம்** - *உயிர், சரீரபலம்.*

**ஆவியர்** - *வேடர், வேளாளர்.*

**ஆவியேற்றம்** - *பெருமூச்சு.*

**ஆவிரம்** - *இடையரூர்.*

**ஆவிருத்தி** - *முழுவட்டம், சுற்றுதல், மாறிப் பிறத்தல், வழக்கம்.*

**ஆவிரை** - *ஓர்மரம்.*

**ஆவிலம்** - *அழுக்கு, கலங்கனீர்.*

**ஆவீதம்** - *முப்புரிநூல்.*

**ஆவுடையார்** - *ஆவிடையார்.*

**ஆவுரிஞ்சி** - *ஆவுரிஞ்சுந்தறி.*

**ஆவெனல்** - *இரக்கக்குறிப்பு, வாய் திறத்தல்.*

**ஆவேகம்** - *சீக்கிரம், தடுமாற்றம்.*

**ஆவேசம், ஆவேஷம்** - *சன்னதம், வெறி, வேடம், பெருமை, மனம் பற்றுதல், வாயில்.*

**ஆவேசனம்** - *சித்திரகாரர்வீதி, கம்மாலை, கோபம், சூரிய மண்டலம், வாயில்.*

**ஆவேசிகன்** - *விருந்தன்.*

**ஆவேட்டகம்** - *வேலி.*

**ஆவேட்டனம்** - *சுற்றுதல்.*

**ஆவேதகன்** - *வழக்காளி.*

**ஆவேலி** - *தொழுவம்.*

**ஆவோ** - *அதிசயவிரக்கச்சொல்.*

**ஆழம்** - *கடல், தாழ்வு.*

**ஆழல்** - *கறையான், தாழ்தல்.*

**ஆழாக்கு** - *அரைக்காற்படி.*

**ஆழி** - *கடல், கரைப்பொது, சக்கரம், தேருருளை, மோதிரம், யானைக் கைநுனி, வட்டம்.*

**ஆழிக்கொடி** - *பவளம்.*

**ஆழித்தல்** - *ஆழமாகத்தோண்டல்.*

**ஆழியளித்தோள்** - *சிவன்.*

**ஆழியன்** - *வஞ்சகன், வருணன்.*

**ஆழிவிட்டோன்** - *சிவன், விட்டுணு.*

**ஆழிவித்து** - *முத்து.*

**ஆழிவிரை** - *ஓர் பயிர்.*

**ஆழுதல், ஆழ்தல்** - *அழுந்தல், தாழ்தல்.*

**ஆழ்வார்** - *கருடன்.*

**ஆழ்த்தல்** - *கட்டல், தாழ்த்தல்.*

**ஆளகம்** - *சுரை.*

**ஆளரி** - *சிங்கவேறு.*

**ஆளல்** - *ஆளுதல்.*

**ஆளானம்** - *கட்டுத்தறி, கலப்பை, யானைகட்டுந்தறி.*

**ஆளி** - *ஆள்வோன், ஒழுங்கு, கரைப் பொது, சிங்கம், சிங்கவிராசி, செய் கரை, யாளியானை, கிளிஞ்சில் போன்ற சிப்பி, மட்டி.*

**ஆளிமுரசோன்** - *மதன்.*

**ஆனியூர்தி** - *காளி, துர்க்கை.*

**ஆளுகை** - *ஆட்சி, ஆளுந்தன்மை, இராச்சியப்பொது.*

**ஆளுதல்** - *அடிமைக்கொள்ளுதல், ஆட்சிபண்ணல்.*

**ஆளொட்டி** - *மறைவு.*

**ஆள்** - *அடிமை, ஆடவன், ஆளென் னேவல், உயர்திணைப்பெண்பாற் படர்க்கை யொருமைவிகுதி.*

**ஆள்வணங்கி** - *அரசமரம்.*

**ஆள்வள்ளி** - *மலைச்சக்கரைவள்ளி.*

**ஆள்விழுங்கி** - *நிகள்வங்கி.*

**ஆள்வினை** - *உற்சாகம், முயற்சி.*

**ஆறடிவிருத்தம்** - *கலிவிருத்தம், தரயு கொச்சகம்.*

**ஆறதீகம்** - *கல்நார்.*

**ஆறலை** - *வழிப்பறிக்குந்தன்மை.*

**ஆறலைத்தல்** - *வழிப்பறித்தல்.*

**ஆறலைப்பு** - *வழிப்பறி.*

**ஆறல்** - *அலைதல், ஆறுதல்.*

**ஆறாக்காரியம்** - *தேற்றம்.*

**ஆறடி** - *தூர்த்தன்.*

**ஆறாதாரம்** - *சடாதாரம், அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை.*

**ஆறாதூறு** - *அவதூறு, அழிப்பு.*

**ஆறாமீன்** - *கார்த்திகைநாள்.*

**ஆறு** - *ஆறென்னேவல், ஒழுக்கம், ஓரெண், நதி, வழி.*

**ஆறுகாட்டி** - *மாலுமி, வழிகாட்டி.*

**ஆறுதல்** - *ஆறியிருத்தல், ஓய்தல், சூடுகுளிர்தல், தணிதல்.*

**ஆறுமுகன்** - *குமரன்.*

**ஆறை** - *ஆற்றூர்.*

**ஆற்பலம்** - *சாரம், பலம்.*

**ஆற்றங்கரை** - *ஆற்றோரம்.*

**ஆற்றலரி** - *சுடலைப்பூச்செடி, சேங் கொட்டை.*

**ஆற்றல்** - *அதிகம், செய்தல், ஞானம், தணித்தல், நிலையுடைமை, பரித் தல், பொறை, மிகுதி, முயற்சி, வலி.*

**ஆற்றறுத்தல்** - *வலியழித்தல்.*

**ஆற்றாக்கொலை** - *ஆற்றாப்பட்சம்.*

**ஆற்றாப்பட்சம்** - *ஆற்றாமை, தரிக்கக் கூடாமை.*

**ஆற்றார்** - *தரித்திரர், தோற்றோர், வருந்தினர்.*

**ஆற்றி** - *ஆறுதல்.*

**ஆற்றிகேடு** - *ஆற்றாண்மை, சத்துக் கேடு.*

**ஆற்றிடைக்குறை** - *ஆற்றினொடுக்க மானவிடம், ஆற்றுக்கிடையே யுயர்ந்ததிடர்.*

**ஆற்று** - *ஆற்றென்னேவல், தலைக் கடை.*

**ஆற்றுக்காலாட்டியர்** - *மருதநிலப் பெண்கள்.*

**ஆற்றுக்கால்** - *ஆற்றிலிருந்து பாயும் வாய்க்கால்.*

**ஆற்றுணா**-*கட்டுச்சோறு, வழியுணவு.*

**ஆற்றுதல்** - *தணித்தல், துயர்தீர்த்தல்.*

**ஆற்றுநீர்** - *ஆற்றிற்சலம்.*

**ஆற்றுநீர்ப்பொருள்கோள்** - *பொருள் கோளெட்டினொன்று.*

**ஆற்றுநெட்டி** - *நீர்ச்சுண்டி.*

**ஆற்றுப்பச்சை** - *பச்சைக்கல்.*

**ஆற்றுப்படுத்தல்** - *சன்மார்க்கத்திலுட் படுத்தல், வழிநடத்துதல்.*

**ஆற்றுப்படை** - *ஓர் பிரபந்தம், வழிப் படுதல்.*

**ஆற்றுப்பாசி** - *ஓர்பூண்டு.*

**ஆற்றுப்பித்தல்** - *ஆற்றோரம்.*

**ஆற்றுமடை** - *வாய்க்காலமுகம்.*

**ஆற்றுமல்லிகை** - *ஓர் மல்லிகை.*

**ஆற்றுமா** - *ஆன்மா.*

**ஆற்றுவித்தல்** - *ஆறுபாய்முகம், உறுதிசெய்தல், தயிரியப்படுத்தல், வலிதருதல்.*

**ஆற்றொழுக்கு** - *சூத்திரநிலை செய்யு ணிலைகளினொன்று.*

**ஆனகம்** - *தம்பட்டம், துந்துமி, தேவதரு, மேளம், இடி, போர்ப் பறை, மத்தளம், முகில்.*

**ஆனந்த** - *ஓர் வருடம்.*

**ஆனந்தததம்** - *யோனி.*

**ஆனந்தபடம்** - *கூறைப்புடைவை.*

**ஆனந்தபயிரவி** - *ஓர் பண்.*

**ஆனந்தபாட்பம்** - *பேரின்பக்கண்ணீர்.*

**ஆனந்தபிரபவம்** - *இந்திரியம்.*

**ஆனந்தமயகோசம்** - *பஞ்சகோசத் தொன்று, அஃது அவித்தை.*

**ஆனந்தமயம்**-*கோசமைந்தினொன்று, தனவசமற்றிருத்தல், கடவுள்.*

**ஆனந்தம்** - *பேரின்பம்.*

**ஆனந்தன்** - *கடவுள், சிவன், கடவுள், சந்தோஷம்.*

**ஆனந்தரூபன்** - *பஞ்சகோசகன்ம பந்தசன்ம மரணாதியற்ற வடிவன்.*

**ஆனந்தலட்சணம்** - *பரமாத்து மாசகல பதார்த்தத்தைக் காட்டி யுந்தன்னிடத்திற் பிரமை நீங்கா திருப்பது.*

**ஆனந்தவல்லி** - *பார்ப்பதி.*

**ஆனந்தவாதி** - *கௌரிபாஷாணம்.*

**ஆனந்தனம்** - *இன்பங்கொடுப்பது, உபசரணை, சந்தோஷித்தல்.*

**ஆனந்தி, ஆனந்தை** - *பார்வதி.*

**ஆனந்தியம்** - *அழிவின்மை, முடிவின்மை.*

**ஆனந்தித்தல்** - *சந்தோஷித்தல்.*

**ஆனம்** - *கள், மஸ்துள்ளபானம், பூரகவாயு.*

**ஆனயம், ஆனயனம்** - *உபநயனம்.*

**ஆனர்த்தம்** - *களரி, நிர், யுத்தம்.*

**ஆனல்** - *நீங்குதல்.*

**ஆனனம்** - *முகம்.*

**ஆனாகம்** - *சலவடைப்பு.*

**ஆனாமை** - *உத்திராடம், நீங்காமை, கெடாமை.*

**ஆனி** - *உத்திராடநாள், ஓர் மாதம், கேடு, கேட்டை, பொருந்தநதி, மூலநாள், வெட்டுக்குருத்து, எல்லை, வாளலகு.*

**ஆனியம்** - *நாள், பகல், பருவம், பொழுது, மூலநாள்.*

**ஆனிலன்** - *அனுமான், வீமன்.*

**ஆனிலை** - *பசுக்கொட்டில்.*

**ஆனு** - *இனிமை, நன்மை.*

**ஆனுலகு** - *தேவலோகம்.*

**ஆனேறு** - *எருது.*

**ஆனை** - *அத்தி, யானை.*

**ஆனைக்கண்படுதல்** - *புள்ளிபடுதல்.*

**ஆனைத்தடிச்சல்** - *புளிநடலை.*

**ஆனைநெரிஞ்சி** - *பெருநெருஞ்சி.*

**ஆனைப்படுவன்** - *விலங்கினோர் நோய்.*

**ஆனைப்பந்தி** - *யானைக்கூடம்.*

**ஆனைப்பாகன்** - *யானைப்பணிக்கன்.*

**ஆனைப்பேன்** - *ஓர்பேன்.*

**ஆனைமீன்** - *ஓர்பெருமீன்.*

**ஆனைமுகன்** - *விநாயகன்.*

**ஆனையறுகு** - *ஓரறுகு.*

**ஆனையேற்றம்** - *ஆனையேறும் பரிட்சை, யானையைமரக்கலத் தேற்றுதல்.*

**ஆனைவணங்கி** - *தேட்கொடுக்கி.*

**ஆனைவாழை** - *ஓர் வாழை.*

**ஆன்** - *உயர்திணையொருமையாண் பால் படர்க்கை விகுதி, சாரியை, பசுப்பொது, மூன்றனுருபு, ஆனென் னேவல்.*

**ஆன்மா** - *உயிர், சிவனட்டமூர்த்தத் தொன்று.*

**ஆன்மீட்சணம்** - *தேடல்.*

**ஆன்வல்லோர்** - *இடையர்.*

**ஆன்றல்** - *அகலம், மாட்சிமை, மிகுதி.*

**ஆன்றவர், ஆன்றார், ஆன்றோர்** - *அறிவுடையோர், சன்மார்க்கர், புலவர், பெரியோர்.*

## இ

**இ** - *உயர்திணைப் படர்க்கை யொருமைவிகுதி, சுட்டு, பெண்பால் விகுதி, முன்னிலை யொருமை விகுதி, ஓரெழுத்து, முப்பாலொருமை முன்னிலைவினைவிகுதி (உம்) உண்டி, முப்பாலொருமை முன் னிலையேவல் விகுதி, (உம்) கேட்டி, உயர் திணைப் பெண் பாலொருமைப் படர்க்கைப் பெயர் விகுதி, (உம்) குறத்தி, உயர்திணை யாண்பாற்படர்க்கை யொருமைப் பெயர்விகுதி, (உம்) வில்லி, அஃறி ணைப் படர்க்கை யொருமைப் பெயர் விகுதி, (உம்) ஊருணி, விரவுத்திணையொருமைப் பெயர் விகுதி, (உம்) செவியிலி.*

**இஃது** - *இது.*

**இக** - *இகவென்னேவல், முன்னிலை யசைச்சொல்.*

**இகத்தல்** - *கடத்தல், புறப்படுதல், போதல், மீறுதல், விட்டுவிடுதல், பழித்தல்.*

**இகந்துபடுதல்** - *கடந்துபோதல், நிராகரிக்கப்படுதல், தவறுதல்.*

**இகபரசாதனம்** - *இம்மைமறுமைக் கடுத்தகடமைகளை நடப்பித்தல்.*

**இகபரபுத்திரார்த்தபரபோகவிசாகம்** - *இகத்திலுள்ளபெண்டு பிள்ளை முதலியனவும் பரத்திலுள்ள தேவாமிர்த போகங்களும் வெறுத்துவிடல்.*

**இகபரம்** - *இம்மைமறுமை, அஃது பூலோகபரலோகவனுபவம்.*

**இகம்** - *இம்மை, உலகம், பூமி.*

**இகரம்** - *ஓரெழுத்து, சந்தம்.*

**இகல** - *உவமைச்சொல்.*

**இகலல்** - *எதிர்த்தல், பகைத்தல், பொருதல்.*

**இகலன்** - *ஓரி, நரி, பகைவன்.*

**இகலாட்டம்** - *போராட்டம்.*

**இகலார், இகலோர்** - *பகைவர்.*

**இகலோகம்** - *இவ்வுலகம்.*

**இகல்** - *பகை, போர், வலி.*

**இகல்** - *இகலென்னேவல், ஒப்பு, பெருங்காப்பியவுறுப்புளொன்று, அஃது மறனிலை.*

**இகல்வு** - *எதிரிடை.*

**இகவு** - *இகழ்ச்சி.*

**இகழாவிகழ்ச்சி** - *ஓரலங்காரம், அஃது புகழ்வது போலிகழ்வது.*

**இகழ்** - *இகழென்னேவல், நிந்தை.*

**இகழ்ச்சி** - *ஈனம், நிந்தை, மறதி.*

**இகழ்ச்சிப் புகழ்ச்சி** - *புகழ்மொழி யானிகழ்தல் (உம்) பேராளி.*

**இகழ்ச்சியில் புகழ்ச்சி** - *ஓரணி, அஃது இகழ்ச்சியின்றிப்புகழ்தல் (உம்) சத்தியத்திலரிச்சந்திரன்.*

**இகழ்ச்சியுட் புகழ்ச்சி** - *ஓரணி, அஃது இகழ்ச்சியும் புகழ்ச்சியுங்கலந்து கூறல் (உம்) இவர்சற்றேவாசித் தவர்.*

**இகழ்ச்சிவிலக்கு** - *ஓரலங்காரம், அஃது ஏதுவையிகழ்ந்து விலக்கு வது.*

**இகழ்தல்** - *நிந்தித்தல்.*

**இகழ்வு** - *நிந்தை.*

**இகளி** - *இடி.*

**இகளை** - *வெண்ணெய்.*

**இகாசம்** - *பழிகூறல்.*

**இகிதம்** - *இன்பம்.*

**இகுடி** - *ஆதொண்டை.*

**இகுத்தல்** - *அழைத்தல், இரித்தல், ஈதல், எறிதல், குழைத்தல், கொல்லல், தாண்டல், தாழ்த்துதல், துடைத்தல், மறித்தல், வருந்துவித்தல், வீழ்த்தல், அழித்தல், புடைத்தல்.*

**இகும்** - *அசைச்சொல்.*

**இகுளை** - *சுற்றம், தோழி, நட்பு.*

**இகுள்** - *இடி, ஓர்மீன், கார்த்திகைநாள்.*

**இகைத்தல்** - *கொடுத்தல், நடத்தல்.*

**இக்கட்டு** - *தரித்திரம், துன்பம், இடநெருக்கம், வெல்லக் கட்டி.*

**இக்கணம்** - *இப்போழ்து.*

**இக்கரை** - *ஓந்தக்கரை, இந்துப்பு.*

**இக்கவம்** - *கரும்பு.*

**இக்கன** - *இப்போது.*

**இக்கிரி** - *ஓர்முட்செடி.*

**இக்கு** - *ஆபத்து, கரும்பு, கள், தடை.*

**இக்கியந்திரம்** - *கரும்பாட்டுமாலை.*

**இக்குறி, இக்கூறு** - *அன்னியநாள், இச்செலவு.*

**இக்கெனல்** - *சீக்கிரக் குறிப்பு.*

**இக்கோ** - *அதிசயவிரக்கச் சொல்.*

**இக்கிரசம்** - *கருப்பஞ்சாறு.*

**இக்குவிகாரம்** - *சருக்கரை.*

**இங்கண்** - *இவ்விடம்.*

**இங்கம்** - *அறிவு, சயிக்கை, நோக்கம்.*

**இங்கரி** - *கஸ்தூரி.*

**இங்கிசை** - *கொலை, சங்கையீனம்.*

**இங்கிதம்** - *அடையாளம், இனிமை, எண்ணக்குறிப்பு, எண்ணம், கருத்து, இங்கம்.*

**இங்கு** - *இவ்விடம், பெருங்காயம்.*

**இங்குசுக்காண்டான்** - *நீர்முள்ளி, நெருஞ்சில்.*

**இங்குதாரி** - *பேரோசனை.*

**இங்குதாழி** - *பீதரோகணி.*

**இங்குமம்** - *இங்கு.*

**இங்குலிகம்** - *சாதிலிங்கம், சிவப்பு.*

**இங்ஙனம், இங்ஙன்** - *இத்தன்மை, இவ்விடம்.*

**இசகுபிசகு, இசக்குப்பிசக்கு, இசைவு பிசகு** - *குழப்பம்.*

**இசங்கு** - *ஓர் செடி.*

**இசடு** - *அசடு, பொருக்கு.*

**இசமான்** - *எசமான்.*

**இசலாட்டம்** - *எசலாட்டம்.*

**இசலி** - *சபதம்.*

**இசி** - *இசியென்னேவல், இணுங்குதல், சிரிப்பு.*

**இசிதல்** - *இணுங்கப்படுதல், இழுபடுதல், நீளுதல்.*

**இசித்தல்** - *இணுங்கல், இழுத்தல், சிரிக்குதல்.*

**இசிப்பு** - *ஈர்ப்பு, சிரிப்பு.*

**இசிவு** - *இழுப்பு, உரிவு.*

**இசின்** - *இறந்தகால விடைநிலை, (உம்) என்றிசினோரே.*

**இசை** - *இசைப்பாட்டு, இசைப்பு, இசையென்னேவல், இணக்கம், ஒலி, கூடிநிற்றல், சொல், பாட்டிசை, புகழ், முத்தமிழினொன்று, இனிமை, கொடை, பண்பு, பொன்.*

**இசைகேடு** - *சத்துக்கேடு.*

**இசைக்கழல்** - *தேர்நூறு குதிரையாயிரம்யானை நூறு காலாள் பதினாயிரம் போரின்மடிய வென்றவெற்றி பெற்ற வேந்தரிடக் காவினணியும் வீரவெண்டயம்.*

**இசைக்குழல்** - *ஊதுகுழல்.*

**இசைதல்** - *சம்மதித்தல், பொருந்தல்.*

**இசைத்தமிழ்** - *சங்கீதத்தமிழ்.*

**இசைத்தல்** - *இணக்குதல், ஈதல், ஒலித்தல், கட்டல், பேசல், பொருந்தப்பண்ணுதல்.*

**இசைத்திரிபு** - *இசையறுப்பு, வேறுபாடு.*

**இசைநாள்**-*உத்திரட்டாதி, பூரட்டாதி.*

**இசைநிறை** - *ஓசைநிறைத்துநிற்பது.*

**இசைநிறையேகாரம்**- *ஈற்றசையேகாரம்.*

**இசைநூபுரம்** - *யானையைக்கொன்ற சுத்த வீரனிடக்காளலணியும் வீரச்சிலம்பு.*

**இசைபுனை** - *ஆயிரம் பேரை வென்றவனிடக்காலிலணியும் வீரச் சங்கிலி.*

**இசைப்பாட்டு** - *இராகம்.*

**இசைப்பு** - *இணக்கம், கூடிநிற்றல், சொல்லல், பொருத்து.*

**இசைப்புள்** - *அன்றிற் பறவை, குயில்.*

**இசைமடந்தை** - *சரச்சுவதி.*

**இசைமணி** - *பதினாயிரம் பேரை வென்றவேந்தர் பொன்னாற்செய்து இடக்காலிலணியும் வீரகண்டை.*

**இசைமுட்டி** - *செருந்தி.*

**இசைமூடி** - *சிலந்திநாயகம்.*

**இசையந்தாதி** - *ஓரலங்காரம், அஃது ஒருவசனத் தீறுமற்றொரு வசனத்தாதியாக வருவது.*

**இசையுந்தொழிலர்** - *சூத்திரர்.*

**இசையுரிச்சொல்** - *ஓசையாலறியப் படுங் குணச்சொல் (உம்) கவிகடல்.*

**இசையெச்சம்** - *ஒழிந்துநிற்குஞ் சொற்கொண்டு கருத்து முடிவது.*

**இசையெஞ்சணி** - *இசையெச்சம்.*

**இசைவளை** - *குதிரை நூறுபோர்க் களத்திற் பொருதுவென்ற மல்லு யுத்தர் காற்பெரு விரலிலணியும் வளை.*

**இசைவிரும்பி** - *அசுணம்.*

**இசைவு** - *இணக்கம், சம்மதி, பொருத்து.*

**இசைவுபிசகு** - *இணக்கமின்மை.*

**இச்சகம்** - *முகமன்.*

**இச்சயம்** - *ஆசை.*

**இச்சாசத்தி** - *பஞ்ச சத்தியினொன்று. அஃது பஞ்சபூதமாக நின்று உயிர்க் கருணேசஞ் செய்வது.*

**இச்சாபத்தியம்** - *புறப்பத்தியம், மைதுன முதலிய நீங்கல், விடு பத்தியம்.*

**இச்சாபோகம்** - *இச்சித்தவனுபவம்.*

**இச்சாவசு** - *குபேரன்.*

**இச்சானுவிருத்தி** - *ஆசையடக்கம்.*

**இச்சி** - *ஓர் மரம்.*

**இச்சித்தல்** - *காமுறல்.*

**இச்சியல்** - *கடுகுரோகணி.*

**இச்சு** - *ஓரிடைநிலை.*

**இச்சை** - *அஞ்ஞானம், ஆசை, இடித் தல், இட்டம், பேராசை, பொய்.*

**இஞ்சரகம்** - *இறால்.*

**இஞ்சி** - *இஞ்சிக்கிழங்கு, ஓர் மருந்துப் பூடு, கேடகம், மதில், வாவி.*

**இஞ்சுச்சார்** - *வெல்லம்.*

**இடகலை** - *சந்திரகலை.*

**இடக்கயம்** - *இடக்கியம்.*

**இடக்கரடக்கல்** - *சொல்லத்தகா வார்த் தையை மறைத்துச் சொல்வது.*

**இடக்கர்** - *குடம், தூர்த்தர், நெருங் கல், மறைத்தசொல்.*

**இடக்கியம்** - *தேர்க்கொடி.*

**இடக்கு** - *இழிச்சொல், எதிரிடை, ஏறுமாறு, தடை.*

**இடக்கை** - *ஓர்வாச்சியம், தம்பட்டம், இடதுகரம், தாறுமாறு, மருத நிலத்தூர்.*

**இடக்கையான்** - *அஞ்சாவீரன்.*

**இடங்கணம்** - *பொரிகாரம்.*

**இடங்கணி** - *சங்கிலி, ஆந்தை.*

**இடங்கம்** - *உளி.*

**இடங்கரம்** - *மகளிர் சூதகம்.*

**இடங்கர்** - *குடம், சிறுவழி, தூர்த்தர், நீர்ச்சால், முதலை.*

**இடங்கழி, இடங்கழிமை** - *நெருங்கல்.*

**இடங்கழியர்** - *காமுகர், தூர்த்தர்.*

**இடங்காரம்** - *மத்தளத்தினிடப்பக்கம்.*

**இடங்கேடு** - *தரித்திரம், வெறுமை.*

**இடசாரி** - *இடச்சுற்று.*

**இடங்கணி** - *ஆந்தை.*

**இடதந்தம்** - *இராசயானை.*

**இடதானன்** - *கன்னன்.*

**இடது** - *இடப்புறம்.*

**இடத்தல்** - *அகலப்பண்ணுதல், கிழித்தல், தோண்டல், பிரித்தல்.*

**இடத்தாலணையும் பேர்** - *குறிஞ்சி முதலிய வைந்திணையைப் பற்றியும் வான், அகம், புறம், முதலிய இடங் களைப் பற்றியும் வரும் பெயர் (உம்) வெற்பன், மறவன், ஆயன், ஊரன், சேர்ப்பன், வானத்தான், அகத்தான், புறத் தான் முதலியன.*

**இடத்திடல்** - *சொலித்தல்.*

**இடநாகம்** - *அடையிருக்கும்பாம்பு.*

**இடந்தலைப்பாடு** - *களவுப் புணர்ச்சி நான்கினொன்று, அஃது இடந் தலைப்படுதல்.*

**இலளிதபஞ்சகம்** - *ஓரிசைவிகற்பம்.*

**இலளிதம்** - *அழகு, சிவாகமமிருபத் தெட்டினொன்று, பரிகாசம்.*

**இலாகரி, இலாகிரி** - *மஸ்து.*

**இலாகவம், இலாகு** - *இலகு, தாபரம்.*

**இலாகன்** - *ஓர் மீன்.*

**இலாகை** - *மாதிரி.*

**இலாக்கிரி** - *செம்மெழுகு.*

**இலாங்கலம், இலாங்கலி** - *கலப்பை, செங்காந்தள், தென்னமரம், ஆண் குறி, பனைதெங்கு முதலியன.*

**இலாங்கூலம்** - *வால்.*

**இலாசடி** - *தொந்தறை.*

**இலாசம், இலாசை** - *பொரி.*

**இலாச்சம்** - *மரக்கால்.*

**இலாஞ்சனம்** - *அடையாளம், புள்ளி, பெயர்.*

**இலாஞ்சனை** - *அடையாளம், அலைவு.*

**இலாஞ்சி** - *ஏலம்.*

**இலாடசங்கிலி** - *ஓர்சங்கிலி, சடுத்தம்.*

**இலாடம்** - *குதிரையின் காற்பறளை, தேயமன்பத்தாறினொன்று, நெற்றி, புளியமரம், குற்றம், புடைவை.*

**இலாதார்** - *சஞ்சாயம்.*

**இலாந்துதல்** - *மச்சுச்சாந்திடுதல்.*

**இலாபம்** - *ஆதாயம், நயம்.*

**இலாமிச்சை** - *ஓர்வாசனைப்புல்.*

**இலாயம்** - *குதிரைப்பந்தி, ஏலரிசி.*

**இலாலனை** - *அன்புவைத்தல், கெஞ்சு தல், சீராட்டு தாலாட்டு.*

**இலாவி** - *துதி.*

**இலாவணம்** - *உப்பு, சம்பாஷணை.*

**இலாவணியம், இலாவண்ணியம்** - *பேரழகு.*

**இலாளனை** - *இலாலனை.*

**இலாவிருதம்** - *நவகண்டத்தினொன்று.*

**இலிகி** - *எழுத்து.*

**இலிகிதம்** - *எழுத்து, கலைஞான மறுபத்தினான்கி னொன்று.*

**இலிகித்தல்** - *எழுதுதல்.*

**இலிகுசம்** - *எலுமிச்சை.*

**இலிங்கசுத்தி** - *பஞ்சசுத்தியி னொன்று.*

**இலிங்கபாஷாணம்** - *விளைவு பாஷாண முப்பத்திரண்டி னொன்று.*

**இலிங்கபுராணம்** - *அட்டாதச புராணத்தொன்று.*

**இலிங்கம்** - *அடையாளம், ஆண்குறி, இங்குலிகம், சிவலிங்கம், அருத்தா பத்தி, ஆத்து மலிங்கம், இஷ்ட லிங்கம், உப நிடதமுப் பத்திரண்டி னொன்று, பிரமசரிய நிலையி னொன்று.*

**இலிங்கிகள்** - *தபசிகள், முனிவர்.*

**இலிதை** - *குறிப்பிசை, பூமி.*

**இலிபி** - *இலக்கம், எழுத்து, விதி, மெழுகுதல்.*

**இலிபித்தல்** - *அனுகூலமாதல், எழுது தல், நியமித்தல், விதித்தல்.*

**இலிர்த்தல்** - *சிலிர்த்தல், தளிர்த்தல், பொடித்தல்.*

**இலீக்கை** - *ஈர்.*

**இலீலாவினோதம்** - *சுரதவிளையாட்டு.*

**இலீலை** - *பரிகாசம், புணர்ச்சி, மகளிர் விளையாட்டு, விளையாட்டு, கதை.*

**இலுதை** - *அணில்.*

**இலுப்பை** - *இருப்பைமரம்.*

**இலேககன்** - *எழுத்துக்காரன், கணக்கன்.*

**இலேகம்** - *எழுத்து, திருமுகம்.*

**இலேகர்** - *வானோர்.*

**இலேகனி, இலேகிணி, இலேகினி** - *எழுதுகோல், எழுத்தாணி, தூவல்.*

**இலேகியம்** - *ஓர்மருந்து, நக்கல்.*

**இலேகை** - *எழுத்து, வரி, வரை.*

**இலேசம்** - *அற்பம், ஓரலங்காரம் அஃது அகத்துக் கருதியவற்றைப் புறத்துக்குறிகளால் உணர்த்து வது, காலவிரைவு, நொய்மை.*

**இலேசு** - *அற்பம், நொய்மை.*

**இலேசனம்** - *எழுத்து, நாவழித்தல், பனையோலை.*

**இலேபனம்** - *பூச்சு, வாசனைத்தயிலம்.*

**இலேபி** - *இலபி, பூச்சு.*

**இலேபிதம்** - *தடவல்.*

**இலேவனம்** - *மெழுகுதல்.*

**இலை** - *இலைக்கறி, உலோபம், பத்திரம்.*

**இலைகிள்ளல்** - *கைச்சித்திர மைந்தி னொன்று.*

**இலைக்கதவு** - *ஓர்வகைக் கதவு.*

**இலைக்கள்ளி** - *ஓர்வகைக்கள்ளி.*

**இலைக்கறி** - *கீரை.*

**இலைக்கிளி** - *தத்துக்கிளி.*

**இலைக்குட்டி** - *பலங்கெட்ட வாழைக் குட்டி.*

**இலைக்குறடு** - *நீண்டகுறடு.*

**இலைக்கொடி** - *வெற்றிக்கொடி.*

**இலைக்கொழுக்கட்டை** - *ஓர்வகைக் கொழுக்கட்டை.*

**இலைங்கம்** - *இலிங்கம், பதினெண் புராணத் தொன்று.*

**இலைத்தல்** - *பச்சைநிறமாதல், சாரமின்மை.*

**இலைத்திரி** - *காதில்வைக்குமோரி லைச் சுருள்.*

**இலைநிறம்** - *பச்சைநிறம்.*

**இலைப்பசளி** - *பெரும்பசளி.*

**இலைப்பாசி** - *ஓர்பூண்டு.*

**இலைமூக்கரிகத்தி** - *இலைக்காம் பரியுங்கருவி.*

**இலையாகிருதி** - *இலையாகாரம்.*

**இலையாடுபொலிசை** - *கடும்பொலி சை.*

**இலையான்** - *ஈ.*

**இலையிலைத்தல்** - *சுவைகெடுதல், பச்சைநிறமாதல்.*

**இலையுதிர்வு** - *இலைசொரிவு, முதுகாடு.*

**இலைவாணிபம்** - *இலைவியாபாரம், வெற்றிலை முதலிய விலைப்பயிர் வேளாண்மை.*

**இலைவாணிபர்,** *வெற்றிலைவிற் போர்.*

**இலௌகீகதருமம்** - *உலகாசாரம்.*

**இலௌகீகம்** - *சிற்றின்பம், பிரபஞ் சம், மாமிசசிந்தை.*

**இல்** - *இடம், இராசி, இல்லையெனல் உவமையுருபு (உம்) அழ லிற்பிறள் மணி, ஏழாம்வேற்று மையுருபு (உம்) ஊரிலிருந்தான், ஐந்தாம் வேற்றுமை உருபு (உம்) மலையின் வீழருவி, சாவு, தலைவி, மனைவி, வீடு, எதிர்மறையிடை நிலை, (உம்) செய்திலன்.*

**இல்பொருள்** - *இல்லாத பொருள்.*

**இலபுலப்பயனறற்குறிப்பு** - *ஓரலங் காரம், அஃதுஇயல்பாயில்லாத பயனை யுள்ளதாகத் தற்குறிப்புச் செய்தல், (உம்) வனத்தினின்று ஞற்று தவத்தினால் நின்சீறடிக் கிணை யாயதுகமலம்.*

**இல்புலவேதுத்தற்குறிப்பு** - *ஓரலங் காரம், அஃது இல்லாதவேதுவை யெடுத்துத்தற்குறிப்புச் செய்தல், (உம்) முகவொளியைப் பாவாய் பெறற்குமுண்டகத்தோடி கலு மதியையமிலை.*

**இல்லடை** - *அடைக்கலம், இல்லு வமம்.*

**இல்லடைக்கலம்** - *அடைக்கலம்.*

**இல்லதாரம்** - *இல்வாச்சிரமம்.*

**இல்லம்** - *இல்வாழ்க்கை, தேற்றா மரம், மனைவி, வீடு.*

**இல்லல்** - *கடத்தல், நடத்தல், போகுதல்.*

**இல்லவள்** - *மனைவி.*

**இல்லவை** - *இல்லாப்பொருள், மனைப்பொருள்.*

**இல்லறம்** - *இல்லாச்சிரமம்.*

**இல்லாச்சிரமம்** - *இல்லொழுக்கத் திருத்தல்.*

**இல்லாண்முல்லை** - *முல்லைப்புறம், அஃது தலைமகன் பாசறைக்கண் மாதரையுள்ளல்.*

**இல்லாததனம்** - *வறுமை.*

**இல்லாமை** - *தரித்திரம்.*

**இல்லாள்** - *எசமாட்டி, தரித்திரி, மனைவி.*

**இல்லான்** - *கணவன், தரித்திரன்.*

**இல்லி** - *சில்லி, தேற்றா, பெண்ணுறுப்பிற்குறைவுள்ளாள்.*

**இல்லிடம்** - *வீடு.*

**இல்லுவமம்** - *உபமாலங்காரத்தினொன்று, அஃது இல்லாததற்குவமை, (உம்) ககனாரவிந்தம்போலும்.*

**இல்லுனர்** - *மேவினர்.*

**இல்லென்றல்** - *இரத்தல், இல்லையெனல், சாதல்.*

**இல்லை** - *இன்மை, சாதல்.*

**இல்லொழுக்கம்** - *இல்லாளோடில்லத்திருந்தறஞ் செய்தல்.*

**இல்லோன்** - *கணவன், தரித்திரன்.*

**இல்வழக்கு** - *கூடாவழக்கு.*

**இல்வாழ்க்கை** - *மனைவாழ்க்கை, கிழவோன் மகிழ்ச்சி முதலாகச் செவிலிமகிழ்ச்சியீறா யவம்.*

**இல்வாழ்க்கைவிரி** - *தலைவன்றலைவி முன் பாங்கியைப் புகழ்தன் முதலாக வன்னவர் காதலறிவித்த வீறாகச் சொல்லப்பட்டபத்தும்.*

**இல்வாழ்வான்** - *இல்லாச்சிரமத்தோன்.*

**இல்வாழ்வு** - *இல்வாழ்க்கை.*

**இலக்காண்** - *இப்பொழுது, இவ்விடம்.*

**இவணம்** - *இங்கே.*

**இவண்** - *இவ்விடம்.*

**இவர்தல்** - *ஆசை, ஆசைப்பெருக்கம், எழுச்சி, ஏறுதல், செறிவு, சேறல்.*

**இவவு** - *இழிவு.*

**இவறல்** - *ஆசை, ஆசைப்பெருக்கம், மறதி.*

**இவறன்மை** - *அசட்டை, ஆசை, உலோபக்குணம்.*

**இவுளி** - *குதிரை.*

**இவுளிமறவன்** - *அரசற்குத்துணைவரிலொருவன், குதிரைவீரன்.*

**இவை** - *அஃறிணைப்பன்மை.*

**இவ்** - *இவை.*

**இவ்விரண்டு** - *இரண்டிரண்டு.*

**இழத்தல்** - *இழந்துபோதல், இழந்துவிடுதல்.*

**இழப்பு** - *இழத்தல், கீழ்மை, நட்டம்.*

**இழவு** - *இழத்தல், சாவு.*

**இழவுகாரன்** - *சாவுக்குரியவன்.*

**இழவுக்கடித்தல்** - *மாரடித்தல், வீணிலேவருந்தல்.*

**இழவுவிழுதல்** - *சாதல்.*

**இழவுவினாவல்** - *இழவு கொண்டாடல்.*

**இழவுவீடு** - *சாவீடு.*

**இழவோலை** - *சாவோலை.*

**இழி** - *இகழ்வு, இழியென்னேவல், கீழ்மை.*

**இழிகடை** - *அறக்கீழானது.*

**இழிகண்** - *இழியற்கண்.*

**இழிகுலம்** - *தாழ்ந்தகுலம்.*

**இழிங்கு** - *ஈனம் வடு.*

**இழிசனர்** - *அறிவீனர், கீழ்மக்கள்.*

**இழிசொல்** - *அசப்பியம், சிறுசொல், நிந்தைவார்த்தை.*

**இழிச்சல்வாய்** - *திறந்தவாய்.*

**இழிச்சுதல்** - *இறக்குதல், கீழ்ப்படுத்துதல், இகழ்தல்.*

**இழிச்சொல்** - *பழிச்சொல்.*

**இழிஞர்** - *சண்டாளர்.*

**இழிதகவு** - *இழிவு, எளிமை.*

**இழிதல்** - *அவகீர்த்திப்படுதல், இறங்குதல், குறைதல், தாழ்தல்.*

**இழிதிணை** - *அஃறிணை, அஃது தேவர் நரகர் மனிதரல்லாதனது.*

**இழித்தல்** - *இறக்குதல், கீழ்ப்படுத்தல், கெஞ்சுதல்.*

**இழிந்தோர்** - *ஈனர்.*

**இழிபு** - *ஓரலங்காரம், அஃது இழிபு தோன்றக்கூறுவது, கீழ்மை, தாழ்வு.*

**இழிப்பு** - *அவகீழ்த்தி, இகழ்வு, கீழ்ப்பட்டதன்மை, நிந்தை.*

**இழியற்கண்** - *இமைதிறந்தகண்.*

**இழிவு** - *ஈனம், குற்றம், கேடு, தாழ்வு, நிந்தை, பள்ளம்.*

**இழிவுசிறப்பு** - *ஒன்றற்கேயுள்ளயிழிவைக் காட்டியது.*

**இழிவுச்சிறப்பும்மை** - *(உம்) பூனையும் புலாற்றினனாது.*

**இழுகுணி** - *பிசுனன்.*

**இழுகுதல்** - *பிசுனித்தனம் பண்ணுதல், பின் போதல்.*

**இழுக்கம்** - *குறை, தப்பிதம், தவறு, பின்வாங்குதல், வசை, வழிவிலகுதல்.*

**இழுக்கல்** - *தவறுதல், வழுக்கல், வழுக்குநிலம்.*

**இழுக்கு** - *ஆபரணத்தினோருறுப்பு, இழுக்கென்னேவல், ஈனம், கேடு, தவறு, பொய், மறதி, வருத்தம்.*

**இழுக்குதல்** - *இழுத்தல், தவறுதல், பின்வாங்குதல்.*

**இழுது** - *தித்திப்பு, நிணம், செய்.*

**இழுதுதல்** - *கொழுத்தல், நெய்த்தல்.*

**இழுதை** - *அறிவிலான், பொய்.*

**இழுத்தல்** - *இழுக்குதல், சுரம்பாடுதல் பின்வாங்குதல், வலித்தல்.*

**இழுபறி** - *தொந்தரை.*

**இழுபறிப்படுதல்** - *தொந்தரைப்படுதல்.*

**இழுப்பாட்டியம்** - *தாமதம்.*

**இழுப்பாணி** - *கலப்பையினோருறுப்பு, தாமதகாரன்.*

**இழுப்பு** - *இசைப்பு, இழுக்குதல், சத்தத்தை நீட்டி வழங்கல், தாமதம்.*

**இழுப்புண்ணுதல்** - *இழுக்கப்படுதல்.*

**இழுமு** - *சந்தோஷம், தித்திப்பு.*

**இழுமெனல்** - *அனுகரணவோசை, இனிமை.*

**இழும்** - *இனிமை, சந்தோஷம்.*

**இழுவல்** - *இழுப்பாட்டிமம்.*

**இழு** - *இழுக்கப்படுவது, இழுத்த சுவடு, இழுப்பு.*

**இழுவைக்கயிறு** - *இழுக்குங்கயிறு, நெடுங்கயிறு.*

**இழை** - *ஆபரணம், இழையென்னேவல், கலத்தலைச்செய் செய்தலைச் செய்யென்னேவல், காப்பு, பஞ்சிநூல், கூட்டம்.*

**இழைக்கயிறு** - *மெல்லியகயிறு.*

**இழைக்குளிர்த்தி** - *புடைவையின் மிருது.*

**இழைதல்** - *உட்குழைதல், உரோஞ்சுதல், கலத்தல், பிணைதல்.*

**இழைத்தநாள்** - *நியமித்தநாள், முடிவுநாள்.*

**இழைத்தல்** - *அழுத்துதல், கலப்பித்தல், செய்தல், முடைதல், ஆராய்தல்.*

**இழைநெருக்கம்** - *இழைக்குளிர்த்தி.*

**இழைபு** - *வனப்பெட்டினொன்று, அஃது வல்லொற்றின்றி வருஞ் செய்யுள்.*

**இழைப்பிடித்தல்** - *காயங்காட்டல்.*

**இழைப்புடைவை** - *நல்லாடை.*

**இழைப்புளி** - *சீதளி.*

**இழைப்போடுதல்** - *புடைவை பொத் துதல்.*

**இழையூசி** - *மெல்லியவூசி.*

**இழையோடுதல்** - *நூலோடுதல்.*

**இளகுதல்** - *ஈரித்தல், குழைதல், தணி தல், தளர்தல், நுகைதல், நெகிழ் தல், மிருதுவாதல்.*

**இளக்கம்** - *இளகியதன்மை, தணிவு, நுகைவு.*

**இளக்கரம்** - *இளக்கம்.*

**இளக்கரித்தல்** - *இளகிப்பின்னிடுதல்.*

**இளக்காரம்** - *இளக்கம்.*

**இளக்குதல்** - *இளகச்செய்தல், நுகைத்தல்.*

**இளங்கதிர்** - *இளஞ்சூல், காலையிற் றோன்றுஞ் சூரியகிரணம், வாலா தித்தன்.*

**இளங்கலையன்** - *ஓர் நெல்.*

**இளங்கற்றி** - *இளங்கன்றுப் பசு.*

**இளங்கன்று** - *எருமை பசு முதலிய வற்றின் சிறுகன்று, மரக்கன்று.*

**இளங்காய்** - *பழுப்படையாதகாய்.*

**இளங்கார்** - *ஓர் நெல்.*

**இளங்கால்** - *இளங்கொழுந்து.*

**இளங்காற்று** - *சிறுகால்.*

**இளங்குடர்** - *கடைக்குடல்.*

**இளங்குரல்** - *மிருதுவானகுரல், இளங்கதிர்.*

**இளங்கொடி** - *நஞ்சுக்கொடி, பெண்.*

**இளங்கொற்றி** - *இளங்கன்று, இளங் கன்றுப்பசு.*

**இளங்கோக்கள்** - *வைசியர்பொது.*

**இளசு** - *இளவல்.*

**இளஞ்சாயம்** - *வெண்சாயம்.*

**இளஞ்சூடு** - *சிறுசூடு.*

**இளஞ்சூல்** - *இளங்கதிர்.*

**இளநாக்கடித்தல்** - *உறுதியற்றசொல் சொல்லல்.*

**இளநிறம்** - *வெளிறினநிறம்.*

**இளநீர்** - *தெங்கி னிளங்காய், தேங் காய்க் குண்ணீர், மணிகளின் வெள்ளொளி.*

**இளநீர்க்குழம்பு** - *ஓர் மருந்து.*

**இளநீலம்** - *வெளிறினநீலம்.*

**இளநெஞ்சு** - *இளகினமனம்.*

**இளந்தலை** - *இளக்கம், இளப்பு.*

**இளந்தாரி** - *வாலிபன்.*

**இளந்தென்றல்** - *சிறுதென்றல்.*

**இளந்தை** - *இளவயசு, இளைது, குழந்தை.*

**இளந்தோயல்** - *ஆயுதங்களினிளகிய தோய்ச்சல்.*

**இளப்பம்** - *கீழ்மையானது.*

**இளமட்டம்** - *வாலிபமுடையது.*

**இளமண்** - *மணற்கொண்டதரை.*

**இளமண்டை** - *நொய்யதலை.*

**இளமத்தியானம்** - *மதியத்தின் முன் பொழுது.*

**இளமழை** - *சிறுமழை.*

**இளமை** - *உன்மத்தம், பாலப்பருவம், வாலைப்பருவம்.*

**இளம்பசி** - *காலப்பசி, சிறுபசி.*

**இளம்பதம்** - *இளம்பாகம், பக்குவ மற்றது.*

**இளம்பருவம்** - *இளவயசு, மெல்லிய பதம்.*

**இளம்பறியல்** - *இளசாய்ப்பறித்தது.*

**இளம்பாடு** - *இளம்பதம்.*

**இளம்பிடி** - *பெண்.*

**இளம்பிள்ளைவாதம்** - *சிறுபிள்ளை வாதம்.*

**இளம்பிறை** - *வளர்பக்கச் சந்திரன், வாலசந்திரன்.*

**இளம்புல்** - *அறுகு, முதிராதபுல்.*

**இளவடி** - *இளம்பதத்தில்வடிப்பு.*

**இளவரசு** - *இராசகுமாரன், வாலபதி.*

**இளவல்** - *இளையோன், குழந்தை, முதிராதது.*

**இளவழிபாடு** - *சிறுபிள்ளைக்கல்வி.*

**இளவாடை** - *சிறுவாடை.*

**இளவாதித்தன்** - *வாலசூரியன்.*

**இளவாலிப்பு, இளவாளிப்பு** - *இளகுதல், ஈரமாகுதல்.*

**இளவிளவேனல்** - *துளிர்காலம்.*

**இளவுச்சம்** - *மத்தியானத்துக்குமுன்.*

**இளவுறை** - *இளந்தயிர்.*

**இளவெந்நீர்** - *சீறுசூடானநீர்.*

**இளவெயில்** - *காலைவெய்யில்.*

**இளவெழுத்து** - *திருந்தாவெழுத்து.*

**இளவேந்து** - *இளவரசு.*

**இளவேனிலுரிமை** - *தென்றல்வீசலும், வண்டு, கிளி, பூவை, அன்றில், குயிலிவை மகிழதலும், மாங்கனியுதிர்தலும், புன்னை, மகிழ், தாழை, சண்பகமிவை மலர்தலும், இந்திரகோபம், கேகய முதலிய மெலிதலுமாம்.*

**இளவேனில்** - *சித்திரைவைகாசியின் பருவம், வெப்பம்.*

**இளாவிருதம்** - *நவகண்டத்தொன்று.*

**இளி** - *அவமதிச்சிரிப்பு, இகழ்ச்சிக் குறிப்பு, இணக்கம், இனியென்னேவல், சிரிப்பு, நெற்றியிற் பிறக்குமிசை, யாழினோர்நரம்பு.*

**இளிதல்** - *இழிதல்.*

**இளித்தல்** - *அவமதித்தல், சிரித்தல்.*

**இளிப்பு** - *இளித்தல், நிந்தை.*

**இளிவு** - *இழிவு.*

**இளை** - *இலக்குமி, இளமை, இனையென்னேவல், காவற்காடு, பிரதான காவல், மேகம், வேலி.*

**இளைஞர்** - *இளையோர்.*

**இளைஞன்** - *சிறுவன்.*

**இளைது** - *இளையது.*

**இளைத்தமண்** - *சத்துக்குறைந்தமண்.*

**இளைத்தல்** - *தொய்ந்துபோதல், மெலிதல்.*

**இளைப்பாறுதல்** - *ஆறிக்கொள்ளுதல், வேலைவிட்டிருத்தல்.*

**இளைப்பாறுமண்டபம்** - *வசந்தமண்டபம்.*

**இளைப்பாற்றி** - *ஓய்ந்திருத்தல்.*

**இளைப்பு** - *தொய்வு.*

**இளைமை** - *இளையதன்மை.*

**இளையவர்** - *பெண்கள்.*

**இளையள், இளையாள்** - *இலக்குமி, பின்பிறந்தாள், பெண்.*

**இளையோன்** - *குமரன், தம்பி.*

**இளைவலி** - *கரிக்காடு.*

**இற** - *இறவென்னேவல், இறால்.*

**இறகர்** - *இறகு.*

**இறகு** - *சிறகு.*

**இறக்கம்** - *இறங்குதுறை, இறங்குந்தன்மை, போறவழி, வீக்கம் முதலிய விறங்குல்.*

**இறக்காது** - *பெயர்த்துச்சொல்லல்.*

**இறக்குதல்** - *இறங்கச்செய்தல், சாதல், தயிலமுதலியவடித்தல்.*

**இறங்கர்** - *குடம்.*

**இறங்கல்** - *இறங்கப்படுவது, அதோகதியாதல், இறங்கு துறை, தாழ்வாரம், படி.*

**இறங்குதல்** - *கீழ்நோக்குதல், கீழ்ப்படுதல்.*

**இங்குதுறை** - *இறங்குந்துறை, காரியத்தின்போக்கு.*

**இறங்குபொழுது** - *சாயங்காலம்.*

**இறங்குமிராசி** - *கடக முதற்றனுவீறான விராசி.*

**இறங்கமொட்டான், இறங்குமுட்டான்** - *ஓர் நெல்.*

**இறடி** - *கருந்தினை.*

**இறத்தல்** - *கடத்தல், சாதல், நடத்தல், மிகுதி.*

**இறந்தகாலம்** - *செல்காலம்.*

**இறந்தகாலவினைத்தொகை** - *செல் காலவினை தொக்குநிற்பது (உம்) கொல்களிறு.*

**இறந்தகாலவினையெச்சம்** - *உ-இ-ய-பு-ஆ-ஊ-என என்னும் ஏழுவிகுதி களையும் பெற்று இடைநிலை பெற்றும் பெறாதும் வருந்தெரி நிலை வினையெச்சம்.*

**இறந்ததுதழீஇயவெச்சவும்மை** - *செல்கால நிகழ்ச்சியை விளக்கி நிற்குமும்மை (உம்) சாத்தனும் வந்தான்.*

**இறந்ததுவிலக்கல்** - *ஓர்யுத்தி.*

**இறந்துபடுதல்** - *சாதல்.*

**இறந்தோர்** - *மரித்தோர்.*

**இறப்பு** - *கடத்தல், சாவு, போக்கு, மிகுதி, வீட்டிறப்பு.*

**இறவி** - *இத்திமரம், சத்ததீவினொன்று.*

**இறல்** - *கிளிஞ்சில், கேடு, நரம்பு, முறிதல், விசை.*

**இறவாணம்** - *ஓர்வாச்சியம்.*

**இறவு** - *இறால், வீட்டிறப்பு, உற்ற சமயம், எல்லை.*

**இறவுளர்** - *குறிஞ்சிநிலமாக்கள்.*

**இறவுள்** - *குறிஞ்சிநிலம்.*

**இறவை** - *இறவு, ஏணி, காடை.*

**இறா** - *இறால்.*

**இறாஞ்சுதல்** - *உராஞ்சுதல், தட்டி யெடுத்தல், பருந்திறாஞ்சல்.*

**இருட்டணம்** - *இராட்டினம்.*

**இறாட்டாணியம்** - *இடுக்கண்.*

**இறாட்டுதல்** - *உரோஞ்சுதல், பகைத் தல், முரண்டுதல்.*

**இறாட்டுப்பிறாட்டு** - *ஏதடை.*

**இறாத்தல்** - *ஆறுபலங்கொண்டது, மீன்தீர்வைத் துறை.*

**இறாத்துக்கட்டுதல்** - *கட்டித்தூக்குதல்.*

**இறால்** - *இடபவிராசி, இறவு, எருது, கார்த்திகைநாள், தேன்கூடு.*

**இறுகுதல்** - *அழுந்துதல், கடினமாதல், நெருங்கல், முரணாதல்.*

**இறுக்கம்** - *உருமம், கடினம், பிசுனித் தனம், வயிரிப்பு.*

**இறுக்கர்** - *பாலைநிலமாக்கள்.*

**இறுக்கல்** - *இறுகச்செய்தல், உடுத்தல், கடிந்துகொள்ளல்.*

**இறுக்கன்** - *உலுத்தன்.*

**இறுங்கு** - *ஓர் சோளம்.*

**இறுதல்** - *அறுதல், ஒடிதல், கெடுதல், முடிதல், முரிதல்.*

**இறுதி** - *எல்லை, சாவு, முடிவு.*

**இறுதிநிலைத்தீபம், இறுதிநிலை விளக்கம், இறுதிவிளக்கு** - *தீபகச் சொற்கடையினிற்பது.*

**இத்தல்று** - *இறையிறுத்தல், ஒடித்தல், சேர்தல், சொல்லுதல், தங்கல், தெளித்தல், முரித்தல், வடித்தல், வெட்டல்.*

**இறுப்பு** - *ஆவணஓலை, இறுத்தல், குடியிறை.*

**இறுமாத்தல்** - *அகங்கரித்தல், ஏமாத் தல்.*

**இறுமாப்பு** - *அகந்தை, ஏமாப்பு, நிமிர்ச்சி, மிகுமகிழ்ச்சி.*

**இறும்பி** - *எறும்பு.*

**இறும்பு** - *குறுங்காடு, சிறுமலை, தாமரைப்பூ, தூறு, மலை, வண்டு.*

**இறும்பூது** - *அதிசயம், சிறுதூறு தாமரைப்பூ, மலை, காந்தள், தளிர், தீபம், பித்திகை, பெருமை, வண்டு.*

**இறுவதஞ்சாமை** - *வணிக ரெண் குணத் தொன்று. அஃது நட்டத் துக்கஞ்சாமை.*

**இறுவரையம்** - *எல்லை, தற்சமயம்.*

**இறுவாய்** - *முடிவு.*

**இறை** - *அணு, அரசன், அற்பம், இறகு, இறையென்னேவல், உயர்ச்சி, உயர்ந்தோன், ஊழித்தீ, எப்பொருட்குமிறைவன், கடமை, கடவுள், கடன், காலவிரைவு, குடியிறை, கையிறை, சிறுமை, தங்கல், தலை, நுட்பம், நோய், பெருமை, மறுமொழி, மூத்தோன், வருத்தம், வீட்டிறப்பு, பிரமன், விடை.*

**இறைகுத்தல்** - *அளவுபார்த்தல், நிதானம் பண்ணுதல்.*

**இறைகூடை** - *சீலாப்பூட்டை, பூட்டை.*

**இறைக்குத்தல்** - *கண்புரட்சியற்று நிற்றல்.*

**இறைச்சி** - *மாமிசம்.*

**இறைச்சிப்பொருள்** - *தருக்கசாத்திரத்தொன்று, புறத்துச்சொல்லுங் குறிப்புப்பொருள், தெய்வ முதலாகிய பொருளின் கண்ணே பிறத்தல்.*

**இறைஞ்சல்** - *குனிதல், வணங்கல்.*

**இறைஞ்சார்** - *பகைவர்.*

**இறைஞ்சி** - *மரவுரி.*

**இறைஞ்சுதல்** - *குனிதல், வணங்குதல்.*

**இறைதல்** - *சிதறுதல், சிந்தல்.*

**இறைத்தல்** - *அள்ளிச்சொரிதல், சொரிதல், நீரிறைத்தல்.*

**இறைபயப்பது** - *இருவகைவிடையினொன்று, அஃது வினாவெதிர் வினாவல், உடன்படல், உறுவது கூறல், உற்றதுரைத்தல், ஏவல், சொற்றொகுத்திறுத்தல்,மறுத்தல்.*

**இறைப்பிளவை** - *கைவரைச்சிலந்தி.*

**இறைப்பு** - *இறைக்குந்தன்மை, சொரிதல்.*

**இறைமகன்** - *அரசபுத்திரன், குமரன், விநாயகன்.*

**இறைமரம்** - *எற்றல்மரம்.*

**இறைமாட்சி** - *அரசியல்.*

**இறைமாண்டார்** - *அரசர்.*

**இறைமை** - *இராட்சியமுறை, தலைமை, தெய்வத்தன்மை.*

**இறைமையாட்டி** - *தலைவி.*

**இறையனார்பொருள்** - *ஓர் பொருளிலக்கணம்.*

**இறையோன்** - *கடவுள்.*

**இறைவன்** - *அரசன், கடவுள், குரு, தலைவன், பிதா, மூத்தோன், பிரமன்.*

**இறைவி** - *இராசாத்தி, தலைவி, மனைவி.*

**இறைவை** - *இறைகூடை, ஏணி, தூற்றுக்கூடை, நீரிறைக்குமரப் பத்தல்.*

**இற்செறிப்பு, இற்செறிவுறுத்தல்** - *கன்னியைவீட்டிவிருத்திக்காத்தல்.*

**இற்பிறப்பு** - *குடிப்பிறப்பு.*

**இற்புவி** - *பூனை.*

**இற்று** - *இஃது, இத்தன்மைத்து, சாரியை (உம்) பதிற்றுப்பத்து.*

**இற்றுப்போதல்** - *அழுகிப்போதல், முரிந்துபோதல்.*

**இற்றை** - *இன்று.*

**இனக்கட்டு** - *இனக்கூட்டம், இனமுறை.*

**இனங்காக்கும் யானை** - *யானைத் திரட்குத்தலையானை.*

**இனத்தார்** - *சுற்றத்தார்.*

**இனமொழிவிடை** - *இனத்தைச் சொல் விடை (உம்) மற்றைய செய்வேன்.*

**இனம்** - *குலம், கூட்டம், சுற்றம், திரள், பசுக்கூட்டம், மந்திரிகள், வருக்கம்.*

**இனமோனை** - *இனவெழுத்துக் களொன்றற் கொன்று மோனையாய் வருவது.*

**இனவழி** - *வமிசபாரம்பரை.*

**இனவெதுகை** - *இனவெழுத்துக் களாலாகுமெதுகை.*

**இனன்** - *அரசன், சந்திரன், சூரியன், உபாத்தி.*

**இனா** - *நகைச்சொல்.*

**இனாம்** - *நன்கொடை.*

**இனி** - *இப்பால், இப்பொழுது, பின்னால்.*

**இனித்தல்** - *இதப்படுதல், தித்தித்தல்.*

**இனிப்பு** - *இனிமை, சினேகம், தித்திப்பு.*

**இனிமை** - *இனிப்பு, சந்தோஷம், மேன்மை.*

**இனியவைகூறல்** - *வாக்கின் நற்குணந்நான்கினொன்று அஃது நயச்சொல்.*

**இனைதல்** - *இரங்கதல், வருந்தல்.*

**இனைத்தல்** - *ஒலித்தல்.*

**இனைத்து** - *இத்தன்மைத்து.*

**இன்** - *இனிமை, ஐந்தனுருபு (உம்) மலையின் வீழருவி, சாரியை (உம்) பூவின்மணம்.*

**இன்கண்** - *பிரியம்.*

**இன்சபம்** - *இராசசபை.*

**இன்சொல்** - *நயச்சொல்.*

**இன்சொல்லுவமை** - *ஓரலங்காரம், அஃதுபொருளில் உவமைக்கொரு மிகுதி தோன்றக் கூறியின்னமிகுதி யுடைத்தெனினு மொப்பதன்றிச் சிறந்ததன்றென்பது.*

**இன்பம்** - *அகமகிழ்ச்சி, இனிமை, ஓரலங்காரம். அஃது சொல்லானாயினும் பொருளானாயினுஞ் சுவை படத்தொடுப்பது, சுகம், நூற்பயனான்கி னொன்று, பெரியோரியல்பி னொன்று, யாக்கைக் குறுகுற்றம் பதி னெட்டினொன்று.*

**இன்பன்** - *கணவன்.*

**இன்பு** - *இன்பம்.*

**இன்பூறல்** - *சாயவேர்.*

**இன்மை** - *இல்லாமை, துக்கம்.*

**இன்மைநவிற்சியணி** - *ஓரலங்காரம், அஃது யாதேனு மொன்றின்மையால் உபமேயத்திற்கு உயர் பேனுந் தாழ்வேனுந்தோன்றச் சொல்லுதல்.*

**இன்றியமையாமை** - *இல்லாதுநிறையாமை.*

**இன்று** - *அசைச்சொல், இந்தநாள்.*

**இன்ன** - *இத்தன்மைய, உவமையுருபு.*

**இன்னணம்** - *இவ்விதம்.*

**இன்னதல்லதிதுவெனமொழிதல்** - *ஓர் யுத்தி.*

**இன்னம், இன்னமும்** - *அதிகம், இதுவரையும், மறுபடியும், மேலும்.*

**இன்னல்** - *தீமை, துன்பம்.*

**இன்னா** - *ஆகாமை, தீமை, துன்பம்.*

**இன்னாங்கு** - *தீமை, துன்பம்.*

**இன்னாச்சொல்** - *இழிச்சொல், கடுஞ்சொல், நகைச்சொல்.*

**இன்னாதார்** - *பகைவர்.*

**இன்னாது** - *தீது.*

**இன்னாமை** - *ஆகாமை, தவறு, வேண்டாமை.*

**இன்னார்** - *இத்தன்மையர், பகைவர்.*

**இன்னிசை** - *இராகம், ஏழுநரம்புள்ள வீணை.*

**இன்னிசைக் கலிப்பா** - *கலிப்பாவு ளொன்று.*

**இன்னிசைக்காரர்** - *பாணர்.*

**இன்னிசைச்சிந்தியல் வெண்பா** - *இன்னிசைவெண்பாப்போனடந்து மூன்றடியான் முடிவது.*

**இன்னிசைவெண்பா** - *வெண்பாவு ளொன்று.*

**இன்னியர்** - *பாடுவார்.*

**இன்னே** - *இத்தன்மையவாய், இப்பொழுதே.*

**இன்னோசை** - *இனியவோசை.*

**இன்னிசைவெண்பா** - *அஃது ஒரு விகற்பத் தானேனும் பல விகற்பத்தானேனு நான்கடியாய்த் தனிச் சொல்லின்றி வருவது.*

## ஈ

**ஈ** - *இலையான், ஈயென்னேவல், ஓரெழுத்து, கொசுகு, முன்னிலை யசைச்சொல், (உம்) நின்றீபெரும, வண்டு.*

**ஈகம்** - *சந்தனம்.*

**ஈகை** - *இண்டங்கொடி, கற்பகம், கொடை, பொன், மேகம், பூமி, முயற்சி, விருப்பம்.*

**ஈகையாளன்** - *கொடையாளன்.*

**ஈங்கிசை, ஈங்கிஷை** - *கொலை, வடு.*

**ஈங்கு** - *இண்டங்கொடி, இவ்விடம், சந்தனம்.*

**ஈங்கை** - *இண்டங்கொடி.*

**ஈசசகி** - *குபேரன்.*

**ஈசத்துவம்** - *அட்டசித்தியினொன்று, அஃது யாவர்க்குந்தேவனாகுதல்.*

**ஈசல்** - *சீழ்க்கை.*

**ஈசனாள்** - *ஆதிரைநாள்.*

**ஈசன்** - *அரசன், எப்பொருட்குமிறை வன், கடவுள், குரு, மூத்தோன்.*

**ஈசன்** - *அயன், அரி, ஈசானன், ஐயன், சிவன்.*

**ஈசானம்** - *சிவனைம்முகத்தொன்று, வடகீழ்த்திசை, சிவன், வடகீழ்ப் பாலன்.*

**ஈசானன்** - *வடகீழ்த்திசைப்பாலன்.*

**ஈசான்னியம்** - *இசானம்.*

**ஈசுவரன்** - *ஈச்சுரன்.*

**ஈசுரமூலி** - *பெருமருந்துக்கொடி.*

**ஈசுரவிந்து** - *இரதம்.*

**ஈசுரவேர்** - *தராசுக்கொடி.*

**ஈசுரன்** - *இசன், ஈச்சுவரன்.*

**ஈசுவரிபிந்து** - *கெந்தகம்.*

**ஈசெல், ஈசல்** - *சிறகுள்ளகறையான்.*

**ஈச்சத்தோல்** - *ஈயினெச்சம்பிடித்த தோல்.*

**ஈச்சப்பி** - *உலோபி.*

**ஈச்சு** - *ஓர்மரம்.*

**ஈச்சுக்கோட்டல்** - *சீழ்க்கைவிடுதல்.*

**ஈச்சுர** - *ஓர்வருடம்.*

**ஈச்சுரமூலி** - *பெருமருந்து.*

**ஈச்சுரம்** - *சிவதத்துவமைந்தினொன்று. அஃது ஞானக்குன்றிக்கிரியை யுயர்ந்தது.*

**ஈச்சுரன், ஈச்சுவரன்** - *கடவுள், தலை வன், அனுபவந்தருகிறவன், சிவன்.*

**ஈச்சோப்பி** - *ஈப்பீணி, ஈயோட்டி.*

**ஈஞ்சு** - *ஓர் மரம்.*

**ஈஞ்சை** - *இகழ்ச்சி, கொலை, நிந்தை.*

**ஈடணம்** - *புகழ்.*

**ஈடன்** - *திராணிவான், பணக்காரன், பலசாலி.*

**ஈடாடுதல்** - *கொளகொளத்தல், தளர் தல்.*

**ஈடாட்டம்** - *ஊசாட்டம், தளர்தளர்ப்பு, திராணி, விசாலம்.*

**ஈடிகை, ஈஷிகை** - *எழுதுகோல்.*

**ஈடிதம்** - *துதித்தல்.*

**ஈடு** - *உவமை, ஓர் மருந்து, கடன் கோடற்குவைத்த அடைவு, குழைவு, சரியொத்தது, பெருமை, பதில், வலி.*

**ஈடேறுதல்** - *உய்யப்பெறுதல், கடைத் தேறுதல்.*

**ஈடேற்றம்** - *இரட்சிப்பு, உய்வு, கடைத் தேற்றம், மீட்பு.*

**ஈட்சணம்** - *நோக்கம், பார்வை.*

**ஈட்டம்** - *கூட்டம், தேட்டம்.*

**ஈட்டல்** - *சம்பாதித்தல், தொகுத்தல், வணிகரெண்குணத்தொன்று.*

**ஈட்டி** - *சவளம்.*

**ஈணை** - *அகணி.*

**ஈட்டியது** - *சஞ்சிதவினை, தேடியது.*

**ஈண்டல், ஈண்டுதல்** - *கூடல், கூட்டம், நெருக்கம், நெருங்கல்.*

**ஈண்டு** - இவ்வண்ணம், இவ்விடம், ஈண்டென்னேவல், சீக்கிரம், புலித் தொடக்கி.

**ஈண்டை** - இவ்விடம்.

**ஈதல்** - அந்தணர் அரசர் வணிகர்க் குரிய வறுதொழிலினொன்று, கணக்கிலீவு பண்ணுதல், கொடுத் தல், சொரிதல்.

**ஈத்தல்** - ஈக்குதல்.

**ஈந்தி, ஈந்து** - ஈஞ்சு.

**ஈப்பி** - இலையானெச்சம், ஈர்.

**ஈப்பிணி** - உலோபி.

**ஈப்புலி** - ஓர் செந்து.

**ஈமத்தாடி** - சிவன்.

**ஈமப்பறவை** - கழுகு, கரகம், பருந்து

**ஈமம் –** சுடுகாடு, விறகு.

**ஈம்** - சுடுகாடு.

**ஈயக்களங்கு** - வங்கவெட்டை.

**ஈயக்கிட்டம்** - ஈயமுருக்கியெடுத்த கிட்டம்.

**ஈயக்குழவி** - நீலப்பாஷாணம்.

**ஈயத்தின்பிள்ளை** - நீலபாஷாணம்.

**ஈயமலை** - ஓர் மலை.

**ஈயம்** - பஞ்சலோகத்தொன்று.

**ஈயல்** - ஈதல், சிறகுமுனைத்தகறையர்.

**ஈரசைச்சீர்** - அஃது தேமா - புளிமா - கருவிளம் - கூவிளம் எனும் வாய் பாட்டான் வருவது.

**ஈரடிப்பா** - குறள் வஞ்சிப்பாச்சிறுமை.

**ஈரடிமடக்கு** - அடிகளுளிரண்டடி மடங்கி வருவது.

**ஈரவெண்காயம்** - ஈரஉள்ளி.

**ஈரிச்சல்** - குளிர்தல்.

**ஈர்ங்கை** - உண்டுகழுவியகை.

**ஈழைக்கொல்லி** - தாழகம்.

**ஈறல்** - பின்னல்.

**ஈறுகட்டி** - இரசகருப்பூரம்.

**ஈற்றசையோகாரம்** - ஈற்றசையாகவரு மோகார விடைச்சொல்.

**ஈற்றயலெழுத்து** - சொல்லினிறுதி யெழுத்துக் கயலெழுத்து.

**ஈற்று** - ஈனுகை, பெறுகை.

**ஈற்றுளைதல்** - ஈனவருந்துதல்.

**ஈற்றெலும்பு** - கடையில்நரம்பு.

**ஈற்றெழுத்து** - உயிரபன்னிரண்டும் ஞ்-ண்-ந்-ம் ய்-ல்-வ்-ழ்-ள்-ன் என்னு மெழுத்துக்களும்.

**ஈற்றெழுத்துக் கவி** - முற் பாட்டினந் தத்தெழுத்தேனுஞ் சொல்லேனும் வரும்பாட்டிற் காதியாய் வருவது.

**ஈனசாதி** - எளியசாதி.

**ஈனமிலணங்கு** - தெய்வப்பெண்.

**ஈனம்** - அழிவு, இழிவு, குறைபாடு, தள்ளல்.

**ஈனல், ஈன்றல்** - ஈனுதல், கதிர்.

**ஈனனம்** - வெள்ளி.

**ஈனாமலடு** - ஒருமுறையுமீனாத மலடு.

**ஈனாயம்** - சங்கையீனம், நிந்தை.

**ஈனுதல்** - கதிர்முதலியன கக்குதல், பெறுதல்.

**ஈனுமணிமை** - புனிறு.

**ஈனை** - இலைநரம்பு, பருமட்டம்.

**ஈன்றணிமை, ஈன்றணுமை** - ஈனு மணிமை.

**ஈன்றல்** - உண்டாதல்.

**ஈன்றார்** - தந்தைதாயர்.

**ஈன்றாள்** - தாய்.

**ஈன்றான்** - தந்தை, பிரமன்.

## உ

**உ** - ஓர் சுட்டு, உருக்கம், கட்டளை, கோபம், சம்மதியிவற்றைக் காட்டு மோரு பசருக்கம், ஓரெழுத்து, ஓர் வினையெச்ச விகுதி (உம்) செய்து, தன்மை யொருமை வினை விகுதி,

(உம்) உண்கு, சாரியை, சிவன், பிரமன்.

**உஃது** - ஒன்றன்படர்க்கைச் சுட்டுப் பெயர்.

**உககனல்** - வடவைத்தீ.

**உகசந்தி** - உகத்தின் சந்திப்பு.

**உகசூரியர்** - பன்னிருசூரியர்.

**உகட்டுதல்** - தேக்கெடுத்தல், புரள்தல்.

**உகத்தல்** - உயர்தல், எழும்பல், சந்தோஷித்தல், விரும்பல்.

**உகப்பிரளையம்** - யுகமுடிவு.

**உகப்பு** - உயர்ச்சி, சந்தோஷம்.

**உகமாருதம்** - ஊழிக்காற்று.

**உகம்** - நாள், பாம்பு, பூமி, முடிவு, யுகம்.

**உகவை** - சந்தோஷம்.

**உகரக்குறுக்கம்** - குற்றியலுகரம்.

**உகரம், உகாரம்** - ஓரெழுத்து.

**உகருத்திரர்** - பன்னோருருத்திரர்.

**உகல்** - சிந்தல், சொரிதல்.

**உகளம்** - இரண்டு.

**உகளல்** - கடத்தல், குதித்தல், பாய்தல்.

**உகளித்தல்** - குதித்தல்.

**உகளுதல்** - கடத்தல், கட்டுதல், குதித்தல், பாய்தல்.

**உகாந்தம்** - யுகமுடிவு.

**உகாரி** - உருத்திரமூர்த்தி.

**உகிர்** - நகம்.

**உகுணம்** - மூட்டைப்பூச்சி.

**உகுதல்** - சொரிதல், பொடியாதல், விடுதல்.

**உகுத்தல்** - உதிர்த்தல், ஊற்றுதல், சிந்தல், சொரிதல், விடுத்தல்.

**உகைதல்** - செல்லுதல், எழுதல்.

**உகைத்தல்** - எழுதல், ஏறுதல், செலுத்தல்.

**உக்கம்** - ஆலவட்டம், இடபம், இடை, கோழி, தீ, பசு, பந்து.

**உக்கலை** - மருங்கின்பக்கம்.

**உக்கல்** - உக்கினது, உக்குதல், பக்கம்.

**உக்கனம்** - இராக்காவல்.

**உக்களை** - மருங்கின்பக்கம்.

**உக்கா** - கஞ்சாக்குடுகு, கள்.

**உக்காக்கம்** - அரைநாண்.

**உக்காரம்** - சத்திபண்ணல், தொனுப்போடுதல்.

**உக்காரி** - பிட்டு.

**உக்கிரகந்தம்** - உள்ளி, பெருங்காயம், வசம்பு.

**உக்கிரகெந்தம்** - வசம்பு, வேம்பு.

**உக்கிரம்** - உறைப்பு, கடுமை, கொடுமை, தலைக்காவல், மூர்க்கம், வேகம், உத்திரம், குரூரம், கோபம், பயங்கரம், பரணி, பாத்திரபதம், மகம், முருங்கை, வெப்பம்.

**உக்கிரன்** - சிவன், வீரபத்திரன்.

**உக்கிரன்** - சத்திரியனுக்குஞ் சூத்திரிக்கும் பிறந்து வேட்டைத் தொழில் செய்வோன், துருவாசன், விசுவாமித்திரன்.

**உக்கிராணம்** - களஞ்சியம்.

**உக்கிரி** - துற்கை, வசம்பு.

**உக்கிருட்டம்** - மேன்மை.

**உக்கு** - இலவுங்கம்.

**உக்குதல்** - இற்றுப்போதல்.

**உக்குளான்** - சருகுமுயல்.

**உங்கரித்தல்** - அதட்டுதல், உரப்புதல்.

**உங்காரம்** - உம்மென்றுரப்பல்.

**உங்காரித்தல்** - உங்கரித்தல்.

**உங்கு** - உவ்விடம்.

**உங்கை** - உன்மாதா, உன்றங்கை.

**உங்ஙனம்** - உத்தன்மை, உவ்விடம்.

**உசலம்** - ஓர் மரம்.

**உசல்** - ஓர் மரம்.

**உசற்காலம்** - சூரியோதையம்.

**உசனம் –** *உபபுராணம் பதினெட்டி னொன்று, தருமநூல்பதினெட்டி னொன்று.*

**உசனன்** - *சுக்கிரன்.*

**உசா** - *ஆலோசனை, உசாவென் னேவல், ஒற்றர்.*

**உசாத்துணை** - *உசாவுதுணை.*

**உசார்** - *சாக்கிரதை.*

**உசாவல், உசாவுதல்** - *ஆராய்தல், எண்ணல்.*

**உசி** - *கூர்மை.*

**உசிதசமயம்** - *அவதரம்.*

**உசிதம்** - *உத்தமம், தகுதி, மேன்மை, யோக்கியம், அழகு.*

**உசிதன்** - *பாண்டியன்.*

**உசிரம்** - *இடபம், கிரணம்.*

**உசிப்புதல்** - *ஏவுதல்.*

**உசிலை, உசில்** - *சீக்கிரிமரம்.*

**உசு** - *உளு.*

**உசுக்கல், உசுப்புதல்** - *ஏவுதல்.*

**உசும்புதல்** - *இயங்குதல்.*

**உச்சடை** - *கொடிக்கூம்பு, கோபம், வழக்கம்.*

**உச்சட்டம்** - *இலக்கு, நேர்.*

**உச்சந்தம்** - *அதிகப்படுதல், ஒடுக்கம்.*

**உச்சந்தலை** - *உச்சிச்சிரசு.*

**உச்சதரு** - *தென்னமரம்.*

**உச்சதேவன்** - *கிருட்டிணன்.*

**உச்சந்திரம்** - *கடைச்சாமம்.*

**உச்சபாஷணம்** - *பலக்கப்பேசல்.*

**உச்சம்** - *உயர்ச்சி, கிரகவுச்சம், மத்தி யானம், வல்லிசை, நுதி.*

**உச்சயனி** - *உச்சினிநகரம்.*

**உச்சரித்தல்** - *சொல்லுதல்.*

**உச்சரிப்பு** - *எழுத்தினோசை.*

**உச்சவீடு** - *உதயத்துக்கேழாமிடம்.*

**உச்சலம்** - *அறிவு.*

**உச்சற்கம்** - *அபானம்.*

**உச்சன்** - *இலக்குக்கெறியும் பொருள்.*

**உச்சாகம், உச்சாயம்** - *முயற்சி.*

**உச்சாசனம்** - *கொலை.*

**உச்சாடணம்** - *அகற்றல், ஏவுதல், கலை ஞானமறுபத்தினான்கினொன்று.*

**உச்சாட்டியம்** - *ஓட்டல்.*

**உச்சாரணஞ்ஞன்** - *பரபாஷைக்காரன்.*

**உச்சாணி –** *உயர்ப்பு.*

**உச்சாரணம், உச்சாரணை** - *உச்சரித் தல், உச்சாடணம்.*

**உச்சாரம்** - *உயர்ச்சி, உச்சரிப்பு.*

**உச்சாரிதம்** - *உச்சரிக்கப்பட்டது.*

**உச்சி** - *ஆண்மயிர், தலை, நடு, நடுப் பகல், நாய், துனி, மத்தியானம், மயிர்முடி, விடிந்துபத்து நாழி கை யின் மேற்பத்துநாழிகைப்பொழுது.*

**உச்சிக்கரண்டி** - *குழந்தைகளுச்சியி லெண்ணெய்விடுங்கரண்டி.*

**உச்சிக்கிழான்** - *சூரியன்.*

**உச்சிக்குடுமி** - *உச்சிச்சிகை.*

**உச்சிக்குழி** - *உச்சித்துவாரம், தலை நடு.*

**உச்சிக்கொண்டை** - *உச்சியின்மயிர் முடி.*

**உச்சிச்சுட்டி** - *ஓராபரணம்.*

**உச்சிட்டசாங்கரியம்** - *எச்சிற்பாத்திரத் திலுண்ணல்.*

**உச்சிட்டமோதனம்** - *மெழுகு.*

**உச்சிட்டம்** - *எச்சில்.*

**உச்சிதம்** - *அழகு, உயர்ச்சி, தகுதி, மேன்மை.*

**உச்சித்திலகம்** - *ஓர் மரம்.*

**உச்சிப்பிளவை** - *உச்சந்தலையிற் சிலந்தி.*

**உச்சிப்பின்னல்** - *உச்சிச்சடை.*

**உச்சிமோத்தல்** - *உச்சிச்சிரசைமுகத் தல்.*

**உச்சிரட்டம்** - *தள்ளப்பட்டது.*

**உச்சிரதம்** - *பிரண்டை.*

**உச்சிரதன்** - *பிறந்தவன்.*

**உச்சிரயம்** - *உயரம், முக்கோணத் தினிறு திட்டவரி.*

**உச்சிரயோகன்** - *கனவான்.*

**உச்சிருதி** - *உயரம், முக்கோணத் தினிறு திட்டவரி.*

**உச்சிவிடுதி** - *மத்தியானவிடுதலை.*

**உச்சினிமாகாளி** - *ஓர்காளி, விக்கிர மாதித்தனிருந்தவூர்.*

**உச்சின்னம்** - *சமப்படுதல்.*

**உச்சுக்காட்டுதல்** - *தூண்டிவிடுதல்.*

**உச்சுதல்** - *இலக்குக்கெறிதல், தள்ளு தல், வெல்லுதல்.*

**உச்சுவலம்** - *ஆசை, பொன்.*

**உச்சுவாசம்** - *சுவாசம்விடுதல்.*

**உச்சூடை** - *கொடிக்கம்ப நுனி.*

**உச்சூனம்** - *கொழுப்பு.*

**உச்சேசனம்** - *மிச்சம், வரள்தல்.*

**உச்சேதம்** - *அழித்தல், வெட்டல்.*

**உச்சைச்சிரவம்** - *இந்திரன்குதிரை.*

**உஞற்று** - *உஞற்றென்னேவல், ஊக்கம், முயற்சி, வழக்கோதல், வளக்கம்.*

**உஞற்றுதல்** - *ஏவிவிடுதல், செய்தல், தவறிப்போதல், முயற்சி பண்ணு தல்.*

**உஞ்சட்டை** - *ஒஞ்சட்டை.*

**உஞ்சல்** - *ஊஞ்சல்.*

**உஞ்சு** - *நாயையேவிவிடுங் குறிப்புச் சொல்.*

**உஞ்சுக்காட்டுதல்** - *நாயையேவி விடுதல்.*

**உஞ்சை** - *அவந்திநகர்.*

**உடக்கு** – *சுரையினுட்புரி.*

**உடங்கு** - *ஒருங்கு, ஒன்றிப்பு, கூடி நிற்றல்.*

**உடசம்** - *சிறுகுடில், பன்னகசாலை.*

**உடந்தை** - *உரித்து, கூட்டு, சேர்மானம்.*

**உடம்** - *உடன்.*

**உடம்படிக்கை, உடன்படிக்கை, உடம் பிடிக்கை, உடன்பிடிக்கை** - *சம்மதம், பொருத்தச்சீட்டு, பொருத்தம்.*

**உடம்படுதல்** – *சம்மதப்படுதல்.*

**உடம்படுமெய்** - *உயிருமுயிரும் புணர விடைவருஞ் சந்தி யொற்று.*

**உடம்படுவிலக்கு** – *ஓரலங்காரம், அஃது உடம்பட்டார் போலக் கூறி விலக்குவது.*

**உடம்பாடு** - *ஒருமிப்பு, சம்மதம்.*

**உடம்பிடி** - *வேல்.*

**உடம்பு** - *ஒற்றெழுத்து, சரீரம்.*

**உடம்புபுரட்டுதல்** - *பிள்ளைப்பருவச் செயலினொன்று.*

**உடம்பெடுத்தல்** - *உடம்புதேறல், பிறத்தல்.*

**உடம்பை** - *கலங்கனீர்.*

**உடலம்** - *சரீரம்.*

**உடலல், உடறல்** - *சினக்குறிப்பு, பகைத்தல், பிரகாசித்தல், பெருங் கோபம், பொருதல்.*

**உடலெடுத்தல்** - *சரீரந்தேறுதல், சனனித்தல்.*

**உடலெழுத்து** - *மெய்யெழுத்து.*

**உடல்** - *உடலென்னேவல், ஒற்றெ ழுத்து, சரீரம், பொன், முப்பகை யினொன்று, பொருள்.*

**உடல்வாசகம்** - *நெட்டெழுத்து வாசகம்.*

**உடல்வேலை** - *பருவேலை.*

**உடற்குறை** - *தலையற்றவுடல்.*

**உடற்கூறு** - *உடலினிலட்சணம், உடலின்சுபாவம்.*

**உடற்கொழுப்பு** - *குடற்கொழுப் பேறு தல், அஃது தினைமறப்பிக்குமோர் நோய்.*

**உடற்றல்** - *உலைத்தல், சினக்குறிப்பு, பகைகொள்ளல், பெருங்கோபம், பொருந்தல், வருத்துதல்.*

**உடற்றழும்பு** - *உடன்மறு.*

**உடனிகழ்ச்சி, உடனிகழ்தல், உடனிகழ்வு** - *ஒருங்குசம்பவித்தல், மூன்றாம்வேற்றுமைப் பொருள்களினொன்று.*

**உடனிகழ்ச்சியணி** - *ஓரலங்காரம், அஃது புணர்நிலை.*

**உடனிலை –** *கூடநிற்றல், தன்னொடு தானிற்றல்.*

**உடனிலைமயக்கம்** - *ஓரோற்றே தன்னொடு தான் மயங்குதல்.*

**உடனிலைமெய்மயக்கம்** - *உடனிலை மயக்கு.*

**உடனைக்குடனே** - *சம்பவித்தவுடனே.*

**உடன்** - *அன்னேரம், கூட.*

**உடன்கட்டையேறுதல்** - *நாயகனுடனேமனைவிதீயேறுதல், பிரியேனென்று நிற்றல்.*

**உடன்கூட்டு** - *ஒன்றுகூட்டு.*

**உடன்கை** - *உடனே.*

**உடன்பங்காளி** - *கூடியபங்குக்காரன்.*

**உடன்பங்கு** - *கூட்டுப்பங்கு, சரிபங்கு.*

**உடன்படல்** - *எழுவகைமதத்தினொன்று.*

**உடன்படல்விடை, உடன்படுவிடை** - *வினாயதற்குடன்பாடுகாட்டுமொழி, (உம்) செய்வேன்.*

**உடன்படுதல்** - *சம்மதித்தல்.*

**உடன்படுத்துதல்** - *இணக்குதல்.*

**உடன்பாடு** - *சம்மதம்.*

**உடன்பாட்டுவினை** - *விதிவினை.*

**உடன்பிறந்தார்** - *சகோதரர்.*

**உடன்பிறப்பு** - *சகோதரம்.*

**உடன்போக்கிடையீடு** - *போக்கறிவுறுத்தன் முதலிரக்கமீறாகிய நான்குமாம்.*

**உடன்போக்கு** - *போக்கறிவுறுத்தன் முதலாகத் தோற்றலீறாகிய வெட்டும்.*

**உடன்போக்குவிரி** - *பாங்கி தலைவற்குடன் போக்குணர்த்தன் முதலாகத் தலைவன்றன் பதியடைந்தமைதலைவிக் குணர்த்த லீறாகிய பதினெட்டும்.*

**உடன்மகரம்** - *நடுப்புடைவையிற் பற்றுவிக்குமகரம்.*

**உடன்றல்** - *கோபம், சினக்குறிப்பு, பொருதல்.*

**உடு** - *அகழி, அம்பிறகு, அம்பு, அம்புத்தலை, ஆடு, உடுவென்னேவல், ஓடக்கோல், சீக்கிரி மரம், விண்மீன்.*

**உடுகாட்டி** - *பொன்னாங்காணி.*

**உடுக்கு** - *இடைசுருங்குபறை, ஒரு கட்பறை, சீலை.*

**உடுக்கை** - *இடைசுருங்கியபறை, சீலை.*

**உடுத்தல்** - *ஆடைசாத்தல், சோலை முதலிய சூழப்பெறுதல், தரித்தல்.*

**உடுத்தாடை** - *சிற்றாடை.*

**உடுத்துதல்** - *ஆடை அணிதல்.*

**உடுபதி** - *சந்திரன், மரமஞ்சள்.*

**உடுநீர்** - *அகழ்.*

**உடுபதம்** - *ஆகாயம்.*

**உடுபம்** - *தெப்பம்.*

**உடுபன்** - *சந்திரன்.*

**உடுப்பகை** - *சூரியன்.*

**உடுப்பு** - *உடை, புடைவை.*

**உடும்புமுத்து** - *உடும்பிற்பிறந்த முத்து.*

**உடுப்பை** - *உடுப்பாயென்னுமுற்று சீக்கிரிமரம்.*

**உடுமானம்** - *உடை.*

**உடும்பு** - *ஓர் மிருகம்.*

**உடுவின்காந்தன், உடுவின்வேந்தன்** - *சந்திரன்.*

**உடுவை** - *அகழ்.*

**உடை** - *உடைமை, உடையென்னேவல், சீலை, செல்வம், வேலமரம், உள், கலணை, கால்.*

**உடைகுளம்** - *பூராடநாள்.*

**உடைதல்** - *கெடுதல், சாய்தல், தகருதல், தளர்வு.*

**உடைத்தல்** - *கெடுத்தல், தகர்த்தல், தளர்த்தல்.*

**உடைப்பு** - *உடைந்தறவு, தகர்ப்பு, தளர்வு.*

**உடைமானம்** - *உடை, புடைவை.*

**உடைமை** - *உடையதன்மை, உரிமை, பணதி, பாக்கியம், பொருள்.*

**உடைய** - *ஆறாம்வேற்றுமையினோர் சொல்லுருபு.*

**உடையல்** - *உடைகுதல், உடைந்தது, முரியல்.*

**உடையவன், உடையான்** - *உரிமைக்காரன், எசமான், கடவுள், சொந்தக்காரன்.*

**உடைவாள்** - *உடையிற்கட்டும்வாள்.*

**உடைவு** - *தகர்வு.*

**உடைவேல்** - *குடைவேல்.*

**உட்கட்டு** - *உள்ளூரம், ஓராபரணம், வீட்டினுட்கட்டு.*

**உட்கரணம்** - *அந்தர்க்கரணம்.*

**உட்கரிஷம்** - *அதிசயம், விளிம்பு.*

**உட்கருத்து** - *உட்பொருள், மனக்கருத்து.*

**உட்கல்** - *அஞ்சல், மடிதல், வெட்கல்.*

**உட்காத்தல், உட்காருதல்** - *இருத்தல்.*

**உட்காய்ச்சல்** - *உள்ளுக்குக் காய்தல், ஓர் நோய்.*

**உட்கு** - *உட்கென்னேவல், பயம், வெட்கம்.*

**உட்குத்துப்புறவீச்சு** - *ஓர் நோய்.*

**உட்குறிப்பு** - *மனக்குறிப்பு.*

**உட்குற்றம்** - *காமமுதலியுகுற்றம்.*

**உட்கூதல்** - *தோன்றாதகுளிர்.*

**உட்கை** - *உட்கல், உட்பக்கம், உள்ளங்கை.*

**உட்கைச்சுற்று** - *வலச்சுற்று.*

**உட்கொள்ளுதல்** - *அருந்துதல், திருவுளங்கொள்ளுதல், மனசில் வைத்தல்.*

**உட்கோபம்** - *தோன்றாக்கோபம்.*

**உட்டணசஞ்சீவி** - *நீர், பிரண்டை.*

**உட்சமையம்** - *சைவமுதலியவறு சமயம்.*

**உட்செல்லல்** - *உட்போதல்.*

**உட்டணகாசம்**-*கண்ணோயுளொன்று.*

**உட்டணசயித்தியம்** - *வெம்மையிற்றண்ணெனவு.*

**உட்டணசிகை** - *குசன் சனி பானு நின்றகால்.*

**உட்டணம்** - *அகோரம், வெப்பம், மிளகு.*

**உட்டணவாயு** - *உட்டணங்கண்டு உடலிற்கிளரும்வாயு.*

**உட்டணாசகம்** - *குளிர்காலம்.*

**உட்டணித்தல்** - *உருமித்தல், வெப்பங்கொள்ளல்.*

**உட்டணோதகம்** - *வெந்நீர்.*

**உட்டணோபகமம்** - *வேனிற்காலம்.*

**உட்டிரம்** - *களர்நிலம், நீர், முட்செவ்வந்தி.*

**உட்டுளை** - *குழாய், புரை.*

**உட்டெளிவு** - *உள்ளத்தெளிவு, பழுது திருத்தியெடுத்துக் கொண்டது, பேரறிவு.*

**உட்பகை** - *காமமுதலியவறுபகை.*

**உட்படி** - *படிக்கற்குவாடிய இடையறிய இடும்படிக்கல்.*

**உட்படுதல்** - *உள்ளே போதல், எல்லைக்குக் கீழ்ப்படிதல், ஏற்படுதல்.*

**உட்படுத்தல்** - *உடன்படுத்தல், உட்செலுத்தல், உள்ளேசேர்த்தல்.*

**உட்பத்தியம்** - *மருந்துசாதனை பண்ணுந்தற்காலபத்தியம்.*

**உட்பிரவேசித்தல்** - *உட்படுதல்.*

**உட்புரை** - உட்டுவாரம்.

**உட்பொருள்** - உட்கருத்து, உட்பயன்.

**உட்போடுதல்** - வசமாக்கிக் கொள்ளுதல்.

**உணக்கம்** - வாட்டம்.

**உணக்கல்** - காய்ச்சுதல், துக்கப்படுத்துதல், வாட்டுதல்.

**உணங்கல்** - ஒசிதல், காய்தல், துக்கப்படுதல், வாடல்.

**உணத்தல்** - காயச்செய்தல், வாட்டுதல்.

**உணராமை** - அறியாமை, மயக்கம்.

**உணருதல்** - அறிதல், ஊடறீர்தல், எண்ணல், காய்தல், தெளிதல், நினைத்தல், வாடல்.

**உணர்ச்சி** - அறிவு, கல்வி, சுவர்ன்னை, நினைவு, புத்தி, மனச்சாட்சி.

**உணர்தல்** - உணருதல், அறிதல், காய்தல்.

**உணர்த்தல்** - அறிவித்தல், கற்பித்தல், போதித்தல்.

**உணர்த்தி** - அறிவு, உணர்வு.

**உணர்ந்ததையுணர்தல்** - ஓரளவை, அஃது முன்குளிர்வந்துற்ற காலத்து நெருப்பு மருந்தென்றறிந்தான் பின்பு மது மருந்தென வுள்ளங் கோடல்.

**உணர்ந்தோர்** - அறிவுடையோர்.

**உணர்வு** - அறிவு, தெளிவு, நீங்கல்.

**உணர்வுகேடு** - அறிவுகேடு, சுவர்ன்னைகேடு.

**உணவு, உணா** - ஆகாரம், சோறு, போசனம்.

**உணவுதல்** - தெரித்தல்.

**உணி** - அனுபவிப்பாள், அனுபவிப்பான், அனுபவிப்பதென்னும் பொருள்படநிற்குமோரொருமைப் படர்க்கை விகுதி.

**உணை** - உணையென்னேவல், மெலிவு.

**உணைதல்** - மெலிதல்.

**உண்கலம்** - போசனபாத்திரம்.

**உண்கு** - உண்கென்னேவல்.

**உண்டல்** - புசித்தல்.

**உண்டாகுதல், உண்டாதல்** - உண்டுபடுதல், தலைப்படுதல், வளர்தல்.

**உண்டாக்குதல்** - உண்டுபடுத்துதல், வளர்க்குதல்.

**உண்டாட்டு –** மகளிர்விளையாட்டு, மதுபானக்கொண்டாட்டு, விளையாட்டு, பெருங்காப்பியவுறுப்பொன்று, அஃது மது முதலிய வுண்ணுஞ் சிறப்புக் கூறுதல்.

**உண்டி** - உணவு, உண்டா யென்னு முற்று, உண்டியென்னேவல், சோறு, நால்வகை யுணவி னொன்று. அஃது உண்பன, பறவையுணவு.

**உண்டிச்சீட்டு** - உண்டியற்சீட்டு.

**உண்டியல்** - உண்டியற்சீட்டு, பொக்கிஷம்.

**உண்டில்லாதது** - கோள், தேவையானது.

**உண்டு** - உள்ளது, ஊன்றுகால்.

**உண்டுபடுதல்** - உண்டாதல்.

**உண்டுபடுத்தல், உண்டுபண்ணுதல்** - உண்டாக்குதல்.

**உண்டெனு** - போதத்தக்கதாக.

**உண்டை** - உண்டாயென்னும் முற்று, தார்நூல், திரளை, படைவகுப்பு, சிற்றுண்டி.

**உண்ணல்** - புசித்தல்.

**உண்ணா** - அண்ணம், உண்ணாவென்னு மெதிர் மறைப்பன்மை வினைமுற்று.

**உண்ணாக்கு** - மேனாக்கு.

**உண்ணாமுலை** - பார்ப்பதி.

**உண்ணி** - ஓர் செந்து.

**உண்ணிக்கொக்கு** - ஓர் கொக்கு.

**உண்ணீர்** - குடிக்குநீர்.

**உண்பித்தல்** - *உண்ணச்செய்தல்.*

**உண்மாசு** - *மனக்கறை.*

**உண்மை** - *அறிவு, உள்ளது, சத்தியம், நேர்மை.*

**உண்மைத்தவறு** - *தப்பிதம்.*

**உண்மைத்துரோகம், உண்மைப் பாதகம்** - *நம்பிக்கைத்துரோகம், பொய்.*

**உண்மைப்படுதல்** - *மெய்ப்படுதல், விசுவாசம் பொருந்தல்.*

**உண்மைப்பொருள்** - *உவமேயப் பொருள்.*

**உண்மையளவை** - *மெய்மையினாற் பிரமாணித்தல்.*

**உண்மையுவமம்** - *ஓரலங்காரம், அஃது உவமையைக் கூறி மறுத்துப் பொருளையே கூறி முடிப்பது.*

**உண்மைவசை** - *ஓர் வசை.*

**உண்மைவாழ்த்து** - *ஓர் வகைவாழ்த்து.*

**உதகம்** - *நீர், பூமி, மழை, மழைத்துளி.*

**உதகதானம்** - *தாராதத்தம்.*

**உதகவன்** - *தீ.*

**உதகம்** - *நீர்.*

**உதகாதாரம்** - *நீர்நிலை.*

**உதகாரம்** - *முகில்.*

**உதகு** - *புன்கு.*

**உதகும்பம், உதகோதஞ்சனம்** - *நீர்ச் சாடி.*

**உதகோதரம்** - *முகில்.*

**உதக்கிரியை** - *நீர்க்கடன்.*

**உதக்கு** - *வடக்கு.*

**உதசம்** - *சாபம், பசுமடி.*

**உதஞ்சனம்** - *மூடி.*

**உதடன்** - *அதட்டுக்காரன்.*

**உதடு** - *அதரம்.*

**உதடுபிதுக்கி** - *ஒருபுறத்திற்பிதுங்கி விழுமுதடுள்ளவன்.*

**உதட்டடி** - *அதகடி, வாய்வெருட்டு.*

**உதணம்** - *மொட்டம்பு.*

**உததி** - *கடல், நீர்க்குடம், முகில்.*

**உததிக்கிரமன்** - *கலவன்.*

**உததிசுதை** - *இலட்சுமி.*

**உததிமேகலை** - *பூமி.*

**உததியானுசன்** - *வியாழம்.*

**உதபாரம்** - *முகில்.*

**உதபானம்** - *கிணறு.*

**உதப்பி** - *பேசுகையிற்றெறிக்கும் வாய்நீர்.*

**உதப்புதல்** - *கடிந்துகொள்ளல், குதப்புதல்.*

**உதமேகம்** - *முகில்.*

**உதம்** - *அழைத்தல், கேட்டல், நீர்.*

**உதம்புதல்** - *அதட்டுதல்.*

**உதயகாலை** - *அருணோதயம்.*

**உதயமனகிரி** - *ஓர்மலை.*

**உதயமனம்** - *உதயகாலம், உதயமலை, உதயம்.*

**உதயம்** - *உதித்தல், தோற்றம், விடியல், அதிட்டம், இலாபம், உதய கிரி, உலகசிஷடிப்பு, வெளிச்சம்.*

**உதயலக்கினம்** - *சென்மலக்கினம்.*

**உதயனம்** - *உதித்தல்.*

**உதயன்** - *சூரியன்.*

**உதயாதி** - *விடியல்.*

**உதயாத்தமனம், உதயாத்தம்** - *அத்த மன உதயமனங்கள், அந்திசந்தி.*

**உதரக்கொதி** - *பசி.*

**உதரதி** - *சமுத்திரம், சூரியன்.*

**உதரத்துள்ளதீ**-*உயிர்முத்தீயினொன்று.*

**உதரபந்தனம்** - *ஓராபரணம்.*

**உதரப்பிரிவு** - *தங்குடித்தமர்.*

**உதரம்** - *கருப்பை, வயிறு, யுத்தம்.*

**உதராக்கினி** - *பசித்தீ.*

**உதராமயம்** - *வயிற்றுழைவு.*

**உதராவர்த்தம்** - *கொப்பூழ், தீட்டுக் கட்டு.*

**உதவகன்** - *தீ.*

**உதவச்சிரம்** - *சமுத்திரத்திலிருந்து திரண்டெழுந்து மேலே போகு நீர்த் தம்பம்.*

**உதவரங்கெட்டது** - *மிகவுமிளந்தது.*

**உதவல்** - *ஈதல், காரியத்திற்காதல், துணைச்செய்தல்.*

**உதவாகனம்** - *முகில்.*

**உதவாசம்** - *நீர்க்கரை, வீடு.*

**உதவாசனம்** - *முகில்.*

**உதவி** - *ஒத்தாசை, கொடை, சகாயம், துணை.*

**உதவிந்து** - *நீர்த்துளி.*

**உதள்** - *ஆடு, ஆட்டுக்கடா, மேடவி ராசி.*

**உதறுகாலி** - *எறிகாற்பசு.*

**உதறுதல்** - *இடங்கொடா மற்றள்ளுதல், குலைவுகொண்டு நடுங்குதல், சிதற அசைத்து வீசுதல்.*

**உதன்னியம்** - *நீர்த்தாகம்.*

**உதாகரணம்** - *அத்தாட்சி, இலக்கிய மெடுத்துக்காட்டல்.*

**உதாகலம்** - *உரல்.*

**உதாகாரம்** - *உதாரணம்.*

**உதாசனம்** - *எண்ணாமை, தூஷணம்.*

**உதாசனன்** - *கண்குத்திப்பாம்பு, தீ.*

**உதாசினம்** - *உதாசனம், விருப்பு வெறுப்பின்மை.*

**உதாசீனன்** - *பிறத்தியான்.*

**உதாத்தம்** - *ஓரலங்காரம், வேதவுச் சாரண மூன்றினுச்சவுச்சாரணம்.*

**உதாரணம்** - *இலக்கிய மெடுத்துக் காட்டல், ஒப்பனை, துணைக் காரணம்.*

**உதாரத்தம்** - *ஓரலங்காரம், அஃது செல்வம் முதலியவற்றின் மிகுதி தோன்றக் கூறுவது.*

**உதாரத்துவம்** - *பெருங் கொடைத் தனம்.*

**உதாரம்** - *உத்தண்டம், ஓரலங்காரம், அஃது பொருளின்றிக் குறிப்பா னொரு நெறிப்பட நிரப்புங்கவி, கொடை, வீரம்.*

**உதாரன்** - *கொடையாளன்.*

**உதாரி** - *கொடையாளி, வீரன்.*

**உதார்த்தம்** - *உரூபகத்தினொன்று.*

**உதாவணி** - *கண்டங்காலி.*

**உதானம், உதானன்** - *நாபியில்நிற்கும் வாயு, கண்மடல், கொப்பூழ்.*

**உதி** - *உதியென்னேவல், உலைத் துருத்தி, ஒதியமரம்.*

**உதிட்டிரன்** - *தருமன்.*

**உதிதம்** - *சொல்லல்.*

**உதித்தல்** - *தோற்றுதல், பருத்தல்.*

**உதிப்பு** - *தோற்றம், பிறப்பு.*

**உதியன்** - *சேரன், பாண்டியன்.*

**உதிரக்கட்டு** - *ஓர்நோய்.*

**உதிரக்கலப்பு** - *உறவு.*

**உதிரக்கிரிகி** - *அட்டை, கரடி.*

**உதிரக்குடோரி** - *கருடன், கிழங்கு.*

**உதிரபந்தம்** - *மாதுளை.*

**உதிரம்** - *இரத்தம்.*

**உதிரவிரியன்** - *ஓர் பாம்பு.*

**உதிரவேங்கை** - *ஓர் மரம்.*

**உதிரன்** - *செவ்வாய்.*

**உதிரி** - *வசூரியிலோர்வகை, சிறுகீரை, துளசி.*

**உதிரிக்குத்து** - *வசூரியினாலுண் டாகுமோர்வகைக்குத்து.*

**உதிரோற்காரி** - *சத்தமுகிலி னொன்று, அஃது இரத்தம் பொழிவது.*

**உதிர்காய்** - *சொரிகாய்.*

**உதிர்காலம்** - *இலையுதிர்காலம்.*

**உதிர்தல்** - *சொரிதல்.*

**உதிர்த்தல்** - *உகுத்தல், சொரிவித்தல்.*

**உதிர்ப்பு** - *உதிர்வு.*

**உதீசி** - *வடக்கு.*

**உது** - *உஃது.*

**உதும்பரம்** - *அத்திமரம், எருக்கு, செம்பு, நெற்களம்.*

**உதை,உதைத்தல்** - *உதையென்னேவல்.*

**உதைகால்** - *மிண்டுக்கால்.*

**உதைகாற்பசு** - *உதறுகாற்பசு.*

**உதைகொடுத்தல்** - *மிண்டுகொடுத்தல்.*

**உதைசுவர்** - *அணைசுவர்.*

**உதைதல்** - *உதைத்தல், செலுத்தல்.*

**உதைத்தல்** - *அதைத்தல், காலாலெறிதல், செலுத்தல்.*

**உத்தண்டம்** - *அதிகாரம், உக்கிரம், கொடை, தயிரியம், துணிவு, வலிமை, வாக்குவல்லமை, வீரம்.*

**உத்ததீ** - *மேட்டிமை.*

**உத்தமசரீரம்** - *கருடகாந்திருவர் முதலியோருடம்பு.*

**உத்தமதாளி, உத்தாமணி** - *வேலிப் பருத்தி.*

**உத்தமதானம்** - *பாக்குவெற்றிலைக் கொடை, பிளவிலை.*

**உத்தமபட்சம்** - *நற்பட்சம், முதற்றரம்.*

**உத்தமபாத்திரம்** - *சற்பாத்திரம்.*

**உத்தமபுருடன்** - *உத்தமலக்கணமுடையன்.*

**உத்தமம்** - *உண்மை, நன்மை, முதன்மை.*

**உத்தமவிமிசதி** - *உத்தமவருடமிருபது.*

**உத்தமன்** - *சற்குணன், பெரியவன், மிகுநண்பன், மூன்றாமனு.*

**உத்தமாகாணி** - *ஓர்கொடி.*

**உத்தமாங்கம்** - *தலை.*

**உத்தமி** - *சற்குணமுள்ளவள்.*

**உத்தமோத்தமம்** - *அதிகவுத்தம்.*

**உத்தம்** - *ஓரலங்காரம் அஃது காரணத்திற்கேற்றகாரியம் நிகழ்வது, சொல்லல்.*

**உத்தரகாலம்** - *வருங்காலம், சாந்திர மாதம், அஃது பூரணை துவங்கி மற்றப் பூரணை யளவும்.*

**உத்தரகுரு, உத்தரகுருவம், உத்தர கோளம்** - *போகபூமியாறினொன்று, அஃது சன்மார்க் கரிருக்கும் நல்லனுபவபூமி.*

**உத்தரகோசமங்கை** - *ஓர்தலம்.*

**உத்தரகோசலை** - *அயோத்தி.*

**உத்தரக்கிரியை** - *அசுபக்கிரியை.*

**உத்தரசாட்சி** - *பிரதிவாதியின் சாட்சி.*

**உத்தரணம்** - *முற்றத்துறத்தல்.*

**உத்தரணி** - *சுருவை.*

**உத்தரதுருவம்** - *வடமுனை.*

**உத்தரதேசம்** - *உத்தரபூமி.*

**உத்தரபட்சம்** - *அத்தாட்சி, அபரபக்கம், ஞாயமுத்தரித்துக் கண்ட தீர்ப்பு, மறுமொழி.*

**உத்தரபதம்** - *பிரத்தியபதம்.*

**உத்தரபாதம்** - *மறுமொழி.*

**உத்தரபாத்திரபதம்** - *இரேவதி, உத்திரட்டாதி.*

**உத்தரபாற்குனி** - *உத்திரம்.*

**உத்தரபுருடன்** - *படர்க்கையிடத்தவன்.*

**உத்தரமத்திமபூமி** - *துருவசக்கிரத்திற்குங் கற்கிச்சக்கிரத்திற்கு நடு.*

**உத்தரமந்தோச்சம்** - *சூரியனுக்குங் கிரகத்திற்கு முள்ளதி தூரம்.*

**உத்தரமீமாஞ்சை** - *ஆறு சாத்திரத் தொன்று.*

**உத்தரம்** - *உயர்ச்சி, ஊழித்தீ, மறுமொழி, வடக்கு, சேடம், பலம், பின்.*

**உத்தரவாதம்** - *உத்தரிப்பு, வகை சொல்லுந்தன்மை.*

**உத்தரவாதி** - *எதிரி.*

**உத்தரவு** - *மறுமொழி, விடை.*

**உத்தராசங்கம்** - *உத்தரீகம்.*

**உத்தராசாடம்** - *உத்திராடம்.*

**உத்தராசாபதி** - *குபேரன்.*

**உத்தராசை** - *வடக்கு.*

**உத்தராதலம்** - *உயர்வு, தாழ்வு, மேல், கீழ்.*

**உத்தராதி** - *வடக்கு.*

**உத்தராதிகாரம்** - *சுதந்தரம்.*

**உத்தராத்தகோளம்** - *பூமியின் வட பாதியுண்டை.*

**உத்தராபதம்** - *வடக்கு.*

**உத்தராபாசம்** - *பொய்மறுமொழி.*

**உத்தராபோசனம்** - *இரண்டாம் முறை புசிக்குமுணவு.*

**உத்தராயணம்** - *அருக்கன் மூவகை வீதியினொன்று.*

**உத்தரி** - *குதிரை.*

**உத்தரிஷணம்** - *புளகப்பொடிப்பு.*

**உத்தரித்தல்** - *அனுபவித்தல், சம் மதித்தல், சாதித்தல், தருக்கித் தல், பொறுப்புச்சரிக்கட்டுதல், மறு மொழிசொல்லுதல்.*

**உத்தரிப்பு** - *வருத்தம், வருந்தல்.*

**உத்தரீகம், உத்தரீயம்** - *ஏகாசம், மேற்போர்வை.*

**உத்தரோத்தரம்** - *எதிர்மறுமொழி, மிகுதி.*

**உத்தவம்** - *ஓமாக்கினி, திருவிழா.*

**உத்தளம்** - *உத்தூளிதம்.*

**உத்தாபம்** - *உபத்திரம், மிகுவெப்பம், முயற்சி.*

**உத்தாபலம்** - *இசங்கு.*

**உத்தாபனம்** - *எழுப்புதல், பதில் வைத்தல்.*

**உத்தாமணி** - *உத்தமாகாணி.*

**உத்தாரணம்** - *உயர்த்துதல், பிரித்தல்.*

**உத்தாரசங்கம்** - *உத்தரீகம்.*

**உத்தாரம்** - *மறுமொழி, விடை, அடுப்பு, உயர்ச்சி, உவாந்தித்தல், கடன், பங்கு.*

**உத்தாரவிபாகம்** - *பங்கிடுதல்.*

**உத்தானபரதன்** - *சுவாயம்புமனுவின் மகன்.*

**உத்தானம்** - *இசைப்பு, ஏறினது, முத் தானம், அத்தநாள், ஆழமின்மை, இடை, உள்வளைவு, ஊழித்தீ, எல்லை, எழும்புதல், சங்கிரமம், சந்தோஷம், சேனை, துணைக் காரணம், நிமிர்ந்துகிடத்தல், பலி பீடம், புத்தகம், மலங்கழித்தல், மனிதத்துவம், முயற்சி, முற்றம், யுத்தம்.*

**உத்தி** - *இசைவு, இணக்கம், செல்வம், சொல், தந்திரவுத்தி, திருவுறுப்பு, தூக்கங்கள், தேமல், படப்பொறி.*

**உத்திட்டம்** - *குறிப்பு.*

**உத்திதாங்குலி** - *அபயார்த்தம்.*

**உத்தியதம்** - *அத்தியாயம்.*

**உத்தியம்** - *யாகமிருபத்தொன்றி னொன்று, உத்தியோகம்.*

**உத்தியாபனம்** - *முடிவு, விரதமுதலிய முடித்தல்.*

**உத்தியாவனம்** - *பூந்தோட்டம்.*

**உத்தியானபாலன்** - *தோட்டக்காரன்.*

**உத்தியானம்** - *பூந்தோட்டம், தோட்டம்.*

**உத்தியோகம்** - *அதிகாரத்தோடுங் கூடியதொழில், உள்ளமிகுதி, முயற்சி.*

**உத்திரட்டாங்கம்** - *தசநாடகத்தொன்று.*

**உத்திரட்டாதி** - *ஓர்நாள்.*

**உத்திரதம்** - *அச்சுருவாணி.*

**உத்திரம்** - *உத்திரநாள், சிறுவளை.*

**உத்திரவகுலி** - *அருந்ததி.*

**உத்திராசாடம்** - *உத்திராடம்.*

**உத்திராடம்** - *ஓர் நட்சத்திரம்.*

**உத்திராபன்னி** - *சணல்.*

**உத்திராபம்** - *பேரொலி.*

**உத்திரிப்பொருள்** - *மந்திரம், அருச் சனை, யோகம்.*

**உத்திரி** - *அருச்சனை, தியானம், பருத்தி, மந்திரம்.*

**உத்திரேகம்** - *துவக்கம், வருத்திப்பு.*

**உத்தினம்** - *மத்தியானம்.*

**உத்தீபனம்** - *தீபமேற்றல், விகார மூட்டல்.*

**உத்து** - *அத்தாட்சி, தெளிவு.*

**உத்துங்கம்** - *உயர்ச்சி, மகத்துவம், மிருது, மேன்மை.*

**உத்துவந்தனம்** - *தூக்கல்.*

**உத்துவருத்தனம்** - *அரைத்தல், ஏறுதல், தேய்த்தல், முழைத்தல், வாசனை யூட்டல்.*

**உத்துவாகம்** - *கலியாணம்.*

**உத்துவாகிதமுகம்** - *தலை நிமிர்ந்து பார்த்தல்.*

**உத்துவாகனம்** - *உழுதிரட்டித்தல், கலியாணம்.*

**உத்துவாசனம்** - *மிகவளர்ச்சி.*

**உத்துவேகம்** - *அச்சம், துக்கம், பாக்கு.*

**உத்துவேட்டணம்** - *சூழ்தல்.*

**உத்தூளனம், உத்தூளிதம்** - *உடம்பு முற்றும் பொடிவிபூதியணிதல், விபூதிப்பொடி.*

**உத்தேகம்** - *மதிப்பு, விருப்பம்.*

**உத்தேகித்தல்** - *மதித்தல்.*

**உத்தேசம்** - *போதப்பிரகாரம் மூன்றினொன்று. அஃது தான்விபரிக்கும் பொருளைப் பெயர்மாத்திரங் கூறல், மதிப்பு, ஒப்பந்தம், சொல்லல், விசாரணை, விபரம்.*

**உத்தேசனம்** - *அனுப்பல், சாணை பிடித்தல்.*

**உத்தேசித்தல்** - *திருட்டாந்திரப் படுத்தல்.*

**உத்தேரிதம்** - *குதிரைநடையைந்தினொன்று.*

**உந்தரம்** - *வழி, எலி.*

**உந்துரம், உந்துரு** - *எலி.*

**உந்தி** - *ஆன்கூடம், உயர்ச்சி, கடல், கொப்பூழ், தேருருளை, நடு, நீர்ச்சுழி, பரப்பு, மகளிர் விளையாட்டினொன்று, யாழினுறுப்பு, யாறு, தேர்த்தட்டு, தொழில்.*

**உந்திபூத்தோன்** - *விட்டுணு.*

**உந்து** - *உந்தென்னேவல், பெற்றமளைக்குமோர் குறிப்புச்சொல்.*

**உந்துதல்** - *உயர்ச்சி, ஏறுதல், செலுத்துதல், தள்ளுதல்.*

**உந்துரு** - *பெருச்சாளி.*

**உந்தை** - *உன்றந்தை.*

**உப** - *இரண்டாவது, இரண்டு, ஒருபசருக்கம், துணை, அதிசயம், அலங்காரம், உவமை, கட்டளை, கண்டனை, கீழ்மை, கொலை, சமீபம், மிகுதி, முயற்சி, விருப்பம் இவற்றைக் காட்டுமோரு பசருக்கம்.*

**உபகசிதம்** - *சிரிப்பு.*

**உபகதை** - *பழங்கதை.*

**உபகண்டம்** - *கழுத்தடி, குதிரை நடை.*

**உபகந்தம்** - *வாசம்.*

**உபகமம்** - *கொள்கை, சமீபம், பொருத்தம்.*

**உபகரணம்** - *உபயோகம், கருவி, துணைக்காரணம், அரசசின்னம், உண விடுதல், உதவி, காணிக்கை கொடுத்தல், சீவனம்.*

**உபகரித்தல்** - *உதவிசெய்தல், உபகாரஞ்செய்தல், கொடுக்குதல், சங்கித்தல்.*

**உபகாசம்** - *அவமதிச்சிரிப்பு.*

**உபகாதம்** - *சருவுதல், நோய் பற்றாசு.*

**உபகாரபரன்** - *உபகாரி.*

**உபகாரணன், உபகாரன்** - *உபகாரி.*

**உபகாரம்** - *ஈகை, உதவி, சகாயம், தயவு, தொங்கல், மலர்ந்தபுட்டம்.*

**உபகாரி** - *ஈகையாளன், துணைச்செய்வோன், நன்மைசெய்வோன்.*

**உபகாரிகை** - *எசமாட்டி, சத்திரம்.*

**உபகிருதம், உபகிருதி** - *உதவி.*

**உபகுஞ்சிகை** - *ஏலம்.*

**உபகுல்லம்** - *சுக்கு.*

**உபகுல்லியை** - *அகழ், திப்பிலி.*

**உபகூகனம்** - *அதிசயம், ஆலிங்கனம்.*

**உபகேசி** - *உமை.*

**உபக்கிரகணம்** - *பிடித்தல், வேதாப் பியாசம்.*

**உபக்கிரகம்** - *உதவி, உற்பாதம், கிரகா திபன், தருப்பைக் கட்டுபிடித்தல்.*

**உபக்கிரகன்** - *மறியற்காரன்.*

**உபக்கிரமம்** - *துவக்கம், காரியமுயற்சி செய்தல், சோதித்தல், தைரியம், வைத்தியம்.*

**உபக்கிரோசம்** - *நிந்தனை.*

**உபசங்காரம்** - *எதிர்ச்சங்காரம், மாற்று.*

**உபசதனம்** - *அயல்.*

**உபசத்தி** - *ஊழியம், சந்திப்பு, நன் கொடை.*

**உபசமம்** - *சமாதானம்.*

**உபசமனம்** - *அமைந்திருத்தல், சமா தானம்.*

**உபசயம்** - *உயர்ச்சி, குவியல், திரட்சி, மிகுதி, முதலாமிராசியிலிருந்து மூன்றாம் ஆறாம் பத்தாம் பதி னொராம் பாகைகள்.*

**உபசரணை** - *உபசாரம், வழிபாடு.*

**உபசரிதம்** - *உபசரணை.*

**உபசரித்தல்** - *சங்கித்தல், மரியாதை பண்ணுதல், வழிபடுதல்.*

**உபசருக்கம்** - *ஆரியமொழிகளின் அடையுரு, உற்பாதம், சாக்குறி, சொன்மூலம், மாறுதல்.*

**உபசருச்சனம்** - *கிரகணம்.*

**உபசாந்தம், உபசாந்தி** - *அமரிக்கை, சமாதானம், ஒழிவு.*

**உபசாபகன்** - *கோட்காரன்.*

**உபசாபம்** - *சதியோசனை, பிரிவினை.*

**உபசாயம்** - *சாமக்காவல்.*

**உபசாரகரணம், உபசாரகருமம், உபசாரகிரியை** - *விருந்தோம்பல்.*

**உபசாரகன்** - *உபசரணைகாரன்.*

**உபசாரம்** - *ஆசாரம், சங்கித்தல், அருத்தாபத்தி, உபகாரம், உப சரணை, ஊழியம், தொழில், மருந்துசெய்தல், மன்றாட்டு.*

**உபசாரி** - *உபசரிப்போன்.*

**உபசிரதம்** - *சம்மதப்படல்.*

**உபசிருட்டம்** - *புணர்ச்சி.*

**உபசீவனம்** - *ஒசீவனம்.*

**உபசேபனம்** - *ஊழியம்.*

**உபஞ்ஞை** - *வாலஞானம்.*

**உபட்சேபம்** - *செய்யுட்போங்கு.*

**உபதரிசகன்** - *துவாரபாலன்.*

**உபதாது** - *கலப்பானலோகம்.*

**உபதாபம்** - *சீக்கிரம், நோய், வருத்தம், வெப்பம்.*

**உபதானகம்** - *உபதை.*

**உபதானம்** - *தலையணை, அத்தி பாரம், கடமை, துணைக்காரணம், நஞ்சு, பட்சம்.*

**உபதி** - *அணாப்பு, சில், பயம்.*

**உபதிசன்** - *எத்தன்.*

**உபதேசகலை** - *ஓரளவை, அஃது கடவுட்டன்மையையறிவித்தல்.*

**உபதேசகன்** - *உபதேசி.*

**உபதேசம்** - *சமையபோதகம், தீட்சை, போதனை.*

**உபதேசனம்** - *உபதேசம்.*

**உபதேசி** - *போதகன்.*

**உபதேசித்தல்** - *போதித்தல்.*

**உபதை** - *காணிக்கை, சோதனை, மாய்மாலம்.*

**உபத்தம்** - *கருமேந்திரியமைந்தி னொன்று. அஃது குறி, பெண்குறி.*

**உபத்தாயம்** - *அபத்தம், உபத்திரம், உபாயம்.*

**ஊமைத்தேங்காய்** - *கிலுங்காததேங்காய்.*

**ஊமைப்பயில்** - *கரபாஷை, கைப்பயில்.*

**ஊமையன்** - *ஊமை.*

**ஊமையெழுத்து** - *ஒலியற்றவெழுத்து.*

**ஊமைவிளையாட்டு** -*ஓர் விளையாட்டு.*

**ஊம்** - *மவுனம்.*

**ஊம்பல்** - *சூப்புதல்.*

**ஊய்தல்** - *பதனழிதல்.*

**ஊரப்பார்த்தல்** - *ஊர்ந்து செல்ல மந்திரித்தல்.*

**ஊரலியன்** - *வைசியன்.*

**ஊரல்** - *ஈரம், உரிஞ்சல், ஊருதல், காய்ந்துவருகிறபுண், கிளிஞ்சில், பசுமை.*

**ஊரற்பதம்** - *பச்சைப்பதம்.*

**ஊரற்புண்** - *காய்ந்துவரும்புண்.*

**ஊரன்** - *மருதநிலத்தலைவன்.*

**ஊராண்மை** - *மிக்கசெயல்.*

**ஊரார்** - *ஊரவர், பிறர்.*

**ஊராளி** - *ஊதிகாரி, ஓர்சாதியான்.*

**ஊரி** - *இளமை, ஊரி, சங்கு, மேகம்.*

**ஊரிலிகம்பலை** - *கலாதி.*

**ஊரின்னிசை** - *ஓர் வெண்பாவாற் றொண்ணூறேனும் பிரபந்தம். அஃது பாட்டுடைத் தலைவனூ ரினைச் சாரவின்னிசை எழுபதே னுங்கூறுவது.*

**ஊரு** - *அச்சம், தொடை, அட்டை.*

**ஊருகால்** - *சங்கு.*

**ஊருசன்** - *வைசியன்.*

**ஊருடைமுதலியார்** - *முருங்கை.*

**ஊருணி** - *ஊரடுத்தகுளம், ஊரெல் லாமுண்ணுங்குளம், கிணறு.*

**ஊருதல்** - *ஏறுதல், செலுத்தல், நகருதல்.*

**ஊரெல்லை** - *ஊரினெல்லைமானம்.*

**ஊரெழுச்சி** - *ஊரவர்களொன்றா யெழுதல்.*

**ஊரோச்சம்** - *ஊரெல்லாம் பேசத்தக் கதாயிருத்தல்.*

**ஊர்** - *ஊரென்னேவல், நாடு, பரிவேடம்.*

**ஊர்கூடுதல்** - *ஊரவர்கள் திரளுதல்.*

**ஊர்கோலம் வருதல்** - *பட்டினப் பிரவேசம் வருதல்.*

**ஊர்கோள், ஊர்கோள்வட்டம்** - *பரிவேடம்.*

**ஊர்க்கதை** - *நிசமற்றபேச்சு.*

**ஊர்க்குருவி** - *அடைக்கலக்குருவி.*

**ஊர்ச்சம்** - *கார்த்திகைமாதம்.*

**ஊர்ச்சிதம்** - *உறுதி, தத்துவம், நிலைப் படுதல்.*

**ஊர்தல்** - *ஊருதல், ஏறுதல், செலுத்து தல், பரத்தல்.*

**ஊர்தி** - *எருது பண்டி முதலியவாக னங்கள்.*

**ஊரத்தம்** - *ஊர்த்துவம், சைவம் பதினாறினொன்று.*

**ஊர்த்துவகதி** - *மேற்கதி, மேனோக்கு.*

**ஊர்த்துவகபுரம்** - *அரிச்சந்திர னுடைய நகரம்.*

**ஊர்த்துவகம்** - *மேலேறுதல்.*

**ஊர்த்துவகாயம்** - *உடல்.*

**ஊர்த்துவதேவன்** - *விட்டுணு.*

**ஊர்த்துவபாதம்** - *எண்காற்புள்.*

**ஊர்த்துவபுண்டரம்** – *மேனோக்கப் பூசும்புண்டரம்.*

**ஊர்த்துவமுகம்** - *மேல்முகம்.*

**ஊர்த்துவம்** - *மேல், மேனோக்கம்.*

**ஊர்த்துவராசி** - *மேனோக்கிராசி.*

**ஊர்த்துவலிங்கன்** - *சிவன்.*

**ஊர்த்துவலோகம்** - *தேவலோகம்.*

**ஊர்நேரிசை** - *ஓர் பிரபந்தம். அஃது பாட்டுடைத் தலைவனூரினைச்*

*சார நேரிசை வெண்பாவாற் கூறுவது.*

**ஊர்புல்** - *ஓர் புல்.*

**ஊர்ப்பகை** - *ஊர்ப்பழி.*

**ஊர்ப்புகைச்சல்** - *புகைநிறமாய்த் தோற்றல்.*

**ஊர்ப்புரளி** - *ஊர்க்குழப்பம்.*

**ஊர்ப்புலம்** - *ஆமணக்கு.*

**ஊர்மனை** - *குடியிருப்பு.*

**ஊர்மன்று** - *உளரம்பலம், பொது மனை.*

**ஊர்ம்மிகை** - *அலை, மோதிரம்.*

**ஊலுகம்** - *ஆந்தை.*

**ஊர்வலம் வருதல்** - *பட்டினப்பிர வேசம் வருதல்.*

**ஊர்வன, ஊர்வனவு** - *எழுபிறப்பி னொன்று. அஃது ஊரும்பிராணி.*

**ஊர்வெண்பா** - *ஓர்பிரபந்தம். அஃது பாட்டுடைத் தலைவனூரினைச் சாரவெண்பாவாற் பத்துச்செய்யுள் கூறுவது.*

**ஊழகம், ஊழம்** - *வைகறை.*

**ஊழலித்தல்** - *இளைத்தல், நாற்ற மடைந்து கெடுதல், பதனழிதல்.*

**ஊழல்** - *ஆகாதது, நரகம், நாற்றம், பழுதானது.*

**ஊழல்நாற்றம்** - *துற்கந்தம்.*

**ஊழி** - *உறைகாலம், ஓர் பிசரசம், நெடுங்காலம், பிரமனாயு, பூமி, யுகமுடிவு, வீதி.*

**ஊழிகாலம்** - *உகாந்தகாலம்.*

**ஊழிக்காய்ச்சல்** - *கொள்ளைநோய்.*

**ஊழிக்கால்** - *உகாந்தவாயு.*

**ஊழித்தீ** - *வடவாமுகாக்கினி.*

**ஊழிநாள்** - *முடிவுநாள்.*

**ஊழிநோய்** - *தொந்தவியாதி, பெரு வாரிநோய்.*

**ஊழியக்காரன்** - *வேலைக்காரன்.*

**ஊழியம்** - *தொண்டு.*

**ஊழியூழிகாலம்** - *நித்தியம்.*

**ஊழைக்குருத்து** - *துளசி.*

**ஊழ்** - *உலகமுடிவு, ஊழ்த்தலைச் செய்யென்னேவல், குணம், நிய மம், பகை, பழவினை, பழைமை, முடிவு, முறை, வெயில்.*

**ஊழ்த்தல்** - *உதிர்தல், ஊன், சிதைவு செவ்வி, நினைத்தல், பதனழிவு, புலால், மடித்தல், மலர்தல், முதிர் தல், வாடுதல்.*

**ஊழ்த்துணை** - *மனைவி.*

**ஊழ்முறை** - *நியதி, பூருவநியாயம்.*

**ஊழ்வினை** - *பழவினை.*

**ஊளன்** - *ஆணரி.*

**ஊளா, ஊளி** - *ஓர் மீன்.*

**ஊளான்** - *நரி.*

**ஊளை** - *நாய் நரிமுதலிய வோலிடுஞ் சத்தம்.*

**ஊளைகொள்ளுதல், ஊளையிடுதல்** - *ஒலிடல், குரவையிடுதல்.*

**ஊறணி** - *ஊறல், ஊற்று.*

**ஊறல்** - *ஊறுதல், ஊற்று, காய்ந்தல், பச்சை, மயப்பு.*

**ஊறவைத்தல்** - *ஊறும்படிவைத்தல்.*

**ஊறற்பாக்கு** - *நீரிலூறிய பாக்கு.*

**ஊறு** - *இடையூறு, ஊறென்னேவல், கொலை, தழும்பு, தீண்டல், தீமை பரிசம்.*

**ஊறுகாய்** - *அடைகாய்.*

**ஊறுகோள்** - *கொலை.*

**ஊறுதல்** - *சாரமேறுதல், நனைதல், நீர்பெருகுதல், பலவழியினும் பொருள் வந்தடைதல், மாமிசஞ் சேர்ந்து பிடித்தல்.*

**ஊறுநீர்** - *ஊற்றுநீர்.*

**ஊறுபாடு** - *இடையூறு, இரணம், சேதம்.*

**ஊறுபுண்** - *ஊறிப்பிடிக்கிறகாயம்.*

**ஊறுவைத்தல்** - *இடையூறுண்டாக்கல், தழும்புடுத்தல், வடுவைத்தல்.*

**ஊற்றங்கோல்** - *ஊன்றுகோல்.*

**ஊற்றம்** - *அசைவின்றிநிற்றல், அறிவுடைமை, பற்றுக்கோடு, புகழ், முயற்சி, வலி.*

**ஊற்றல்** - *நீர்முதலியவூறிவருதல், பெய்தல்.*

**ஊற்றாணி** - *இடையூறு, ஊறு.*

**ஊற்றாம்பெட்டி** - *ஊற்றுப்பெட்டி.*

**ஊற்றால்** - *உரோகணிநாள், கரப்பு, மீன்கூடு.*

**ஊற்றால்கவித்தல், ஊற்றால்போடல்** - *கரப்புக்குத்துதல்.*

**ஊற்று** - *ஊற்றென்னேவல், ஊன்றுகோல், நீருற்று.*

**ஊற்றுக்கண்** - *ஊற்றுத்துவாரம்.*

**ஊற்றுக்குழி** - *நீரூறும்படி தோண்டுங்குழி.*

**ஊற்றுக்கோல்** - *ஊன்றுகோல்.*

**ஊற்றுண்ணல்** - *சாதல், சிந்தப்படல்.*

**ஊற்றுதல்** - *எண்ணெய் முதலியவூறச் செய்தல், கீழேயொழுக்கல், வார்க்குதல்.*

**ஊற்றுநீர்** - *ஊறுநீர்.*

**ஊற்றுப்பட்டை** - *ஊற்றிறைக்கும் பட்டை.*

**ஊற்றுப்பூ** - *எண்ணெயூற்றின தேங்காய்ப்பூ.*

**ஊற்றுப்பெட்டி** - *எண்ணெயூற்றும் பெட்டி.*

**ஊற்றுப்பெயர்தல்** - *ஊற்றுத்திரும்புதல்.*

**ஊற்றுமரம்** - *எண்ணெயூற்றும் சிறமரம்.*

**ஊற்றெடுத்தல்** - *ஊறலெழுதல்.*

**ஊனகத்தண்டு** - *கருவண்டு.*

**ஊனக்கண்** - *கட்பொறி.*

**ஊனமானம்** - *உரோசாபிமானங்கள்.*

**ஊனம்** - *ஈனம், குறைபாடு, கேடு, சாரம், மாமிசநீர்.*

**ஊனன்** - *குறைவுள்ளோன்.*

**ஊனாயம்** - *பிழை.*

**ஊனான்** - *ஓர் கொடி.*

**ஊனுருக்கி** - *கயவியாதி.*

**ஊனொட்டி** - *உடும்பிறைச்சி.*

**ஊன்** - *தசை, நிணம்.*

**ஊன்விற்போர்** - *இறைச்சி விற்போர்.*

**ஊன்றக்கட்டுதல்** - *பலப்படுத்தல்.*

**ஊன்றல்** - *சார்தல், தள்ளல், நடுதல், பதித்தல், பலப்படுத்தல், மெய்ப் பரிசமெட்டினொன்று, நினைத்தல்.*

**ஊன்றி** - *ஓர்பாம்பு.*

**ஊன்றிப்பேசல்** - *அசைநிறுத்திப் பேசல், பலப்படுத்திப்பேசல்.*

**ஊன்றுகோல்** - *உதைகால்.*

**ஊன்றுகோல்** - *பற்றுக்கோல்.*

**ஊன்றுதல்** - *அமர்த்தல், தாபரங் கொடுத்தல், நடுதல், நிலைப் படுதல், பதித்தல், பலப்பித்தல், வேர்வைத்தல்.*

## எ

**எ** - *ஒரெழுத்து, வினாவெழுத்து, அம்பு.*

**எஃகம்** - *எறியாயுதம், கைவேல், சக்கிரம்.*

**எஃகல்** - *எட்டுதல், ஏறுதல், நொய் தாக்கல், பஞ்சுமுதலியவெஃகுதல், மேலேவாங்கல்.*

**எஃகு** - *ஆயுதப்பொது, உருக்கு, எஃகென்னேவல், கூர்மை, மனவொடுக்கம், வேல்.*

**எஃகுகோல்** - *பஞ்சவட்டந்தடி.*

**எகரம்** - *ஒரெழுத்து.*

**எகினம்** - *எகின்.*

**எகின்** - *அன்னம், கவரிமா, செம்மரம், நாய், நீர்நாய், புளிமா, புளியமரம்.*

**எகுன்று** - *குன்றிக்கொடி.*

**எக்கச்செக்கம்** - *இடக்கு, ஒவ்வாமை, குழப்பம்.*

**எக்கண்டம்** - *ஒருமிக்க, முழுதும்.*

**எக்கரணம், எக்கரவம்** - *தொனுப்போடுதல்.*

**எக்கர்** - *சொரிதல், மறைத்தசொல், மேலுக்கேறப்பண்ணல்.*

**எக்கல்** - *ஏறுதல், பதிவு, பொருதல், வயிற்றையெக்கல், வற்றல், குவிதல், சொரிதல்.*

**எக்கழுத்தம், எக்கழுத்தல்** - *இறுமாப்பு.*

**எக்களித்தல்** - *மிகமகிழ்தல்.*

**எக்களிப்பு** - *மிகுமகிழ்ச்சி.*

**எக்காளம்** - *ஒரூதுகுழல்.*

**எக்கியம்** - *யாகம்.*

**எக்கியோபவீதம்** - *பூணூல்.*

**எக்குதல்** - *ஒருபுறம் வற்றிவளைதல், வயிற்றைவற்றப் பண்ணல்.*

**எங்கண், எங்கு** - *எவ்விடம்.*

**எங்ஙனம், எங்ஙன்** - *எவ்விடம், எவ்விதம்.*

**எசமாட்டி, எசமானி** - *தலைவி.*

**எசமானினி** - *தலைவி.*

**எசமானன், எசமான்** - *தலைவன், முதல்வன்.*

**எசமானிக்கை** - *முதன்மைத்தனம்.*

**எசம்** - *நரம்பு.*

**எசுர்** - *உபநிடதமுப்பத்திரண்டினொன்று.*

**எச்சச்சொல்** - *பேராவது வினையாவது குறைந்து நிற்குஞ்சொல், பெயர்வினை, உம்மை, சொல், பிரிநிலை, என, ஒழியிசை, எதிர்மறை, இசை, குறிப்பு முதலிய குறைந்து நிற்குஞ்சொல்.*

**எச்சதேவன்** - *யாகதேவன்.*

**எச்சம்** - *எச்சில், குறை, சந்ததி, சேடம், பட்சிப்பீ, பிள்ளை, யாகம், காரியம்.*

**எச்சரிக்கை, எச்சரீக்கை** - *ஓர் பிரபந்தம், கருத்து, கவனம்.*

**எச்சரித்தல்** - *முன்னறிவித்தல், விழிக்கப்பண்ணுதல்.*

**எச்சரிப்பு** - *எச்சரித்தல்.*

**எச்சவனுமானம்** - *ஓரளவை, அஃது ஆற்றைக் கண்டவன் மலைக்கண் மழையுண்டெனவறிதல்.*

**எச்சவாய்** - *குதம்.*

**எச்சன்** - *யாகத்தினதிதேவதை.*

**எச்சிலன்** - *பிசுனன்.*

**எச்சில்** - *உச்சிட்டம்.*

**எச்சில்வாய்** - *உச்சிட்டவாய்.*

**எச்சிற்பேய்** - *உச்சிட்டதேவதை.*

**எச்சிற்றழும்பு, எச்சிற்றேமல்** - *தழுதணை.*

**எச்சு** - *ஓர் வாத்தியக்கருவி.*

**எஞ்சணி** - *எஞ்சி நிற்குஞ்சொல்.*

**எஞ்சல்** - *குறைதல், மிஞ்சுதல்.*

**எஞ்சிநிற்றல்** - *ஒழிந்துகுறிப்பாய் நிற்குதல்.*

**எஞ்சியசொல்லினெய்தக்கூறல்** - *ஓர் தந்திரயுத்தி.*

**எஞ்சுமுரை** - *எச்சமாய்நிற்கும் பொருள் விரித்தவுரை.*

**எஞ்ஞான்றும்** - *எப்போழ்தும்.*

**எடாத எடுப்பு** - *தொடங்காத தொடக்கம், பெரியகாரியம்.*

**எடுகூலி** - *சுமைகூலி.*

**எடுக்குதல்** - *எடுத்தல்.*

**எடுத்தடிமடக்கு** - *திடுகூறு.*

**எடுத்தடிவைத்தல்** - *குழந்தைதளர் நடையாய் நடத்தல்.*

**எடுத்தபடி** - *நேர்ந்தபடி.*

**எடுத்தமொழியினெய்த வைத்தல்** - *ஓர்யுத்தி.*

**எடுத்தலளவு** - *நிறை.*

**எடுத்தலளவையாகுபெயர்** - *நிறையின் பெயர் நிறுக்குங் கருவிக்கு வழங்குவது, (உம்) துலாக்கோல்.*

**எடுத்தலும்மைத்தொகை** - *நிறை யளவும்மை தொக்குநிற்பது, (உம்) ஒன்றேமுக்காற்பலம்.*

**எடுத்தல்** - *இடங்குறித்தல், உடைத் தாதல், எடுக்குதல், எடுத்துதல், ஏற்றுக்கொள்ளல், ஓரோசை, சுமத்தல், தரித்தல், தாங்குதல், தூக்குதல், தெரிந்துகொள்ளல், தொடக்குதல், நீக்குதல், பற்றிக் கொள்ளல், வாங்குதல், வீடு முதலியகட்டல், வேடங்கொள் ளுதல், பொருந்தல்.*

**எடுத்தன்** - *பொதிமாடு.*

**எடுத்தாட்சி** - *வழக்கம்.*

**எடுத்தார்கைப்பிள்ளை** - *எவர்சொல் வதையுங் கேட்டு நடப்பவன்.*

**எடுத்து** - *எடுத்துந்தன்மை, எடுத் தென்னெச்சம், எடுத்தென்னேவல், சுமை.*

**எடுத்துக்காட்டல்** - *ஓர்யுத்தி.*

**எடுத்துக்கட்டு** - *பொய்.*

**எடுத்துக்காட்டு –** *உதாரணம்.*

**எடுத்துக்காட்டுதல்** - *உதாரணங் களினாற்றெரிவித்தல்.*

**எடுத்துக்காட்டுவமையணி** - *ஓரலங் காரம், அஃது விம்பப்பிரதிவிம்ப பாவத்தைக் காட்டுவது.*

**எடுத்துக்கூட்டுதல்** - *பிசகினதை ஒருபடிசரிப்படுத்தல்.*

**எடுத்துக்கைநீட்டுதல்** - *கைத்தொண்டு செய்தல்.*

**எடுத்துதல்** - *எடுக்கப்பண்ணுதல், ஏற்றுதல்.*

**எடுத்துத்தொடுத்தல்** - *கட்டிப்பேசல்.*

**எடுத்துப்பிடித்தல்** - *குணாகுணங் களை நிறுத்திப்பிடித்துப் பேசல்.*

**எடுத்துப்பேசுதல்** - *நியாயமுத்தரித் தல், பரிந்துபேசல், விட்டதைத் திரும்பவெடுத்துப்பேசல்.*

**எடுத்தேற்றம், எடுத்தேற்றி** - *இணக்க மின்றியிருப்பது.*

**எடுபடுதல்** - *திக்கற்றுப்போதல், நியமந்தப்புதல், வெளிவருதல்.*

**எடுபட்டவன்** - *நிலையற்றவன்.*

**எடுபாடு** - *நிமிர்ச்சி, நிலையின்மை, மகிமை, விசாலமானநடை.*

**எடுபிடி** - *மதிப்பு, முயற்சி.*

**எடுப்பல்** - *எடுத்தல், தூங்கினோரை யெழுப்பல்.*

**எடுப்பித்தல்** - *எடுக்கச்செய்தல், சுவர் முதலியவேற்றுவித்தல்.*

**எடுப்பு** - *எடுத்தல், எடுப்பென்னே வல், கோப்பு, பெரியவெண்ணம்.*

**எப்புச்சாய்ப்புடு** - *தராதரமறிந்து நடக்குந்தடை, நிமிர்ச்சியுங் குறை வும், மேன்மை.*

**எடை** - *எடுத்தல், எழுப்பல், நிறை யிடை.*

**எட்கடை, எட்கிடை** - *எட்பிரமாணம்.*

**எட்சாதம்** - *எள்ளுச்சாதம்.*

**எட்ட** - *தூரமாக.*

**எட்டக்கட்டுதல்** - *தூரமாய்ப்போதல்.*

**எட்டம்** - *தூரம்.*

**எட்டம்பற்றுதல்** - *கிடைத்தல்.*

**எட்டர்** - *மங்கலப்பாடகர்.*

**எட்டல்** - *எட்டுதல்.*

**எட்டாக்கை** - *தூரம்.*

**எட்டி** - *ஓர் சாதி, காஞ்சிரமரம், செட்டி.*

**எட்டியர்** - *செட்டிகள், வைசியர்பொது.*

**எட்டிற்பத்தில்** - *இடையிடை.*

**எட்டினர்** - *சினேகிதர்.*

**எட்டு** - *அட்டம், ஆசை, எட்டென் னேவல், சாச்சடங்கினொன்று.*

**எட்டுதல்** - *அகப்படுதல், தாவுதல்.*

**எட்பாகு** - *எட்டுவையல்.*

**எட்பிரமாணம்** - *எள்ளளவு.*

**எண்** - *எண்ணிக்கை, எண்ணென்னேவல், எளிமை, எள், கணக்கு, சோதிடநூல், வரையறை, வலி, விசாரம்.*

**எண்கணன்** - *பிரமன்.*

**எண்காற்புள்** - *சரபம்.*

**எண்கு** - *கரடி.*

**எண்குணன்** - *கடவுள்.*

**எண்சிறப்புள்ளோன்** - *அருகன்.*

**எண்சுவடி** - *கணக்கேடு.*

**எண்செய்யுள்** - *எண்ணாற்பெயர் பெறும் பிரபந்தம்.*

**எண்டோளன்** - *சிவன்.*

**எண்டோளி** - *காளி, துற்கை.*

**எண்ணக்குறிப்பு** - *நினைவு.*

**எண்ணத்தப்பு** - *நினைவுமயக்கம், மதிகேடு, மதியாமை.*

**எண்ணப்படுதல்** - *கணிக்கப்படுதல், நினைவிற்றோற்றல், மதிக்கப்படுதல்.*

**எண்ணம்** - *ஆலோசனை, கிலேசம், குறிப்பு, நினைவு, மதிப்பு.*

**எண்ணர்** - *கணிதர், மந்திரிகள்.*

**எண்ணலர்** - *பகைவர், பிறரைமதியாதோர்.*

**எண்ணலளவு** - *இலக்கத்தாலெண்ணுமளவு.*

**எண்ணலளவையாகுபெயர்** - *எண்ணுக்குரியபெயரையதற்குரிய பொருட்கு வழங்குவது, (உம்) ஒன்று வந்தது.*

**எண்ணலும்மைத்தொகை** - *எண்ணலும்மை தொக்கு நிற்பது, (உம்) அறம், பொருள், இன்பம், வீடு.*

**எண்ணல்** - *எண்ணுதல், கணிதம், குறித்தல், தேர்ச்சி, நினைத்தல், மதித்தல்.*

**எண்ணாதகண்டன், எண்ணாத நெஞ்சன்** - *துணிவுள்ளவன்.*

**எண்ணாதவன்** - *துணிந்தவன்.*

**எண்ணார்** - *பகைவர்.*

**எண்ணிக்கை** - *எச்சரிக்கை, எண், சங்கை, மதிப்பு.*

**எண்ணிலிகாலம்** - *அளவில்லாத காலம்.*

**எண்ணில் கண்ணுடையோன்** - *புத்தன்.*

**எண்ணும்மை** - *எண்ணுக்கு நிற்குமும்மென்னுமிடைச்சொல் (உம்) நீயுமவனும், எண்ணைக்காட்டி நிற்குமும்மை, (உம்) இரவும் பகலும்.*

**எண்ணும்மைத்தொகை** - *எண்ணலும்மைத்தொகை, (உம்) அற்பகல்.*

**எண்ணுவண்ணம்** - *எண்பயின்று வருவது.*

**எண்ணுவமம்** - *ஒருவமானம். (உம்) ஒருவனுக்கன்னமிடுவது ஆயிரங் கோதானமீந்ததற்கொப்பு.*

**எண்ணுறுத்தல்** - *உறுதிப்படுத்தல்.*

**எண்ணெய்** - *தயிலம்.*

**எண்ணெய்க்காப்பு** - *எண்ணெயபிஷேகம்.*

**எண்ணெய்க்காரன்** - *எண்ணெய் வாணிபன்.*

**எண்ணெய்ச்சாணை** - *ஓர் சாணைக் கல்.*

**எண்ணெய்ப்புல்லிடுதல்** - *நெசவு பாவுக்கெண்ணெயிடுதல்.*

**எண்ணெய்மணி** - *வெள்மட்டமணி.*

**எண்ணெய்வாணிபன்** - *எண்ணெய் விற்போன்.*

**எண்ணேகாரம் எண்ணைக்காட்டுமேகாரம்** - *(உம்) நிலனே, நீரே, தீயே.*

**எண்ணோகாரம்** - *எண்ணைக்காட்டுமோகாரம் (உம்) முத்தனென்கோ, முதன் மூர்த்தியென்கோ.*

**எண்படுதல்** - *அகப்படுதல்.*

**எண்பது** - *எட்டுமுறைபத்து.*

**எண்பித்தல்** - *அத்தாட்சிபண்ணல்.*

**எண்மர்** - *கணிதர்.*

**எண்மை** - *எளிமை, கணிசம்.*

**எதாஸ்து** - *அப்படியாகட்டும்.*

**எதாப்பிரகாரம்** - *அந்தப்பிரகாரம்.*

**எதார்த்தம்** - *யதார்த்தம்.*

**எதிர** - *உவமைச்சொல்.*

**எதிரதுதழீ இயவெச்சவும்மை** - *எஞ்சியசெயலைவிளக்கி யெதிர் காலத்தைத் தழுவி நிற்குமும்மை, (உம்) இனிக்கொற்றனும் வருவான்.*

**எதிரது நோக்கிய வெச்சவும்மை** - *எதிர்மறைச் சொல்லைக் காட்டி நிற்குமும்மை.*

**எதிரதுபோற்றல்** - *ஓர் யுத்தி.*

**எதிராத்தம்** - *ஏற்ற, நிதார்த்தம்.*

**எதிராப்பு** - *கழலாதபடி வைக்கிற ஆப்பு.*

**எதிராளி** - *எதிரி.*

**எதிரி** - *எதிர்நிற்கிறவன், பகைவன்.*

**எதிரிடை** - *எதிரித்தனம், பகை.*

**எதிருக்கெடுத்தல்** - *ஏப்பமெடுத்தல், வாந்தித்தல்.*

**எதிருத்தரம்** - *மறுமொழி.*

**எதிருரை** - *எதிரிடைப்பேச்சு, மறு மொழி.*

**எதிரூன்றல்** - *எதிர்தல்.*

**எதிரெடுத்தல்** - *உண்டதுமேலுக்கு வருதல், ஏவறையெடுத்தல், தேக் கெடுத்தல், வாந்தித்தல்.*

**எதிரேற்று** - *தனக்கெதிரே வந்ததைத் திருப்பிவிடுதல்.*

**எதிரொலி** - *அதிர்ந்து கேட்கிறசத்தம், பிரதித்தொனி.*

**எதிரொலித்தல்** - *பிரதித்தொனி காணல்.*

**எதிர்** - *எதிரென்னேவல், ஒப்பு, முன்.*

**எதிர்கட்சி** - *முன்பக்கம்.*

**எதிர்காலம்** - *வருகாலம்.*

**எதிர்காலவினைத்தொகை** - *வருங் காலவினைதொக்குநிற்பது, (உம்) இனிக்கொல்களிறு.*

**எதிர்காலவினையெச்சம்** - *இன்-ஆல்-கால்-கு-இய-இயா-வான்-பான்-பாக்கு எனும் விகுதிகளைக் கொண்டு இடைநிலை பெற்றும் பெறாதுந்தாமே எதிர்காலங் காட்டி நிற்கும் வினையெச்சம்.*

**எதிர்காற்று** - *நேர்காற்று.*

**எதிர்கொள்ளுதல்** - *நவபுண்ணியத் தொன்று. அஃது வந்தவர்க்கு முன் சென் றளவளாதல்.*

**எதிர்கோள்** - *எதிர்கொள்ளல்.*

**எதிர்க்கை** - *எதிர்மரம்.*

*எதிர்ச்சீட்டு - எதிர்முறி.*

**எதிர்ச்செட்டு** - *இரண்டாஞ்செட்டு, எதிரிடைச்செட்டு.*

**எதிர்தல்** - *சந்தித்தல், தோன்றல், மலைதல், மாறுபடுதல்.*

**எதிர்த்தல்** - *அலைத்தல், சந்தித்தல், நேர்தல், மாறுபடுதல், முற்படுதல்.*

**எதிர்நிரனிறை** - *நேரின்றிமாறிவரும் நிரனிறை.*

**எதிர்நிலை** - *எதிர்நிற்றல், கண்ணாடி.*

**எதிர்நிலையகத்திணை** - *அகப்பொரு ளுறுப்பி னொன்று, ஒன்றனை விளக்கவதனை மறித்து எதிர் நிற்கும் பொருளைக்காட்டல்(உம்) முட்டரூடாடிய நட்புக் கட்டை யூடாடிய கால்.*

**எதிர்நிலையணி** - *உபமானத்திற்குக் குறைவு தோன்றச் சொல்லல், (உம்) அணங்கு முகம் போன் மதியுஞ் செயுமேமகிழ் அன்றியும் அவன்னியத்தை யுபமேயமாகக் காட்டி வன்னியத்தையிகழ் தலு மாம், (உம்) முகமேமதியு முனை யொக்கும்.*

**எதிர்ந்தோர்** - *பகைவர்.*

**எதிர்பார்த்தல்** - *வரவுபார்த்தல்.*

**எதிர்ப்படுதல்** - *எதிர்தல், சம்பவித்தல், நேரிடுதல்.*

**எதிர்ப்பாடு** - *நேரிடுதல்.*

**எதிர்ப்பாய்ச்சல்** - *நேரிட்ட பாய்ச்சலுக் கெதிர்த்துப் பாய்தல்.*

**எதிர்ப்பு** - *எதிர்த்தல்.*

**எதிர்மறுப்பு** - *உடன் பாட்டிற்கு மாறாய்ச் சொல்லுதல்.*

**எதிர்மறையணி** - *ஓரலங்காரம், அஃது ஒழிப்பணிக்கு வேறாகியுங் கேட்போரை மகிழ்விப்ப தாயு மிருக்கின்றமறுப்பைச் சொல்லு தல்.*

**எதிர்மறையும்மை** - *எதிர்மறுத்துச் சொல்லுமும்மை, (உம்) சாத்தன் வருதற்குமுரியன்.*

**எதிர்மறையெச்சம்** - *எதிர்மறுப்பைக் காட்டுமெச்சம், (உம்) அவனோ கொண்டான்.*

**எதிர்மறையெஞ்சணி** - *எதிர்மறை யெச்சவலங்காரம்.*

**எதிர்மறையேகாரம்** - *எதிர்மறுக்கு மேகாரம், (உம்) தூற்றாதேதூர விடல்.*

**எதிர்மறையோகாரம்** - *எதிர்மறுக்கு மோகாரம், (உம்) நானோகொண் டேன்.*

**எதிர்மறைவிகுதி** - *வினையையெதிர் மறுக்கும், இல்-அல்-ஆ என்னு மூன்றுமாம், (உம்) உண்டிலன்-உண்ணலன்-உண்ணான்.*

**எதிர்மறைவிடை** - *வினாவெதிர் மறுத்துத்தரங்கூறல், (உம்) செய்யே னெனன்.*

**எதிர்மறை** - *எதிர்மறுப்பு.*

**எதிர்மறைவினை** - *எதிர்மறுப்புள்ள வினை, அஃது இல்-அல்-ஆ எனும் விகுதிகள் புணர்ந்த வினைச் சொல்.*

**எதிர்மீன்** - *நீர்ப்பாய்ச்சலுக்கெதிர் வரும்மீன்.*

**எதிர்முசம்** - *நேர்முகம்.*

**எதிர்முறி** - *கள்ளச்சீட்டு.*

**எதிர்மொழி** - *எதிர்வார்த்தை, மறு மொழி.*

**எதிர்வாதம்** - *பிரதிவாதம்.*

**எதிர்வாதி** - *பிரதிவாதி.*

**எதிர்வினை** - *எதிர்மறைவினை வருவினை.*

**எதிர்வினைவிலக்கு** - *ஓரலங்காரம். அஃது வருகாலவிடையூற்றைக் காட்டிமறுப்பது.*

**எதிர்வு** - *எதிர்காலம், எதிர்த்தல், வருவது.*

**எதிர்வைத்தல்** - *சரிவைத்தல்.*

**எது** - *யாது.*

**எதுகை** - *செய்யுட்டொடை. அஃது இரண்டாமெழுத்தொன்றி வருவது.*

**எதுகைத்தொடை** - *செய்யுட்டொடை யினோர் வகை, அஃது அடிகளின் முதற் சீரினிரண்டாமெழுத் தொன்றிவரினடி யெதுகை அடி களின் முதலிரு சீர்களிரண்டா மெழுத்தொன்றிவரி னிணை யெதுகை.*

**எதேச்சை, எதேஷடம், எதேட்டம்** - *தன்னிட்டம்.*

**எத்தனம்** - *ஆயத்தம்.*

**எத்தனித்தல்** - *ஆயத்தமாக்கல், நோக்கமாயிருத்தல்.*

**எத்தன்** - *அணாப்புக்காரன்.*

**எத்து** - *அணாப்பு, எற்று, எத்தென் னேவல்.*

**எத்துணை** - *எவ்வளவு.*

**எத்துதல்** - *அணாப்புதல்.*

**எத்தேசகாலமும்** - *எப்போழ்தும்.*

**எந்திரம்** - *இயந்திரம், சூத்திரம், திரி கை, தேர், பண்டி, மதிலுறுப்பு.*

**எந்திரவாலி** - *சூத்திரவாலி.*

**எந்திரன்** - *சூத்திரி, தேர்.*

**எந்தை** - *எமதுசுவாமி, என்றந்தை.*

**எப்படி** - *எவ்விதம்.*

**எப்பொருட்குமிறைவன்** - *எல்லா வற்றிற்குமதிபன்.*

**எப்பொழுதும், எப்போதும், எப்போழ்தும்** - *எக்காலமும்.*

**எப்போ, எப்போது** - *எப்பொழுது.*

**எமகணம்** - *யமகணம்.*

**எமதூதி** - *நாகபாம்பின் நச்சுப்பல்லி னொன்று.*

**எமநாகம்** - *அசமதாகம்.*

**எமநாமம்** - *ஊமத்தை.*

**எமர்** - *எமதுசுற்றத்தார், எம்முடைய வர்.*

**எமள்** - *எம்முடையவள்.*

**எமன்** - *இயமன், எம்முடையவன், நாகபாம்பினது நச்சுப்பல்லி னொன்று.*

**எம்** - *தன்மைப்பன்மை விகுதி, எம்முடைய, தன்மைப் படர்க்கை யுளப் பாட்டுப்பன்மை விகுதி, (உம்) உண்டனெம்.*

**எம்பர்** - *எவ்விடம்.*

**எம்பி** - *என்றம்பி.*

**எம்பிராட்டி** - *எங்கள்தலைவி.*

**எம்பிராள், எம்பெருமான்** - *எங்கள் தலைவன், எங்கள் தேவன்.*

**எம்புகம்** - *நிலக்கடம்பு.*

**எம்மர்** - *எம்முடையோர்.*

**எம்மனோர்** - *எம்மோடொத்தவர்.*

**எம்மாத்திரம்** - *எவ்வளவு.*

**எம்மான்** - *எமதுதெய்வம், எம்பிரான்.*

**எம்மை** - *எங்களை, எப்பிறப்பும்.*

**எம்மையும்** - *எப்பிறப்பும்.*

**எம்மோர்** - *எம்முடையவர்.*

**எயில்** - *ஊர்ப்பொது, மதில்.*

**எயிறலைப்பு** - *பற்கடிப்பு.*

**எயிறு** - *பல்லு, பன்றிக்கொம்பு, யானைக்கொம்பு, வக்கிரதந்தம்.*

**எயிறுதின்றல்** - *பற்கடித்தல்.*

**எயிற்றியர்** - *பாலைநிலப்பெண்கள், வேடுவப்பெண்கள்.*

**எயினர்** - *பாலைநிலமாக்கள், வேடர்.*

**எயின்** - *வேடருக்குரியன, வேடசாதி.*

**எய்** - *எய்யென்னேவல், முட்பன்றி.*

**எய்தல்** - *அடைதல், நால்வகை யூறு பாட்டினொன்று. அஃது எய்தல்.*

**எய்துதல்** - *அடைதல், சம்பவித்தல், பெறுதல்.*

**எய்த்தல்** - *இளைத்தல், மெலிதல்.*

**எய்ப்பன்றி** - *முட்பன்றி.*

**எய்ப்பாடி** - *வேடரூர்.*

**எய்ப்பிலவைப்பு** - *தான் தளர்ந்தும் பிறரைத்தாங்கல்.*

**எய்ப்பு** - *இளைப்பு, பலவீனம்.*

**எய்யாமை** - *அறியாமை.*

**எரி** - *எரியென்னேவல், கேட்டை நாள், தீ, நரகம், பிரவை, புநர்பூசம்.*

**எரிகரும்பு** - *கரும்பு.*

**எரிகாசு**- *அகிற்கூட்டைந்தினொன்று. அஃது காசுக்கட்டி.*

**எரிகாலி** - *காட்டாமணக்கு.*

**எரிகுடலன்** - *மிகுபசியுள்ளவன்.*

**எரிகுன்மம்** - *ஓர் நோய்.*

**எரிக்கலக்காம்போதி** - *ஓரிராகம்.*

**எரிசனம்** - *நரகர்.*

**எரிச்சல்** - *அழற்றல், எரிதல், கோபம், பொறாமை.*

**எரிதயிலம்** - *எரித்தெடுக்குந்தயிலம்.*

**எரிதல்** - *அழற்றல், அனற்றல், தீசு, வாலித்தல், பிரகாசித்தல், வெந் தற்றுப்போதல்.*

**எரித்தல்** - *எரியச்செய்தல்.*

**எரிநாள்** - *கார்த்திகைநாள்.*

**எரிபடுவன்** - *ஓர் நோய்.*

**எரிபக்கம்** - *எரிவந்தம்.*

**எரிபிடாரி** - *எரிச்சற்காரன், ஓர் தேவதை.*

**எரிபுழு, எரிபூச்சி** - *கரியமயிர்க்குட்டி.*

**எரிபொழுது** - *இலங்குபொழுது.*

**எரிப்பு** - *எரித்தல், பொறாமை.*

**எரிப்புறம்** - *நரகம்.*

**எரிமருந்து** - *சுடுமருந்து.*

**எரிமுகி** - *சேங்கொட்டைமரம்.*

**எரியல்** - *எரிதல், எரிந்தது.*

**எரியவிட்டமருந்து** - *நீற்றினபலமம்.*

**எரியிடுதல்** - *எரியவைத்தல்.*

**எரிவட்டம்** - *நரகவட்டத்துளொன்று.*

**எரிவண்டு** - *பட்டவிடமெரிகிறவண்டு.*

**எரிவந்தம்** - *மிகவெரிக்குமோர்நோய்.*

**எரிவனம்** - *சுடுகாடு.*

**எரிவிழித்தல்** - *கோபித்துப்பார்த்தல்.*

**எரிவு** - *அழற்சி, எரிதல்.*

**எரு** - *சாணி.*

**எருக்கம்** - *எருக்கு.*

**எருக்கல், எருக்குதல்** - *கொல்லல், சுமத்தல், வெட்டல்.*

**எருக்களம்** - *ஆனிலை.*

**எருக்கு** - *எருக்கலை, எருக்கென் னேவல்.*

**எருச்சாட்டி** - *எருப்பட்டநிலம்.*

**எருதடித்தல்** - *உழுதல், போரடித்தல்.*

**எருது** - *இடபம், இடபவிராசி.*

**எருதுமறித்தல்** - *பசுவுடனே எருது, புணர்தல்.*

**எருத்தங்கோட்டல்** - *தலைகவிழ்தல்.*

**எருத்தடி** - *ஈற்றயலடி.*

**எருத்தம், எருத்து** - *பிடர், தரவு.*

**எருத்துக்கரணம்** - *ஓர் கரணம்.*

**எருத்துப்பூட்டு** - *ஓர் பூட்டு.*

**எருத்துவாலன்** - *ஓர் குருவி.*

**எருந்து** - *கிளிஞ்சில்.*

**எருமணம்** - *செங்குவளை.*

**எருமுட்டை** - *எருவராட்டி.*

**எருமுட்டைப்பீநாறி** - *வெதுப்படக்கி.*

**எருமை** - *காரா.*

**எருமைக்கற்றாழை** - *ஓர் கற்றாழை.*

**எருமைக்காய்ஞ்சொறி** - *ஓர் காய்ஞ் சொறி.*

**எருமைக்கொற்றான்** - *ஓர் கொடி.*

**எருமைச்சுறா** - *ஓர்மீன்.*

**எருமைத்தக்காளி** - *ஓர் செடி.*

**எருமைநாக்கி** - *சாணாக்கி.*

**எருமைநாக்கள்ளி** - *ஓர் கள்ளி.*

**எருமைநாத்தொட்டி** - *வைப்புப் பாஷாண முப்பத்திரண்டி னொன்று.*

**எருமைப்பாச்சோற்றி** - *ஓர்பூண்டு.*

**எருமைமுல்லை** - *ஓர் முல்லை.*

**எருமைமுன்னை** - *ஓர் கொடி.*

**எருமையூர்தி** - *யமன்.*

**எருவராட்டி** - *காய்ந்த எரு.*

**எருவாரம்** - *எருச்செய்கைப்பங்கு.*

**எருவிடுவாசல்** - *குதம்.*

**எருவை** - *உதிரம், ஓர் பூடு, கழுகு, கழுதை, கொறுக்கை, கோரை, செம்பு, யானை.*

**எலி** - *பூரநாள், மூடிகம்.*

**எலிச்செவி, எலிச்செவித்துத்தி** - *ஓர் பூடு.*

**எலித்திசை** - *வடமேற்றிசை.*

**எலிப்பளை** - *எலிப்புற்று.*

**எலிப்பாஷாணம்** - *ஓர் மருந்து.*

**எலிப்புலி** - *பூனை.*

**எலிப்புற்று** - *எலிவளை.*

**எலிப்பொறி** - *எலிபடுக்குஞ்சூத்திரம்.*

**எலியாமணக்கு** - *ஓர் மரம்.*

**எலியொட்டி** - *ஒட்டொட்டி.*

**எலியோடி** - *முகட்டுப்பாய்ச்சு.*

**எலியோட்டி** - *ஓர் பூடு.*

**எலிவளை** - *எலிப்புற்று.*

**எலு** - *கரடி, தோழமை.*

**எலுநன்** - *சோழன்.*

**எலுமிச்சை** - *எலும்பிச்சை.*

**எலும்பன்** - *எலும்புபுறப்பட்டவன்.*

**எலும்பிலி** - *ஓர் மரம், புழு.*

**எலும்பு** - *என்பு.*

**எலும்புக்கூடு** - *எலும்புக்கோவை.*

**எலும்புக்கோறை** - *எலும்புத்துவாரம்.*

**எலும்புருக்கி** - *ஓர் நோய், ஓர் பூடு, ஓர் மரம்.*

**எலுவன்** - *தோழன்.*

**எல்** - *இகழ்ச்சிக்குறிப்பு, இரவு, ஒளி, சூரியன், நாள், பகல், வெயில்.*

**எல்லரி** - *கைமணி.*

**எல்லவன்** - *சந்திரன், சூரியன்.*

**எல்லாம்** - *முழுவதும்.*

**எல்லாரும்** - *சகலரும்.*

**எல்லி** - *இராத்திரி, சூரியன்.*

**எல்லீரும், எல்லீர்** - *நீவிர்யாரும்.*

**எல்லு** - *சூரியன், நாள்.*

**எல்லேமும், எல்லேம்** - *நாமெல்லாரும்.*

**எல்லை** - *அவதி, அளவு, கூப்பிடு தூரம், சூரியன், நாள்முடிவு, பகற் பொழுது.*

**எல்லைகடத்தல்** - *அளவைக் கடத்தல், ஆணையைக்கடத்தல்.*

**எல்லைகட்டுதல்** - *தீர்த்தல், முடிவு கட்டுதல், வரம்புவைத்தல், வரை யறுத்தல்.*

**எல்லைகுறித்தல்** - *அவதிகுறித்தல், எல்லைகட்டுதல்.*

**எல்லைக்கட்டு** - *இறைக்கட்டு, எல்லை மானம்.*

**எல்லைக்கல், எல்லைக்கால்** - *எல்லை யறியநிறுத்துவது.*

**எல்லைக்காவல்** - *எல்லைமானக் காவல்.*

**எல்லைக்குறிப்பு** - *எல்லையடை யாளம்.*

**எல்லைக்கெட்டநேரம்** - *ஒவ்வாதநேரம்.*

**எல்லைக்கேடு** - *ஒவ்வாமை.*

**எல்லைத்தீ** - *ஊழித்தீ.*

**எல்லைப்படுத்தல்** - *அளவுபடுத்தல், எல்லைகட்டுதல்.*

**எல்லைப்பிடாரி** - *ஓர் தேவதை.*

**எல்லைப்பொருள்** - *ஒருபொருளினது திசையளவைக் குறிப்பதற்கு எல்லையாய் நிற்கும் பொருள், (உம்) உத்தரரார்த்த கோளத்திற்கு தெற்கு சமரேகை.*

**எல்லைமானம்** - *எல்லை.*

**எல்லையின்மை** - *அளவின்மை.*

**எல்லோ** - *அதிசயவிரக்கச்சொல்.*

**எல்லோமும், எல்லோம்** - *நாமெல் லாரும்.*

**எல்லோரும்** - *சகலரும்.*

**எல்லோன்** - *சூரியன்.*

**எல்வை** - *காலம், நாள்.*

**எவட்சாரம்** - *ஓர் சரக்கு.*

**எவண்** - *எவ்விடம்.*

**எவரும்** - *எல்லாரும்.*

**எவற்று** - *எது.*

**எவன்** - *என்னை, யாது, யாவன், யாவை.*

**எவை** - *யாவை.*

**எவையும்** - *யாவையும்.*

**எவ்** - *எவை.*

**எவ்வது** - *எது, எவ்வண்ணம்.*

**எவ்வம்** - *குற்றம், தனிமை, தீராத நோய், துக்கம், துன்பம்.*

**எவ்வரும்** - *எவரும்.*

**எவ்வனம்** - *இளமை, மதர்த்தல்.*

**எழல்** - *எழும்பல், துக்கம்.*

**எழால்** - *ஓர் பட்சி, யாழ், யார்நரம்பினோசை.*

**எழிலறிதல்** - *அசுவைமட்டுக்கட்டுதல், குறிப்பறிதல்.*

**எழிலி** - *கடையெழுவள்ளலிலொருவன், மேகம்.*

**எழில்** - *அசுகை, அழகு, இளமை, வண்ணம், வலி.*

**எழினி** - *இடைச்சீலை, திரைச்சீலை.*

**எழு** - *உழலைமரம், எழுவென்னேவல், ஓர்மரம், கம்பம், வளைதடி.*

**எழுகூற்றிருக்கை** - *ஓர் பிரபந்தம், அஃது ஏழறைத்தட்டு விளையாட்டுச்சிறப்புக்கூறுவது.*

**எழுகை** - *எழுதல்.*

**எழுச்சி** - *எழும்புதல், ஏறிச்செல்லல், கண்ணோயினொன்று, மனமுயற்சி.*

**எழுச்சிக்கொடி** - *கண்ணினிற்பற்றுமோர்கொடி.*

**எழுச்சிபாடுவோன்** - *தேவரரசர் முதலியோர்க்குப் பள்ளியெழுச்சி பாடுவோன்.*

**எழுச்சிமுரசம்** - *தேவரரசரிவர்களை வைகறையிலெழுப்ப முழக்கு முரசம்.*

**எழுச்சியிலை** - *பலவனிலை.*

**எழுதகம்** - *எழுதப்பட்டரூபு, சித்திரக்கம்பி, சித்திரசொரூபம்.*

**எழுதல்** - *எழுதுதல், எழும்புதல், கிளர்தல்.*

**எழுதாக்கிளவி, எழுதாமறை** - *வேதம்.*

**எழுதுகோல்** - *தூரியக்கோல்.*

**எழுதுதல்** - *எழுதல்.*

**எழுத்தந்தாதி** - *ஈற்றெழுத்தாதியாகப் பாடல்.*

**எழுத்தடைத்தல்** - *எழுத்துக்களை யறைவகுத்தடைத்தல்.*

**எழுத்ததிகாரம்** - *எழுத்திலக்கணம்.*

**எழுத்தலங்காரம்** - *எழுத்திலோரியல்.*

**எழுத்தறப்படித்தல்** - *தீர்க்கமாய் வாசிக்கப்பயிலல்.*

**எழுத்தாணி** - *ஓலையிலெழுதுங்கருவி.*

**எழுத்தாணிப்பூடு** - *ஓர் பூடு.*

**எழுத்தாளர்** - *அறிஞர், எழுத்துக்காரர்.*

**எழுத்தானந்தம்** - *பாடற்கு விலக்கப் பட்டவெழுத்து.*

**எழுத்திலக்கணம்** - *பஞ்சவிலக்கணத் தொன்று.*

**எழுத்திலாவோசை** - *எழுத்தொலி காட்டாத அசைஅஃது இரைச்சல் முதலியன.*

**எழுத்தினோசை** - *அக்கரம் விளக்கி நிற்குந்தொனி.*

**எழுத்து** - *அக்கரம், சித்திரம்.*

**எழுத்துக்காரன்** - *எழுதுகிறவன், புடைவை முதலியவற்றிற் சித்திரந் தீட்டுவோன்.*

**எழுத்துக்காரியஸ்தன்** - *எழுத்துக் காரன்.*

**எழுத்துக்குற்றம்** - *நச்செழுத்து முதலியனவருதல்.*

**எழுத்துக்கூட்டுதல்** - *எழுத்துக்களைப் புணர்த்தி வாசித்தல்*

**எழுத்துச்சந்தி** - *எழுத்துக்களின் புணர்ச்சி.*

**எழுத்துச்சாரியை** - *ஓரெழுத்தான் வருஞ்சாரியை.*

**எழுத்துச்சுருக்கம்** - *எழுத்துக்களை யிடைவிட்டெழுதிவாசிப்பது.*

**எழுத்துநடை** - *நன்றாய்ச் செல்லும் வாசனை.*

**எழுத்துப்புடைவை** - *சித்திரப்படாம்.*

**எழுத்துப்பொருத்தம்** - *பாலன்முதலி யனவெழுத்துத்தானப் பொருத்தம்.*

**எழுத்துவருத்தனம்** - *சித்திரக்கவியினொன்று. அஃது எழுத்தெழுத் தாய்ப் பிரிக்கப் பொருள்பயப்பது.*

**எழுத்துவாசனை** - *எழுத்துநடை.*

**எழுநா** - *நெருப்பு.*

**எழுந்தபடி** - *நினைத்தபடி, நேரிட்ட படி.*

**எழுந்தமானம்** - *யோசனை பண்ணாமை.*

**எழுந்தருளிவிக்கிரகம்** - *வெளி கொண்டுவருகிறவிக்கிரகம்.*

**எழுந்தருளுதல், எழுந்திருத்தல்** - *பெரியோரெழுதல்.*

**எழுந்தேற்றம்** - *எழுந்தமானம், எழுந் தருளல்.*

**எழுபவம்** - *உயர்பிறப்பு, எழுபிறப்பு.*

**எழுப்பம்** - *எழுச்சி, நடமாட்டம், வளர்ச்சி.*

**எழுப்பிவிடுதல், எழுப்புதல்** - *எழும்பப் பண்ணுதல், முயற்சியுண்டாக்கு தல்.*

**எழுப்பு** - *எழுப்புதல் எழுப்பென்னே வல்.*

**எழுமான்புலி** - *ஓர் பூடு.*

**எழுமுகனை** - *துவக்கம், முதல்.*

**எழுமை** - *உயர்ச்சி, எழுபிறப்பு.*

**எழும்பல்** - *எழும்புதல், கைத்தோம்பு.*

**எழுவரைக்கூடி** - *ஓர் பாஷாணம்.*

**எழுவாயுருபு** - *பெயர் வேற்றுமை யுருபு.*

**எழுவாயெழுனி** - *மகநாள்.*

**எழுவாய்** - *ஆதி.*

**எழுவாய்வேற்றுமை** - *முதலாம் வேற்றுமை.*

**எழுவான்** - *கிழக்கு.*

**எளிசு** - *அருமையற்றது, இலேசானது, எளியது.*

**எளிஞர்** - *எளியவர்.*

**எளிதரவு** - *எளிமைத்தனம்.*

**எளிது** - *எளிசு.*

**எளிமை** - *தரித்திரம், தளர்வு, தனிமை, தாழ்வு.*

**எளியர், எளியார்** - *ஈனர், தரித்திரர், திராணியற்றவர்.*

**எளியவிலை** - *அற்பவிலை.*

**என்** - *எள்ளு, எள்ளென்னேவல்.*

**என்கல், எள்குதல்** - *இகழ்தல்.*

**எள்ள** - *உவமைச்சொல்.*

**எள்ளல்** - *அவமதிச்சிரிப்பு, நிந்தை.*

**எள்ளிடை** - *எள்ளளவு.*

**எள்ளுச்செவி** - *ஓர் பூண்டு.*

**எள்ளுதல்** - *இகழ்தல், தள்ளுதல்.*

**எள்ளோரை** - *எள்ளுச்சாதம்.*

**எறிகாலி** - *காலாலெறியும்பசு.*

**எறிதல்** - *அடித்தல், உதைதல், குத்தல், நால்வகையூறினொன்று, வீசல், வெட்டல்.*

**எறித்தல்** - *ஒளிவீசல், வெயில்காலல்.*

**எறிபடை** - *கைவிடுபடை.*

**எறிப்பு** - *ஒளிசெய்தல், கோடை, விம்பித்தல்.*

**எறிமணி** - *சேமக்கலம்.*

**எறிமுத்து** - *வகுரிநோயிலிடையிடை போட்டமுத்து.*

**எறியாயுதம்** - *வேல்முதலியபடை.*

**எறியால்** - *ஓர் மீன்.*

**எறியீட்டி** - *எறிவல்லையம்.*

**எறிவு** - *எறிதல்.*

**எறும்பி** - *யானை.*

**எறும்பு** - *பிபீலிகை.*

**எறுழி** - *பன்றி.*

**எறுழ்** - *தடி, தண்டு, தூண், வலி.*

**எற்பாடு** - *மாலைப் பொழுதுக்கு முன் பத்துநாழிகை நேரம்.*

**எற்றல்** - *அடித்தல், அறுத்தல், இறை மரம், எதிர்த்தல், எறிதல், எற்றுதல், குத்தல், கொல்லல், தட்டப்படுதல், வெட்டல்.*

**எற்றல்மரம்** - *இறைமரம்.*

**எற்றற்கொட்டு** - *இறைமரக்கொட்டு.*

**எற்றற்பட்டை** - *சீலாப்பட்டை.*

**எற்றித்தல்** - *இரங்கல்.*

**எற்று** - *இரக்கக்குறிப்பு, எத்தன்மைத்து, எறிதல், எற்றென்னேவல்.*

**எற்றுதல்** - *எறிதல், கொல்லல், நீர் முதலியவற்றையெற்றல், புடைத்தல்.*

**எற்றுநூல்** - *மரக்கோட்டம் பார்க்கு நூல்.*

**எற்றை** - *என்று.*

**எற்றோ** - *அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல், எத்தன்மைத்தோ.*

**என** - *என்க, ஓர் உவமையுருபு, என்னுடையது, ஓரெச்சச் சொல், (உம்) ஒல்லெனவொலித் தது, எண்ணிடைச்சொல், (உம்) பகை, பாலம், அச்சம், பழியென நான்கு.*

**எனது, எனாது** - *என்னுடையது.*

**எனல்** - *என்றல்.*

**எனா** - *எண்ணிடைச்சொல், (உம்) சாத்தனெனா கொற்றனெனா.*

**என்வெஞ்சணி** - *எனவெஞ்சணி.*

**எனில்** - *என்று சொல்லில்.*

**எனைத்து** - *எத்தன்மைத்து, எவ்வளவு.*

**எனைத்துணை** - *எவ்வளவு.*

**எனையவன்** - *எத்தன்மையவன், எவன்.*

**எனைவரும்** - *யாவரும்.*

**எனைவீர்** - *எல்லாநீர்.*

**எனைவேமும், எனைவேம், எனைவோமும், எனைவோம்** - *எல்லோரும்.*

**எனைவோரும்** - *யாவரும்.*

**என்** - *இகழ்ச்சிக்குறிப்பு, இடைச்சொல், என்ன, ஐயக்கிளவி, சொல்லுக, தன்மை யொருமைச் சொல்.*

**என்கு, என்கும்** - *என்றுசொல்லும்.*

**என்பாபரணன்** - *சிவன்.*

**என்பித்தல்** - *அத்தாட்சிப்படுத்தல், என்று சொல்வித்தல்.*

**என்பு** - *எலும்பு, புல்.*

**என்புதின்றி** - *கழுதைக்குடத்தி.*

**என்புருக்கி** - *எலும்புருக்கி.*

**என்மர், என்மனார், என்றிசினோர்** - *என்றுசொல்வார்.*

**என்வெஞ்சணி** - *எனவென்னெச்சம்.*

**என்றா** - *எண்ணிடைச்சொல்.*

**என்று** - *எந்நாள், சூரியன்.*

**என்றும்** - *எப்போழ்தும்.*

**என்றூழி** - *எப்போழ்தும்.*

**என்றூழ்** - *சூரியன், வெயில்.*

**என்றூள்** - *கோடை.*

**என்ன** - *உவமைச்சொல், எத்தன்மைய என்று சொல்க, யாவை.*

**என்னல்** - *என்றுசொல்லல்.*

**என்னே** - *அதிசயவிரக்கச்சொல்.*

**என்னை** - *என்றந்தை, என்ன, விரவுத் திணை யொருமைத் தன்மைச் செயப்படுபொருள்.*

**என்னோ** - *அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல், ஐயக்கிளவி.*

# ஏ

**ஏ** - *அடே, இசைநிறை, ஈற்றசை, எண்ணின்குறிப்பு, (உம்) நிலனே நீரே, எதிர்மறை, (உம்) பொய்யே, ஓரெழுத்து, தேற்றக்குறிப்பு, (உம்) நானேவந்தது, பாணம், பிரிவின் குறிப்பு, (உம்) இவற்றுளொன்றே நன்று, வினாக்குறிப்பு (உம்) தரலே வந்தது.*

**ஏஏ** - *இகழ்ச்சிக்குறிப்பு.*

**ஏகுண்டலன்** - *குபேரன், பலராமன்.*

**ஏககுரு** - *உடன்கற்றோன்.*

**ஏகசகடு** - *ஒரொட்டு.*

**ஏகசக்கிரம்** - *தனியரசாட்சி செலுத்துதல்.*

**ஏகசக்கிரவர்த்தி, ஏகசக்கிராதிபதி** - *சுயாதிபதி.*

**ஏகசமன்** - *ஒருசரி.*

**ஏகசமானம்** - ஒரேசமானம்.

**ஏகசரம்** - காண்டாமிருகம்.

**ஏகசாதர்** - சகோதரர்.

**ஏகசாதி** - சூத்திரன்.

**ஏகசிந்தை** - ஒருமனம், ஒன்றிப்பு.

**ஏகசிருங்கம்** - காண்டாமிருகம்.

**ஏகசிருங்கன்** - கிருஷ்டிணன்.

**ஏகசூனு** - ஒரேபேறானபிள்ளை.

**ஏகதந்தன்** - விநாயகன்.

**ஏகதாளம்** - சத்ததாளத்தொன்று.

**ஏகதிரீயத்துவம்** - ஒன்றில்மூன்று தத்துவங்கொண்டிருத்தல்.

**ஏகதேகம்** - யௌவனம்.

**ஏகதேசக்காரன்** - மாறுபாடுள்ளவன்.

**ஏகதேசம்** - அரிது, அலங்காரத்து ளொன்று, ஒட்டுக்கு, ஓரிடம், முன்பின்னாக, வித்தியாசம், பங்கு.

**ஏகதேசவுருபகம், ஏகதேசவுருவகம்** - அஃது ஒரேயங்கத்தையுருவகஞ் செய்வது

**ஏகதேசவுருவகம்** - ஓரலங்காரம்.

**ஏகதேவன்** - கடவுள், சிவன், புத்தன்.

**ஏகதொகை** - முழுத்தொகை.

**ஏகத்துவம்** - ஒருபொருளாயிருக்குந் தன்மை.

**ஏகநாதன், ஏகநாயகன்** - கடவுள், சுயாதிபதி.

**ஏகபந்தனம்** - ஒருகூட்டாய்க் கூடுதல், ஒன்றிப்பு.

**ஏகபத்திரிகை** - வெண்டுளசி.

**ஏகபத்தினி** - பதிவிரதை.

**ஏகபாதம்** - நான்கடியுமோரடியாய் வருங்கவி.

**ஏகபாதவாதனம்** - அத்தமேற்காலா தனமாய்க் கிடந்து ஒரு கான்மேனீ முட்வது.

**ஏகபாவனை** - ஒருமைப்பாவனை.

**ஏகபிங்கலன்** - குபேரன்.

**ஏகபிங்கன்** - குபேரன்.

**ஏகபிண்டன்** - நெருங்கியவுறவன்.

**ஏகபோகம்** - இட்டம், இருவருமொத்த போகம்.

**ஏகப்பிழை** - முற்றும்பிழை.

**ஏகப்பெருவெள்ளம்** - ஒருமிக்கமூடிய பெருவெள்ளம்.

**ஏகமாய்** - ஒன்றாய்.

**ஏகம்** - ஒப்பில்லாதது, ஒன்று, தனிமை, முழுவதும்.

**ஏகம்பன்** - கச்சிப்பதீசன்.

**ஏகரூபன்** - கடவுள்.

**ஏகல்** - உயர்ச்சி, நடத்தல், போகல்.

**ஏகவசனம்** - ஒருமைச்சொல், ஒரே மொழி, மெய்.

**ஏகலிங்கன்** - குபேரன்.

**ஏகவத்தவாதனம்** - ஏகபாதவாதன மாகக் கிடந்துகையை நீட்டி யிருப்பது.

**ஏகவஸ்து** - கடவுள்.

**ஏகவாசம்** - ஆலமரம், கூடியிருத்தல், தனியிருப்பு.

**ஏகவீரன்** - இணையில்வீரன்.

**ஏகவெளி** - மறைவிலாவெளி.

**ஏகவேணி** - மூதேவி.

**ஏகன்** - ஒருவன், கடவுள், சிவன்.

**ஏகாக்கம்** - காக்கை.

**ஏகாக்கிரம், ஏகாக்கிருதை** - ஒரே நோக்கம்.

**ஏகாங்கம்** - தனிமை, சந்தனம், புதன்.

**ஏகாங்கவுருவகம்** - ஓரலங்காரம், அஃது ஒன்றனங்கம் பலவற்றை யும் வாளா கூறி யோரங்கத்தையே யுருவகிப்பது.

**ஏகாங்கி** - சந்நியாசி, தனிமையா யிருப்பவன்.

**ஏகாசம்** - உத்தரீயம், போர்வை.

**ஏகாட்சரி** - *புவனாசத்தி, மிறைக்கவி யினொன்று. அஃது ஓர்வரி யெழுத்தானோர் கவிமுடிவது.*

**ஏகாட்சரிகக்கிஷம்** - *ஓர்மாந்திரிய நூல்.*

**ஏகாண்டம்** - *ஆகாயம், வெளி.*

**ஏகாதசம்** - *பதினொன்று.*

**ஏகாதசி** - *பதினொராந்திதி.*

**ஏகாதிபதி** - *தனியாட்சி பண்ணுபவன்.*

**ஏகாதிபத்தியம்** - *தனியரசாட்சி.*

**ஏகாத்தியம்** - *தனிச்செங்கோன்மை.*

**ஏகாந்தசேவை** - *தனிச்சேவை.*

**ஏகாந்தமண்டபம்** - *கொலுமண்டபம், தனியிருக்கு மண்டபம்.*

**ஏகாந்தம்** - *தனித்திருக்குமிடம், தனிமை, சந்தனம், புதன்.*

**ஏகாந்தவாழ்வு** - *தனிவாழ்வு.*

**ஏகாம்பரன்** - *சிவன்.*

**ஏகாரவல்லி** - *பலா, பாகல்.*

**ஏகாலி** - *சவுக்காரம், வண்ணான்.*

**ஏகாலியர்** - *வண்ணார்.*

**ஏகி** - *கைம்பெண்.*

**ஏகீபலித்தல்** - *ஒன்றித்தல், சேருதல்.*

**ஏகீபாவம்** - *ஒருமைப்பாவனை.*

**ஏகீயன்** - *தோழன்.*

**ஏகுதல்** - *போகுதல்.*

**ஏகோத்திட்டம்** - *அபரக்கிரியையி னொன்று, ஏகோதிட்டம்.*

**ஏகோபித்தல்** - *ஒருமனப்படுதல், ஒன்றாதல், சேர்தல்.*

**ஏக்கம்** - *ஏங்கல், பயம், பேராசை.*

**ஏக்கழுத்தம்** - *இறுமாப்பு.*

**ஏக்கறல்** - *ஏக்கறுதல்.*

**ஏக்கறவு** - *ஏற்றுக்கொள்ளுதல், வணங்கல்.*

**ஏக்கறுதல்** - *அங்கலாய்த்தல், அவமானித்தல், தாழ்ந்துநிற்றல்.*

**ஏக்கிபோக்கி** - *எளியோர்.*

**ஏக்கை** - *இகழ்ச்சி.*

**ஏங்கல்** - *அஞ்சல், அழுதல், இரங்கல், ஒலித்தல், மயிற்குரல்.*

**ஏசம்** - *வெண்கலம்.*

**ஏசல்** - *பழிமொழி, வைதல்.*

**ஏசறுதல்** - *துக்கித்தல்.*

**ஏசனம்** - *கலக்குதல்.*

**ஏசாதவர்** - *குற்றமில்லாதவர், தேவர்.*

**ஏசி** - *கிளி.*

**ஏசு** - *ஏசென்னேவல், குற்றம்.*

**ஏச்சு** - *உதாசினம், வைதல்.*

**ஏட** - *தோழன்முன்னிலை.*

**ஏடகம்** - *சீலை, தென்னமரம், பலகை, பனைமரம், பூவிதழ், ஆட்டுக் கடா, திருவேடகம்.*

**ஏடணை** - *விருப்பம்.*

**ஏடல்** - *கருத்து.*

**ஏடன்** - *செவிடன், தோழன்.*

**ஏடா** - *தோழன்முன்னிலை.*

**ஏடாகுடம், ஏடாகூடம்** - *ஏறாமேடு.*

**ஏடாகோடம்** - *ஏற்றத்தாட்சியான நடை.*

**ஏடாசிரியர்** - *குருவில்லா தேடுமாத் திரத்திற் கற்றோர்.*

**ஏடி** - *தோழிமுன்னிலை.*

**ஏடு** - *கண்ணிமை, பனையேடு, பாலாடை, பூவிதழ்.*

**ஏடுகம்** - *பிரேதக்கல்லறை.*

**ஏட்டிக்குப்போட்டி** - *எதிருக்கெதிர், ஒவ்வாமை.*

**ஏட்டிற்கல்வி** - *குருவில்லாக்கல்வி.*

**ஏட்டை** - *ஆசை, தளர்வு, துன்பம், வறுமை.*

**ஏணகம்** - *மான்..*

**ஏணம்** - *எலும்பு, நிலைபெறுதல், மான், மான்றோல், வலி.*

**ஏணல்** - *வளைவு.*

**ஏணாசினம்** - *மான்றோல்.*

**ஏணாப்பு** - *இறுமாப்பு.*

**ஏதசன்** - *பிராமணன்.*

**ஏணி** - *இறைவை, எல்லை, நாடு, மான் கன்று.*

**ஏணிலையுடைமை** - *கண்ணோட்டம்.*

**ஏணை** - *ஆடுமஞ்சம்.*

**ஏண்** - *நிலையுடைமை, வலி, வளைவு.*

**ஏண்கோண்** - *திருக்கு, நேரின்மை.*

**ஏண்டாப்பு** - *இறுமாப்பு.*

**ஏதடை** - *விரோதம்.*

**ஏதண்டை** - *சிறாம்பி.*

**ஏதம்** - *குற்றம், கேடு, துன்பம், பல வன்னம், மான்.*

**ஏதனம்** - *சுவாசம் விடல்.*

**ஏதி** - *ஆயுதப்பொது, துண்டு, வாள்.*

**ஏதியம்** - *கிரணம்.*

**ஏதிலார்** - *அயலோர், தரித்திரர், பகைவர், பிறர்.*

**ஏதில்** - *அயல்.*

**ஏதின்மை** - *பிரியவீனம், வெறுமை.*

**ஏது** - *ஏன், ஓரலங்காரம், அஃது இன்ன காரணத்தானின்னதா மெனக் கூறுவது, காரணம், யாது, உபகரணம்.*

**ஏதுங்கெட்டவன்** - *இடமற்றவன், வீணன்.*

**ஏதுத்தற்குறிப்பு** - *ஓரலங்காரம்.*

**ஏதும்** - *யாதொன்றும்.*

**ஏதுவனுமானம்** - *ஓரளவை, அஃது புகையைக் கண்டு நெருப்புண் டென வறிதல்.*

**ஏதுவானவன்** - *இடமுள்ளவன், பிராத்தியுள்ளவன்.*

**ஏதுவிலக்கு** - *ஓரலங்காரம், அஃது இன்னதினானின்ன காரணமின் றெனக் கூறுவது.*

**ஏதுவின்முடித்தல்** - *ஓர்யுத்தி.*

**ஏதுவுருவகம்** - *ஓரலங்காரம். அஃது காரணத்தைக்காட்டி யுருவகப் படுத்துவது.*

**ஏதுவுவமை** - *காரணங்களை யெடுத்துக்காட்டி யுவமையைப் பொருட் கொப்பிட்டுக் கூறுவது, (உம்) மாமணியும் பாசிலையும் இளம்பிறையுங் கூடிபிரபையால் வானவிற்போன்றது.*

**ஏதை** - *பேதை, வறியன்.*

**ஏத்தல்** - *துதித்தல்.*

**ஏத்திரி** - *சாதிபத்திரி.*

**ஏத்து** - *ஏத்தென்னேவல், துதி.*

**ஏத்துவம்** - *பின்பு.*

**ஏந்தல்** - *அரசன், உயர்ச்சி, ஏந்துதல், பெருமை, பெருமையிற்சிறந்தோன், மலை, மேடு.*

**ஏந்தல்வண்ணம்** - *சொல்லியது சிறந்து வருவது.*

**ஏந்தானம்** - *ஏந்துதல், சிறாம்பி.*

**ஏந்தி** - *ஏந்துபவன், தரித்தவன்.*

**ஏந்திசை** - *இராகத்தகுதியுளொன்று.*

**ஏந்திசைச் செப்பல்** - *வெண்சீர் வெண்டளையான் வருவது.*

**ஏந்திசைத்துள்ளல்** - *கலித்தளை யிசைந்து வருவது.*

**ஏந்திசைத் தூங்கல்** - *வஞ்சித்தளை யொன்றி வருவது.*

**ஏந்திசையகவல்** - *நேரொன்றாசிரியத் தளையான் வருவது.*

**ஏந்திரம்** - *இயந்திரம்.*

**ஏந்திரவச்சு** - *பண்டியச்சு.*

**ஏந்திழை** - *பெண்.*

**ஏந்துகொம்பு** - *மேல்வளைவான கொம்பு.*

**ஏந்துதல்** - *தாங்கல்.*

**ஏப்பம்** - *ஏவறை.*

**ஏமகண்டன்** - *ஓரிராக்கதன்.*

**ஏமகூடம்** - *அட்டமலையிற்பொன் மலை.*

**ஏமதவஞ்சம்** - *போக பூமியாறி னொன்று.*

**ஏமத்தூரி** - *பொன்னூமத்தை.*

**ஏமம்** - *இரா, இன்பம், உன்மத்தம், கலக்கம், களிப்பு, காவல், சேமம், திரைச்சீலை, புதையல், பொன், மயக்கம், விபூதி.*

**ஏமருதல்** - *கலங்குதல், திகைத்தல், மிகுகளிப்புறல், மூர்க்கமுறல்.*

**ஏமவஞ்சம்** - *போகபூமியாறினொன்று.*

**ஏமாத்தல்** - *அவாவுறல், களித்தல்.*

**ஏமாப்பு** - *கருத்து, செருக்கு, மிகு களிப்பு, வலியாதல்.*

**ஏமாறுதல்** - *அலமருதல், தடுமாறல்.*

**ஏமி** - *உடனிகழ்வான்.*

*ஏமிவாந்தல் - திகைத்துப்பார்த்தல்.*

**ஏமிலாந்தி** - *அலமலந்து பார்ப்போன்.*

**ஏமிலாப்பு** - *அலமலப்பு.*

**ஏமுறல், ஏமுறுதல்** - *இறுமாப்புறல், மயங்குதல்.*

**ஏம்** - *தன்மைப்பன்மைவிகுதி.*

**ஏம்பல்** - *ஏம்புதல்.*

**ஏம்பலித்தல்** - *அங்கலாய்த்தல்.*

**ஏம்புதல்** - *ஏம்பலித்தல்.*

**ஏய்தல்** - *இயைதல், ஒப்பாதல், பொருந்தல்.*

**ஏய்த்தல்** - *அனாப்புதல், இசையப் பண்ணுதல், உவமித்தல், சமாளித் தல்.*

**ஏய்ப்ப** - *உவமைச்சொல், (உம்) முத் தேய்ப்ப.*

**ஏய்ப்பிலேவட்டன்** - *எத்துக்குட்படு பவன், கணிசமற்றவன், மதிகேடன்.*

**ஏய்ப்பு** - *ஏய்த்தல்.*

**ஏரகம்** - *ஓரூர்.*

**ஏரண்டம்** - *ஆமணக்கு.*

**ஏரல்** - *கிளிஞ்சில், சமுத்திரச்சுண்டி.*

**ஏரா** - *மரக்கலத்தினோருறுப்பு.*

**ஏராண்மை** - *உழவு.*

**ஏராதது** - *ஏலாதது.*

**ஏராளம்** - *மிகுதி.*

**ஏராளர்** - *உழுநர்.*

**ஏரி** - *இமில், குளம், புநர்பூசம்.*

**ஏரிசா** - *கடற்கொந்தளிப்பு, புரளித் தனம்.*

**ஏரின்வாழ்நர்** - *பூவைசியர்.*

**ஏருழல்**-*வைசியரறு தொழிலினொன்று.*

**ஏருழவர்** - *உழவுதொழிலாளர்.*

**ஏருழுநர்** - *உழவர்.*

**ஏர்** - *அழகு, உழவுக்கிசைந்ததள பாடம், உழுமாடு.*

**ஏர்க்கால்** - *கலப்பையினோருறுப்பு.*

**ஏர்ச்சீர்** - *உழவுக்கிசைந்ததளபாடம், வேலைக்கிசைந்த பணிமுட்டு.*

**ஏர்த்தொழிலர்** - *பூவைசியர்.*

**ஏர்த்தொழில்** - *உழவுதொழில்.*

**ஏர்பு** - *எழுச்சி.*

**ஏர்ப்பண்** - *ஏர்ச்சீர்.*

**ஏர்ப்பு** - *ஈர்ப்பு.*

**ஏர்ப்பூட்டு** - *ஏர்தொடுத்தல்.*

**ஏர்வாரம்** - *கமவாரம்.*

**ஏல** - *இயல, முன்னம்.*

**ஏலக்கோலம்** - *ஆயத்தம்.*

**ஏலப்பாட்டு** - *இழுக்குநர்சொல்லும் பாட்டு.*

**ஏலம்** - *இயங்கு, ஓர் மரம், பஞ்ச வாசத்தொன்று, மயிர்ச்சாந்து, முதிரை, வாசனைப்பண்டம்.*

**ஏலவரிசி** - *ஏலக்கொட்டை.*

**ஏலவே** - *முன்னே.*

**ஏலா, ஏலாள்** - *தோழிமுன்னிலை.*

**ஏலாதது** - *இயலாதது, பொருந்ாதது.*

**ஏலாதார்** - *இயலாதார், பகைவர்.*

**ஏலாதிகடுகம்** - *ஓர்மருந்து.*

**ஏலாப்பு** - *துன்பம்.*

**ஏலாமை** - *இணங்காமை, கூடாமை, துன்பம்.*

**ஏலி** - *கள்.*

**ஏலை** - *ஏலம்.*

**ஏலுதல்** - *இயலுதல், பொருந்தல்.*

**ஏல்** - *ஏலென்னேவல், ஒப்பு, முன்னிலையொருமை வியங்கோள்விகுதி, எதிர்மறையேவலொருமை விகுதி, (உம்) நடவேல் - வினையெச்ச விகுதி, (உம்) வருமேல்.*

**ஏல்வை** - *காலம், குளம், பொழுது.*

**ஏவங்கேட்டல்** - *ஒருவருக்காக ஏவிவிடப்பட்டுப் போயதட்டல்.*

**ஏவம்** - *ஒருவருக்காக ஏவிவிடப்பட்டு அதட்டும்படி வருகை, குற்றம்.*

**ஏவல்** - *ஆணைசெலுத்துதல், ஏவுதல்.*

**ஏவல்கொள்ளுதல்** - *தொண்டுசெய்வித்தல்.*

**ஏவல்செய்தல்** - *தொண்டுசெய்தல்.*

**ஏவல்மேவல்** - *ஏவற்றொழிலும் உள்வேலையும்.*

**ஏவல்வாய்பாடு** - *ஏவற்சொல்.*

**ஏல்விலன்** - *குபேரன்.*

**ஏவல்விகுதி** - *ஏவலில்வரும்விகுதி, அஃது, ஆய்-மின்-உம் முதலியவை.*

**ஏவல்விடை** - *வினாவையெதிர் மறுத்தேவும் வினை, (உம்) உண்டாயோவென்ற வழி நீயுண் ணென்பது.*

**ஏவல்வினா** - *ஏவும்வினா (உம்) எழுகிறாயா.*

**ஏவல்வினை** - *ஏவலைச்செய்யும் வினை.*

**ஏவறை** - *எதிருக்கெடுத்தல்.*

**ஏவற்காரன்** - *பணிவிடைகாரன்.*

**ஏவற்பணி** - *ஏவற்றொழில்.*

**ஏவற்பேய்** - *ஏவிவிட்டபேய்.*

**ஏவிவிடுதல்** - *ஏவுதல்.*

**ஏவிளம்பி** - *ஓர் வருடம்.*

**ஏவு** - *அம்பு, அனுப்புந்தன்மை, ஏவென்னேவல், வருத்தம்.*

**ஏவுதல்** - *அனுப்புதல், எழுப்பிவிடுதல், கற்பித்தல், செலுத்துதல், தூண்டிவிடுதல்.*

**ஏவுதற்கருத்தா** - *இயற்றுதற் கருத்தாவையேவுவோன்.*

**ஏவும்விடை** - *ஏவல்விடை.*

**ஏவும்வினை** - *தொழிற்பாற்படுத்தும் வினைச்சொல்.*

**ஏவும்வினைமுதல்** - *ஏவுதற்கருத்தா.*

**ஏவுவான்** - *ஏவிவிடுவான்.*

**ஏழகம்** - *ஆடு, செம்மறிக்கடா, துருவாட்டேறு.*

**ஏழ்மை, ஏழ்மைத்தனம்** - *எளிமைத்தனம், ஏழைத்தனம்.*

**ஏழனுருபு** - *ஏழாம்வேற்றுமை, அஃது கண்.*

**ஏழிலம்பாலை, ஏழிலைம்பாலை** - *ஓர்மரம், அஃது மகளிரான்மலர் மரம் பத்தினொன்று.*

**ஏழு** - *ஓரெண்.*

**ஏழுநிலைக்கோபுரம்** - *ஏழுநிலையுள்ள கோபுரம்.*

**ஏழுநிலைமாடம்** - *ஏழடுக்குமாடம்.*

**ஏழுபுரம்** - *சத்தபுரி.அஃது அயோத்தி, அவந்தி, காசி, காஞ்சி, துவாரகை, மதுரை, மாயை.*

**ஏழேழுதலைமுறை** - *ஏழ்தலை முறையும் புத்திரபரம்பரையாய்வரு மேழ்தலைமுறை.*

**ஏழை** - *அறிவிலான், தரித்திரன், பெண்.*

**ஏழைமை** - *ஏழைத்தன்மை.*

**ஏழ்** - *ஓரெண்.*

**ஏழ்ச்சி** - *எழுச்சி.*

**ஏழ்பரியோன்** - *சூரியன்.*

**ஏழ்பவம் –** *ஏழ்பிறப்பு.*

**ஏழ்பிறப்பு** - *ஏழுபிறப்பு. அஃது ஊர்வன, தாபரம், தேவர், நீர்வாழ்வன, பறவை, மக்கள், விலங்கு.*

**ஏளனம்** - *அவமதிச்சிரிப்பு, நீக்கல்.*

**ஏளிதம்** - *இகழ்ச்சி, எளிமை.*

**ஏற** - *அதிகமாக, உயர.*

**ஏறக்கட்டுதல்** - *கட்டியுயர்த்துதல், பலப்படுத்துதல்.*

**ஏறக்குறைய** - *முன்பின்னாக.*

**ஏறங்கோட்பறை** - *முல்லைப்பறை.*

**ஏறத்தாழ**-*கூடக்குறைய, முன்பின்னாக.*

**ஏறல்** - *ஏறுதல்.*

**ஏறவிடுதல்** - *மரக்கலத்தைக்கரைக்குத் தூரமாய்விடுதல், மேலேவிடுதல்.*

**ஏறவிறங்கப்பார்த்தல்** - *கேசாதிபாத மீறாகப்பார்த்தல்.*

**ஏறாங்கடைசி** - *அறமுடிவு.*

**ஏறாமேடு** - *சரிப்படுத்தக்கூடாத காரியம், நீரேறாதமேடு.*

**ஏறாளர்** - *படைவீரர்.*

**ஏறிடுதல்** - *அடைதல், ஏறவிடுதல், சரையாப்பித்தல்.*

**ஏறிட்டுப்பார்த்தல்** - *உற்றுப்பார்த்தல்.*

**ஏறியவீரி** - *சவ்வீரபாஷாணம்.*

**ஏறு** - *அசுபதி, இடபவிராசி, இடி, எருது, எருமை, கவரி, சங்கு, சுறா, பசு, பன்றி, புல்வாய், மரை, மான், இவற்றினாண், ஏறென்னேவல், தழும்பு, விலங்கேற்றின் பொது.*

**ஏறுகுதிரை** - *ஏறுங்குதிரை.*

**ஏறுக்குமாறு** - *குழப்பம்.*

**ஏறுசலாகை** - *மரங்கோக்குஞ்சலாகை.*

**ஏறுதல்** - *அதிகப்படுதல், இவர்தல், உட்போதல், உயருதல், மேற் போதல்.*

**ஏறுதழுவல்** - *மணமுடிக்கும்பொருட்டு இடபத்தைப்பிடித்தல்.*

**ஏறுநெற்றி** - *அகன்றநெற்றி.*

**ஏறுபடி** - *அதிகபடி, தாழ்வாரம்.*

**ஏறுபெட்டி** - *கருப்பநீர்ப்பெட்டி.*

**ஏறுபொழுது** - *இளநேரம்.*

**ஏறுமாறு** - *குழப்பம்.*

**ஏறுமிராசி** - *மகரமுதல்மிதுனமீறான விராசிகள்.*

**ஏறுவட்டம்** - *ஏறினவட்டம்.*

**ஏறுவால்** - *குறல்வால்.*

**ஏறுவிடுதல்** - *மணமுடிக்கவருபவன் பிடிக்கும் பொருட்டு இடபம் விடுதல்.*

**ஏறுவெயில்**-*முன்பொழுதின் வெய்யில்.*

**ஏறுழவர்** - *படைவீரர்.*

**ஏறூர்ந்தோன்** - *சிவன்.*

**ஏறெடுத்தல்** - *உயர்த்துதல், மேலெ டுத்தல்.*

**ஏற்க** - *இணங்க, உவப்பாக, முன்.*

**ஏற்கன** - *முன்.*

**ஏற்குதல்** - *இணங்கல், இரத்தல், ஒப்புக்கொள்ளல், பொருந்தல், வாங்கல்.*

**ஏற்கென** - *முன்னே.*

**ஏற்கை** - *இணங்குகை, வாங்குந் தன்மை.*

**ஏற்படுதல்** - *உடன்படுதல்.*

**ஏற்படுத்தல்** - *இணக்கம்பண்ணுதல், நிருமித்தல்.*

**ஏற்பாடு** - *உடன்பாடு, நியமம், பொருத்தம்.*

**ஏற்பு** - *இரப்பு, ஈர்ப்பு, பொருத்தம்.*

**ஏற்புளிக்கோடல்** - *ஒரு யுத்தி அஃது ஏற்றவிடத்திற்பாவித்தல்.*

**ஏற்புறவணிதல்** - *மணமகளையலங் கரித்தல்.*

**ஏற்போர்** - *இரப்போர்.*

**ஏற்ற** - *தகுதியான, பக்குவமான.*

**ஏற்றக்கால்** - *தூண்.*

**ஏற்றக்குறைச்சல்** - *ஏற்றத்தாழ்ச்சி.*

**ஏற்றக்கோல்** - *துலாக்கொடி.*

**ஏற்றச்சால்** - *நீர்மொள்ளும்பாத்திரம்.*

**ஏற்றது** - *இயன்றது, பொருந்தியது.*

**ஏற்றத்தாழ்ச்சி** - *ஒவ்வாமை, முன் பின்னாக.*

**ஏற்றமடல்** - *காமத்தோரூரும்மடல்.*

**ஏற்றமரம்** - *துலா.*

**ஏற்றமாலை** - *ஓர்பிரபந்தம்.*

**ஏற்றமொழி** - *புகழ்மொழி.*

**ஏனமுத்து** - *பன்றிக்கோட்டிற் பிறந்த பச்சை நிறமுத்து.*

**ஏற்றம்** - *அதிகம், உயர்ச்சி, எழும்புதல், துலா, புகழ், மிகுதி, மேன்மை.*

**ஏற்றம்வற்றம்** - *பெருக்குங்குறைவும்.*

**ஏற்றரவு** - *முகனை.*

**ஏற்றல்** - *அடுக்குதல், இணங்கல், இரத்தல், உணர்த்தல், எதிர்த்தல், எழுப்பல், எறிதல், ஏற்றுதல், கொள்ளல், தகுதி.*

**ஏற்று** - *ஏற்றுதல், ஏற்றென்னேவல், மரத்தின்மேற்செய்த ஏதண்டை.*

**ஏற்றுக்கொள்ளுதல்** - *பெற்றுக்கொள் ளுதல்.*

**ஏற்றுதல்** - *அதிகப்படுத்தல், உயரப் பண்ணுதல், ஏறப்பண்ணுதல்.*

**ஏற்றுதுறை** - *ஏற்றிவிடுந்துறை.*

**ஏற்றுப்பனை** - *ஆண்பனை.*

**ஏற்றுமதி** - *தோணியிலேற்றப்படுஞ் சரக்கு.*

**ஏற்றுவாகனன்** - *சிவன்.*

**ஏனம்** - *இயற்று, எழுத்தின்சாரியை, ஓலைக்குடை, தப்பிதம், பன்றி, பாவம்.*

**ஏனல்** - *கதிர், செந்தினை, தினைப் புனம், பைந்தினை.*

**ஏனவாயன்** - *தப்பிதகாரன்.*

**ஏனவும்** - *ஒழிந்தவும்.*

**ஏனாதி** - *ஓர் மருந்து, தந்திரி, நாவிதன், மந்திரி, மறவன்.*

**ஏனை** - *ஒழிந்த, மலங்குமீன், மற்று.*

**ஏனைய** - *ஒழிந்தன.*

**ஏன்** - *என்னை, தன்மையொருமை விகுதி.*

**ஏன்றல்** - *இயலல், குறித்தல், பொருந் தல்.*

**ஏன்றுகொள்ளுதல்** - *இயலுதல்.*

## ஐ

**ஐ** - *அரசன், அழகு, ஆசான், இரண்ட னுருபு, இருமல், எசமானன், ஓரிடைச்சொல், ஓரெழுத்து, கடவுள், குரு, கோழை, சாரியை, (உம்) ஏற்றினோடேற்றை, சுவாமி, நுண்மை, பிதா, யானையைப் பாகன் தட்டுமோசை, சிவன், முன் னிலையொருமை வினைவிகுதி, (உம்) வந்தனை, தொழிற் பெயர் விகுதி, (உம்) நடை, பண்புப்பெயர் விகுதி, (உம்) தொல்லை, வினை முதற் பொருள் விகுதி, (உம்) பறவை, செயப்படுபொருள் விகுதி, (உம்) தொடை, கருவிப் பொருள் விகுதி, (உம்) பார்வை.*

**ஐங்காயதயிலம்** - *பிண்டதயிலம்.*

**ஐகாரக்குறுக்கம்** - *தன்மாத்திரையிற் சுருங்கிய ஐகாரம்.*

**ஐக்கம், ஐக்கியம்** - *ஒன்றிப்பு.*

**ஐங்கணைக்கிழவன்** - *மன்மதன்.*

**ஐங்காற்கிளையோன்** - *முருகன், வீர பத்திரன்.*

**ஐங்கரன்** - *வினாயகன், சிவன்.*

**ஐங்காயம்** - *ஐந்துகாயம். அஃது உள்ளி, கடுகு, சுக்கு, பெருங்காயம், மிளகு, தலைப்பிள்ளைக்கரு.*

**ஐங்காயம்** - *தலைப்பிள்ளைக்கரு.*

**ஐங்குரவர்** - *பஞ்சகுரு. அவர் இராசா, குரு, தமையன், பிதா, உபாத்தி யாயன்.*

**ஐங்குழு** - *அரசர்க்குரிய பஞ்சகுழு, அவர் சாரணர், சேனாபதியர், தூதர், புரோகிதர், மந்திரியர்.*

**ஐசானம்** - *ஈசானம்.*

**ஐசானி** - *வடகீழ்த்திசையானை.*

**ஐசானியன்** - *ஈசானன்.*

**ஐசுவரியம்** - *செல்வம், பாக்கியம்.*

**ஐஞ்ஞார்த்தகம்** - *பஞ்சப்பொறிகளை யடக்கத்தியானித்திருத்தல்.*

**ஐஞ்ஞூறு** - *ஒரெண்.*

**ஐட்டிகம்** - *ஓமச்சடங்கு.*

**ஐணம்** - *ஏணம்.*

**ஐதி, ஐதிகம்** - *ஓரளவை. அஃது தொன்றுதொட்டுவருங்கேள்வியை நம்புவது.*

**ஐந்தடக்கல்** - *பஞ்சேந்திரியங்களை யொடுக்குதல்.*

**ஐந்தடிவிருத்தம்** - *கலிவிருத்தம், தரவு கொச்சகம்.*

**ஐதியளவை** - *வழங்குங்கேள்விப்படி மெய்யென்றுணர்தல்.*

**ஐது** - *அடர்த்தியற்றது, அற்பம்.*

**ஐந்தரம்** - *அழகுள்ளது, நெருக்க மின்மை, பனை, மந்தம்.*

**ஐந்தரு** - *பஞ்சதரு. அஃது அரிச் சந்தனம், கற்பகதரு, சந்தானம், பாரிசாதம், மந்தாரம்.*

**ஐந்தருநாதன்** - *இந்திரன்.*

**ஐந்தலைநாகம்** - *ஓர் பாம்பு.*

**ஐந்தவம்** - *மிருகசீரிடம்.*

**ஐந்தவித்தல்** - *பஞ்சப்புலனடக்கல்.*

**ஐந்தனுருபு** - *இன்வேற்றுமை.*

**ஐந்தானம்** - *மிருகசீரிடம்.*

**ஐந்திரன்** - *அருச்சுனன், இந்திரன், வாலி.*

**ஐந்திணை** - *அன்புடைக்காமம், ஐவகை நிலம்.*

**ஐந்திணைச்செய்யுள்** - *ஓர் பிரபந்தம், அஃது புணர்தன முதலியவைந் துரிப்பொருளும்விளங்கக்குறிஞ்சி முதலியவைந்திணையினையுங் கூறுவது.*

**ஐந்திரம்** - *ஓர் கிரந்தவிலக்கணம், கிழக்கு.*

**ஐந்திரி** - *கிழக்கு.*

**ஐந்திரியம்** - *இந்திரியம், ஓர் நூல்.*

**ஐந்து** - *ஒரெண்.*

**ஐந்துருவாணி** - *தேரகத்துச்செறி கதிர்.*

**ஐந்தை** - *சிறுகடுகு.*

**ஐந்தொகைவினா** - *ஓர் கணக்கு.*

**ஐந்தொழில்** - *பஞ்சகிருத்தியம்.*

**ஐந்நூறு** - *ஐந்துநூறு.*

**ஐப்பசி** - *அச்சுவினிநாள், ஓர் மாதம்.*

**ஐமிச்சம்** - *ஐயம்.*

**ஐமீன்** - *அத்தநாள், உரோகணி.*

**ஐமுகன்** - *சிவன்.*

**ஐமுகாஸ்திரம்** - *ஓர் பாணம்.*

**ஐமுகி** - *காட்டாமணக்கு, சிவன்.*

**ஐமை** - *அடர்பு, கூட்டம், தகட்டு வடிவு பகுதி.*

**ஐம்பது** - *ஒரெண்.*

**ஐம்பால்** - *ஆண்பால் முதலியவைந்து பால், அஃது ஒருவன் ஒருத்தி, ஒன்று பல, பலர், ஐவகைமயிர் முடி, பெண்மயிர்.*

**ஐம்புலத்தடங்கான்** - *கடவுள்.*

**ஐம்புலம், ஐம்புலன்** - *பஞ்சபுலன்.*

**ஐம்புலவிடயன்** - *இல்வாழ்வான்.*

**ஐம்புலன்விழையான்** - *துறவி.*

**ஐம்புலன்வென்றோர்** - *முனிவர்.*

**ஐம்புலனடக்கல்** - *சாத்துவிதகுணத் தொன்று. அஃது பஞ்சபுலனடக் கல்.*

**ஐம்புலன்வென்றோன்** - *அருகன், பஞ்சபட்சிப்பாஷாணம்.*

**ஐம்புலாதி** - *ஐம்புலன், பேராசை.*

**ஐம்பூதம்** - *பஞ்சபூதம்.*

**ஐம்பூதவிலிங்கம்** - *பஞ்சபூதவி லிங்கம்.*

**ஐம்பூதியம்** - *பஞ்சபூதியம்.*

**ஐம்பொறி** - *பஞ்சபொறி.*

**ஐம்பொறிநுகர்ச்சி** - *அனுபவம்.*

**ஐம்பொறியடக்கான்** - *இல்வாழ்வான்.*

**ஐம்பொறியடக்கி** - *துறவி.*

**ஐம்பொறிவிடயம்** - *ஐம்புலத்தான றியப்பட்டது.*

**ஐம்பொன்** - *பொன்முதலிய ஐவகையு லோகம். அஃது இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி.*

**ஐம்முகப்பிரமன்** - *பூருவபிரமன்.*

**ஐய** - *அழகிய, ஐயனே, வியப்புச் சொல்.*

**ஐயகோ, ஐயாகோ** - *ஐயோ.*

**ஐயக்கணசூலை** - *ஓர்நோய்.*

**ஐயக்காட்சி** - *ஐயம், ஓரளவை அஃது குற்றியோமகனோவெனக்காண்டல்.*

**ஐயக்கிளவி** - *ஐயச்சொல்.*

**ஐயங்கவீனம்** - *புதுவெண்ணெய்.*

**ஐயங்காய்ச்சி** - *ஓர்தேவதை, ஓர்நோய்.*

**ஐயங்கார்** - *பிராமணருக்குள்ளதி காரி, வைணவப்பிராமணன்.*

**ஐயநாடி** - *சிலேற்பனநாடி.*

**ஐயபூளி** - *பருமணல்.*

**ஐயப்படாமை**-*அறத்துறுப்பினொன்று அஃது சந்தேகப் படாமை.*

**ஐயப்படுதல்** - *சந்தேகப்படுதல்.*

**ஐயப்பாடு** - *ஐயம்.*

**ஐயமறுத்தல்** - *பஞ்சவினாவி னொன்று அஃது சந்தேகந்தீர்த்தல்.*

**ஐயம்** - *இரப்போர்கலம், ஓர்விதக் காட்சி, கோழை, சந்தேகம், பிச்சை, முத்திவிக்கினம் மூன்றினொன்று, மோர்.*

**ஐயர்** - *பார்ப்பார், பெருமையிற் சிறந்தோர், முனிவர், வானோர்.*

**ஐயவணி** - *ஓரலங்காரம், அஃது ஒப்புமையினானொரு பொருளை யதுவோ அதன் ஒப்புடைப் பொருளோ வெனவையமுறுதல், (உம்) மானோவிழி யோகடுவோ வடுவோ.*

**ஐயவி** - *கடுகு.*

**ஐயவிலக்கு** - *ஓரலங்காரம். அஃது ஐயற்றதனைவிலக்குதல்.*

**ஐயவினா** - *சந்தேகவினா, (உம்) குற்றி யோமகனோ.*

**ஐயவும்மை** - *சந்தேகவும்மை, (உம்) பத்தாயினுமெட்டாயினுங்கொடு.*

**ஐயவுவமை** - *ஓரலங்காரம். அஃது உவமையையும் பொருளையும் ஐயுற்றுரைப்பது (உம்) முகமோ மலரோவறியேம்.*

**ஐயனார்** - *வனரட்சகன், இவள் சாத்தன்.*

**ஐயன்** - *உவாத்தியாயன், குரு, சாத்தன், தந்தை, மூத்தோன்.*

**ஐயாயிரம்** - *ஓரெண்.*

**ஐயானனம்** - *சிங்கம்.*

**ஐயானனன்** - *சிவன்.*

**ஐயிதழ்த்துத்தி** - *ஓர் துத்தி.*

**ஐயுறல், ஐயுறுதல்** - *ஐயப்படல்.*

**ஐயுறவு** - *சந்தேகம்.*

**ஐயெனல்** - *விரைவின்குறிப்பு.*

**ஐயை** - *காளி, தலைவி, தவப்பெண், துற்கை, பார்பதி, மகள்.*

**ஐயையோ, ஐயோ** - *அதிசயவிரக்கச் சொல், இரக்கச்சொல்.*

**ஐராணி** - *இந்திராணி.*

**ஐராவணம்** - *இந்திரன் யானை.*

**ஐராவதம்** - *இந்திரன் யானை, கீழ்த்தி சையானை, தோடை.*

**ஐராவதம்** - *தோடை.*

**ஐவகைப்பொழுது** - *சிறுபொழுதின் வகையைந்து அவை காலை, நண் பகல் மாலை, யாமம், வைகறை.*

**ஐவகைப்பொன், ஐவகையுலோகம்** - *ஐம்பொன்.*

**கடுப்ப** - *உவமைச்சொல்.*

**கடுப்படக்கி** - *எருமுட்டைப்பீநாறி.*

**கடுப்பிறக்கல்** - *அகங்காரத்தைய கற்றல்.*

**கடுப்பு** - *அகங்காரம், கொதிப்பு, சினம், விரைவு.*

**கடுப்புச்சூடு** - *வற்றற்சூடு.*

**கடுப்புமரம்** - *எண்ணெயூற்றுமிடுக்கு மரம்.*

**கடப்பூ** - *ஊமத்தை.*

**கடுப்பெடுத்தல்** - *கடுப்பிறக்கல்.*

**கடுமரம்** - *கடுக்காய்மரம், நச்சுமரம், எட்டிமரம்.*

**கடுமலை** - *காரீயமலை.*

**கடுமன்** - *கடுமை.*

**கடுமுடுக்கு** - *விரைவு, வில்லங்கம்.*

**கடுமுடுத்தல்** - *விரைதல்.*

**குடுமுடெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கடுமுள்** - *ஆயுதப்பொது, நச்சுமுள், கண்டங்கத்தரி.*

**கடுமூர்க்கம்** - *மிகுகோபம்.*

**கடுமை** - *கொடுமை, சீக்கிரம், மிகுதி, முறைப்பு.*

**கடும்பகல்** - *மத்தியானம்.*

**கடும்பச்சை** - *நாகப்பச்சை.*

**கடும்பலம்** - *இஞ்சி, கருணைக் கிழங்கு.*

**கடும்பு** - *உறவு, சும்மாடு, பாற்கடும்பு முதலியன.*

**கடும்புப்பால்** - *ஈன்றணுமைப்பால்.*

**கடுரம்** - *மோர்.*

**கடுரோகிணி, கடுரோணி** - *ஓர் மருந்து.*

**கடுவங்கம்** - *வேர்க்கொம்பு.*

**கடுவட்டி** - *அந்தவட்டி.*

**கடுவல்** - *கடுநிலம்.*

**கடுவழி** - *அந்தரவழி, அருமையான வழி.*

**கடுவன்** - *குரங்கு, நாய், பூனை, முசு இவற்றினாண், விலங்கேற்றின் பொது, மாவிலங்கு.*

**கடுவாயன்** - *கழுதை, பாம்பு.*

**கடுவாய்** - *ஓர் புலி, நாய்.*

**கடுவெளி** - *நிழலற்றவெளி, வெறு வெளி.*

**கடூரம்** - *கொடுமை.*

**கடேந்திரநாதர்** - *ஓர் சித்தர்.*

**கடேரம்** - *நோய், முகில்.*

**கடேரன்** - *நோயாளி.*

**கடை** - *அங்காடி, இடம், ஏழனுருபு, (உம்) அவன்கடைச்சென்றான், கடையென்னேவல், கதவு, கீழ், புறவாயில், பூணின் கடைப் புணர்வு, பெண்குறி, முடிவு, வழி, வாயில்.*

**கடைகாப்பாளர்** - *வாயில்காவலாளர்.*

**கடைகால்** - *பால்கறக்கும் மூங்கிற் குழல், பின்கோக்கியி னோருறுப்பு, பின்னணை.*

**கடைகெட்டவன்** - *கீழ்மகன்.*

**கடைகேடு** - *மிகவிழிபு.*

**கடைகோல்** - *தீக்கடைகோல்.*

**கடைக்கட்டு** - *முடிப்பு.*

**கடைக்கணித்தல்** - *கடாட்சஞ் செய் தல், கடைக்கண்ணாற் பார்த்தல், புறக்கணித்தல்.*

**கடைக்கண்** - *கண்ணின்கடை.*

**கடைக்கனல்** - *வடவாக்கினி.*

**கடைக்காப்பு** - *பதிகத்தின் கடைசிப் பாட்டு.*

**கடைக்கால்** - *தறுவாய்.*

**கடைக்குடர்** - *கீழக்குடர்.*

**கடைக்குட்டி** - *கடைசிப்பிள்ளை.*

**கடைக்குளம்** - *உத்திராடநாள்.*

**கடைக்குறை** - *ஈறுகுறைந்துநிற்குஞ் சொல்.*

**கடைக்கூட்டல்** - *அனுபவத்திற்குக் கொண்டு வந்து சேர்த்தல், செய் வினைப்பயனையனுபவிப்பது.*

**கடைக்கூழை** - *ஓர்தொடை, பிற்படை.*

**கடைக்கூழை முரண், கடைக் கூழை மோனை, கடைக்கூழையள பெடை, கடைக்கூழையியைபு, கடைக்கூழை யெதுகை** - *செய்யுட்டொடை யினொவ்வோர் விகற்பம்.*

**கடைக்கூழைமுரண்** - *ஓரடியின் முதற்சீர்க் கணன்றியேனைச் சீர்க் கண் முரண்வருவது.*

**கடைக்கூழைமோனை** - *முதற்சீர்க் கணின்றி யேனைச்சீர்க்கண் மோனை வருவது.*

**கடைக்கூழையளபெடை** - *முதற்சீர்க் கணின்றியேனைச் சீர்க்கணள பெடைவளவது.*

**கடைக்கூழையியைபு** - *ஓரடியின் கடைச்சீர்க்கணின்றி யேனைச் சீர்க்கணியைபு வருவது.*

**கடைக்கூழையெதுகை** - *ஓரடியின் முதற் சீர்க்கணின்றி யேனைச் சீர்க்க ணெதுகை வருவது.*

**கடைக்கொள்ளி** - *குறங்கொள்ளி.*

**கடைக்கோடி** - *அறக்கடைசி.*

**கடைசாரம்** - *காரியத்தின்முடிவு, முடிவு.*

**கடைசாரி** - *கடைகெட்டவள்.*

**கடைசார்** - *காரியம், பின்னணை.*

**கடைசால்** - *பின்னணை.*

**கடைசி** - *கடையப்பெண், முடிவு.*

**கடைசியர்** - *மருதநிலப்பெண்கள்.*

**கடைசோரி** - *அப்பக்கடை.*

**கடைச்சங்கம்** - *பிற்சங்கம்.*

**கடைச்சரக்கு** - *கறிச்சரக்கு, பலசரக்கு.*

**கடைச்சல்** - *கடைதல்.*

**கடைச்சல் மரம்** - *கடையுமரம்.*

**கடைச்சற்காரர்** - *ஓர் சாதியார்.*

**கடைச்சன்** - *இளையமகன்.*

**கடைச்சி** - *இளையமகள், கடையப் பெண், மருதநிலப்பெண்.*

**கடைச்சித்தாழை** - *பறங்கித்தாழை.*

**கடைஞர்** - *மருதநிலமாக்கள்.*

**கடைதடம்** - *வாயில்.*

**கடைதலைவிற்பூட்டு** - *பூட்டுவிற் பொருள்கோள், பேச்சிற்கொளு விப் பிடித்தல்.*

**கடைதல்** - *கலக்குதல், குடைதல்.*

**கடைதிறப்பு** - *ஓர் பிரபந்தம்.*

**கடைத்தரம்** - *கீழ்த்தரம்.*

**கடைத்தலைவாய்தல்** - *முதல்வாயில்.*

**கடைத்தெரு** - *கடைவீதி.*

**கடைத்தேறுதல்** - *ஈடேறுதல்.*

**கடைத்தேற்றம்** - *ஈடேற்றம்.*

**கடைநாள்** - *இரேவதி.*

**கடைநிலை** - *ஓர் பிரபந்தம். அஃது சான்றோர் எம்வரவினைத் தலை வற்குரையெனக் கடைகாவலர்க் குக்கடைக் கண்ணின்று கூறுவது.*

**கடைநிலைத்தீபகம்** - *இறுதிவிளக்கு.*

**கடைநிலைத்தீபம்** - *ஓர் பயனிலை. அது இறுதிநிலை விளக்கம்.*

**கடைப்படல், கடைப்படுதல்** - *மிகவிழி பாதல்.*

**கடைப்படுதானம்** - *இலவுகீககாரண மாய்க்கொடுக்குங்கொடை, அத மதானம், அவை அச்சம், ஆரவம், கடைப் பாடு, கண்ணோட்டம், காரணம், கைம்மாறு, புகழ்.*

**கடைப்பிடி** - *கருமமுடிக்குந் துணிவு. அஃது ஆடூஉக்குணந்நான்கி னொன்று, தேற்றம், மறவாமை.*

**கடைப்பிடித்தல்** - *உறுதியாய்ப்பிடித் தல், தெளிவாயறிதல், மறவாதிருத் தல்.*

**கடைப்பிறப்பு** - *கீழ்ப்பிறப்பு.*

**கடைப்புணர்வு** - *ஆபரணக் கடைப் பூட்டு.*

**கடைப்புளி** - *கருமமுடிக்குந் துணிவு, தேற்றம், மறவாமை.*

**கடைப்பூட்டு** - *பின்நோக்கி.*

**கடைப்போதல்** - *நிறைவேறல்.*

**கடைமடக்கு** - *நான்கடியினீறும்பல பொருளவொரு சொல்லான் முடியுங்கவி.*

**கடைமரம்** - *கடையுந்தறி.*

**கடைமீன்** - *இரேவதிநாள்.*

**கடைமுரண்** - *செய்யுளுறுப்பி னொன்று, அடிதோறுமிறுதிச் சீர்மறுதலைப்பட்டுவருவது.*

**கடைமோனை** - *நான்கடியினீறுமோ ரெழுத்தின் முடியுங்கவி.*

**கடையம்** - *இந்திராணிகூத்து, கடசம்.*

**கடையர்** - *ஓர்சாதி, சுண்ணாம்புக் காரர், மருதநிலத்தவர்.*

**கடையழிதல்** - *கஷ்டப்படல், கெடுதல், குன்றல், தேய்தல்.*

**கடையழித்தல்** - *தேய்த்தல், மிகக் கெடுத்தல்.*

**கடையளபெடை** - *செய்யுளுறுப்பி னொன்று, அடியினிறுதிக் கண் ணளபெடைபயிலுவது.*

**கடையனல்** - *ஊழித்தீ.*

**கடையாகுமோனை** - *இடையாகு மோனை முரணிவருவது.*

**கடையாகெதுகை** - *அடிகடோறு முதற்சீரினீற்றசை யொன்றி வருவது.*

**கடையாட்டம்** - *மிகுந்தகஷ்டம், வருத்தம்.*

**கடையாணி** - *அருகாணி.*

**கடையாந்தரம்** - *முடிவு.*

**கடையாயர்** - *கடையர்.*

**கடையால்** - *கடைசால்.*

**கடையிணைமுரண், கடையிணை மோனை, கடையிணையளபெடை, கடையிணையியைபு, கடையியைபு, கடையிணையெதுகை** - *செய்யு ளுறுப்பினொன்று.*

**கடையிணைமுரண்** - *ஓரடியின் கடை யிரு சீர்க்கண்ணு முரண் வருவது.*

**கடையிணைமோனை** - *ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணு மோனை வருவது.*

**கடையிணையளபெடை** - *ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணுமள பெடை வருவது.*

**கடையிணையியைபு** - *ஓரடியின் முதலிருசீர்க்கண்ணு மியைபு வருவது.*

**கடையிணையெதுகை** - *ஓரடியின் கடை யிருசீர்க்கண்ணு மெதுகை வருவது.*

**கடையியைபு** - *அடிதோறுமுதற்சீர்க் கண்ணியைபுவருவது.*

**கடையெதுகை** - *அடிதோறுமிறுதிக் கண்ணெதுகைவருவது.*

**கடையீடு** - *இழந்தது.*

**கடையுணி** - *கீழ்மகன்.*

**கடையெதுகை** - *கடையியைபு.*

**கடையெழுஞ்சனி** - *உத்திரநாள்.*

**கடைவளர்தல்** - *ஈனுங்காலத்துக்குறி விரிதல்.*

**கடைவள்ளல்** - *பலமுறையுங்கேட்க மறுத்துக்கொடுப்பவன்.*

**கடைவாசல், கடைவாயில்** - *தலை வாய்தல்.*

**கடைவாய்** - *வாயருகு*

**கடைவாய்நக்கி** - *உலோபி.*

**கடைவால்** - *கடைசிவால்.*

**கடைவு –** *கடைதல்.*

**கடோரம்** - *கொடுமை, வயிரம்.*

**கட்கட்டி** - *இமையிற்கட்டு.*

**கடகத்தம்பம்** - *கலைஞானமறுபத்தி னான்கினொன்று, அஃது வெட் டறாமற்றடுக்கும்வித்தை.*

**கட்கம்** - *வாள்.*

**கட்கராடம்** - *பரிசை.*

**கட்காகாதம்** - *வாளேறு.*

**கட்காதாரம்** - *வாளுறை.*

**கட்சம்** - *மந்திரசாத்திரம், சங்கபாஷாணம், நவக்கிரககட்ச மென்னு மோர் நூல்.*

**கட்சாந்தரம்** - *அந்தப்புரம்.*

**கட்சி** - *காடு, சரீரம், பக்கம், பங்கு, பறவைக்கூடு, மனிதர்படுக்கை, வழி.*

**கட்செவி** - *பாம்பு.*

**கட்டகாலம், கஷ்ட்டகாலம்** - *கிரகந்தீங் கானகாலம், பஞ்சங் கோதாரி யுள்ள காலம்.*

**கட்டக்கடுமை** - *அதீககடுமை.*

**கட்டங்கம், கட்டங்கு** - *தண்டு, பொல்லு.*

**கட்டாசாத்தியம்** - *கடுமசாத்தியம்.*

**கட்டசீவி** - *ஆயக்காரன், துறைகாவற் காரன்*

**கட்டபாரை** - *கடப்பாரை.*

**கட்டப்படுதல்** - *சம்பந்தத்திற்குள் ளாதல், பிணிக்கப்படுதல், வருத் தப்படுதல்.*

**கட்டம், கஷடம்** - *காடு, தாடி, துன்பம், மலம், மிகுவருத்தம், துறைமுகம்.*

**கட்டல்** - *கட்டுதல், தடை, திருடல், தோண்டல், பிடுங்குதல், மூடல், மெய்ப்பரிசமெட்டினொன்று, உடுத்தல், பருக்கொள்ளல்.*

**கட்டவிழ்தல்** - *முறுக்கவிழ்தல்.*

**கட்டழகு** - *அலங்காரம், பேரழகு.*

**கட்டழல்** - *நெருப்பு.*

**கட்டழிதல்** - *நெறிதப்புதல்.*

**கட்டழித்தல்** - *நெறியழித்தல், முற்று மழித்தல்.*

**கட்டளை** - *அளவு, உத்தரவு, உரைகல், உவமை, ஒழுங்கு, கற்பனை, செங்கல்லச்சு, துலாராசி, நிறை, நிறையறிகருவி, முறை.*

**கட்டளைக்கலித்துறை** - *கலித்துறையி னோர்பேதம், முதற் சீர்நான்கும் வெண்டளை பிழை யாநிற்பக் கடையொரு சீரும் விளங்காயாகி வருவது.*

**கட்டளைக்கலிப்பா** - *கலிப்பாவினோர் பேதம், முதற்கண்மாச் சீர்பெற்று நாற்சீரான்வருவ தரையடியாகவும் அஃதிரட்டி கொண்ட தோரடி யாகவும் மவ்வடி நான்கு கொண்டு வருவது.*

**கட்டளைக்கல்** - *உரைகல், படிக்கல்.*

**கட்டளைக்கோல், கட்டளைச்சட்டம்** - *நியாயப்பிரமாணம்.*

**கட்டனன்** - *குள்ளன்.*

**கட்டாகட்டிமை** - *மிகுந்தகட்டிமை.*

**கட்டாக்காலி** - *கட்டுக்ககப்படாத காலி.*

**கட்டாசம்** - *நாபிமிருகம்.*

**கட்டாஞ்சி** - *முள்வேல்.*

**கட்டாடி** - *குறிசொல்வோன், வண்ணாரிற்றலைவன்.*

**கட்டாணி** - *தூர்த்தன், பேராசைக் காரன்.*

**கட்டாண்மை** - *பேராண்மை.*

**கட்டாந்தரை** - *கடுந்தரை, வெறுந் தரை.*

**கட்டாம்பாரை** - *ஓர் மீன்.*

**கட்டாயம்** - *கடுமை, கட்டுப்பாடு, நெருக்கிடை, வெறுப்பு.*

**கட்டாரம்** - *குற்றுவாள்.*

**கட்டாரி** - *குற்றுவாள்.*

**கட்டாரிக்குத்துணி** - *ஓர் புடைவை.*

**கட்டார்ச்சிதம், கஷ்ட்டார்ச்சிதம்** - *வருந்தித்தேடினதேட்டம்.*

**கட்டி** - *அகமகிழ்ச்சி,இடப்பு, ஓர் புள், ஓர்கருப்பிண்டம், கருப்புக் கட்டி*

*முதலியன, சருக்கரை, திரண்ட மாத்திரளை, பாடை.*

**கட்டிக்கொள்ளுதல்** - *அடிப்படுத்துதல்.*

**கட்டிபடுதல்** - *கட்டியாதல்.*

**கட்டிமுட்டி** - *பரிதுஞ்சிறிதுமானகட்டி.*

**கட்டிமை** - *கட்டுப்பாடு, பிசுனத்தனம்.*

**கட்டியகாரர், கட்டியக்காரர்** - *புகழ்வோர்.*

**கட்டியங்கூறல்** - *எழுச்சிகூறல், புகழ் கூறல்.*

**கட்டியப்பொல்லு** - *எழுச்சி கூறுவோர் பிடிக்குந்தண்டு.*

**கட்டியம்** - *ஓர் கூத்து, புகழ்ந்துபேசல்.*

**கட்டியாரம்** - *இறுக்கம், கடுமை, நெருக்கிடை.*

**கட்டில்** - *மஞ்சம்.*

**கட்டிவிழுதல்** - *கட்டியாதல், கெற்பம் விழுதல்.*

**கட்டிளமை** - *மிக்கிளமை.*

**கட்டு** - *உறுதி, ஓர் வகைக்குறி, கட்டென்னேவல், காவல், கிளை, சம்பந்தம், சிலந்திப்பரு, தளை, பொய்மலைப்பக்கம், மிகுதி, வரம்பு.*

**கட்டுக்கதை** - *பொய்க்கதை.*

**கட்டுக்கலியாணம்** - *பாணிக்கிரகணம்.*

**கட்டுக்கழுத்தி** - *மங்கிலியதாரிணி.*

**கட்டுக்காரன்** - *குறிசொல்வோன்.*

**கட்டுக்காவல்** - *கடுங்காவல்.*

**கட்டுக்கிடையன்** - *வெகுநாளாய்க் கிடக்கிறசரக்கு.*

**கட்டுக்குத்தகை** - *ஏகதேசமாய் விற்குங்குத்தகை.*

**கட்டுக்கூட்டு** - *எழுத்துமாறியெழுதல், ஒன்றாய்க்கூடல், பொய்யான தொடுப்பு.*

**கட்டுக்கொடி** - *காலிகட்டுங்கயிறு.*

**கட்டுச்சோறு** - *ஆற்றுணா.*

**கட்டுடைத்தல்** - *அணையுடைத்தல்.*

**கட்டுண்ணல்** - *கட்டுப்படுதல்.*

**கட்டுதல்** - *சம்மந்தப்படுத்தல், சுவர் முதலியவெழுப்புதல், பிணித்தல், விவாகம்பண்ணுதல், வீடுமுதலிய தொடுத்தல்.*

**கட்டுத்தறி** - *யானைமுதலிய கட்டுந் தூண்.*

**கட்டுத்திரவியம்** - *கிளிக்கட்டுப் பொன்.*

**கட்டுத்தேர்** - *கட்டியெழுப்புந்தேர்.*

**கட்டுத்தையல்** - *ஓர் வகைத்தையல்.*

**கட்டுத்தோணி** - *தெப்பம்.*

**கட்டுப்படுதல்** - *அடங்குதல், அமைதல், தங்குதல்.*

**கட்டுப்படுத்துதல்** - *அடக்கிக் கொள்ளுதல், எல்லைப் படுத்துதல், கீழமையப் பண்ணுதல்.*

**கட்டுப்பாடு** - *பந்தம்.*

**கட்டுப்பெட்டி** - *ஓர் வகைப்பெட்டி.*

**கட்டுமட்டு** - *அச்சறுக்கை, அடக்கம், அளவாய்நடத்தல்.*

**கட்டுமரம்** - *மிதவை.*

**கட்டுமாமரம்** - *ஓர்மரம்.*

**கட்டுமுகனை** - *அச்சறுக்கை.*

**கட்டுமுரித்தல்** - *கட்டுடைத்தல், நியமம்மீறுதல்.*

**கட்டுமை** - *கட்டுப்பாடு.*

**கட்டுரை** - *உறுதிச்சொல், ஏற்றசொல், பொருளுள்ளசொல், பொய்.*

**கட்டுரைத்தல்** - *உறுதிப்படச் சொல்லுதல்.*

**கட்டுவம், கட்டுவன்** - *ஓர் காலணி.*

**கட்டுவருக்கம்** - *பலவிதஉடை.*

**கட்டுவாங்கம்** - *தண்டு.*

**கட்டுவிடல், கட்டுவிடுதல்** - *அவிழ்தல், இந்திரியமோசனம், உடைதல், உருகுதல், பலவீனமாதல்.*

**கட்டுவிஷேசம்** - *கட்டுக்கதை.*

**கட்டுவிட்டுப்பாய்தல்** - *கட்டுடைத்துப் பெருகல்.*

**கட்டுவிரியன்** - *ஓர் பாம்பு.*

**கட்டுவை** - *கட்டில்.*

**கட்டெறும்பு** - *ஓரெறும்பு.*

**கட்டை** - *குறைவு, நீளங்குறைந்தது, மரக்கட்டை, விறகு.*

**கட்டைக்கருத்து** - *மந்தக்கருத்து.*

**கட்டைக்காலி** - *கரடி.*

**கட்டைக்குரல்** - *அமர்ந்தகுரல்.*

**கட்டைக்குருத்து** - *பொத்திக்குருத்து.*

**கட்டைவாக்கு** - *அரதனத்தின்மங்கலொளி.*

**கட்டைவைத்தல்** - *ஓர் விளையாட்டு.*

**கட்டோசை** - *பேரொலி.*

**கட்டோடே** - *முற்றாக.*

**கணகணத்தல், கணகணப்பு** - *உரத்த சூடு, ஒலிக்குறிப்பு.*

**கணகம்** - *படையிலோர்தொகை அஃது குமுதம்மூன்று கொண்டது.*

**கணகன்** - *கணிதன்.*

**கணக்கன்** - *எழுத்துக்காரன், ஓர்மரம், கணக்குப்பார்க்கிறவன், புதன், ஓர்சாதியான்.*

**கணக்காசாரம்** - *கணிக்குமொழுங்கு.*

**கணக்காயர்** - *அறிஞர், ஒத்துரைப்போர், பொருந்தச் சொல்வோர்.*

**கணக்காய்ச்சல்** - *கணரோகம்.*

**கணக்கு** - *எண், எழுத்து, மட்டு.*

**கணக்கோலை** - *கணக்கேடு, தளிரோலை.*

**கணத்திரவியம்** - *பொதுத்திரவியம்.*

**கணநாதர், கணநாயகர்** - *கணாதிபர்.*

**கணபதி** - *விநாயகன்.*

**கணப்பு** - *சூடு, தீச்சட்டி.*

**கணப்பூண்டு** - *ஓர் பூண்டு.*

**கணப்பொருத்தம்** - *செய்யுட் பொருத்தத்தொன்று விவாகதசப் பொருத்தத்தொன்று.*

**கணப்பொழுது** - *நொடிநேரம்.*

**கணமூலி** - *சாணாக்கி.*

**கணம்** - *ஓர் நோய், ஓர் புல், காலநுட்பம், கூட்டம், சிறுமை, திரட்சி, நொடிநேரம், படையிலோர் தொகை, பிசாசம், மாத்திரை, வட்டம், வருக்கம், விண்மீன், விலங்கின்கூட்டம், குறைவு, சீரிலக் கணம், தீப்பொறி, நீர்த்துளி.*

**கணம்புல்வர்** - *அறுபத்துமூவரிலொருவர்.*

**கணரோகம்** - *ஓர் நோய்.*

**கணவம்** - *அரசமரம்.*

**கணவர்** - *கொழுநர், பூதவீரர்.*

**கணவன்** - *அதிபன், காந்தன்.*

**கணவாய்** - *ஓர் மீன், குறைவு, சீரிலக் கணம், தீப்பொறி, நீர்த்துளி.*

**கணவீரம்** - *அலரி.*

**கணனம்** - *எண்ணல்.*

**கணாசலம்** - *கைலை.*

**கணாதிபன்** - *கணநாயகன், விநாயகன்.*

**கணாரிடுதல்** - *ஒலிக்குறிப்பு.*

**கணி** - *ஓர் சாதி, கணிப்போன், கணியென்னேவல், மருதநிலம், வேங்கைமரம்.*

**கணிகம்** - *நூறுகோடி.*

**கணிகம்** - *வேசி.*

**கணிசம்** - *கணிக்கத்தக்கது, சங்கை, மதிப்பு, அதிகம்.*

**கச்சி** - *உளி, தறிகை, மழு, முட்ணிகோல், வெற்றிலை மூக்கரிகத்தி.*

**கணிதசிந்தாமணி** - *ஓர் நூல்.*

**கணிதன்** - *சத்துரு.*

**கணித்தீபிகை** - *ஓர் நூல்.*

**கணிதம்** - *எண், எண்ணிக்கை, கலைஞான மறுபத்தினான்கி னொன்று. அஃது சோதிட நூல்.*

**கணிதர்** - *சோதிடர்.*

**கணித்தல்** - *எண்ணல், மதித்தல்.*

**கணிப்பு** - *கணித்தல்.*

**கணியான்** - *கூத்தாடி.*

**கணீரிடுதல்** - *ஒலிக்குறிப்பு.*

**கணீர்கணீரெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**கணீல்** - *ஒலிக்குறிப்பு.*

**கணு** - *கவர், மரத்தின்முளி, மூங்கில்.*

**கணுக்கால்** - *பரடு.*

**கணுக்கிரந்தி** - *ஓர் நோய்.*

**கணுப்பாலை** - *ஓர்பாலை.*

**கணுவட்டு** - *சிறுவாழைக்குலை.*

**கணேசன்** - *வினாயகன், சிவன்.*

**கணை** - *அம்பு, ஒலி, ஒரு நோய், திரட்சி, நிறைவு, பூரநாள், வளைதடி, சிவிகைமேல்வம்பு.*

**கணைக்கால்** - *முழந்தாளின் கீழ்க் கால்.*

**கணையம்** - *காவற்காடு, பொன், போர், யானைக்கம்பம், வளைதடி, அம்பு.*

**கண்** - *இடம், ஏழனுருபு (உம்) என் கண், ஓர் விகுதி (உம்) வன்கண், ஓலைக்கண், நுங்குக்கண், கணு, கண்ணென்னேவல், கண்ணோட்டம், துவாரம், தேங்காய் முதலிய முளைக்கு மிடம், பெருமை, மயிற் றோகைக் கண், மூங்கில், விழி அஃது பஞ்சப்பொறியி னொன்று.*

**கண்கட்டி** - *கட்கட்டி.*

**கண்கட்டு** - *திட்டித்தம்பனம்.*

**கண்கழு** - *முளைவெளிக்கமுன் விடுந்நீர்.*

**கண்காசம்** - *ஒரு நோய்.*

**கண்காட்சி** - *கண்ணுக்குச் சிறப்பு.*

**கண்காட்டல்** - *கண்ணினாற்குறிப்புக் காட்டல்.*

**கண்காணம்** - *மேல்சாரிப்பு.*

**கண்காணி** - *மேல்விசாரிப்புக்காரன்.*

**கண்காணித்தல்** - *மேல்விசாரணை செய்தல்.*

**கண்காரர்** - *அஞ்சனம் பார்ப்போர், குறிப்பறியத்தக்கவர்கள்.*

**கண்குத்திப்பாம்பு** - *ஓர் பாம்பு.*

**கண்குவளை** - *கண்குழி.*

**கண்குளிர்தல்** - *பார்வைக்குத் திருத் தியாயிருத்தல்.*

**கண்குறிப்பு** - *பார்வையாலறிதல்.*

**கண்கூடு** - *காட்சியளவை.*

**கண்கூர்மை** - *பார்வைநுட்பம்.*

**கண்கூலி** - *கண்டதற்காகக் கொடுப் பது.*

**கண்கையில்** - *தாய்க்கையில்.*

**கண்கொள்ளாக்காட்சி** - *அடங்காத காட்சி.*

**கண்கொழுப்பு** - *அகங்காரம், மதம்.*

**கண்சயிக்கினை** - *கண்சாடை.*

**கண்சாடை, கண்சாய்ப்பு** - *அறிந்து மறியார் போன்றிருத்தல்.*

**கண்சாதல்** - *பதனழிதல், வாடல்.*

**கண்சிமிட்டல்** - *கண்ணாலேகுறிப்புக் காட்டல்.*

**கண்சைகை** - *கண்சாடை.*

**கண்டகசங்கம்** - *முட்சங்கு.*

**கண்டகபலம்** - *பாலப்பழம்.*

**கண்டகம்** - *உடைவாள், காடு, நீர் முள்ளி, முள், வயிரம், வாள், ஊசி முனை, கம்மாலை, தடை, புளகம்.*

**கண்டகர்** - *அசுரர், கீழ்மக்கள், துட்டர்.*

**கண்டகாசனம்** - *ஒட்டகம்.*

**கண்டகி** - *ஓர் நதி.*

**கண்டகிச்சிலை** - *சாலக்கிராமம்.*

**கண்டகூணிகை** - *வீணை.*

**கண்டகோடாலி** - *ஓர்வகைக்கோடாலி.*

**கண்டக்கரப்பன்** - *ஓர் நோய்.*

**கண்டக்கருவி** - *மிடறு.*

**கண்டக்காறை** - *பொன்னிறம்.*

**கண்டக்கிரந்தி** - *ஓர் நோய்.*

**கண்டங்கத்தரி** - *ஓர் வழுதுணை, அஃது சிறுபஞ்சமூலத்தொன்று, தசமூலத்துமொன்ற.*

**கண்டங்கருவிலி** - *ஓர்பாம்பு.*

**கண்டங்காலி** - *ஓர் மரம்.*

**கண்டசாம்** - *கழுத்திலணியுமோர் பணி.*

**கண்டசருக்கரை** - *ஒரு வகைச் சருக்கரை.*

**கண்டசித்தி** - *கண்டகாரியத்திற்குப் பாட்டுச் சொல்லவல்லபம், ஆசுகவி.*

**கண்டசூலை** - *ஓர் நோய்.*

**கண்டதிப்பிலி** - *ஓர் சரக்கு.*

**கண்டதுண்டம்** - *பலதுண்டம்.*

**கண்டஸநானம்** - *குளித்தல்.*

**கண்டநாளம்** - *மிடறு.*

**கண்டந் திறத்தல்** - *தொண்டை திறத்தல்.*

**கண்டபூர்த்தி** - *கண்டமளவு.*

**கண்டபேரண்டபட்சி** - *இருதலைப் பட்சி.*

**கண்டப்புற்று** - *ஓர் நோய்.*

**கண்டமணி** - *கண்டாமணி.*

**கண்டமண்டலம்** - *குறைவட்டம்.*

**கண்டமாலை** - *ஓர் நோய்.*

**கண்டம்** - *எல்லை, எழுத்தாணி, கண்டசருக்கரை, கண்டை, கவசம், கழுத்து, கள்ளி, குன்றிவேர், கைபிடிவாள், சாதிலிங்கம், சிறுவாள், தத்து, திரைச்சீலை, துண்டம், நாடு, நித்தியயோகத் தொன்று, படையினோர் தொகை, மணி, மணியுள்ளோசை, யானைக்கச்சை, யானைக்கழுத்து, வெல்லம், நீர்க்குமிழி.*

**கண்டர்** - *துரிசி.*

**கண்டல்** - *ஓர் மரம், தாழை, நீர்முள்ளி.*

**கண்டறியாதவன்** - *முன்னனுபவித்தறியாதவன்.*

**கண்டறை** - *கற்புளை.*

**கண்டனம், கண்டனை** - *தள்ளுதல், நிராகரித்தல், உரல், பொலிதூற்றல்.*

**கண்டன்** - *எசமான், சோழன், நாயகன்.*

**கண்டன்** - *வீரன்.*

**கண்டாகண்டன்** - *ஓர்பத்தன்.*

**கண்டாங்கி** - *ஓர் புடைவை.*

**கண்டாஞ்சி** - *முள்வேல்.*

**கண்டாமணி** - *கண்டை.*

**கண்டாயம்** - *கடைவை, துவாரம்.*

**கண்டாரவம்**-*ஓரிசை, மணியினோசை.*

**கண்டாலம்** - *ஒட்டகம், பாரை, யுத்தம்.*

**கண்டாவிழ்தம்** - *ஓர் மருந்து.*

**கண்டி** - *ஓரளவு, ஓரூர், கடைவை, மீன்பிடிக்கவடைக்கும்பிறிவு, ஓராபரணம்.*

**கண்டிகை** - *உருத்திராட்சம், கடகம், தோளணி, பணிச்செப்பு, பதக்கம், மாதரணிவடம்., கைக்குழி*

**கண்டிதம்** - *கண்டிப்பு, தறிப்பு, பூரணம், வரையறுப்பு.*

**கண்டித்தல்** - *கடிந்துகொள்ளுதல், கொடுமை பண்ணுதல், தறித்தல் பிறிவுபடல், வெட்டல்.*

**கண்டிப்பு** - *கண்டித்தல், தூலரூபின தன்மை, நிச்சயம்.*

**கண்டியர்** - *பாணர்.*

**கண்டில்** - *இருபத்தெட்டுத்துலாங் கொண்டது.*

**கண்டில்வெண்ணெய்** - *ஓர் பூடு.*

**கண்டிறத்தல்** - *கண்விழித்தல்.*

**கண்டினை** - *கண்டிப்பு.*

**கண்டீரவம்** - *சதுரக்கள்ளி, புலி.*

**கண்டீரவம்** - *சதுரக்கள்ளி, சிங்கம்.*

**கண்டு** - *கழலைக்கட்டி, கற்கண்டு, கண்டங்கத்திரி, சொறி, தீத்தளல், பரு.*

**கண்டுகுணம்பாடி** - *முகமன்பேசுவோன்.*

**கண்டுசாடை, கண்டுசாய்ப்பு** - *கண்சாடை.*

**கண்டுஞ்சல்** - *கண்ணடைதல், நித்திரை செய்தல்.*

**கண்டுத்துத்தி** - *ஓர் பூடு.*

**கண்டுபாரங்கி** - *பஞ்சமூலத்தொன்று. அஃது சிறுகாஞ் சோன்றி.*

**கண்டுபாவனை** - *பிறரைப்பார்த்துச் செய்வது.*

**கண்டுமுதல்** - *கண்டமுதல்.*

**கண்டுமூலம்** - *திப்பிலி.*

**கண்டூதி** - *காஞ்சொறி, தினவு.*

**கண்டூரம்** - *ஓர் மருந்து.*

**கண்டை** - *எறிமணி, ஓராபரணம், சீலை, பெருமணி, யானைமணி, சரிகை, நூற்கண்டை.*

**கண்ணகை** - *கோவலன் மனைவி.*

**கண்ணஞ்சல்** - *அஞ்சுதல், கண்ணை மின்னுதல்.*

**கண்ணடி** - *கண்ணாடி.*

**கண்ணடியார்** - *கன்னடியர்.*

**கண்ணடைதல்** - *ஊற்றடைதல், துவாரமிறுகல், பயிர்குருத் தடைதல்.*

**கண்ணடைத்தல்** - *துவாரமிறுகுதல்.*

**கண்ணப்பன்** - *ஓர் சிவதொண்டன்.*

**கண்ணமங்கை** - *விட்டுணுதலத்தினொன்று.*

**கண்ணராவி** - *பார்த்தவனிரங்கத்தக்கது.*

**கண்ணல்** - *கருதல், குறித்தல், கன்றல்.*

**கண்ணழித்தலீ** - *பதப் பொருளுரைத்தல்.*

**கண்ணழிவு** - *தடுத்தல், பதப்பொருளுரை.*

**கண்ணறை** - *அகலம், துவாரம், வன்னெஞ்சு.*

**கண்ணன்** - *கிருட்டிணன், அஃது திருமால்தெச அவதாரத் தொன்று, திருமால்.*

**கண்ணா** - *ஓர் மரம், திப்பிலி.*

**கண்ணாடி** - *உருவங்காட்டி இஃது அட்டமங்கலத்துமொன்று.*

**கண்ணாடிச்சால்** - *பொட்டுழவு.*

**கண்ணாடித்தரா** - *தராவிலோர் பேதம்.*

**கண்ணாடிப்புடையன்** - *ஓர் பாம்பு.*

**கண்ணாடிவிரியன்** - *ஓர் பாம்பு.*

**கண்ணாட்டி** - *அன்பானவள், மனையாட்டி.*

**கண்ணாமண்டை** - *கண்மண்டை*

**கண்ணாம்பூச்சிகாட்டுதல்** - *ஓர் விளையாட்டு.*

**கண்ணாம்பூச்சியாடுதல்** - *கண் சுழன்றுகிறுகிறுப்புத் தோற்றல், பிள்ளைகளினோர்விளையாட்டு.*

**கண்ணாம்பொத்தி** - *ஓர் விளையாட்டு.*

**கண்ணாயிருத்தல்** - *உற்றுப் பார்த்திருத்தல், காவலாயிருத்தல், மிகு கருத்தாயிருத்தல்.*

**கண்ணாய்ப்பார்த்தல்** - *கருத்தாய்விசாரித்தல்.*

**கண்ணாரக்காணல்** - *வெளியரங்கமாய்க் காணல்.*

**கண்ணாளர்** - *கம்மாளர், சித்திரகாரர், சினேகிதர், நாயகர்.*

**கண்ணாளன்** - *கணவன், தோழன்.*

**கண்ணாள்** - *சரசுபதி, சினேகமுள்ளவள்.*

**கண்ணி** - *தாம்பு, பாவினடி, புட்படுக்குங்கயிறு, பூ, பூங்கொத்து, பூமாலை, பூவரும்பு.*

**கண்ணிகட்டுதல்** - *அரும்பு கொள்ளுதல்.*

**கண்ணிகம்** - *மணித்தக்காளி.*

**கண்ணிகுத்துதல்** - *தடம் வைத்தல்.*

**கண்ணிகை** - *தாமரைக் கொட்டை, பூ வரும்பு.*

**கண்ணிக்கயிறு** - *நெய்வார்கட்டுங் கயிற்றினொன்று.*

**கண்ணிக்கொடி** - *ஓர் புல்.*

**கண்ணிதழ், கண்ணிமை** - *கண்மடல்.*

**கண்ணிமைத்தல்** - *இமைவெட்டல்.*

**கண்ணீராக்கி** - *பச்சைக்கருப்பூரம்.*

**கண்ணிலி** - *குருடன், எறும்பு.*

**கண்ணீர்** - *கண்ணிலிருந்து வழியுநீர்.*

**கண்ணுகம்** - *குதிரை.*

**கண்ணுக்கரசன்** - *துருசு.*

**கண்ணுக்கினியான்** - *பொன்னாங் காணி.*

**கண்ணுக்குக்கண்ணானவன்** - *கண் போன்றவன், தோழன்.*

**கண்ணுக்குத்தைத்தல்** - *கண்ணுக்குப் பிரியப்படுதல்.*

**கண்ணுதல்** - *கருதல், சிவன்.*

**கண்ணுலைமூடி** - *ஒருலைமூடி.*

**கண்ணுவம்** - *கம்மியம்.*

**கண்ணுவன்** - *ஓரிருடி.*

**கண்ணுளர்** - *கண்ணாளர் நாடகர்.*

**கண்ணுளாளர்** - *நாடகர்.*

**கண்ணுள்** - *கூத்து.*

**கண்ணுள்வினைஞர்** - *கண்ணாளர்.*

**கண்ணுறக்கம்** - *நித்திரை.*

**கண்ணுறல்** - *காணல்.*

**கண்ணுறாவி** - *இரங்கப்படத் தக்க மெலிவு.*

**கண்ணுறுதல்** - *பார்த்தல்.*

**கண்ணுறுத்தல்** - *கண்ணுருட்டல்.*

**கண்ணூறு** - *கண்பார்வையால்வந்த தோஷம்.*

**கண்ணெச்சில்** - *கண்ணூறு.*

**கண்ணெறிதல்** - *கடைக் கண்ணாற் பார்த்தல், விரும்பல்.*

**கண்ணேணி** - *மூங்கிலேணி.*

**கண்ணேறு** - *கண்ணூறு.*

**கண்ணோ** - *கண்ணிலோர்வியாதி.*

**கண்ணோடுதல்** - *இச்சித்தல், பாரபட்சமாயிருத்தல், மேல்விசாரணை பண்ணல், விருப்பம் வைத்தல்.*

**கண்ணோட்டம்** - *கண்குறிப்பு, நாகரீகம், பட்சம்.*

**கண்ணோய்** - *கண்ணினோய்.*

**கண்திட்டம்** - *கண் மதியம்.*

**கண்திட்டி, கண்திஷ்டி** - *கண்ணூறு.*

**கண்படல், கண்படுதல்** - *திட்டிபடுதல், நித்திரைசெய்தல்.*

**கண்படை** - *நித்திரை, மனிதர் படுக்கை.*

**கண்படைநிலை** - *ஓர் பிரபந்தம், அஃது பெருமையிற் சிறந்தோர் அவைக்கண்நெடி துவைகியவமி மருத்துவர் முதலியோரவர்க்குக் கண்டுயில் கோடலைக் கருதிக் கூறுவது.*

**கண்பட்டை** - *கண்மடல்.*

**கண்பாடு** - *நித்திரை.*

**கண்பிடி** - *ஓர் காம்பிற்பற்றினகாய் களிவிளங்காய்.*

**கண்புகைச்சல்** - *ஓர் நோய், வெள்ளெழுத்து.*

**கண்புணராமை** - *ஓரளவை, அஃது சிலவற்றைக்கண்டதன் பெயரறியாதிருத்தல்.*

**கண்புதைத்தல்** - *கண்பொத்தல்.*

**கண்பூத்தல்** - *கண்புகைதல்.*

**கண்பூர்தல்** - *கண்டிருத்தியடைதல்.*

**கண்பொத்திக்குட்டல்** - *ஓர் விளையாட்டு, களவெடுத்தல்.*

**கண்பொறித்தட்டுதல்** - *கண்மின்னல்.*

**கண்பொன்றுதல்** - *கண்செம்முதல்.*

**கண்போடுதல்** - *மனம் வைத்தல்.*

**கண்மங்கல், கண்மங்குலம், கண்மங்குளம்** - *கண்ணொளி குறைதல், வெள்ளெழுத்துவருதல்.*

**கண்மடல்** - *இமை, ஊற்றுக்கண்.*

**கண்மட்டம், கண்மட்டு** - *கண்மதிப்பு.*

**கண்மணி** - *கண்ணிற்கருமணி.*

**கண்மதியம்** - *கண்மதிப்பு.*

**கண்மயக்கு** - *மயக்கம்.*

**கண்மருட்சி** - *கண்மயக்கு.*

**கண்மருட்டு** - *கண்ணாலே மயக்குதல்.*

**கண்மலர்** - *ஓர் பணி, கண்.*

**கண்மறிக்காட்டல்** - *கண்குறிப்புக் காட்டல்.*

**கண்மாயம்** - *கண்ணை மறைத்தல்.*

**கண்மின்னியார்த்தல்** - *கண்சுழன் றொளியார்த்தல்.*

**கண்முகிழ்த்தல்** - *கண்மூடுதல்.*

**கண்மூடல்** - *இருள்.*

**கண்மூடி** - *அறிவீனன், குருடன்.*

**கண்மூடுதல்** - *இமைகுவித்தல், கண்டுங் காணார் போன்றிருத்தல், சாதல், நித்திரை செய்தல்.*

**கண்மை** - *கண்ணோட்டம்.*

**கண்வரி** - *கண்ணின்வரி.*

**கண்வளர்தல்** - *நித்திரை செய்தல்.*

**கண்வாட்டி** - *கண்போன்றாள், மனைவி.*

**கண்வாளர்** - *கணவர், கம்மாளர்.*

**கண்விடுதல்** - *உருகுதல், துவாரம் விடுதல்.*

**கண்விதுப்பழிதல்** - *கண்ணின தழகு கெடல்.*

**கண்விழி** - *கண்மணி.*

**கண்விழித்தல்** - *கண்டிறத்தல், நித்தி ரை விழித்தல், வாட்டந் தெளிதல்.*

**கண்விழிப்பு** - *கவனம், சாக்கிரதை.*

**கண்வினைஞர்** - *கம்மாளர்.*

**கண்வைத்தல்** - *விரும்பிப்பார்த்தல்.*

**கதகதெனல்** - *விரைவைக்காட்டு மீரடுக்கொலிக்குறிப்பு.*

**கதகாலம்** - *செல்காலம்.*

**கதசம்** - *உட்டணம், சரித்திரம், தேற்றா, நோய், முகில்.*

**கதண்டு** - *கருவண்டு.*

**கதம்** - *உக்கிரம், கோபம், பாம்பு, வலி, போதல்.*

**கதம்பம்** - *ஆன்கூட்டம், கடம்ப மரம், கானாங்கோழி, சனக் கூட்டம், மேகம், வாசனைப் பொடி, வெண் கடம்பு.*

**கதம்பு** - *கடம்பு, கூட்டம்.*

**கதம்பை** - *ஓர்புல், தென்ன மட்டைத் தும்பு.*

**கதரம்** - *யானைத்தோட்டி.*

**கதலம்** - *வாழை.*

**கதலி** - *கடுதாசிப்பட்டம், காற்றாடி தேற்றாமரம், வாழை, விருதுக் கொடி.*

**கதலிகம்** - *தேற்றா.*

**கதலிகை** - *துகிற்கொடி.*

**கதலிமுத்து** - *வாழையிற்பிறந்த பழுப்பு நிறமுத்து.*

**கதவிச்சி** - *கருப்பூரம்.*

**கதலிபாகம், கதலீபாகம்** - *சங்கீதத்தி னோர்சுவை, பாடலினோர் சுவை.*

**கதலிப்பூ** - *பச்சைக்கருப்பூரம்.*

**கதலிவனம்** - *அனுமன்றபோவனம்.*

**கதலுதல்** - *அசைதல்.*

**கதவடிகாரர்** - *ஓர் சாதியார்.*

**கதவம்** - *கதவு, காவல்.*

**கதவாக்கியம்** - *சோதிடசாத்திரத் தினோர் வாக்கியம்.*

**கதவு** - *கபாடம், காவல்.*

**கதவுநிலை** - *கதவுநிற்குந் தூண்.*

**கதழ்வு** - *உவமைச்சொல், கடுப்பு, சிறப்பு, பகை, பெருமை, மிகுதி, வேகம்.*

**கதறல், கதறுதல்** - *அழுதல், கூப்பிடல்.*

**கதனம்** - *கடுப்பு, கலக்கம், போர், கொலை, பேச்சு.*

**கதாசித்து** - *இடைவிட்டகாலம்.*

**கதாப்பிரசங்கம்** - *சரித்திரஞ்சொல்லல், சம்பாஷணை.*

**கதாமஞ்சரி** - *கோவையானகதை.*

**கதாயுதம்** - *தண்டாயுதம்.*

**கதாயுதன்** - *வயிரவன், வீமன்.*

**கதாயுத்தம்** - *தண்டுப்போர்.*

**கதாயோகம்** - *சம்பாஷணை.*

**கதாய்** - *கந்தை, பீறல்.*

**கதி** - *அதிட்டம், ஆதரவு, கதியென்னேவல், குதிரைநடை, நடை, பதவி, பிறப்பு, புகலிடம், மோட்சம், விரைவு.*

**கதிக்கும்பச்சை** - *நாகப்பச்சை, பச்சைக்கல்.*

**கதிக்கை** - *அதிகரிப்பு, கருவாளி மரம்.*

**கதித்தல்** - *எழுச்சி, ஒலித்தல், சிறத்தல், மிகுத்தல், பருத்தல்.*

**கதிபதம்** - *கூறியதுகூறல்.*

**கதிப்பு** - *எழும்பல், ஒலி, மிகுதி, பருமன்.*

**கதிமை** - *கூர்மை, பருமை.*

**கதியன்** - *கூரியது.*

**கதிரம்** - *அம்பு, கருங்காலி.*

**கதிரவன்** - *சூரியன்.*

**கதிரெழுதுகள்** - *அணு எட்டுக்கொண்டது, சூரியகிரணத்தெழுந்துகள்.*

**கதிரோன்** - *ஆதித்தன்.*

**கதிர்** - *இருப்புமுள், கிரணம், சூரியன், தேருட்பரப்பினமரம், பயிர்க் கதிர், கதிரென்னேவல்.*

**கதிர்காமம்** - *ஒரூர்.*

**கதிர்க்கோல்** - *இருப்புமுள், நேரிய கோல்.*

**கதிர்செய்தல்** - *ஒளிவிடல்.*

**கதிர்த்தல்** - *இறுமாத்தல், ஒளிசெய்தல், கூர்த்தல்.*

**கதிர்நாள்** - *உத்திரநாள்.*

**கதிர்ப்பகை** - *இராகு, கேது, அல்லி, குவளை.*

**கதிர்ப்பாரி** - *தாமரை.*

**கதிர்ப்பாழை** - *ஆண்பனைப்பாழை.*

**கதிர்மகன்** - *கன்னன், சனி, சுக்கிரீபன்.*

**கதிர்வாங்குதல்** - *கதிர்விடுதல்.*

**கதிர்விடுதல்** - *ஒளிசெய்தல், கதிரீனுதல்.*

**கதிர்விட்டெறித்தல்** - *கிரணம் விட்டிலங்குதல், செல்வம் பொலிந்து விளங்குதல், பிரகாசித்தல்.*

**கதிர்வீசுதல்** - *கதிரீனுதல், கிரணம் வீட்டிலங்குதல், செல்வம் பொலிந்து விளங்குதல் பிரகாசித்தல்.*

**கது** - *வடுப்படல், வெடிப்பு.*

**கதுகொதுத்தல்** - *ஒலிக்குறிப்பு, கொதித்தல்.*

**கதுக்கு** - *இராட்டினக்காது.*

**கதுக்குதல்** - *அதக்குதல்.*

**கதுப்பு** - *ஆண்மயிர், கவுள், பசுக்கூட்டம், பெண்மயிர், மஞ்சள்.*

**கதுப்புளி** - *முக்கருவுள்ள சூட்டுக்கோல்.*

**கதுமுதல்** - *உறுமுதல், கடிந்துகொள்ளுதல்.*

**கதுமெனல்** - *சீக்கிரக்குறிப்பு, சீக்கிரம்.*

**கதுமை** - *கூர்மை.*

**கதுவாய்** - *வடுப்படல்.*

**கதுவாலி** - *கவுதாரி, காடை.*

**கதுவுதல்** - *கலங்குதல், நார்முதலிய வரிந்திழுத்தல், நீங்காதுபற்றல், பற்றுதல், வாங்குதல்.*

**கதை** - *காரணச்சொல், சொல், சொல்லென்னேவல், தடி, தண்டாயுதம்.*

**கதைகட்டல்** - *கதையுண்டு பண்ணல்.*

**கதைத்தல்** - *கதைசொல்லுதல், சொல்லுதல், மிகப்பேசல்.*

**கதைபிடுங்குதல்** - *கதைவிட்டுக்கதை கேட்டல், பேசிக்காரியமறிதல்.*

**கதைமாறுதல்** - *ஒன்றுசொல்லிப் பின்னொன்று சொன்னேனென்றல்.*

**கதையறிதல்** - *காரியமறிதல்.*

**கதைவிடுதல்** - *ஒன்றையறியப்பேச்சு விடுதல்.*

**கதோபகதனம்** - *சம்பாஷணை.*

**கத்தக்காம்பு** - *ஓர் சரக்கு.*

**கத்தபம்** - *கழுதை.*

**கத்தம்** - *கதை, புயம்.*

**கத்தராளி** - *அதிபதி.*

**கத்தரி** - *ஓர் பாம்பு, கத்தரி யென்னேவல், வழுதுணை, வேனிற்காலத்துக் கடுங்கோடை, சாதிபத்திரி.*

**கத்தரிகை** - *கத்தரிக்குங்கருவி.*

**கத்தரிகைக்கால்** - *கத்தரிகை போலப் பிணைத்தமிண்டி.*

**கத்தரிக்கை** - *கத்தரித்தல், மயிரெறி கருவி.*

**கத்தரிக்கோல்** - *கத்தரிகை.*

**கத்தரித்தல்** - *அறுத்தல், திரிவாய் மருந்து சிதறியெரிதல்.*

**கத்தரிநாயகம்** - *யானைச்சீரகம்.*

**கத்தரிமணியன்** - *ஓர் பாம்பு.*

**கத்தரிவிரியன்** - *ஓர்பாம்பு.*

**கத்தரை** - *கோத்திரம்.*

**கத்தல்** - *கத்துதல்.*

**கத்தவியம், கருத்தவியம்** - *தத்துவம்.*

**கத்தளை** - *ஓர் மீன்.*

**கத்தனம்** - *கத்தரித்தல்.*

**கத்தன்** - *ஆக்குவோன், கடவுள், முதலாளி, அருகன், சிவன், விட்டுணு.*

**கத்தா** - *கடவுள், செய்பவன், முதல்வன்.*

**கஸதி** - *வருத்தம்.*

**கத்தி** - *ஆயுதப்பொது, வாள்.*

**கத்திகட்டி** - *இராணுவவீரன்.*

**கத்திகட்டுதல்** - *கம்பலைப்படுதல்.*

**கத்திகை** - *கருக்குவாளிமரம், சிறுகொடி, துகிற்கொடி, பூமாலை.*

**கத்திதீட்டுதல்** - *கூராக்கல், பகைசாதித்தல்.*

**கத்திப்போர்** - *வாட்போர்.*

**கத்தியம்** - *இலக்கணமின்றியிலக்கணப் பாட்டுப் போற் சொல்வது, சீலை, நல்லாடை.*

**கத்தியோதம்** - *மின்மினிப்பூச்சி.*

**கத்திரி** - *ஓர்பாம்பு, மயிரெறிகருவி, கண்டங்கத்தரி.*

**கத்திரிக்கை** - *மயிரெறிகருவி.*

**கத்திரிக்கைப்பூட்டு** - *ஓர் பூட்டு.*

**கத்திரிணி** - *தேக்குமரம்.*

**கத்திரியர்** - *சத்திரியர்.*

**கத்திருதத்துவம்** - *கருத்ததத்துவம்.*

**கத்திருவம்** - *குதிரை.*

**கத்திருவாச்சியம்** - *பிறவினை.*

**கத்து** - *கத்துதல், கத்தென்னேவல், சந்து.*

**கத்துதல்** - *கூப்பிடல், பிதற்றல்.*

**கத்துரு**-*ஆள்வோன், காசிபர் மனைவிகளிற் சருட்பங்களை யீன்றாள், நடத்துவோன், படைப்போன்.*

**கத்துருத்துவம்** - *ஆளுகைநடத்துதல்.*

**கத்துருவம்** - *குதிரைப்பற் பாஷாணம், குதிரை.*

**கத்தூரி, கஸ்தூரி** - *மான்மதம்.*

**கத்தூரிநாரத்தை** - *ஓர் நாரத்தை.*

**கத்தூரிநாவி** - *ஓர் மிருகம்.*

**கத்தூரிப்பிள்ளை, கத்தூரிப்பூனை** - *நாவி.*

**கத்தூரிமஞ்சள்** - *ஓர் மஞ்சள்.*

**கத்தூரிமான்** - *ஓர் சாதியானமான், நாவி.*

**கத்தூரிமிருகம்** - *நாவி.*

**கத்தூரியெலுமிச்சை** - *ஓரெலுமிச்சை.*

**கத்தை** - *கழுதை, கற்றை.*

**கந்தகத்திராவகம்** - *கந்தகச்செயநீர்.*

**கந்தகபாஷாணம்** - *கந்தகம்.*

**கந்தகபூமி** - *காங்கையானதேசம்.*

**கந்தகம்** - *கெந்தகம், உள்ளி, முருங்கை.*

**கந்தகரசாயனம்** - *ஓர் மருந்து.*

**கந்தகவுப்பு** - *ஓருப்பு.*

**கந்தகாலோத்தரம்** - *ஓர் நூல்.*

**கந்தசட்கம்** - *தமரத்தை.*

**கந்தசட்டி** - *ஐப்பசிமாதத்தினமரவாசிதொடங்கியாறுநாள்.*

**கந்தசாரம்** - *இந்திரனந்தனம், சந்தனம்.*

**கந்ததன்மாத்திரை** - *மணத்தையறியுமறிவு.*

**கந்தநாகுலி** - *செவ்வியம்.*

**கந்தநாகுலியம்** - *அரத்தை.*

**கந்தபத்திரம்** - *வெண்டுளாய்.*

**கந்தபரடாணம்** - *கந்தகம்.*

**கந்தபுட்பை** - *அவுரி.*

**கந்தமாதனம்** - *ஓர்மலை.*

**கந்தமாதிரு** - *பூமி.*

**கந்தமூடிகம்** - *கத்தூரிமிருகம்.*

**கந்தபூதியம்** - *நாய்வேளை.*

**கந்தபொடி** - *வாசனைப்பொடி.*

**கந்தப்புராணம்** - *காந்தம்.*

**கந்தமூலம்** - *கிழங்கு.*

**கந்தம்** - *அணுத்திரள், இந்திரியம், கருணை, கழுத்தடி, கிழங்கு, பகுதி, பங்கு, பஞ்சகந்தம், பொதியமலை, வாசனைவேர், உள்ளி, சந்தனக்குழம்பு, முருங்கை.*

**கந்தரக்காட்டம்** - *வெள்ளைப் பாஷாணம்.*

**கந்தரசு** - *சாம்பிராணி.*

**கந்தரம்** - *கடற்பாசி, கழுத்து, காடகபாஷாணம், புனல்முருங்கை, மலைக்குகை, மேகம்.*

**கந்தராசம்** - *சந்தனம்.*

**கந்தருப்பன்** - *காமன்.*

**கந்தருவம்** - *இசை, இசைப்பாட்டு, எண்வகைமணத்துளொன்று. அஃது கன்னியுந்தலை மகனுமொருப் பட்டுக்கலப்பது, தேவசாதியிலோர்வகை, குதிரை, தேகம்விட்ட ஆத்துமா.*

**கந்தருவர்** - *தேவசாதியிலோர் வகையார்.*

**கந்தர்ப்பன்** - *மன்மதன்.*

**கந்தலோகம்** - *சுப்பிரமணியபதம்.*

**கந்தல்** - *கெடுதல், கெட்டது, பீறல்.*

**கந்தவகம்** - *மூக்கு, காற்று.*

**கந்தவகன்** - *காற்று.*

**கந்தவடி** - *வாசனைத்தயிலம்.*

**கந்தவருக்கம்** - *சுகந்தம்.*

**கந்தவாகன்** - *காற்று.*

**கந்தவாரம்** - *அந்தர்ப்புரம், அரசன்றேவியில்லம்.*

**கந்தளம்** - *கவசம், கதுப்பு, தளிர், பொன், யுத்தம்.*

**கந்தற்பகூபம்** - *யோனி.*

**கந்தற்பசுவரம்** - *காமம்.*

**கந்தனேந்திரர்** - *ஓர் சித்தர்.*

**கந்தன்** - *அருகன், ஓர் பிதிர், குமரன், சூதபாஷாணம், காமன்.*

**கந்தாயம்** - *பங்கு, விளைவுகாலம்.*

**கந்தாரம்** - *காந்தாரம்.*

**கந்தி** - *கந்தகம், கந்தியென்னேவல், கமுகு, தவப்பெண், வாசம்.*

**கந்தித்தம்** - *சீலை.*

**கந்தித்தல்** - *மணத்தல்.*

**கந்தியுப்பு** - *கந்தகவுப்பு.*

**கந்திரி** - *பண்டி.*

**கந்திவாருணி** - *பேய்த்தும்மட்டி.*

**கந்து** - *அருகு, கட்டுத்தறி, கந் தென்னேவல், கழுத்தடி, சந்து, தூண், தூற்றினமணி யருகு, பண்டி, பண்டியுள்ளிரும்பு, பற்றுக்கோடு,*

*பனங்கூடல், மாடு பிணைக்குங் கயிறு, யாக்கையின் மூட்டு, யானை யணைதறி, வைக்கோற்றிரள்.*

**கந்துகட்டுதல்** - *நீர்கொதித்து வரை கட்டல், வைக்கோற்றிரட்டி வளைத்துவிடுதல்.*

**கந்துகம்** - *குதிரை, குறுநிலமன்னர் குதிரை, பந்து.*

**கந்துகன்** - *தான்றி.*

**கந்துதல்** - *கெடுதல்.*

**கந்துமாறுதல்** - *இணைத்ததை மாற்றி விடுதல்.*

**கந்துவான்** - *கந்து.*

**கந்துளம்** - *பெருச்சாளி.*

**கந்துள்** - *கரி.*

**கந்தேறு** - *கோடகசாலை.*

**கந்தை** - *சீலை, நல்லாடை, பீறற் புடைவை.*

**கந்தோதம்** - *தாமரை.*

**கபடஸதன்** - *கபடன்.*

**கபடநாடகம், கபடவித்தை** - *மகா தந்திரமான செய்கை.*

**கபடநாடகன்** - *திருமால்.*

**கபடம்** - *தந்திரம், வஞ்சகம்.*

**கபடன்** - *வஞ்சகன்.*

**கபடு** - *கபடம்.*

**கபட்டுப்படிக்கல்** - *இடைகுறைவான படிக்கல்.*

**கபநாசம்** - *கண்டங்கத்தரி.*

**கபநாசனி** - *தேற்றாவித்து.*

**கபந்தம்** - *கவந்தம்.*

**கபம்** - *கோழை.*

**கபம்பம்** - *வாலுளுவை.*

**கபாடக்கட்டி** - *வசம்பு.*

**கபாடம்** - *கதவு, காவல்.*

**கபாலக்கரப்பன்** - *ஓர் நோய்.*

**கபாலக்குத்து** - *தலை மண்டைக் குத்து.*

**கபாலசன்னி** - *ஓர் சன்னி.*

**கபாலசாந்தி** - *ஆவிரை.*

**கபாலதரன்** - *சிவன், வயிரவன்.*

**கபாலமலை** - *ஓர்மலை.*

**கபாலம்** - *தலையோடு.*

**கபாலவாசல்** - *உச்சித்துவாரம்.*

**கபாலன்** - *சீர்பந்தபாஷாணம்.*

**கபாலி** - *உமை, சிவன், வயிரவன்.*

**கபாலீச்சுரன்** - *சிவன்.*

**கபி** - *குரங்கு.*

**கபிஞ்சலம்** - *ஆந்தை, காடை.*

**கபிதம்** - *கருஞ்சீரகம்.*

**கபித்தம்** - *விளாமரம்.*

**கபிலம்** - *உபபுராணம் பதினெட்டி னொன்று, கருமைகலந்த பொன் மை.*

**கபிலன்** - *ஓரறிஞன்.*

**கபிலை** -*கருமைகலந்தபொன்மை, தென் கீழ்த்திசையானைக்குப் பெண்யானை, தேவப்பசு, பசு, நீரிறைக்குஞ்சூத்திரத் தொன்று.*

**கபோதகம்** - *சித்திரக்கம்பி.*

**கபோதம்** - *கரும்புறா, சுவர்த்தலங் களின் சித்திரக்கம்பி, புறா.*

**கபோலம்** - *கதுப்பு.*

**கப்பச்சு** - *கம்மாளர்கருவியி னொன்று.*

**கப்படம்** - *சீலை.*

**கப்படா** - *அரை.*

**கப்படி** - *ஓர் மரம்.*

**கப்பணம்** - *இருப்பு நெருஞ்சின்முள், ஓராபரணம், கழுத்திடுமிரும்புத் தகடு, கைவேல்.*

**கப்பம்** - *அரசிறை.*

**கப்பரை** - *இரப்போர்கலன், கிடாரம்.*

**கப்பலோட்டு** - *கடல்யாத்திரை.*

**கப்பல்** - *மரக்கலம்.*

**கப்பலவாணம்** - *ஓர் வாணம்.*

**கப்பல்வாழை** - *ஓர்வாழை.*

**கப்பறை** - *சூதினோர்தாயம்.*

**கப்பற்கடலை** - *ஓர் கடலை.*

**கப்பற்கதலி** - *ஓர் வாழை.*

**கப்பற்காரன்** - *கப்பற்றலைவன்.*

**கப்பற்சண்டை** - *கப்பலிலிருந்து செய்யும்போர்.*

**கப்பற்பாட்டு** - *ஏலப்பாட்டு, ஓர் பாடல்.*

**கப்பி** - *ஓர்கருவி, கழிகடை, குறுநல், தானியம்.*

**கப்பித்தல்** - *கிளைவிடல், முகை யரும்பல்.*

**கப்பிப்பிஞ்சு** - *கழிகடைப்பிஞ்சு.*

**கப்பியல்** - *கப்பி.*

**கப்பு** - *கவர், கொப்பு, சிறுதூண்.*

**கப்புக்கால்** - *குறுங்கால்.*

**கப்புதல்** - *கம்முதல்.*

**கப்புத்தோள்** - *வலத்தோளுமிடத் தோளுமாகக்காவுதல்.*

**கப்புநாமம்** - *இருகவர்நாமம்.*

**கப்புவிடுதல்** - *கவர்வைத்தல்.*

**கமகமத்தல்** - *மிகமணத்தல்.*

**கமகமெனல்** - *வாசனைக்குறிப்பு.*

**கமகன்** - *அரும்பொருளைச்செம் பொருணடையாய்க்காட்டிப் பாடுவோன்.*

**கமக்காரன்** - *கமத்திலெசமான், வேளாளன்.*

**கமங்கட்டுதல்** - *கமமுண்டுபண்ணல், வேளாண்மைக்கணிகோலுதல்.*

**கமசுகட்டுதல்** - *முயன்றுநிற்றல்.*

**கமடத்தரு** - *சீவதாரு.*

**கமடம்** - *ஆமை.*

**கமண்டலம்** - *கெண்டிகை, சுரைக் குடுகு இஃது தவத்தோர் பஞ்ச முத்திரையினொன்று.*

**கமபாஷை** - *ஓர் பயில்.*

**கமம்** - *நிறைவு, விளைநிலம்.*

**கமரி** - *ஓர்புல்.*

**கமருதல்** - *அழுதல்.*

**கமர்** - *வெடிப்பு.*

**கமலகுண்டலமாய்விழுதல்** - *கீழ் மேலாய் விழுதல்.*

**கமலக்கண்ணன்** - *விண்டு.*

**கமலநிருத்தம்** - *கூத்தினோர்விகற்பம்.*

**கமலநிறமணி** - *சாதுரங்கப்பது மராகம்.*

**கமலம்** - *தாமரை, நீர்.*

**கமலயோனி** - *பிரமன்.*

**கமலராகம்** - *பதுமராகம்.*

**கமலவூர்தி** - *அருகன், பிரமன்.*

**கமலாக்கினி** - *மட்டானதீ.*

**கமலாசனன்** - *பிரமா.*

**கமலாசனி** - *இலக்குமி.*

**கமலாலயம்** - *திருவாரூர்.*

**கமலாலையை** - *இலக்குமி.*

**கமலி** - *குங்குமபாஷாணம்.*

**கமலிப்பட்டு** - *ஓர்பட்டு.*

**கமலினி** - *உமைசேடிகளினொருத்தி.*

**கமலை** - *இலக்குமி.*

**கமல்** - *குடசப்பாலை.*

**கமவாரம்** - *அணியப்பங்கு.*

**கமழ்தல்** - *மணத்தல்.*

**கமறுதல்** - *அலறுதல், குமிறுதல், மிகக்காய்தல்.*

**கமனகுளிகை** - *இரசகுளிகை, நினைத்த விடத்துக்குப் போகப் பண்ணும் மருந்து.*

**கமனசித்தி** - *கமனம்பண்ணும் வல்ல பம்.*

**கமனம்** - *கதி, போதல்.*

**கமனம் பண்ணுதல்** - *கமனமாய்ச் செல்லல், பெண்ணிடத்திற் சேர்தல், போதல்.*

**கமனி** - *ஆகாயமார்க்கமாச் செல் பவன்.*

**கமனித்தல்** - *கமனம்பண்ணல், போதல்.*

**கமாரிடுதல்** - *சத்தம் பண்ணல், வெடித்தல்.*

**கமாரெனல்** - *சத்தம்பண்ணுதல்.*

**கமார்** - *வெடிப்பு.*

**கமித்தல்** - *பொறுத்தல்.*

**கமுகந்தீவு** - *சத்ததீவினொன்று.*

**கமுகம்பூச்சம்பா** - *ஓர் நெல்.*

**கமுகு** - *ஓர் மரம்.*

**கமுகுமுத்தம்** - *கமுகிற்பிறந்தபச்சை நிறமுத்து.*

**கமுக்கட்டு** - *கைக்குழி.*

**கமுக்கம்** - *அடக்கம், அமைந்திருத்தல்.*

**கமுக்குக்கமுக்கெனல்** - *ஈரடுக் கொலிக்குறிப்பு.*

**கமை** - *பொறுமை. அஃது சத்த புண்ணியத்தொன்று.*

**கம்** - *ஆகாயம், காற்று, தலை, நீர், பிரமன், மேகம், வெண்மை, அறிவு, இந்திரியம், சந்தோஷம், முத்தி, விந்து.*

**கம்பக்கணை** - *அசையாதவன், அசை யாத்தம்பம், தழுக்குணி.*

**கம்பங்கோரை** - *ஓர் புல்.*

**கம்பட்டக்காரன்** - *காசடிப்போன்.*

**கம்பட்டமடித்தல்** - *காசடித்தல்.*

**கம்பட்டமுளை** - *காசடிக்கும் முத்திரை.*

**கம்பட்டம்** - *காசு.*

**கம்பத்தம்** - *வேளாண்மை.*

**கம்பத்தன்** - *இராவணன்.*

**கம்பத்து** - *தோணியின் வெடிப்பு.*

**கம்பந்தாளி** - *ஓர் தாளி.*

**கம்பந்திராய்** - *ஓர் திராய்.*

**கம்பம்** - *அசைவு, தூண், நடுக்கம், பாய்மரம், விளக்குத்தண்டு.*

**கம்பர்காஞ்சி** - *ஓரூர்.*

**கம்பலம்** - *கம்பளி, செவ்வாடை, மேற்சட்டி.*

**கம்பலை** - *அச்சம், ஒலி, சண்டை, துன்பம், நடுக்கம், மருதநிலம், வயல், வருத்தம்.*

**கம்பலைகட்டுதல், கம்பலைப்படல்** - *சண்டை பிடித்தல், பேச்சுவார்த் தைப் படல்.*

**கம்பலை மாரி** - *கம்பலைப் படுகிறவன்.*

**கம்பவாணம்** - *ஓர் வாணம்.*

**கம்பளத்தார்** - *ஓர்சாதியார்.*

**கம்பளம்** - *கம்பளி, செம்மறிக்கடா, செவ்வாடை, துருவாட்டேறு.*

**கம்பளர்** - *மருதநிலமாக்கள்.*

**கம்பளி** - *ஓர் மரம், ஓர் வகைச்சீலை, ஓர் வகையாடு.*

**கம்பளிக்கொண்டான்** - *ஓர்பூடு.*

**கம்பற்று** - *தோணியிற்சில்லி.*

**கம்பனம்** - *அசைவு, அதிர்த்தல்.*

**கம்பன்** - *ஓர்புலவன், ஓரிராக்கதன்.*

**கம்பாகம்** - *அமாற்கயிறு.*

**கம்பாயம்** - *ஓர் புடைவை.*

**கம்பானத** - *கம்பையாறு.*

**கம்பாநதி** - *அமாற்கயிறு.*

**கம்பி** - *இரும்புமுதலியவற்றின் கம்பி, கம்பியென்னேவல், காதணி, சித்திரக்கம்பி.*

**கம்பிகட்டுதல்** - *புடைவை முதலிய வற்றிற்குக் கம்பிகீறுதல்.*

**கம்பிகை** - *ஓர்வாத்தியம்.*

**கம்பிக்கடுக்கன்** - *ஓர்வகைக்கடுக்கன்.*

**கம்பிக்கரை** - *கம்பிக்குறியுள்ள புடைவை.*

**கம்பிக்குறி** - *கம்பிபோன்றகுறி.*

**கம்பிதம்** - *அசைவு, நடுக்கம்.*

**கம்பித்தல்** - *நடுங்கல்.*

**கம்பிமணி** - *ஓர் வகைமணி.*

**கம்பியச்சு** - *கம்மாரோர்கருவி, சித்திரக்கம்பி.*

**கம்பியுப்பு** - *ஓருப்பு.*

**கம்பிவாங்குதல்** - *நெடுகிவிடுதல்.*

**கம்பிளி** - *கம்பளி.*

**கம்பிவிறிசு** - *ஓர்வானம்.*

**கம்பீரித்தல்** - *ஆர்ப்பரித்தல், வீராவேசப்படுதல்.*

**கம்பீரசன்னி** - *ஓர் நோய்.*

**கம்பீரம்** - *ஆர்ப்பரிப்பு, ஆழம், செருக்கு.*

**கம்பீரன்** - *வீரகெற்சித முள்ளவன்.*

**கம்பு** - *ஓர்பயிர், சங்கு, சிறுதடி, செந்தினை, மரக்கொம்பு.*

**கம்புள்** - *சங்கு, சம்பங்கோழி, வானம் பாடி.*

**கம்பை** - *எல்லை, ஓர்யாறு, கதவு முதலியவற்றின் கம்பை, பொறுப்பு.*

**கம்பைக்கல்** - *ஓர் மணி.*

**கம்மக்கை** - *வேலைநெருக்கம்.*

**கம்மம்** - *கம்மியம், வேலை.*

**கம்மல்** - *இருமல், ஒரு வகைக்கடுக் கன், குரலடைப்பு, மந்தாரம், மாசு.*

**கம்மவார்** - *கமக்காரர், ஓர் சாதியார்.*

**கம்மாலை** - *கம்மத்தொழில் செய்யுந் தலம்.*

**கம்மாளர்** - *கம்மியர்.*

**கம்மாறர்** - *கரையார்.*

**கம்மியம்** - *கைத்தொழில், பேறு.*

**கம்மியர்** - *கம்மாளர், தொழில் செய் வோர்.*

**கம்முதல்** - *அதட்டியுரப்பல், இரு முதல், குரல்கன்றல், மூடுதல்.*

**கம்மெனல்** - *வாசனைக்குறிப்பு.*

**கம்மை** - *சிறுகீரை.*

**கயக்கம்** - *கயங்கப்படுதல்.*

**கயக்கு** - *கசக்கென்னேவல், கயக்குதல், சோர்வு.*

**கயக்குதல்** - *நசுக்குதல், முறுக்குதல், மெலிவித்தல்.*

**கயங்கு** - *கம்பு, கயங்கென்னேவல்.*

**கயங்குதல்** - *குழைவு, சோர்தல், நொந்து மெலிதல், விலகிவிடுதல்.*

**கயந்தலை** - *மனத்துயர், யானைக் கன்று.*

**கயப்பினை** - *வங்கமணல்.*

**கயமுகன்** - *வினாயகன், கயமுகாசூரன்.*

**கயமுகாரி** - *விநாயகன்.*

**கயமுனி** - *யானைக்கன்று.*

**கயமை** - *கீழ்மை, சண்டாளத்தனம்.*

**கயம்** - *அகழி, அழிவு, ஆழம், இளமை, ஓர்நோய், கீழ், குளம், கேடு, தேய்வு, நீர், பெருமை, மேன்மை, யானை.*

**கயரோகம்** - *கசரோகம்.*

**கயர்** - *கசர், கயரென்னேவல்.*

**கயல்** - *கெண்டைமீன்.*

**கயவஞ்சி** - *உலோபன்.*

**கயவஞ்சித்தனம்** - *உலோபத்தனம்.*

**கயவர்** - *கீழ்மக்கள்.*

**கயவளாகம்** - *கீழுலகம்.*

**கயவாய்** - *கரிக்குருவி, கழிமுகம், பிளந்தவாய்.*

**கயவு** - *உயரம், கழிமுகம், களவு, பெருமை, மிகுதி, மேன்மை.*

**கயனை** - *கசனை.*

**கயாகரம்** - *ஓர்நிகண்டு.*

**கயாரி** - *சிங்கம்.*

**கயானன்** - *கயமுகாசூரன், விநாயகன்.*

**கயிங்கரன்** - *ஏவல்செய்வோன்.*

**கயிங்கரியம்** - *வேலை.*

**கயிங்கிதம்** - *ஆகாயத்திற்சுருபமறிதல்.*

**கயிப்பு** - *இலாகிரி.*

**கயிரம்** - *அலரி.*

**கயிரவம்** - *செவ்வாம்பல், வெள்ளாம் பல்.*

**கயிரிகம்** - *ஓர்மண்.*

**கயிரை** - *சுற்றம்.*

**கயிர்** - *தவறு.*

**கயிலாசம், கயிலை** - *ஓர்மலை.*

**கயிலாயன், கயிலையாளி** - *சிவன்.*

**கயிலி** - *பலவன்னவரிப்புடைவை.*

**கயிலையிற்கடுங்காரி** - *மாமிசபேதி.*

**கயில்** - *ஆபரணக் கடைப்புணர்வு, தேங்காய்ப்பாதி, பிடர்.*

**கயிறடித்தல்** - *நூல்போடுதல்.*

**கயிறு** - *வடம்.*

**கயிறுகட்டுதல்** - *நெடுகவிடுதல்.*

**கயிறுசாத்துதல்** - *சாத்திரம்பார்க்க ஏட்டிலேகயிறிடுதல்.*

**கயிறுதடி** - *நெய்வார் கருவியி னொன்று.*

**கயிறுபிடித்தல்** - *நூல்பிடித்து ஒழுங்கு படுத்தல்.*

**கயிறுமுறுக்குதல்** - *தொந்தரைப் படுத்தல், வருத்தப்படுத்தல்.*

**கயிறுமுறுக்குதல்** - *கயிறுதிரித்தல், வருத்தப்படுத்தல்.*

**கயிற்றுக்கொடி** - *கயிற்றாலாய கட்டுக் கொடி.*

**கயிற்றுக்கோலாட்டம்** - *ஓர்விளை யாட்டு.*

**கயிற்றுக்கோல்** - *வெள்ளிக்கோல்.*

**கயிற்றுப்பொருத்தம்** - *மணப் பொருத்தம் பத்தினொன்று.*

**கயிற்றேணி** - *நூலேணி.*

**கயினி** - *அத்தநாள், கைம்பெண்.*

**கயை** - *ஓர் புண்ணியச்சேத்திரம்.*

**கர** - *ஓர் வருடம், கரவென்னேவல்.*

**கரகம்** - *ஆலாங்கட்டி, கமண்டலம், கெண்டிகை, வட்டில்.*

**கரகரணம்** - *பரதவுறுப்புளொன்று.*

**கரகரத்தல், கரகரெனல்** - *அரி கண்டப் படுத்தல், ஒலிக் குறிப்பு, பரிசக்குறிப்பு.*

**கரகரப்பு** - *சருச்சரையூறு, தினவு.*

**கரசம்** - *யானைக்கரணம், யானை.*

**கரசரணாதி** - *கைகால் முதலிய சாங்கம்.*

**கரசல்** - *புன்செய்.*

**கரசாகை** - *விரல்.*

**கரசிக்கிருட்டி** - *ஓர் பறவை.*

**கரசீகரம்** - *துதிக்கையுமிழ்நீர்.*

**கரசை** - *கரசம்.*

**கரடகபாஷாணம்** - *ஓர் மருந்து.*

**கரடகம், கரடகம்பம்** - *தந்தரம், வஞ்சகம், ஓர் புல்.*

**கரடகன்** - *தந்திரி, வஞ்சகன்.*

**கரடம்** - *காக்கை, மதம்பாய்சுவடு, யானைமதம்.*

**கரடி** - *ஐவாய்மிருகம்.*

**கரடிகை** - *ஓர் பறை.*

**கரடிக்கூடம்** - *அரங்கம்.*

**கரடிப்பறை** - *ஓர் பறை.*

**கரடிவித்தை** - *ஆயுதபரிட்சை.*

**கரடு** - *கணு, காற்பரடு, சருச்சரை, முரடு, வஞ்சகம், ஓர்புல்.*

**கரடுமுரடு** - *செம்மையற்றது, வயிர முங்கணுவுங் கொண்டது.*

**கரட்டரிதாரம்** - *ஓர் மருந்து.*

**கரட்டான்** - *ஓரோணான்.*

**கரட்டுக்கரட்டெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கரட்டுத்தாளகம்** - *விழைவுபாஷாண முப்பத்திரண்டினொன்று.*

**கரட்டுநிலம்** - *வன்றரை.*

**கரட்டோணான்** - *ஓரோந்தி.*

**கரணம்** - *அந்தரிந்திரியம், அறுதிச் சீட்டு, உபகரணம், எண்ணிக்கை, ஏது, ஐம்பொறி, கணிதம், கல்வி, காரணம், கூத்தினோர் விகற்பம், கூத்து, நற்செய்கை, பஞ்சாங்கத்தி னொன்று, விருப்பம், செய்கை.*

**கரணி** - *செய்குதல், செய்பவன்.*

**கரணிதம்** - *அந்தக்கரணம். அஃது*

*ஆங்காரம் சித்தம் புத்தி மனம், கல்வி, கூட்டம், கூத்தின் விகற்பம்.*

**கரணியமேனிக்கல்** - *கரும்புள்ளிக்கல்.*

**கரணை** - *ஓர் செடி, ஓர் தூறு, ஓர் வகைக்கட்டு, முளி, வீணைத் தண்டு.*

**கரணைப்பலா** - *வெருகு.*

**கரணைப்பாவட்டை** - *ஓர்பாவட்டை.*

**கரண்டகம்** - *ஓர் செப்பு.*

**கரண்டம்** - *கமண்டலம், கரண்டகம், நீர்க்காக்கை.*

**கரண்டி** - *சிற்றகப்பை.*

**கரண்டை** - *முனிவர்வாசம்.*

**கரத்தல்** - *ஒளித்தல், கொடாமை, திருடல்.*

**கரநியாசம்** - *கைக்கிரியை.*

**கரந்துறைகோள்** - *காணாக்கிரகம்.*

**கரந்துறைச்செய்யுள்** - *மிறைக்கவியி னொன்று.*

**கரந்தை** - *ஓர் பூடு, அஃது அட்டாத சமூலத்தொன்று, பகைவரோட்டின நிரை மீட்டவர்க்கு மாலை, கல்லாரை.*

**கரபத்திரம்** - *ஈர்வாள், கைவாள்.*

**கரபம்** - *கழுதை.*

**கரபாத்திரமெடுத்தல், கரபாத்திரம்** - *கையிலன்னம் வாங்கிப் புசித்துத் திரிதல்.*

**கரப்பன்** - *கிரந்திப்புண்.*

**கரப்பன்பூச்சி** - *ஓர் பூச்சி.*

**கரப்பன்பூடு** - *ஓர் பூடு.*

**கரப்பு** - *ஒளிப்பு, களவு, மத்து, மீன் கூடு.*

**கரப்பிரசாரம்** - *பரதவுறுப்புளொன்று.*

**கரப்புக்குடில்** - *சிறுகுடில்.*

**கரப்பொறி** - *குடிலைத் தண்டேற்றி வைத்தல்.*

**கரமஞ்சரி** - *நாயுருவி.*

**கரமுகன்** - *வினாயகன்.*

**கரம்** - *எழுத்தின் சாரியை, (உம்) அகரம், ஓலைக்குவியல், கழுதை, கிரணம், குடியிறை, கை, நஞ்சு, யானைத்துதிக்கை.*

**கரம்பு** - *பாழ்நிலம்.*

**கரம்பை** - *சிறுகளா, பாழ்நிலம், ஓர் பூடு, களிமண்.*

**கரவடம்** - *களவு.*

**கரவடர், கரவர்** - *திருடர்.*

**கரவாகம்** - *காக்கை.*

**கரவாளம், கரவாள்** - *பட்டா கரவீரம், அலரிச்செடி.*

**கரவு** - *உலோபம், ஒளித்தல், களவு, வஞ்சகம்.*

**கரவுவெளிப்படுப்பணி** - *ஒருவரது மறைத்த செய்கையைத்தன் செய் கையால் வெளிப்படுத்தல், (உம்) கடிமனைக்கு காலைவருகாவலற்கு துஞ்சும்படி விரித்தாள் ஓரணங்கு பாய்.*

**கரவை** - *கம்மாளர் கருவியினொன்று.*

**கரளம்** - *காஞ்சிரமரம், நஞ்சு.*

**கரளை, கருளை** - *வளர்தலின்மை.*

**கரன்** - *ஓரரக்கன்.*

**கரா** - *ஆண்முதலை, முதலை, இல வுங்கம்.*

**கராகண்டிதம்** - *தெளிவு.*

**கராசலம்** - *யானை.*

**கராசனம்** - *புலி.*

**கராடம்** - *மருக்காரை.*

**கராமுத்து** - *முதலையிற்பிறந்த வெண்ணிற முத்து.*

**கராம்** - *ஆண்முதலை, முதலை.*

**கராம்பு** - *ஓர் சரக்கு.*

**கராளகேசரி** - *சிங்கம்.*

**கராளம், கராளி** - *தீக்குணம்.*

**கராளை** - *வளராதவன்.*

**கரி** - *இருந்தை, கரியென்னேவல், சாட்சி, நஞ்சு, யானை, வயிரம்.*

**கரிகரம்** - கலவிவிளையாட்டி னொன்று.

**கரிகறுத்தல்** - கவலையான் முகங் கருகல்.

**கரிகன்னி** - வெருகு.

**கரிகாடு** - கரிந்தகாடு, யானை திரியுங் காடு.

**கரிகாலன்** - ஓர் சோழன்.

**கரிக்கண்டு** - கரிசலாங்கண்ணி.

**கரிக்காந்தல்** - தூட்கரி.

**கரிக்குடர்** - மடக்குக்குடர்.

**கரிக்கருவி** - ஓர் புள்.

**கரிக்கொடி** - மூவகைக்கொடியி னொன்று.

**கரிசங்கு** - தென்னோலைக்கரிசங்கு.

**கரிசலாங்கண்ணி** - ஓர் பூடு.

**கரிசலை** - பொற்றலைக்கையாந்த கரை.

**கரிசல்** - கரியற்காடு, கருமண்ணிலம், முதிர்ந்தவிலை.

**கரிசனம்** - அன்பு, யானைக்கோடு.

**கரிசனம்** - இழுத்தல், உழுதல்.

**கரிசன்னி** - வெண்காக்கணம்.

**கரிசாலை** - கையான்தகரை.

**கரிசு** - இருநூறுபறைகொண்ட அளவு குறைவு, குற்றம், தவறு.

**கரிசை** - கரிசு.

**கரிசனை** - கரிசனம்.

**கரிச்சாங்கிழங்கு** - ஓர்பூடு.

**கரிச்சால், கரிச்சான்பூடு** - கரிசலாங் கண்ணி.

**கரிச்சான்** - கருங்குருவி.

**கரிணி** - பெண்யானை, யானை.

**கரிணிகம்** - ஓர்காதணி.

**கரிதம்** - அச்சம்.

**கரிதல்** - கருகுதல், பெருங்கோபம்.

**கரிதன்** - அச்சமுள்ளோன்.

**கரித்தல்** - எரிதல், கார்த்தல்.

**கரிநாள்** - கருநாள்.

**கரிப்பான்** - ஓர் பூடு.

**கரிப்பு** - அச்சம், கரித்தல்.

**கரிப்புறத்திணை** - புறத்திணையி னொன்று, அஃது சான்றோர் சொற்றவற்றைச்சாட்சியாகக் காட்டல்.

**கரிப்பூசுதல்** - வசைவைத்தல்.

**கரிமரநாய்** - கறுப்புமுறுப்புக் கேடு மானது.

**கரிமா** - அட்டசித்தியினொன்று, அஃது இருப்புமலையினுங் கனத்தல்.

**கரிமுகன்** - விநாயகன்.

**கரிமுண்டம்** - அறக்கறுவல்.

**கரியது** - கருநிறமுள்ளது.

**கரியபோளம்** - நறும்பிசின்.

**கரியமணி** - கண்மணி, கரியபாசி.

**கரியமால்** - காய்ச்சசற்பாஷாணம், விட்டுணு.

**கரியல்** - கருகல்.

**கரியவன், கரியான்** - இந்திரன், கடவுள், கண்ணன், கள்வன், கறுவல், சனி.

**கரில்** - கார்ப்பு, குற்றம், கொடுமை.

**கரிவங்கம்** - காரீயம்.

**கரிவாகனன்** - இந்திரன், ஐயன்.

**கரிவைரி** - வெள்ளைப்பாஷாணம்.

**கரீரம்** - அகத்தி, குடம், கும்பவிராசி, மிடா, யானை, யானைப்பல்லடி.

**கரு** - அட்டகருமக்கரு, ஒரு காகம், மக்கரு, கருப்பம், கருப்பொருள், நடு, நிறம், பெருமை, முட்டை, மேடு, மேன்மை, யோசனை, பிள்ளை.

**கருகருத்தல்** - அரிகண்டப்படுத்தல்.

**கருகல்** - கருகினது, கருகுதல், பொருண் மறைவு, மாலைநேரம்.

**கருகுதல்** - கரிதல், கறுத்தல், தீதல், பொருண்மறைதல்.

**கருகுமாலை** - *மசண்டை, மாலை நேரம்.*

**கருகூலம்** - *கருப்புக்கட்டி, பொக்கசம்.*

**கருக்கட்டுதல்** - *மழைக் குணமாயிருத்தல், யோசனை பண்ணல், வார்ப்பு வேலைக்குக் கருப்பிடித்தல்.*

**கருக்கரிவாள்** - *கூன்வாள்.*

**கருக்கரைதல்** - *கருப்பமழிதல்.*

**கருக்கல்** - *இருள், கருகினது, சப்பட்டை மனதை நோவச் செய்தல், மாலைநேரம்.*

**கருக்காக்குதல்** - *கூராக்குதல்.*

**கருக்காய்** - *இளங்காய்.*

**கருக்கானவன்** - *கபடன்.*

**கருக்கிடுதல்** - *கூராக்குதல்.*

**கருக்கிடை** - *யோசனை.*

**கருக்கு** - *ஈர்வாட்பல், கருகல், கருக்கென்னேவல், கூர், பனை மட்டை இலைமுதலியவற்றின் கருக்கு.*

**கருக்குச்சுருட்டு** - *கபடம்.*

**கருக்குடி** - *சவுக்காரம்.*

**கருக்குதல்** - *கருகப்பண்ணுதல்.*

**கருக்குப்பீர்க்கு** - *ஓர்பீர்க்குக்கொடி.*

**கருக்குவாய்ச்சி, கருக்குவாளி** - *ஓர் மரம்.*

**கருக்குழி** - *கருப்பாசயம்.*

**கருக்கூடு** - *கருப்பை.*

**கருக்கூட்டுதல்** - *கருத்துவிசாரித்தல், சினைத்தல், நியாயந்தேடுதல், மழைக்குணங்கொள்ளுதல்.*

**கருக்கொள்ளுதல்** - *கருப்பற்றுதல்.*

**கருங்கடல்வண்ணன்** - *ஐயன், விண்டு.*

**கருங்கண்ணி** - *ஓர் மீன்.*

**கருங்கந்து** - *அக்கந்தின் புறக்கந்து.*

**கருங்கரப்பன்** - *கருங்கிரந்தி.*

**கருங்கல்** - *ஓர் சாதிக்கல்.*

**கருங்கற்றலை** - *ஓர் மீன்.*

**கருங்காக்கணம்** - *ஓர் காக்கணங் கொடி.*

**கருங்காலி** - *ஓர் மரம்.*

**கருங்காலி** - *கருங்குவளை.*

**கருங்கிரந்தி** - *ஓர் நோய்.*

**கருங்கிளி** - *ஓர் கிளி.*

**கருங்குங்குலியம்** - *ஒரு மருந்து.*

**கருங்குதிரையாளி** - *வயிரவல்.*

**கருங்குந்தம்** - *கண்ணோயினொன்று.*

**கருங்குரங்கு** - *கருநிறமந்தி.*

**கருங்குவளை** - *நீலோற்பலம்.*

**கருங்குறுவை** - *ஓர் நெல்.*

**கருங்குன்றி** - *ஓர்குன்றி.*

**கருங்கை** - *கடுங்கைவேலை.*

**கருங்கொடி** - *ஓர் பூடு.*

**கருங்கொட்டி** - *ஓர் கொட்டி.*

**கருங்கொண்டல்** - *வடகீழ்க்காற்று.*

**கருங்கொல்** - *இரும்பு.*

**கருங்கொல்லர்** - *இரும்புவேலை செய்வோர்.*

**கருங்கொள்** - *ஓர் கொள்.*

**கருங்கோழி** - *ஓர் கோழி.*

**கருங்கோள்** - *இராகு.*

**கருசம்** - *தேயமன் பததாறினொன்று.*

**கருசிலாங்கண்ணி** - *ஓர் பூடு.*

**கருச்சிதம்** - *முளக்கம், வீராவேசம்.*

**கருஞ்சனம்** - *முருங்கை.*

**கருஞ்சாதி** - *கீழ்மக்கள்.*

**கருஞ்சாரை** - *ஓர்பாம்பு.*

**கருஞ்சார்** - *அரைப்பூட்டு.*

**கருஞ்சீரகம்** - *ஓர் சரக்கு.*

**கருஞ்சுக்கான்** - *ஓர் கல்.*

**கருஞ்சுரை** - *ஓர் சுரை.*

**கருஞ்சூரை** - *ஓர் முட்செடி, செங்கத்தாரி.*

**கருஞ்செம்பை** - *ஓர் செடி.*

**கருடகேதனன்** - *விட்டுணு.*

**கருடக்கல்** - ஓர் கல்.

**கருடக்கொடி** - குறிஞ்சா, பெரு மருந்து.

**கருடக்கொடியோன்** - விட்டுணு.

**கருடக்கொவ்வை** - காக்கணங் கொவ்வை.

**கருடசாரம்** - உப்பு.

**கருடணம்** - அரைத்தல், தேய்த்தல்.

**கருடணை** - சேர்த்திக்கை.

**கருடதிசை** - கிழக்கு.

**கருடதியானம்** - ஓர் மந்திரம்.

**கருடத்தொண்டை** - காக்கணஞ் செடி, கொவ்வை.

**கருடபச்சை** - ஓர் மருந்துக்கல், மரகதம், அஃது சிவனிந்திரியத் தைக்கருடன் கவ்விக் கடலில விடவதனாற் பிறந்தது.

**கருடபஞ்சாக்கரம்** - ஓர் மந்திரம்.

**கருடபாஷாணம்** - ஓர் கல்.

**கருடபார்வை** - இராசபார்வை, விடந் தீர்க்கும்பார்வை யினொன்று.

**கருடர்** - பதினெண்கணத்தொருவர்.

**கருடல்** - விரும்பல்.

**கருடவாகனன்** - விட்டுணு.

**கருடவித்தை** - ஓர் வித்தை.

**கருடன்** - செம்பருந்து.

**கருடாஞ்சனம்** - கருடபச்சைக்கல்.

**கருடி** - சூழ்தல், படைவளைதல்.

**கருடித்தல்** - இழுத்துக்கொள்ளுதல்.

**கருடுதல்** - விரும்புதல்.

**கருணன்** - கன்னன்.

**கருணாகடாட்சம்** - கிருபைப் பார்வை, தயவு.

**கருணாகரம்** - கருணைக் கிருப்பிடம்.

**கருணாகரன்** - கிருபாமூர்த்தி.

**கருணாக்கிரகன்** - கிருபையில்லான்.

**கருணாநிதி** - கடவுள், காருண்ணியன்.

**கருணாப்பள்ளி** - ஓர் நகரம்.

**கருணாமூர்த்தி** - கடவுள், கிருபாரூபி.

**கருணாலயன்** - கடவுள்.

**கருணி** - குகை, வெற்பு, பிடியன் யானை.

**கருணிகை** - பூவினிற்கொட்டை.

**கருணிதன்** - கிருபையுடையோன்.

**கருணீகன்** - கணக்கன்.

**கருணை** - ஓர் செடி, கிருபை. இஃது சுபாபக்குணமொன்பதினொன்று, பட்சம், பொரிக்கறி, பெருங் கிழங்கு.

**கருணோதயன்** - கடவுள்.

**கருதலர், கருதார்** - பகைவர்.

**கருதலனுமானம்** - ஓரளவை, அஃது உரையால் அறிவிளைவையறிதல்.

**கருதல்** - எண்ணல், மதித்தல், விரும்பல்.

**கருத்தபம்** - கழுதை.

**கருத்தமம்** - சேறு, பாவம், மாமிசம்.

**கருத்தமன்** - வருணன்றந்தை.

**கருத்தவ்வியம்** - தத்துவம்.

**கருத்தனாகுபெயர்** - கருத்தாவாகு பெயர்.

**கருத்தன்** - அரன், அருகன், கடவுள், நடப்பிப்போன்.

**கருத்தா** - அருகன், கடவுள், சிவன், செய்பவன்.

**கருத்தாக்காரகம்** - வினைமுதற் பொருளைக் காட்டுமுருபுடைப் பெயர்.

**கருத்தாவாகுபெயர்** - கருத்தாவின் பெயரைக் காரியத்திற்கு வழங்கல், (உம்) திருவள்ளுவர்.

**கருத்தாளி** - குறிப்பறிவான், விவேகி, ஓர்மரம்.

**கருத்து** - ஆழமானபயன், எண்ணம், குறிப்பு, சித்தம், சொற்பொருள், நினைப்பு, விருப்பு.

**கருத்துக்கொள்ளல்** - மனம்வைத்தல்.

**கருத்துடையடைகோளியணி** - *ஓரலங்காரம், அஃது அபிப்பிராயத்துகுரிய விசேடணத்தைச் சொல்லுதல்.*

**கருத்துடையடையணி** - *அபிப்பிராயத்தோடு கூடிய விசேடணத்தைச் சொல்லுதல்.*

**கருத்துப்பொருள்** - *மனக்காட்சிப் பொருள்.*

**கருத்துரை** - *செய்யுட் கருத்துரைக்குமுரை.*

**கருத்தொட்டுதல்** - *யோசித்தல்.*

**கருநடம்** - *ஓர் தேயம், ஓர் பாடை.*

**கருநந்து** - *நத்தை.*

**கருநாகம்** - *இராகு, ஓர் மரம், கரும்பாம்பு.*

**கருநாசம்** - *சித்திரைமூலம்.*

**கருநாடகம்** - *கன்னடதேசத்தாரின் விசேடம், நாகரீகம்.*

**கருநாடகவித்தை** - *நாகரீககல்வி.*

**கருநாபிக்கிழங்கு** - *ஓர்கிழங்கு.*

**கருநாரை** - *ஓர் கொக்கு.*

**கருநார்** - *கரியநார்.*

**கருநாள்** - *ஆகாதநாள்.*

**கருநிமிளை** - *ஒரு நிமிளை.*

**கருநிலம்** - *நீரின்மலையின் வனத்திற் பயன் படாமிகுநிலம்.*

**கருநெய்தல்** - *கருங்குவளை.*

**கருநெய்தனிறமணி** - *சாதுரங்கப்பதுமராகம்.*

**கருநெல்லி** - *ஓர்நெல்லி.*

**கருநெறி** - *தீ.*

**கருநொச்சி** - *ஓர் நொச்சி, சுரோணிதநீர்.*

**கருந்தகரை** - *ஓர் தகரை.*

**கருந்தனம்** - *செல்வம், பொன்.*

**கருந்தாது** - *இரும்பு.*

**கருந்தாரை** - *காரொளி.*

**கருந்திடர்** - *மேடு.*

**கருந்தினை** - *ஒரு தினை.*

**கருந்துகிலோன்** - *பலபத்திரன்.*

**கருந்துவரை** - *ஓர் துவரை.*

**கருந்துளசி** - *ஓர் துளசி.*

**கருந்தோழி** - *அவுரி.*

**கருப்பகோசம்** - *கருப்பப்பை.*

**கருப்பகோளகை** - *கருப்பாசயப்பை.*

**கருப்பக்கிரகம்** - *மூலஸ்தானம்.*

**கருப்பக்கிரணம்** - *கருப்பந்தரித்தல்.*

**கருப்பங்கொள்ளுதல்** - *கருப்பந்தரித்தல்.*

**கருப்பசூலை** - *ஓர் நோய்.*

**கருப்பஞ்சாற்றுக்கடல்** - *சத்தசமுத்திரத்தொன்று.*

**கருப்படம்** - *கந்தைப்புடைவை.*

**கருப்பட்டி** - *கற்கண்டு, பனங்கட்டி.*

**கருப்பஸ்திரி** - *கருப்பவதி.*

**கருப்பதாரணம்** - *கருப்பந்தரித்தல்.*

**கருப்பநாடி** - *கொப்பூழ்க்கொடி.*

**கருப்பபாதகம்** - *செம்முருங்கை.*

**கருப்பபாதனம்** - *கருப்பம்விழுத்தல்.*

**கருப்பநாள்** - *பிறந்தநாளுக்கு ஒன்பதாந்நாள்.*

**கருப்பநீர்** - *கருப்பஞ்சாறு, பனை முதலிய வற்றினீர்.*

**கருப்பப்பரிசம்** - *கருப்பந்தரித்தல்.*

**கருப்பப்பை** - *கருப்பகோளகை.*

**கருப்பமழிதல்** - *கருக்கரைதல்.*

**கருப்பம்** - *சினை, அரண்மனை, உபநிடத முப்பத்திரண்டினொன்று, உள்.*

**கருப்பரம்** - *அத்தி, இரும்புப்பாண்டம், தலையோடு.*

**கருப்பவதி** - *கருப்பந்தரித்தவள்.*

**கருப்பவாதை, கருப்பவேதை** - *கருப்பவேதனை.*

**கருப்பவாயு** - *ஓர் வாயு, பிறகூதவாயு.*

**கருப்பற்று** - *கருப்பந்தரிப்பு.*

**கருப்பனி** - *கருப்பவதி.*

**கருப்பாகாரம்** - *கெற்பக்கிரகம்.*

**கருப்பாசயப்பை** - *கருப்பப்பை.*

**கருப்பாசயம்** - *கருவிருக்குமிடம்.*

**கருப்பாதானம்** - *ஓர் சடங்கு.*

**கருப்பிடித்தல்** - *யோசனை மட்டுக் கட்டுதல்.*

**கருப்பிணி** - *கருப்பஸ்திரி.*

**கருப்பிணியவேட்சணம்** - *பிரசூதி வைத்தியம்.*

**கருப்பினி** - *கருப்பவதி.*

**கருப்பு** - *அரிது, குறுவிலை.*

**கருப்புக்கட்டி** - *கற்கண்டு, பனங்கட்டி.*

**கருப்புரம்** - *ஓர்நெல், நீர், பாவம், பொன்.*

**கருப்புவில்** - *மதன்வில்.*

**கருப்புவில்லி** - *காமன்.*

**கருப்பூரசலாசத்து** - *ஓர் மருந்து.*

**கருப்பூரதீபம்** - *கருப்பூரவிளக்கு.*

**கருப்பூரத்துளசி** - *ஓர் துளசி.*

**கருப்பூரத்தயிலம்** - *ஓர் மருந்து.*

**கருப்பூரநீர்** - *ஓர் மருந்து.*

**கருப்பூரப்புல்** - *ஓர் வாசனைப்புல்.*

**கருப்பூரமரம்** - *ஓர் மரம்.*

**கருப்பூரம்** - *சூடன், பஞ்சவாசத் தொன்று, பொன், பொன்னரிதாரம்.*

**கருப்பூரவள்ளி** - *ஓர் செடி.*

**கருப்பூரவில்வம்** - *ஓர் வில்வம்.*

**கருப்பூரவெற்றிலை** - *ஓர் வெற்றிலை.*

**கருப்பூர்** - *ஓரூர்.*

**கருப்பூர்வழக்கு** - *அழிவழக்கு.*

**கருப்பெட்டி** - *கருப்பை.*

**கருப்பை** - *கருப்பாசயப்பை, கரும் பனங்காய்ப்பனை, காரெலி.*

**கருப்பொருள்** - *அவ்வவ் நிலத்திலுற் பத்திப் பொருள். அஃது உணா, ஊர், குடி, தலைவர் தெய்வம், தொழில், நீர், பண், பறை, புள், மரம், மலர், யாழ், விலங்கு என்பன.*

**கருமகரன்** - *நமன், வேலைகாரன்.*

**கருமகள்** - *காக்கை.*

**கருமகாண்டம்** - *கன்மநிவிர்த்தி முதலியவற்றைச் சொல்லுந்நூல்.*

**கருமகாண்டிகர்** - *மூவகைப்பக்குவரி லொருவர்.*

**கருமகாரன்** - *கம்மாளன், வேலையாள்.*

**கருமக்கத்தா** - *கிரியை நடத்து வோன், செய்வோன்.*

**கருமகீலகன்** - *வண்ணான்.*

**கருமக்காரகம்** - *வினையைப் பொரு ளிற்புலப்படுத்து முருபுடைப் பெயர்.*

**கருமக்கியானம்** - *கரும அறிவு.*

**கருமங்கட்டுப்படல்** - *பாவஞ்செய்தல், வினைதீராதுநிற்றல்.*

**கருமசண்டாளன்** - *துரோகி.*

**கருமசம்** - *களங்கம், சத்து, வினை, அரசமரம், கலியுகம்.*

**கருமசுத்தி** - *கிரியையிற்குற்றத்தீர்ப்பு, பாவப்பிராயச்சித்தம்.*

**கருமஞ்சரி** - *நாயுருவி.*

**கருமணி** - *கண்மணி, நீலமணி.*

**கருமத்தலைவர்** - *வருங்காரியஞ் சொல்வோர்.*

**கருமத்துரோகம்** - *வினைப்பவம்.*

**கருமநிட்டான்** - *பிராமணன்.*

**கருமநிவிர்த்தி** - *பாவத்தீர்ப்பு.*

**கருமபந்தம்** - *செய்வினைத்தொடர்.*

**கருமபந்தனம்** - *பழவினைத் தொடர்பு.*

**கருமபாகை** - *வேதநூற்பொருளி னொன்று.*

**கருமபாவம்** - *கிரியாபாவம்.*

**கருமபூமி** - *இருவினையியற்றற்குரிய வுலகம், சுடுகாடு.*

**கருமப்பழி** - *துரோகம்.*

**கருமப்பிறப்பு** - *பாவச்சென்மம்.*

**கருமமுடித்தல்** - *செய்தொழில் முடித்தல், நியமநிட்டை முடித்தல்.*

**கருமமூலம்** - *தருப்பை.*

**கருமம்** - *உட்டணம், கடமை, காரியம், செயப்படுபொருள், செய்கை, வெப்பம், வேனிற்காலம்.*

**கருமயிர்** - *கரடி.*

**கருமயுகம்** - *கலியுகம்.*

**கருமலை** - *இரும்புச்சுரங்கமலை.*

**கருமவிபாகம்** - *ஊழ்வினைப்பயன்.*

**கருமவியாதி** - *மருந்தினாலாறாத நோய்.*

**கருமவிருத்தி** - *சுத்தநடக்கை.*

**கருமவுவமம்** - *செயலுவமம்.*

**கருமவேதனை** - *மிக்கவருத்தம்.*

**கருமா** - *பன்றி, யானை.*

**கருமாதி** - *அந்தியேட்டி முதலிய சடங்கு.*

**கருமாதிகாரம்** - *கருமங்கள் செய்து முடிக்கு மதிகாரம், கிரியைக்கதிகாரம்.*

**கருமாதிகாரன்** - *அரசர்க்குத் துணைவரிலொருவன், காரியத்தலைவன், நிமித்தகாரன்.*

**கருமாதிக்காரர்** - *கருமத்திலாதிக்கம் பெற்றோர், காரியத்தலைவர்.*

**கருமாதிசெய்தல்** - *ஈமக்கடன் முதலிய செய்தல்.*

**கருமாத்துமா** - *கன்மஞ்செய்தவன்.*

**கருமாந்தம், கருமாந்தரம், கருமாந்திரம்** - *கருமாதி, பாவம், கார்காலம்.*

**கருமாந்தியம்** - *அந்தியேட்டி.*

**கருமாயம்** - *அருமையானது, அதிக விலை.*

**கருமாரன்** - *கொல்லன்.*

**கருமாரி** - *ஓர் மரம், பிற்சூத வேதனை.*

**கருமார்** - *கொல்லர்.*

**கருமானம்** - *கரியவானம், கருவித்தை.*

**கருமானுட்டானம்** - *நியமநிட்டை.*

**கருமானுபவம்** - *செய்வினைப்போகம்.*

**கருமான்** - *கலைமான், கொல்லன், பன்றி.*

**கருமி** - *நித்தியகருமம் வழுவாது செய்வோன், பாவி.*

**கருமிசம்** - *வினை.*

**கருமுகில்** - *வைப்புப்பாஷாண முப்பத்திரண்டினொன்று.*

**கருமுகிற்சிலை** - *காந்தக்கல்.*

**கருமுகிற்பாஷாணம்** - *ஓர் பாஷாணம்.*

**கருமுகை** - *இருவாட்சி, சிறு செண்பகம்.*

**கருமுடித்தல்** - *அட்டகருமக் கருவுண்டாக்கல், வேதைக் கருமுடித்தல்.*

**கருமுதல்** - *ஓர் மீன்.*

**கருமுரடன்** - *கீழ்ப்படியாதவன்.*

**கருமுரல்** - *ஓர் மீன்.*

**கருமேகம்** - *காளமேகம்.*

**கருமேந்திரியம்** - *கண்மேந்திரியம்.*

**கருமை** - *கறுப்பு, நஞ்சு, பெருமை, வலி.*

**கரும்பனசை** - *கருவழலைப்பாம்பு.*

**கரும்பாம்பு** - *இராகு, கருவழலை.*

**கரும்பாலை** - *ஓர் மரம், கரும்பாட்டுஞ்செக்கு.*

**கரும்பித்தம்** - *ஓர் நோய், ஓர்பித்தம்.*

**கரும்பிள்ளை** - *காக்கை.*

**கரும்பு** - *கன்னல், புநர்பூசம்.*

**கரும்புசம்** - *வண்டு.*

**கரும்புமுத்து** - *கரும்பிற்பிறந்த மஞ்சணிறமுத்து.*

**கரும்புல்** - *பனைமரம்.*

**கரும்புலி** - *ஓர் புலி.*

**கரும்புளித்தல்** - *செம்பிற்களிம் பூறுதல்.*

**கரும்புள்** - *சாகம், வண்டு, கரிக்குருவி, பெண்வண்டு.*

**கரும்புள்ளிக்கல்** - *ஓர் கல்.*

**கரும்புள்ளிதீட்டடல்** - *ஓர் கோலந் தீட்டடல்.*

**கரும்புறம்** - *பனை.*

**கரும்புறவு, கரும்புறா** - *ஓர் புறவு.*

**கரும்பூ** - *நீலோற்பலம்.*

**கரும்பூமத்தை** - *கரியவூமத்தை.*

**கரும்பேன்** - *புடைவையிற் பற்றுங் கரும்புள்ளி.*

**கரும்பொன்** - *இரும்பு.*

**கருவகம்** - *கருத்தரிக்குந்தானம்.*

**கருவங்கம்** - *காரீயம்.*

**கருவடம்** - *மலையுமாறுஞ் சூழ்ந்தவூர்.*

**கருவண்டு** - *ஓர் வண்டு.*

**கருவண்ணம்** - *கறுப்புநிறம்.*

**கருவதை** - *சிசுவதை.*

**கருவம்** - *அகங்காரம், ஓரெண், சினை.*

**கருவரி** - *இருள், கறுத்தவிழியின் ரேகை.*

**கருவவ்வால்** - *ஓர் மீன்.*

**கருவழலை** - *ஓர் பாம்பு.*

**கருவழித்தல்** - *சிசுவதை.*

**கருவளைச்சுக்கான்** - *கருஞ்சுக்கான் கல்.*

**கருவறிதல்** - *கருத்தறிதல்.*

**கருவறுத்தல்** - *நாளுக்குநாட்கவர்தல்.*

**கருவாடு** - *காய்ந்த மீன்.*

**கருவாட்டுவாவி** - *எருத்துவாலன் குருவி.*

**கருவாமுப்பு** - *ஓருப்பு.*

**கருவாலி** - *ஓர் மரம், ஓர் குருவி.*

**கருவாழை** - *ஓர் வாழை.*

**கருவாளி** - *கருத்துடையோன்.*

**கருவானம்** - *கருமானம்.*

**கருவி** - *ஆயுதப்பொது, உபகரணம், கலசம், குதிரைக்கல்லணை, கூட்டம், தொடர்பு, நட்பு, மெய் வாய் முதலிய கருவி, மேகம், யாழ், வாச்சியம், வீணை, காரணம்.*

**கருவிகரணம்** - *பொறியும் அந்தர்க் கரணமும்.*

**கருவிகழலுதல்** - *பெலன்கெடல்.*

**கருவிகாண்டம், கருவிநூல்** - *வாசிக்கப் பழகும் புத்தகம்.*

**கருவிக்காரகம்** - *கருவிப்பொருளைக் காட்டு முருபுடைப்பெயர்.*

**கருவிப்புட்டில்** - *படையுறை.*

**கருவிப்பை** - *ஆயுதவுறை.*

**கருவியாகுபெயர்** - *கருவியானாய பெயர் (உம்) நாழி.*

**கருவிலி** - *ஓர் பாம்பு.*

**கருவிழி** - *கண்மணி.*

**கருவிளங்கனி** - *மூன்று நிரையசை யாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.*

**கருவிளங்காய்** - *நிரைநிரை நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.*

**கருவிளநறுநிழல்** - *நாலுநிரையசை யாய் வருஞ்சீர்க்குவாய்பாடு.*

**கருவிளநறும்பூ** - *நிரைநிரைநிரை நேராய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.*

**கருவிளந்தண்ணிழல்** - *நிரைநிரை நேர்நிரையாய் வருஞ்சீர்க்கு வாய் பாடு.*

**கருவிளந்தண்பூ** - *நிரைநிரை நேர் நேராய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.*

**கருவிளம்** - *இரண்டுநிரையசையாய் வருஞ்சீர்க்குவாய்பாடு, ஓர்மரம், காக்கணஞ்செடி.*

**கருவிளா** - *ஓர் மரம்.*

**கருவிளை** - *காக்கணஞ்செடி.*

**கருவுயிர்த்தல்** - *ஈனல்.*

**கருவுளமைப்பு** - *சென்மத்தினியமம்.*

**கருவூமத்தை** - *ஓர் பூமத்தை.*

**கருவூர்** - *சேரனூர்.*

**கருவூலம்** - *பொக்கசம்.*

**கருவெடுத்தல்** - உடம்பெடுத்தல்.

**கருவேம்பு** - ஓர் மரம்.

**கருவேல்** - ஓர் மரம்

**கருவை** - ஓரூர், வரகுவைக்கோல்.

**கருள்** - இருள், கறுப்பு, நல்லாடை.

**கருனீகசனனி** - ஓர் சன்னி.

**கரேணு** - பெண்யானை.

**கரை** - அருகு, எல்லை, கரை யென்னேவல், முடிவு, கானல்.

**கரைகடத்தல்** - எல்லைக்குமேற்படல்.

**கரைகன்று** - அழிகன்று.

**கரைகாணல்** - எல்லைகாணுதல்.

**கரைசீலை** - இந்துப்பு.

**கரைச்சல்** - உருக்கம்.

**கரைஞ்சான்** - அகில்.

**கரைதல்** - அழுதல், அழைத்தல், அறப்பழுக்குதல், ஆரவாரம், இரங்கல், உருவழிதல், ஒலித்தல், சொல்லுதல், பதனழிதல், பேரொலி.

**கரைதுறை** - துறைமுகம்.

**கரைத்தல்** - எழுத்திலாவோசை, கரைக்குதல், சொல்லாலெழுமொலி.

**கரைபிடித்தல்** - கரையடைதல்.

**கரைபுரட்டுதல், கரைபுரளுதல்** - கரைமூடிப்பாய்தல்.

**கரைப்படுதல்** - கரையேறுதல்.

**கரைப்பாதை** - கரையோரமானவழி.

**கரைப்போக்கு** - கரையோரம்.

**கரைப்போர்** - கரையிலிருந்து பண்ணுஞ்சண்டை.

**கரையடுத்தல்** - கரைக்குக்கிட்டுதல்.

**கரையயல்** - கரைந்தது, கரைந்து போவது, கனிதல்.

**கரையார்** - ஓர் சாதி.

**கரையோட்டு** - கரைபிடித்தோடல்.

**கரைவலை** - கரைக்குக்கொண்டு வரும் வலை.

**கரைவலைக்காரர்** - கரையாரிலோர் பகுதி.

**கரைவழி** - கரைப்பாதை.

**கரைவாடை** - வடமேல்காற்று.

**கரைவு** - கரைதல்.

**கரோடி** - தலையோட்டுப் பொருத்து, முடிமாலை.

**கரோடிகை** - கழுதை, சூட்டுமாலை, முடிமாலை.

**கரோருகம்** - நகம்.

**கர்க்கடகம்** - ஓரிராசி, நண்டு.

**கர்ச்சூரம்** - கழற்கொடி, பேரீந்து.

**கர்த்தத்துவம்** - அதிகாரம், சகலத்தையுந் நடத்துகிற தத்துவம்.

**கர்த்தபம்** - கழுதை.

**கர்ப்பக்கல்** - ஓர் மருந்துக்கல்.

**கர்வடம்** - நானூறு கிராமத்திற்குத் தலைக்கிராமம், மலையும் யாறுஞ் சூழ்ந்தவூர்.

**கர்வம்** - இலக்கங்கோடி, செருக்கு.

**கலகக்குருவி** - ஓர் பட்சி.

**கலகப்பிரியன்** - சண்டைக்காரன்.

**கலகம்** - ஓர் பட்சி, குழப்பம், பேரொலி, போர்.

**கலகலத்தல்** - அறக்காய்தல், ஒலிக்குறிப்பு, மிகப்பேசுதல்.

**கலகலம்** - பறவைக்குரல், ஆபரணச்செப்பு.

**கலகலெனல்** - ஈரடுக்கொலிக்குறிப்பு.

**கலகவாயன்** - சண்டைக்காரன், வாயாலார்ப்பவன்.

**கலகவாய்க்குருவி** - ஓர் குருவி.

**கலக்கடி** - கலக்கம்.

**கலக்கம்** - அச்சம், ஆரவாரம், குழப்பம், துன்பம், தெளிவின்மை.

**கலக்கல்** - கலங்கச்செய்தல், குழப்பல்.

**கலக்கு** - கலக்கென்னேவல், கலங்கப் பண்ணுதல்.

**கலக்குதல்** - கலங்கச்செய்தல்.

**கலங்கடித்தல்** - திகைக்கடித்தல்.

**கலங்கல்** - அஞ்சல், அழுதல், கலங்கு தல், சேற்றுநீர், நீர்பாயுமதகு.

**கலங்கனீர்** - கலங்கற்றண்ணீர்.

**கலங்காவரிச்சு** - குடிலின்கால்வரிச்சு.

**கலங்குதல்** - துயரப்படுதல், தெளி வின்றாதல்.

**கலங்கொம்பு** - கலைமான் கொம்பு.

**கலசர்** - இடையர்.

**கலந்தை** - பெருமை.

**கலதம்** - சொட்டைத்தலை.

**கலபம்** - கலாபம்.

**கலப்பற்று** - மரக்கலத்தினீக் கலடைப் பது.

**கலப்பித்தல்** - கலக்கச் செய்தல்.

**கலப்பு** - கலத்தல், கலவை.

**கலப்பை** - உபகரணம், உழுபடை, கலப்பையுறுப்பு.

**கலப்பைக்கிழங்கு** - வேந்தோன்றிக் கிழங்கு.

**கலப்பைச்சக்கிரம்** - ஏர்ப்பொருத்தம் பார்க்குஞ்சக்கிரம்.

**கலப்பைப்படை** - ஓராயுதம்.

**கலமர்** – பாணர்.

**கலம்** - ஆபரணம், ஆயுதப்பொது, இரேபதி, உண்கலம், ஓரளவு, மட்கலம், மரக்கலம், யாழ்.

**கலம்பகமாலை** - பன்மணிமாலை.

**கலம்பகம்** - ஓர் பிரபந்தம். அஃது ஒரு போகுவெண்பாக்கலித்துறை முதல் கவியுறுப்பாகக்கூறிப் புய வகுப்பு மதங்கம் அம்மானை காலம் சம்பிரதம் கார் தவம் குறம் மறம் பாண் களி சித்து இரங்கல் கைக்கிளை தூது வண்டு தழை ஊசல் என்னுமிப் பதினெட்டுறுப்புகளுமியைய மடக்கு மருட் பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப் பா ஆசிரிய விருத்தம் கலிவிருத் தம் கலித்தாழிசை வஞ்சிவிருத்தம் வஞ்சித்துறை வெண்டுறையென்னு மிவற்றால் இடையே வெண்பா வுங் கலித்துறையும் விரவிவர அந்தாதித் தொடையான் முற்றுறக் கூறுவது, கலப்பு, சண்டை, நறுஞ் சாந்து.

**கலம்பம்** - ஓர் பாஷாணம்.

**கலயம்** - கலசம்.

**கலர்** - கீழ்மக்கள்.

**கலவகம்** - காக்கை.

**கலவடை** - திரிமணை.

**கலவரம்** - கலக்கம்.

**கலவரித்தல்** - கலங்குதல்.

**கலவர்** - படைவீரர், மரக்கல மோட் டிகள்.

**கலவல்** - எழுத்திலாவோசை, கலத்தல்.

**கலவன்** - கலந்தது.

**கலவாங்கட்டி** - உடைந்தவோடு.

**கலவாசு** - ஓர் வகைவெடி.

**கலவாய்** - ஓர் மீன், ஓர் வெடி.

**கலவி** - புணர்ச்சி.

**கலவியிற்களித்தல்** - அகப்பொருட்டு றையினொன்று.

**கலவுதல்** - கலத்தல்.

**கலவை** - கலப்பு, சுண்ணச்சாந்து, சேறு, நால்வகைச்சாந்தி னொன்று.

**கலவைச்சேறு** - சாந்து, பரிமளச் சேறு.

**கலவோடு** - மண்பாண்டச்சல்லி.

**கலனம்** - பெரும்பாடு.

**கலனை** - கலப்பை, கலப்பை யுறுப்பு.

**கலன்** - ஆபரணம், ஓமவுபகரணம், ஓரளவு, பாத்திரம், மரக்கலம், யாழ்.

**கலன்கழிமடந்தை** - கைம்பெண்.

**கலாங்கழி, கலாங்கனி** - *துத்த பாஷாணம்.*

**கலாசி, கலாசிகை** - *முன்கை.*

**கலாசு** - *மரக்கலம்.*

**கலாசுகாரர்** - *மரக்கலமொட்டுவோர்.*

**கலாதன்** - *தட்டான்.*

**கலாதி** - *கலம்பகம்.*

**கலாநிதி** - *சந்திரன்.*

**கலாபகம்** - *யானைக்கழுத்திற்கயிறு.*

**கலாபம்** - *அரைப்பட்டிகை, கலம்பகம், சரமணிக்கோவை, பதினாறு கோவையுள்ளமணி, பீலிக்குடை, மயிலினாண், மயிற்றோகை, அம்புக்கூடு, கலாபனை, சந்திரன்.*

**கலாபனை** - *கலாபம்.*

**கலாபி** - *ஆண்மயில், மயிலிறகு.*

**கலாபித்தல்** - *கலகம்பண்ணுதல்.*

**கலாபினை** - *கலம்பகம்.*

**கலாபூரணன்** - *சந்திரன்.*

**கலாப்பித்தல்** - *கலத்தல்.*

**கலாமயம்** - *பாவித்தல்.*

**கலாமிருது** - *கம்மாளன், சந்திரன்.*

**கலாம்** - *ஊடல், கொடுமை, கோபம் சினம்.*

**கலாம்பூரம்** - *ஓர் மருந்து.*

**கலாவதி** - *சந்திரன்.*

**கலாவல்லபன்** - *கலையறிவில் மேம்பட்டவன.*

**கலாவல், கலாவுதல்** - *கலத்தல்.*

**கலானம்** - *களக்கூட்டம்.*

**கலி** - *ஒலி, ஓர் பா, கடல், கடையுகம், கலியென்னேவல், கேடு, சிறுமை, போர், வஞ்சகம், வலி, வறுமை, அம்பு, சனி, யுத்தம்.*

**கலிகம்** - *கற்பரிபாஷாணம்.*

**கலிகாலம்** - *கலியுகம்.*

**கலிகை** - *இளம்பூவரும்பு, நாகமல்லி.*

**கலிக்கம்** - *கண் மருந்து.*

**கலிங்கம்** - *ஊர்க்குருவி, கண்மருந்து, குதிரை, சீலை, தேயமன்பத் தாறினொன்று பதினெண் பாடையிலொன்று, மிளகு, வானம்பாடி, வெட்பாலை.*

**கலிங்கு** - *மதகு.*

**கலிசம்** - *வன்னிமரம்.*

**கலிச்சி** - *இரட்டைப்பிள்ளையிற் பெண்.*

**கலிதம்** - *சங்கலிதம், பொருத்தம், பெரும்பாடு.*

**கலிதி** - *திப்பிலி.*

**கலித்தம்** - *ஆரவாரம், எழுச்சி, ஒலித்தல், கக்குதல், தழைத்தல், பொசிகுதல், பொலிவு, வெடித்தல்.*

**கலித்தளை** - *செய்யுட்டளையினொன்று, அஃது வெண்பாவுரிச் சீர்கள் தம்முளொன்றாது வரப் பெறுவது.*

**கலித்தாழிசை** - *ஓர் கவி. அஃது இரண்டு முதலிய பலவடிகளானீற்றடி மிக்கு ஏனையடிதம் முளொத்து நிற்பத்தனித்தேனும் ஒரு பொருண் மேன் மூன்றடுக்கியேனும் வருவது.*

**கலித்துருமம்** - *தான்றிமரம்.*

**கலித்துறை** - *ஓர் கவி. அஃது நெடிலடி நான்கு கொண்டு முடிவது.*

**கலித்தொகை** - *ஓர் பிரபந்தம்.*

**கலிபணம்** - *ஓர் பணம்.*

**கலிபிலி** - *கலிப்பிலி.*

**கலிப்பா** - *ஐந்துபாவினொன்று. அஃது வெண்சீர்மிகப் பெற்று மாச்சீரும் விளங்கனிச்சீரும் பெறாது பிற்சீர்களுஞ் சிறு பான்மை கலந்து கலித்தளையும் இயற்றளையுந் தழுவி தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும் ஆறுறுப்பினுள் ஏற்பனகொண்டு நாற்சீரடியான் முடிவது.*

**கலிப்பிலி** - *எதிரிடை, கலாதி.*

**கலிப்பு** - *உயரம், ஒலி, கக்குதல், மிகுதி, வெடிப்பு.*

**கலிமா** - *மகமது மதத்தாருடைய விண்ணப்பம்.*

**கலியத்தம்** - *கலியுகத்திற் சென்ற வருடம்.*

**கலியர்** - *படைவீரர், மிடியர்.*

**கலியன்** - *இரட்டைப் பிள்ளையிலாண், கடையுகத்தலைவன்.*

**கலியாணக்கால்** - *வாசலுக்கடுக்க நிறுத்துங்கப்பு.*

**கலியாணக்கிரதம்** - *ஓரமிழ்.*

**கலியாணக்கோலம்** - *மணக்கோலம்.*

**கலியாணப் பொருத்தம்** - *மணவாளனுக்கும் மணவாளிக்கும் உள்ள பொருத்தம்.*

**கலியாணமண்டபம்** - *மணமண்டபம்.*

**கலியாணம்** - *சந்தோஷம், சொந்த விவாகம்.*

**கலியாணம் முடித்தல்** - *விவாகம் பண்ணல்.*

**கலியாணி** - *ஓரிராகம், உமை.*

**கலியுகம்** - *கடையுகம்.*

**கலிவிராய்** - *ஓர்நெல்.*

**கலிவிருத்தம்** - *ஓர்கலி. அஃது அளபடி நான்கினைக் கொண்டது.*

**கலிவெண்பா** - *ஓர்கவி. அஃது வெண்டளை தழுவியீற்றடி முச்சீரான் முடிவது.*

**கலினம்** - *கடிவாளம்.*

**கலினி** - *கைமை, திப்பிலி, இடாகினி.*

**கலினை** - *கைமை, மிளகு.*

**கலின்கலினெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**கலீரிடுதல், கலீரெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கலுகுலுத்தல்** - *பலசிற்றொலியிலுண் டானதொனி.*

**கலுகுலுப்பு** - *ஒலிக்குறிப்பு.*

**கலுக்குப்பிலுக்கு** - *அணிகளாலெழுமொலி, ஆடம்பரம்.*

**கலுடம்** - *கலங்கனீர், பாவம்.*

**கலுமொலுத்தல், கலுமொலெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கலுவடம்** - *பூவரும்பு.*

**கலுவம்** - *கலவம்.*

**கலுழம்** - *கலங்கனீர்.*

**கலுழன்** - *கருடன்.*

**கலுமி** - *கலங்கனீர், முல்லை நிலக் கான்யாறு.*

**கலுழிதம்** - *கலங்கியிருத்தல்.*

**கலுழ்தல்** - *அழுதல், கலங்கல், சிந்தல்.*

**கலை** - *அரைப்பட்டிகை, ஆண்மான், ஆண்முசு, கலையென்னேவல், கல்வி, காஞ்சிமரம், காலநுட்பம், சந்திரன் பங்கு, சீலை, சுவாசத்தின் பகுதி, சுறா மீன், நூல், மகரமீன், மகரராசி, மரக்கொம்பு, மேகலை, வண்ணங் களினோரடி, வயிரம், வித்தியாதத் துவமேழினொன்று, விலங்கேற்றின் பொது.*

**கலைகுறைதல்** - *சத்துக்குறைதல்.*

**கலைக்கியானம்** - *கலையறிவு, கல்வி நூல்.*

**கலைக்கோட்டுமாமுனி** - *ஓரிருடி.*

**கலைஞர்** - *புலவர்.*

**கலைஞானம்** - *கலைக்கியானம்.*

**கலைதல்** - *குலைதல்.*

**கலைத்தல்** - *ஓட்டுதல், குலைத்தல்.*

**கலைநாதன்** - *அருகன்.*

**கலைநாயகன்** - *புத்தன்.*

**கலைப்பு** - *கலைத்தல்.*

**கலைமலைவு** - *கல்விமயக்கம்.*

**கலைமகள், கலைமடந்தை** - *சரச்சுவதி.*

**கலைமான்** - *ஆண்மான், சரச்சுவதி.*

**கலையம்** - *கலயம்.*

**கலையானத்தி** - *துர்க்கை.*

**கலையினன்** - *சந்திரன்.*

**கலையுணர்புலவன்** - *குமரன்.*

**கலையூர்தி** - *சரச்சுவதி, துர்க்கை.*

**கலையேறுதல்** - *அதிகப்படுதல், உரு வேறுதல்.*

**கலையேற்றுதல்** - *உருவேற்றுதல்.*

**கலைவல்லோர்** - *அறிஞர், புலவர்.*

**கலைவு** - *குழப்பம், பிரிவு.*

**கல்** - *இரத்தினம், ஒலிக்குறிப்பு, கல்லு, கல்லென்னேவல், காவிக் கல், மலை, விடந்தீர்க்கும் மணி.*

**கல்லகம்** - *மலை.*

**கல்லகாரம்** - *செங்குவளை, நீர்க்குளிரி.*

**கல்லக்காரம்** - *ஓர் விதபனங்கட்டி.*

**கல்லடிமூலம்** - *ஓர் பாஷாணம்.*

**கல்லடைசல்** - *ஓர் நோய், கல்லுறுத்து தல்.*

**கல்லடைப்பு** - *ஓர் நோய்.*

**கல்லரவிந்தம்** - *கற்றாமரை.*

**கல்லணை** - *குதிரைமேற்றவிசு.*

**கல்லத்தி** - *ஓரத்தி.*

**கல்லல்** - *தோண்டல், பேசலாலெழு மொலி.*

**கல்லழிஞ்சில்** - *ஓர் மரம்.*

**கல்லழை** - *மலைமுழைஞ்சு.*

**கல்லறுத்தல்** - *கல்லரிதல்.*

**கல்லறை** - *குகை, பிரேதக்குழி.*

**கல்லாங்காசு** - *கலவோடு.*

**கல்லாசாரி** - *கற்சிற்பன்.*

**கல்லாடம்** - *ஓர்நூல்.*

**கல்லாடர்** - *ஓர்புலவர்.*

**கல்லாந்தலை** - *ஓர்மீன்.*

**கல்லாரம்** - *செங்குவளை, நீர்க்குளிரி.*

**கல்லார்** - *கீழ்மக்கள், மூடர்.*

**கல்லாலம்** - *இத்திமரம்.*

**கல்லால்** - *கயிலாயமலையினிற்குங் கல்லுருவமான ஆல்.*

**கல்லான்** - *பாரை.*

**கல்லி** - *ஆமை, ஊர்க்குருவி.*

**கல்லிச்சி, கல்லித்தி** - *ஓர் மரம்.*

**கல்லியம்** - *கள், சாராயம், கட்கடை, கால்.*

**கல்லிழைத்தல்** - *இரத்தினம்பதித்தல்.*

**கல்லின்காரம்** - *கல்நார்.*

**கல்லீயம்** - *ஓர் வகை ஈயம்.*

**கல்லீரல்** - *ஓரீரல்.*

**கல்லு** - *கல், மலை.*

**கல்லுக்கலைக்காத்தான்** - *பொன் னாங்காணி.*

**கல்லுண்டை** - *ஓர் நெல்.*

**கல்லுதல்** - *கிண்டல்.*

**கல்லுநிலம்** - *கல்லுத்தரை.*

**கல்லுப்பு** - *ஓருப்பு.*

**கல்லுரல்** - *கல்லினாலானவுரல்.*

**கல்லுருணி** - *குருவிச்சி.*

**கல்லுருவி** - *ஓர் பூடு.*

**கல்லுவைத்தல்** - *காரியஞ்செல்லாமற் பண்ணுதல், தோணி தரிக்கப் பண் ணுதல், மரணச்சடங்கி னொன்று, வயிராக்கியம் வைத்தல்.*

**கல்லுளி** - *ஓர் வகையுருக்கு கல்லுப் பொழிகிறவுளி.*

**கல்லுளுவை** - *ஓர்மீன்.*

**கல்லூசி** - *ஓர் மருந்து.*

**கல்லூரி** - *கல்விபயிலிடம்.*

**கல்லூருணி** - *ஓரூர், பாறைக்கிணறு.*

**கல்லெடுப்பு** - *மரணச்சடங்கிற்றா பித்த கல்லை யெடுத்தல்.*

**கல்லெரிப்பு** - *நீரருகல்.*

**கல்லெறி** - *எறிபடத்தக்கதூரம், கல்லுவிட்டெறிதல், கவண்.*

**கல்லெனல்** - *அனுகரணவோசை.*

**கல்லை** - *இலைக்கலம், பாதகுறட்டின் குமிழ், பிணக்கு.*

**கல்லைநீராக்கி** - *மாமிசபேதி.*

**கல்லொட்டி** - *நத்தை.*

**கல்லோலம்** - *புனற்றிரை.*

**கலவம்** - *குழியம்மி.*

**கல்வரிக்கை** - *ஓர்பலா.*

**கல்வளை** - *மலைப்பிளப்பு, மலைமுழை.*

**கல்வி** - *அறிவு, கற்றல், புண்ணியத்தோற்றந்நான்கினொன்று, வித்தை.*

**கல்விக்களஞ்சியம்** - *கல்விக்கிருப்பிடமானவன்.*

**கல்வித்துறை** - *கல்வி நூல்.*

**கல்வி நூல்** - *கலை.*

**கல்விபயிலிடம்** - *பள்ளிக்கூடம்.*

**கல்விப்பரிட்சை** - *கலைநூற் பயிற்சி.*

**கல்விப்பொருள்** - *கல்விச்செல்வம்.*

**கல்விமதம்** - *கல்விச்செருக்கு.*

**கல்லிமான்** - *அறிஞன்.*

**கல்வியறிவு** - *கற்றறிவு.*

**கல்வியூரி** - *கழகம்.*

**கல்விவான்** - *அறிஞன்.*

**கல்வீடு** - *கல்வினாற்கட்டுமனை.*

**கல்வீரியம்** - *அன்னபேதி.*

**கல்வெட்டு** - *ஓர் பிரபந்தம்.*

**கல்வெள்ளி** - *முரண்வெள்ளி.*

**கல்வேகம்** - *அன்னபேதி.*

**கல்வேதி** - *ஓர் மருந்து.*

**கலக்குன்று** - *மந்தரமலை.*

**கவசகுண்டலன்** - *கன்னன்.*

**கவசம்** - *இரும்பு முதலியவற்றிய கவசம், காவற்பண்ணுமந்திரம், சட்டை.*

**கவசனை** - *கவசம்.*

**கவடம்** - *தந்திரம்.*

**கவடி** - *சோகி.*

**கவடிப்பாய்தல்** - *பாய்தல், ஓர்விளையாட்டு.*

**கவடு** - *கப்பு, கவர், கழுத்திடுகயிறு, மரக்கொம்பு, யானைகட்டுங்கயிறு.*

**கவட்டல்** - *கவட்டுதல்.*

**கவட்டுக்கால்** - *கடப்புக்கால்.*

**கவட்டுதல்** - *சப்புதல், வளைத்தல்.*

**கவட்டுநெஞ்சன்** - *வஞ்சகன்.*

**கவட்டை** - *கவர்.*

**கவணங்கட்டுதல்** - *காயங்கட்டுதல்.*

**கவணம்** - *ஓர் மருந்து.*

**கவணி** - *ஓர் புடைவை.*

**கவணை** - *கவண்.*

**கவண்** - *கல்லெறிகயிறு.*

**கவண்டர்** - *ஓர் சாதி, சண்டாளர்.*

**கவண்டி, கவண்டு** - *கவண்.*

**காதம்** - *உடற்குறை, நீர்.*

**கவந்தன்** - *ஓரிராக்கதன்.*

**கவர்** - *கோனை, மத்து.*

**கவயமா, கவயம், கவயல்** - *காட்டான்.*

**கவரம்** - *சாமரம், சினம்.*

**கவராசம்** - *தமரூசி, வட்டமிடுங்கருவி.*

**கவரி** - *இராசசின்னத்தொன்று, எருமை, கவரிமா, சாமரை, தேர்.*

**கவரிமா, கவரிமான்** - *ஓர்மிருகம்.*

**கவரிறுக்கி** - *கடவுமரம்.*

**கவரெழுசங்கம்** - *முட்சங்கம்.*

**கவர்** - *கவரென்னேவல், மரக்கப்பு, வாழை.*

**கவர்ச்சி** - *கவருதல்.*

**கவர்தல்** - *ஆசைப்பெருக்கம், கடைதல், கொள்ளையிடல், திருடல், வாருதல்.*

**கவர்த்தடி** - *முள்ளிடுக்குந்தடி.*

**கவர்த்தல்** - *கப்புவைத்தல், கவர்விடல்.*

**கவர்படுதல்** - *இரண்டுபடல்.*

**கவர்படுபொருள்** - *செய்யுள்வழுவினொன்று, அஃது ஒருகுறிப்பான் விளங்க வேண்டும் பொருடெரிவுறவுணர்த்த வந்த சொல் பல பொருட்ருவதாயதனை ஐயுறுத்தி*

*நிற்பது. (உம்) யாவருமூடாடார் அரிமருவு சோலையகம்.*

**கவர்படுமொழி** - *பலகருத்துக் கொள்ளுஞ் சொல்.*

**கவர்ப்பு** - *கப்புவைத்தல்.*

**கவர்வழி** - *பலகவராய்ப்போம் பாதை.*

**கவர்விடுதல்** - *ஒன்றிலிருந்து பல தோன்றல், கப்புவைத்தல்.*

**கவர்வு** - *கதுவுதல், கவர்விடுதல், கைப்பற்று.*

**கவலல்** - *கவலைப்படுதல், பேசலாலெழுமொலி, வருந்தல், விரும்பல்.*

**கவலி** - *கவலை.*

**கவலித்தல்** - *கவலைப்படல், வருந்தல்.*

**கவலை** - *அச்சம், ஓர் கொடி, கவர்வழி, கிலேசம், சந்தி, செந்தினை, நோய், ஓர்மீன்.*

**கவல்** - *துக்கம், வருத்தம்.*

**கலவு** - *அகத்திடுதல், கவர், மரக்கொம்பு.*

**கவழிகை** - *திரைச்சீலை.*

**கவனம்** - *சோறு, திரளை, வாயளவு கொண்டவுணவு, வெற்றிலைக் கட்டு.*

**கவளி, கவளிகை** - *வெற்றிலைக் கட்டு.*

**கவளீகரித்தல்** - *கவளமாயுண்ணல், முற்றும்மூடுதல், விழுங்கல்.*

**கவறல்** - *துக்கித்தல், வருந்தல்.*

**கவறு** - *தாயக்கட்டை, பனங்கவறு.*

**கவறுருட்டுதல், கவறெறிதல்** - *தாயம் போடுதல்.*

**கவறை** - *ஓர் சாதி.*

**கவற்சி** - *வருத்தம், விருப்பம்.*

**கவனம்** - *கடுப்பு, கருத்து, கலக்கம், காடு, குதிரைநடை, சீக்கிரம், படை, மிகுகவலை.*

**கவனம்** - *வேகமுள்ளோன்.*

**கவனித்தல்** - *கருத்துவைத்தல்.*

**கவனிப்பு** - *கருத்து.*

**கவாடக்கட்டி** - *வசம்பு.*

**கவாடக்காரன்** - *புல்லுவெட்டுவோன்.*

**கவாடம்** - *கபாடம், புல்லுச்சுமை.*

**கவாய்** - *ஒருடை, கந்தை.*

**கவானம்** - *புண்ணாற்றும் மருந்தினொன்று.*

**கவான்** - *தொடை.*

**கவி** - *ஆசு-மதுர-சித்திர-வித்தாரமெனுந் நாற்கவிகளைப் பாடுவோன், கவியென்னேவல், குரங்கு, சுக்கிரன், பாடுவோன், பாடல்.*

**கவிகருத்து** - *பாடுவோன்குறிப்பு.*

**கவிகற்றோர்** - *மங்கலப்பாடகர்.*

**கவிகாளமேகம்** - *ஓர் புலவன்.*

**கவிகுருந்தம்** - *கந்தகபாஷாணம்.*

**கவிகை** - *ஈதல், கவிதல், குடை.*

**கவிசை** - *ஓர் நோய்.*

**கவிசொல்லுதல்** - *புலமைபாடுதல்.*

**கவிச்சக்கிரவர்த்தி** - *கம்பன்.*

**கவிச்சி** - *துற்கந்தம்.*

**கவிச்சு** - *நிணநாற்றம்.*

**கவிஞர்** - *கலைவல்லோர், புலவர்.*

**கவிதல்** - *வளைதல், விருப்பமாயிருத்தல்.*

**கவிதை** - *பா.*

**கவித்தம்** - *கரமுட்டிசெய்தல், விளாமரம்.*

**கவித்தல்** - *கவியப்பண்ணுதல், மூடுதல்.*

**கவித்துவம்** - *கலிபாடும்வல்லபம்.*

**கவிநாயகன்** - *பாட்டுடைத்தலைவன்.*

**கவிப்பர்** - *செட்டிகள்.*

**கவிப்பு** - *ஆரூடத்துக்குச்சூரியனிற்குந்நிலை, உட்டுளை, குடை, மூடுதல்.*

**கவியம்** - *கடிவாளம்.*

**கவிரம்** - *அலரிச்செடி.*

**கவீரம்** - *அலரி.*

**கவீராயன்** - *புலவன்.*

**கவீர்** - *முண்முருக்கு.*

**கவிவல்லோர், கவிவாணர்** - *புலவர்.*

**கவிவு** - *உள்வளைவு, குலிவு.*

**கவிழ்ச்சி** - *குவிவு, குனிவு.*

**கவிழ்தல்** - *அகம் புறமாதல், இறத்தல், குனிதல்*

**கவிழ்தும்பை** - *ஓர் தும்பை.*

**கவிழ்த்தல்** - *அகம்புறமாக்கல், கவிழப் பண்ணல், மூடுதல்.*

**கவிணல்** - *அழகாயிருத்தல்.*

**கவின்** - *அழகு.*

**கவீச்சுரர்** - *கவிவாணர்.*

**கவீனம்** - *பசுமேய்ந்த இடம், வெண் ணெய்.*

**கவுசி** - *குழைவு, வருத்தம்.*

**கவுசிகம்** - *கௌசிகம்.*

**கவுசிகன்** - *விசுமாமித்திரன், இந்திரன்.*

**கவுஷணம்** - *கௌபீனம்.*

**கவுஞ்சம்** - *அன்றில்.*

**கவுடி** - *ஓர் பண்.*

**கவுதம்** - *சிச்சிலிக்குருவி.*

**கவுதாரி** - *ஓர் பட்சி.*

**கவுதாரிப்புடம்** - *மூன்று எருப்புடம்.*

**கவுத்துகம்** - *பதுமராகம், வஞ்சகம்.*

**கவுத்துகவாதம்** - *கலைஞானமறு பத்தினான்கினொன்று.*

**கவுமாரம்** - *இளமை.*

**கவுமாரி** - *பார்பதி.*

**கவுரகாசு** - *அக்குமணி.*

**கவுரவர்** - *குருகுலத்தவர்.*

**கவுலவம்** - *பன்றிக்கரணம்.*

**கவுல்** - *உடன்படிக்கை, துர்க்கந்தம்.*

**கவுளி** - *ஓர் விததெங்கு, பல்லி.*

**கவுள்** - *கதுப்பு, யானைக்கதுப்பு, யானைமதம்பாயிடம்.*

**கவுனி** - *குதிரைப்பற்பாஷாணம்.*

**கவை** - *ஆயிலியம், எள்ளிளங்காய், கவர், கவர்வழி, காடு, கோட்டை, மரக்கப்பு, தேவை.*

**கவைதல்** - *மூடல்.*

**கவைத்தடி** - *கவர்த்தடி.*

**கவைத்தாள்** - *நண்டு.*

**கவைநா — பாம்பு.**

**கவையடி** - *கவர்க்குரை.*

**கவையம்** - *கவயம்.*

**கவ்வல்** - *கவ்வுதல்.*

**கவ்வாணம்** - *ஓர் பண்.*

**கவ்வியம்** - *கௌவியம்.*

**கவ்வு** - *கவ்வென்னேவல், பெருமை.*

**கவ்வுதல்** - *கடித்துப்பிடித்தல், கவர் தல், வாயினாற்கொள்ளல்.*

**கவ்வை** - *எள்ளிளங்காய், ஒலி, கள், காரியம், துன்பம், பழிமொழி, வேலை.*

**கழகம்** - *கல்வி முதலியபயிலிடம்.*

**கழகு** - *ஆயுதம் பயிலிடம்.*

**கழங்கம்** - *சூதாடுகருவி.*

**கழங்கு** - *ஓராடல், கழற்சிக்கொடி, வெறியாட்டாளனாடல், அபி டேகம்.*

**கழஞ்சு** - *பன்னிரண்டு பண்விடை கொண்டநிறை.*

**கழப்பன், கழப்பாடி, கழப்புணி** - *வேலைக் கள்ளன்.*

**கழப்பு** - *கள்ளத்தனம்.*

**கழப்புதல்** - *சோம்பாயிருத்தல்.*

**கழலல்** - *நெகிழ்தல், விலகல்.*

**கழலி** - *பிரண்டை.*

**கழலிச்சிட்டு** - *ஓர்சிட்டு.*

**கழலை** - *கழலைக்கட்டி.*

**கழல்** - *ஆடவர்கொடையாலும் வீரத் தாலுமணியும் பூண், கழலென் னேவல், கழல்மரம், கழற்கொடி, கால், செருப்பு, பொன்வண்டு.*

**கழல்வு** - *கழலுதல்.*

**கழறல்** - *உறுதிச்சொல், கழலுதல், சொல்லல், நெருங்கல்.*

**கழற்சி** - *ஓர் செடி, கழலுதல்.*

**கழற்பதி** - *பெருங்குமிழ்.*

**கழற்றல்** - *கழலப்பண்ணல், விலக்கல்.*

**கழற்றி** - *கழலுதல்.*

**கழற்றுதல்** - *கழலப்பண்ணல், நீக்கிக் கொள்ளல்.*

**கழற்றுரை** - *கடிந்துபேசுஞ்சொல்.*

**கழனி** - *சேறுதிரைச்சீலை, மருத நிலம், வயல்.*

**கழனியடுத்தவர்** - *வேளாளர்.*

**கழாநிலம்** - *கழிநிலம்.*

**கழாயர், கழாய்க்கூத்தர்** - *கம்பங் கூத்தர்.*

**கழாலை** - *உவர்நிலம், கழிநிலம்.*

**கழி** - *உப்பளம், கம்பு, கயிறு, கழி யென்னேவல், கோல், செம்மெழுகு, நூற்கழி, மிகுதி, யாழி னரம்பு.*

**கழிகடை** - *அறக்கெட்டது.*

**கழிகோல்** - *மிருகங்களைப் பிடிக்குங் கோல்.*

**கழிக்கரை** - *கழிமுகம்.*

**கழிக்காரை** - *ஓர் செடி.*

**கழிசிறை** - *உறுப்புக்கேடி, நாடோடி.*

**கழிச்சல்** - *பெருக்கம், வயிறுபேதி யாதல்.*

**கழிஞ்சு** - *ஓர்நிறை.*

**கழிதல்** - *கடத்தல், சாதல், தீர்தல், நடத்தல், பிரிதல், போதல், மிகுதல், வயிறுபேதித்தல்.*

**கழித்தல்** - *தீர்த்தல், நீக்குதல், போக் குதல்.*

**கழிநிலம்** - *உப்பளம், உவாநிலம்.*

**கழிநெடிலடி** - *செய்யுட்டளையி னொன்று, அஃது ஐஞ்சீரின் மிக்க சீர்களடுத்து நிற்பது.*

**கழிநெடில்** - *ஓர் கவி.*

**கழிபிறப்பு** - *முற்பிறப்பு.*

**கழிப்பு** - *கணக்குவகை நான்கி னொன்று, கழித்தல், குற்றம், தோஷந்தீர்க்கு மோர் சடங்கு.*

**கழிமுகம்** - *ஆற்று நீர்க்கழிவு.*

**கழிமுட்டாள்** - *ஓர் புல்.*

**கழிமை** - *தள்ளுதல்.*

**கழியர்** - *உப்பளவர், நெய்தனில மாக்கள்.*

**கழியல்** - *கழிக்கப்பட்டது, பிரிதல்.*

**கழியிருக்கை** - *நதிசூழ்ந்தவிடம்.*

**கழியுடல்** - *தசைகழிந்தஉடல்.*

**கழியூணன்** - *பெருந்தீனன்.*

**கழிவாய்நஞ்சன்** - *ஓர் பாம்பு.*

**கழிவு** - *உள்ளதுசிறத்தல், கழிதல், தள்ளுபடியானது, பூரணம், மிகுதி.*

**கழிவுகணக்கு** - *ஓர் கணக்கு.*

**கழு** - *கழுமரம், கழுவென்னேவல், சூலம், புற்கற்றை.*

**கழுகண்டு** - *வணங்காத்தலையன்.*

**கழுகு** - *ஓர் பறவை.*

**கழுகுழுத்தல்** - *நொதுநொதுத்தல்.*

**கழுக்கடை** - *ஈட்டி, சூலம்.*

**கழுக்களம்** - *கொலைக்களம்.*

**கழுக்காணி** - *தழுக்குணி, வயிரக் கட்டை, சோம்பேறி.*

**கழுக்குன்றம்** - *ஓர் மலை.*

**கழுது** - *காவல், பரண், பிசாசம், வண்டு.*

**கழுதை** - *வடமேற்றிசைப் பாலன் குறி, வாலேபம்.*

**கழுதைகடி** - *ஒருமூலைகுறைந்தவீடு.*

**கழுதைக்கரணம்** - *பதினோர் கரணத் தொன்று.*

**கழுதைக்குடத்தி** - *கழுதைப்புலி.*

**கழுதைத்தும்பை** - *ஓர் தும்பை.*

**கழுதைமுள்ளி** - *ஓர் செடி.*

**கழுதைவண்டு** - *ஓர் வண்டு.*

**கழுதைவாகினி** - *மூதேவி.*

**கழுதைவிரியன்** - *ஓர் பாம்பு.*

**கழுத்தடி** - *தோண்மேல்.*

**கழுத்தல்** - *பொய்.*

**கழுத்து** - *கண்டம்.*

**கழுத்துக்குட்டை** - *கழுத்திற் கட்டுகிற சீலை.*

**கழுத்துக்கொடுத்தல்** - *ஒருவரிக் கட்டில்முன்னிற்றல்.*

**கழுத்துப்பட்டை** - *அங்கியினோ ருறுப்பு.*

**கழுத்துமுறித்தல்** - *ஒருவரைக் கெடுத் தியாதொன்றடைதல், ஒன்றைச் செய்யவேண்டுமென்று தொந்த றைபண்ணல்.*

**கழுநீர்** - *அரிசிகிளைந்தநீர், ஆம்பல்.*

**கழுந்து** - *குடம்முதலியவற்றின் கழுத்து, பொருத்து, தேய்ந்து மழுங்கித்திரண்ட வடிவம்.*

**கழுப்பத்தை** - *புற்றக்கை.*

**கழுமரம்** - *கழு.*

**கழுமல்** - *நிறைதல், பற்றுதல், மயக்கம், மிகுதி.*

**கழுமுதல்** - *இணைத்தல், கலக்குதல், நிறைந்திருத்தல், மயங்குதல்.*

**கழுமுள்** - *ஆயுதப்பொது, ஈட்டி, கழுமரம், சூலம், மாதளை.*

**கழுவல்** - *கழுவுதல்.*

**கழுவன்** - *பொய்யில்நிலைப்பவன்.*

**கழுவாய்நிலம்** - *புற்றரை.*

**கழுவுதல்** - *சுத்திபண்ணல்.*

**கழுவெண்ணெய்யுருக்கி** - *கடியவள், கழுவிலேற்றிய பிணத்தில் நெய் யுருக்குவாள், பிடித்த பிடிவிடாது சோலி பண்ணுகிறவன்.*

**கழுவெளி** - *புற்றரை.*

**கழுவேறி** - *தழுக்குணி.*

**கழுவேற்றுதல்** - *கழுவில்வைத்தல்.*

**கழை** - *கரும்பு, புநர்பூசம், மூங்கில்.*

**கழைக்கூத்தர்** - *கம்பங்கூத்தர்.*

**கழைக்கூத்து** - *கம்பங்கூத்து.*

**கழைமுத்தம்** - *மூங்கிலிற்பிறந்தபுகை நிறமுத்து.*

**கள** - *களாச்செடி.*

**களகண்டமாலை** - *ஓர் வகைச்சிலந்தி.*

**களகண்டம்** - *குயில்.*

**களகம்** - *பெருச்சாளி.*

**களகம்பளம்** - *ஆட்டின்கழுத்தாரம்.*

**களகளத்தல்** - *ஈரடுக்காயொலித்தல்.*

**களகளப்பு** - *ஈரடுக்கொலிக்குறிப்பு.*

**களகளம்** - *பேரொலி.*

**களகளெனல், களகுளெனல், களகொ ளெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**களக்கடை** - *களவாய்.*

**களக்கட்டை** - *நெற்களத்தினடுங் கட்டை.*

**களக்கர்** - *புலையர், வேடர்.*

**களக்குக்கொளன்கெனல்** - *ஒலிக் குறிப்பு.*

**களங்கசத்துரு** - *ஈயமணல்.*

**களங்கட்டி** - *ஓர் மீன்.*

**களங்கம்** - *அடையாளம், கறுப்பு, குற்றம், சீதரங்கபாஷாணம், நீலம், மாசு.*

**களங்கன்** - *சந்திரன், மாசுள்ளோன்.*

**களங்கு** - *இரசகுளிகை, அடை யாளம்.*

**களங்கொள்ளல்** - *போர்க்களத்திற் கலத்தல்.*

**களஞ்சி** - *சூதபாஷாணம்.*

**களஞ்சியம்** - *பண்டகசாலை.*

**களதபுதம்** - *வெள்ளி, கண்ணாடி.*

**களதம்** - *பெருச்சாளி.*

**களத்திரம்** - *குடும்பம், சென்மத்துக் கேழாமிடம், மனைவி.*

**களத்தூர்** - *ஓரூர்.*

**களந்தூரி** - *தான்றிக்காய்.*

**களந்தை** - *ஓரூர்.*

**களபகத்திணை** - *அகப்பொருட்டு றையினொன்று.*

**களபகத்துரி** - *ஓர் வாசனைப் பண்டம்.*

**களபம்** - *கலப்பு, கலவைச்சாந்து, சுட்டசாந்து, யானை, யானைக் கன்று, கண்ணாடி.*

**களப்பலி** - *யுத்தவீரர்செலுத்தும்பலி.*

**களப்பன்றி** - *பெருங்குமிழ்.*

**களப்பன்னை** - *ஓர் பன்னை.*

**களப்பாட்டு** - *போரடிக்கும் போது சொல்லுகிறபாட்டு.*

**களப்பாய்** - *கதிர்ப்பாய்.*

**களப்பிச்சை** - *விளைகளத்திற் கொடுக்கும்பிச்சை.*

**களப்பு** - *கடலினிடைப் பரவைத் திடர், கள்ளம்.*

**களப்புதல்** - *வேலைக்கள்ளம் பண் ணுதல்.*

**களப்பேச்சு** - *சூடுமிதிகளத்திற்பயில்.*

**களப்பேறு** - *குடிமக்கள்படி.*

**களமர்** - *உழுநர், சூத்திரர், பூவை சியர், மருதநிலமாக்கள்.*

**களமளத்தல்** - *ஒலிக்குறிப்பு.*

**களம்** - *இடம், இருள், ஓரூர், கடலுண்மிதப்புத்தரை, கழுத்து, களா, களாநிலம், கறுப்பு, நெற் களம், போர்க்களம், மனைவி, மிடறு, விடம்.*

**களம்பாடுதல்** - *போர்க்களத்தை வன்னித்தல்.*

**களரவம்** - *காட்டுப்புறா, புறா.*

**களரி** - *அரங்கம், ஆயுதஞ்சூது கூத்துப்பயிலிடம், கருமை, களர் நிலம், காடு, கூட்டம், பாழ்நிலம், போர்க்களம், மிடறு.*

**களரிகட்டுதல்** - *அவையடக்கஞ் செய்தல்.*

**களரிக்கட்டு** - *ஓர் வித்தை.*

**களரிக்கோழை** - *சவைக்குப்பயப் படுதல்.*

**களரியேறுதல்** - *அரங்கிலேறுதல்.*

**களரிவிடுதல்** - *அரங்கிலேவிடுதல்.*

**களர்** - *களாநிலம், களாமரம்.*

**களர்நிலம்** - *உப்புநிலம்.*

**களர்மண்** - *உவர்மண்.*

**களவம்** - *கலப்பு, கலவைச்சேறு.*

**களவர்** - *கள்வர்.*

**களவன்** - *கர்க்கடகவிராசி, கள்வன், நண்டு.*

**களவாடுதல், களவாளல்** - *களவெடுத் தல்.*

**களவியல்** - *கள்ளப்புணர்ச்சி.*

**களவு** - *உன்மத்தம், களர்ச்செடி, திருட்டு, இஃதுபஞ்ச பாதகத் தொன்று.*

**களவுப்புணர்ச்சி** - *கரவுக்கூட்டம், காந்தருவமணம்.*

**களவொழுக்கம்** - *களவாய்ப் புணர்ந்து திரிதல்.*

**களன்** - *இடம், உக்கிரம், உன்மத்தம், ஒலி, கழுத்து, கூட்டம், சினேகம், போர்க்களம், மருதநிலம்.*

**களா** - *ஓர் செடி, களாநிலம், கறுப்பு.*

**களாசி** - *படிக்கம்.*

**களாநிலம்** - *உப்புநிலம்.*

**களாபடனம்** - *தயாவிருத்தி பதினான்கி னொன்று, அஃது, கற்பித்தல்.*

**களாப்பூக்கோரை** - *ஓர் புல்.*

**களாவகம்** - *சிறுகீரை.*

**களி** - *களிப்பு, களிப்புள்ளவன், களியென்னேவல், கள், குரூரம், குழம்பு, செருக்கு, மயக்கம், வெறி, சீதம், செறிவு, பெருமை, வெப்பு.*

**களிகம்** - *வாலுளுவை.*

**களிகூருதல்** - *அக்களித்தல், களிப்பு, மிகுதல்.*

**களிகை** - *இளம்பூவரும்பு.*

**களிக்கண்** - *தட்டார்கருவியினொன்று.*

**களிக்காய்** - *தசைக்காய்.*

**களிக்குளம்** - *ஓர் பட்டினம்.*

**களிதம்** - *பெருங்கல், வழுக்கல்.*

**களித்தல்** - *செருக்கடைதல், மதத்தல், மிகவுவத்தல்.*

**களித்துறை** - *ஓரூர்.*

**களிநெஞ்சன்** - *கொடூரன், செருக்கன்.*

**களிப்பாக்கு** - *அவித்துக்காய்ந்தபாக்கு.*

**களிப்பு** - *இன்பம், உள்ளக்களிப்பு, மதாப்பு, மயக்கம்.*

**களிமண்** - *பசைமண்.*

**களிமம்** - *எலி.*

**களிம்பு** - *மலினம்.*

**களியர்** - *நெய்தனிலமாக்கள்,வெறியர்.*

**களியாட்டு** - *மதுவெறியாட்டு.*

**களிறு** - *அத்தநாள் ஆண்சுறா, ஆண் பன்றி, ஆண்யானை, விலங்கேற் றின் பொது, யானை.*

**களுகொளெனல்** - *நழுநொழுத்தல்.*

**களுக்குக்களுக்கெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**களேபரம்** - *உடல், எலும்பு, பிணம்.*

**களை** - *அயர்வு, அழகு, ஒளி, களை யென்னேவல், குற்றம், தாளப்பிர மாணம்பத்தினொன்று, தேவ கலை, புல்.*

**களைகட்டல்** - *களைபிடுங்கல்.*

**களிகட்டி, களைவெட்டி** - *களையெடுக் குங்கருவி.*

**களைகண்** - *தாபரம், புகல்.*

**களைகொள்ளுதல்** - *சோர்தல், தேவ பத்திக்கடுத்தமுகக்குறியடைதல்.*

**களைகோல்** - *ஓர் கருவி.*

**களைஞர்** - *சண்டாளர், வேலைக்காரர்.*

**களைதல்** - *களைகட்டல், கொல்லல், நீக்குதல், விலக்குதல்.*

**களைதீர்தல், களைதேறுதல்** - *சோகந் தீர்தல்.*

**களைத்தல்** - *இளைப்புறல்.*

**களைபறித்தல்** - *களைபிடுங்குதல்.*

**களைபோடுதல்** - *சோகம்போடுதல்.*

**களைப்புல்** - *பயிருக்குட்புல்.*

**களையாறுதல்** - *சோகநீங்குதல்.*

**களையாற்றுதல்** - *சோகந்தீர்த்தல்.*

**களையேறுதல்** - *களைகொள்ளுதல்.*

**களைவாரி** - *களைச்சத்தகம், களை வாருவோன்.*

**களைவு** - *களைதல்.*

**கள்** - *ஓர் வண்டு, களவு, கள்ளென் னேவல், பன்மைவிகுதி, பொய், மது, மலர்த்தேன், சோர்வு.*

**கள்வன்** - *கரியவன், கர்க்கடகவிராசி, குரங்கு, திருடன், நண்டு, முசு, யானை.*

**கள்ளக்கடன்** - *அநியாயவட்டிக்கு வாங்கல், மென்புரட்டு.*

**கள்ளக்கதவு** - *கள்ளவாயில்.*

**கள்ளக்கயிறு** - *சூத்திரக்கயிறு.*

**கள்ளக்கவறு** - *கவறு, வஞ்சகச்சூது.*

**கள்ளக்கலி** - *சோரகவி.*

**கள்ளக்களவு** - *ஒளிப்புமறைப்பு.*

**கள்ளக்காசு** - *செல்லாக்காசு.*

**கள்ளக்காதுபடல்** - *குற்றினகாது பழுதுபடல்.*

**கள்ளக்காய்** - *கனற்றபழம்.*

**கள்ளக்கோலம்** - *இரண்டுக் குற்ற சாயல், குணக்கேடான் சாயல்.*

**கள்ளச்சரக்கு** - *கள்ளமானசரக்கு.*

**கள்ளச்சி** - *பூநீறு, பூவழலை, திருடி.*

**கள்ளச்சுரம்** - *விட்டுவிட்டுக்காயுங் காய்ச்சல்.*

**கள்ளத்தட்டு** - *தந்திரத்தட்டு.*

**கள்ளத்தோணி** - *ஓர்ஓடம்.*

**கள்ளநீர்** - *புண்ணீர்.*

**கள்ளப்பால்** - *இடைத்தட்டில் வருவன.*

**கள்ளப்புணர்ச்சி** - *தந்தைதாயறியாது தலைவனுந்தலைவியுங்கூடல்.*

**கள்ளப்புருஷன்** - *சோரநாயகன்.*

**கள்ளப்பேச்சு** - *தந்திரப்பேச்சு.*

**கள்ளமனம்** - *வஞ்சகமனம்.*

**கள்ளம்** - *களவு, குற்றம், பொய்.*

**கள்ளம்பண்ணல்** - *சோர்வுபண்ணல்.*

**கள்ளம்விடல்** - *வேண்டியபடி செய் யாதுவிடல்.*

**கள்ளல்** - *களவுசெய்தல், கள்ளுண் ணல்.*

**கள்ளவல்லியன்** - *ஓர்சாதியான்.*

**கள்ளவிலை** - *இரகசியவிலை.*

**கள்ளவெட்டு** - *கள்ளத்தனம்.*

**கள்ளவேலை** - *மாரீசமானவேலை.*

**கள்ளவேளை** - *நியமிக்கப்படாத நேரம்.*

**கள்ளறை** - *பெட்டகத்துள்ளறை.*

**கள்ளன்** - *சோரன்.*

**கள்ளி** - *ஓர் மரம், திருடி.*

**கள்ளிக்காக்கை** - *செம்போத்து.*

**கள்ளிக்கோட்டை** - *ஓரூர்.*

**கள்ளிச்சிட்டு** - *ஓர் பறவை.*

**கள்ளிமடையான், கள்ளிமுளையான்** - *ஓர்பூடு.*

**கள்ளு** - *நீறிடாதபனைநீர்.*

**கள்ளுதல்** - *களவுசெய்தல்.*

**கள்ளூண்** - *வண்டு.*

**கறகறத்தல்** - *அரிகண்டப்படுத்தல், சீக்கிரக்றிப்பு.*

**கறகறெனல்** - *ஒலிக்குறிப்பு, சீக்கிரக் குறிப்பு.*

**கறங்கல்** - *ஒலித்தல், சுழலல், பேய், வளைதடி.*

**கறங்கு** - *கறங்கென்னேவல், காற்றாடி, சுழற்சி.*

**கறங்குதல்** - *சுழலல்.*

**கறட்டி** - *உலர்ந்தகட்டி, வரண்ட கட்டம்.*

**கறட்டியோணான்** - *கட்டோணான்.*

**கறட்டுக்கறட்டெனல்** - *கோழை கொண்டிழுத்தல்*

**கறத்தல்** - *உறத்தல், பால்முதலிய பிதுக்கல்.*

**கறமன்** - *காய்ந்துவரண்டது.*

**கறல்** - *விறகு.*

**கறவை** - *பாற்பசு.*

**கறவையான்** - *பாற்காரன், பாற்பசு.*

**கறளை** - *ஓர் மரம், கறாளை.*

**கறள்** - *துரு.*

**கறா** - *காடைக்குரல்.*

**கறாக்கி, கறார்** - *வரையறை.*

**கறாளி** - *அடங்காக்குதிரை.*

**கறாளை** - *வளர்ச்சியற்றது.*

**கறி** - *கடி, கறி, கறியென்னேவல், மிளகு.*

**கறிக்கரணை** - *ஓர் செடி.*

**கறிச்சுரை** - *ஓர் சுரை.*

**கறித்தல்** - *கடித்தல், புசித்தல்.*

**கறித்தும்பை** - *ஓர் தும்பை.*

**கறிப்பாலை** - *ஓர் பாலை.*

**கறிப்புடல்** - *ஓர் புடோல், ஒரு வண்டு.*

**கறிமசாலை** - *கறிச்சரக்கு.*

**கறிமுள்ளி** - *ஓர் முள்ளி.*

**கறியுப்பு** - *இலவணம்.*

**கறிவடகம்** - *வற்றல்.*

**கறுகாய்ஞ்சொறி** - *ஓர் செடி.*

**கறுக்காய்** - *இளநீர்க்கயர், ஓர் மரம்.*

**கறுக்கை** - *கோபித்தல்.*

**கறுத்தக்காக்கட்டான்** - *ஓர் கொடி.*

**கறுத்தப்பாசி** - *கரியமணி.*

**கறுத்தப்பூ, கருவிருளை** - *கருங் காக்கணம்.*

**கறுத்தல்** - *கறுப்பாதல், கோபித்தல், மனக்குறைப்படுதல்.*

**கறுத்தவன்** - *பகைவன்.*

**கறுத்தவுப்பு** - *காருப்பு.*

**கறுப்பன்** - *ஓர் தேவதை, ஓர் நெர், கரியன்.*

**கறுப்பு** - *கருநிறம், கறை, கோபம், சினக்குறிப்பு, மனக்குறை.*

**கறுப்பக்கட்டுதல்** - *பயிர்கறுத்துண் டாதல், மழைக்கோலங்கொள்ளல்.*

**கறுப்புக்காய்ஞ்சொறி** - *ஓர் செடி.*

**கறுப்பெறிதல்** - *கறுத்தல், .*

**கறுமுதல்** - *சினக்குறிப்புக்காட்டடல், சினத்தல்.*

**கறுமுறுத்தல்** - *சினத்தல்.*

**கறுமுறனல், கறுமொறெனல்** - *ஒலிக் குறிப்பு, குறைசொல்லல்.*

**கறுமொறுத்தல்** - *மொறு மொறுத் தல்.*

**கறுவம்** - *ஆங்காரம், சினம்.*

**கறுவல்** - *கரியவன், சலஞ்சாதித்தல், சினக்குறிப்பு.*

**கறுவா** - *ஓர் மரம்.*

**கறுவாப்பட்டை** - *ஓர் சரக்கு.*

**கறுவித்தல்** - *சலஞ்சாதித்தல்.*

**கறுவியம்** - *கறுவித்தல், வைராக்கியம்.*

**கறுவு** - *கறுவென்னேவல், சலஞ் சாதித்தல், சினக்குறிப்பு, சினம், தணியாக்கோபம்.*

**கறுவுதல்** - *சலஞ்சாதித்தல்.*

**கறுள்** - *கடிவாளம்.*

**கறேரெனல்** - *ஒலிக்குறிப்பு, கருமை நிறக்குறிப்பு, விரைவின்குறிப்பு.*

**கறை** - *இருள், உதிரம், உரல், கறள், கறுப்பு, குடியிறை, குற்றம், நஞ்சு, நிறம், மாசு.*

**கறைக்கட்டுதல், கறைபிடித்தல்** - *கறள்பிடித்தல்.*

**கறைப்படுதல்** - *குற்றப்படுதல்.*

**கறைப்போக்கன்** - *கீழ்மகன்.*

**கரைப்போக்கி** - *கீழ்மை.*

**கறைமிடற்றோன்** - *சிவன்.*

**கறையடி** - *யானை.*

**கறையான்** - *சிதல்.*

**கறையான்மேய்தல்** - *கறையான் கட்டுதல்.*

**கறையான்புற்று** - *வன்மீகம்.*

**கற்கசகாரன்** - *கடினமுள்ளோன், சுறுக்கிளகாதவன்.*

**கற்கசம்** - *கடினம், பிரயாசம், குரூரம், பிசுனம்.*

**கற்கசர்** - *உலோபிகள், கடினர், கீழ் மக்கள்.*

**கற்கடககரம்** - *தேள், நண்டுவாய்க் காலி.*

**கற்கடகசிங்கி** - *ஓர் பூடு.*

**கற்கடகபாஷாணம்** - *விழைவுபாஷாண முப்பத்திரண்டினொன்று.*

**கற்கடகம்** - *ஓரிராசி, நண்டு, தாமரை நூல், விட்டார்த் தம்.*

**கற்கடகவைரி** - *குரங்கு.*

**கற்கண்டம்** - *கற்பார்.*

**கற்கண்டு** - *கருப்புக்கட்டி.*

**கற்கம்** - *ஓர் சரக்கு, பலவகை கூடிய மருந்து, மருந்தின்பொது, தாமரை, நிட்டை, பாதம்.*

**கற்கரம்** - *மத்து.*

**கற்கரி** - *கரகம், தயிர்கடைதாழி.*

**கற்கரிகை** - *சதங்கை.*

**கற்கருசிலை** - *ஓர் பூடு.*

**கற்கனல்** - *கல்மதம்.*

**கற்கா** - *கொடுந்தமிழ்நாட்டி னொன்று.*

**கற்காமி** - *அல்மதம்.*

**கற்காரம்** - *கல்லக்காரம், காரக்கல்.*

**கற்காரு** - *அகிலமரம், கற்காரம்.*

**கற்கி** - *குதிரை, திருமாலவதாரத் தொன்று, தேவர்கோயில்.*

**கற்கிச்சா** - *சாவாக்கியங்களி னொன்று.*

**கற்கிணறு** - *கல்லுக்கிணறு.*

**கற்கிமண்டலம்** - *உத்தரவீதிக்கடை.*

**கற்குடல்** - *ஓர் விதநோய்க்குடல்.*

**கற்குளித்தல்** - *இரத்தினங்குளித் தெடுத்தல்.*

**கற்கு** - *கற்கடகவிராசி.*

**கற்கோடன்** - *கார்க்கோடன்.*

**கற்கோவை** - *கருடன்கிழங்கு.*

**கற்சத்து, கற்சவளை** - *கல்நார்.*

**கற்சம்** - *யானைபிளிறொலி.*

**கற்சரீரம்** - *வயிரச்சரீரம்.*

**கற்சனம்** - *கோபம், தொனி, முழக்கம், யுத்தம்.*

**கற்சாகம்** - *மரகதம்.*

**கற்சாடி** - *கல்லினாற்செய்தபாத்திரம்.*

**கற்சிற்பன்** - *சிற்பன்.*

**கற்சுண்ணாம்பு** - *கன்னீறு.*

**கற்சுவர்** - *செங்கல்காட்டுக்கல்லி வற்றாற்செய்யப்பட்டசுவர்.*

**கற்சூரம்** - *கழற்கொடி, பேரீந்து.*

**கற்சூலை** - *ஓர் சூலை.*

**கற்பகக்கரம்** - *கோழித்தலைக் கெந்தகம்.*

**கற்பகச்சோலை** - *இந்திரன்நந்தனம்.*

**கற்பகத்திணை** - *அகப்பொருட்டு றையினொன்று.*

**கற்பகம்** - *ஐந்தருவினொன்று, அஃது வேண்டிற்றெல்லாந்தருமரம், விநாயகன், புளியாரை.*

**கற்பகன்** - *சௌளகன்.*

**கற்பகோளகை** - *கருப்பப்பை.*

**கற்பஞ்சாதித்தல்** - *காயசித்திக்கு மருந்துசாதித்தல்.*

**கற்படி** - *ஏறும்படி.*

**கற்படுத்தல்** - *செங்கற்பதித்தல்.*

**கற்படை** - *கற்படுத்தநிலம், கோட் டையிற்கள்ளவழி.*

**கற்பதரு** - *கற்பகவிருட்சம்.*

**கற்பதுருமம்** - *கற்பதாரு.*

**கற்பதித்தல்** - *இரத்தினமழுத்தல், கல்லடுத்தல்.*

**கற்பநிதி** - *குபேரனவநிதியினொன்று.*

**கற்பம்** - *ஆயிரங்கோடி, உலகமுடி யுங்காலம், ஓர்மருந்து, கருப்பம், தேவலோகம், பிரமனாயு, மந்திர சாத்திரம், அற்பம், இரண்டிரவு மொரு பகலுங்கொண்டது, கஞ்சா, நிண்ணயம், புளியாரை, வேதாங்க மாறி னொன்று.*

**கற்பரன்** - *வெள்ளைப்பாஷாணம்.*

**கற்பரிபாஷாணம்** - *ஓர் மருந்து.*

**கற்பலகை** - *எழுதும்பலகை.*

**கற்பழிதல்** - *கற்புக்கெடுதல்.*

**கற்பனை** - *இல்லதையுள்ள தாயுண்டு பண்ணல், கட்டளை, படிப்பு.*

**கற்பாசி** - *ஓர்மருந்து.*

**கற்பாஷாணம்** - *ஓர் மருந்து.*

**கற்பாட்டி** - *கற்புடையாள்.*

**கற்பாந்தம்** - *கற்பமுடிவு.*

**கற்பாரியம்** - *சிற்பநூன் முப்பத்தி ரண்டினொன்று.*

**கற்பார்** - *கல்லுப்பார், கல்விகற் போர்.*

**கற்பாலவணம்** - *ஓருப்பு.*

**கற்பாவுதல்** - *கற்படுத்தல்.*

**கற்பாளி** - *கல்லளை.*

**கற்பாறை** - *கன்னிலம், கல்லுப் பாளம்.*

**கற்பிதம்** - *நியமம்.*

**கற்பித்தசொல்** - *ஆக்கச்சொல், நியமிக்குஞ்சொல்.*

**கற்பித்தல்** - *கட்டளையிடல், படிப் பித்தல்.*

**கற்பிரம்** - *கல்லாரை.*

**கற்பியல்** - *கற்பொழுக்கம்.*

**கற்பிலக்கணம்** - *கற்புநடை, உள்ள மகிழ்ச்சியு மூடலு மூடலுணர்த்த லும் பிரிவும் பிறவுமாம்.*

**கற்பிற்கிளவித்தொகை** - *பரத்தையிற் பிரிவுமுதலாகப் பொருள்வயிற் பிரிவீறாம்.*

**கற்பு** - *கல்வி, மகளிர்நிறை, மதிலுண் மேடை, மதில், முல்லைக்கொடி.*

**கற்புப்பலித்தல்** - *கற்புச்சித்தித்தல்.*

**கற்புரம்** - *பொன்.*

**கற்புழை** - *கல்வளை.*

**கற்பூ** - *கல்லாரை, கற்றாமரை.*

**கற்பூசரம்** - *நாகமலை.*

**கற்பூமி** - *கல்லுநிலம்.*

**கற்பூரசத்து** - *கருப்பூரச்சிலை.*

**கற்பூரம்** - *கருப்பூரம்.*

**கற்பெறுக்கி** - *ஓர் புள்.*

**கற்பை** - *படிக்கல்லுப்பை.*

**கற்பொடி** - *அன்னபேதி.*

**கற்போன்** - *மாணாக்கன்.*

**கற்றசை** - *வாடாததசை.*

**கற்றச்சன்** - *கற்சிற்பன்.*

*கற்றடிவிரியன் - ஓர் பாம்பு.*

**கற்றலைமீன்** - *ஓர் மீன்.*

**கற்றல்** - *படித்தல், பழகுதல்.*

**கற்றவர்** - *புலவர்.*

**கற்றறிமூடன்** - *கற்றும்மதி யீனனா யிருப்பவன்.*

**கற்றறிவு** - *படிப்பினால்வருமறிவு.*

**கற்றா** - *இளங்கன்றுப்பசு.*

**கற்றார்** - *அறிஞர், படித்தோர்.*

**கற்றாழை** - *ஓர் செடி.*

**கற்றானை** - *காவிப்புடைவை.*

**கற்றீட்டு** - *கன்மதம்.*

**கற்றுக்குட்டி** - *படிக்கும்பிள்ளை.*

**கற்றுக்கொடுத்தல்** - *படிப்பித்தல்.*

**கற்றுச்சொல்லி** - *சிறுகவிஞன், துணைச்சொல்லுச்சொல்வோன்.*

**கற்றூண்** - *கல்லாலாயதூண்.*

**கற்றேக்கு** - *ஓர் மரம்.*

**கற்றை** - *கதிர்த்தொகுதி மயிர்த் தொகுதி போல்வன, கூட்டம், தென்னோலை முதலியவற்றான் முடையுங் கற்றை.*

**கற்றொட்டி** - *கல்லினாற் செய்தநீர்த் தொட்டி.*

**கற்றோர்** - *அறிஞர், கலைஞர்.*

**கற்றோர்நவிற்சியணி** - *மிகுதிக்குக் காரணமாகாததையதற்குக் காரணமாகச் சொல்வது.*

**கனகக்கொடியோன்** - *கன்னன்.*

**கனகசபை** - *பஞ்சசபையினொன்று.*

**கனகதண்டிகை** - *பொற்சிவிகை.*

**கனகதம்** - *ஒட்டகம்.*

**கனகதர்** - *சண்டாளர், புலைஞர்.*

**கனகபரிட்சை** - *கலைஞான மறுபத்தி னான்கினொன்று.*

**கனகம்** - *பொன்.*

**கனகரசம்** - *அரிதாரம்.*

**கனகலம்** - *ஓர் தலம்.*

**கனகனசங்கிலிதம்** - *கனமாகிய வீரெண்ணின் பெருக்கம்.*

**கனகன்** - *இரணியன்.*

**கனகாசம்** - *கண்ணினோர்நோய்.*

**கனகாசலம்** - *மகாமேரு.*

**கனகாபிஷேகம்** - *பொன்னபிஷேகம்.*

**கனகாமிரதம்** - *வெள்ளி.*

**கனங்காய்** - *ஓர் மரம்.*

**கனசங்கலிதம்** - *சமமாகியமூவெண் பெருக்கத்தைக் கூட்டியது.*

**கனசரம்** - *இரசம், நீர்.*

**கனசாரம்** - *கருப்பூரம்.*

**கனசாரி** - *மிகுதி.*

**கனட்டி, கனட்டு** - *சிறுவயல்.*

**கனதண்டி** - *கனமுள்ளது.*

**கனதி** - *கனம், பெருமை.*

**கனதிக்காரன்** - *பெருமைக்காரன்.*

**கனத்தநாள்** - *தாக்குக்கொண்ட நாள்.*

**கனத்தல்** - *நெருங்கல், பாரங் கொள்ளுதல்.*

**கனத்தி** - *வைப்பரிதாரம்.*

**கனபலம்** - *நீளம், அகலம், கனம் மூன்றையும் பெருக்கி வருவது.*

**கனபுடம்** - *நூறுஎருப்புடம்.*

**கனப்பு** - *தடிப்பு, பாரம், விறைப்பு.*

**கனப்புக்காட்டல்** - *கனத்தல்.*

**கனமழை, கனமாரி** - *பெருமழை.*

**கனமூலம்** - *கனத்தொகையினின்று அதின் மூலமாகிய வொருகோணமறிதல்.*

**கனம்** - *அகலம், கூட்டம், கோரைக் கிழங்கு சங்கை, சமமாகிய மூவெண்ணின் பெருக்கம், சீர்மை, செறிவு, நிறைவு, பாரம், பொன், மிகுதி, மேகம், வட்டம், இரசம், ஈயம், தங்கம்.*

**கனம்பண்ணுதல்** - *சங்கித்தல்.*

**கனம்பாடுதல்** - *சுரம்பாடுதலினொன்று.*

**கனரசம்** - *நீர்.*

**கனருசி** - *மின்னல்.*

**கனலி** - *சூரியன், நெருப்பு, பன்றி, கள்ளி.*

**கனலுதல்** - *எரிதல், காய்தல், சூடு கொள்ளல்.*

**கனலொழுங்கு** - *தீத்திரள்.*

**கனல்** - *உட்டணம், கனலென்னேவல், நெருப்பு, பிரவை.*

**கனல்நிறக்கல்** - *கெம்புக்கல்.*

**கனல்நிறம்** - *மாணிக்கம்.*

**கனல்பேதி** - *சாத்திரபேதி.*

**கனல்மரம்** - *சோதிமரம்.*

**கனவட்டம்** - *குதிரை, பாண்டியன் குதிரை.*

**கனவான்** - *கணிசவான்.*

**கனவிரதம்** - *நீர்.*

**கனவு** - *கனா, நித்திரை, மயக்கம்.*

**கனவுநூல்** - *கனாவின் பலனறியு நூல்.*

**கனறல்** - *கனற்றுதல், சினக்குறிப்பு.*

**கனற்கூர்மை** - *வளையலுப்பு.*

**கனற்சிலை** - *மந்தாரச்சிலை.*

**கனற்றல், கனற்றுதல்** - *எரிதல், காயப் பண்ணல்.*

**கனைத்தம்பம்** - *கலைஞான மறு பத்தினான்கினொன்று.*

**கனனம்** - *கிண்டல், புதைத்தல், விழுதல்.*

**கனன்றல்** - *கனலுதல், சினக்குறிப்பு.*

**கனா** - *கனவு.*

**கனாசுரம்** - *கார்காலம்.*

**கனி** - *கனியென்னேவல், தித்திப்பு, நிரசவஸ்துக்கள் பிறக்குமிடம், பழம்.*

**கனிகரம், கனிகை** - *கனிதல்.*

**கனாசிரயம்** - *ஆகாயம்.*

**கனிட்டம்** - *அழகு.*

**கனிட்டம்** - *கடைவிரல்.*

**கனிட்டர்** - *கீழ்மக்கள், பின்பிறந் தோர்.*

**கனிட்டன்** - *பின்னோன்.*

**கனிட்டிகை** - *கடைவிரல்.*

**கனிட்டை** - *பின்பிறந்தாள்.*

**கனிதல்** - *இரங்கல், கரைதல், சினக் குறிப்பு, நைதல், பழுத்தல், புதைத் தல், பெருங்கோபம்.*

**கனித்திரம்** - *மண்வெட்டி.*

**கனிந்தசொல்** - *இனியசொல்.*

**கனீயசம்** - *செம்பு.*

**கனியாமணக்கு** - *பப்பாமரம்.*

**கிரகச்சுற்று** - *கிரகத்தின் சுற்றுதல்.*

**கிரகணதாரணம்** - *பற்றித்தரித்தல்.*

**கிரகணம்** - *கிரகித்தல், நினைத்தல்.*

**கிரகணி** - *கிரகணியென்னேவல், கிராணி.*

**கிரகணித்தல்** - *கிரகணம்பற்றுதல், கிரகித்தல்.*

**கிரகதானம்** - *கிரகாராதனையி னொன்று.*

**கிரகதீமை** - *கிரகதோஷம்.*

**கிரகத்தன், கிரகஸ்தன்** - *இல்லொழுக் கத்திருப்பவன், சங்கையுள்ளவன்.*

**கிரகஸ்தி** - *இல்லொழுக்கத்திருப் பவள்.*

**கிரகநிலை** - *கிரகந்நிற்குந்நிலை.*

**கிரகநீசம்** - *கிரகங்கள் நீசம் பெறுதல்.*

**கிரகபகை** - *கிரகங்கள் பகை பெறுதல்.*

**கிரகபதி** - *அக்கினி, சூரியன்.*

**கிரகபாடு** - *சூரியனுங்கிரகமு மோரி ராசியினிற்றல்.*

**கிரகபிரீதி** - *கிரகாராதனை.*

**கிரகபீடை** - *கிரகநிலையினால் வரு மிடர்.*

**கிரகபுடம்** - *கிரகங்களின் தற்கால நிலையெண்.*

**கிரகப்பிரவேசம்** - *குடிபுகுதல்.*

**கிரகப்பிழை** - *கிரகதோஷம்.*

**கிரகமாலை** - *கிரகவொழுங்கு.*

**கிரகம்** - *கோள், தாளப்பிரமாணம் பத்தினொன்று, வீடு, பற்றுதல்.*

**கிரகவட்டம்** - *கிரகசக்கரம், கிரகச் சுற்று.*

**கிரகாராதனை** - *கிரகவழிபாடு.*

**கிரகி** - *கிரகியென்னேவல், சமுசாரி.*

**கிரகித்தல்** - *பற்றுதல்.*

**கிரகிப்பு** - *பற்றுகை, மட்டுக் கட்டுதல்.*

**கிரசேமிரம்** - *பச்சைக்கருப்பூரம்.*

**கிரஞ்சனம்** - *முருங்கை.*

**கிரணமாலி** - *சூரியன்.*

**கிரணார்த்தம், கிரணியம்** - *ஒளியுள்ள பொருள்.*

**கிரதோடையம்** - *யாகதோத்திரம்.*

**கிரத்தம்** - *பட்சித்தல்.*

**கிரணம்** - *ஒளி, கதிர்.*

**கிரணன்** - *சூரியன்.*

**கிரந்தம்** - *ஆரியம், தொடர்களுள் ஒற்றொழித்துயிருமுயிர் மெய்யு மாகக்கொள்ளு முப்பத்திரண் டெழுத்தின் கூட்டம், சாத்திரம்.*

**கிரந்தனம்** - *அழுதல், ஒலி.*

**கிரந்தி** - *கரப்பன், முடிச்சு.*

**கிரந்திகம்** - *திப்பிலிமூலம்.*

**கிரந்தித்தொய்வு** - *ஓர்நோய்.*

**கிரந்திநாயகன், கிரந்திநாயன்** - *ஓர் பூடு.*

**கிரந்திநயல்** - *ஓர் நோய்.*

**கிரந்திப்புண்** - *ஓர் சிலந்தி.*

**கிரந்திமூலம்** - *திப்பிலிமூலம்.*

**கிரந்திவாயு** - *ஓர் வாயு.*

**கிரந்திவியாதி** - *ஓர் நோய்.*

**கிரமக்காரன்** - *ஒழுங்காகநடப்போன்.*

**கிரமம்** - *ஒழுங்கு, சடங்கு, முறைமை.*

**கிரமி** - *ஒழுங்காய்நடப்போன், வைதிக முறைப்படிநடப்போன்.*

**கிரமுகம்** - *கமுகு.*

**கிரம்** - *விழுங்கல்.*

**கிரயம்** - *விலை.*

**கிரவுஞ்சம்** - *அன்றில், ஓர்மலை, கோழிப் பறவையளவு தூரம், சத்த தீவினொன்று.*

**கிரவுஞ்சன்** - *மேனைபுத்திரரிலொரு வன்.*

**கிராகதி** - *நிலவேம்பு.*

**கிராகம்** - *ஆமை, பற்றுதல்.*

**கிராடம்** - *தேயமன்பத்தாறி னொன்று.*

**கிராணம்** - *கிரகணம், சிறுவட்டில்.*

**கிராணி** - *ஓர் நோய்.*

**கிராணித்திரவியம்** - *அகிலம்பட்டை, அழிஞ்சில், இந்துப்பு, கருவேம்பு, கல்லுப்பு, கறியுப்பு, காவட்டம் புல், திரிசாரணை, திரிசாரம், நற்சீரகம், நாய்வேளை, பாவட்டை, புளியாரை, பெருங்காயம், பொடுதலை, மிளகு, முட்காய் வேளை, மோர், வசம்பு, வளை யலுப்பு, வெடியுப்பு.*

**கிராதர்** - *குறவர், வேடர்.*

**கிராதி** - *கிறாதி.*

**கிராந்தி** - *சுடர்ச்செலவு, கிரகவட்டத்தின் சாய்ப்பு.*

**கிராந்தி மண்டலம்** - *சூரியனது பாதை.*

**கிராந்துதல்** - *ஒளித்தல், பதுங்குதல்.*

**கிராமசாந்தி** - *கிராமமுழுவதுக்குஞ் செய்யுமோர்சாந்தி.*

**கிராமணி** - *கிராமமுற்றோன், சான்றோன், நாவிதன்.*

**கிராமதேவதை** - *அவ்வக் கிராமங்கட்கதி தேவதை யாயவ்வக்கிராமத் தோர்வழி படுந்தெய்வம்.*

**கிராமப்பிரதெட்சணம்** - *கிராமத்தை வலம் வருதல்.*

**கிராமம்** - *குறிஞ்சி, நூறு குடியுள்ள வூர், மருதநிலத்தூர், நீர்வாழ் பறவை.*

**கிராமனி** - *பள்ளப்பூமி.*

**கிராமியம்** - *திசைச்சொல், நாட்டுச் சொல், கிராமத்திலுள்ளது.*

**கிராமியன்** - *கிராமமுற்றோன்.*

**கிராம்பு** - *கராம்பு.*

**கிராய்** - *வயிரநிலம்.*

**கிராவணம், கிராவம்** - *கல்மலை.*

**கிராவாதி** - *இரும்பு.*

**கிரி** - *பன்றி, மருட்பன்றி, மலை.*

**கிரிகம்பலை** - *கிலிகம்பரை.*

**கிரிகன்னி** - *வெள்ளைக்காக்கணம்.*

**கிரிகித்தல்** - *பற்றுதல்.*

**கிரிகித்துவம்** - *வாங்கல்.*

**கிரிகை** - *கிரியை.*

**கிரிகோலம்** - *கிலிகோலம்.*

**கிரிசகம்** - *வருத்தம்.*

**கிரிசம்** - *இளைப்பு.*

**கிரிசன்** - *கிரீசன்.*

**கிரிசரம்** - *மலையிற்பிறந்தயானை.*

**கிரிசை** - *பார்வதி.*

**கிரிச்சரம்** - *ஓர் விரதம், மலையிற் பிறந்த யானை.*

**கிரிச்சிரீட்டம்** - *சாதிக்காய்.*

**கிரிட்டணம், கிரிட்டம்** - *உறைத்தல்.*

**கிரிதசாக்கிரி** - *ஓர் பண்.*

**கிரிபயம்** - *மரப்பொது.*

**கிரிமல்லிகை** - *மலைமல்லிகை, வெட்பாலை.*

**கிரிமா** - *கரிமா.*

**கிரியன்** - *சேரன்.*

**கிரியாகலாபம்** - *கிரியானுட்டிப்புக் குரிய போதகம்.*

**கிரியாகாண்டம்** - *வேதத்திற் கிரியை களைப் போதிக்கும் பகுதி.*

**கிரியாங்கம்** - *கிரியை.*

**கிரியாசத்தி** - *பஞ்சசத்தியினொன்று. அஃது வினைத்துணையாக நின்று லகங்களை யாக்குவது.*

**கிரியாசாதனம்** - *கிரியானுட்டிப்புக் குரியது, கிரியையனுட்டிப்பு.*

**கிரியாசைவம்** - *ஓர் சைவம்.*

**கிரியாதிகாரன்** - *விநாயகன்.*

**கிரியாபதம்** - *வினைச்சொல்.*

**கிரியாபாதம்** - *கிரியை நிலை.*

**கிரியாபூசை** - *கிரியையோடுங் கூடிய பூசை.*

**கிரியாமார்க்கம்** - *கிரியைநிலை.*

**கிரியாமாலை** - *பெயர்ச் சொல்லை யாவது வினைச் சொல்லையாவது திணை பாலிடங்காலங்கடோன் றச்சொல்லல்.*

**கிரியாவான்** - *கிரியைக்காரன்.*

**கிரியை** - *சைவசமயநிலை நான்கி னொன்று, தாளப்பிரமாணம் பத்தினொன்று, தொழில்.*

**கிரியைகேடு** - *அசுத்தம், செய்காரிய வீனம்.*

**கிரியைக்காரன்** - *கிரியை செய்வொன்.*

**கிரிவாணம்** - *நீலாஞ்சனக்கல்.*

**கிரீசன்** - *சிவன்.*

**கிரீச்சரம்** - *கிரிச்சரம்.*

**கிரீடசாம்பிராச்சியம்** - *அதிகாரசந் தோஷம்.*

**கிரீடதாரணம்** - *முடிசூட்டு.*

**கிரீடதாரி** - *மகுடவத்தனன்.*

**கிரீடபங்கம்** - *மகுடபங்கம்.*

**கிரீடம்** - *முடி.*

**கிரீடாதிபதி** - *உத்தாமணி, முடிதரித்த வன்.*

**கிரீடாதிபத்தியம்** - *அதிபதித்துவம், மகுடவத்தனத்தகமை.*

**கிரீடாப்பிரமவாதி** - *வேதாந்திகளி லொருவன்.*

**கிரீடி** - *அருச்சுனன், கிரீடியென் னேவல்.*

**கிரீடித்தல்** - *புணர்தல், விளையாடுதல்.*

**கிரீடை** - *புணர்ச்சி, மகளிர் விளை யாட்டு, விளையாட்டு.*

**கிரீட்டி** - *பிரண்டை.*

**கிரீபம்** - *கழுத்து.*

**கிருகம்** - *மிடறு.*

**கிருகரன்** - *கவுதாரி, கிருதரன், சிவன்.*

**கிருகவாகு** - *பல்லி, மயில்.*

**கிருகனம்** - *கவுதாரி.*

**கிருசம்** - *மெலிவு.*

**கிருசாட்சம்** - *சிலம்பி.*

**கிருசாணு** - *தீ, பவளக்கொடி.*

**கிருசானுரதசன்** - *உருத்திரன்.*

**கிருச்சிரம்** - *சாந்தபனவிரதம், அஃது பஞ்சாமிர்தத்தோடாறு நாளுண்டு ஏழாநாளுபவசிப்பது, பாவம், பிரசாபத்தியமணம், பிராயச் சித்தம்.*

**கிருச்சிராதிகிருச்சிரம்** - *இருபத் தொருநாளளவும் சாந்தபனமனுட் டித்தல்.*

**கிருஷகன்** - *வேளாளன், பயிர்ச் செய்கைக்காரன்.*

**கிருஷம்** - *உழவு, கலப்பை, கொழு.*

**கிருஷி** - *பயிர், பயிர்ச்செய்கை.*

**கிருடி** - *அருச்சுனன், பயிர், பன்றி.*

**கிருடியை** - *கூத்தினோர்விகற்பம்.*

**கிருட்டி** - *ஓரீற்றா, பன்றி, பிரண்டை, மருட்பன்றி.*

**கிருட்டிணசருப்பம்** - *ஓர்பாம்பு.*

**கிருட்டிணசிங்குவாதோஷம்** - *ஓர் நோய்.*

**கிருட்டிணபக்கம், கிருட்டிணபட்சம்** - *அபரபக்கம்.*

**கிருட்டிணபாணம், கிருஷ்ணபாணம்** - *எட்டிமரம்.*

**கிருட்டிணபேடம்** - *கடுரோகிணி.*

**கிருட்டிணமிருகம்** - *கருமான்.*

**கிருட்டிணம், கிருஷணம்** - *இரும்பு, கறுப்பு, காகம், குயில், சந்திரன் பின்பக்கம், துருசு, மான், மிளகு.*

**கிருட்டிணலோகம்** - *உலோகமணல்.*

**கிருட்டிணவல்லி** - *நன்னாரி.*

**கிருட்டிணவாணம்** - *உலோகமணல்.*

**கிருட்டிணனோய்ந்தமிருகம்** - *கலங் கொம்பு.*

**கிருட்டிணன்** - *அருச்சுனன், கண்ணன், வியாசன்.*

**கிருட்டிணாசனம், கிருட்டிணாஞ்சனம்** - *மான்றோல்.*

**கிருட்டிணாப்பிரகம்** - *ஓரப்பிரகம்.*

**கிருட்டிணி** - *காக்கணஞ்செடி.*

**கிருட்டிணை** - *ஓர்யாறு, கடுகு, கருவட்டை, துருபதி, முந்திரிகை, வால்மிளகு.*

**கிருதகபடம்** - *வஞ்சம்.*

**கிருதகாலம்** - *நியமநாள்.*

**கிருதகிருத்தியம்** - *செய்ய வேண்டுவதையேசெய்தல்.*

**கிருதகுளபாளிதபோசனம்** - *திருத்திபோசனம், நெய்சருக்கரை முதலிய கூடிய இனியபோசனம்.*

**கிருதசங்கேதம்** - *இணக்கம்.*

**கிருதசன்னிதானம்** - *முன்னிலை.*

**கிருதசாபத்திரிகை** - *கணவன் மறுவிவாகஞ்செய்தபின்னும் அவனோடு வாழும் மனைவி.*

**கிருதசூடன்** - *உச்சிச்சிகை வைக்கப்பட்டவன்.*

**கிருதசோபம்** - *அலங்காரம், பிரகாசம்.*

**கிருதசௌசம்** - *சுத்தம் செய்தல்.*

**கிருததாசன்** - *வேலையாள்.*

**கிருததாரன்** - *விவாகஞ்செய்தோன்.*

**கிருதநாசனம்** - *நன்றியீனம்.*

**கிருதநிர்சேனன்** - *பாவநிவிர்த்திசெய்தோன்.*

**கிருதபலம்** - *செய்பலம்.*

**கிருதம்** - *செய்யப்பட்டது, நெய், முதல்யுகம், செய்கை, முன்.*

**கிருதரன்** - *முகத்திடைநின்று தும்மலுஞ்சினமும் வெம்மையும் விளைக்கும்வாயு.*

**கிருதலட்சணம்** - *நல்லிலக்கணம்.*

**கிருதவேசம்** - *அலங்கரித்தல்.*

**கிருதவேதனன்** - *கூலியாள்.*

**கிருதாகிருதம்** - *செய்துகுறைவேலை.*

**கிருதாஞ்சலி** - *கைகூப்பல்.*

**கிருதாந்தசனகன்** - *சூரியன்*

**கிருதாந்தம்** - *தருக்கித்துமுடித்த தீர்மானம், இலிகி.*

**கிருதாந்தன்** - *நமன்.*

**கிருதார்த்தம்** - *பேறு.*

**கிருதார்த்தர்** - *கருமமுடித்தோர், பேறு பெற்றோர், மகிழ்ச்சி பெற்றோர், விருத்தியடைந்தோர்.*

**கிருதி** - *உபாதி, செய்கை, நடுக்கம்.*

**கிருதிகரன்** - *இராவணன், வேதனை செய்வோன்.*

**கிருது** - *குசால், கோமளம், செருக்கு, நெய், யாகம்.*

**கிருதோபகாரம்** - *உதவிசெய்தல்.*

**கிருதோபநயனன்** - *பூணூற்றரித்தோன்.*

**கிருத்தி** - *ஒரு தேவதை, தோல், மான்றோல், அறிவு.*

**கிருத்திகாசூதன், கிருத்திகாசூனு** - *முருகன்.*

**கிருத்திகாபவன்** - *சந்திரன், முருகன்.*

**கிருத்திகை** - *கார்த்திகை.*

**கிருத்திமம்** - *கடமை, செய்கை, தோல், பூதகணம், பொய், மாயை, வஞ்சனை, வைதீகநடை.*

**கிருத்தியகருத்தா** - *கருமாதிபன்.*

**கிருத்தியப்பிழை** - *செய்கைப்பிழை.*

**கிருத்தியம்** - *கிரியைமுறை, தொழில் நித்தியகருமம், பிதிர்கடன்.*

**கிருத்தியை** - *ஓர் தேவதை.*

**கிருத்திரமம், கிருத்திரிமம்** - *பொய், வஞ்சனை.*

**கிருத்திரிமபுத்திரன்** - *வளர்ப்புப்பிள்ளை.*

**கிருத்திவாசன்** - *சிவன்.*

**கிருத்துவம்** - *அகாத்தியம், செய்தல்.*

**கிருபணம்** - *உலோபம்.*

**கிருபணன்** - *உலோபன்.*

**கிருபன்** - *குருகுலத்தவரின் பஞ்சாசாரிகளிலொருவன்.*

**கிருபாகடாட்சம்** - *கிருபைப்பார்வை.*

**கிருபாகான்** - *கிருபையுடையோன்.*

**கிருபாசனம்** - *அருள்செய்யும் படியிருக்குமாசனம்.*

**கிருபாணகம், கிருபாணம்** - *வாள்.*

**கிருபாணிகை** - *கத்தி.*

**கிருபாமூர்த்தி** - *கடவுள், கிருபாரூபி.*

**கிருபாலு, கிருபாளு** - *கிருபையுடையோன்.*

**கிருபி –** *துரோணன்மனைவி.*

**கிருபிபுத்திரன்** - *அசுபத்தாமன்.*

**கிருபீடபாலம்** - *கடல்.*

**கிருபீடயோனி** - *தீ.*

**கிருபை** - *அருள், இரக்கம்.*

**கிருபை கூர்தல்** - *கருணை கொண்டிருத்தல்.*

**கிருபைக்கண்** - *அருட்பார்வை.*

**கிருமி** - *புழு.*

**கிருமிஓமம்** - *ஓர் மருந்து.*

**கிருமிக்கிரந்தி** - *ஓர் நோய்.*

**கிருமிக்குன்றம்** - *வாலுளுவை.*

**கிருமிசத்துரு** - *ஓர் மருந்து.*

**கிருமிசுத்தி** - *மட்டி.*

**கிருமிச்சைலம்** - *கறையான்புற்று.*

**கிருமிநாசம்** - *ஓமம், குறாசாணி, பங்கம்பாலை, பலாசம்விரை, பேய்ப்பீர்க்கு.*

**கிருமிநாசி** - *நிலவாகை.*

**கிரேதம், கிரேதாயுகம்** - *முதல்யுகம்.*

**கிரேஸதன், கிரேத்தன்** - *கிரகஸதன், சங்கை மான், நாணயவான்.*

**கிரேந்தி** - *கச்சோலம்.*

**கிரேனிடுதல்** - *அஞ்சுதல்.*

**கிரேன்கிரேனெனல்** - *அச்சக்குறிப்பு.*

**கிலம்** - *அழிவு, சிறுமை.*

**கிலி** - *பயம்.*

**கிலிகம்பரை** - *அலுசிலும்பல், கலாதி.*

**கிலிகோலம்** - *சீர்கேடு.*

**கிலிமண்டல்** - *அஞ்சுதல்.*

**கிலீபம்** - *பேடி.*

**கிலீபலிங்கம்** - *அலிக்குறி.*

**கிலுகிலுத்தல், கிலுகிலுப்பு** - *ஒலிக்குறிப்பு.*

**கிலுகிலுப்பை** - *ஓர் செடி.*

**கிலுகிலெனல்** - *ஒலிக்குறிப்பு, குரங்கு பண்ணுமொலி.*

**கிலுக்குதல்** - *கிலுங்கச் செய்தல்.*

**கிலுங்கி** - *கிலுகிலுப்பை.*

**கிலுசிதம்** - *வறுமை.*

**கிலுட்டம்** - *நிறைதல்.*

**கிலுங்குதல்** - *கிலுகிலுத்தல்.*

**கிலுத்தம்** - *மணிக்கட்டு.*

**கிலுமொலுத்தல், கிலுமொலெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கிலேசம்** - *அச்சம், கவலை, துன்பம்.*

**கிலேசித்தல்** - *விசாரப்படல்.*

**கிலேசு** - *கீழ்.*

**கில்லம்** - *கழுத்து.*

**கிழக்கதை** - *பழங்கதை, பூராயக் கதை, வீண்கதை.*

**கிழக்கன், கிழக்கா, கிழக்கி, கிழங்கன், கிழங்கான்** - *ஓர்மீன்.*

**கிழக்கு** - *கீழ், கீழ்த்திசை.*

**கிழக்குவெளித்தல்** - *கீழ்த்திசை வெளித்து விடிதல்.*

**கிழக்கோலம்** - *கிழவடிவு.*

**கிழங்கு** - *கந்தம்.*

**கிழங்குக்கொடி** - *ஓர் வகைப்பயிர்க் கொடி.*

**கிழடு** - *முதிர்வயதுள்ளது.*

**கிழண்டுதல்** - *வயதாற்றளர்தல்.*

**கிழத்தனம்** - *கிழத்தன்மை.*

**கிழத்தி** - *உரியவள், தலைவி, மருதத் தலைவி, மனைவி, நாமகள்.*

**கிழத்து** - *ஓர் மீன்.*

**கிழமை** - *உரிமை, கடமை, குணம், மாட்சிமை, மூப்பு, வாரம்.*

**கிழமைவட்டம்** - *ஏழுவாரம்.*

**கிழமைவிரதம்** - *வாரவிரதம்.*

**கிழம் –** *கிழத்தன்மை.*

**கிழலை** - *சுற்றுப்புறம்.*

**கிழவர்** - *உரியோர், மூப்புடையோர்.*

**கிழவன்** - *உரியோன், தலைவன், பரணிநாள், மருதநிலத்தலைவன், மூப்புடையோன்.*

**கிழவி** - *உரியவள், தலைவி, தாய்க் கிழங்கு, முருங்கை, மூப்புடை யாள்.*

**கிழவு** - *கிழவுத்தன்மை.*

**கிழாத்தி** - *ஓர் புள், ஒரு மீன்.*

**கிழாநெல்லி** - *ஓர் பூடு.*

**கிழார்** - *இறைகூடை, சலசூத்திரம், தோட்டம்.*

**கிழான்** - *உரியோன், கைக்கிளை யிசையின் சுவையுவமை.*

**கிழி** - *எழுதுபடம், கிழியென்னேவல், கீற்று, நிதிப்பொதி, பொட்டணி.*

**கிழிகடை** - *அறவிளப்பமானது.*

**கிழிக்கட்டு** - *நிதிப்பொதி, பொட் டணி.*

**கிழிதல்** -*பிளத்தல், பீறுதல், வீணாதல்.*

**கிழித்தல்** - *கிழிக்குதல், கீறல்.*

**கிழிப்பு** - *பிளவு, வெடிப்பு.*

**கிழிமுறி** - *கிழித்த துண்டுச்சீலை, செல்லாச்சீட்டு.*

**கிழியல்** - *அறவிளப்பமானது, கிழிவு.*

**கிழிவு** - *காரியக்கேடு, கீற்று.*

**கிளக்கல்** - *சொல்லல்.*

**கிளத்தல்** - *எழுப்பல், சொல்லுதல்.*

**கிளத்து** - *சொல்.*

**கிளப்பம்** - *எழுப்பம், வளர்ச்சி.*

**கிளப்பல்** - *உயர்த்தல், எழுப்பல், கிண்டுதல், மிதத்தல், முயற்றல்.*

**கிளப்பு** - *கிளப்பென்னேவல், கிளம்பச் செய்தல், சொல்.*

**கிளம்பல்** - *அதிகரித்தல், எழும்பல், வளர்தல்.*

**கிளர்** - *ஒளி, கிளரென்னேவல், பூந்தாது.*

**கிளர்ச்சி** - *எழுச்சி.*

**கிளருதல், கிளர்தல்** - *உயர்தல், எழுதல், கிண்டல், நிறைதல், பிரகாசித்தல், வளர்தல்.*

**கிளர்த்தல்** - *எழுப்பல், ஒளிசெய்தல்.*

**கிளர்வு** - *எழுச்சி, பெருக்கம், வளர்ச்சி.*

**கிளவரி** - *தண்ணீர்விட்டான்.*

**கிளவி** - *சொல்.*

**கிளறுதல்** - *கிண்டுதல், கிளப்புதல், வெளியாக்கல்.*

**கிளா** - *களா.*

**கிளாய்** - *கோது.*

**கிளாலை** - *களாலை.*

**கிளி** - *ஓர் மீன், கிள்ளை.*

**கிளிகடிகருவி, கிளிகடிகோல்** - *ஓர் கருவி.*

**கிளிச்சிறை** - *நால்வகைப்பொன்னி னொன்று.*

**கிளிஞ்சில்** - *ஏரல்.*

**கிளித்தட்டு** - *ஓர் விளையாட்டு.*

**கிளிப்பிள்ளை** - *கிளி.*

**கிளிப்பூச்சி** - *வெட்டுக்கிளி.*

**கிளிமீன்** - *ஓர் மீன்.*

**கிளிமூக்கெழுத்தாணி** - *ஓர்வகை யெழுத்தாணி.*

**கிளியாறு** - *ஓர் நதி.*

**கிளிவெட்டுப்பாக்கு** - *இடையிடை யேதோலுரித்தபாக்கு.*

**கிளுகிளுத்தல்** - *ஒலிக்குறிப்பு.*

**கிளுகிளெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கிளுவை** - ஓர் மரம், ஓர் மீன், ஓர் பறவை.

**கிளை** - உறவு, ஒளி, ஓர்பண், கிளை யென்னேவல், கூட்டம், கைக் கிளையென்னுமிசை, தளிர், மந்தை, மரக்கிளை, மூங்கில், வீணை யினோர்நரம்பு.

**கிளைக்கதை** - ஒன்றிலிருந்து பல கதை தோன்றுங்கதை.

**கிளைஞர்** - உறவோர், தோழர், மருத நிலமாக்கள்.

**கிளைதல்** - கழுவல், களைதல், தெரித்தல்.

**கிளைத்தல்** - கிண்டல், கிளை வைத் தல், நிறைதல், நெருங்கல், பெருகல்.

**கிளைப்பெயர்** - சுற்றப்பெயர்.

**கிளைமை** - உறவு, சினேகம்.

**கிளைவழி** - வமிசம்.

**கிளைவிடுதல், கிளைவைத்தல்** - கப்பு வைத்தல்.

**கிள்ளல்** - கிள்ளுதல்.

**கிள்ளாக்கு, கிள்ளாக்கை** - உண்டி யற்சீட்டு.

**கிள்ளாப்பிறாண்டு, கிள்ளுப்பிறாண்டு**- ஓர் விளையாட்டு, கிள்ளியெடுத்தல்.

**கிள்ளி** - சோழன்.

**கிள்ளிக்காட்டுதல்** - அருட்டி அறி வித்தல்.

**கிள்ளுக்கீரையாயெண்ணல்** - அற்பமா யெண்ணல்.

**கிள்ளுதல்** - நுள்ளுதல்.

**கிள்ளை** - கருங்கிளி, கிளி, குதிரை, சாதிபத்திரி.

**கிறாக்கி** - அருமை, ஒறுப்பு.

**கிறாணி** - ஓர் வியாதி.

**கிறாப்பிறாண்டு** - ஓர் விளையாட்டு.

**கிறாம்புதல்** - மெல்லச்செதுக்கல்.

**கிறாய்** - பச்சைநிறக்கழிமண்.

**கிறி** - பொய், வழி.

**கிறிசு** - குற்றுவாள்.

**கிறிச்சான்** - ஒலிகாட்டுமோர்கருவி.

**கிறீச்சனம்** - ஓர் நோய்.

**கிறீச்சுக்கிறீச்செனல்** - ஒலிக்குறிப்பு.

**கிறிஸ்துவம்** - கிறிஸ்துமார்க்கம்.

**கிறு** - நிகழ்காலவிடை நிலைச் சொல்.

**கிறுக்குப்பிடித்தல்** - பைத்தியமாதல்.

**கிறுகிறுத்தல்** - அஞ்சுதல், தலை சுழற்றுதல், விரைவுக்குறிப்பு.

**கிறுகிறுப்பு** - அச்சக்குறிப்பு, சுழற்சி, தலைச்சுழற்சி.

**கிறுகிறெனல்** - சுழலல், விரைவுக் குறிப்பு.

**கிறுக்கல், கிறுக்குதல்** - எழுதல், கீறித்தள்ளல்.

**கிறுங்குதல்** - அசைதல்.

**கிற்பு** - அடுமைத்தனம், கட்டுப்பாடு.

**கிற்புறல், கிற்புறுதல்** - எழுதுதல், எழும்புதல், கட்டுப்படுதல்.

**கிற்றல்** - கட்டுப்படுத்தல்.

**கினி** - பீடை.

**கினிபிடித்தல்** - நோய்பிடித்தல்.

**கின்று** - நிகழ்காலவிடைநிலைச் சொல்.

**கின்னம்** - உபத்திரவம், கீழ்மை, துக்கம்.

**கின்னரம்** - ஆந்தை, கின்னரப்பட்சி, நீர்வாழ்பறவை, வீணை.

**கின்னரர்** - பதினெண்கணத் தொருவர்.

**கின்னரர்பிரான்** - குபேரன்.

**கின்னரி** - ஆந்தை, வீணை.

**கின்னரேசன்** - குபேரன்.

## கீ

**கீ** - ஓரெழுத்து, கிளிக்குரல்.

**கீசகம்** - குரங்கு, தலைச்சீரா, மூங்கில்.

**கீசகன்** - ஓரரசன்.

**கீசம்பறை** - *ஒழுங்கீனம்.*

**கீசரன்** - *சரக்கொன்றை.*

**கீசறை, கீசறைநாடகம்** - *கிரியை கேடு.*

**கீசா** - *பொய்.*

**கீசகாரி** - *வீமன்.*

**கீச்சான்** - *ஓர் புள், ஓர் மீன், ஓர் விளையாட்டு.*

**கீச்சி** - *சிறுமணிக்கோவை.*

**கீச்சிடுதல்** - *கத்துதல்.*

**கீச்சுக்கிட்டம்** - *இருப்புக்கறள்.*

**கீச்சுக்கீச்சுத்தம்பலம்** - *ஓர் விளையாட்டு.*

**கீச்சுக்கீச்செனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கீச்சுக்குரல்** - *குருவிக்குரல் போன்ற குரல்.*

**கீச்சுத்தாரா** - *ஓர் வகைத்தாரா.*

**கீடமாரி** - *சிறுபுள்ளடி.*

**கீடம்** - *கோற்புழு, வண்டு.*

**கீணம்** - *குறைபாடு.*

**கீணர்** - *அற்பர்.*

**கீண்டல்** - *கிண்டுதல், கிழித்தல், கிளைத்தல்.*

**கீதம்** - *இசைப்பாட்டு, வண்டு, மூங்கில், மூன்றாம்வேதம்.*

**கீதவாத்தியம்** - *இசைக்கருவி.*

**கீதவேதம்** - *சாமவேதம்.*

**கீதி** - *கீதம், கீதம்பாடுவோன்.*

**கீதை** - *பாட்டு, பூருவசரித்திர வெடுத்துக்காட்டல். இஃது அவதூதகீதை, இரிபுகீதை, உத்தர கீதை, சிவ கீதை, பகவற்கீதை, பிரம கீதையென்னப்படும்.*

**கீயாக்கணக்கு** - *வடமொழியின் கூட்டெழுத்துக்கள்.*

**கீரணம்** - *விழுங்கல்.*

**கீரம்** - *கருங்கிளி, கிளி, பால்.*

**கீரன்** - *நக்கீரன்.*

**கீரி** - *நகுலம், கள்ளி.*

**கீரிப்பல்** - *சிறுகூர்ப்பல்.*

**கீரிப்பாம்பு** - *ஓர் பாம்பு.*

**கீரிப்பூடு** - *ஓர் புடு.*

**கீரிமரம்** - *ஓர் மரம்.*

**கீரியுள்ளல்** - *ஒருள்ளல்.*

**கீரை** - *இலைக்கறிப்பொது.*

**கீரைக்குத்தண்ணீரிறைத்தல்** - *ஓர் விளையாட்டு.*

**கீரைநார்ப்பட்டு** - *ஓர் பட்டுச்சீலை.*

**கீரைப்பாம்பு, கீரைப்பூச்சி** - *வயிற்றிலுண்டாகிற பூச்சி.*

**கீரோதகம்** - *கீரநீரம்.*

**கீரோமாரோ** - *ஒலிக்குறிப்பு.*

**கீர்** - *ஒலிக்குறிப்பு, வார்த்தை.*

**கீர்க்கீரெனல்** - *உபயவொலிக்குறிப்பு.*

**கீர்த்தனம், கீர்த்தனை, கீர்த்தி** - *துதி, புகழ்.*

**கீர்த்தித்தல்** - *புகழ்தல்.*

**கீர்த்திப்பிரதாபம்** - *கீர்த்திப் பிரபலியம், மிகுகீர்த்தி.*

**கிர்த்திமான்** - *புகழுடையோன்.*

**கீர்வாணம்** - *சமஸகிருதபாஷையினோர்பகுதி.*

**கீலக** - *ஓர் வருடம்.*

**கீலகம்** - *அணாப்பு, தந்திரம்.*

**கீலம்** - *ஆணி, கீல், கீற்று, சுவாலை, பொல்லம், பிசின்.*

**கீலாலம்** - *உதிரம், காடி, நீர்.*

**கீலுதல்** - *கிண்டுதல், பிளத்தல்.*

**கீல்** - *கீலென்னேவல், சந்து, பிணையல், பொருத்து.*

**கீழண்டை** - *கிழக்குப்புறம்.*

**கீழறுத்தல்** - *சத்துருவுக்கஞ்சிக் கீழறையாற் போதல், சுரங்கமறுத் தல்.*

**கீழறை** - *கீழ்வீடு, முரஞ்சு.*

**கீழாத்தல்** - *தளர்தல், தாழ்வடைதல்.*

**கீழாறு** - *கீழூற்று.*

**கீழாறெடுத்தல்** - *தோன்றாமற் சிதைதல்.*

**கீழுடை** - *கௌபீனத்தோடிசைந்த ஒருடை.*

**கீழுதடு** - *கீழதரம்.*

**கீழுலகம்** - *நரகம், பாதலம்.*

**கீழேபோதல்** - *வளர்ச்சி படிப்பு முதலியனவரவரக்குறைதல்.*

**கீழைத்திசை** - *கீழ்த்திசை.*

**கீழைப்புறம்** - *கிழக்குப்புறம்.*

**கீழோங்கி** - *கரையாரிலோர்வகை.*

**கீழோர்** - *கீழ்மக்கள், சண்டாளர்.*

**கீழ்** - *இடம், ஈனம், ஏழனுருபு, கடிவாளம், கிண்டென்னேவல், கிழக்கு, கீழ், பள்ளம், பூமி, மறதி, ஆதி.*

**கீழ்காய்நெல்லி** - *ஓர் பூடு.*

**கீழ்காற்று** - *கொண்டல்.*

**கீழ்கை** - *ஈனகுலத்தார் பகுதி, கிழக்குப் புறம், பதிவு.*

**கீழ்க்கணக்கு** - *கீழ்வாயெண்.*

**கீழ்க்கண்** - *கீழ்ப்பார்வை.*

**கீழ்க்கதி** - *கீழ்நோக்கினசெலவு, தாழ்ந்தபதவி, நரகம்.*

**கீழ்க்கதுவாயளபெடை** - *கடையயலொழிந் தமற்றெல்லாவற்றின் கண்ணு மளபெடை வரத் தொடுப்பது.*

**கீழ்க்கதுவாயியைபு** - *முதலயலொழிந்த மற்றெல்லாச் சீர்க் கண்ணியை புவரத்தொடுப்பது.*

**கீழ்க்கதுவாயெதுகை** - *கடையயற் சீரொழிந்தமற்றெல்லாச் சீர்க் கண்ணு மெதுகைவரத் தொடுப்பது.*

**கீழக்கதுவாய்முரண்** - *கடையயற் சீரொழிந்தமற்றெல்லாச் சீர்க் கண்ணும் முரண்வரத்தொடுப்பது.*

**கீழ்க்கதுவாய்மோனை** - *கடையயற் சீர்க்கணின்றி யொழிந்தசீர்க்கண் மோனைவரத்தொடுப்பது.*

**கீழ்க்குரல்** - *கீழோசை.*

**கீழ்சாதி** - *ஈனகுலம்.*

**கீழ்தரம்** - *இளந்ததரம்.*

**கீழ்தல்** - *அழித்தல், கிழித்தல், பிளத்தல்.*

**கீழ்த்திசை** - *கிழக்கு.*

**கீழ்த்திசைப்பாலன்** - *இந்திரன்.*

**கீழ்நோக்கம், கீழ்நோக்கு** - *அதோமுகம், கீழ்ப்பார்வை.*

**கீழ்நோக்கி** - *நேர்வாளம்.*

**கீழ்நோக்குதல்** - *கீழேபார்த்தல், கீழேபோதல்.*

**கீழ்பால்** - *கிழக்கு.*

**கீழ்பாலவிதேகம்** - *நவகண்டத்தொன்று.*

**கீழ்பூமி** - *பாதலம்.*

**கீழ்ப்படிதல்** - *அடங்கிநடத்தல்.*

**கீழ்ப்படுதல்** - *அடங்குதல்.*

**கீழ்ப்படுத்துதல்** - *அடக்குதல்.*

**கீழ்ப்பணிதல்** - *அடங்குதல்.*

**கீழ்ப்பயிர்** - *பெரும்பயிருக்குணிற் குஞ்சிறுபயிர்.*

**கீழ்ப்பாடு** - *கீழ்ப்பக்கம்.*

**கீழ்ப்பாறை** - *கீழறை.*

**கீழ்ப்பிள்ளை** - *முதுமரங்களின் கீழ் நாட்டுந் தெங்கு முதலிய வற்றின் கன்று.*

**கீழ்ப்புறம்** - *கீழ்ப்பக்கம்.*

**கீழப்போக்கிப்பேசுதல்** - *தூஷணம் பேசுதல்.*

**கீழ்மகன்** - *ஈனன், சனி.*

**கீழ்மக்கள்** - *சண்டாளர்.*

**கீழ்மடி** - *அடிமடி.*

**கீழ்மாரி** - *அடிவானத்திற் கருக் கொண்டு பெய்யும்மழை.*

**கீழ்முகம்** - *கீழ்நோக்கும் முகம்.*

**கீழ்மேலாதல்** - *தலைகீழாதல், தலைதடுமாற்றமாதல்.*

**கீழ்மை** - *ஈனம்.*

**கீழ்வயிறு** - *அடிவயிறு.*

**கீழ்வாடை** - *வாடைக்கொண்டல்.*

**கீழ்வாய்** - *சிற்றெண், தாடி.*

**கீழ்வாரி** - *கீழ்மாரி.*

**கீழ்விதேகம்** - *கீழ்பாலவிதேகம்.*

**கீழ்விழுதல்** - *காரியத்துக்காகத் தாழ்தல்.*

**கீழ்வீடு** - *கீழ்க்கட்டுமனை.*

**கீளல்** - *கிழித்தல்.*

**கீளி** - *ஓர் மீன்.*

**கீளுதல்** - *கிண்டல், கிழித்தல்.*

**கீறல்** - *எழுதல், கிழித்தல், கீறுதல், பொன் முதலியவுரைத்தல்.*

**கீறு** - *அடையாளம், பிளவு.*

**கீறுதல்** - *கிறுக்குதல், குறிப்புக் காட்டுதல், தேய்த்தல், பிளக்குதல்.*

**கீற்றடித்தல்** - *கயிறடித்தல்.*

**கீற்றன்** - *ஓர் புடைவை.*

**கீற்று** - *கிடுகு, கீறல், பிளவு, அரதனக் குற்றம்.*

**கீனம்** - *குறைபாடு.*

**கீனர்** - *அற்பர்.*

**கீனன்** - *குலமில்லான்.*

**கீன்றல்** - *கிழித்தல்.*

## கு

**கு** - *இன்மைக்கும் எதிர்மறைக்கும் வருமோருபசற்கம், ஓரெழுத்து, குற்றம், சிறுமை, தடை, தொனி, நான்காமுருபு, நிந்தை, பாவம், பூமி, இருதிணைப்பாலொருமைத் தன்மை வினைவிகுதி, (உம்) உண்கு, சாரியை, (உம்) வருகுதி, பண்புப் பெயர்விகுதி, (உம்) நன்கு, பிற வினைவிகுதி, (உம்) போக்கு.*

**குகம்** - *அங்கீகரித்தல், அணிதல், கதியுள்ளகுதிரை, குருத்துவம், நுட்பம், மலைக்குகை, மறைவு.*

**குகரம்** - *மலைக்குகை, ஓரெழுத்து.*

**குகன்** - *குமரன், குரு.*

**குகனன்** - *எலி, பாம்பு.*

**குகூகண்டம்** - *குயில்.*

**குகூகம்** - *குயில்.*

**குகூபாலன்** - *ஆதிகூர்மன்.*

**குகூமுகம்** - *குயில்.*

**குகலிதம்** - *ஒலி, குயில், குரல்.*

**குகு** - *அமாவாசை, குய்யம் பற்றி யிருக்குந் நரம்பு.*

**குகுதன்** - *தசநாடியினொன்று.*

**குகுரம்** - *ஓர் தேசம்.*

**குகுரன்** - *நாய்.*

**குகுலா** - *கடுகுரோகிணி, தேனீ.*

**குகை** - *பஞ்சலோகங்களையுருக்கும் பாத்திரம், மலைமுழை, முனிவர் வாசம்.*

**குகைக்காமன்** - *கன்னார்.*

**குகைச்சி** - *புற்றாஞ்சோறு.*

**குகைப்புடம்** - *ஓர் வகைப்புடம்.*

**குகைமேனாதத்தி** - *சொன்னபேதி.*

**குக்கல்** - *இருமல்.*

**குக்கன்** - *நாய்.*

**குக்கி** - *வயிறு.*

**குக்கிலம்** - *அதிவிடயம்.*

**குக்கில்** - *குங்குலியம், செம்போத்து.*

**குக்குடசருப்பம்** - *பறைவை நாகம்.*

**குக்குடச்சூட்டு, குக்குடப்புடம்** - *கோழிப்புடம்.*

**குக்குடம்** - *கோழி.*

**குக்கடாதிவடகம்** - *ஓர் மருந்து.*

**குக்குதல்** - *இருமுதல்.*

**குக்குரம்** - *கோடகசாலை.*

**குக்குரன்** - *நாய்.*

**குக்குலி** - *செம்போத்து.*

**குக்குலிறத்தல்** - *செம்போத்துத் துவுதல்.*

**குக்குலு** - *குங்குலியம்.*

**குக்குறுப்பான், குக்குறுவான்** - *ஓர் குருவி.*

**குங்கிலிகம்** - *குங்கிலியம், வாலுளுவை.*

**குங்கிலியம்** - *குங்குலியம்.*

**குங்குதல்** - *குறைதல்.*

**குங்குமக்காவி** - *செங்காவி.*

**குங்குமச்சம்பா** - *ஓர் நெல்.*

**குங்குமபாஷாணம்** - *அஞ்சற்குளச்சி.*

**குங்குமப்பூ** - *ஓர் சரக்கு.*

**குங்குமம்** - *ஓர் மரம், செஞ்சாந்து.*

**குங்குமவலரி** - *செவ்வலரி.*

**குங்குமவாணிச்சி** - *தாளகம்.*

**குங்குமவர்னக்கல்** - *மஞ்சட்கல்.*

**குங்குலியக்கலையர்** - *அறுபத்து மூவரிலொருவர்.*

**குங்குலியம்** - *குக்குலு.*

**குங்குலு** - *குங்குலியம்.*

**குசக்கலம்** - *ஓடு.*

**குசத்தி** - *ஓடு, குசப்பெண், பூநீறு, பூவழலை.*

**குசந்தனம்** - *செஞ்சந்தனம்.*

**குசமசக்கு** - *பொய், வீண்மயக்கு.*

**குசமணை** - *தண்டசக்கிரம்.*

**குசம்** - *தருப்பைப்புல் நீர், மரப்பொது, முலை, வெறும்புறங் கூறல்.*

**குசலக்காரன்** - *தந்திரக்காரன், மந்திரவித்தைக்காரன்.*

**குசலப்புத்தி** - *தந்திரப்புத்தி.*

**குசலம்** - *தந்திரம், மந்திரவித்தை, மிக்ககல்வி.*

**குசலர்** - *அறிஞர், மிகவல்லோர்.*

**குசலவர்** - *இராமன் மக்கள்.*

**குசவர்** - *குயவர்.*

**குசளை** - *தடை.*

**குசன்** - *இராமன்மக்களிலொருவன், செவ்வாய்.*

**குசாக்கிரபுத்தி** - *அதிக நுண்ணிய புத்தி.*

**குசாக்கிரம்** - *தருட்பைநுனி.*

**குசாங்குலியம்** - *பௌத்திரம்.*

**குசாட்சம்** - *குரங்கு.*

**குசால்** - *சமாளம், வேடிக்கை.*

**குசிருதம்** - *பொல்லாங்கு.*

**குசினி** - *சிறியது, சிறுபயிர்.*

**குசீலன்** - *துட்டன்.*

**குசு** - *அதோவாயு.*

**குசுகுசுத்தல்** - *இரகசியம் பேசுதல்.*

**குசுகுசுப்பு** - *இரகசியம்.*

**குசுகுசெனல்** - *இரகசியவொலிக் குறிப்பு.*

**குசுமம்** - *பூ, காயா.*

**குசுமாகரம்** - *பூந்தோட்டம், வேனிற் காலம்.*

**குசுமாசவம்** - *பொல்லாங்கு.*

**குசும்பம்** - *ஓர் பூ, ஓர் மரம்.*

**குசும்பா** - *ஓர் புடைவை, செந்துருக் கம்பூ, வெண்மைகலந்தசிவப்பு.*

**குசும்பை மலர்மணி** - *கோவரங் கப்பது மராகம்.*

**குசுலம்** - *குதிரை.*

**குசேசயகரன்** - *சூரியன்.*

**குசேசயம்** - *தாமரை.*

**குசை** - *கடிவாளம், குதிரை கட்டுங் கயிறு, குதிரைமயிர், தருப்பை.*

**குசைத்தீவு** - *சத்ததீவினொன்று.*

**குசையன்** - *வீரவேகி.*

**குசோதகம்** - *தருப்பைநீர்.*

**குசோத்தியம்** - *தந்தரம்.*

**குச்சத்தின்பாதி** - *சிறுபுள்ளடி.*

**குச்சம்** - *ஓர் வகையலங்காரத்தூக்கு, குன்றி, கொத்து, நாணற்புல், பற் படகம், வெறும்புறங்கூறல்.*

**குச்சரம்** - *ஓர் தேயம்.*

**குச்சரர்** - *குச்சவியர்.*

**குச்சரி** - ஓர் பண்.

**குச்சரியர், குச்சலியர்** - குச்சரர்.

**குச்சி** - கூர்ச்சு, மயிர்ச்சிகைப்பூடு.

**குச்சிதம்** - குற்சிதம்.

**குச்சித்தல்** - குற்சித்தல்.

**குச்சிலியர்** - குச்சரர்.

**குச்சில்** - குடில்.

**குச்சு** - அடைப்பு, குடில், குற்றி, சிறுகம்பு, சிற்றில், பாவாற்றி, மயிர்வேர்முதலியமுடிச்சி, கூர், நுதி.

**குச்சுக்காரி** - விபசாரி.

**குச்சுச்சார்த்துதல்** - விக்கிரகங்களின முக்கெடுத்தல்.

**குச்சுப்புல்** - அமுக்கெடுக்கக்கட்டிய புல்.

**குச்சுவாங்குதல்** - இரத்தினங்களை யொப்பஞ்செய்தல்.

**குச்சை** - கொய்யகம்.

**குஞ்சம்** - ஈயோட்டி, குச்சு, குச்சுப் புல், குறள், குன்றிக்கொடி, கூன், கொத்து,கோட்சொல்லல்,சீதரங்க பாஷாணம், நூற்றிரு பதிழை தொடுத்திருக்கப் பட்டது, புளி நறளை, பூங்கொத்து, வீசுங் குஞ்சம், தந்தம், மருள்.

**குஞ்சரம்** - கருங்குவளை, யானை, மருள்.

**குஞ்சராசனம்** - அரசமரம்.

**குஞ்சனம்** - வளைவு.

**குஞ்சன்** - கட்டையன்.

**குஞ்சாயி** - குஞ்சியாயி.

**குஞ்சி** - ஆண்மயிர், குஞ்சியென் னேவல், மயிர்ப்பொது, குன்றிக் கொடி, பறவைக் குஞ்சு.

**குஞ்சிக்கடகம், குஞ்சுக்கடகம்** - சிறு கடகம்.

**குஞ்சிச்சடை** - சிறுசடை.

**குஞ்சிதநிருத்தம்** - ஒருகாறூக்கி யாடல்.

**குஞ்சிதம்** - ஓர்காறூக்கிநிற்றல், படங்குந்தி நிற்றல், வளைவு.

**குஞ்சிதாதனம்** - நாற் பெருவிரலை யூன்றி நிற்பது.

**குஞ்சித்தல்** - படங்குந்திநிற்றல்.

**குஞ்சிப்பெட்டி** - சிறுகடகம்.

**குஞ்சியப்பன்** - சிறியபிதா.

**குஞ்சியாயி** - சிறியதாய்.

**குஞ்சிரிப்பு** - குறுநகை.

**குஞ்சு** - எலிஅணில் முதலியவற்றின் பிள்ளை, பறவைக்குஞ்சு, ஆண்குறி.

**குஞ்சுபொரித்தல்** - குஞ்சுபிறப் பித்தல்.

**குஞ்சுரம்** - குன்றி.

**குஞ்சுறை** - பறவைக்கூடு.

**குடகம்** - ஓர் மலை, தேசமன்பத்தாறி னொன்று, மேற்கு.

**குடகரம்** - உத்தாமணி.

**குடகன்** - சேரன்.

**குடகு** - ஓர் தேசம்.

**குடக்கம்** - வளைவு.

**குடக்கி** - வளைவானது.

**குடக்கியன்** - வளைவானவன்.

**குடக்கு** - மேற்கு.

**குடக்குழி** - நீர்க்குண்டு.

**குடக்கூலி** - வாடகை.

**குடக்கோ, குடக்கோன்** - சேரன்.

**குடங்கட்டுதல்** - குடம் போற்றிரட்டி விடுதல்.

**குடங்கரை** - தண்ணீர்க்குடம் வைக்கு மிடம்.

**குடங்கர்** - குடம், குடிசை, கும்ப விராசி.

**குடங்கல், குடங்குதல்** - வளைவு.

**குடங்கை** - உள்ளங்கை.

**குடசப்பாலை** - ஓர் மரம்.

**குடசம்** - *மலைமல்லிகை, வெட்பாலை.*

**குடச்செவி** - *கும்பகன்னம்.*

**குடஞ்சுட்டு** - *பசுப்பொது.*

**குடதிசை** - *மேற்கு.*

**குடத்தி** - *ஓர் மிருகம், முல்லைநிலப்பெண்.*

**குடத்தியர்** - *இடைச்சியர்.*

**குடநாடு** - *ஓர் நகர்.*

**குடநாதன்** - *சேரன்.*

**குடந்தம்** - *குடம், கும்பகோணம், திரட்சி, நால்விரன்முடக்கிப் பெருவிரனிறுத்தி நெஞ்சிடை வைத்து நிற்றல்.*

**குடந்தை** - *கும்பகோணம்.*

**குடப்பம்** - *இருப்பை.*

**குடப்பாணா** - *ஓர் குடம்.*

**குடமண்** - *வெண்மணல்.*

**குடமல்லிகை** - *ஓர் மல்லிகை.*

**குடமாடல்** - *மாயோனாடல்.*

**குடமுழா** - *ஓர் முழவு.*

**குடமூக்கு** - *கும்பகோணம்.*

**குடமூதுதல்** - *குடத்தினுள்ளூதி ஒலி பிறப்பித்தல்.*

**குடம்** - *ஊர்ப்பொது, கும்பம், கும்பவிராசி, கைகொட்டிக் குவித்தல், கொடுந்தமிழ்நாட்டி னொன்று, சருக்கரை, திரட்சி, பசு, பூசம், மருதநிலத்தூர், மாயோனாடல், பட்டினம்.*

**குடம்பை** - *உடம்பு, பறைவைக்கூடு, முட்டை, நீர்நிலை.*

**குடம்வைத்தல்** - *ஓர் விளையாட்டு.*

**குடரி** - *குடாரி.*

**குடர்** - *குடல்.*

**குடலேறுதல்** - *குடல்பிசகிமேலிடுதல்.*

**குடலேற்றம்** - *குடலேறுதல்.*

**குடலை** - *தொக்கட்டி, பூக்கூடை முதலியன, பொத்தி.*

**குடலைப்பூச்சி** - *ஓர் பூச்சி.*

**குடல்** - *குடர்.*

**குடல்திருகுதல்** - *குடர்ப்பிசகுதல்.*

**குடல்வலி** - *ஓர் நோய்.*

**குடல்வாதம்** - *ஓர் நோய்.*

**குடவப்பருப்பதம்** - *ஓர் மலை.*

**குடவர்** - *இடையர்.*

**குடவளப்பம்** - *இருப்பை.*

**குடவறை** - *குகை, சிற்றறை.*

**குடவன்** - *ஒருகொட்டையுள்ளது, கோணலானவுருவுள்ளது.*

**குடவிளக்கு** - *திருமணத்தீபம்.*

**குடவு** - *குடவென்னேவல், குமரனாடல், வளைவு.*

**குடவுண்ணி** - *ஒரூண்ணி.*

**குடவுதல்** - *வளைதல்.*

**குடவுளுந்தன்** - *ஓர் புலவன்.*

**குடவெழுத்தாணி** - *குடங்கட்டிய வெழுத்தாணி.*

**குடற்கொழுப்பு** - *நெய்ப்பு.*

**குடற்பற்றாப்பிஞ்சு** - *இளம்பிஞ்சு.*

**குடற்பிடுங்கி** - *துருசி.*

**குடற்பிரிவு** - *குடற்பிசகு.*

**குடற்புரை** - *குடற்றுவாரம்.*

**குடற்பை** - *குடற்போர்வை.*

**குடற்போர்வைத்தோற்றம்** - *நால்வகைத்தோற்றத்தினொன்று. அஃது தோற்காதுள்ளன.*

**குடா** - *மூலை.*

**குடாக்கடல்** - *மூலைவிழுந்தகடல்.*

**குடாசகம்** - *கோள், வஞ்சகம்.*

**குடாசகன்** - *கோட்காரன், வஞ்சகன்.*

**குடாசுதல்** - *தந்தரம்.*

**குடாது** - *மேற்கு.*

**குடாபாகம்** - *சங்கீதத்தினோர் சுவை, செய்யுட்சுவையினொன்று.*

**குடாரம்** - *கோடாலி.*

**குடாரி** - *யானைத்தோட்டி, திப்பிலி.*

**குடாரு** - *தயிர்கடைதாழி.*

**குடார்த்தகோளம்** - *பூமியின் மேற்குப் பாதியுண்டை.*

**குடாவடி** - *கரடி.*

**குடி** - *ஊர்ப்பொது, குடியென்னேவல், குலம், கோத்திரம், சமு சாரம், நெற்றிப்புருவம், பட்டினம், மருத நிலத்தூர்.*

**குடிகாரன்** - *சுராபானி.*

**குடிகெடுத்தல்** - *குடிகளைநட்டப் படுத்தல்.*

**குடிகேடன்** - *துட்டன்.*

**குடிகேடி** - *துட்டை.*

**குடிகேடு** - *குடியழிவு.*

**குடிகை** - *ஏலரிசி.*

**குடிகொள்ளுதல்** - *வாசமாயிருத்தல்.*

**குடிக்காடு** - *ஊர்ப்பொது, மருத நிலத்தூர்.*

**குடிசனம்** - *அரசாட்சிக்குள்ளடங் கியசனம்.*

**குடிசெயல்வகை** - *தன்குடும்பத்தை உயர்த்தும்வகை.*

**குடிசை** - *குடில்.*

**குடிஞை** - *ஆறு, கூகை, சிற்றில், பறவைப்பொது, மருதநிலத்தூர், வீடு.*

**குடித்தல்** - *பருகுதல்.*

**குடித்தனகாரன்** - *இல்லாச்சிரமி.*

**குடித்தனம்** - *இல்வாழ்க்கை.*

**குடிநாசம்** - *குடியழிவு.*

**குடிநிலம்** - *குடியிருக்கத்தக்கநிலம்.*

**குடிநீர்** - *ஓர்வகைக்கஷாயம்.*

**குடிபடை** - *குடிசனம்.*

**குடிபுகுதல்** - *புதுவீட்டிற்சேர்தல்.*

**குடிபோதல்** - *குடிபுகுதல், குடியெழும் பல்.*

**குடிப்பழுது** - *வசை.*

**குடிப்பிறப்பு** - *ஒழுக்கமுடைய குடியிற் பிறத்தல்.*

**குடிப்பு** - *பானம்.*

**குடிப்பெண்** - *குலஸ்திரீ.*

**குடிப்பெயர்** - *குலத்தால் வந்த பெயர்.*

**குடிமகன்** - *முக்குலத்தோர்க்குமேவல் செய்வோன்.*

**குடிமக்கள்** - *பணிசெய்யும் பதி னெண் வகைச்சாதி.*

**குடிமதிப்பு** - *குடிக்கணக்கு, குடியிறை.*

**குடிமார்க்கம்** - *முறைப்படிவிவாகம் முடித்திருத்தல்.*

**குடிமுறை** - *குடித்தனம்.*

**குடிமை** - *குடிமக்கட்டொழில், குடிமக்கள், குடியினியல்பு.*

**குடியரசு** - *குடியாட்சி.*

**குடியர்** - *கள்முதலியகுடிப்போர்.*

**குடியழிதல்** - *குடிகெடுதல்.*

**குடியழித்தல்** - *குடிகெடுத்தல்.*

**குடியழிவு** - *குடிநாசம்.*

**குடியன்** - *குடிகாரன்.*

**குடியாட்சி** - *தனகுடும்பத்தை நடத்தல்.*

**குடியாட்டம்** - *குடிவாழ்க்கை.*

**குடியானவர்** - *குடிசனம்.*

**குடியியல்பு** - *குடிமுறை.*

**குடியிருத்தல்** - *குடியாயிருத்தல், குடி வைத்தல்.*

**குடியிருப்பு** - *குடிநிலம், குறிச்சி.*

**குடியிறங்குதல்** - *மறுதேசத்திற் சனங்கள் வந்துகுடியேறுதல்.*

**குடியிறை** - *குடிவீதம் வைத்தவரி.*

**குடியெழுப்புதல்** - *குடிகலைத்தல்.*

**குடியெழும்புதல்** - *இருந்தவீட்டை விட்டுப்போதல்.*

**குடியேறுதல்** - *சனங்கள் குடியாய் வந்து சேர்ந்திருத்தல்.*

**குடியேற்றம்** - *குடியேறுந்தன்மை.*

**குடியேற்றுதல்** - *குடியிருக்கச்செய்தல்.*

**குடியோட்டிப்பூண்டு** - *குருக்கு.*

**குடிலச்சி** - *கருவண்டு.*

**குடிலம்** - *ஆகாயம், குராமரம், சடை, வஞ்சகம், வட்டம், வளைவு.*

**குடிலை** - *பிரணவம்.*

**குடிலைப்பொருள்** - *பிரணவத்தினுட் பொருள்.*

**குடில்** - *ஆகாயம், சிற்றில்.*

**குடிவருதல்** - *குடிபுகுதல்.*

**குடிவாங்குதல்** - *குடியெழும்பிப் போதல்.*

**குடிவாழ்க்கை** - *இல்வாழ்க்கை, மருத நிலத்தூர்.*

**குடிவெறி** - *மதுபானமஸ்து.*

**குடிவைத்தல்** - *குடியிருத்துதல், வாழ் வித்தல்.*

**குடு** - *கள்.*

**குடுகு** - *குடுக்கை.*

**குடுகுடா, குடுகுடி** - *கஞ்சாக் குடுக்கை.*

**குடுகுடுகிழவன்** - *கூனற்கிழவன்.*

**குடுகுடுத்தல்** - *துரிதமாயோடித் திரிதல்.*

**குடுகுடுத்தான்** - *சுறுக்கன், பரபரப் பாயோடித்திரிவோன்.*

**குடுகுடுப்பு** - *துரிதச்செலவு.*

**குடுகுடுப்பை** - *அறக்காய்ந்து வற்ற லானது, கஞ்சாக்குடுகு, சிற் றுடுக்கை.*

**குடுகுடெனல்** - *விரைவின் குறிப்பு.*

**குடுக்குக்குடுக்கெனல்** - *ஒலிக் குறிப்பு.*

**குடுக்கை** - *குடுகு.*

**குடுமி** - *ஆண்மயிர், உச்சி, கதவிற் குடுமி, மயிர்முடி, மலையுச்சி, வெற்றி, நுதி, வில்லு.*

**குடுமிக்கதவு** - *சுழியாணிக்கதவு.*

**குடுமிப்பருந்து, குடுமியன்** - *ஓர்பருந்து.*

**குடுமிவைத்தல்** - *பார்ப்பார் முதலிய வேதத்திற்குரிய வருணத்தாரின் பிள்ளைகட்குச் செய்யுமோர் சடங்கு.*

**குடும்பக்கோடாலி** - *குடிகளையழிவு பண்ணுகிறவன்.*

**குடும்பத்தானம்** - *களத்திரத்தானம்.*

**குடும்பப்பிரதிட்டை** - *குடிவைத்தல்.*

**குடும்பம்** - *உறவு, மனைவி, வீடு.*

**குடும்பன்** - *பள்ளரிற்றலைவன்.*

**குடும்பி**-*சமுசாரி,பள்ளி களிற்றலைவி.*

**குடும்பினி** - *மனைவி.*

**குடும்பு** - *பூங்கொத்து, சுற்றம்.*

**குடுகை** - *கமண்டலம், குண்டான், சிறுபானை.*

**குடுவையாறு** - *ஓர்நதி.*

**குடை** - *இராசசின்னத்தொன்று, உடைவேல், உட்டுளைப்பொருள், கவிகை, குடையென் னேவல், குமரனாடல், மிதியடி முதலிய வற்றின் குமிழ்.*

**குடைகரி** - *பஞ்சலோகங்களை யுருக்குமபடிகுடையப்பட்டகரி.*

**குடைகவித்தல்** - *குடைநிழற்றல்.*

**குடைக்காரன்** - *குடைபிடிப்போன்.*

**குடைக்கிழங்கு** - *சிற்றரத்தை.*

**குடைக்கொள்ளுதல்** - *குடைபோ லெழும்புதல், குமிழிக் கொள்ளு தல்.*

**குடைச்சல்** - *குடைவு, வருத்தம்.*

**குடைச்செவி** - *உள்வளைந்தசெவி.*

**குடைச்செவிக்கொள்ளல், குடைச் செவியிடுதல், குடைச்செவி யெடுத் தல்** - *மிருகங்கோபத்தினாலே செவியை நிமிர்த்தல்.*

**குடைதல், குடையல்** - *அரித்தல், கடை தல், துளைத்தல், தோண்டல், நீராடுதல், கவிதல்.*

**குடைநிழற்றல்** - *உலகத்தைப் பாது காத்தல், குடையானிழல் செய்தல்.*

**குடைப்புல்** - *ஓர் புல்.*

**குடையன் பருவதம்** - *பித்தளை.*

**குடையாணி** - *சடையாணி.*

**குடைவண்டு** - *ஓர் வண்டு.*

**குடைவு** - *குடைதல், வளைவு.*

**குடைவேல்** - *ஓர் மரம்.*

**குடோரம்** - *கடூரம்.*

**குடோரி** - *கீறிமருந்துபதித்தல், கீறுதல், குடாசகம், சுதைமண், வங்க மணல், வெண்காரம், வெள்ளைப் பாஷாணம்.*

**குடோரியாடல், குடோரியிடுதல்** - *சன்னிக்குவிஷத்துக்குக்குடோரி வைத்தல்.*

**குடோரிவைத்தல்** - *கீறிமருந்து வைத்தல்.*

**குட்டக்கரப்பன்** - *ஓர் கரப்பன்.*

**குட்டக்குறடு** - *ஓர் குறடு.*

**குட்டம், குஷடம்** - *ஆழம், குட்ட நோய், குளம், கொடுந்தமிழ் நாட்டினொன்று, கோட்டம்.*

**குட்டநாசனம்** - *வெண்கடுகு.*

**குட்டரி** - *மலை.*

**குட்டல்** - *அபகரித்தல், குட்டுதல், தகர்த்தல்.*

**குட்டனம்** - *தட்டடல்.*

**குட்டன்** - *ஆட்டுக்குட்டி, குழந்தை, மகன்.*

**குட்டாரி** - *கந்தகம்.*

**குட்டான்** - *ஓர் பெட்டி.*

**குட்டி** - *ஆடு - கழுதை - கீரி - குதிரை - நரி - நாய் - பன்றி - பாம்பு - புலி - பூனை - மான் - முதலை - முயல் இவற்றின் குட்டி, குரங்குமுதல் மரக்கோட்டின் வாழ்விலங்கின் பிள்ளை, வாழைக்கன்று.*

**குட்டிக்காய்** - *அடுத்திருக்குஞ் சிறுகாய், கண்பிடிக்காய்.*

**குட்டிக்கொக்கான்** - *கொக்கானி லோர் வகை.*

**குட்டிச்சாத்தன்** - *ஓர் பேய்.*

**குட்டிச்சுவராய்ப்போதல்** - *கெட்டுப் போதல்.*

**குட்டிச்சுவர்** - *சிறுசுவர்.*

**குட்டித்தக்காளி** - *ஓர் பூடு.*

**குட்டித்தாய்ச்சி** - *குட்டி யுண்டா யிருக்கும் விலங்கின் பெண்.*

**குட்டிபடுதல்** - *ஆடுமுதலிய சினை கொள்ளல்.*

**குட்டிபோடுதல்**-*ஒன்றுகூடப் போடல், குட்டியீனுதல்.*

**குட்டிப்பல்** - *பல்லோடடுத்து முளைக் கும்பல்.*

**குட்டிப்பை** - *சிறுபை.*

**குட்டிமம்** - *கற்படுத்த இடம்.*

**குட்டியம்** - *சுவர்.*

**குட்டியிடுக்கி** - *கோடைக்கிழங்கு, கோட்டம், சிற்றரத்தை.*

**குட்டியிடுதல்** - *பாம்பு முதலிய குட்டி யீனுதல்.*

**குட்டிவிரல்** - *விரலோடடுத்து முளைக் குஞ் சிறுவிரல்.*

**குட்டிவைத்தல்** - *கொக்கானிலோர் செய்கை.*

**குட்டினம்** - *கருஞ்சீரகம்.*

**குட்டினி** - *வசவி.*

**குட்டு** - *குட்டுதல், குட்டென்னேவல்.*

**குட்டுணி** - *குட்டுப்படுகிறவன், சுணை கெட்டவன்.*

**குட்டுண்ணல்** - *குட்டுப்படல்.*

**குட்டுதல்** - *அணாப்புதல், தலையிலே சொட்டுதல்.*

**குட்டுவன்** - *சேரன்.*

**குட்டை** - *ஓர் வியாதி, கடையாயிருப் பது, குள்ளம், சிறுகுளம், கைத் துண்டு, தொழுமரம்.*

**குட்டையன்** - *கட்டையன், குட்டை நோயுள்ளோன்.*

**குணகண்டி** - *சிவதை.*

**குணகம்** - பெருக்குந்தொகை.

**குணகர்** - கணக்கர்.

**குணகாங்கியம்** - ஓர் நூல்.

**குணகி** - குணமுள்ளவன்.

**குணகு** - குணகென்னேவல், பிசாசம்.

**குணகுதல்** - சோம்புதல், தனகுதல், வளைதல்.

**குணக்குறைவிசேடம்** - குணக்குறையினால் மேன்மைதோன்ற நிற்பது, (உம்) கோட்டந் திருப்புவனங் கொள்ளாதவர் செங்கோல்.

**குணக்கு** - கிழக்கு, கோணல்.

**குணக்குதல்** - பின்னிற்றல், வளைத்தல்.

**குணக்குன்று** - கடவுள், குண முள்ளவன்.

**குணக்கெடுத்தல்** - குணத்தைக் கெடுத்தல், வளைவெடுத்தல்.

**குணக்கேடு** - குணமின்மை.

**குணங்கர்** - பிசாசம்.

**குணங்கல்** - சுணங்கல், வளைதல்.

**குணங்கு** - குணங்கென்னேவல், பிசாசம்.

**குணங்குதல்** - வளைதல்.

**குணங்குறி** - அடையாள முஞ்சு பாபமும்.

**குணசந்தி** - நிலைமொழி யீற்றினின்ற அகர ஆகாரமும் வருமொழி முதலி னின்ற இகரவீகாரமுங்கெட ஏகாரமும் நிலை மொழியீற்றகர ஆகாரமும் அவற்றொடு புணர வந்த உகர ஊகார முங்கெட ஓகாரமுந் தோன்றுவது (உம்) சுரேந்திரன் வரோதையன்.

**குணசாலி** - நற்குணன்.

**குணசைவம்** - ஓர் சைவம்.

**குணஞ்ஞன்** - குணவான்.

**குணட்டு** - கதிரின் குலை.

**குணதிசை** - கிழக்கு.

**குணத்தன்மையலங்காரம்** - ஓரலங்காரம்.

**குணத்தானணையும் பெயர்** - அளவு, அறிவு, ஒப்பு, வடிவு, நிறம், கதி, குடி, சாதி சிறப்பு முதலியவற்றான் வரும் பெயர்.

**குணத்திரயம்** - முக்குணம். அஃது இராசதம், சாத்துவிதம், தாமதம்.

**குணநிதி** - கடவுள், குணமுள்ளோன்.

**குணத்தொகை** - பண்புத்தொகை.

**குணபத்திரன்** - அருகன், கடவுள்.

**குணபம்** - பிணம்.

**குணபலம்** - அதிவிடயம்.

**குணபவூணர்** - இராக்கதர்.

**குணபாகி, குணபாசி** - பிசாசம்.

**குணபாடல்** - குணவாகடம்.

**குணபிரதி** - குணம்.

**குணபேதம்** - குணமாறுதல், ஆங்காரம்.

**குணப்படுதல்** - சுகமடைதல், நற்குணமடைதல்.

**குணப்பண்பு** - குணத்தாலாயபண்பு.

**குணப்பிழை** - துற்குணம்.

**குணப்பெயர்** - பண்புப்பெயர்.

**குணமாதல்** - சீர்ப்படுதல், சுகமாதல்.

**குணம்** - இராசமுதலியகுணம், இலட்சணம், குடம், சீர்மை, நாணி, நிறம், நூல், பண்பு.

**குணவி** - சீந்தில்.

**குணலை** - ஓர் கூத்து, வீராவேசத் தாற் கொக்கரித்தல்.

**குணலையீடுதல்** - கைதட்டிக் கூவுதல்.

**குணவதி, குணவந்தன்** - குணமுள்ளவன்.

**குணவாகடம்** - குணங்களறிவிக்கும் வைத்தியசாத்திரம்.

**குணவாகுபெயர்** - பண்புப்பெயரைப் பண்பிக்குரைத்தல், (உம்) நீலம்.

**குணவான்** - நற்குணன்.

**குணவிலக்கு** - ஓரலங்காரம், அஃது குணத்தை மறுத்துச் சொல்வது.

**குணவுவமம்** - பண்புவமம் (உம்) பான்மொழி.

**குணனம்** - கணக்குப்பெருக்கல்.

**குணாகுணம்** - சாத்தியாசாத்தியம், குணமுங்குணகீனமும்.

**குணாதீதம்** - குணங்கடந்தது.

**குணாதீதன்** - சீவமுத்தன்.

**குணார்த்தகோளம்** - கிழக்குப்பாதி யுண்டை.

**குணாலம்** - ஓர்புள்.

**குணாலயன்** - கடவுள்.

**குணாவநுதி** - குணத்தினுயர்வு தோன்றக் கூறுமலங்காரம்.

**குணாம்புதல்** - நளினம்பண்ணுதல்.

**குணாலை** - குணாலைக்கூத்து.

**குணி** - ஊமை, குணியென்னேவல், பண்பி, வில், முடம்.

**குணிக்கரித்தல்** - கணக்குப் பெருக்கு தல்.

**குணிக்காரம்** - கணக்குப் பெருக்குந் தன்மை.

**குணிதம்** - பெருக்கிக்கண்ட பேறு மடங்கு.

**குணித்தல்** - எண்பெருக்கல், மதித்தல்.

**குணிப்பு** - மதிப்பு.

**குணிப்பெயர்** - குணத்தையுடைய பொருட்பெயர்.

**குணில்** - ஓர் பறை, கவண், குறுந்தடி, பறையடிக்குந்தடி.

**குணு** - புழு.

**குணுகல்** - சிணுங்குதல்.

**குணுகுணுத்தல், குணுகுதல்** - சிணுங் குதல், மூக்காற்சத்தம் வரப்பேசுதல்.

**குணுகுணுப்பு** - மூக்காலொலி யெழப் பேசல்.

**குணுகுணெனல்** - குணுகுணுத்தல்.

**குணுக்கம்** - அனுக்கம்.

**குணுக்கல்** - நுணுக்கல், வளைத்தல்.

**குணுக்கன்** - மூக்காற்சத்தம் வரப் பேசுகிறவன்.

**குணுக்கு** - மாதர்காதணியி னொன்று, வலையின் முடிந்திருக்குமீயம்.

**குணுங்கர்** - சண்டாளர், தோற்கருவி யாளர், பிசாசர், குயிலுவர்.

**குணுங்கு** - பிசாசம்.

**குணுங்குதல்** - அனுங்குதல்.

**குண்டகன்** - தலைவனைப் பிழைத் தீன்ற சோரபுத்திரன்.

**குண்டக்கம்** - குடாசகம்.

**குண்டக்கிரியம்** - ஓர் பண்.

**குண்டக்கிரியை** - ஓரிராகம்.

**குண்டணி** - பின்புறணி.

**குண்டம்** - ஓமக்கிடங்கு, கிடங்கு, கிணறு, குடுவை, குண்டான், குளம், துட்டை, பானை.

**குண்டலகேசி** - ஓரிலக்கியநூல்.

**குண்டலம்** - ஆகாயம், காதணியி னொன்று, தவத்தோர்காதணி, வட்டம்.

**குண்டலன்** - பலராமன்.

**குண்டனம்** - வளைதல்.

**குண்டலி** - இசங்கு, ஓர் வாயு, காளி, சீந்தில், தாளகம், பாம்பு, மயில், மான், மூலாதாரம்.

**குண்டலிசத்தி** - வல்லபசத்தி.

**குண்டவண்டன், குண்டவண்டியன்** - குண்டல்வண்டியுள்ளது.

**குண்டனி** - குறளை, வசவி.

**குண்டன்** - அடிமை, குண்டனி சொல்வோன், வளைந்தது.

**குண்டாணிக்கொடி** - ஓர் கொடி.

**குண்டான்** - பெருஞ்சட்டி.

**குண்டி** - ஈரல், சகனம், மீன்சினை.

**குண்டிகம்** - எருவராட்டி, துகள்.

**குண்டிகை** - கமண்டலம், குடம்.

**குண்டிதம்** - *துகள்.*

**குண்டியம்** - *பழிச்சொல், பொய்.*

**குண்டில்** - *ஓர் செடி, சிறுச்செய்.*

**குண்டினபுரம்** - *தமையந்தி பிறந்தபுரம்.*

**குண்டீரம்** - *தத்துவம்.*

**குண்டு** - *ஆண், ஆண்குதிரை, ஆழம், உருண்டை, குளம், தாழ்வு, திரண்டகல், நிறைகல்.*

**குண்டுக்கட்டு** - *கூன்வாங்கிக்கட்டுங் கட்டு.*

**குண்டுக்கழுதை** - *ஆண்கழுதை.*

**குண்டுக்கிராமம்** - *சிறுகிராமம்.*

**குண்டுக்குழற்றுவக்கு** - *பருங் குழற்று வக்கு.*

**குண்டுக்குழை** - *குண்டுக்குழல்.*

**குண்டுச்சட்டி** - *குழிச்சட்டி.*

**குண்டுச்சுழி** - *எழுத்துக்களின் குண்டாகாரச்சுழி.*

**குண்டுப்பிணையல்** - *குண்டுள்ள பிணையல்.*

**குண்டுரோசனை** - *குண்டோசனை.*

**குண்டூசி** - *கொண்டையுள்ளவூசி.*

**குண்டெழுத்தாணி** - *குடவெழுத் தாணி.*

**குண்டேறு** - *ஓர்மீன்.*

**குண்டை** - *இடபவிராசி, ஈகைக் கொடி, எருது, சட்டி.*

**குண்டைச்சம்பா** - *ஓர் நெல்.*

**குண்டோசனை** - *ஓர் கிழங்கு.*

**குண்டோதரன்** - *ஓர் பூதன்.*

**குணணியம்** - *கணக்கிற்பெருக்குதல், குணம்.*

**குதக்கேடு** - *சீர்கேடு, துப்புக்கேடு.*

**குதட்டுதல்** - *அதக்குதல், கன்று முதலியன பால்குடித்து வாயுதப்பு தல்.*

**குதபகாலம்** - *பிதிர்புண்ணியகாலம். அஃது பதினேழரைநாழிகை தொடங்கியிருபது நாழிகை வரையும்.*

**குதபசத்தகம்** - *பிதிர்சிராத்தத்திற்கு வேண்டிய ஏழ்திரவியம்.*

**குதபம்** - *தருப்பைப்புல்.*

**குதபன்** - *சூரியன், தீ.*

**குதப்பம்** - *கலக்கம், மாறுபாடு.*

**குதப்பல்** - *குதப்புதல்.*

**குதப்புதல்** - *அதுக்குதல், உதப்புதல்.*

**குதம்** - *தருப்பை, மலவாயில்.*

**குதம்பல்** - *இறுக்கமில்லாதது, குதம் புதல்.*

**குதம்புதல்** - *அலைசுதல், கொதித்தல்.*

**குதம்பை** - *ஓராபரணம், ஓர் பூடு.*

**குதம்பைச்சித்தர்** - *ஓர் சித்தர்.*

**குதரம்** - *மலை.*

**குதர்க்கம்** - *முறைகெட்டதருக்கம்.*

**குதர்க்கி** - *வீண்தருக்கமுள்ளவன்.*

**குதர்தல்** - *குதறுதல், கோதிவகிர்தல், சிதறுதல்.*

**குதலை** - *அறிவிலான், மழலைச் சொல்.*

**குதலைவார்த்தை** - *மழலைமொழி.*

**குதறுதல்** - *உதறுதல்.*

**குதனம்** - *குதனை.*

**குதனு** - *அவலட்சணசரீரம், இலட் சணசீனன், குபேரன்.*

**குதனை, குதனைக்கேடு** - *துப்புக்கேடு.*

**குதாங்குரம்** - *மூலம்.*

**குதாவிடை** - *ஆராய்வு, குதர்க்கம், குழப்பம்.*

**குதானன்** - *தாழிச்செடி.*

**குதி** - *அடிப்புறத்துமூலை, அதிமிதி, கால்கைக்குதி, குதியென்னேவல், முயற்சி.*

**குதிகால்** - *குதிங்கால்.*

**குதிகொள்ளல்** - *குதித்தல், பெருகுதல், பெருமைக் குணம்பண்ணுதல், பொலிதல்.*

**குதிக்கள்ளன்** - *குதிவாதம்.*

**குதிக்கால், குதிங்கால்** - *காற்குதி.*

**குதித்தல்** - *கடத்தல், பாய்தல், வெல்லுதல்.*

**குதிப்பிளவை** - *ஓர் சிலந்தி.*

**குதிப்பு** - *குதித்தல்.*

**குதிமுள்** - *குதிரைசெலுத்துங் கருவியினொன்று.*

**குதியன்** - *குதிப்பு, மதத்தாலதிமிதி பண்ணல்.*

**குதியன்குத்துதல்** - *களித்து விளையாடல்.*

**குதிரை** - *நால்வகைத்தானையினொன்று, அஃது, பரிமா.*

**குதிரைகொடுத்தல்** - *தோற்றோர் வென்றோரைச்சுமத்தல்.*

**குதிரைகொல்லி** - *ஓர்நோய்.*

**குதிரைக்கசை** - *குதிரைச்சவுக்கு.*

**குதிரைக்கல்லணை** - *சேணம்.*

**குதிரைக்கலிசனை** - *குதிரையுடுப்பு.*

**குதிரைக்காரன்** - *குதிரைப்பாகன், குதிரைவீரன்.*

**குதிரைக்குளம்பன்** - *ஓர் வகைப் பொற்காசு.*

**குதிரைக்குளம்பு** - *நீர்க்குளிரி.*

**குதிரைக்குளம்புமோதிரம்** - *ஓர் வகை ஆழி.*

**குதிரைச்சம்மட்டி, குதிரைச்சவுக்கு** - *குதிரையடிக்குங்கயிறு.*

**குதிரைச்சாலை** - *குதிரைலாயம்.*

**குதிரைச்சீட்டு** - *பந்தயச்சீட்டு.*

**குதிரைப்பட்டை** - *ஓடுதாங்கி.*

**குதிரைப்பந்தயம்** - *குதிரை யோட்டத்துக்கு வைக்கும் பந்தயம்.*

**குதிரைப்பந்தி** - *குதிரைச்சாலை.*

**குதிரைப்பயிரி** - *ஓர் பூடு.*

**குதிரைப்பற்பாஷாணம்** - *ஓர்பாஷாணம்.*

**குதிரைப்பாகன்** - *குதிரைவிடுவோன்.*

**குதிரைமரம்** - *கால்வாயடைக்குங் கதவு.*

**குதிரைமறி** - *பெண்குதிரை.*

**குதிரைமார்க்கம்** - *குதிரைசெல்வழி.*

**குதிரையங்கபடி** - *குதிரையேறும்படி.*

**குதிரையிலக்கணம்** - *குதிரையின் சுழி முதலியவுறுப்புக்கள்.*

**குதிரையேறல்** - *தோற்றோர்மேலேறல், பரிமேலேறல்.*

**குதிரையேற்றம்** - *குதிரையேறும் பயிற்சி.*

**குதிரைராவுத்தன்** - *மாவுத்தன்.*

**கதிரைலாயம்** - *குதிரைப்பந்தி.*

**குதிரைவலி** - *ஓர் நோய்.*

**குதிரைவாய்க்கருவி** - *கடிவாளம்.*

**குதிரைவாய்வடம்** - *குசைக்கயிறு.*

**குதிரைவாலி** - *ஓர் சாமை, ஒரு புல்.*

**குதிரைவாலிச்சம்பா** - *ஓர் நெல்*

**குதிரைவையாளிவீதி** - *புரவிவட்டம்.*

**குதிர்** - *கூடு, நென் முதலிய வைக்குங் கூடு.*

**குதிவாதம்** - *ஓர் நோய்.*

**குதுகம்** - *விருப்பம்.*

**குதுகுலித்தல்** - *மிகுகளிகொள்ளல்.*

**குதுகுலிப்பு** - *மயிர்ச்சிலிர்ப்பு, மிகு மகிழ்ச்சி.*

**குதும்பகர்** - *தும்பை.*

**குதுவை** - *அடைவு, ஈடு.*

**குதூகலம்** - *விருப்பம்.*

**குதூணகம்** - *கண்ணோயினொன்று.*

**குதை –** *பாசி, முனை, விற்குதை.*

**குதைமணி –** *சட்டைத்தெறி.*

**குத்தகை** - *மதித்துக்கொள்ளல், மதியத்துக்குவிற்றல்.*

**குத்தகைகாரன்** - *மதியத்துக்கு வாங்கினவன்.*

**குத்தகைவேலை** - பொருத்தவேலை.

**குத்தம்** - இரட்சித்தல்.

**குத்தரசம்** - பெருங்காயம்.

**குத்தல்** - அடித்தல், உரோசம் வரப் பேசல், உறைக்கச் சொல்லல், ஒருவர் சொன்ன சொற்றைத்தல், குத்துதல் இஃது நால்வகை யூறு பாட்டினொன்று, மெய்ப்பரிச மெட்டினுமொன்று, சிறுகவார்த் தல், நெரித்தல், புதைத்தல், வாயு முதலிய வடைசல்.

**குத்தாலர்** - கடுரோகிணி.

**குத்தி** - அடக்கம், மண்.

**குத்திக்கொல்லர்** - பண அஞ்சற் காரர்.

**குத்திடுதல்** - குத்தியள்ளுதல், நிறு திட்டம்.

**குத்திப்பேசல்** - உரோசம்வரப்பேசல், உறைக்கப்பேசல்.

**குத்திரம்** - சீக்கிரம், பொய், மலை, வஞ்சகம்.

**குத்திரன்** - வஞ்சகன்.

**குத்து** - உலக்கை முதலியவற்றாற் குற்றல், குத்தென்னேவல், கையைப் புதைத்தள்ளல், சணல், தைத்தல், நிறுதிட்டமானது, நேர், வாயுக் குத்து.

**குத்துகோல், குத்துக்கோல்** - முட்கோல்.

**குத்துக்கரணம்** - ஓர் விளையாட்டு.

**குத்துக்கரந்தை** - ஓர் கரந்தை.

**குத்துக்காரை** - ஓர் காரை.

**குத்துக்கால்** - தேரினிறுத்துங் கால் கள், நிறுதிட்டமாய் நிற்குங்கால்.

**குத்துக்காற்சம்மட்டி** - ஓர்மரம்.

**குத்துக்காற்பயறு** - ஓர் பயறு.

**குத்துக்குளம்பு** - குத்தெனநிற்குங் குளம்பு.

**குத்துக்கோரை** - ஓர் கோரை.

**குத்துச்செடி** - நிலம்பற்றிப்படராத செடி.

**குத்துணி** - ஓர் புடைவை, தழுக்குணி.

**குத்துதல்** - குத்தல்.

**குத்துத்திராய்** - ஓர் திராய்.

**குத்துப்பகன்றை** - ஓர் பகன்றை.

**குத்துப்பயளி** - ஓர் கீரை.

**குத்துப்பன்னீர்** - ஓர் மரம்.

**குத்துப்புள்** - புள்ளடித்தலிலோர் வகை.

**குத்துப்போர்** - நிறுதிட்டமாய் வைக் குஞ்சூடு.

**குத்துவாய்** - கடிவாய்.

**குத்துவாள்** - சுரிகை.

**குத்துவிளக்கு** - ஓர் விளக்கு.

**குத்தூசி** - ஓர் கருவி.

**குத்தென** - நேரே.

**குநீதி** - துன்னீதி, நீதிகேடன்.

**குந்தகம்** - குந்தக்கம், தடை.

**குந்தக்கம்** - குழப்பம், கோள்.

**குந்தமம்** - பூனை.

**குந்தம்** - ஓர் பாஷாணம், கண்ணோய் குதிரை, குருந்தமரம், கைவேல், சிறுசவளம், சூலம், நோய், பெருஞ்சவளம், ஓர் நிதி.

**குந்தரைத்தல்** - வீணாயிருத்தல்.

**குந்தலிக்கம்** - வெள்ளைப்போளம்.

**குந்தளம்** - தேயமன்பத்தாறினொன்று, பெண்மயிர், மயிர்க் குழற்சி, மயிர்ப்பொது.

**குந்தனம்** - மணியழுத்தல்.

**குந்தாணி** - குந்தநோய், பருவுரல்.

**குந்தாணிப்பீரங்கி** - ஒரு பீரங்கி.

**குந்தாலம்** - ஓர் புள்.

**குந்தாலி** - கொந்தாலி.

**குந்தாலித்தல், குந்தாளித்தல், குந்தாளிப்பு** - களித்துக் குதித்தல்.

**குந்தாளம், குந்தாள்** - மண்வாருங் கருவி.

**குந்தி** - *கள், பாண்டவர்தாய், ஓர் சிட்டு.*

**குந்திக்குந்திநடத்தல்** - *இரு நினை வாய்நடத்தல், கிந்துகால் வைத்து வைத்து நடத்தல்.*

**குந்தியடித்தல்** - *ஓர் விளையாட்டு.*

**குந்திரம்** - *ஓர் புள்.*

**குந்திருக்கம்** - *குங்குலியம்.*

**குந்து** - *ஒட்டுத்திண்ணை, குந்துதல், குந்தென்னேவல், திண்ணையருகு, தும்பு.*

**குந்துகாலி** - *அடிப்பலமற்றமரம், கிந்திநடப்பவள்.*

**குந்துகாலினிற்றல்** - *படங்குந்தி நிற்றல், விரைவைக்காட்டிநிற்றல்.*

**குந்துதல்** - *கிந்துதல், குந்தியிருத்தல்.*

**குந்துத்தடி** - *குந்தெடுக்கு மலக்குத் தடி.*

**குந்துரு, குந்துருக்கம்** - *ஓர் சரக்கு, ஓர் மரம்.*

**குந்தெடுத்தல்** - *தும்பெடுத்தல்.*

**குபங்கம்** - *அருவருத்தசேறு.*

**குபசுபா** - *காஞ்சிரை.*

**குபதம்** - *துன்னடை, பாழ்வழி.*

**குபலம்** - *நட்டம், பலவீனம்.*

**குபிதம்** - *கோத்தல், கோபம்.*

**குபிதாந்தகம்** - *துன்மரணம்.*

**குபிலன்** - *அரசன்.*

**குபினர்** - *வலைஞர்.*

**குபினி** - *வலை.*

**குபீரிடுதல்** - *இரத்த முதலிய விரைந்து பாய்தற்குறிப்பு.*

**குபீர்குபீரெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**குபுத்திரன்** - *இழிகுலபுத்திரன், துற்புத்திரன்.*

**குபுருஷன்** - *துட்டன்.*

**குபேரசைலம்** - *கைலைமலை.*

**குபேரன்** - *சந்திரன், வடக்கு, வட திசைப்பாலன்.*

**குபையம்** - *சிறுபுள்ளடி.*

**குப்பக்காடு** - *காடுத்த கிராமம்.*

**குப்பம்** - *கிராமம், குப்பல், திடர்.*

**குப்பலை** - *குப்பளை.*

**குப்பல்** - *குவியல், கூட்டம்.*

**குப்பளை** - *ஓர் செடி.*

**குப்பாமணி** - *குப்பைமேனி.*

**குப்பாயம்** - *சட்டை, மேற்போர்வை.*

**குப்பி** - *ஓர் பாண்டம், மாதர் தலை யணியி னொன்று, வீணையின் முறுக்காணி.*

**குப்பிக்கடுக்கன்** - *ஓர் வகைக்கடுக் கன்.*

**குப்பிசாரம்** - *காசிசாரம்.*

**குப்பிச்சரக்கு** - *பதங்கவைப்பு.*

**குப்பிமா** - *மாக்கல்லு.,*

**குப்பியசாலை** - *பித்தளைப்பாத்திரஞ் செய்யுமிடம்.*

**குப்பியம்** - *பொன்வெள்ளி தவிர்ந்த லோகம்.*

**குப்பிலவணம்** - *வளையலுப்பு.*

**குப்பிவைப்பு** - *குப்பியில் வைத்துச் செய்யுஞ்சரக்கு.*

**குப்புக்குப்பெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**குப்புரகிதன்** - *ஒழுக்கங்குன்றிய பார்ப் பான்.*

**குப்புளாய், குப்புளை** - *ஓர்செடி.*

**குப்புறக்கிடத்தல்** - *அதோமுகமாய்க் கிடத்தல்.*

**குப்புறல்** - *கடத்தல், குதித்தல், பாய்தல்.*

**குப்புறவிழுதல்** - *முகந்தரைநோக்க விழுதல்.*

**குப்பெனல்** - *ஒலிக்குறிப்பு, சீக்கிரக் குறிப்பு.*

**குப்பை** - *கஞ்சல், குலிவு, கூட்டம், மேடு.*

**கூமம்** - *நீர்நிலை.*

**கூமா** - *ஒரு மரம்.*

**கூம்பல்** - *ஒடுங்கல், குமிழமரம், குவிதல்.*

**கூம்பு** - *கூம்பென்னேவல், தேர்க் கொடிஞ்சி, பாய்மரம்.*

**கூம்புதல்** - *குவிதல், குறாவுதல், சுருங்குதல்.*

**கூரணம்** - *கொடுமை, கோடக சாலை, பாகல், பொறாமை, உத்தியோகம்.*

**கூரம்** - *முயற்சி, கொடுமை, பாகல், பொறாமை.*

**கூரல்** - *ஒரு மீன், புள்ளிறகு, பெண் மயிர்.*

**கூரன்** - *கூர்நெல், நாய்.*

**கூராம்பாய்ச்சி, கூராம்பிளாச்சு** - *சலா கைப்பாரை.*

**கூரான்** - *ஒரு பூடு, குல்லான்.*

**கூரியது** - *கூர்மையுள்ளது.*

**கூரியம்** - *கூர்மை.*

**கூரியன்** - *கூர்மையுள்ளவன்.*

**கூரிலவணம்** - *அமுரியுப்பு.*

**கூரை** - *சிற்றில், வீட்டின் மேற்புறம்.*

**கூரைதட்டல்** - *ஆண்பிள்ளைப்பிறப் புக்குச்செய்யுமோர் மகிழ்ச்சிக் குறி.*

**கூர்** - *இலைக்காம்பு, கூரென் னேவல், கூர்மை, நுனி, மிகுதி.*

**கூர்கேவு** - *வெண்கடுகு.*

**கூர்க்கதிர்** - *ஒரு கருவி.*

**கூர்க்கறுப்பன்** - *ஒரு நெல்.*

**கூர்ங்கோடு** - *கூரியகொம்பு.*

**கூர்ச்சகம்** - *தந்ததாவனக்குச்சு.*

**கூர்ச்சம்** - *எத்து, தருப்பை, தலை, தாடி, புருவமத்தி, மாய்மாலம், வயிரிப்பு, வீண்புகழ்ச்சி.*

**கூர்ச்சசேகரம்** - *தெங்கு.*

**கூர்ச்சரம்** - *ஒரு தேசம்.*

**கூர்ச்சரி** - *ஓரிராகம்.*

**கூர்ச்சிகை** - *ஊசி, எழுதுகோல், பூவரும்பு.*

**கூர்ச்சு** - *சுருள்ளதடி.*

**கூர்தல்** - *கூருதல், நுணுகுதல், மிகுதல், ஆராய்தல்.*

**கூர்த்தம்** - *விளையாட்டு.*

**கூர்த்தல்** - *உவர்த்தல், மிகுத்தல்.*

**கூர்த்தனம்** - *பொழுது போக்கு.*

**கூர்த்திகை** - *ஆயுதப்பொது.*

**கூர்ந்தபுத்தி** - *கூரியவிவேகம்.*

**கூர்ப்பம்** - *புருவமத்தி.*

**கூர்ப்பரம்** - *முழங்கை, முழந்தாள்.*

**கூர்ப்பாசகம்** - *முலைக்கச்சு.*

**கூர்ப்பு** - *உள்ளதுசிறத்தல், உறைப்பு, கூர்மை, மிகுதி.*

**கூர்மபிரிட்டகம், கூர்மபிரிட்டம்** - *ஆமை யோடு.*

**கூர்மம்** - *ஆமை, திருமாலவ தாரத் தொன்று, பதினெண் புராணத் தொன்று.*

**கூர்மராசன்** - *ஆதிகூர்மம்.*

**கூர்மன்** - *உரோமம், புழகிப்பித்து இமைப்பிக்கும் வாயு.*

**கூர்மாண்டர்** - *ஒரு ருத்திரர்.*

**கூர்மை** - *அறிவு, கல்லுப்பு, கூர், நுண்மை, நுனி.*

**கூர்மைக்கரிவாள்** - *சவுக்காரம்.*

**கூர்மைபார்த்தல்** - *நுண்மை பார்த்தல்.*

**கூலகம் –** *கறையான் புற்று, குவியல்.*

**கூலம்** - *அதிட்டம், கடற்கரை, கடை வீதி, கரை, காராமணி, குவியல், சிறுவரம்பு, நீர்நிலை, படையணி, பலபண்டம், பாகல், மந்திமரை, முசு, விலங்கின்வால், பசு.*

**கூலவதி** - *யாறு.*

**கூலி** - *வேலைகண்டு கொடுப்பது.*

**கூலிக்காரன்** - *வேலையாள்.*

**கூலிப்பாடு** - *கூலிப்பிழைப்பு.*

**கூவநூல்** - *கீழ்நீர்க்குறியறிசாத்திரம்.*

**கூவம்** - *கிணறு, கூகை நீறு.*

**கூவரம்** - *ஏர்க்கால்.*

**கூவரன்** - *கூனன்.*

**கூவரி** - *பண்டி.*

**கூவலர்** - *கூவநூல்வல்லோர்.*

**கூவல்** - *அழைத்தல், கிணறு, சொல்லுதல், பள்ளம்.*

**கூவியர்** - *மடையர்.*

**கூவிரம்** - *தேரிடக்கியம், தேர், தேர்க்கொடிஞ்சி, வில்வமரம்.*

**கூவிரி** - *தேர்.*

**கூவிளங்கனி** - *நேர்நிரை நிரையசைச் சீர்க்கு வாய்பாடு.*

**கூவிளங்காய்** - *நேர்நிரைநேரசைச் சீர்க்குவாய்பாடு.*

**கூவிளநறுநிழல்** - *நேர்நிரைநிரை நிரையசைச் சீர்க்குவாய்பாடு.*

**கூவிளநறும்பூ** - *நேர்நிரைநிரை நேரசைச்சீர்க்கு வாய்பாடு.*

**கூவிளந்தண்ணிழல்** - *நேர்நிரைநேர் நிரையசைச்சீர்க்குவாய்பாடு.*

**கூவிளந்தண்பூ** - *நேர்நிரை நேர் நேரசைச் சீர்க்குவாய்பாடு.*

**கூவிளம்** - *கோளகபாஷாணம், நேர் நிரையசைச் சீர்க்குவாய்பாடு, வில்வம்.*

**கூவிளி** - *அழைப்பு.*

**கூவிளித்தல்** - *கூப்பிடல்.*

**கூவிளை** - *கோளகபாஷாணம், வில்வமரம்.*

**கூவுதல்** - *அழைத்தல், சேவல் முதலிய கூவுதல்.*

**கூவுவான்** - *சேவல்.*

**கூவெனல்** - *அழைத்தல், ஆரம்பித்தல், கூவென்குதல்.*

**கூவை** - *கூகை.*

**கூழங்கை** - *குறட்கை, குறைந்தகை.*

**கூழன்** - *ஒரு பலா.*

**கூழா** - *ஒரு மரம்.*

**கூழாங்கல்** - *ஒரு கல்.*

**கூழாமட்டி** - *மந்தையன்.*

**கூழாமணி, கூழாம்பாணி** - *கரையல்.*

**கூழான்** - *கண்டகிக்கல்.*

**கூழுக்குப்பாடி** - *அங்கிடுதத்தி.*

**கூழை** - *இறகு, கடையின்மை, கலியுறுப்பினொன்று, சேறு, நடு, நீளங்குறைந்தது, படைவகுப்பு, பாம்பு, பிற்படை, பெண்மயிர், பொன், மந்தம், மயிற்றோகை.*

**கூழைக்கடா** - *ஒரு கொக்கு.*

*கூழைத்தொடை - செய்யுளினோருறுப்பு.*

**கூழைமுரண்** - *கடைச்சீரொழிந்த மற்றெல்லாச்சீரக் கண்ணும் முரண் வரத் தொடுப்பது.*

**கூழைமோனை** - *இறுதிச்சீரக் கணின்றியொழிந்த சீரக்கண் மோனைவரத் தொடுப்பது.*

**கூழையளபெடை** - *கடைச் சொல்லொழிந்த மற்றெல்லா வற்றின் கண்ணுமளபெடை வரத்தொடுப்பது.*

**கூழையியைபு** - *முதற்சீரொழிந்த மற்றைச் சீரக்கணியைபுவரத் தொடுப்பது.*

**கூழையெதுகை** - *கடைச் சீரொழிந்த மற்றெல்லாச்சீரக் கண்ணு மெதுகை வரத்தொடுப்பது.*

**கூழ்** - *உணவு, கஷாயம், சோறு, பயிர், பொன், நறுவிலி.*

**கூழ்முட்டை** - *கருக்கெட்டமுட்டை.*

**கூழ்முன்னை** - *ஓர்கீரை.*

**கூழ்வரகு** - *கேழ்வரகு.*

**கூளம்** - *கஞ்சல்.*

**கூளி** - *உறவு, எருது, குறள், குற்றம், தொகுதி, பூதம், பெருங்கழுகு, பேய், பொலியெருது, வலி.*

**கூளியர்** - *படைவீரர், வேடர்.*

**கூறல்** - *கூறுதல்.*

**கூறியது கூறல்** - *நூற்குற்றம்பத்தி னொன்று.*

**கூறியான்** - *சிவியார்தலைவன்.*

**கூறு** - *காரணம், கூறென்னேவல், தன்மை, பங்கு, பாதி, வசை.*

**கூறுகொள்ளுதல்** - *அமர்த்துதல்.*

**கூறுதல்** - *சொல்லுதல், விளக்கிச் சொல்லுதல், விற்றல்.*

**கூறுபாடு** - *கூறு.*

**கூறை** - *சீலை, மணவாட்டியுடுக் கும்பு துப்புடைவை.*

**கூறைப்பாய்** - *தோணிப்பாய்.*

**கூற்சரம்** - *தேசமன் பத்தாறினொன்று.*

**கூற்றம்** - *சொல், நமன்.*

**கூற்றன்** - *நமன்.*

**கூற்று** - *காலன், சொல், நமன்.*

**கூற்றுதைத்தோன்** - *சிவன்.*

**கூற்றுவன்** - *நமன்.*

**கூற்றோலை** - *பங்குபிரித்தெழுதின வோலை.*

**கூனல்** - *கோணல், சங்கு, நத்தை, பிறை, வளைதல், வளைவு.*

**கூனன்** - *ஆமை, கூனுள்ளோன், சங்குநத்தை.*

**கூனி** - *கூனுள்ளோன், சிற்றிறால், மந்தரை, வசவி, குசினி, கோணியது.*

**கூனிக்குயம், கூனிரும்பு** - *அரிவாள்.*

**கூனுதல்** - *வளைதல்.*

**கூனை** -*கருப்பஞ்சாறடுகூன், கொடிப் பட்டை, வேள்விக் குண்டம்.*

**கூன்** - *ஆந்தை, உறுப்புக்குறை யெட்டினொன்று, கூனென்னே வல், நத்தை, வளைவு, வெண்பா முதலிய செய்யுட்களின் முதலடி யினொரோ விடத்துப் பொருள் படத்தனித்து நிற்பது.*

**கூன்கிடை** - *யாக்கைக் குற்றமைந்தி னொன்று, அஃது வளைந்து கொண்டு கிடத்தல்.*

# கெ

**கெக்கட்டம்** - *மிகச்சிரித்தல்.*

**கெக்கரித்தல்** - *கடினிப்பு.*

**கெக்கவி** - *மகிழ்வு.*

**கெக்கலித்தல்** - *மகிழ்தல்.*

**கெக்களம்** - *கெக்கட்டம்.*

**கெக்களித்தல்** - *நெளிதல்.*

**கெக்களிப்பு** - *நெளிவு.*

**கெசகன்னம்** - *யானைசெவியை யசைப்பபோற் காதையசைக்கும் வித்தை.*

**கெசகன்னி** - *வெருகு.*

**கெசாசனை** - *அரசு.*

**கெசாசைநா** - *கையாந்தகரை.*

**கெச்சம்** - *சிறுசதங்கை.*

**கெச்சிதநடை** - *உல்லாசநடை.*

**கெச்சிதம்** - *கெற்சிதம்.*

**கெச்சுக்கெச்செனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கெச்சை** - *சிறுசதங்கை.*

**கெச்சைநடை, கெச்சைமிதி** - *உச்சாக மான நடை.*

**கெஞ்சுதல்** - *மன்றாடுதல்.*

**கெடலணங்கு** - *மூதேவி.*

**கெடவரல்** - *மகளிர்விளையாட்டு.*

**கெடாரம்** - *கடாரம், கடியாரம்.*

**கெடி** - *ஊர், கீர்த்தி, கெடியென் னேவல், பயம்.*

**கெடிஸதலம்** - *அதிகார விசாரணை கதித்தவிடம், இராசதானி.*

**கெடித்தல்** - *பயப்படல்.*

**கெடிமண்டுதல்** - *அஞ்சுதல்.*

**கெடியன்** - *அஞ்சப்பண்ணுவோன், அஞ்சாதவன், சமர்த்தன், சுறுக் கன், வீரன்.*

**கெடிலம்** - *ஆழமான ஓடை, குகை.*

**கெடு** - *கெடுவென்னேவல், கேடு, தவணை, தறுவாய்.*

**கெடுகுடி** - *கெடுதலையான சமுசாரம்.*

**கெடுதல்விகாரம்** - *எழுத்துக்கெடும் விகாரம்.*

**கெடுதலை** - *அழிவு, கேடு.*

**கெடுதல்** - *சாதல், சாய்தல், பதனழிதல், பழுதாதல்.*

**கெடுதி** - *அழிவு, கெட்டுப்போன பொருள், கேடு, நட்டம்.*

**கெடுத்தல்** - *அழித்தல், கெடச் செய்தல்.*

**கெடுநினைவு** - *கெடுபுத்தி.*

**கெடுபுத்தி** - *கெடத்தக்கபுத்தி.*

**கெடுப்பினை** - *வங்கமணல்.*

**கெடுமதி** - *கேடானபுத்தி.*

**கெடும்பு** - *அருந்தல், கெடுதலை.*

**கெடுவைத்தல்** - *கெடுச்சொல்லுதல்.*

**கெட்டகேடு** - *அதிககேடு.*

**கெட்டம்** - *தாடி.*

**கெட்டாகெட்டி** - *மகாகெட்டி.*

**கெட்டி** - *உச்சிதம், உறுதி, கெட்டியென்னேவல், நேற்றி.*

**கெட்டிக்காரன்** - *சமர்த்தன்.*

**கெட்டித்தல்** - *கெட்டிபண்ணுதல்.*

**கெட்டித்தனம்** - *சமர்த்து, திரம், திராணி.*

**கெட்டிபண்ணுதல்** - *பலப்படுத்தல்.*

**கெட்டிபத்திரம்** - *சாக்கிரதையான விசாரணை.*

**கெட்டுவிடுதல், கெட்டுவைத்தல்** - *கவர்விடுதல்.*

**கெணம்** - *சமூலம்.*

**கெண்டம்** - *கண்டம்.*

**கெண்டி** - *கெண்டிகை, கெண்டியென்னேவல், தறித்தல், தறிவாய்.*

**கெண்டிகை** - *கமண்டலம்.*

**கெண்டித்தல்** - *கண்டித்தல்.*

**கெண்டு** - *கெண்டை.*

**கெண்டூரம்** - *ஒரு மருந்து.*

**கெண்டை** - *சருகைத்தலைப்பு, சேல், முழந்தாளின் கீழ்க்கால்.*

**கெண்டைக்கால்** - *முழந்தாளின் கீழ்.*

**கெண்டைப்பீலி** - *மாதர்காலணியிலொன்று.*

**கெண்டையேறல், கெண்டைவாதம்** - *ஓர்விதவாயு நோய்.*

**கெதம்** - *கதம்.*

**கெதி** - *கதி.*

**கெத்திடல், கெத்திடுதல்** - *சில்ல பொல்லமாய் வெட்டல்.*

**கெத்து** - *பலகொத்து.*

**கெத்துக்கெத்தெனல்** - *பலகத்துக் கத்துதல்.*

**கெத்துதல்** - *கண்டம் போடுதல்.*

**கெத்துவம்** - *பக்கல், போதல்.*

**கெந்தகபூமி** - *காங்கையான பூமி.*

**கெந்தகம்** - *கந்தகம், கேரகண்ட பாஷாணம்.*

**கெந்தபந்தம்** - *கெவுரிபாஷாணம்.*

**கெந்தம்** - *கந்தம்.*

**கெந்தி** - *கந்தகம், பொன்னிமிளை.*

**கெந்தியுப்பு** - *கெந்தலவணம்.*

**கெந்துதல்** - *புழுமுதலிய நெறிதல்.*

**கெபத்தம்** - *கிரணம்.*

**கெபி** - *குகை, குழி, வளை.*

**கெப்பிதம்** - *நிந்தை.*

**கெமனம்** - *கமனம்.*

**கெமிளித்தல்** - *கெம்பளித்தல்.*

**கெமிளிப்பு** - *சந்தோஷம்.*

**கெம்பரை** - *கூடை, நெற்கூடை.*

**கெம்பளித்தல்** - *சந்தோஷித்தல்.*

**கெம்பளிப்பு** - *ஆடம்பரம், சந்தோஷம்.*

**கெம்பீரம்** - *ஆழம், மேன்மை, வீரம்.*

**கெம்பீரித்தல்** - *வீரங்காட்டுதல்.*

**கெம்பு** - *ஓரிரத்தினக்கல், கெம்பென் னேவல்.*

**கெம்புதல்** - *கிளர்தல், கொந்தளித்தல்.*

**கெய்** - *ஒரு மீன்.*

**கெரித்தல்** - *கரித்தல்.*

**கெரிட்டம்** - *கோவம்.*

**கெருடன்** - *கருடன்.*

**கெருடி** - *கருடி.*

**கெருமத்தம்** - *பறவை.*

**கெலத்தம்** - *பட்சித்தல்.*

**கெலி, கெலிசு** - *ஆசை, கெலியென் னேவல், பயம், பெருவயிறு.*

**கெலிகெட்டவன்** - *அங்கலாய்த்தவன்.*

**கெலித்தல்** - *ஆசைப்படல், வெல்லல், அஞ்சுதல்.*

**கெலிப்பு** - *வெற்றி, அச்சம், ஆசை.*

**கெல்லிக்கம்பு** - *கூராம்பாய்ச்சி.*

**கெல்லுதல்** - *கிண்டல், தோண்டல்.*

**கெவிடு** - *அட்சரக்கூடு.*

**கெவுரிசங்கம்** - *இரட்டையுருத் திராட்சம்.*

**கெவுரிபாஷாணம்** - *ஒரு மருந்து.*

**கெவுளி** - *சிவத்தச்சங்கு, சிவத்தமு கிழுள்ளதேங்காய், பல்லி.*

**கெவுளிச் செவ்விளை** - *ஒரு வகைத் தெங்கு.*

**கெவுனி** - *பட்டணவாசல்.*

**கெழு** - *இடைச்சொல், உம். வேல் கெழு தடக்கை, சேர்த்திக்கை, நிறம், பிரகாசம்.*

**கெழுதகை** - *கெழுதகைமை.*

**கெழுதகைமை** - *உரிமை.*

**கெழுதல்** - *கெழுமுதல்.*

**கெழுமல்** - *அமைதல், கற்றல், நிறை தல், முளைத்தல்.*

**கெழுமுதல்** - *கற்றல், கூடுதல், நிறை தல், பொருந்துதல், முளைத்தல்.*

**கெழுமை** - *கெழுமுதல், நிறம், வளமை.*

**கெழுவல்** - *நிறைதல்.*

**கெழுவுதல்** - *பெற்றுக்கொள்ளுதல், பொருந்தல், நிறைதல்.*

**கெளிசு** - *காமாலை வீக்கம்.*

**கெளிசுபற்றுதல்** - *பருவயிறு பற்றல்.*

**கெளிதம்** - *பெருகல், கீழ்விழல், பட்சித்தல்.*

**கெளித்தல்** - *நெளித்தல்.*

**கெளிப்பு** - *நெளிவு.*

**கெளிர்ச்சல்லியம்** - *மீனெலும்பு.*

**கெளிறு** - *ஒரு மீன்.*

**கெறு, கெறுவம்** - *ஆங்காரம்.*

**கெறுவி** - *ஆங்காரி, கெட்டிக்காரன்.*

**கெறுவித்தல்** - *கறுவித்தல்.*

**கெற்சிதம்** - *உக்கிராரம்பம், முழக்கம்.*

**கெற்சித்தல்** - *உக்கிரமாயார்த்தல்.*

**கெற்சிப்பு** - *முழக்கம்.*

**கெற்பக்குவளை** - *கருப்பை.*

**கெற்பத்தலைவன்** - *வீரம்.*

**கெற்பத்தி** - *சாலக்கிராமம்.*

**கெற்பம்** - *கருப்பம்.*

**கெற்பவாயு** - *கருப்பமுண்டாகமாற் பண்ணும் வாயு.*

**கெற்பவிப்புருதி** - *ஓரவிப்புருதி.*

**கெற்பனி** - *கருப்பந்தரித்தவள்.*

**கெற்பாதானம்** - *கருப்பந்தரித்த நாலாம்மாதஞ் செய்யுமோர் சடங்கு.*

**கெற்பித்தல்** - *கருப்பந்தரித்தல்.*

**கெற்பிரித்தல்** - *சுவாலித்தல்.*

**கெற்பு** - *தத்துவம்.*

**கெற்மோட்டம்** - *மார்கழிமாதத் திலவ்வம் மாதத் தைப்பற்றி முகிலோடுதல்.*

# கே

**கேகம்** - *மயிற்குரல், வீடு.*

**கேகயம்** - *கெவுரிபாஷாணம், கேகயப் புள், தேசமன் பத்தாறி னொன்று, மயில்.*

**கேகயன்** - *கைகேயன்.*

**கேகலன்** - *கூத்தாடி.*

**கேகாபலம்** - *மயில்.*

**கேகை** - *மயிற்குரல்.*

**கேகையி** - *கைகேயி.*

**கேசகலாபம்** - *மயிர்முடி.*

**கேசதம்** - *கையாந்தகரை.*

**கேசசிதன்** - *நாவிதன்.*

**கேசபந்தி** - *மயிரொழுங்கு, மயிர் முடி.*

**கேசபாரம்** - *பெண்மயிர்.*

**கேசமார்ச்சகம், கேசமார்ச்சனம்** - *சீப்பு.*

**கேசமுட்டி** - *வேம்பு.*

**கேசம்** - *குதிரைமயிர், மயிர்ப்பொது, துக்கம்.*

**கேசரம்** - *அப்பிரகம், சிங்கம், பூந் தாது, பெருங்காயம், மகிழ மரம், மயிர், வண்டு.*

**கேசரர்** - *வித்தியாதரர்.*

**கேசரவாதனம்** - *இரண்டு முழந் தாளும் மாறி மடித்தூன்றியிரு முழங்கையு முழந்தாளிற் படக்கை நீட்டியிருப்பது.*

**கேசராசம்** - *ஒரு நாரத்தை.*

**கேசரி** - *குதிரை, சிங்கம், பெருங் காயம்.*

**கேசரி** - *அங்கயோகாதனத்தொன்று, அஃது பீசத்தின் கீழ்ச்சீவனி யிடத்துப் பரட்டைவைத்திட முழங்கையை முழந்ததாளில் வைத்தங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல்.*

**கேசரிகம்** - *நாயுருவி.*

**கேசரியாதனம்** - *பீசத்தின் கீழ்ச் சீவனியிடத்துப் பரட்டைவைத் திட முழங்கையை முழந்தாளிலங் குலி விரித்து நாசியைப் பார்த் திருத்தல்.*

**கேசரியோகம்** - *உதையத்துக்குநாவில் ஏழிற்சந்திரன் நிற்பது, வியாழனுஞ் சந்திரனுங்கூடி நிற்பது.*

**கேசவம்** - *அட்டாதசதருமநூலில் ஒன்று, நறுமணம், பைசாசம், வண்டு, நிறைமயிர், பெண்வண்டு.*

**கேசவற்குத்தோழன்** - *அரிச்சுனன்.*

**கேசவன்** - *சோழன், நிறைமயிருள் ளோன், விட்டுணு.*

**கேசாதிபாதம்** - *ஒரு பிரபந்தம், அஃது கலிவெண்பாலான் முடிமுதலடி யளவுங் கூறுவது, சருவாங்கம்.*

**கேசாந்தம்** - *மயிர்களைந்து செய்யு மோர்சடங்கு.*

**கேசி** - *கிருட்டிணன், சிங்கம், நிறை மயிருள்ளோன்.*

**கேசிகன்** - *நிறைமயிருள்ளோன்.*

**கேசிசூதனன்** - *கண்ணன்.*

**கேசியா** - *தாழை.*

**கேசகம்** - *ஒரு கிழங்கு.*

**கேஞ்சலிகை** - *ஒரு கிழங்கு.*

**கேடகம்** - *ஓர்யாறு, ஒரு வகை ஊர்தி, பரிசை, பாசறை, மலைசெறிந்த ஊர்.*

**கேடம்** - *கிளியாறு, மலைசெறிந்தவூர்.*

**கேடயம்** - *பரிசை.*

**கேடிக்கை** - *கேளிக்கை.*

**கேடிலுவகை** - *மோக்கம்.*

**கேடு** - *அழிவு, கெடுதல், பொல் லாங்கு.*

**கேடுகாலம்** - *கெடுகாலம்.*

**கேடுபாடு** - *அழிவு, துன்பம், நட்டம்.*

**கேட்குதல்** - *ஆராய்தல், கேட்டல், தரச்சொல்லுதல், வினாவல்.*

**கேட்கும்விடை** - *வினாவும்விடை, (உம்) என்னாலாகுமோ.*

**கேட்கை** - *கேள்வி.*

**கேட்டல்** - *இரத்தல், செவிகொடுத்தல், வினாவல், வேண்டுதல், செய்தல்.*

**கேட்டவாய்க்கேட்டல்** - *பலராலுங் கேட்டல்.*

**கேட்டி** - *மிலாறு.*

**கேட்டை** - *ஒரு நாள், மூதேவி.*

**கேட்பு** - *கேள்வி.*

**கேணம்** - *செழிப்பு.*

**கேணி** - *அகழி, கிணறு, குளம், துரவு.*

**கேண்டு, கேண்டுகம்** - *பந்து.*

**கேண்மை** - *உறவு, கண்ணோட்டம், நட்பு.*

**கேதகை** - *தாழை.*

**கேதம்** - *குற்றம், துன்பம், வீடு.*

**கேதல்** - *அழைத்தல்.*

**கேதனம்** - *இடம், பெருங்கொடி, விருதுக்கொடி, வீடு, வேலை.*

**கேதாரகவுளம்** - *ஒரு பண்.*

**கேதாரம்** - *ஒரு நகரம், மயில், மலை.*

**கேதாரவிரதம், கேதாரன்** - *ஓர் விரதம், சிவன்.*

**கேது** - *அடையாளம், ஒரு கோள், நோய், விருதுக்கொடி, வெளிச்சம்.*

**கேதுச்சிலாங்கணம்** - *புருடராகம்.*

**கேதுதல்** - *அழைத்தல்.*

**கேதுதாரை** - *வால்வெள்ளி.*

**கேதுமாலம்** - *நவகண்டத்தொன்று.*

**கேதுரு** - *ஒரு வாசனைமரம்.*

**கேதுவசனம்** - *கொடி.*

**கேத்திரபாலன்** - *வயிரவன்.*

**கேத்திரம்** - *கெடித்தலம், சேத்திரம், விளைநிலம், பூமி.*

**கேந்திரம்** - *உதையம், ஏழாமிடம், நான்காமிடம், பத்தாமிடம், வட்டத்தின் மத்தி.*

**கேந்திரித்தல்** - *கேந்திரம் பெற்று நிற்றல்.*

**கேந்துமுறியம்** - *நாய்வேளை.*

**கேபம்** - *அசைவு.*

**கேப்பை** - *குரக்கன்.*

**கேமாச்சி** - *வெண்காக்கணம்.*

**கேயம்** - *அகழ், இசைப்பாட்டு.*

**கேயன்** - *பாடுவோன்.*

**கேயிகம்** - *செங்கல்.*

**கேயூரம்** - *தோளணி.*

**கேரண்டம்** - *காகம்.*

**கேரலம்** - *கேரளம்.*

**கேரவி** - *ஒரு நெல், வானசாத்திரம்.*

**கேரளம்** - *தேயமன் பத்தாறினொன்று.*

**கேரளன்** - *சேரன்.*

**கேரளை** - *இசைப்பாட்டு.*

**கேருதல்** - *குரல்கம்முதல், கோழி கத்துதல், பயப்படுதல்.*

**கேலகன்** - *கூத்தாடி, வாள்மேல் நடனஞ்செய்வோன்.*

**கேலம்** - *மகளிர்விளையாட்டு, விளையாட்டு.*

**கேலனம், கேலிகம்** - *கேளி.*

**கேலாசம்** - *பளிங்கு.*

**கேலி** - *இகழ்ச்சி, பரிகாசம்.*

**கேலிகம்** - *அசோகமரம், கேளி.*

**கேலிகலை** - *சரச்சுவதிகையில் வீணை, பகிடிப்பேச்சு.*

**கேலிக்கிரகம்** - *வசந்தமண்டபம்.*

**கேலிமாலி** - *கேலி.*

**கேலிவிருட்சம்** - *ஒரு கடம்பு.*

**கேவணம்** - *மணிபதிக்குங்குழி.*

**கேவர்த்தன்** - *கரையான்.*

**கேவலதிரவியம்** - *மிளகு.*

**கேவலப்படுதல்** - *இளைத்தல், மயங்கல், மெலிதல்.*

**கேவலமானது** - *பெலனற்றது.*

**கேவலம்** - *அற்பம், இட்டம், உறுதி, ஒருங்கு, ஓரவத்தை, தனிமை, துன்பம், பெருக்கம் மரணத்தறுவாய், முடிவிடம், மெலிவு, மோக்கம், விடுதல்.*

**கேவலன்** - *தற்பிரியன்.*

**கேவலாவன்னுவயவனுமானம்** - *பட்சம், ஏது, திருட்டாந்தம், உபநயம், நிகமனமைந்து.*

**கேவேடன்** - *மீன்வலைஞன்.*

**கேழல்** - *பன்றி.*

**கேழ்** - *உவமை, ஒளி, நிறம்.*

**கேழ்வரகு** - *குரக்கதன்.*

**கேளன்** - *தோழன்.*

**கேளா** - *அமைதி, விருதா.*

**கேளாதகேள்வி** - *நிந்தை, வசை.*

**கேளாமை** - *கீழ்ப்படியாமை.*

**கேளார்** - *பகைவர்.*

**கேளி** - *தெங்கு, மகளிர்விளையாட்டு.*

**கேளிக்கை** - *மகளிர்விளையாட்டு.*

**கேளிவிலாசம்** - *விளையாடிப் பொழுது கழித்தல்.*

**கேளிர்** - *கணவர், சினேகிதர், சுற்றம்.*

**கேள்** - *அன்பு, உறவு, கேளென்னேவல், சினேகம், சுற்றம், மதிப்பு.*

**கேள்மை** - *கேண்மை.*

**கேள்வன்** - *அன்பன், கணவன், சினேகிதன்.*

**கேள்வி** - *கல்வி. அஃது இராசத குணத்தொன்று, காது.*

**கேள்விக்காரன்** - *வழக்கில் மன்றாடிக் கேட்போன், விலைகேட்பவன்.*

**கேள்விகொடுத்தல்** - *செவிகொடுத்தல்.*

**கேள்விச்செவியன்** - *கேட்டத்தை நம்புவோன்.*

**கேள்விப்படுதல்** - *கேள்வியாதல்.*

**கேள்விப்பத்திரம்** - *மன்றாட்டுக்கடுதாசி.*

**கேள்விமூலம்** - *காதடி, செவி.*

**கேள்வு** - *கூலி, தோணிக்கூலி.*

**கேள்வுத்தோணி** - *கூலிக்குப் பொருந்தினதோணி.*

## கை

**கை** - *இடம், உடனே, ஒப்பனை, ஒழுக்கம், ஓரெழுத்து, ஓர்விகுதி (உம்) கடுங்கை, கரம், கை கொண்டளவு, கையென்னேவல், சிறுமை, தங்கை, தொனி, பக்கம், பங்கு, படைவகுப்பு, யானைத் துதிக்கை.*

**கைகடத்தல்** - *கையைவிட்டுப்போதல்.*

**கைகடன்** - *ஈடுறுதியில்லாக்கடன்.*

**கைகட்டுதல்** - *மரியாதைக்காகக்கை கட்டிநிற்றல்.*

**கைகண்டசாரம்** - *நவசாரம்.*

**கைகண்டது** -*சித்தியுள்ளது, தேறின்று.*

**கைகம்** - *வக்கிராந்தி பாஷாணம்.*

**கைகலத்தல்** - *ஒன்றாய்கூடுதல், யுத்தங் கலத்தல்.*

**கைகழுவுதல்** - *குற்றத்துக்கு விலகுமோர்குறிப்பு, தீர்த்துத்தள்ளல்.*

**கைகாட்டு** - *கையினாலபி நயங் காட்டல், சைகைகாட்டல்.*

**கைகாட்டுதல்** - *அபிநயங்காட்டல், கையாற்குறிப்புக்காட்டல்.*

**கைகாணுதல்** - *அத்தாட்சிப்படுதல், நம்பிக்கையாயறிதல், நிறைவேறுதல்.*

**கைகாவல்** - *கையுதவி.*

**கைகீழ்** - *கையமைச்சல், கையுறுதி.*

**கைகுவித்தல்** - *கும்பிடல், கொம்மை கொட்டல், வணங்கல்.*

**கைகுளிர்தல்** - *திருத்தியாதல்.*

**கைகுறண்டுதல்** - *உலோபித்தனம், கைமுடங்கல்.*

**கைகூடுதல்** - *சித்தியாதல்.*

**கைகூப்பல்** - *கும்பிடல், கொம்பை கொட்டல், வணங்கல்.*

**கைகூப்பு** - *ஐந்துமுழங் கொண்ட வளவை, கைகுவிப்பு.*

**கைகூப்புதல்** - *கும்பிடல்.*

**கைகூம்புதல்** - *கைகுவிதல்.*

**கைகேசி** - *இராவணன்றாய்.*

**கைகேயன்** - *ஓரரசன்.*

**கைகேயி** - *பரதன்றாய்.*

**கைகொடுத்தல்** - *உதவிசெய்தல், எதிர்கொண்டு பொய்க் கைபிடித் தழைத்தல், கைகூடுதல், வாக்குப் பண்ணல்.*

**கைகொட்டல்** - *கொம்மை கொட்டல்.*

**கைகொட்டிக்குவித்தல்** - *குடந்தம்.*

**கைகோத்தல்** - *கூடிக்கொள்ளுதல், கையோடுகைபிடித்தல்.*

**கைகோத்தாடல்** - *குரவையாடல்.*

**கைகோவை** - *பொற்கொல்லர் தொழிலினொன்று.*

**கைகோளன், கைக்கோளன்** - *நெய் வாரிலோர் சாதியான்.*

**கைகோள்** - *ஒழுக்கத்தின்றன்மை.*

**கைக்கடனாற்றல்** - *உறுதியின்றி நம்பிக்கைக்குக் கொடுத்தல், அது வேளாண்மை மாந்தரியல்பு ளொன்று.*

**கைக்கட்டி** - *ஓராபரணம், கைக் கலசம்.*

**கைக்கட்டு** - *ஓராபரணம்.*

**கைக்கணக்கு** - *ஓருறுதி.*

**கைக்கணிசம்** - *கைமதியம்.*

**கைக்கத்தி** - *ஓராயுதம்.*

**கைக்கரணை** - *ஒரு சிலந்தி.*

**கைக்கவசம்** - *கைச்சட்டை.*

**கைக்காணிக்கை** - *வெளிப்பாடு.*

**கைக்காய்ச்சல்** - *கைக்காந்தி.*

**கைக்காரன்** - *உதவியுள்ளவன், பணக் காரன்.*

**கைக்கிரியை** - *கையினாற்செய்யுங் கிரியை.*

**கைக்கிளை** - *ஏழிசையினொன்று, அது அண்ணத்தாற் பிறக்குமிசை, ஒரு தலைக்காமம், ஒரு பிரபந்தம். அஃது ஒருதலைக்காமத்தினை ஐந்துவிருத்தத்தாற் கூறுவது வெண்பாமுப்பத்திரண்டாற் கூறலுமாம், யாழினோர் நரம்பு.*

**கைக்கிளைமணம்** - *ஆசுரமிராக்கதம் பைசாசமூன்றும்.*

**கைக்கீறு** - *கையெழுத்தின் குறிப்பு.*

**கைக்குட்டை** - *சிறுகுடை.*

**கைக்குட்டை** - *கையிற்பிடிக்கும் புடைவைத்துண்டு.*

**கைக்குத்து** - *கைபொத்திக்குத்தல்.*

**கைக்குநீர்க்கொள்ளுதல்** - *சிறுநீர் விடுதல்.*

**கைக்குழந்தை** - *இடுக்குப்பிள்ளை.*

**கைக்குழலூதல்** - *கையிலேகுழலூதல்.*

**கைக்குழி** - *கமுக்கட்டு.*

**கைக்குழித்தாமரை** - *ஒரு வியாதி.*

**கைக்குள்** - *உடனே, சடுதி.*

**கைக்குறி** - *கைவரைபார்க்குஞ் சாத்திரம்.*

**கைக்குற்றம்** - *கைமோசம்.*

**கைக்குன்று** - *யானை.*

**கைக்கூச்சம்** - *கைகூசுதல்.*

**கைக்கூலி** - *பரிதானம்.*

**கைக்கெளியது** - *இலேசானது, கீழ மைச்சலானது.*

**கைக்கை** - *கசப்பு.*

**கைக்கொட்டை** - *கையணை.*

**கைக்கொள்ளுதல்** - *அங்கீகரித்தல்.*

**கைக்கோடாலி** - *சிறுகோடாலி.*

**கைக்கோரணி** - *கைச்சித்திரம்.*

**கைக்கோல்** - *ஊன்றுகோல்.*

**கைங்கிரியம்** - *பணிவிடை.*

**கைசருவுதல்** - *கைகலத்தல், கைச் சரசம்.*

**கைசலித்தல்** - *கைதளர்தல், தொய்ந்து போதல்.*

**கைசிகம்** - *இச்சை, ஓரிராகம், மயிர்க் கனம், விகாரம்.*

**கைசியம்** - *கேசம்.*

**கைசெய்தல்** - *அலங்கரித்தல், கை வேலை செய்தல், பயிர்செய்தல்.*

**கைசோரம்** - *பாலியம்.*

**கைச்சங்கம்** - *நாகரவண்டு.*

**கைச்சட்டம்** - *கம்பலை, கைவிட்டம்.*

**கைச்சட்டை** - *கையிலிடுங்கவசம்.*

**கைச்சம்பிரதாயம்** - *கைச்சித்திரம்.*

**கைச்சரசம்** - *இலீலைவிளையாட்டு, கைச்சேட்டை.*

**கைச்சரி** - *கைவளை.*

**கைச்சல்** - *கைப்பானது, கைப்பு, வெறுப்பு.*

**கைச்சற்றோடை** - *புளிநாரத்தை.*

**கைச்சாத்து, கைச்சார்த்து** - *கை யெழுத்துத்துண்டு, நிலவிறை யிறுத்த துண்டு.*

**கைச்சாய்ப்பு** - *சார்மானம்.*

**கைச்சி** - *ஊமற்பாசி, சிரட்டை.*

**கைச்சித்தி** - *கைவாசி.*

**கைச்சித்திரம்** - *கைவிற்பன்னம்.*

**கைச்சிமிட்டு** - *கைச்சித்திரம்.*

**கைச்சீட்டு** - *கைநறுக்கு.*

**கைச்சுழி** - *விதைக்கிறவிதை கூடி விழுதல்.*

**கைச்சுறுக்கு** - *கைவிரைவு.*

**கைச்செட்டு** - *அன்றன்றுகொண்டு விற்றல்.*

**கைச்செட்டை** - *கைமுட்டு.*

**கைச்சேட்டை** - *கைச்சரசம்.*

**கைச்சைகை** - *கைச்சாடை.*

**கைடவசிதன்** - *விட்டுணு.*

**கைடவன்** - *ஓரரக்கன்.*

**கைடவாரி** - *விட்டுணு.*

**கைடவை** - *துர்க்கை.*

**கைதட்டல்** - *கையொடுகை தட்டல், கைவிடுதல், தப்புதல்.*

**கைதப்புதல்** - *நீங்கல்.*

**கைதருதல்** - *இடங்கொடுத்தல், உதவு தல், கைகூடுதல்.*

**கைதவம்** - *துன்பம், பொய், வஞ்சனை, பந்தயம்.*

**கைதவன்** - *பாண்டியன்.*

**கைதளர்தல்** - *கைநெகிழ்தல், சோர்தல், தொய்தல்.*

**கைதாங்கி** - *கைபிடி, நாற்காலியி னோருறுப்பு.*

**கைதூக்கல்** - *இரட்சித்தல், விடுதலை யாக்கல்.*

**கைதூவாமை** - *ஒழியாவொழுக்கம்.*

**கைதை** - *தாழை, வயல்.*

**கைதைச்சுரிகையன்** - *மன்மதன்.*

**கைதொடல்** - *உண்ணல், கலியாணம்.*

**கைத்தலம்** - *கை.*

**கைத்தல்** - *அலங்கரித்தல், அலைத்தல், கசத்தல், கோபித்தல், வெறுத்தல்.*

**கைத்தளை** - *கைவிலங்கு.*

**கைத்தாக்கு** - *கைக்குக்கனம், கைக் குத்து, கைவேகம்.*

**கைத்தாய்** - *வளர்க்குந்தாய்.*

**கைத்தாளம்** - *கைமணி.*

**கைத்திட்டம்** - *கைமதியம்.*

**கைத்தீவத்தி** - *கையிற்பிடிக்குந் தீவட்டி.*

**கைத்தீன்** - *கையில் வைத்துக்கொடுக் குந்தீன்.*

**கைத்து** - *பொன், வெறுப்பு.*

**கைத்துப்பாக்கி** - *கைத்துவக்கு.*

**கைத்துருவுமணை** - *பிரயாணத் துருவுமணை.*

**கைத்துவக்கு** - *சிறுதுவக்கு.*

**கைத்தூக்கு** - *கைப்பற்றம், கையாற் றூக்கத்தக்கபாரம்.*

**கைத்தேங்காய்** - போரடிக்குந்தேங்காய்.

**கைத்தொண்டு** - குற்றேவல்.

**கைத்தொழில்** - கைவேலை.

**கைத்தொழும்பு** - கைத்தொண்டு.

**கைந்நடுக்கம்** - ஒரு வியாதி, கையிறுங் காமை.

**கைந்நட்டம்** - முதல்கூட நட்டப்படுதல்.

**கைந்நலப்பால்** - கன்றின்றிக்கைவல்ல பத்தாற் கறக்கும்பால்.

**கைந்நலம்** - கன்றின்றிக்கை வல்லபத் தாற் கறக்கும்பால்.

**கைந்நறுக்கு** - கையுறுதி.

**கைந்நனைத்தல்** - கைகழுவல்.

**கைந்நன்றி** - செஞ்ஞன்றி.

**கைந்நாடிபார்த்தல்** - நாடியோட்டம் பார்த்தல்.

**கைந்நீட்டுதல்** - அடிக்க முந்துதல், இழவு வினவுதல், களவெடுத்தல்.

**கைந்நீளுதல்** - அதிகமாய்க்கொடுத் தல், ஒன்றைச் செய்யமுந்துதல்.

**கைந்நெகிழ்தல்** - விட்டுவிடுதல்.

**கைக்கொடி** - மாத்திரைப்பொழுது.

**கைந்நொடித்தல்** - விரலைநொடித்தல்.

**கைந்நொடுநொடுத்தல்** - கண்ட தெல்லாந்தொடுதல்.

**கைபடிதல்** - கைதிருந்துதல்.

**கைபதறுதல்** - கைந்நடுங்குதல்.

**கைபரிமாறுதல்** - அடிபிடிப்படுதல்.

**கைபழகுதல்** - கைப்பழக்கம் பழகுதல்.

**கைபறிதல்** - கைவிட்டுப்போதல்.

**கைபாகம்** - கைப்பழக்கம்.

**கைபார்த்தல்** - கைக்குறிப்பார்த்தல், சோதித்தல், நாடிபார்த்தல், மட் டறிதல்.

**கைபிடி** - இரம்மியம், உறுதி, கை பிடிக்க வைத்திருப்பது, கைப் பொருள், கைவிடாமை, நம்பிக் கை, நாடியோட்ட மறிதல்.

**கைபிடித்தல்** - கலியாணம் முடித்தல், நாடியறிதல்.

**கைபிடிபத்திரம்** - உற்றசினேகம், கை விடாமற் பத்திரமாயிருத்தல்.

**கைபிடியானவன்** - உற்றசினேகிதன்.

**கைபிழைபாடு** - கைமோசம்.

**கைபுகுந்தவழக்கு** - கையில் வந்து விட்டதென்று டையவனுக்கு மில்லை யென்பது.

**கைபுனை, கைபுனைதல்** - அலங் கரித்தல், பூத்தொடுத்தல்.

**கைபோடுதல்** - கையிடுதல், வாக்குப் பண்ணல்.

**கைப்பட்டை** - கைப்பலகை, சிறு பட்டை.

**கைப்பணம்** - கைம்மேற்பணம், கையிலிருக்கும் பணம்.

**கைப்பணி** - கற்சிற்பர் கருவியி னொன்று, கைத்தொண்டு.

**கைப்பதட்டம்** - கள்ளம்.

**கைப்பந்தம்** - பந்தவிளக்கு.

**கைப்பயில்** - கைச்சயிக்கினை.

**கைப்பழக்கம்** - கைப்பரிட்சை.

**கைப்பற்றம்** - கைப்பிடி, கைவாறு.

**கைப்பற்றல்** - கலியாணம், கைவசத்தி லொடுக்கல், வாங்குதல்.

**கைப்பற்று** - கைத்தூக்கு, கைப்பற் றென்னேவல், வாங்குதல்.

**கைப்பாடு** - கைவசம்.

**கைப்பாதி** - இரண்டாய்ப் பிளப்பதிற் சிறு பாதி.

**கைப்பிசகு** - கைமோசம்.

**கைப்பிடி** - கலியாணம், கைபிடித்த பிடி, உலக்கை.

**கைப்பிடித்தல்** - கலியாணம் முடித்தல்.

**கைப்பிடிவாள்** - கைவாள்.

**கைப்பிரட்டு** - அஸதலாவித்தை.

**கைப்பு** - அறுசுவையினொன்று. அது கசப்பு, ஒரு சரக்கு, வெறுப்பு, ஆடுதின்னாப்பாலை.

**கைப்புடை** - *கைக்கவசம்.*

**கைப்புட்டில்** - *விரலுறை.*

**கைப்புலி** - *யானை.*

**கைப்பூட்டு** - *கைப்பொருத்து, கையினாற்பூட்டும்பூட்டு.*

**கைப்பெட்டகம், கைப்பெட்டி** - *சிறு பெட்டகம்.*

**கைப்பொருள்** - *கைவசத்தி லிருக்கும் பொருள்.*

**கைப்பொலி** - *கையாலள்ளும் பொலி.*

**கைப்பொல்லம்** - *சிறு துண்டு.*

**கைப்பொறுப்பு** - *தன்பொறுப்பு.*

**கைமை, கைம்பெண்** - *அமங்கலி.*

**கைம்பெண்வஸதிரம்** - *அமங்கலி யுடுக்கத்தக்க புடைவை.*

**கைம்மடல்** - *கைச்சீப்பு.*

**கைம்மட்டம், கைம்மட்டு** - *கைமதியம்.*

**கைம்மணி** - *கைத்தாளம், சேமக்கலம்.*

**கைம்மண்டை** - *கையாகியபாத்திரம்.*

**கைம்மதியம்** - *கைம்மட்டு.*

**கைம்மயக்கு** - *ஒரு வசியமருந்து.*

**கைம்மரம்** - *வீட்டின் பாய்ச்சுமரம்.*

**கைம்மலை** - *யானை.*

**கைம்மறதி** - *அயர்தி.*

**கைம்மறித்தல்** - *தடுத்தல்.*

**கைம்மறுத்தல்** - *கொடுப்போருங் கொடாதுவிடல்.*

**கைம்மறை** - *உடன்மறை.*

**கைம்மா** - *யானை.*

**கைம்மாயம்** - *கைம்மயக்கு.*

**கைம்மாய்ச்சி** - *கைவிலங்கு.*

**கைம்மாறு** - *பிரதியுபகாரம்.*

**கைம்மாறுதல்** - *விற்றல்.*

**கைம்மாற்று** - *உடன்மாற்று.*

**கைம்மிகல், கைம்மிகுதல்** - *அதிகப் படல், கைகடத்தல்.*

**கைம்மிடிப்பு** - *கையிலொன்றுமில்லாமை.*

**கைம்மீன்** - *அத்தநாள்.*

**கைம்முடக்கம்** - *பொருள்முடடு, வினைக்கேடு.*

**கைம்முடிப்பு** - *முடிப்புப்பணம்.*

**கைம்முட்டிசெய்தல்** - *கையைப் பொத்துதல்.*

**கைம்முட்டு** - *கைம்மிடிப்பு.*

**கைம்முறை** - *கைம்மாறும்முறை.*

**கைம்முட்டு** - *தோட்பொருத்து.*

**கைம்மூலம்** - *கையினடி.*

**கைம்மெய்காட்டல்**- *அபிநயங்காட்டல்.*

**கைம்மேலே** - *உடனே.*

**கைம்மேற்பணம்** - *உடன்கையிற் கொடுக்கும் பணம்.*

**கைம்மை** - *கைம்பெண்.*

**கைம்மோசம்** - *செய்கைப்பிழை.*

**கையகப்படுதல்** - *கைக்குட்சேருதல்.*

**கையகப்படுத்தல்** - *ஒப்புக் கொடுத்தல், சிக்கப்பண்ணுதல், பிடித்தல்.*

**கையடிப்படுதல்** - *கைக்குட்படுதல்.*

**கையடிப்படுத்துதல்** - *ஆட்சிக்குட் படுத்துதல்.*

**கையடை** - *அடைக்கலம்.*

**கையமர்த்தல், கையமைத்தல்** - *அபையார்த்தஞ் செய்தல், அமைந் திருக்கக் குறிப்புக் காட்டல்.*

**கையம்பு** - *உறுதி, நம்பிக்கை.*

**கையயர்தல்** - *கைசோர்தல்.*

**கையரிக்கொளல்** - *சேர்த்துக் கொள்ளல், தேடல்.*

**கையரியம்** - *இரும்பு.*

**கையர்** - *கீழ்மக்கள், சண்டாளர், திருடர்.*

**கையலுத்தல்** - *கைசலித்தல்.*

**கையளித்தல்** - *ஒப்புக்கொடுத்தல், கொடுக்குதல்.*

**கையறம்** - *கெடும்படிபாடும் பாட்டு.*

**கையறல்** - *ஒழுக்கமின்மை, செயலறல்.*

**கையறல்விலக்கு** - *ஓரலங்காரம், அஃது கையறுதலைக்காட்டி விலக்குவது.*

**கையறவு** - *உதவியின்மை, செயலறு தல், சாதல்.*

**கையறிதல்** - *பழகுதல்.*

**கையறுதல்** - *அந்தரிக்குதல், செயலறல்.*

**கையறுதி** - *கையுறுதியிலே விற்கப் பட்ட வறுதி.*

**கையறுநிலை** - *ஒரு பிரபந்தம். அஃது கணவனோடு மனைவி கழிந் துளியவர் கட்பட்ட அழிவுப் பொருளெல்லாவற்றையும் பிறர்க் கறிவுறுத்தியிறந்து படாதொழிந்த ஆயத்தாரும் பரிசில் பெறும் விறவி யருந் தனிப்படருழந்த செயலறு நிலையைக் கூறுவது.*

**கையறை** - *ஒழுக்கமின்மை, செய லின்மை.*

**கையாடுதல்** - *எடுத்து வழங்குதல், கைப்பற்றுதல்.*

**கையாட்சி** - *எடுத்துவழங்குதல், கைகண்டது.*

**கையாந்தகரை** - *ஒரு பூடு.*

**கையாளி** - *துட்டன், மாய்மாலன்.*

**கையாளித்தல்** - *ஒப்படைத்தல்.*

**கையாளுதல்** - *எடுத்துவழங்குதல்.*

**கையாள்** - *குற்றேவலாள்.*

**கையாறு** - *ஒழுக்கம், சரித்திரம், துன்பம்.*

**கையாறுதல்** - *இளைப்பாறுதல்.*

**கையாற்றி** - *ஆறுதல், உதவி.*

**கையாற்றுதல்** - *அடையில் மாற்று தல், இளைப்பாற்றுதல்.*

**கையான்** - *கையாந்தகரை.*

**கையிகத்தல்** - *அகன்றுநிற்றல், இழத் தல், ஒழுங்கு தப்புதல், கடத்தல்.*

**கையிடுதல்** - *தலையிட்டுக் கொள் ளுதல், நேர்ப்படுதல்.*

**கையிணக்கம்** - *கூத்திவைக்குதல்.*

**கையிருப்பு** - *கையுரக்கம்.*

**கையில்** - *கயில்.*

**கையிளகுதல்** - *கைநெகிழ்தல், கொடுக்கச்சம்மதித்தல்.*

**கையிளைத்தல்** - *கைசலித்தல்.*

**கையிறக்கம்** - *கையை விட்டிறங்குதல் கொடை.*

**கையிறக்குதல்** - *கையிலிருந்திறங்கச் செய்தல்.*

**கையிறங்காமை, கையிறுக்கம்** - *பிசுனித்தனம்.*

**கையிறங்குதல்** - *கொடுக்க விணங்கு தல்.*

**கையுங்கணக்கும்** - *இருந்ததுஞ் சென்றதும்.*

**கையுடனே** - *உடனே.*

**கையுடை** - *கைக்கவசம்.*

**கையுதவி** - *ஆளுதவி.*

**கையுபகாரம்** - *ஒத்தாசை, கைக்கூலி.*

**கையும்மெய்யும்** - *அத்தாட்சி, உறுதி.*

**கையுரக்கம்** - *கைவசத்திலிருக்கும் பணம்.*

**கையுழைப்பு** - *வேலை.*

**கையுறுதி** - *அட்டவணை சேர்க்கப் படாத வுறுதி.*

**கையுறை** - *கைக்கவசம், தலை மகன் றலைவிக்குத் தரும் பொருள்.*

**கையெடுத்தல்** - *கும்பிடல், சத்தியம் பண்ணல், சம்மதித்தற்குறியாய்க் கையுயர்த்தல்.*

**கையெழுத்து** - *கையாலெழுது மெழுத்து, தன்பேரெழுத்து.*

**கையேந்தல், கையேந்துதல்** - *இரந்து வாங்குதல்.*

**கையேறல்** - *நடுத்தரமானமுத்து.*

**கையேறுதல்** - *கையிலேசேர்தல்.*

**கையேற்குதல்** - *ஏற்றுக்கொள்ளுதல்.*

**கையேற்பு** - *கைப்பிச்சை.*

**கையை** - *தங்கை.*

**கையொப்பம்** - *கையெழுத்து.*

**கையொலி** - *ஐந்து முழப்புடைவை.*

**கையொழியாமை** - *ஒழியாவொழுக்கம்.*

**கையொழுக்கம்** - *ஒழுக்கம்.*

**கையொறுப்பு** - *குன்றத்துச் செல்ல ழித்தல்.*

**கையொற்றி** - *கையுறுதியில் வைக்கப் பட்டகாணியீடு.*

**கையோடே** - *உடனே, கைவிடாமல்.*

**கையோலை** - *கையுறுதி.*

**கைரம்** - *மலை.*

**கைரவம்** - *குமுதம், வஞ்சகம், வெள் ளாம்பல்.*

**கைரிகம்** - *பொன், நரி.*

**கைரேயம்** - *மலை.*

**கைலஞ்சம்** - *கைக்கூலி.*

**கைலாகு, கைலாகை** - *கைகொடுத்தல்.*

**கைலாசம், கைலை** - *கயிலைமலை.*

**கைலம்** - *கேலி.*

**கைவசம்** - *கைக்குட்படல், வசமாதல்.*

**கைவண்டில்** - *சிறுவண்டில்.*

**கைவரல்** - *கைப்பழக்கம்.*

**கைவரை** - *கையிறை.*

**கைவலம்** - *கைந்நலம், மோக்கம்.*

**கைவல்லபம் –** *கைச்சாமாத்தியம்.*

**கைவல்லியம்** - *உபநிடத முப்பத் திரண்டினொன்று, சித்தி, மோக்கம், தனிமை.*

**கைவல்லோர்** - *கைப்பழக்க முள்ளோர்.*

**கைவழக்கம்** - *இழவுக்குக் கொடுக் கும் பணம், கைவழங்குதல்.*

**கைவழங்குதல்** - *இழவுக்குக் கொடுத் தல், கையேவுதல்.*

**கைவழம்** - *வழங்குங்கைப்பக்கம்.*

**கைவளச்சம்பா** - *ஒரு நெல்.*

**கைவளை** - *கடகம், சிறுவளை, மருதனி.*

**கைவாக்கு** - *கைவழக்கம்.*

**கைவாசி** - *கைச்சித்தி.*

**கைவாட்சம்பா** - *ஒரு நெல்.*

**கைவாய்க்கால்** - *சிறுவாய்க்கால்.*

**கைவாய்ச்சி** - *சிறுவாய்ச்சி.*

**கைவாரம்** - *செய்கைப்பங்கு, வாழ்த்து.*

**கைவாள்** - *சிறுவாள்.*

**கைவாறு** - *கைக்குவாய்ப்பு, கைத் தூக்கு.*

**கைவிசேஷம்** - *கைவாசி.*

**கைவிசை** - *கைக்கதி, கைமுறை.*

**கைவிடுதல்** - *கைவிட்டுவிடுதல், தள்ளிப்போடுதல்.*

**கைவிட்டம்** - *குறுக்குவிட்டம்.*

**கைவிஸதாரம்** - *கைவிற்பன்னம்.*

**கைவிதை** - *வெந்தயச்செடி.*

**கைவிரித்தல்** - *மறுத்தல்.*

**கைவிலக்கம்** - *மகளிர்சூதகம்.*

**கைவிலக்கு** - *கைம்மறைப்பு.*

**கைவிலக்குவைத்துப்பார்த்தல்** - *கிரணத்தைக் கையால் மறைத்துப் பார்த்தல்.*

**கைவிலங்கு** - *கைக்கிடும்விலங்கு.*

**கைவிலை** - *கைப்பணத்துக்கு விற்றல்.*

**கைவிளக்கு** - *ஒரு விளக்கு.*

**கைவிளை** - *கைத்தொழில்.*

**கைவினைஞர்** - *கம்மாளர், செய்கை வல்லோர்.*

**கைவீச்சன்** - *ஒரு பணிகாரம்.*

**கைவீச்சு** - *அடி, கையின்வீச்சு, மிகு கொடை.*

**கைவேகம்** - *கைவிசை.*

**கைவேலை** - *கைச்செய்கை.*

**கைவேல்** - *கைவிடாவேல், வேல்.*

**கைவைத்தல்** - *ஏற்படுதல், தொடுதல்.*

**கைனி** - *அத்தநாள், கைம்பெண்.*

# கொ

**கொக்கட்டி** - *குறண்டல்.*

**கொக்கரித்தல்** - *கெற்சித்தல், கோழி முதலிய பறவைகத்தல்.*

**கொக்கரிப்பு** - *கெற்சிப்பு, பறவை கொக்கொக்கெனவொலித்தல்.*

**கொக்கரை** - *கொக்கறை, சங்கு, பாம்பு, வலம்புரிச்சங்கு, வலை, வில்.*

**கொக்கறை** - *பனைதெங்கு முதலிய வற்றின் பிள்ளைமடல்.*

**கொக்கறையுடும்பு** - *ஒருடும்பு.*

**கொக்காட்டல்** - *கோதாட்டு.*

**கொக்காம்பாளை** - *ஒரு மரம்.*

**கொக்கான்** - *ஒரு மரம், ஒரு விளை யாட்டு.*

**கொக்கான் வெட்டுதல்** - *கொக்கான் விளையாடுதல்.*

**கொக்கி, கொக்கில்** - *கொழுவி.*

**கொக்கிறகுமந்தாரை** - *ஒரு பூமரம்.*

**கொக்கு** - *ஒரு புள், குதிரை, செந் நாய், மாமரம், மூலநாள்.*

**கொக்குக்கல்** - *மாந்தளிர்க்கல்.*

**கொக்குமட்டி** - *ஒரு மட்டி.*

**கொக்குமந்தாரை** - *ஒரு மரம்.*

**கொக்குமீன்** - *ஒரு மீன்.*

**கொக்குமுத்து** - *கொக்கிற்பிறந்த வெள்ளைநிறமுத்து.*

**கொக்குவம்** - *கொக்கோகம்.*

**கொக்கேறி** - *நெட்டிப்புல்.*

**கொக்கை** - *கொழுவி, கொழுவுதடி.*

**கொக்கைச்சத்தகம்** - *ஓராயுதம்.*

**கொக்கைச்சால்** - *வளைந்த உழவுசால்.*

**கொக்கோகம்** - *ஒரு காமநூல்.*

**கொங்கணம்** - *தேசமன் பத்தாறி னொன்று, பதினெண்பாடையி னொன்று.*

**கொங்கணன்** - *ஒரு சித்தன்.*

**கொங்கணி** - *ஒரு தென்னோலைக் கூடு.*

**கொங்கணியர்** - *கொங்கணதேசத்தார்.*

**கொங்கணியான்** - *ஒரு மீன்.*

**கொங்கம்** - *ஓர்நாடு, கோளக பாஷா ணம்.*

**கொங்கரி** - *ஏலரிசி.*

**கொங்களம்** - *பதினெண்பாடையி னொன்று.*

**கொங்கன்** - *சேரன்.*

**கொங்காரம்** - *குங்குமமரம்.*

**கொங்கு** - *ஒரு தேசம், கருஞ்சுரை, கள், தேன், பூந்தாது, வாசனை.*

**கொங்கை** - *மரக்கணு, முலை.*

**கொசமசக்கு** - *குழப்பம்.*

**கொசு** - *கொசுகு, கொடுக்கு.*

**கொசுகாந்தேன்** - *கொசுகுகள் வைக் குந்தேன்.*

**கொசுகு** - *ஈ, தேனிலையான், நுளம்பு.*

**கொசுக்கட்டை** - *ஒரு குருவி.*

**கொசுறு** - *பிசுக்கு.*

**கொச்சகக்கலிப்பா** - *ஒரு கவி.*

**கொச்சகம்** - *ஒரு கவி.*

**கொச்சானை** - *கொய்ச்சானை.*

**கொச்சி** - *ஒரு தேசம், சவரிலோத் திரம், நெருப்பு.*

**கொச்சிக்காய்** - *மிழகுகாய்.*

**கொச்சிக்குழந்தை** - *வைப்பரிதாரம்.*

**கொச்சித்தமரத்தை** - *ஒரு தமரத்தை.*

**கொச்சிமஞ்சள்** - *ஒரு மஞ்சள்.*

**கொச்சியேலம்** - *ஓரேலம்.*

**கொச்சிலித்தி** - *ஒரு புல்.*

**கொச்சை** - *இளப்பம், இளைத்தல், கீழ்மை, திருந்தாத பேச்சு, வெள் ளாடு, ஆட்டின்பொது.*

**கொச்சைத்தனம்** - *கொச்சைப் பழக்கம்.*

**கொச்சைப்பழக்கம்** - *கீழ்மையான பரிட்சை.*

**கொஞ்சத்தனம்** - *சின்னத்தனம்.*

**கொஞ்சப்படுதல்** - *சின்னத்தனப் படுதல்.*

**கொஞ்சம்** - *அற்பம், எளிமை, சிறு அளவு.*

**கொஞ்சல்** - *கொஞ்சுதல், செல்வ மாய்ப் பேசுதல், மழலைச்சொல்.*

**கொஞ்சி** - *ஒரு கொடி, கிஞ்ஞா.*

**கொஞ்சுகிளி** - *குதலைபேசுங்கிளி.*

**கொஞ்சுதல்** - *மழலைபேசுதல், முத்தமிடல்.*

**கொடி** - *உச்சம், காக்கை, கீழ்த் திசைப் பாலன்குறி, குமரனாடல், துகிற்கொடி, இஃது அட்டமங் கலத்தொன்று, இராசசின்னத்து மொன்று, நீளம், புடைவை யசைவு, அவிட்டநாள், படர் கொடி.*

**கொடிகட்டிநிற்றல்** - *அவசரப்படுதல்.*

**கொடிகட்டுதல்** - *இயாதொன்றை விடாமல் முயன்றுநிற்றல், சயக் குறிப்பு.*

**கொடிக்கம்பம்** - *கொடித்தம்பம்.*

**கொடிக்கழல், கொடிக்கழற்சி** - *கழற்சிக் கொடி.*

**கொடிக்கள்ளி** - *ஒரு கள்ளி.*

**கொடிக்கால்** - *வெற்றிலைக்கொடி.*

**கொடிக்கையான்** - *ஒரு கையான் தகரை.*

**கொடிக்கொற்றான்** - *ஒரு கொடி.*

**கொடிசை** - *கன்னம்.*

**கொடிச்சண்பகம்** - *ஒரு செண்பகம்.*

**கொடிச்சி** - *இடைச்சி, புற்றாஞ் சோறு, சித்திரை மூலம்.*

**கொடிச்சியர்**-*குறிஞ்சிநிலப் பெண்கள்.*

**கொடிச்சிலால்** - *வெள்ளைவால்.*

**கொடிச்சீலை** - *சித்திரப்படாம், துகிற் கொடி.*

**கொடிச்சூரை** - *ஒரு சூரை.*

**கொடிஞ்சி** - *தேர், தேர்மொட்டு.*

**கொடிது** - *கொடியது.*

**கொடித்தக்காளி** - *ஒரு தக்காளி.*

**கொடித்தடக்கி** - *ஒரு மரம், நாயின் கால்மேல்விரல்.*

**கொடித்தம்பம்** - *கொடிகட்டுந்தறி.*

**கொடித்திருப்பாடகம்** - *ஒரு காலணி.*

**கொடித்துத்தி** - *ஒரு துத்தி.*

**கொடித்தூக்குதல்** - *துவசங்கட்டுதல்.*

**கொடிநாய்** - *தோல்நாய்.*

**கொடிநெட்டி** - *நீர்ச்சுண்டி.*

**கொடிப்பசளை** - *ஒரு பசளை.*

**கொடிப்படை** - *முற்படை.*

**கொடிச்சி** - *சித்திரைமூலம்.*

**கொடிப்பவுந்திரம்** - *பவுந்திரநோயி னோர் பேதம்.*

**கொடிப்பாசி** - *ஒரு பாசி.*

**கொடிப்பாலை** - *ஓரிசை, ஒரு செடி.*

**கொடிப்பிணை** - *வங்கமணல்.*

**கொடிப்புலி** - *ஒரு வகைப்புலி.*

**கொடிப்பூ** - *நால்வகைப் பூவினொன்று.*

**கொடிப்போடுதல்** - *யாதொன்றைத் தனக்காக்க வழிபண்ணல், வெற்றி முதலியவற்றைக் குறித்துக் கொடி தூக்குதல்.*

**கொடிமரம்** - *கொடிக்கம்பம்.*

**கொடிமல்லிகை** - *ஒரு மல்லிகை.*

**கொடிமாதளை** - *ஒரு மாதளை.*

**கொடிமுடியன்** - *ஒரு பாம்பு.*

**கொடிமுந்திரிகை** - *ஒரு முந்திரிகை.*

**கொடியது** - *கொடுமையானது.*

**கொடியபீசம்** - *சீதரங்கபாஷாணம்.*

**கொடியமன்னன்** - *கோடாசொரி பாஷாணம்.*

**கொடியரசு** - *ஓரரசமரம், அவரை.*

**கொடியராகு** - *கோமேதகம்.*

**கொடியவீரன்** - *கோடாசொரி பாஷாணம்.*

**கொடியன்** - *கேது, துட்டன்.*

**கொடியாடு** - *வெள்ளாட்டிலோர் பேதம்.*

**கொடியாந்தரம்** - *கொடுமை.*

**கொடியால்** - *ஓரால்.*

**கொடியாளன்** - *கோடாசொரி பாஷாணம்.*

**கொடியாள் கூந்தல்** - *ஒரு புல்.*

**கொடியிலந்தை** - *ஓரிலந்தை.*

**கொடியிறக்கம்** - *துவசமிறக்குதல், முடிவுபண்ணுதல்.*

**கொடியெலுமிச்சை** - *ஓரெலுமிச்சை.*

**கொடியேற்றம்** - *திருவிழாத்துடக்கம், துவசாரோகணம்.*

**கொடியேற்றுதல்** - *துவசாரோகனம் பண்ணல், படங்களைப் பறக்க வுயர்த்துதல்.*

**கொடியோன்** - *கற்றாளை, குரூரன்.*

**கொடிவசலை** - *ஒரு வசலைக்கொடி.*

**கொடிவழுதலை** - *ஒரு வழுதுணை.*

**கொடிவிட்டுச்சரிதல்** - *நிரையே நெடுகப்போதல்.*

**கொடிவேம்பு** - *ஒரு வேம்பு.*

**கொடிவேலி** - *கொடுவேலி.*

**கொடிறு** - *கதுப்பு, குறடு, பூசநாள், யாணைக்கதுப்பு.*

**கொடு** - *கொடுமை, கொடென் னேவல், வளைவு.*

**கொடுகடி** - *மிகுகூதல்.*

**கொடுகுதல்** - *கூசுதல், கூதலா லொடுங்குதல்.*

**கொடுகொடுத்தல்** - *மிகக்குளிர்தல்.*

**கொடுகொடெனல்** - *கூதிர் நடுக்கக் குறி.*

**கொடுகொட்டி** - *குமரனாடல் சிவன், கூத்து.*

**கொடுக்கன், கொடுக்கான்** - *ஓர்விஷ செந்து, கொடுக்குள்ள செந்து.*

**கொடுக்கி** - *ஒரு பூடு.*

**கொடுக்கு** - *கவர், கவைத்தாள்.*

**கொடுக்குதல்** - *கொடுத்தல்.*

**கொடுக்குமதி** - *கொடுக்கவேண்டியது.*

**கொடுங்கண்** - *கொடுமை, கொடும் பார்வை.*

**கொடுங்கரி** - *பொய்ச்சாட்சி.*

**கொடுங்காலம்** - *கொடுமையான காலம்.*

**கொடுங்கால்** - *உள்வளைந்தகால்.*

**கொடுங்கீறு** - *கிழித்தசிறுகீற்று.*

**கொடுங்குதல்** - *கொடுகுதல்.*

**கொடுங்குழை** - *வளைந்தகாதணி.*

**கொடுங்கை** - *உள்வளைந்தகை, கொடுமை, தேர்க்கொடுங்கை, வீட்டின் வெளிப்பக்கம்.*

**கொடுங்கொடிச்சிலை** - *மஞ்சட்கல்.*

**கொடுங்கோல்** - *அநீதி, கொடுமை யான வாளுகை.*

**கொடுங்கோள்** - *பின்புறணி, புறம் பேவசைகூறல்.*

**கொடுஞ்சொல்** - *வன்சொல்.*

**கொடுதலைமடிப்பு, கொடுதலை முடிச்சு, கொடுதலைவிற்பூட்டு** - *பிரியாதபடியிசைத்தல்.*

**கொடுதி** - *மடிப்புத்தொழில், மர ஆணி.*

**கொடுத்தல்** - *அணைவித்தல், ஈதல், உண்டாக்கல்.*

**கொடுநுகம்** - *மகநாள்.*

**கொடுந்தமிழ்** - *செந்தமிழல்லாதது.*

**கொடுந்தலை** - *வளைந்ததலை.*

**கொடுப்பனவு, கொடுப்பனை, கொடுப் பினை** - *கொடுக்குந் தன்மை, பெண்ணை விவாகம் பண்ணிக் கொடுத்தல்.*

**கொடுப்பு** - *கதுப்பு.*

**கொடுப்புப்பீறி** - *ஒரு சிலந்தி.*

**கொடுப்பை** - *பொன்னாங்காணி.*

**கொடுமரம்** - *தனுவிராசி, வில்.*

**கொடுமுடி** - *கோயில் முதலியவற்றின் கிரசம், மலையினுச்சி.*

**கொடுமுடிச்சு** - *காரியங்களைக் கட்டுச் சுற்றாய் முடித்தல், படுமுடிச்சு.*

**கொடுமை** - *கொடுங்கோன்மை, பொல்லாங்கு, முரடு, வக்கிராந்த பாஷாணம்.*

**கொடும்பாதகம்** - *அநீதம், கொடியது ரோகம்.*

**கொடும்பாவி** - *அநீதன், மழையில்லாத காலத்திற்கட்டியிழுக்கு மோருரு.*

**கொடும்புரி** - *கடும்புரி.*

**கொடும்புலி** - *சிங்கம், சிங்கவிராசி.*

**கொடும்பை** - *ஓர் பச்சிலை, ஓர் பூடு, குளம், மதகு, மலையருவி.*

**கொடுவரல்** - *கொணர்தல்.*

**கொடுவரி** - *புலி.*

**கொடுவாட்கத்தி** - *வளைந்தகத்தி.*

**கொடுவாய்** - *ஒரு மிருகம், ஒரு மீன், வெறும்புறங்கூறல்.*

**கொடுவானை** - *ஒரு மீன்.*

**கொடுவாள்** - *அரிவாள், வளைந்த வாள்.*

**கொடுவிஷம்** - *வெள்ளைப் பாஷாணம்.*

**கொடுவினை** - *பொல்லாங்கு.*

**கொடுவேலி** - *ஒரு செடி.*

**கொடூரம்** - *கடுமை, குரூரம்.*

**கொடை** - *ஈகை. அஃது புண்ணியத் தோற்றந்நான்கினுமொன்று.*

**கொடைசாலி** - *ஈகையாளன்.*

**கொடைத்தம்பம்** - *ஈவோர் நிறுத்துந் தம்பம்.*

**கொடைப்பொருள்** - *கொடுக்கப்படு பொருள்.*

**கொடைவினா** - *கொடுக்கும்வினா, (உம்) வேண்டுமா.*

**கொடைமடம்** - *வரையாது கொடுத்தல்.*

**கொடையாளன்** - *ஈகையாளன்.*

**கொடைவீரம்** - *மிகுகொடையினு லுண்டாம் வீரம்.*

**கொட்குதல்** - *சுழலல், வளைதல்.*

**கொட்டகச்சி, கொட்டங்கச்சி** - *கொட்டாங்கச்சி.*

**கொட்டகம், கொட்டகை** - *கொட்டில்.*

**கொட்டக்காரன்** - *தப்பிலி, பொல் லாங்கன்.*

**கொட்டங்காய்** - *ஒரு மரக்காய், தேங் காய்.*

**கொட்டடி** - *நெல்லுக்கொட்டி விற்கிற இடம்.*

**கொட்டணை** - *ஒரு பூடு.*

**கொட்டத்திரட்சி** - *திராமலை.*

**கொட்டம்** - *தவறு, தொழுவம், பொல் லாங்கு.*

**கொட்டல்** - *அடித்தல், அப்புதல், கொட்டுதல், தேள் முதலிய கொட்டல்.*

**கொட்டன்** - *ஒரு மரம், குறும்பொல், தேங்காய், பருத்த சரீரமுள்ளவன்.*

**கொட்டன்பொல்லு** - *குறும்பொல்லு.*

**கொட்டாகை** - *கொட்டகம்.*

**கொட்டாங்கச்சி** - *கொட்டைக் கையில்.*

**கொட்டாங்கரந்தை** - *ஒரு பூடு.*

**கொட்டாப்பிடி, கொட்டாப்பிளி** - *மரச் சுத்தியல்.*

**கொட்டாப்பித்தல்** - *உண்ணல்.*

**கொட்டாமட்டை** - *தும்புமட்டை.*

**கொட்டாய்** - *கொட்டகம்.*

**கொட்டாரம்** - *யானைப்பந்தி.*

**கொட்டாவி** - *யாக்கைக்குற்றமைந்தி னொன்று. அஃது வாயால்விடுந் நெடுஞ்சுவாசம்.*

**கொட்டாவிவிட்டிறுக்கி** - *நாயுருவி.*

**கொட்டி** - *ஒரு கிழங்குப்பூடு, கோவில் வாசல், பார்க்குங் குறி, வார்த்தை சொல்லல்.*

**கொட்டிக்கலைத்தல்** - *சிதறடித்தல்.*

**கொட்டிக்கோரை** - *ஒரு கோரை.*

**கொட்டியம்** - *எருது.*

**கொட்டில்** - *ஒதுக்கிடம், கொட்டகை, பசுக்கொட்டில்.*

**கொட்டு** - *அடி, உட்டுளையான மரத் துண்டு, கொட்டகை, கொட் டென்னேவல், சரீரம், சில்விஷ கடி, துளையுடைப் பொருள், மண்வெட்டி.*

**கொட்டுக்கன்னார்** - *கொட்டுவேலை செய்யுங்கன்னார்.*

**கொட்டுக்கிணறு** - *சங்களைக்கிணறு.*

**கொட்டுக்கூடை** - *ஒரு கூடை, ஒரு பாத்திரம்.*

**கொட்டுச்செத்தல்** - *அறக்காய்ந்த தேங்காய்.*

**கொட்டுண்ணல்** - *சிந்துண்குதல்.*

**கொட்டுதல்** - *அடித்தல், அப்பல், குவித்தல், கையொடு கைதட்டல், சிந்துதல், தேள்முதலியகடித்தல், பறையடித்தல், பூசுதல்.*

**கொட்டுப்பனை** - *தறிபட்டபனை யினடி.*

**கொட்டுப்பித்தளை** - *கொட்டுவேலை செய்யும் பித்தளை.*

**கொட்டு முழக்கு** - *மேளதாளமுதலிய வாச்சியம்.*

**கொட்டுமுறி** - *உயர்ந்தபித்தளை.*

**கொட்டுமேளம்** - *நட்டுவமேளம்.*

**கொட்டுவாய்** - *சிறுசெந்துக்கள் குற்றினகுற்றுவாய்.*

**கொட்டுவான்** - *தேள் முதலியசெந்து.*

**கொட்டுவேலை** - *கொட்டிச்செய்த வேலை.*

**கொட்டை** - *ஒரு காதணி, ஒரு மரம், தலையணை, நூற்குங் கொட்டை, பாதகுறட்டின் குமிழ், வித்து, கொட்டைக்கரந்தை*

**கொட்டை கட்டுதல்** - *ஒரு விளை யாட்டு.*

**கொட்டைக்கரந்தை** - *ஒரு கரந்தை.*

**கொட்டைக்காய்** - *தசையற்றகாய்.*

**கொட்டைக்கைச்சி, கொட்டைக் கையில்** - *சிரட்டைக்கயில்.*

**கொட்டைச்செத்தல்** - *அறச்செத்தல்.*

**கொட்டைத்தேங்காய்** - *கொப்பறா தேங்காய்.*

**கொட்டை நூற்றல்** - *கொஞ்சங் கொஞ்சமாய்க் கவர்தல், நூல் நூற்றல்.*

**கொட்டை பற்றுதல்** - *பிஞ்சுகளுக்குட் கொட்டைபிடித்தல்.*

**கொட்டைபோடுதல்** - *சாதல், பிலா மரம் பிஞ்சுபிடித்தல்.*

**கொட்டைப்பாக்கு –** *காய்ந்த பாக்கு.*

**கொட்டைப்பாக்குத் தலைப்பா** - *குஞ்சுத்தலைப்பா.*

**கொட்டைப்புளி** - *கொட்டையெடாத புளி.*

**கொட்டைப்பெட்டி** - *பஞ்சுப்பெட்டி, மடிப்பெட்டி.*

**கொட்டை முதல்** - *கைமுதல், விதை முதல்.*

**கொட்டைமுத்து** - *ஆமணக்குமுத்து.*

**கொட்டைமுந்திரி, கொட்டை முந்திரிகை** - *ஒரு மரம்.*

**கொட்டையாடுதல், கொட்டையிடுதல்** - *பஞ்சுசுகிர்தல்.*

**கொட்டையிலந்தை** - *ஓரிலந்தை.*

**கொட்பு** - *சுழற்சி, திரிபு, வளைவு.*

**கொணர்தல்** - *கொண்டுவரல்.*

**கொன்கன்** - *தலைவன், நெய்தனிலத் தலைவன்.*

**கொண்டகுளம்** - *எட்டிமரம்.*

**கொண்டக்காரர்** - *கரையாரிலோர் பகுதி.*

**கொண்டக்கிரி** - *ஒரு பண்.*

**கொண்டச்சானி** - *நஞ்சறுப்பான்.*

**கொண்டபாரம்** - *நிறைபாரம், பொறுக்கும் பாரம்.*

**கொண்டம்** - *குறிஞ்சா.*

**கொண்டலடித்தல்** - *மகளிர் விளையாட்டி னொன்று.*

**கொண்டலாத்தி** - *கொண்டைக் கிளாறு.*

**கொண்டல்** - *ஒரு விளையாட்டு, கீழ்காற்று, முன்பனிப்பரவத்தின் காற்று, மேகம்.*

**கொண்டல்மிதித்தல்** - *தீமிதித்தல்.*

**கொண்டல்வண்ணன்** - *திருமால்.*

**கொண்டற்கல்** - *மந்தாரச்சிலை.*

**கொண்டாடல்** - *மெச்சல்.*

**கொண்டாடுதல்** - *ஆசரித்தல், சீராட்டுதல், பாராட்டுதல்.*

**கொண்டாட்டம்** - *சங்காத்தம், சந்தோஷம், சீராட்டு, பொழுதுபோக்கு.*

**கொண்டாட்டு** - *கொள்கை, சீராட்டு.*

**கொண்டானடித்தல்** - *கொண்டலடித் தல்.*

**கொண்டான்** - *ஒரு விளையாட்டு, கணவன்.*

**கொண்டி** - *கதலிற்குடுமி, கொள்ளை, கொழுமாட்டுமிரும்பு.*

**கொண்டிமாடு** - *பட்டிமாடு.*

**கொண்டியம்** - *வெறும்புறங்கூறல்.*

**கொண்டியாரம்** - *இறுமாப்பு.*

**கொண்டிலாத்தி** - *கொண்டலாத்தி.*

**கொண்டிலான்** - *கொண்டைக்கிளாறு.*

**கொண்டுகூட்டு** - *பொருள்கோளெட்டினொன்று, அஃது கலி கருதிய பொருள் வசனங்களைத் தெரிந்தெடுத்துப் பயன்படுத்துவது.*

**கொண்டுணி** - *கோட்சொல்வோன்.*

**கொண்டுவிற்றல்** - *எதிர்ச்செட்டு.*

**கொண்டேசன்** - *சுக்கு.*

**கொண்டை** - *ஆணிமுதலியவற்றின் கொண்டை, இலந்தைக்கனி, ஐம்பாலினொன்று. அஃது பக்கன் முடித்தல், பட்சியின் சிகை, மயிர் முடி.*

**கொண்டைக்கரிச்சான்** - *கரிக்குருவி.*

**கொண்டைக்கிருட்டி** - *கொண்டலாத்தி.*

**கொண்டைக்கிளாறு** - *ஒரு குருவி.*

**கொண்டைக்குச்சு** - *கொண்டையிற் செருகுமோர்பணி.*

**கொண்டைசாணிக்கிழங்கு** - *நஞ்சறுப்பான்.*

**கொண்டைச்சன், கொண்டைச்சான்** - *ஒரு குருவி.*

**கொண்டைச்சுத்தியல்** - *ஒரு சுத்தியல்.*

**கொண்டைத்தலை** - *மயிர்முடித்தலை.*

**கொண்டைத்துலா** - *தலைத்துலா.*

**கொண்டைமுசுறு** - *ஒரு குரங்கு.*

**கொண்டையன்** - *ஒரு பருந்து.*

**கொண்டையாணி** - *சடையாணி.*

**கொண்டையூசி** - *குண்டூசி.*

**கொண்டோடி** - *துலாவையுங் கொடியையும் பிணைக்குங் கயிறு.*

**கொண்டோன்** - *நாயகன்.*

**கொண்மூ** - *ஆகாயம், முகில்.*

**கொண்மூமுத்து** - *மேகத்திற்பிறந்த சூரியனிறமுத்து.*

**கொதி** - *காய்ச்சல், கொதித்தல், கொதியென்னேவல், கோபம், துக்கம், வெப்பம்.*

**கொதிகுடல்** - *பசிதாங்காவயிறு.*

**கொதிகொள்ளுதல்** - *வெப்புக்கொள்ளுதல்.*

**கொதித்தல்** - *கோபித்தல், நீர்முதலிய கொதித்தல், வெப்பித்தல்.*

**கொதிநீர்** - *வெந்நீர்.*

**கொதிப்பித்தல்** - *சிறுபோசனஞ் சமைத்தல், சுடச்செய்தல்.*

**கொதிப்பு** - *கொதி.*

**கொதிமந்தம்** - *வெப்புமந்தம்.*

**கொதியிறக்குதல், கொதியெடுக்குதல்** - *ஆங்காரங்குறைத்தல்.*

**கொதியெண்ணி** - *போசனத்துக்குக் காத்திருப்போன்.*

**கொதியெண்ணெய்** - *கொதிப்பிக்கும் மருத்தெண்ணெய்.*

**கொதுகு** - *கொசுகு.*

**கொதுகுலம்** - *மழலைகொஞ்சுதல்.*

**கொதுகுலித்தல்** - *குழைந்துருகுதல்.*

**கொதுகொதுத்தல், கொதுகொதுப்பு, கொதுகொதெனல்** - *ஒலிக்குறிப்பு கொதித்தெழும்புதல்.*

**கொத்தடிமை** - *பரவணியான அடிமை, பழவடிமை.*

**கொத்தமல்லி** - *ஒரு சரக்கு.*

**கொத்தமல்லிவைசூரி** - *கொப்புளிப் பான்.*

**கொத்தம்** - *எல்லை.*

**கொத்தரித்தல்** - *கொத்திடுதல்.*

**கொத்தலரி** - *ஓரலரி.*

**கொத்தல்** - *கொத்துதல்.*

**கொத்தவரை** - *ஓரவரை.*

**கொத்தவால்** - *சந்தைவிசாரணை காரன்.*

**கொத்தளம்** - *மதிற்புறம்.*

**கொத்தளி** - *பாய்.*

**கொத்தியரித்தல்** - *நாசமாக்குதல்.*

**கொத்து** - *கெத்திடல், கொத்துதல், கொத்தென்னேவல், திரள், நாளி.*

**கொத்துக்கட்டி** - *இடமண்.*

**கொத்துக்கத்தரி** - *ஒரு கத்தரி.*

**கொத்துங்குறடு** - *நண்டு.*

**கொத்துச்சரப்பணி, கொத்துச்சரப்பளி** - *ஓர்ஆபரணம்.*

**கொத்துணி** - *குட்டுணி.*

**கொத்துதல்** - *இரைகொத்தி யெடுத் தல், தறித்தல், மண்வெட்டுதல், வெட்டுதல்.*

**கொத்துத்தாவடம்** - *சிறுருத்திர மணிக்கோவை, பலவற்றைப் பிணைத் திருப்பது.*

**கொத்துத்தூர்வை** - *கொத்தினா லுண்டாம்மிருது.*

**கொத்துப்பசனை** - *ஒரு கீரை.*

**கொத்துப்படல்** - *ஒரு புடல்.*

**கொத்துமேகம், கொத்துவானம்** - *கொத்துக் கொத்தாயிருக்கும் முகில்.*

**கொத்துவேலை** - *கொத்திச்செய்யுஞ் சித்திரவேலை.*

**கொத்தை** - *இசடு, சூத்தை, பழுது.*

**கொந்தல்** - *அணில் முதலியவற்றாற் கொந்தப்பட்டது, ஊனப் பட்டது, கொந்துதல், சினக்குறிப்பு, பெருங் கோபம்.*

**கொந்தழல்** - *தீத்திரள்.*

**கொந்தளம்** - *காண்டாமிருகக் கொம்பு, கூத்தின்விகற்பம், பெண் மயிர், மயிர்க்குழற்சி.*

**கொந்தளித்தல்** - *கிளம்பல், மும் முரங்கொள்ளுதல்.*

**கொந்தளிப்பு** - *கெற்சிதம், மும்முரம்.*

**கொந்தாலி** - *கல்லுவெட்டுமோர் கருவி.*

**கொந்தாழம்** - *ஒரு மரம், ஒரு மருந்து.*

**கொந்தாழை** - *ஒரு கடல்மரம்.*

**கொந்தாளித்தல்** - *கொந்தளித்தல்.*

**கொந்து** - *கொந்தென்னேவல், நெய் வோர்கதிர், பூங்கொத்து.*

**கொந்துதல்** - *பறவைகளலகினாற் கொத்துதல், மூர்க்கங்கொள்ளுதல்.*

**கொப்பம்** - *யானைபடுகுழி.*

**கொப்பரம்பாய்ச்சுதல்** - *அதட்டுதல், மல்யுத்தத்தினொன்று.*

**கொப்பரி** - *கொப்பரை.*

**கொப்பரை** - *கடாரம், குடம்.*

**கொப்பளித்தல்** - *கக்குதல், கொப்புளமாதல்.*

**கொப்பறாத்தேங்காய்** - *அறக்காய்ந்த தேங்காய்.*

**கொப்பாந்தேன்** - *கோற்றேன்.*

**கொப்பி** - *கொம்மை.*

**கொப்பிகொட்டல்** - *கொம்மை கொட்டல்.*

**கொப்பு** - *மயிர்முடி, மரக்கொம்பு, மாதர்காதணியினொன்று.*

**கொப்புவாளி** - *மாதர்காதணியி னொன்று.*

**கொப்புளம்** - *குமிழ்ப்பு, சீய்ப்பிடி.*

**கொப்புளித்தல்** - *குமிழித்தல், கொப்புளமாதல், நீர்முதலிய குதித்தல், வாயால் நீரையல சிக்கக்கல்.*

**கொப்புளிப்பான்** - *ஒரு வசூரி.*

**கொப்புள்** - *குமிழி, கொப்புளம்.*

**கொப்பூழ்** - *உந்தி.*

**கொப்பூழ்க்கொடி** - *நஞ்சுக்கொடி.*

**கொப்பெனல்** - *விரைவின் குறிப்பு.*

**கொம்படித்தல்** - *கடாமுதலிய போர் செய்தல், முதன்மை செலுத்தல்.*

**கொம்பரக்கு** - *பொன்மெழுகு.*

**கொம்பர்** - *மரக்கொம்பு, விலங்கின் கொம்பு.*

**கொம்பன்** - *ஆண்யானை, ஒரு நோய், ஒரு மீன், கொம்புள்ளது.*

**கொம்பாபிள்ளை** - *அதிகாரகுடிப் பிறந்தோன்.*

**கொம்பு** - *ஊதிடுகொம்பு, நந்தை, மரக்கொம்பு, விலங்கின்கொம்பு.*

**கொம்புகாலி** - *சிலியான்.*

**கொம்புக்குமண்ணெடுத்தல்** - *யானை முதலிய களிப்புக்கொண்டு கொம்பினால் மண்ணெடுத்தல்.*

**கொம்புதல்** - *முயலுதல், மூரக்கங் கொள்ளல்.*

**கொம்புத்தேன்** - *கொப்பாந்தேன்.*

**கொம்புப்பயறு** - *ஒரு பயறு.*

**கொம்புப்பாகல்** - *ஒரு பாகல்.*

**கொம்பெறிமூர்க்கன்** - *ஒரு பாம்பு.*

**கொம்மடி, கொம்மட்டி** - *ஒரு கொடி.*

**கொம்மட்டிக்கீரை** - *ஒரு கீரை.*

**கொம்மட்டிச்சுரை** - *ஒரு சுரைக்கொடி.*

**கொம்மட்டிமாதளை** - *சீதளை.*

**கொம்மெனல்** - *அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு.*

**கொம்மை** - *அகங்கைவிரித்துக் கொட்டல், அழகு, இளமை, கொம்மட்டி, திரட்சி, முலை, வட்டம், வலி.*

**கொய்** - *ஒரு மீன், கொய்யென்னேவல்.*

**கொய்கை** - *கொய்தல், பறித்தல்.*

**கொய்சகம், கொய்சுவனம்** - *விடுந் தலைப்பு.*

**கொய்ச்சாளை** - *ஒரு மீன்.*

**கொய்தல்** - *அறுத்தல், ஆய்தல், எஃகி வாங்குதல், கத்தரித்தல், சுருக்குதல், தெரிதல்.*

**கொய்துகட்டுதல்** - *நெரிபிடித்துக் கட்டுதல்.*

**கொய்துவாங்குதல்** - *எஃகிவாங்குதல்.*

**கொய்யகச்சட்டி** - *ஒரு சட்டி.*

**கொய்யகம்** - *கொய்சகம்.*

**கொய்யடி** - *ஓர்நாரை.*

**கொய்யா** - *ஓர்மரம், நெய்வார்கருவியினொன்று.*

**கொய்யாக்கயிறு** - *நெய்வார்கருவியினொன்று.*

**கொய்யான்** - *பரணி.*

**கொய்யுளை** - *குதிரை.*

**கொய்யோ** - *சயக்குறிப்புச்சொல்.*

**கொய்யோக்கூறல்** - *வெற்றிகூறல்*

**கொய்வு** - *கொய்தல்.*

**கொரிக்கம்** - *எழுத்தாணிப்பூண்டு.*

**கொலு** - *இராசசமுகம், உல்காசம், உல்காசவீற்றிருப்பு.*

**கொலுகொலுத்தல்** - *அசைதல், ஈடாடுதல்.*

**கொலுகொலுப்பு** - *ஈடாட்டம், உல்காசம்.*

**கொலுசு** - *காலணியினொன்று.*

**கொலுச்சாவடி, கொலுமண்டபம்** - *உல்காசவீற்றிருப்பு மண்டபம்.*

**கொலுவிருத்தல்** - *வீற்றிருத்தல்.*

**கொலுவிருப்பு** - *வீற்றிருப்பு.*

**கொலை** - *கொல்லுதல், அதுகாயத்தீக்குணம் மூன்றினொன்று தாமத குணத்துமொன்று பஞ்சபாதகத்துமொன்று.*

**கொலைகாரன்** - *கொலை செய்வோன்.*

**கொலைக்களம்** - *கொல்லப்படு மிடம்.*

**கொலைசெய்தல்** - *கொல்லுதல்.*

**கொலைஞர்** - *கொலைபாதகர், சண்டாளர், வேடர்.*

**கொலைதல்** - *குலைதல்.*

**கொலைநினைக்கை** - *மனத்தீக்குண மூன்றினொன்று.*

**கொலைபாதகம்** - *பஞ்சபாதகத்தொன்று.*

**கொலைபாதகன்** - *கொலைத் துரோகி.*

**கொலையுண்ணல்** - *கொலைப் படுதல்.*

**கொல்**-*அசைச்சொல்,(உம்)வருவர் கொல்ஐயக்கிளவி. (உம்) இவ்வுருக்குற்றிகொல்மகன்கொல், கொலலென்னேவல், பஞ்சலோகம், வருத்தம்.*

**கொல்லச்சேவகர்** - *பொக்கிஷகாவற்காரர்.*

**கொல்லத்து** - *சிற்பம்.*

**கொல்லத்துவேலை** - *சிற்பவேலை.*

**கொல்லம்**-*தேயமன்பத்தாறினொன்று.*

**கொல்லர்** - *கம்மாளர், கருமார்.*

**கொல்லல்** - *கொல்லுதல்.*

**கொல்லன்கோவை** - *காக்கணங்கொடி.*

**கொல்லன்பகை** - *அஞ்சனபாஷாணம்.*

**கொல்லாமற்கொல்லல்** - *நன்மை செய்கிறதாகத்தீமைசெய்தல்.*

**கொல்லாமை** - *இயமத்துறையைந்தினொன்று அஃது, கொலைசெய்யாமை.*

**கொல்லாவிரதம்** - *அருகசமைய நெறியினொன்று. அஃது கொலை பண்ணா விரதம்.*

**கொல்லாவேதம்** - *சமணவேதம்.*

**கொல்லாவேதன்** - *அருகன்.*

**கொல்லி** - *ஓர்பண், ஓர்மலை, கொல்வோன், நெருப்பு.*

**கொல்லிச்சி** - *கொல்லத்தி.*

**கொல்லிடம்** - *கொள்ளிடம்.*

**கொல்லியவராடி** - *வராடித்திறத்தினொன்று.*

**கொல்லிவெற்பன்** - *சேரன்.*

**கொல்லுதல்** - *சங்கரித்தல்.*

**கொல்லுலை** - *கம்மாளருலைமுகம்.*

**கொல்லெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**கொல்லை** - *குச்சு, சோலை, தோட்டம், பூந்தோட்டம்.*

**கொல்லைப்பல்லி** - *ஓர்பூடு.*

**கொவிள்** - *ஓர்மரம்.*

**கொவ்வை** - *ஓர்கொடி.*

**கொவ்வைக்கனிமணி** - *கோவரங்கப் பதுமராகம்.*

**கொழிஞ்சி** - *ஓர் நாரத்தை, பூவாது காய்க்குமரம்.*

**கொழிதமிழ்** - *வடிதமிழ்.*

**கொழித்தல்** - *தெரித்தல், வாருதல்.*

**கொழிப்பு** - *குற்றம், கொழித்தல்.*

**கொழியல்** - *கொழிப்பு, தவிடெடு படாதவரிசி.*

**கொழிற்பூண்டு** - *குப்பைமேனி.*

**கொழு** - *காறு, கொழுவென்னேவல், மழு.*

**கொழுக்கட்டை** - *ஓர்பண்ணிகாரம்.*

**கொழுங்கண்** - *கிருபைக்கண்.*

**கொழுச்சிராய்** - *கொழுவடுக்குஞ் சிராய்.*

**கொழுத்தல்** - *சரீரந்தெளிந்து பருத்தல், மதத்தல்.*

**கொழுத்தாடுபிடித்தல்** - *ஓர்விளை யாட்டு.*

**கொழுநனை** - *மலரும்பருவத்தரும்பு.*

**கொழுநன்** - *எப்பொருட்கு மிறைவன், தலைவன், நாயகன்.*

**கொழுநீர்** - *வியர்வை.*

**கொழுந்தன்** - *மணவாளனுடைய சகோதரன்.*

**கொழுந்தி** - *மணவாளியின் சகோதரி.*

**கொழுந்து** - *இளங்கிளை, தீச்சு வாலை, வெற்றிலைக்கொடி, மருக்கொழுந்து.*

**கொழுந்துக்கால்** - *கொழுந்தின் கொளுகொம்பு.*

**கொழுந்துதல்** - *சுவாலித்தல்.*

**கொழுந்துவிடுதல்** - *சுவாலை விடுதல், தளிர்விடுதல்.*

**கொழுந்தொட்டி** - *ஓர்பூடு.*

**கொழுப்பு** - *நிணம், மதர்ப்பு.*

**கொழுமரம்** - *செம்மரம்.*

**கொழுமை** - *கொழுப்பு, செழுமை, நிறம், வளமை.*

**கொழும்புகை** - *நறும்புகை.*

**கொழுவு** - *கொழுகொழும்பு.*

**கொளகொளத்தல்** - *ஈடாடுதல், தளர்தல், திரமற்றுப்போதல்.*

**கொளகொளெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**கொளஞ்சி** - *குளஞ்சிமரம்.*

**கொளல்** - *கொள்ளல்.*

**கொளுகொம்பு** - *ஆதரவுகோல்.*

**கொளுகொளுத்தல்** - *கொளகொளத் தல்.*

**கொளுசு** - *குளைச்சு.*

**கொளுத்து** - *கொளுத்தென்னேவல், சந்து, மூட்டு.*

**கொளுத்துதல்** - *கலைகற்பித் தழுத்தல், தெருட்டுதல், பற்றவைத்தல், மூட் டுதல், வீணைமுதலிய வாசித்தல்.*

**கொளுந்தல்** - *பற்றுதல்.*

**கொளுமீதி** - *இறைகொடுத்துமிஞ் சினதானியம்.*

**கொளுமுதல்** - *கொளுமீதி, செழிப்பு.*

**கொளுவம்** - *கோவைத்துறைவசனம்.*

**கொளுவல்** - *கொளுவுதல்.*

**கொளுவி** - *கொக்கை.*

**கொழுவு** - *கொழுகொம்பு.*

**கொளல்வினா** - *கொள்ளும்வினா, (உம்) பயறுண்டோவணிகீர்.*

**கொளுவுதல்** - *அகப்படுதல், அகப் படுத்துதல், கூட்டிக்கொள்ளுதல், கொளுவி விடுதல், தொடுத்துக் கொள்ளல், மிதியடி முதலிய தொடுதல்.*

**கொளை** - *இசைப்பாட்டு.*

**கொள்** - *ஓர்தானியம், கொள்ளென் னேவல்.*

**கொள்கலம்** - *அணி, ஆடை, சாந்து முதலிய பெய்கலம், பாத்திரம், பிழா.*

**கொள்கை** - *அறிவு, குணம், கோட் பாடு, சினேகம், செய்கை.*

**கொள்வன, கொள்வனவு** - *கொள்ளப் படுவது, கொள்ளுதல், சினேகம், விவாகசம்பந்தம்.*

**கொள்வனை** - *கொள்வனவு.*

**கொள்விலை** - *கொண்டவிலை.*

**கொள்ள** - *நிகழ்காலவிடைச்சொல், (உம்) அவன்வரக்கொள்ள.*

**கொள்ளட்டு** - *ஓர்பூண்டு.*

**கொள்ளம்** - *குழைசேறு.*

**கொள்ளல்** - *பாத்திரமுதலிய வற்றினுள்ளேயடங்குதல், மனதிலே பிடித்தல், வாருதல்.*

**கொள்ளாகொள்ளை, கொள்ளாக் கொள்ளை** - *மிகுதி.*

**கொள்ளாமை** - *அடங்காமை, மனதிலேபிடியாமை.*

**கொள்ளார்** - *பகைவர்.*

**கொள்ளி** - *நெருப்புறு விறகு.*

**கொள்ளிக்கட்டை** - *கொடியவன், நெருப்புக் கொள்ளி.*

**கொள்ளிக்கண்ணன்** -*கண்ணூறுகாரன், கொடியவன், கோபக்கண்ணுள்ளது.*

**கொள்ளிக்கரப்பன்** - *ஓர்கரப்பன்.*

**கொள்ளிசெருகுதல்** - *தீமையையுட்படுத்துதல்.*

**கொள்ளிடம்** - *ஓர்யாறு.*

**கொள்ளித்தேள்** - *ஓர்தேள்.*

**கொள்ளியம்** - *உமரி, புன்கமரம்.*

**கொள்ளியெறும்பு** - *கொள்ளிவாலெறும்பு.*

**கொள்ளிவட்டம்** - *கொள்ளிசுழற்றும் வட்டம்.*

**கொள்ளிவாய்ச்சற்பம்** - *கொள்ளிவாய்விரியன்.*

**கொள்ளிவாய்ப்பிசாசம், கொள்ளிவாய்ப்பேய்** - *நெருப்புக்காலுமாவி.*

**கொள்ளிவாய்விரியன்** - *ஓர்பாம்பு.*

**கொள்ளிவாலி** - *கறுப்புடலும் வெள்ளைவாலு முள்ளது.*

**கொள்ளிவாலெறும்பு** - *ஒரெறும்பு.*

**கொள்ளிவால்** - *நுதிவெள்ளைவால்.*

**கொள்ளிவைத்தல்** - *தீங்குசெய்தல், பிணஞ்சுடல்.*

**கொள்ளு** - *கொள், கொள்ளென்னேவல்.*

**கொள்ளுக்காய்வேளை** - *ஓர்காய்வேளை.*

**கொள்ளுதல்** - *உள்ளேகொள்ளுதல், ஏற்றுக் கொள்ளுதல், கொண்டிருத்தல், பற்றுதல், பெறுதல், மனதுக்கேற்றல், விலைக்கு வாங்கல்.*

**கொள்ளை** - *ஓர்நோய், கொள்ளையிட்டபொருள், கொள்ளையெடுத்தல், மிகுதி.*

**கொள்ளைக்காய்ச்சல்** - *ஓர்நோய்.*

**கொள்ளைக்காரர்** - *பறிகாரர்.*

**கொள்ளைநோய்** - *கோதாரி.*

**கொள்ளையடித்தல்** *கொள்ளையள்ளுதல், கொள்ளையாடுதல், கொள்ளையிடுதல், கொள்ளையெடுத்தல் - திருடுதல், பறித்தல்.*

**கொறடா** - *சவுக்கு.*

**கொறகொறெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**கொறி** - *ஆடு, கொறியென்னேவல், செம்மறியாடு, மேடவிராசி.*

**கொறிக்குதல்** - *பல்முதலியவற்றாற் கோதுதல், பாம்பு முதலிய பல் நரும்பல், பொறிதல்.*

**கொறித்தலை** - *நிலவேம்பு.*

**கொறித்தல்** - *கொறிக்குதல்.*

**கொறு** - *கன்றுபாலூரட்டாதபடி முகத்திற்கட்டுமியற்று.*

**கொறுகொறுத்தல்** - *கருகருத்தல், குறட்டைவிடுதல்.*

**கொறுகொறுப்பு** - *அலட்டு, குறட்டை.*

**கொறுகொறெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**கொறுக்கா** - *ஓர்மரம்.*

**கொறுக்காப்புளி** - *ஓர்புளி.*

**கொறுக்கை** - *உயிர்ப்பு, ஓர்புல், ஓர்மீன், குறட்டை.*

**கொறுக்கைச்சி** - *கொறுக்கைப்புல்.*

**கொற்கை** - *ஓரூர்.*

**கொற்கைவேந்தன்** - *பாண்டியன்.*

**கொற்றம்** - *அரசியல், வலி, வெற்றி.*

**கொற்றவள்ளை** - *பகைவர் நாடழித்தல்.*

**கொற்றவன்** - *அரசன்.*

**கொற்றவை** - *துர்க்கை.*

**கொற்றன்** - *கற்சிப்பன், வெற்றியாளன்.*

**கொற்றான்** - *ஓர்கொடி.*

**கொற்றி** - *இளங்கன்றுப்பசு, ஓர் பிசாசம், துற்கை, பசுவிளங்கன்று, வடுகி.*

**கொற்று** - *கொல்லத்துவேலை, கொற்றென்னேவல்.*

**கொற்றுதல்** - *கொத்தல், கோதுதல்.*

**கொன்** - *அச்சம், காலம், பயனின்மை, பெருமை.*

**கொன்றல்** - *கொல்லுதல்.*

**கொன்றை** - *ஓர்மரம்.*

**கொன்றைக்குழல்** - *ஊதுகுழலி னொன்று.*

**கொன்றைசூடி** - *சிவன்.*

**கொன்னாளர்** - *பாவிகள்.*

**கொன்னித்தல்** - *பேசநாத்திரும்பா திருத்தல்.*

**கொன்னுதல்** - *கொன்னித்தல்.*

**கொன்னெச்சன்** - *மாட்டிலையான்.*

**கொன்னை** - *திருத்தமற்றபேச்சு, பேசநாத்திரும்பாமை.*

## கோ

**கோ** - *அம்பு, அரசன், ஆகாயம், ஆண் மகன், இடியேறு, இரக்கக் குறிப்பு, ஓலந்தை, உரோமம், எருது, ஒரெழுத்து, கண், கிரணம், கோவென்னேவல், சந்திரன், சூரியன், திசை, கோமேதயாகம், தேவலோகம், நீர், பசு, பசுப் பொது, பூமி, மலை, மாதர், மேன்மை, வச்சிராயுதம், வாணி, வெளிச்சம்.*

**கோகடம்** - *ஓர்வகை முசல்.*

**கோகண்டம்** - *நெருஞ்சில்.*

**கோகத்தி,கோகத்தியை** - *பசுக்கொலை.*

**கோகந்தம்** - *கந்தகபாஷாணம்.*

**கோகம்** - *சக்கரவாகப்புள், செந்நாய், தவளை, பல்லி.*

**கோகயம்** - *தாமரை.*

**கோகவி** - *கடம்பு.*

**கோகழி** - *ஓர்தலம்.*

**கோகனகச்சிலை** - *பதுமராகக்கல்.*

**கோகனகத்தி, கோகனாசனி** - *இலக்குமி, கலைமகள்.*

**கோகனகம்** - *செந்தாமரை.*

**கோகனகை** - *இலக்குமி.*

**கோகனதம்** - *செந்தாமரை, செவ் வாம்பல்.*

**கோகனதை** - *இலக்குமி.*

**கோகனம்** - *கருசாலை, கையாந் தகரை, நிலக்கடம்பு.*

**கோகன்னம், கோகருணம்** - *ஓரூர், ஓர்வித்தை.*

**கோகன்னவாதனம்** - *பசுவின் செவி போலிரண்டு கையையுமடித்துச் சுகாதனமாய்ச் செவி கண் மூக்கு எல்லாம் புதைத்திருப்பது.*

**கோகானம்** - *வேய்ங்குழலோசை.*

**கோகிதம்** - *குதிகால்.*

**கோகிரகம்** - *அரசரில்லம், ஆன் கொட்டில், போர்வென்றோர் கவர்ந்த திரவியம்.*

**கோகிரந்தி** - *ஆன்கொட்டில், எரு வராட்டி.*

**கோகிராசம்** - *பசுவிற்குவாயுறை கொடுத்துச் செய்யுமோர் சடங்கு.*

**கோகிருட்டி** - ஓரீற்றுப்பசு.

**கோகிருதம்** - ஆப்பி, பசுநெய், மழை.

**கோகிலம்** - உலக்கை, கலப்பை, குயில், பல்லி.

**கோகிலவாசம்** - மாமரம்.

**கோகிலாட்சம்** - கொம்மட்டி, நீர் முள்ளி, மாதளை.

**கோகிலோற்சவம்** - மாமரம்.

**கோகு** - கழுதை, புயம்.

**கோகுத்தம்** - மல்லிகை.

**கோகுலம்** - ஆன்கொட்டில், இடையரூர், காலிவருக்கம், குயில், குரங்கு, துளையுடைப் பொருள், பல்லி.

**கோகுலிகன்** - பசுக்காத்தவன்.

**கோகோசனம்** - கோரோசனை.

**கோகோட்டம்** - ஆன்கொட்டில், ஆன்தொட்டில்.

**கோகோயுகம்** - ஓர்சோடு எருது.

**கோகோலெனல்** - இரக்கக்குறிப்பு.

**கோக்கள்** - சிறந்தோர், பசுக்கள், பெரியோர்.

**கோக்குஞ்சம்** - அம்புறாத்தூணி.

**கோங்கணாசூதன்** - பரசிராமன்.

**கோங்கணை** - பரசிராமன்றாய்.

**கோங்கம்** - நடு, நெல்லி.

**கோங்கிலவு, கோங்கு** - ஓர்மரம்.

**கோசகம்** - குறி, முட்டை.

**கோசகாரம்** - கரும்பு, பட்டு நூற்பூச்சி.

**கோசக்கம்** - குழப்பம்.

**கோசக்கிரகம்** - உள்வீடு.

**கோசங்கம்** - வைகறை.

**கோசநாசி** - அலி.

**கோசமம்** - பீர்க்கு.

**கோசம்** - ஆண்குறி, உறை, கருகூலம், கருப்பை, கற்பாஷாணம், சத்தியம், சாதிக்காய், செல்வம், தெரு, பண்டாரம், புத்தகம், பொக்கிஷசாலை, மதிலுறுப்பு, முகை, முட்டை, மேற்போர்வை.

**கோசரபலன்** - கிரகபலனினொன்று.

**கோசரம்** - அடங்கல், அறியத்தக்கது, இராசி, ஊர், விடயம்.

**கோசரன்** - சன்னியாசி.

**கோசலம்** -தேசமன்பத்தாறினொன்று, பஞ்சகௌவியத் தொன்று, அஃது பசுமூத்திரம், பதினெண் பாடையினொன்று.

**கோசலிகம்** - கைக்கூலி.

**கோசலை** - இராமன்றாய், ஓர்தேயம்.

**கோசவம்** - கோமேதகம்.

**கோசனை** - கோரோசனை, பேரொலி.

**கோசன்** - சீர்பந்தபாஷாணம், வலைஞனுக்கும் புலைச்சிக்கும் பிறந்த புத்திரன்.

**கோசாங்கம்** - நாணற்புல்.

**கோசாதகம்** - மயிர்.

**கோசாமி** - ஓர் துறவி.

**கோசாரி** - பீர்க்கு.

**கோசாலம்** - அகங்கை, ஆன் கூட்டம்.

**கோசாலை** - ஆன்கோட்டம்.

**கோசிகம்** - சாமவேதம், சீலை, பட்டுச்சீலை.

**கோசிகன்** - விசுவாமித்திரன்.

**கோசு** - இரண்டுகாததூரம், கப்பலினோர்பக்கம், தாமான்கயிறு, தெரு, தோல்வி, முறை.

**கோசுகால்** - பருமையின்றி நெடுக வளர்ந்தது.

**கோசுபோதல்** - தாழ்ச்சியாதல், தோல்வி போதல்.

**கோடகசாலை** - ஓர்பூடு.

**கோடகம்** - குண்டிகை, குதிரை, நாற்சந்தி, புதுமை, முடியுறுப்பினொன்று.

**கோடகன்** - வீடுவேய்வோன்.

**கோடங்கி** - *வருங்காரியஞ் சொல்வோன்.*

**கோடங்கிழக்கு** - *கோடைக்கிழங்கு.*

**கோடணை, கோஷணை** - *ஒலி, கொடுமை, பேரொலி, வாச்சியப்பொது.*

**கோடம், கோஷம்** - *இரைச்சல், எல்லை, குடில், குதிரை, கோசம், கோட்டை, சங்கபாஷாணம், செங்கருங்காலி, செல்வம், தவளை, வளைவு.*

**கோடரம்** - *எட்டிமரம், குதிரை, குரங்கு, சோலை, தேர்மொட்டு, மயிர்ச்சாந்து, மரக்கொம்பு, மரப்பொது, மரப்பொந்து.*

**கோடரி** - *கோடாலி, துர்க்கை, நிருவாணி.*

**கோடல்** - *கொள்ளல், மனங்குன்றல், வளைதல், வெண்காந்தள்.*

**கோடவதி** - *வீணை.*

**கோடவி** - *துற்கை, நிருவாணி.*

**கோடா** - *அரக்குமண்டி.*

**கோடாகுழிகை** - *ஓர்மருந்து.*

**கோடாகோடி** - *அளவின்மை, மகாகோடி.*

**கோடாங்கி** - *வரிப்புடைவை.*

**கோடாசூரி** - *கோடகசாலை.*

**கோடாசொரி** - *ஓர்பாஷாணம்.*

**கோடாநீர்** - *தடிப்பில்லாதநீர்.*

**கோஷாபகரணம்** - *செல்வங்களையபகரித்தல்.*

**கோடாய்** - *செவிலித்தாய்.*

**கோடாரி, கோடாலி** - *நலியம்.*

**கோடி** - *இருபது கொண்டது, இளமை, கொள்தி, கோடியென்னேவல், சீலை, நூறிலட்சம், புதுமை, முடியுறுப்பு, மூலை, வாள்முனை, விற்குதை, வீட்டின் பின்பக்கம்.*

**கோஷி** - *மாமரம்.*

**கோடிகம்** - *அணிகலச்செப்பு, கெண்டிகை, சீலை, பூந்தட்டு.*

**கோடிகாண்பித்தல்** - *சுருங்கச் சொல்லி விளக்குதல்.*

**கோடிக்கரை** - *ஓரூர்.*

**கோடிக்கல்** - *மூலைக்கல்.*

**கோடிதீர்த்தம்** - *தனுக்கோடி.*

**கோடிதூங்கி** - *வீட்டுக்கு வீடு போயிருக்கிறவன்.*

**கோடித்தரை** - *புதுச்செய்கை பூண்டதரை.*

**கோடித்தல், கோஷித்தல்** - *அலங்கரித்தல், ஒலித்தல், பிராத்தித்தல், புதுப்பித்தல்.*

**கோடிப்பருவம்** - *வாலைப்பருவம்.*

**கோடிமுடிதல்** - *ஓர்விளையாட்டு.*

**கோடியர்** - *சிவிகை முன்கொம்பின் முன்னும் பின்கொம்பின் பின்னும் நிற்போர், நாடகர்.*

**கோடியுடம்பு** - *இளையாவுடம்பு.*

**கோடிரவம்** - *சதுரக்கள்ளி.*

**கோடிலம்** - *கோட்டம்.*

**கோடிவயது** - *வாலைப்பருவம்.*

**கோடிவற்சம்** - *வாணாபுரம்.*

**கோடீரம்** - *சடை.*

**கோடு** - *அரணிருக்கை, அறை, ஊதிடு, கொம்பு, கூட்டம், கோடென்னேவல், சங்கு, சுழி, நத்தை, நீர்க்கரை, பக்கம், மரக்கொம்பு, மலையினுச்சி, வஞ்சனை, வட்டம், வரம்பு, வரி, வரிசூழ்ந்த விடம், வளைவு, விலங்கின் கொம்பு.*

**கோடுதல்** - *எரிதல், குறாவுதல், நெறிதப்புதல், வளைதல்.*

**கோடுமுத்தம்** - *சங்கிற்பிறந்த வெள்ளை நிறமுத்து.*

**கோடை** - *ஒளி, ஓர்கிழங்குப் பூடு, காற்று, குதிரை, செங்காந்தள், முதிர்வேனிற்பருவத்தின் காற்று,*

*மேல்காற்று, வெண்காந்தள், வெயில், வேனிற்காலம்.*

**கோடைக்காற்று** - *முதிர்வேனிற் பருவத்தின்காற்று, மேல்காற்று.*

**கோடைக்கிழங்கு** - *குட்டியிடுக்கி.*

**கோடைக்குவாடான்** - *ஆவிரை.*

**கோடைப்போகம்** - *கொடைப்பிர யோசனம்.*

**கோடையடிபடுதல்** - *வெய்யிலடி படுதல்.*

**கோடைவாகளி** - *சிறுசெருப்படை.*

**கோட்காரன்** - *கோட்சொல்வோன்.*

**கோட்கூறு** - *இராசியை முப்பதாகப் பகிருதல்.*

**கோட்சொல்லல்** - *குண்டணி சொல்லல். அது வாக்கின்றீக் குணந் நான்கினொன்று.*

**கோட்டகம்** - *குளம், கோயில்.*

**கோஷடகம், கோஷடம்** - *சொந்தம், நீர்த்தொட்டி, பண்டசாலை, பொக்கிஷம்.*

**கோஷட்பாலன்** - *பொக்கிஷகாரன், பொக்கிஷகாவற்காரன்.*

**கோட்டம்** - *அநீதம், அழுக்காறு, ஆன் கொட்டில், இடம், ஓர் மருந்து. அது பஞ்சவிரையி னொன்று, கடற்கொந்தளிப்பு, குராமரம், குளம், கூட்டம், கோணல், கோயில், சுடுகாடு, தேவலோகம், தொழுவம், நாடு, பசுக்கூட்டம், மருதநிலத் தூர், மாவினாலிடுங் கோலம், வயல், வளைவு, வாசனைப் பண்டம், வாட்டரவு, வீணை.*

**கோட்டரம்** - *குரங்கு, கொல்லை, நீர் நிலை.*

**கோட்டரவு** - *குறாவுதல், துக்கம், வாட்டம்.*

**கோட்டல்** - *எழுதல், வளைத்தல்.*

**கோட்டாரி** - *கல்லாரை.*

**கோஷடாகாரம்** - *பொக்கிஷசாலை.*

**கோட்டாக்கினி** - *மூலாக்கினி.*

**கோட்டாலை** - *உலைவு, கஸதி, கிரீடை, துன்பம்.*

**கோட்டான்** - *ஓர்புள், கூகை.*

**கோட்டி** - *அழகு, உலைவு, கூட்டம், கோட்டாலை, கோபுரவாயில், சம்பாஷணை, சவை, பரிகாசம்.*

**கோட்டியம்** - *அதிசயம்.*

**கோட்டியாழ்** - *நால்வகை யாழி னொன்று.*

**கோட்டில்வாழ்விலங்கு** - *அணில் குரங்கு முதலியன.*

**கோட்டுதல்** - *கோட்டல்.*

**கோட்டுப்பூ** - *நால்வகைப் பூவி னொன்று.*

**கோட்டுமண்ணெடுத்தல்** - *யானை முதலியன களிப்படைந்து கோட் டினால்மண்கிண்டல்.*

**கோட்டுமலை** - *வெண்கலமலை.*

**கோட்டுமா** - *பன்றி, யானை.*

**கோட்டுமுத்து** - *யானைக்கோட்டில் முத்து.*

**கோட்டுவான்** - *ஓர்நீர்ப்புள்.*

**கோட்டை** - *அரண், நெல்லிலோர் தொகை.*

**கோட்டைகட்டுதல்** - *கோலிகை கட்டு தல்.*

**கோட்டைக்கட்டு** - *அணிவகுப்பி னொன்று.*

**கோட்டைபிடித்தல்** - *இராச்சியம் பிடித்தல்.*

**கோட்டைப்போர்** - *வைக்கோற் பட்டடை.*

**கோட்படுதல்** - *கொள்ளப்படுதல்.*

**கோளாறடைதல்** - *பிடிக்கப்படுதல்.*

**கோட்படுபதம்** - *மாட்டுக்குளம்பு.*

**கோட்பதம்** - *மாட்டுக்குளம்பு.*

**கோட்பறை** - *நெய்தற்பறை.*

**கோட்பாடு** - *அனுசரிப்பு, கொண்டிருக்குந் தன்மை, நிலைமை.*

**கோட்பு** - *கொள்ளுதல்.*

**கோணங்கி** - *ஓர்நாடகன்.*

**கோணங்கித்தாசரி** - *கோணங்கி.*

**கோணங்கியம்மை** - *ஓர்நோய்.*

**கோணமலை** - *திரிகோணமலை.*

**கோணம்** - *இயந்திரதண்டுறுப்பினொன்று, குணில், குதிரை, சனி, செவ்வாய், திசை, தூரம், முடுக்குத்தெரு, மூக்கு, மூலை, யானைத்தோட்டி, வளைந்தவாள், வளைவு, வீணையியக்கும் வில்.*

**கோணலயம்** - *அரிவாள்.*

**கோணல்** - *கூன், மாறுபாடு, வளைவு.*

**கோணன்** - *கூனன்.*

**கோணாமலை** - *திரிகொணமலை.*

**கோணாமுகம்** - *கழியிருக்கை.*

**கோணாய்** - *ஆணரி, ஓனாய்.*

**கோணி** - *ஓர்சாக்கு, கந்தை, பதினாயிரங்கோடாகோடி, பன்றி.*

**கோணிகை, கோணியல்** - *பை.*

**கோணுதல்** - *வளைதல்.*

**கோணை** - *அழிவின்மை கொடுமை, பீடை.*

**கோண்** - *கரகங்கெண்டி முதலியவற்றின் மூக்கு, கொடுங்கோன்மை, கோணென்னேவல், நேரின்மை, மாறுபாடு, வளைவு.*

**கோண்டம்** - *குறிஞ்சா, தூக்கு, நெருஞ்சி.*

**கோண்டன்** - *கீழ்மகன், கொப்புழன்.*

**கோண்டை** - *இலந்தை, இலந்தைக்கனி, கமுகு.*

**கோதண்டபாணி** - *இராமன்.*

**கோதண்டம்** - *கண்ணிமை, வில்.*

**கோதநதி** - *கதுப்பு, தாடை.*

**கோதமம்** - *ஓர்தீவு.*

**கோதமன்** - *கௌதமன்.*

**கோதம்** - *சீதாங்கபாஷாணம்.*

**கோதல்** - *கொந்தல், கோதுதல்.*

**கோதனம்** - *பசுக்கூட்டம், பசுமடி, பசுவின்கன்று.*

**கோதா** - *உடும்பு.*

**கோதாட்டம், கோதாட்டு** - *கோட்டி, சீராட்டு.*

**கோதாட்டுதல்** - *ஆராட்டுதல், கோட்டி பண்ணுதல்.*

**கோதாரணம்** - *கலப்பை, மண்வெட்டி.*

**கோதாரி** - *பெருவாரிநோய்.*

**கோதாவரி, கோதாவிரி** - *ஓர்யாறு, அஃது சத்தநதிகளினொன்று.*

**கோதானம்** - *பசுத்தானம்.*

**கோதி** - *கோதுமை, நெற்றி, முதலை.*

**கோதிகை** - *முதலை.*

**கோதிமுடித்தல்** - *மயிர்சீவிக்கட்டுதல்.*

**கோது** - *ஓடு, குற்றம், கோதென்னேவல், சக்கை.*

**கோதுகுலம்** - *சீராட்டு.*

**கோதுதல்** - *கோதல், துளைத்தல், மயிர்வகிர்தல்.*

**கோதுமம்** - *கோதுமை, தேன்தோடை.*

**கோதுமை, கோதும்பை** - *ஓர்தானியம்.*

**கோதேரன்** - *காவற்காரன்.*

**கோதேனு** - *பாற்பசு.*

**கோதை** - *ஒழுங்கு, ஓர்கட்பறை, காற்று, கௌதமநதி, சேரன், நெற்சுமை, பூமாலை, பெண், பெண்மயிர், முன்கைத் தோற் கட்டு, சத்திசாரணை.*

**கோத்தந்தம்** - *மாட்டுக்கொம்பு.*

**கோத்தல்** - *கதைகட்டுதல், கோக்குதல், தொடுத்தல்.*

**கோத்தனி** - *முந்திரிகை.*

**கோத்திரசம்** - *சேர்மானம்.*

**கோத்திரமின்மை** - *கடவுளதெண்குணத்தொன்று.*

**கோத்திரம்** - *காடு, குடை, குலம், இது கடவுட்குத்தகாத வெண்குற்றத் தொன்று, செல்வம், தெரு, தொட்டி பாஷாணம், நெட்டிப் புல், பூமி, மலை, வரகு, விருத்தி.*

**கோத்திரவம்** - *கோசலம், வரகு.*

**கோத்திரி, கோத்திரிகை** - *முந்திரி கைச் செடி.*

**கோத்திரை** - *பூமி, மலை.*

**கோநசம்** - *ஓர்பாம்பு.*

**கோநாதன்** - *இடபம், இடையன்.*

**கோநிலயம்** - *அரசமனை.*

**கோந்தளங்காய்** - *குறுந்தேங்காய்.*

**கோந்தி** - *குரங்கு.*

**கோந்து** - *பிசின்.*

**கோந்துரு** - *குடாசகம், கோளாறு, பாட்டனது பாட்டன்.*

**கோபகன்** - *கோபன்.*

**கோபகன்னிகை** - *இடைச்சி.*

**கோபகுண்டம்** - *எட்டிமரம்.*

**கோபக்காரன்** - *கோபி.*

**கோபக்கிரமன்** - *கோபி.*

**கோபங்கம்** - *சரகாண்டபாஷாணம்.*

**கோபச்சுவாலிதம்** - *பெருங்கோபம்.*

**கோபணை** - *கவண்.*

**கோபதாபம்** - *பெருங்கோபம்.*

**கோபதி** - *இடபம், இந்திரன், சிவன், சூரியன்.*

**கோபதீத்தம்** - *பெருங்கோபம்.*

**கோபத்திரம்** - *தாமரை நூல்.*

**கோபநிறமணி** - *சாதுரங்கப்பது மராகம்.*

**கோபம்** - *காத்தல், சடத்தீயி னொன்று. அஃது சினம், தம்பலப் பூச்சி, துத்த பாஷாணம், பாவனை செய்தல்.*

**கோபவல்லி** - *ஓர்கொடி.*

**கோபனம்** - *தற்காத்தல், நிந்தை, வெளிச்சம்.*

**கோபனீயம்** - *இரகசியம்.*

**கோபன்** - *அதிகாரி, இடையன், காப்போன்.*

**கோபாக்கினி** - *மகாகோபம்.*

**கோபாடலிகன்** - *இடையன்.*

**கோபாட்டமி** - *கார்த்திகை மாதத்துப் பூருவபக்கத்தட்டமி.*

**கோபாயகன்** - *காப்போன்.*

**கோபாயிதம்** - *காப்பாற்றல்.*

**கோபாலகன்** - *இடையன், கிருட்டி ணன், சிவன், பசுக்காப் போன்.*

**கோபாலர்** - *இடையர்.*

**கோபாலன்** - *இடையன், கண்ணன்.*

**கோபாலிகை** - *இடைச்சி.*

**கோபி** - *ஓர்மண், கோபியென் னேவல், சினமுள்ளோன், கருநொச்சி, கௌரி பாஷாணம்.*

**கோபிகாஸதிரி, கோபிகை** - *இடைச்சி.*

**கோபிசந்தனம்** - *ஓரமண்.*

**கோபிட்டன்** - *கோபக்காரன்.*

**கோபிதம்** - *கோபம்.*

**கோபிதாரம்** - *குராமரம்.*

**கோபித்தல்** - *வாக்கின்றீக் குணந் நான்கினொன்று. அஃது சினத்தல்.*

**கோபியர்** - *கோவியர்.*

**கோபிரண்டை** - *ஓர்பிரண்டை.*

**கோபிலன்** - *காவற்காரன்.*

**கோபினை** - *கோபம்.*

**கோபீதம்** - *சுத்ததலம்.*

**கோபுச்சம்** - *பசுவால்.*

**கோபுரக்கல்** - *செங்கல்.*

**கோபுரத்தும்பை** - *அடுக்குத்தும்பை.*

**கோபுரந்தாங்கி** - *ஓர்பூடு கோபுரத் தைத்தாங்குவது போலச் செய் திருக்கும் பதுமை.*

**கோபுரம்** - *நகரின்வாயில்.*

**கோபுரவாயில்** - *கோபுரத்தோடுங் கூடியவாயில்.*

**கோபுருட்டம்** - *ஆப்பி.*

**கோபேந்திரன்** - *கிருட்டிணன்.*

**கோப்பியகன், கோப்பியன்** - *அடிமை.*

**கோப்பியம்** - *காத்தல், கோலம், மறைத்தல்.*

**கோப்பியாதி** - *ஈடு.*

**கோப்பு** - *உல்லாசம், பெருமைக் குணம்.*

**கோமகள்** - *தலைவி.*

**கோமகன்** - *அரசன், இராசகுமாரன், தலைவன்.*

**கோமட்டி** - *கோமுட்டி.*

**கோமணிக்குன்றம்** - *வெண்கலமலை.*

**கோமண்டலம்** - *பூமி.*

**கோமதல்லிகை** - *நற்பசு.*

**கோமதை** - *ஓர்நதி.*

**கோமயம்** - *ஆப்பி. அஃது பஞ்ச கௌவியத்தொன்று.*

**கோமயவருணம்** - *கோமேதகம்.*

**கோமலகம்** - *தாமரை நூல்.*

**கோமலகிதம்** - *இன்னிசைப்பாட்டு.*

**கோமலதை** - *மிருது.*

**கோமலம்** - *அழகு, மிருது.*

**கோமலை** - *திராமலை.*

**கோமளம்** - *இளமை, இளமைச் செவ்வி, சந்தோஷம், பசு.*

**கோமாட்டி** - *தலைவி.*

**கோமாமிசபட்சணி** - *மாட்டிறைச்சி புசிப்பவன்.*

**கோமாமிசம்** - *மாட்டிறைச்சி.*

**கோமாயு** - *நரி.*

**கோமாரி** - *பசுக்கோதாரி.*

**கோமாளம்** - *கொண்டாட்டம், சந் தோஷம், பரிகாச விளையாட்டு.*

**கோமாளி** - *சமாளக்காரன்.*

**கோமாள்** - *தலைவி.*

**கோமான்** - *அரசன், குரு, தலைவன், பன்றி, பெருமையிற்சிறந்தோன்.*

**கோமியவண்ணம்** - *கோமேதகம்.*

**கோமிலாய்** - *காட்டுக்குணன்.*

**கோமுகம்** - *கோமுகாதனம், கோமு கை.*

**கோமுகாதனம்–**சகனப்பக்கத்திலிரு காற்பரட்டையும் மாறவைத் தவ்விரு காற்பெருவிரலைக் கைப் பிடித்திருத்தல்.

**கோமுகை** - *பசுமுகமாய்ச் செய்யப் பட்டு அபிஷேகநீர் வரும் வழி.*

**கோமுட்டி** - *ஓர்சாதி.*

**கோமூத்திரம்** - *கோசலம்.*

**கோமூத்திரி** - *ஓர்மிறைக்கவி, அஃது இருவரிநேரேயெழுதிமேல்வரியுங் கீழ்வரியும் மாறிவாசிக்கச் செவ் வேகவியாய் வரத்தொடுப்பது.*

**கோமூத்திரிகை** - *ஓர்புல்.*

**கோமேதகம்** - *நவமணியினொன்று.*

**கோமேதம்** - *ஓர்யாகம், கோமேதகம்.*

**கோம்பல்** - *சினக்குறிப்பு, பெருங் கோபம்.*

**கோம்பறை** - *ஒன்றுக்கற்றது.*

**கோம்பி** - *பச்சோந்தி.*

**கோம்புதல்** - *கோபித்தல்.*

**கோம்பை** - *தேங்காய் முதலியவற்றின் கதம்பை.*

**கோயானம்** - *பண்டி.*

**கோயிலார்** - *கோயிற்பணிவிடைக் காரர்.*

**கோயிலாள்** - *இலக்குமி.*

**கோயில்** - *அரசன் மனை, தேவாலயம், விபூதிப்பை.*

**கோயில்கொள்ளல்** - *குடிகொள்ளல், தங்கி வாழ்தல்.*

**கோயில்வலம்வரல்** - *ஆலயப்பிரதட் சணம், அது காயநற்குணம் மூன்றி னொன்று.*

**கோயிற்கணக்கு** - *அவ்வவ்வூருக்குச் சனங்களைச் சேர்த்தெழுதிய புத்தகம்.*

**கோயிற்பழக்கம்** - *சபைப்பழக்கம்.*

**கோயிற்பற்று** - *ஊர்.*

**கோயிற்பிரதிட்டை** - *கும்பாபிஷேகம்.*

**கோயிற்புராணம்** - *ஓர்புராணம்.*

**கோயின்மகமை** - *கோயிற்காகத் தண்டப்படுந் தருமப்பணம்.*

**கோயின்மானியம்** - *கோயிற்கென்று விடப்பட்டது.*

**கோய்** - *பரணி.*

**கோரகம்** - *இளம்பூவரும்பு, வட்டில்.*

**கோரகை** - *இளம்பூவரும்பு, குயில்.*

**கோரக்கர்** - *ஓர்சித்தர்.*

**கோரக்கர்மூலி** - *கஞ்சா.*

**கோரங்கி** - *ஏலம், ஓர்பட்டணம், ஓர்பூண்டு, ஓர்மருந்து.*

**கோரசம்** - *கவுதாரி, சிவல்.*

**கோரட்சகன், கோரட்சன்** - *சிவன், பசுக்காப்பவன்.*

**கோரணி** - *ஓர்நோய், கோளாறு, சட்டை, செய்கைச்சித்திரம், விற் பன்னம்.*

**கோரண்டம்** - *பெருங்குறிஞ்சி, மரு தோன்றிமரம்.*

**கோரதந்தம், கோரப்பல்** - *வக்கிரதந்தம்.*

**கோரபுட்பம்** - *வெண்கலம்.*

**கோரம்** - *அச்சம், உட்டணம், கொடுமை, கோளகபாஷாணம், சீக்கிரம், சோழன் குதிரை, நஞ்சு, வட்டில் வளைவு, குதிரை.*

**கோரம்பர்** - *கழாய்க்கூத்தர்.*

**கோரம்பலம்** - *கோளாறு, வேடிக்கை.*

**கோரராசனம்** - *நரி.*

**கோரவாரம்** - *சந்தனம்.*

**கோரவிருத்தி** - *இராசதகுணம்.*

**கோரன்** - *சிவன்.*

**கோராசன்** - *இடபம்.*

**கோரான்** - *ஓர்செடி.*

**கோராவாரி** - *புயல்.*

**கோரான்குச்சு, கோரான்சுளுந்து** - *கோரான்சூள்.*

**கோரி** - *பிரேதக்குழியின் மேற்கட்டு வது, கிடங்கு, பிரேதக்குழி.*

**கோரிகை, கோரியை** - *அகப்பை, கூடை.*

**கோரிக்கை** - *மன்றாட்டம்.*

**கோரிதம்** - *துகள், விள்ளல்.*

**கோருதல்** - *நினைத்தல், விரும்புதல், வேண்டுதல்.*

**கோரை** - *ஓர்புல்.*

**கோரைப்பாய்** - *புற்பாய்.*

**கோரையுள்ளான்** - *ஓர்புள்.*

**கோரையொன்றி** - *ஓர்கொக்கு.*

**கோரோசனை** - *ஓர்மருந்து.*

**கோர்க்கலம்** - *மட்பாண்டம்.*

**கோலகம்** - *திப்பிலி.*

**கோலங்கட்டுதல்** - *வேஷம்போடுதல்.*

**கோலங்காட்டுதல்** - *சாயல் கொள்ளு தல், மாதிரிகாட்டுதல்.*

**கோலங்கெடுதல்** - *அழகுகெடுதல், சீரழிதல்.*

**கோலங்கொள்ளுதல்** - *சாயல் கொள் ளுதல், வேஷங் கொள்ளுதல்.*

**கோலச்சங்கம்** - *முட்சங்கு.*

**கோலஞ்செய்வாள்** - *வண்ணமகள்.*

**கோலபுச்சம்** - *ஓர்நாரை.*

**கோலமாலம்** - *ஓர்மீன், மலையா மணக்கு.*

**கோலமிடுதல்** - *அலங்கரித்தல், கோட்டம்போடுதல்.*

**கோலமூலம்** - *திப்பிலிவேர்.*

**கோலமெழுதல்** - *கோட்டமிடுதல், தொய்யிறீட்டல்.*

**கோலம்** - *அலங்கரிப்பு, அழகு, இலந்தைக்கனி, உருவம், ஒப்பனை, ஓராயுதம், ஓர்துலாம், கலிங்க தேயம், சனி, சாயல், தழுவல், தெப்பம், தொடை, தொய்யில்,*

*நீரோட்டம், பறவை, பன்றி, பாக்கு, பாம்பு, பீர்க்கு, மருட் பன்றி, மாமுதலிய வற்றாலிடுங் கோலம், மாதிரி, மிளகு, வினதை நகர், வேடம்.*

**கோலம்பண்ணுதல், கோலம்புனைதல்** - *அலங்கரித்தல்.*

**கோலம்போடுதல்** - *அலங்கரித்தல், கோட்டமிடுதல், வேஷம் போடு தல்.*

**கோலரம்** - *முளை.*

**கோலலவணம்** - *துருசு.*

**கோலல்** - *கோலுதல்.*

**கோலவல்லி** - *ஓர்கொடி.*

**கோலவேர்** - *நிலப்பனை.*

**கோலறை** - *குழித்தரை.*

**கோலா** - *பறவைமீன்.*

**கோலாகலம்** - *இடம்பம், இடக்கு, குசால், சம்பிரமம், பேரொலி, விலங்கினாலெழுமொலி.*

**கோலாங்கூலம்** - *முசு.*

**கோலாச்சி** - *ஓர்மீன்.*

**கோலாஞ்சம்** - *கலிங்கம்.*

**கோலாஞ்சி** - *அடுக்கு, அணியம், அதிகோலம்.*

**கோலாட்டம்** - *ஓர்விளையாட்டு.*

**கோலாரிக்கம்** - *போர்க்கறை கூவல்.*

**கோலி** - *இலந்தைமரம், திப்பிலி, மயிர்.*

**கோலிக்கற்றை** - *கவரிமா.*

**கோலியர்** - *நெய்வோர்.*

**கோலியை** - *கோரியை.*

**கோலிவாசி** - *கரடி.*

**கோலுதல்** - *இடங்கொள்ளப் பண்ணல், சூழ்தல், முகந்தள்ளல், வளைதல், வளைத்தல்.*

**கோலுபட்டை** - *ஓர்பூட்டை.*

**கோலோகம்** - *கிருஷ்ணலோகம்.*

**கோல்** - *அஞ்சனக்கோல், அம்பு, அளவுகோல், இலந்தை, ஊன்று கோல், எழுதுகோல், குதிரைச்சம் மட்டி, கோலென்னேவல், செங் கோல், துலாக்கோல், துலாராசி, தூண்டில், தெப்பம், மரக்கொம்பு, மரக்கோல், யாழினரம்பு, புள்ளி.*

**கோல்கொடுத்தல்** - *குருடருக்குப் பற்றுக்கோடுகொடுத்தல்.*

**கோல்கோடுதல்** - *அரசுமுறை தவறுதல்.*

**கோல்பிடித்தல்** - *குருடருக்குக்கோல் கொடுத்துக் கூட்டிப்போதல்.*

**கோல்வளை** - *அழகியவளை, பெண்.*

**கோவசூரி** - *ஓர்வசூரி.*

**கோவணம்** - *கௌபீனம்.*

**கோவணன்** - *சிவன், வசிட்டன்.*

**கோவதை** - *கோகத்தி.*

**கோவம்** - *கோபம், பொன்.*

**கோவரகழுதை** - *கழுதையுங் குதிரை யுங்கூடிப்பிறந்தகுட்டி.*

**கோவரங்கம்** - *பதுமராகநான்கி னொன்று.*

**கோவர்** - *இடையர்.*

**கோவர்த்தனதரன்** - *கிருட்டிணன்.*

**கோவர்த்தனம்** - *கிருட்டிணன்கன் மாரிக்குப் பசுக்காத்தமலை.*

**கோவர்த்தனர், கோவலர்** - *இடையர்.*

**கோவலன்** - *கிருட்டிணன், இடையன்.*

**கோவளம்** - *ஓர்பட்டினம்.*

**கோவற்சை** - *மலட்டுப்பசு.*

**கோவிதம்** - *கலையறிவு.*

**கோவிதன்** - *அறிஞன்.*

**கோவிதாரம்** - *குராமரம்.*

**கோவிந்தர்** - *இடையர்.*

**கோவிந்தன்** - *கண்ணன்.*

**கோவியர்** - *இடையர், ஓர்சாதியார்.*

**கோவிரசம்** - *ஆனிலை.*

**கோவிருஷம்** - *எருது.*

**கோவிருந்தம்** - *ஆன்கூட்டம்.*

**கோவில்** - *இராசமனை, தேவாலயம்.*

**கோவுகந்தம்** - *தாலம்பாஷாணம்.*

**கோவெனல்** - *அதிசயவிரக்கக் குறிப்பு, அனுகரணவோசை.*

**கோவேறுகழுதை** - *கோவரகழுதை.*

**கோவை** - *அணிவடம், ஒழுங்கு, ஓர் பிரபந்தம், கொவ்வை, கோத்த மாலை, கோத்தல், நிரை.*

**கோவைசியர்** - *மூவைசியரிலொருவர். அவர் இடையர்.*

**கோவைத்துறை** -*தலைவனுந் தலை வியுங்களவியலானடக்கு மொழுக் கத்தைக் கூறுவது.*

**கோவையாணி** - *பிணையலாணி.*

**கோழம்** - *சங்கபாஷாணம்.*

**கோழி** - *உறையூர், ஓர்புள். அஃது பஞ்சபட்சியினுமொன்று.*

**கோழிக்கரணம்** - *பதினோர் கரணத்தி னொன்று.*

**கோழிக்கல்** - *ஈரக்கல்.*

**கோழிக்காரம்** - *ஓர்மருந்து.*

**கோழிக்கீரை** - *ஓர்கீரை.*

**கோழிக்குரல், கோழிகூவல்** - *விடியற் புறம்.*

**கோழிக்குறுமான்** - *ஓர்பூடு.*

**கோழிக்கொடி** - *கோழிமுளையான், கோழியவரை, முருகன்கொடி.*

**கோழிக்கொடியோன்** - *ஐயன், குமரன்.*

**கோழிக்கொண்டை** - *கோழிச்சூடன்.*

**கோழிச்சூடன்** - *ஓர்புல்.*

**கோழித்தலைக்கந்தகம்** - *சிவந்தகெந் தகம்.*

**கோழிநெஞ்சு** - *மிதந்தநெஞ்சு.*

**கோழிப்பசளை** - *ஓர்பசளை.*

**கோழிப்பஸமம்** - *ஓர்சூரணம்.*

**கோழிப்புடம்** - *மூன்றெருப்புடம்.*

**கோழிமுட்டைத்தயிலம்** - *கோழி முட்டையிலெடுக்குந்தயிலம்.*

**கோழிமுளையான்** - *ஓர்கொடி.*

**கோழியவரை** - *ஓர்கொடி.*

**கோழியுள்ளான்** - *ஓர்குருவி.*

**கோழிவேந்தன்** - *சோழன்.*

**கோழை** - *அச்சம், கண் முதலிய வற்றின் குழி, குறைவு, கொடுமை, சிலேற்பனம், தவறு, நாணம்.*

**கோழைக்கட்டு** - *சிலேற்பனக்கட்டு.*

**கோழைக்குத்து** - *ஓர்நோய்.*

**கோழைத்தனம்** - *அச்சத்தன்மை, சின்னத்தனம்.*

**கோழையன்** - *அச்சமுள்ளோன், நாணமுள்ளோன்.*

**கோழைவிந்து** - *துளசி.*

**கோளகம்** - *கோளகபாஷாணம், திப்பிலி, பட்டுச்சீலை, மண்டலிப் பாம்பு, மிளகு.*

**கோளகபாஷாணம்** - *விளைவு பாஷாண முப்பத்திரண்டி னொன்று.*

**கோளிப்பொருள்** - *கொள்ளப்படும் பொருள்.*

**கோளகவச்சிரம்** - *கருந்தண்ணீர்க்கல்.*

**கோளகன்** - *கைமைபெற்றபிள்ளை.*

**கோளகை** - *மண்டலிப்பாம்பு, வட்டம்.*

**கோளம்** - *உண்டை, வட்டம்.*

**கோளம்பம்** - *கிரகணம்.*

**கோளரி** - *ஆண்சிங்கம், சிங்கம்.*

**கோளவங்கம்** - *வங்கமணல்.*

**கோளன்** - *கோளுரைப்போன்.*

**கோளாங்கல்** - *பருக்கைக்கல்.*

**கோளாறு** - *குடாசகம், குழப்பம்.*

**கோளி** - *அத்தி, ஆலமரம், கொழிஞ்சி மரம், கொள்வோன், பூவாது காய்க்குமரம்.*

**கோளிகை** - *பெட்டைக்கழுதை, பெட்டைக்குதிரை.*

**கோளேசம்** - *குங்குமப்பூ.*

**கோளை** - *எலி.*

**கோள்** - *இடையூறு, கிரகம், குணம், கொலை, கொள்ளல், கோட்பாடு, தீமை, நாள், பழிமொழி, புறங் கூறல், பொய், வலி.*

**கோறணி** - *குண்டணி, கோரணி.*

**கோறல்** - *கொல்லல்.*

**கோறிக்கை** - *நினைவு.*

**கோறுதல்** - *கோருதல்.*

**கோறை** - *துளை, பொந்து.*

**கோற்கணக்கு** - *நிலமளக்கிறகணக்கு.*

**கோற்கொடி** - *இலந்தை, சுரை.*

**கோற்புழு** - *கீடம்.*

**கோற்றேன்** - *கொப்பாந்தேன்.*

**கோற்றொடி** - *பெண்.*

**கோனான்** - *இடையரின் சங்கைப்பேர்.*

**கோனிச்சி** - *இடைச்சி.*

**கோன்** - *அரசன், இடையன், எப் பொருட்குமிறைவன்.*

**கோன்மை** - *ஆளுகை, இராசநீதி.*

## கௌ

**கௌ** - *ஒரெழுத்து, கவ்வென்னேவல், கிருத்தியம், தீங்கு, மனஸதாபம்.*

**கௌகணம், கௌங்கம்** - *கொங்கணம்.*

**கௌகுடிகம்** - *தூரத்தில் வருபவரைக் காண்டல்.*

**கௌசலம்** - *ஓர்தேசம், வாழ்த்து.*

**கௌசலிகை** - *கொடை.*

**கௌசனை** - *கௌபீனம்.*

**கௌசலேயன்** - *இராமன்.*

**கௌசலை** - *இராமன்றாய்.*

**கௌசிகம்** - *ஓர்பண், கூகை, சாம வேதம், பட்டுச்சீலை, பதினெண் பாடையினொன்று, விளக்கத் தண்டு, சோகி, பாம்பு, வியாழம்.*

**கௌசிகன்** - *இந்திரன், பாம்பாட்டி, விசுவாமித்திரன்.*

**கௌசிகாயுதம்** - *வானவில்.*

**கௌஞ்சம்** - *கிரவுஞ்சம்.*

**கௌஞ்சிகர்** - *பொன்வினைமாக்கள்.*

**கௌடகிகன், கௌடிகன்** - *புலைஞன்.*

**கௌடசாட்சி** - *பொய்ச்சாட்சி.*

**கௌடதருக்கம்** - *ஓர்தருக்கசாத்திரம்.*

**கௌடமார்க்கம்** - *கௌடர்களின் வழக்கு.*

**கௌடம்** - *ஓர்கொடி, ஓர்தேயம், வஞ்சகம், ஓரலங்காரம், அஃது குணவலங்காரம்பத்துடனேயுங் கூடாது நடக்குமொழுக்கமுடை யது.*

**கௌடிகம்** - *கண்ணி.*

**கௌடில்லியம்** - *அவமதி, வளைவு.*

**கௌணபன்** - *இராட்சசன்.*

**கௌணடர்** - *சண்டாளர், புலைஞர்.*

**கௌணம்** - *குணம்.*

**கௌணடிகர்** - *தோல்வினைஞர்.*

**கௌதமநதி** - *கௌதமைநதி.*

**கௌதமம்** - *தருமநூல் பதினெட்டி னொன்று.*

**கௌதமன்** - *சத்தவிருடிகளிலொரு வன்.*

**கௌதமி, கௌதமை** - *ஓர்பசு, கோதாவரி, கோரோசனம்.*

**கௌதம்** - *சிச்சிலிக்குருவி.*

**கௌதாலிகன்** - *பரதவனும் வண் ணாத்தியுங் கூடிப்பெற்ற புத்திரன்.*

**கௌதுகபந்தனம்** - *இரட்சாபந்தனம்.*

**கௌதுகம்** - *நூதனம், சந்தோஷம், தாலி, பேராசை.*

**கௌதுவம்** - *அனுபவகாலம், இணக் கம், உபசரித்தல், திருவிழா, நூத னம், பொழுது போக்கு, மகிழ்ச்சி, மங்கிலியசூத்திரம், வாஞ்சை.*

**கௌதூசலம்** - *நூதனம், வாஞ்சை.*

**கௌத்துவம்** - *அத்தநாள், துளசி மணி, பதுமராகம், மாணிக்கம், வஞ்சகம், அனுபவகாலம், காப்பு.*

**கௌந்தி** - *அரேணுகம், ஓர்பூண்டு, குந்திதேவி, தவப்பெண்.*

**கௌந்திகர்** - *ஈட்டிக்காரர், குந்தி புத்திரர்.*

**கௌபம்** - *கூபம்.*

**கௌபீனம்** - *கச்சைச்சீலை, தவறு, பாவம்.*

**கௌப்பு** - *பெருமை.*

**கௌமாரம்** - *இளம்பருவம். அஃது ஒன்றுமுதற் பதினாறுவரையு மாகிய பருவம், ஓர்சமயம், பதி னாறுவயதின் மேலுமுப்பத் திரண்டு வயதினுள்ளுமாகிய பெண் பருவம், பதினெண்கீத புராணத்தொன்று.*

**கௌமாரி** - *சத்தமாதர்களிலொருத்தி, பார்வதி.*

**கௌமோதகி** - *விட்டுணுவின் தண் டாயுதம்.*

**கௌமோதம்** - *கார்த்திகைமாதம்.*

**கௌமோதி** - *கார்த்திகைத்திருவிழா, திருவிழா, நிலா.*

**கௌரமம்** - *கூர்மம்.*

**கௌரம்** - *சுத்தம், மஞ்சனிறம், வெண்மை.*

**கௌரவம்** - *அச்சம், கீர்த்தி, தாமரை நூல் பொன்.*

**கௌரவர்** - *குருகுலவேந்தர்.*

**கௌரி** - *கடுகு, காளி, துர்க்கை, பத் தாண்டுப் பெண், பார்வதி, புளி நறளை, மஞ்சனிறம், துளசி, பூமி.*

**கௌரிகேணி** -*வெள்ளைக் காக்கணம்.*

**கௌரிகை** - *கன்னி.*

**கௌரிசங்கம்** - *இரட்டையுருத் திராட்சம்.*

**கௌரிசங்கரமணி** - *இரட்டை யுருத் திராட்சம்.*

**கௌரிசேயன்** - *குமரன், வினாயகன்.*

**கௌரிசேய்** - *விநாயகன்.*

**கௌரிச்சிப்பி** - *கௌரிபாத்திரம்.*

**கௌரிநந்தனன்** - *சுப்பிரமணியன்.*

**கௌரிபாத்திரம்** - *பாத்திரச்சங்கு.*

**கௌரிபாஷாணம்** - *விழைவுபாஷாண முப்பத்திரண்டினொன்று.*

**கௌரிமாயூரம்** - *ஓர்தலம்.*

**கௌரியன்** - *பாண்டியன்.*

**கௌரீலலிதம்** -*அரிதாரம்.*

**கௌருதற்பிகன்** - *குருபன்னிகற்பழித் தோன்.*

**கௌலகேயன்** - *வேசிபுத்திரன்.*

**கௌலவம்** - *பன்றி, இஃது பதினோர் கரணத்தொன்று.*

**கௌலாலகம்** - *மட்பாண்டம்.*

**கௌலிகன்** - *எத்தன், பிரதிவாதி.*

**கௌலினம்** - *உயர்குலம், துர்ச் செய்கை, மறைவிடம்.*

**கௌலேயகம்** - *குலத்திற்பிறத்தல்.*

**கௌலேயகன்** - *இல்லொழுக்கத்திற் பிதாமாதாவிடத்திற் பிறந்தவன், நாய்.*

**கௌலோகம்** - *கோலோகம்.*

**கௌவலம்** - *இரந்தை.*

**கௌவல்** - *கௌவுதல்.*

**கௌவியம்** - *கோரோசனை, பசுவி லுள்ளபொருள். அஃது பால் - தயிர் - நெய் - கோசலம் - ஆப்பி.*

**கௌவுதல்** - *கவ்வுதல்.*

**கௌவை** - *ஆயிலியநாள், எள்ளிளங் காய், கலக்கம், கள், காரியம், துன்பம், பழிச்சொல், சத்தம்.*

**கௌளம்** - *ஓரிராகம்.*

**கௌளி** - *பல்லி.*

**கௌளிக்காதல்** - *பல்லிச்சாத்திரம்.*

**கௌளிதம்** - *பட்சித்தல்.*

# ச

**சஃகுல்லி** - அப்பவருக்கம், மோக்கம்.

**சககமனம்** - உடன்கட்டையேறுதல்.

**சககாரம்** - தேமா.

**சகசட்சு** - சூரியன்.

**சகசண்டி** - வெட்கமற்றோன்.

**சகசதாதான்மியம்** - அகங்காரஞ் சீவனுடன் பொருந்தல்.

**சகசம்** - உண்மை, ஒற்றுமை, வட்டில்.

**சகசரன்** - உடன்றிரிதோழன்.

**சகசரி** - பொன்னிறங்கலந்தகரும் பூவுளமருதோன்றிமரம், வாடாக் குறிஞ்சி.

**சகசன்** - சகோதரன்.

**சகசா** - சிறுகுறிஞ்சா.

**சகசாட்சி** - சூரியன்.

**சகசை** - உடன்பிறந்தாள்.

**சகசோதி** - மிகுமிரபை.

**சகடகனன்** - கிருட்டிணன்.

**சகடக்கால்** - பண்டியுருள்.

**சகடம்** - அசுத்தம், உரோகணி, ஊர்க் குருவி, ஓர்யோகம், தமரத்தை, பண்டி, பாண்டில் பூண்டவூர்தி, வட்டில்.

**சகடயூபம்** - ஓர்படையணி.

**சகடயோகம்** - வியாழனுக்கு, ஆறு, எட்டு, பன்னிரண்டிற்சந்திரன் நிற்பது.

**சகடாலன்** - நந்தன் மந்திரி.

**சகடான்னம்** - அசுத்தபோசனம்.

**சகடிகை** - கைவண்டில்.

**சகடு** - உரோகணி, ஒருமிக்க, சந்தேகம், பண்டி.

**சகடை** - பண்டி, முரசு, வாச்சியம், ஓர்வாத்தியம்.

**சகணம்** - ஆப்பி.

**சகண்டை** - முரசு, வாச்சியம்.

**சகதண்டம்** - உலகமுழுவதும்.

**சகதந்தம்** - உலகத்தினெல்லை, உலக முடிவு.

**சகதாத்திரி** - துர்க்கை.

**சகதாத்துமா** - கடவுள்.

**சகதி** - சேறு, பூமி, பொல்லாநிலம்.

**சகதிபதி, சகதிபாலன்** - அரசன்.

**சகதேவன்** - சகாதேவன்.

**சகதேவி** - இலக்குமி.

**சகஸதிரதாரம்** - சக்கிரம்.

**சகத்திரநாமன்** - கடவுள்.

**சகத்திரபாதன்** - சூரியன்.

**சகத்திரபேதி** - கலவேதி.

**சகத்திரம்** - ஆயிரம், சிவாகமமிரு பத்தெட்டினொன்று.

**சகத்திரவேதி** - சாத்திரவேதி.

**சகத்திராட்சன்** - இந்திரன்.

**சகஸதிராமிசன்** - சூரியன்.

**சகத்திரானிகன்** - ஓரரசன்.

**சகத்து** - உலகம், அனுபவம்.

**சகநாதம்** - ஓரூர்.

**சகநாதன்** - கடவுள், சிவன், விட்டுணு.

**சகநாயகன்** - காந்தம்.

**சகந்தம்** - சுகந்தம்.

**சகபதி** - அரசன், கடவுள்.

**சகபாடி** - கற்றுச்சொல்லி, கூடப்பாடு வோன், சகலன்.

**சகப்பிராணன்** - காற்று.

**சகப்பிராந்தி** - உலகத்தைவெறுத்து விடுகை.

**சகமார்க்கம்** - யோகமார்க்கம்.

**சகமோகம்** - மண்ணாசை.

**சகம்** - கூட, சட்டை, தேசமன்பத் தாறினொன்று, பூமி, மார்கழி மாதம், வெள்ளாடு.

**சகரச்சாரி** - சத்துசாரம்.

**சகரர்** - சகரபுத்திரர்.

**சகரன்** - முதலெழுவள்ளலி லொரு வன்.

**சகரிகம்** - நாயுருவி.

**சகருணன்** - தயாலு.

**சகருவம்** - பெருமை.

**சகரூபன்** - சகோதரன்.

**சகர்மக்கத்தரிப்பிரயோகம்** - செயப் படுபொருளுடைய வினைமுதலின் முடிப்பு.

**சகலகம்** - வெள்ளாட்டுக்கடா.

**சகலகலாவல்லவன்** - கலைஞானி, குமரன்.

**சகலகாமேட்டி** - சருவவாஞ்சாயாகம்.

**சகலகுணசம்பன்னன்** - பலநற்குண முள்ளவன்.

**சகலத்தியாகம்** - சருவத்துறவு.

**சகலபாசனம்** - அருகன் முக்குடையி னொன்று.

**சகலபாடி, சகலப்பாடி** - ஓர்குடியிற் கொண்டோன்.

**சகலமங்கலை** - பார்வதி.

**சகலமும்** - எல்லாம்.

**சகலமோகினி** - மாயை.

**சகலர்** - எல்லாம், துண்டு, தோல், மீன்முள்.

**சகலர்** - எல்லோர், ஓர்குடியிற் கொண்டோர், மூவகையான மாக்களிலொருவர்.

**சகலவியாபி** - கடவுள்.

**சகலன்** - மனைவிசகோதரிகணவன்.

**சகலாத்து** - சிவப்புக்கம்பளி.

**சகலாவத்தை** - ஓரவத்தை.

**சகலி** - ஓர்மீன்.

**சகலிகரணம்** - துண்டாக்கல்.

**சகல்** - கொசுகு.

**சகவம்** - ஓர்புள்.

**சகவாசம்** - உற்றசினேகம், கூட விருத்தல்.

**சகவாசி** - உயிர்த்துணைவன், கூட விருப்போன்.

**சகவாழ்வு** - உலகவாழ்வு.

**சகவிசையை** - ஓர்பட்டணம்.

**சகளப்பாடி, சகளன்** - சகலப்பாடி.

**சகளம்** - மாயரூபம்.

**சகளாதனம்** - அட்டணைக் காலிட் டிருந்து இடக்கை யிருகாலினு மூன்றிக் குஞ்சித் திருப்பது.

**சகனமோகினி** - உலகமெல்லாம் மயக்கும் மோகினி.

**சகனம்** - ஆசனம், தொடையினுட் பக்கம், பொறுமை.

**சகன்** - கூட்டாளி, சங்காத்தி, சாலி வாகனன், தோழன்.

**சகன்மக்கத்துருப்பிரயோகம்** - செயப் படுபொருளுடைவினை (உம்.) வளைந்தான்.

**சகன்னம்** - உற்றுக்கேட்டல்.

**சகா** - ஓர்பூடு, தோழன், எல்லாம்.

**சகாகௌலம்** - ஓர்நரகம்.

**சகாசிதம்** - அலங்காரம், பிரவை.

**சகாடி** - பீர்க்கு.

**சகாதேவன்** - பாண்டவர்களில் இளையோன்.

**சகாத்தம், சகாப்தம்** - சகரனாண்டு.

**சகாத்தன்** - தோழன்.

**சகாந்தகன்** - விக்கிரமாதித்தன்.

**சகாபாடி** - சகபாடி.

**சகாயம்** - உதவி, துணை, நயம், நன்மை.

**சகாயதம், சகாயானம்** - சினேகக் கூட்டம்.

**சகாயவுபாயம்** - யோசனையுதவி.

**சகாயன்** - தோழன்.

**சகாயி** - சகாயன்.

**சகாயித்தல்** - இலகுவாதல்.

**சகாரணம்** - ஏதுவுடையது.

**சகாரி** - ஓர்வள்ளல்.

**சகாலம்** - அதிகாலம்.

**சகி** - சகியென்னேவல், தோழி.

**சகிதம்** - *ஒற்றுமை.*

**சகிதன்** - *சேர்ந்திருப்போன்.*

**சகித்தல்** - *பொறுத்தல், மன்னித்தல்.*

**சகித்துவம்** - *தோழமை.*

**சகிப்பு** - *பொறுதி.*

**சகு** - *சவ்வரிசி.*

**சகுடம்** - *சேம்பு, நாய், பொதியமலை.*

**சகுடை** - *சிற்றகத்தி.*

**சகுட்டகம்** - *ஆடுதின்னாப்பாலை.*

**சகுட்டம்** - *கிழங்கு.*

**சகுந்தம்** - *ஓர்நீர்ப்புள், கழுகு, பறவை, கமுகு, காந்தி.*

**சகுந்தி** - *ஓர்புள், பறவைப்பொது.*

**சகுப்பிரயோகம்** - *ஒருதரம்.*

**சகுலகண்டம்** - *ஓர்மீன்.*

**சகுலம்** - *சமுசாரம்.*

**சகுலி** - *ஒலி, மீன்.*

**சகுல்லியன்** - *உறவன்.*

**சகுனசாத்திரம்** - *கலைஞானமறுபத்தினான்கினொன்று. அஃது நிமித்தசாத்திரம்.*

**சகுனப்பிழை** - *துன்னிமித்தம்.*

**சகுனம்** - *கிழங்கு, நிமித்தம், பறவை.*

**சகுனி** - *கூகை. அஃது கரணம் பதினொன்றினொன்றுமாம், துரியோதனன் மாமன், நிமித்தம் பார்ப்போன், பறவை.*

**சகுனீசுபரன்** - *கருடன்.*

**சகோடயாழ்** - *நால்வகையாழினொன்று.*

**சகோதரத்தானம்** - *பிறந்தராசிக்கு மூன்றாமிராசி.*

**சகோதரம்** - *உடன்பிறப்பு.*

**சகோதரர்** - *உடன்பிறந்தார்.*

**சகோதரி** - *உடன்பிறந்தாள்.*

**சகோத்திரம்** - *சமுசாரம், வமிசம்.*

**சகோரகம், சகோரம்** - *சக்கரவாகம், செம்போத்து, பேராந்தை, நிலாமுக்கிப்புள்.*

**சக்கட்டம், சக்கந்தம்** - *நிந்தை, பரிகாசம், மயிர்.*

**சக்கட்டை** - *இளப்பம், சமர்த்தின்மை.*

**சக்கப்பணியவிருத்தல்** - *சக்களிய விருத்தல்.*

**சக்கரக்கவி** - *கோட்டிலெழுத் தடைத் துப்பாடுங்கவி.*

**சக்கரதரன்** - *சக்கரந்தரித்தோன், பாம்பு, விட்டுணு.*

**சக்கரதாபனம்** - *அட்சரந்தாபித்தல்.*

**சக்கரதாரி** - *விட்டுணு.*

**சக்கரதிசை** - *ஆயுமுடிவறியுந் திசைகளினொன்று.*

**சக்கரந்திரித்தல்** - *இயந்திரமாட்டல்.*

**சக்கரபாணி** - *துர்கை, விட்டுணு.*

**சக்கரப்பொறி** - *எந்திரப்பொறி.*

**சக்கரமடைத்தல்** - *இயந்திரத்தி லெழுத் தடைத்தல்.*

**சக்கரமுடிவு** - *ஆயுள்முடிவு.*

**சக்கரம்** - *அறுபதுவருடங் கொண்டது, ஆணையாசக்கரம். இஃது, இராசசின்னத்தொன்று, இயந்திரம், ஊர், கடல், காசு, கிரகநடை, சக்கரவாகப்புள், சக்கிரம், சீவிய நாள், சுழல்காற்று, சுற்று, செக்கு, தேருருளை, பிறப்பு, பூமி, பெருமை, மலை மல்லிகை, வட்டம், ஓர் சித்திரக்கவி, அஃது நான்கார்ச் சக்கரமு மெட்டார்ச் சக்கரமு மாறார்ச்சக்கரமும் வரப்பாடுவது.*

**சக்கரயூபம்** - *ஓர்படையணி.*

**சக்கரரேகை** - *சக்கராகாரமான ரேகை.*

**சக்கரவட்டம்** - *வட்டவடிவு.*

**சக்கரவர்த்தி** - *மற்றொருவரைப் பணியாது தனியாள்வோன்.*

**சக்கரவாகம்** - *ஓர்புள்.*

**சக்கரவாணம்** - *ஓர்வாணம்.*

**சக்கரவாளம்** - *எல்லை, ஓர்புள், ஓர்மலை, வட்டவடிவு.*

**சக்கரன்** - *இந்திரன், துவாச தாதித்தரி லொருவன், விட்டுணு.*

**சக்கராகாரம்** - *வட்டவடிவு.*

**சக்கராதிபதி** - *சுயாதிபதி.*

**சக்கராயுதன்** - *விட்டுணு.*

**சக்கராயுதி** - *சக்கரதரன், துர்க்கை.*

**சக்கரேசுவரன்** - *ஏகாதிபதி.*

**சக்கரை, சருக்கரை** - *வட்டித்தது.*

**சக்கரையமுது** - *சக்கரைச்சாதம்.*

**சக்கல்** - *சக்குக்கட்டினது, சாரம் வடித்தது.*

**சக்களத்தி** - *ஓர்பொருளுக்கின மாயிருக்கும் வேறொருபொருள், கொழுநனின் சகோதரன் மனைவி, மாற்றாடிச்சி.*

**சக்களமை** - *மாற்றாடிமாரினெ திரிடை.*

**சக்களவன்** - *மாற்றவன்.*

**சக்களிதல்** - *சளிதல்.*

**சக்களியல்** - *சக்களிந்திருப்பது.*

**சக்களையன்** - *சமுங்கலன், சமுங்கல்.*

**சக்காரம்** - *தேமா.*

**சக்கிமுக்கி** - *சக்கைமுக்கி.*

**சக்கியம்** - *அன்பு, இயன்றது, சேர் மானம்.*

**சக்கியன்** - *சினேகிதன்.*

**சக்கிரகம்** - *தருக்கசாத்திரத்தொன்று, பீசாங்குரநியாயம்.*

**சக்கிரசீவகன்** - *குயவன்.*

**சக்கிரதரன், சக்கிரபாணி** - *திருமால்.*

**சக்கிரபாதம்** - *பண்டி, யானை.*

**சக்கிரபாலன்** - *அதிபதி.*

**சக்கிரபேதினி** - *இரவு.*

**சக்கிரமணம்** - *உலாநடை.*

**சக்கிரமண்டலி** - *ஓர்பாம்பு.*

**சக்கிரமுகம்** - *பன்றி.*

**சக்கிரம்** - *சக்கராயுதம், சுழல்காற்று, சேனை, தண்டசக்கிரம், திசை.*

**சக்கிரயானம்** - *பண்டி.*

**சக்கிரவதன்** - *சக்கரதரன்.*

**சக்கிரவாடம்** - *எல்லை.*

**சக்கிரவாதம்** - *சுழல்காற்று.*

**சக்கிரவாந்தவன்** - *சூரியன்.*

**சக்கிரவாளம்** - *திகாந்தம், வட்டம்.*

**சக்கிரவிருதன்** - *விட்டுணு.*

**சக்கிரவிருதி** - *வட்டிமேல்வட்டி.*

**சக்கிரவேதினி** - *இரவு.*

**சக்கிராங்கம்** - *ஓர்புள், பண்டி.*

**சக்கிராங்கி** - *ஓர்புள்.*

**சக்கிராடி** - *எத்தன், பாம்பாட்டி.*

**சக்கிராதம்** - *பன்றி.*

**சக்கிராதிவாசி** - *தேன்தோடை.*

**சக்கிராவத்தம்** - *சுழற்றுதல்.*

**சக்கிரி** - *அரசன், குயவன், சக்கர வாகப்புள், செக்கான், திருமால், தேவேந்திரன், பாம்பு, தலைவன்.*

**சக்கிரிகை** - *முழந்தாள்.*

**சக்கிரீவதம்** - *கழுதை.*

**சக்கிலிச்சி** - *சத்துசாரம், செம்மாத்தி.*

**சக்கிலியன்** - *செம்மான்.*

**சக்கு** - *கண், பூஞ்சு.*

**சக்குச்சக்கெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**சக்குதானம்** - *விக்கிரகாராதனையி னொன்று. அஃது விக்கிரகத்தின் கண்கழுவல்.*

**சக்குபு** - *கரிசாலைப்பூடு.*

**சக்குப்பூத்தல்** - *பூஞ்சுபிடித்தல்.*

**சக்கை** - *கஞ்சல், கோது, தக்கை.*

**சக்கைமுக்கி** - *தீத்தட்டி.*

**சக்கையன்** - *உறுப்பின்றிப் பருத்தவன்.*

**சக்கோலி** - *ஓர்பூடு.*

**சங்கக்குழையோன்** - *சிவன்.*

**சங்கக்கூவி** - *சங்கதூதர்கூவி.*

**சங்கங்குப்பி** - *பீச்சுவிளாத்தி.*

**சங்கசீலி** - *வாயில்காவலன்.*

**சங்கச்செய்யுள்** - *சங்கத்துக்கேற்ற செய்யுள், சங்கப்புலவர் செய்யுள்.*

**சங்கஞ்செடி** - *இயங்கஞ்செடி.*

**சங்கடம்** - *ஒடுக்கவழி, தொந்தரவு, நெருக்கம், மிதவை, முதற்றலை வாய்தல், வருத்தம்.*

**சங்கடாட்சம்** - *கண்மூடுதல்.*

**சங்கடை** - *மரணத்தறுவாய், மரண வேதனை.*

**சங்கதம்** - *சம்பந்தம், தேவர்மொழி, நட்பு, முறைப்பாடு, பொருந்தல்.*

**சங்கதாளம்** - *கைப்பை.*

**சங்கதி** - *சரித்திரம், தொடர்பு, வரலாறு.*

**சங்கதை** - *சங்கதி.*

**சங்கத்தமிழ்** - *சங்கப்புலவர் தமிழ், தெளிதமிழ்.*

**சங்கத்தலைவன்** - *சங்கத்தில் முதல்வன், குமரன்.*

**சங்கத்தார்** - *ஆலோசனைக்காரர், கூட்டத்தார்.*

**சங்கத்திராவகம்** - *ஓர்திராவகம்.*

**சங்கநாதம்** - *சங்கோதை.*

**சங்கநிதி** - *சங்குருவாய்க்கிடக்கு நிதி.*

**சங்கநிவிர்த்தி** - *அவைக்கு நியாய சாந்தி.*

**சங்கபதம்** - *அட்டாதசதரும நூலி னொன்று.*

**சங்கபாடாணம்** - *தாலம்பபாஷாணம்.*

**சங்கபரணி** - *விட்டுணு.*

**சங்கபாலன்** - *அட்டமாநாகத்தொன்று.*

**சங்கபுங்கி** - *கடுரோகிணி.*

**சங்கப்பலகை** - *மதுரைச்சங்கத் திருந்த சங்கப்புலவராசனம்.*

**சங்கப்புலவர்** - *கல்விச்சங்கத்தவர், மதுரைச்சங்கத்துப்புலவர்.*

**சங்கமக்குரு** - *வீரசைவர்குரு.*

**சங்கமம்** - *இயங்குதிணைப்பொருள், கலத்தல், கூட்டம், நிலை யின்மை, புணர்ச்சி, யாறுகூடுமிடம், ஓர் கவி, புத்திகூடல்.*

**சங்கமரூபம்** - *சிவரூபம்.*

**சங்கமர்** - *திருக்கூட்டத்தார், வீரசை வர்.*

**சங்கமாராதனை, சங்கமார்த்தனை** - *பண்டாரங்கட்கன்னங் கொடுத் தல்.*

**சங்கமேந்தி** - *திருமால்.*

**சங்கம்** - *அழகு, ஐக்கம், ஓர்நிதி, கணைக்கால், கூடுதல், கூட்டம், கைக்குழி,சங்கு, சவை, தேறினவன், நூறுகோடாகோடி, நெற்றி, படையிலோர்தொகை. அஃது சமுத்திரம் மூன்று கொண்டது, புலவர், யாறுகூடுமிடம், விருப்பம்.*

**சங்கம்வாங்கி** - *சங்கிரதத்திற்குக் கூட்டிவிட்டுவாங்கி.*

**சங்கம்வாங்குதல்** - *பெண்ணை யொருவனுக்கு விட்டுவாங்குதல்.*

**சங்கரகம், சங்கரிகம்** - *சபையியல்.*

**சங்கரகிதம்** - *ஒன்றிப்பின்மை, பேதம்.*

**சங்கரகிதன்** - *சங்கந்துறந்தோன்.*

**சங்கரசாதி** - *கலந்தசாதி.*

**சங்கரம்** - *கலப்பு, குப்பை, துகள், நஞ்சு, போர், வருத்தம், வியாபாரம்.*

**சங்கரர்** - *போர்செய்வோர்.*

**சங்கரன்** - *சிவன், பலவருணக் கலப் பாய்ப் பிறந்தோன், பன்னோரு ருத்திரரிலொ ருவன்.*

**சங்கராசாரியர்** - *ஓர்வேதாந்தகுரு.*

**சங்கராதனம்** - *இருகான்மடித்து இருபடத்தையுங்கூட்டி நேரே யூன்றியிரு காலின் மேனிற்பது.*

**சங்கராபரணம்** - *ஓரிசை.*

**சங்கரி** - *சங்கரியென்னேவல், பார்வதி.*

**சங்கரித்தல்** - *அழித்தல்.*

**சங்கரிப்பு** - *அழிப்பு, கொலை.*

**சங்கரீகரணம்** - *குழப்பம், சாதிக் கலப்பு, சுபாப ஒழுங்குத்தப்பான புணர்ச்சி.*

**சங்கரீகிருதன்** - *கீழ்மகன்.*

**சங்கருடணம்** - *இழுத்தல், உழுதல்.*

**சங்கருடணன்** - *பலபத்திரன்.*

**சங்கருடம்** - *எதிரிடை.*

**சங்கரேகை** - *சங்கினாகாரமான ரேகை.*

**சங்கலம்** - *எண்கூட்டுதல், காடு, கூட்டம், சேர்மானம், நட்பு, மாமிசம்.*

**சங்கலனம்** - *எண்கூட்டல், கலப்பு, குவித்தல், சேர்மானம்.*

**சங்கலார்** - *பகைவர்.*

**சங்கலிதசங்கவிதம்** - *ஓர்கணக்கு.*

**சங்கலிதம்** - *எண்கூட்டல், ஓரெண் கலத்தல், தருமநூல்பதினெட்டி னொன்று.*

**சங்கவாசிதம்** - *வீடடைதல்.*

**சங்களை** - *மண்கிணற்றின் பலகைக்கட்டு.*

**சங்களைக்கிணறு** - *பலகைக்கட்டுக் கிணறு.*

**சங்கறுப்போர்** - *வளைபோழ்நர்.*

**சங்கற்பசம்** - *சங்கற்பம்போல் வாய்த்தல்.*

**சங்கற்பசம்பவம்** - *சங்கற்பித்தபடி பெறுதல்.*

**சங்கற்பசம்பன், சங்கற்பசன்** - *காமன்.*

**சங்கற்பசன்மன்** - *காமன்.*

**சங்கற்பஞ்சொல்லுதல்** - *சங்கற்பித்தல்.*

**சங்கற்பம்** - *நியமம், விருப்பம்.*

**சங்கற்பயோனி, சங்கற்பவன்** - *காமன்.*

**சங்கற்பித்தல்** - *சங்கற்பம்பண்ணு தல்.*

**சங்கன்னம்** - *நரம்பு.*

**சங்காகாரிகன்** - *முற்றூதன்.*

**சங்காசம்** - *உவமை, தோழமை.*

**சங்காடுதல்** - *சங்கினாற்புடைவை மினுக்குதல்.*

**சங்காதம்** - *அழித்தல், ஐந்துதர மீரடி களையு மொருங்கெடுத்து வைத்து நடத்தல், ஓர்நரகம், கூட்டம், வசனம், சமூலம்.*

**சங்காத்தம்** - *இணக்கம், சினேகம்.*

**சங்காத்தி** - *அனுசாரி, கூட்டாளி.*

**சங்காரகத்தா** - *உருத்திரன்.*

**சங்காரகாலத்துப்பு** - *அமுரியுப்பு.*

**சங்காரக்கிரமம்** - *சங்காரப்படு மொழுங்கு.*

**சங்காரம்** - *அழிவு.*

**சங்காரி** - *குதிரைவாலி, சங்காரி யென்னேவல், புதுமணமுடித்த பெண்.*

**சங்காரித்தம்** - *சத்தமுகிலினொன்று, அஃது பூப்பொழிவது.*

**சங்காலம்** - *விரைவு.*

**சங்காவியங்கட்டுதல், சங்காவேசங் கட்டுதல்** - *அச்சத்தாலவசமாதல்.*

**சங்காவியம்** - *அச்சத்தான் வருமவசம்.*

**சங்கிதை** - *சரித்திரம்.*

**சங்கித்தல்** - *கனம்பண்ணல், சந்தேகப் படல், பயப்படல்.*

**சங்கியை** - *எண்.*

**சங்கிரகணம்** - *ஏற்றுக்கொள்ளல், கலவிப்பேச்சு, நம்பிக்கை.*

**சங்கிரகம்** - *உயர்ச்சி, காடு, காத்தல், சம்மதம், சுருக்கம், திரட்சி, கைச் சண்டை.*

**சங்கிரகித்தல்** - *சுருக்குதல், வழி யோட்டம்.*

**சங்கிரதம்** - *காதலோர் கூட்டம்.*

**சங்கிரந்தனன்** - *இந்திரன்.*

**சங்கிரபுரி** - *இடையரூர், முல்லை நிலம்.*

**சங்கிரமசாதி** - *சங்கரசாதி.*

**சங்கிரமணம்** - *நடை.*

**சங்கிரமம்** - *கலப்பு, கிரகநடை, மாதப்பிறப்பு, உபாயவழி.*

**சங்கிரமித்தல்** - *சூரியன் முதலிய கிரகங்களோரிராசியிலிருந்து மற்றோரிராசிக்குச் செல்லல்.*

**சங்கிரம்** - *காடு.*

**சங்கிராந்தம், சங்கிராந்தி** - *ஒன்றிலிருந்துவேறொன்றிற்குப் போதல், மாதப்பிறப்பு.*

**சங்கிராமம்** - *போர், மலைமேல்வழி.*

**சங்கிராமவிலக்கணம்** - *கலைஞானமறுபத்தினான்கினொன்று, அஃது போர்வித்தை.*

**சங்கிரீடணம், சங்கிரீடமாணம்** - *விளையாட்டு.*

**சங்கிருதம்** - *கலப்பு, சமஸ்கிருதம்.*

**சங்கிலி** - *ஓராபரணம், தொடர், தொடை, விலங்கு.*

**சங்கிலிகரணம்** - *இயல்புக்கு விரோதமான புணர்ச்சி.*

**சங்கிலிதம்** - *சங்கலிதம்.*

**சங்கிலிப்பூட்டு** - *ஓர்வகைப்பூட்டு, பிசகு.*

**சங்கிற்கூர்மை** - *சிந்துலவணம், பிடாலவணம்.*

**சங்கினி** - *உபத்தத்தைப் பற்றி நிற்குந் நாடி, நால்வகைப்பெண்ணுளொருத்தி.*

**சங்கின்கொடியோன்** - *நாகரவண்டு.*

**சங்கின்பிள்ளை** - *முத்து.*

**சங்கீதகோலாகலன்** - *கீதவாத்தியப் பிரியன்.*

**சங்கீதசாயித்தியம்** - *சங்கீதப் பரிட்சை.*

**சங்கீதம்** - *வாச்சியத்தோடே பாடுதல், வாச்சியத்தோடுபாடும் பாட்டு.*

**சங்கீதலோலன்** - *கீதவினோதன்.*

**சங்கீதவாத்தியம்** - *சங்கீதத்திற்கிசைய இயக்கும் வாச்சியக்கருவி.*

**சங்கீதி** - *சங்கீதசாத்திரம், சம்பாஷணை.*

**சங்கீரணம்** - *அசுத்தம், ஓரலங்காரம், கலப்பு, நெருக்கம், சம்மதித்தல்.*

**சங்கீர்தம், சங்கீர்த்தம்** - *எழுத்துப் புணர்ச்சி, புணர்ச்சி.*

**சங்கீர்த்தனம்** - *புகழ்ச்சி.*

**சங்கு** - *இயங்கு, இராசசின்னத் தொன்று, ஒன்றிப்பு, ஓரெண், கடிகாரவூசி, கணைக்கால், கூடுதல், கைவளை, சங்கு, நெற்றி, படைக் கலம்.*

**சங்குகாசம்** - *கண்ணோயுளொன்று.*

**சங்குக்கீரை** - *ஓர்கீரை.*

**சங்குசக்கரம்** - *சங்குசக்கரவடிவாய ரேகை, பாம்பின் படப்பொறி.*

**சங்குச்சலாபம்** - *சங்குக்குழி.*

**சங்குச்சுரி** - *சங்குப்புரி, புரியாணி.*

**சங்குச்சுரை** - *புரியாணி, புரியுள்ள சுரை.*

**சங்குட்டம்** - *எதிரொலி.*

**சங்குதிரி** - *சங்குப்புரி.*

**சங்குதிருகி** - *சங்கறுக்குங்கருவி.*

**சங்குத்தாலி** - *ஓராபரணம்.*

**சங்குநாதம்** - *சங்கோசை.*

**சங்குநாதித்தல்** - *சங்கூதல்.*

**சங்குபுட்பம்** - *ஞாழல்.*

**சங்குப்புரி** - *சங்குச்சுரி.*

**சங்குமடப்பளி** - *ஓர்சாதி.*

**சங்குமணி** - *சங்காற்செய்தமணி.*

**சங்குமரு** - *வேம்பு.*

**சங்குமறை** - *துய்யவெள்ளைமறை.*

**சங்குமுத்து** - *சங்கின்முத்து.*

**சங்குருளை** - *ஆமை.*

**சங்குலம்** - *எதிர்மொழி, கூட்டம், நஞ்சு, போர்.*

**சங்குவளையல்** - *சங்காலானவளை.*

**சங்குவெள்ளை** - *சங்குச்சுண்ணக் காறை, சுத்தவெள்ளை.*

**சங்கூடம்** - *அடுக்கு, குவியல், சுருக்கம்.*

**சங்கூதி** - *பதினெண்குடிமையினொருவன்.*

**சங்கூபிலம்** - *அட்டாதசகீதபுராணத்தொன்று.*

**சங்கூமச்சி** - *ஓர்வகையூமச்சி.*

**சங்கேதம்** - *குழூஉக்குறி, நியமம், பொருத்தம்.*

**சங்கை** - *அச்சம், ஐயம், சுண்டி, மதிப்பு.*

**சங்கைமான்** - *சங்கைக்காரன்.*

**சங்கையீனம்** - *சங்கைத்தாழ்ச்சி.*

**சங்கோசம்** - *அடக்கம், கண்கூச்சம், தந்திரம், மஞ்சல், வெட்கம்.*

**சங்கோபனம்** - *மறைவு.*

**சங்ஙிதை** - *சரித்திரம்.*

**சசம்** - *முயல்.*

**சசலம்** - *ஈரம்.*

**சசவிடாணம்** - *முயற்கொம்பு, அஃது ஓரில்பொருள் வழக்கு.*

**சசாங்கம்** - *சந்திரன்.*

**சசி** - *இந்திராணி, ஐக்கம், கருப் பூரம், சந்திரன்.*

**சசிகடல்** - *மழை.*

**சசிதரன்** - *சிவன், விநாயகன்.*

**சசிதரி** - *சிவன், பார்வதி, விநாயகன்.*

**சசித்துருவம்** - *சந்திரன்நிலை.*

**சசிப்புடம்** - *சந்திரன் சுத்தபுடம்.*

**சசிமணாளன்** - *இந்திரன்.*

**சசியம்** - *கஞ்சா, நிலப்பனை, பயிர், மராமரம், விளைவு.*

**சசியாதிபன்** - *விளைவுகாரகக்கிரகம்.*

**சசிவன்** - *சினேகிதன், மந்திரி.*

**சசேதனம்** - *அறிவு.*

**சசேலஸநானம்** - *புடைவையோடே முழுகுதல்.*

**சசேலம்** - *உடை.*

**சச்சடம்** - *தாமரை.*

**சச்சடி** - *கலம்பகம், சனக்கூட்டத் தின்றொந்தறை.*

**சச்சம்** - *மெய்.*

**சச்சரவு** - *சச்சடி.*

**சச்சரி** - *ஓர்வாத்தியம்.*

**சச்சரை** - *சண்டை.*

**சச்சரைப்படுதல்** - *சண்டைபிடித்தல்.*

**சச்சற்புடம்** - *பஞ்சதாளத்தொன்று.*

**சச்சனம்** - *காவல்.*

**சச்சிதம்** - *அணிதல், அலங்கரிப்பு, ஞானம்.*

**சச்சிதானந்தம்** - *ஞானத்துக்குக் காரணமாயது, சத்துஞ்சித்து மானந்தமுமாய் நிற்கும்பிரமம்.*

**சச்சிதானந்தன்** - *கடவுள், பிரமன்.*

**சச்சு** - *அற்பம், இளந்தது, சந்தடி, நீர்ச்சுண்டி, பறவைமூக்கு.*

**சஞ்சடி** - *சச்சடி.*

**சஞ்சம்** - *கச்சு.*

**சஞ்சயம்** - *கூட்டம்.*

**சஞ்சயவாதம்** - *ஓர்சமய நூல்.*

**சஞ்சயனம்** - *காடாற்றுதல்.*

**சஞ்சயன்** - *பாண்டவர்புரோகிதன்.*

**சஞ்சரம்** - *உடல், கொலை, சங்கடம், பாதை.*

**சஞ்சரி** - *தேனீ.*

**சஞ்சரிகம்** - *வண்டு.*

**சஞ்சரித்தல்** - *வாசம்பண்ணல்.*

**சஞ்சரிப்பு** - *சகவாசம்.*

**சஞ்சரீகம்** - *வண்டு.*

**சஞ்சலத்துவம்** - *உறுதியின்மை.*

**சஞ்சலம்** - *அசைவு, காற்று, மனக்கவலை, மின்னல், சுடலையிற் கொண்டு போகும் பால்.*

**சஞ்சலனம்** - *அச்சத்தான் வந்த நடுக்கம்.*

**சஞ்சவித்தல்** - *கலங்கல், கிலேசித்தல்.*

**சஞ்சலை** - *இலக்குமி, திப்பிலி, மின்னல்.*

**சஞ்சலைசீவகன்** - *புருடராகம்.*

**சஞ்சனம்** - *பணிகளானெழுமொலி.*

**சஞ்சனனம்** - *பிறப்பித்தல்.*

**சஞ்சன்** - *பிரமன்.*

**சஞ்சாயம்** - *இலவசம், வாரப்பங்கு.*

**சஞ்சாயம்விடுதல்** - *வாரத்துக்கு விடுதல்.*

**சஞ்சாரகன்** - *நடத்துபவன்.*

**சஞ்சாரணம்** - *தூண்டுதல், நடத்துதல்.*

**சஞ்சாரப்பிரேதம்** - *வனவாசி.*

**சஞ்சாரம்** - *ஏற்றியிறக்கிப்பாடுதல், கூடியிருத்தல், கூட்டம், தொற்று வியாதி, நாகரத்தினம், வாசம்.*

**சஞ்சாரம்பண்ணுதல்** - *கூடியிருத்தல், வாசம்பண்ணுதல்.*

**சஞ்சாரன்** - *உயிர்.*

**சஞ்சாரி** - *சஞ்சரிப்போன்.*

**சஞ்சாரிகன்** - *தூதன்.*

**சஞ்சாரிகை** - *தூதி.*

**சஞ்சாவாதம், சஞ்சானிலம்** - *காற்றும் மழையும்.*

**சஞ்சாளிகம்** - *வண்டு.*

**சஞ்சிதம்** - *ஈட்டியது, கட்டுப்பட்ட வினை.*

**சஞ்சிந்தனம்** - *ஆலோசனை.*

**சஞ்சிந்தியம்** - *தியானித்தல்.*

**சஞ்சிலேட்டுமம்** - *ஒன்றுக்குட்புகுதல்.*

**சஞ்சீவகரணி** - *புளியமரம், மூர்ச்சை தீர்த்துயிர் தருமருந்து.*

**சஞ்சீவனம்** - *உயிர்ப்பித்தல்.*

**சஞ்சீவனை, சஞ்சீவி, சஞ்சீவினி** - *பூநாகம், மூர்ச்சை தீர்த்துயிர் தருமருந்து, சீந்தில்.*

**சஞ்சு** - *ஆமணக்கு, சாயல், பறவை மூக்கு.*

**சஞ்சுகை** - *பறவைமூக்கு.*

**சஞ்சுபம்** - *முஸதிப்பு.*

**சஞ்சுவிருதம்** - *பறவை.*

**சஞ்சூரியமாணம்** - *பொல்லாங்கிற் கிசைந்திருத்தல்.*

**சஞ்சேபம்** - *அடையாளம், சுருக்கம், சோறு, தருக்கம்.*

**சஞ்சேபித்தல்** - *சுருக்குதல்.*

**சஞ்சேயம்** - *ஈட்டியது.*

**சஞ்சை** - *பெருமழை, பேரொலி.*

**சடகம்** - *ஊர்க்குருவி, குடிக்கும் பாத்திரம், சாராயம், தேன்.*

**சடக்குச்சடக்கெனல், சடக்குப்புடக் கெனல்** - *ஈரடுக்கொலிக்குறிப்பு.*

**சடக்கெனல்** - *ஒலிக்குறிப்பு, சீக்கிரக் குறிப்பு.*

**சடக்கோதன்** - *வசம்பு.*

**சடங்கப்படுதல்** - *கட்டுப்படுதல், சோலிக்குட்படல்.*

**சடங்கப்பூட்டு** - *மல்லருடைய பூட்டி னொன்று.*

**சடங்கம்** - *சோலி, பூட்டு, மூட்டைப் பை, ஆறுசாத்திரம்.*

**சடங்கு** - *கிரியை, செய்முறை.*

**சடசடப்பு, சடசடெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**சடசீதி** - *ஓர்யோகம்.*

**சடதி** - *சிதைவு.*

**சடத்துவம்** - *சடத்தன்மை.*

**சடநிறம்** - *மாமிசச்சிலை.*

**சடபதார்த்தம்** - *அசித்துப்பொருள்.*

**சடபுடத்தல், சடபுடாவெனல், சடபு டெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**சடப்பால்** - *முலைப்பால்.*

**சடம்** - *ஆறு, உடல், கொடுமை, சடத் தீயினொன்று, பொய், விருட்ச மூலம்.*

**சடரச்சுவாலை** - *மூலாக்கினி.*

**சடரம்** - *வயிறு.*

**சடரயாதனை** - *கருப்பவேதனை.*

**சடராக்கினி** - *மூலாக்கினி.*

**சடராமயம்** - *ஓர்நோய்.*

**சடர்** - *மூடர்.*

**சடலட்சணம்** - *மாயயாக்கையின் குணம், அஃது தன்னையுந் தலைவனையு மறியாதிருத்தல்.*

**சடலபுடலம்** - *பருத்தது.*

**சடலம்** - *சரீரம்.*

**சடலை** - *பருத்தது.*

**சடவத்து, சடவஸது** - *அசித்துப் பொருள்.*

**சடவுப்பு** - *அமுரியுப்பு.*

**சடன்** - *மதியீனன், மூடன்.*

**சடாங்கம்** - *உடலுறுப்பாறு, அஃது கால்-கை-தலை-மார்பு, சிங்கம்.*

**சடாசுவாலம்** - *தீபம்.*

**சடாகுடம்** - *சடாமுடி, சடை.*

**சடாடங்கண்** - *சிவன்.*

**சடாடவி** - *சடைத்திரன்.*

**சடாட்சரம்** - *குமரன் மந்திரம்.*

**சடாட்சரன்** - *முருகன்.*

**சடாட்சரி** - *உமை, சத்திமந்திரம்.*

**சடாதரன்** - *அருநெல்லி, சிவன், இருடி, வீரபத்திரன்.*

**சடாதரி** - *சடாதாரி.*

**சடாதாரம்** - *ஆறாதாரம், அஃது மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனாகதம், விஸதி, ஆஞ்ஞை.*

**சடாதாரி** - *கொடியாள் கூந்தல், சடையுள்ளோர், சிவன், பார்பதி.*

**சடாபலம்** - *பனை.*

**சடாபாரம்** - *சடை.*

**சடாமகுடம்** - *சடாமுடி.*

**சடாமகுடன்** - *சிவன்.*

**சடாமாஞ்சி, சடாமாஞ்சில்** - *ஓர்சரக்கு.*

**சடாமுடி** - *சடைமுடி.*

**சடாயு** - *அருணன்மக்களி லொருவன்.*

**சடாய்த்தல்** - *இடித்துரைத்தல், துவக்கில் மருந்திடல்.*

**சடாரட்டியென்னல்** - *ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.*

**சடாரி** - *கவசம்.*

**சடாரிடுதல், சடாரெனல்** - *ஒலிக் குறிப்பு.*

**சடார்ப்புடாரெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**சடாலம்** - *ஆலமரம், தேன்கூடு, யாகத் தறியினிடும் வளையம்.*

**சடானனன்** - *குமரன்.*

**சடிதி** - *சீக்கிரம்.*

**சடிதிவு** - *கச்சோலம்.*

**சடிலம்** - *குதிரை, சடை, சிங்கம், நெருக்கம்.*

**சடினம்** - *சடைமரம், வசம்பு.*

**சடு** - *அழுதல், ஆறு, வயிறு.*

**சடுதி** – *சீக்கிரம்.*

**சடுத்தம்** - *வலோற்காரம், வில்லங்கம்.*

**சடுத்தம்பூட்டுதல்** - *வலோற் காரமாகப்பொறுப்பித்தல்.*

**சடுலம்** - *அசைவு, அச்சம், அழகு, மறு.*

**சடுலவோசை** - *தீக்கொழுந்து முதலிய வற்றினசைவானெழுமொலி.*

**சடுலை** - *மின்னல்.*

**சடுலோலம்** - *சடுலம்.*

**சடை** - *அடைக்குந்தடி, ஆணியின் கொண்டை, இரேகை, கிடைச்சி, கூட்டம், சடையென்னேவல், பிரவை, பின்னல்மயிர், வேர்.*

**சடைக்கஞ்சா** - *முறுகுகஞ்சா.*

**சடைக்கந்தம்** - *வசம்பு.*

**சடைச்சி** - *ஓர்பூடு, நெட்டி, பாசி, பார்வதி, பொன்னிமிளை, புளியாரை.*

**சடைச்சிவேர்** - *ஓர்பூடு.*

**சடைதல்** - ஆணி முதலியவை தறைந்து அகற்றுதல், கிலேசப்படுதல், தயிரிய கீனமாதல், மனமடிதல், வளராது நிற்றல்.

**சடைத்தல்** - கிளைத்து நெருங்குதல்.

**சடைநாகம்** - ஓராபரணம் பாம்பு.

**சடைநாய்** - ஓர்நாய்.

**சடைப்பயறு** - ஓர்பயறு.

**சடைப்புல்** - ஓர்புல்.

**சடைப்பாசி** - ஓர்பாசி.

**சடைமுடி** - சரக்கொன்றை.

**சடைமுடியோர்** - தபத்தர்.

**சடையன்** - சிவன், வீரபத்திரன்.

**சடையாணி** - குடுமியாணி.

**சடைவு** - ஆணிமுதலியவற்றின் தறைவு, தடை, தயிரியவீனம், துக்கம்.

**சட்கருமம்** - அந்தணர்தொழிலாறு. அஃது இஸநானம், ஓமம், சுவாத்தியாயம், செபம், தருப்பணம், பிதிர் பூசை, விசுவதேவம் அன்றியும் ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட் பித்தல்.

**சட்சணம்** - பட்சணம்.

**சட்சரணம்** - வண்டு.

**சட்சள்ளெனல்** - ஒலிக்குறிப்பு.

**சட்சு** - கண்.

**சட்சுதீட்சை** - சற்குருதீட்சையினொன்று.

**சட்சுவிந்திரியக்காட்சி** - ஓரளவை, அஃது உருவமறிதல்.

**சட்டகப்பை** - ஓரகப்பை.

**சட்டகம்** - உடல், மக்கட்படுக்கை, வடிவு.

**சட்டங்கட்டுதல்** - ஒழுங்குபடுத்துதல், கட்டளையுண்டாக்கல்.

**சட்டதிட்டம், சட்டபட்டம், சட்டவட்டம்** - ஒழுங்கு, கட்டளைச்சட்டம், பூரணம்.

**சட்டப்பலகை** - மட்டப்பலகை.

**சட்டம்** - எழுதுமோலை, கட்ட ளைத்திட்டம், கட்டில் முதலிய வற்றின் சட்டம், திருத்தம், நாவிச் சட்டம், பூரணம்.

**சட்டம்பி** - உவாத்தி.

**சட்டம்பிப்பிள்ளை, சட்டம்பிள்ளை** - மாணாக்கரிற்றலைவன்.

**சட்டவளை** - குறுக்குவளை.

**சட்டவாள்** - சட்டம் பூட்டிய ஈர்வாள்.

**சட்டவிளக்கு** - ஓர்வகைநிலை விளக்கு.

**சட்டி** - ஆறாந்திதி, ஆறு, ஓர் பாண்டம், சட்டியென்னேவல்.

**சட்டித்தலை** - பருந்தலை.

**சட்டித்தலைப்பா** - வட்டத்தலைப்பா.

**சட்டித்தலையுள்ளான்** - ஓர்குருவி.

**சட்டித்தல்** - அழித்தல், கொல்லல்.

**சட்டிபூர்த்திசாந்தி** - அறுபதுவயதிற் செய்யுமோர் சடங்கு.

**சட்டிப்பீரங்கி** - அகன்றபீரங்கி.

**சட்டிப்புல்** - ஓர்புல்.

**சட்டியாட்டுதல், சட்டியுருட்டுதல்** - ஓர் சூது.

**சட்டிவிரதம்** - ஓர்விரதம்.

**சட்டு** - அழிவு, ஆறு, சேதம்.

**சட்டுவம் –** அகப்பை.

**சட்டுவருக்கம்** - இலக்கினத்திலிருந்து பிரியுமாறுவருக்கம்.

**சட்டை** - அங்கி, கணிப்பு, சிறகு, பாம்பின்றோல், பொதி.

**சட்டைகழற்றல்** - பாம்புதோல் கழற்றல்.

**சட்டைக்காரர்** - காற்சட்டைக்காரர்.

**சட்டைச்சாம்பு** - சட்டைக்குக் கூடிய புடைவை.

**சட்டைநாதன்** - சிவன், வயிரவன்.

**சட்டைபண்ணல்** - கனம்பண்ணல்.

**சட்டைமுனி** - ஓர்சித்தன்.

**சட்டோலை** - எழுதுதற்கான வோலை.

**சட்பதம்** - வண்டு.

**சட்பதாதி** - *சண்பகம், மாமரம்.*

**சட்பம்** - *அறுகு, பசும்புல், மயிர்.*

**சட்பிதாபுத்திரிகம்** - *பஞ்சதாளத் தொன்று.*

**சட்பிரஞ்ஞன்** - *ஆறுகாரிய மறியுமறி வுடையோன். அஃது சன்மார்க்கம், தேவதன்மை, பாக்கியம், பிர பஞ்சவியல்பு, முத்தி, விருப்பம்.*

**சட்புள்ளெனல்** - *கோபித்துப்பேசல்.*

**சணப்பு** - *சணல்.*

**சணம்** - *கணம், சணல்மரம், தருப்பை, ஏகசித்தம், கடலை.*

**சணம்பு, சணல்** - *ஓர்பயிர், மகள்.*

**சணற்பனார்** - *சணற்றும்பு.*

**சணைத்தல்** - *விரிந்துண்டாதல்.*

**சணைப்பு** - *கிளைப்பு, செழிப்பு.*

**சண்டகன்** - *இலிங்கபாஷாணம்.*

**சண்டப்பிரசண்டம்** - *மிகுவேகம்.*

**சண்டமாருதம்** - *பெருங்காற்று.*

**சண்டமாருதம்பொழிதல்** - *மிகுதி யாய்ப் பொழிதல்.*

**சண்டம்** - *உறைப்பு, எருது, கருப்பம், கொடுமை, கோபம், சீக்கிரம், பேடு, வேகம்.*

**சண்டவேகம்** - *மிகுவேகம்.*

**சண்டன்** - *அசுரன், அலி, காலன், சிவன், சூரியன், நமன், புளியமரம், பேடி, வேகி.*

**சண்டாளநீர்** - *நீசர்பரிசனநீர்.*

**சண்டாளப்பிராயச்சித்தம்** - *சண்டா ளரால் வந்த குற்றத்துக்குப் பண்ணுந் நிவிர்த்தி.*

**சண்டாளம்** - *துரோகம், புலைத் தன்மை.*

**சண்டாளன்** - *துரோகி, பார்ப்பனத்தி யிடத்திற்சூத்திரனுக்குப் பிறந்த புத்திரன், புலையன்.*

**சண்டாளி** - *துரோகி, புலைச்சி.*

**சண்டி** - *உரோசமற்றவன், ஓர்மரம், துர்க்கை.*

**சண்டிகை** - *காளி, துர்க்கை.*

**சண்டிக்கார்** - *ஓர்நெல்.*

**சண்டிக்கீரை** - *ஓர்கீரை.*

**சண்டித்தனம்** - *நாணயக்கேடு.*

**சண்டிலன்** - *சிவன், நாவிதன்.*

**சண்டிவாளம்** - *முன்தீர்த்த விலையை யழிக்கும்படி கொடுக்கிறபணம்.*

**சண்டை** - *பிணக்கு, போர்.*

**சண்ணுதல்** - *செய்தல், வைத்தல்.*

**சண்பகம்** - *செண்பகம்.*

**சண்பனி** - *யோகினிகாளி.*

**சண்பை** - *சீகாளி.*

**சண்பையர்கோன்** - *சம்பந்தன்.*

**சண்முகன்** - *குமரன்.*

**சதகம்** - *நூறுசெய்யுட் கொண்ட பிரபந்தம்.*

**சதகுப்பி, சதகுப்பை** - *ஓர்பயிர்.*

**சதகோடி** - *இடி, ஓரெண், வச்சிராயுதம்.*

**சதக்கல்** - *சேறு.*

**சதக்கிரதம்** - *மின்னல்.*

**சதக்கிரது, சதக்கிருது** - *இந்திரன்.*

**சதங்கை** - *சலங்கை.*

**சதசதத்தல்** - *நொதுநொதுத்தல்.*

**சதசதப்பு** - *நொதுநொதுப்பு.*

**சதசத்து** - *சத்துமசத்துமாயது.*

**சதசு** - *சபை.*

**சதசுலோபி** - *பண்டிதன்.*

**சதச்சதம்** - *தச்சன்குருவி.*

**சதஞ்சீவி** - *நூறுவயதிற்கிருப்பவன்.*

**சததம் –** *எப்போழ்தும்.*

**சததளம்** - *தாமரை.*

**சததாமன்** - *விட்டுணு.*

**சததாரை** - *இடி.*

**சதத்திருதி** - *இந்திரன், பிரமன்.*

**சதத்துவம்** - *சுபாவம்.*

**சதபதுமம்** - *தாமரை.*

**சதபத்திரகம்** - *தச்சன்குருவி.*

**சதபத்திரம்** - *கிளி, தச்சன்குருவி, தாமரை, மயில், வெண்ணாரை.*

**சதபத்திரி** - *தாமரை, புழுக்கொல்லி.*

**சதமகன், சதமன்னியு** - *இந்திரன்.*

**சதமுனை** - *வச்சிராயுதம்.*

**சதமூலி** - *ஓர்பூடு.*

**சதம்** - *அறுபடுபயிர், இடி, இலை, இறகு, எல்லாம், தமாலமரம், நித்தியம், நிலைமை, நூறு, தாழ்தல், போதல்.*

**சதயம்** - *ஓர்நாள்.*

**சதவல்** - *சதுப்புநிலம்.*

**சதவீரு** - *ஓர்மல்லிகை.*

**சதளம்** - *கூட்டம்.*

**சதனம்** - *இலை, இறகு, உறை, வீடு.*

**சதா** - *மரக்கலம், மரத்தினுட்பழுது, எப்பொழுதும்.*

**சதாகதி** - *ஓயாநடை, காற்று.*

**சதாகாலம்** - *எப்போழ்தும்.*

**சதாக்கினி** - *தேள்.*

**சதாங்கம்** - *பாண்டில்பூண்டவூர்தி.*

**சதாசிவம்** - *சதாசிவன், முடியாநன்மை.*

**சதாசிவன்** - *பஞ்சகத்தாக்களிலொருவன்.*

**சதாபடம்** - *எருக்கு.*

**சதாபதி** - *மரவட்டை.*

**சதாபலம்** - *எலுமிச்சை.*

**சதாபுயம்** - *வண்டு.*

**சதாப்பு** - *ஓர்பூண்டு.*

**சதாமூர்க்கம்** - *பாம்புகொல்லி.*

**சதாமூலம், சதாவேரி** - *நீர்மீட்டான்.*

**சதாரம்** - *இடி.*

**சதாவர்த்தன்** - *விட்டுணு.*

**சதானகம்** - *இடுகாடு.*

**சதானந்தன்** - *கடவுள், கௌதமன், பிரமன், விட்டுணு.*

**சதானீகன்** - *ஓரரசன், விருத்தன்.*

**சதி** - *அழிவு, உரோகணி, கற்புடையாள், சோறு, தாழ்வாரம், தாளவொத்து, பார்வதி, மனைவி, வஞ்சனை, வட்டம்.*

**சதிகாரன்** - *வஞ்சகன்.*

**சதித்தல்** - *சதிசெய்தல்.*

**சதித்துவம்** - *கற்புடைமை.*

**சதிபதி** - *சிவன்.*

**சதிபுருஷநியாயம்** - *திரீபுருஷருக்குள்ள உரித்து.*

**சதிமகள்** - *இந்திராணி.*

**சதிமானம், சதியோசனை** - *அபகடம்.*

**சதிமோசம்** - *மடிப்பு.*

**சதிரம்** - *கக்கரி.*

**சதிரிசம்** - *உவமை.*

**சதிர்** - *இலகு, எல்லை.*

**சதிர்க்கிராமம்** -*ஊரின் தலைக்கிராமம்.*

**சதீலம்** - *காற்று, மூங்கில்.*

**சதீனகம், சதீனம்** - *பயறு.*

**சது** - *நான்கு.*

**சதுகம்** - *பெருங்காயம்.*

**சதுக்கம்** - *சதுரம், நாற்றெருக் கூடுமிடம், சத்திரம்.*

**சதுங்கம்** - *பறவை.*

**சதுச்சமம்** - *நால்வகைச் சாந்தின் கலவை.*

**சதுட்கம்** - *நான்கு.*

**சதுட்டயம்** - *நான்மடங்கு கொண்டது.*

**சதுட்பதம், சதுட்பாதம்** - *சதுர்ப்பதம், நாற்காலுள்ளது, நாற்றெருக் கூடுமிடம், நான்கடிகொண்ட பாட்டு.*

**சதுப்பு** - *சதசதப்பானநிலம்.*

**சதுமணி** - *கழலை.*

**சதுமுகன்** - *அருகன், பிரமன்.*

**சதுரக்கள்ளி** - *ஓர்கள்ளி.*

**சதுரங்கசேனை** - *காலாள் - தேர் - பரி யானையாகிய நால்வகைச் சேனை.*

**சதுரங்கதாரணை** - *நவதாரணையி னொன்று.*

**சதுரங்கதானை** - *சதுரங்கசேனை.*

**சதுரங்கபட்டினம்** - *ஓர்பட்டினம்.*

**சதுரங்கபந்தம்** - *சித்திரகவியி னொன்று.*

**சதுரங்கபலம்** - *நால்வகைத்தானை.*

**சதுரங்கம்** - *ஓர்விளையாட்டு, நால் வகைத்தானை, நாற்கோணம்.*

**சதுரசாலை** - *நாற்சார்வீடு.*

**சதுரந்தயானம்** - *சிவிகை.*

**சதுரம்** - *அகலநீளமொத்த நாற் கோணம், சமர்த்து, யானைப் பந்தி, விரைவு.*

**சதுரர்** - *அறிஞர், நகரப்பதியோர், நாகரிகர்.*

**சதுரன்** - *கற்றவன், நாகரிகன், பேரா சைக்காரன்.*

**சதுரானனன்** - *பிரமன்.*

**சதுரியுகம்** -*நாலுகமுங்கூடிய பேருகம்.*

**சதுரை** - *சதுரங்கபட்டினம்.*

**சதுர்** - *சபைகூடிச்செய்யுநடனம், திறம், நான்கு, புத்தி.*

**சதுர்க்கதி** - *ஆமை.*

**சதுர்க்குணன்** - *ஓர்ப்பு, கடைப்பிடி, குறிக்கோள், தோற்றம் எனுநாற் குண முடையான்.*

**சதுர்க்குணி** - *நாணம், மடம், அச்சம், பயிற்பு எனு நாற்குணமுடையாள்.*

**சதுர்த்தசபுவனம்** - *பதினாலுலகம்.*

**சதுர்த்தசம்** - *பதினான்கு.*

**சதுர்த்தசி** - *பதினான்காந்திதி.*

**சதுர்த்தந்தம்** - *இந்திரன்யானை.*

**சதுர்த்தபலம்** - *நாலாவதாகவந்த பேறு.*

**சதுர்த்தம்** - *நான்காவது.*

**சதுர்த்தர்** - *சமர்த்தர், சூத்திரர்.*

**சதுர்த்தல்** - *அப்புதல்.*

**சதுர்த்தாங்கிசம்** - *நாலிலொன்று.*

**சதுர்த்தி** - *கவிபாடக்கொடுத்த வோரடி, நான்காந்திதி.*

**சதுர்ப்பதம்** - *கரணம்பதினொன்றி னொன்று, அஃது நாய்க்கரணம்.*

**சதுர்ப்பாகம்** - *நாலாம்பங்கு.*

**சதுர்ப்பாதை** - *நாற்றெருக்கூடுமிடம்.*

**சதுர்ப்புயன்** - *சிவன், விட்டுணு.*

**சதுர்முகன்** - *சதுமுகன்.*

**சதுர்யுகம்** - *சதுரியுகம்.*

**சதுர்வேதம்** - *நாலுவேதம், அஃது இருக்கு, எசுர், அதர்வணம், சாமம்.*

**சதுலம்** - *வைத்தல்.*

**சதுனி** - *வெளவால்.*

**சதேகரு** - *இலவங்கப்பட்டை.*

**சதேசன்** - *நூறுகிராமத்துக்குத் தலைவன்.*

**சதேரன்** - *பகைவன்.*

**சதை** - *தசை, பாலைமரம், முன்னை மரம்.*

**சதைதல்** - *நசுங்குதல்.*

**சதைத்தல்** - *தசைபிடிகொள்ளுதல், நசுக்குதல்.*

**சதைபொருத்தி** - *ஓர்நீர்ப்பூடு.*

**சதையம்** - *சதயம்.*

**சதையொட்டி** - *ஓர்பூடு.*

**சதோகநாதர்** -*நவநாதசித்தரிலொருவர்.*

**சதோடம்** - *மரகதத்தின் குணம், அஃது கரடவிலக்கணம்.*

**சத்தகம்** - *ஓராயுதம்.*

**சத்தகன்னிகை** - *ஏழுமாதர்கள். அஃது அபிராமி, இந்திராணி கவு மாரி, காளி, நாராயணி, மயேசு வரி, வராகி.*

**சத்தகுலாசலம்** - *ஏழுமலை, அஃது இமயம், ஏமகூடம், கைலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தம்.*

**சத்தசமுத்திரம்** - *எழுகடல் அஃது உவர்நீர், கருப்பஞ்சாறு, தயிர், தேன், நன்னீர், நெய், பால்.*

**சத்தசாகரம்** - *சத்தசமுத்திரம்.*

**சத்தசாத்திரம்** - *சொல்லிலக்கணம்.*

**சத்தசிப்பி** - *கிளிஞ்சில்.*

**சத்தசியம்** - *கிரந்தச்சொல்லிலக்கண விரிவு.*

**சத்தசுரம்** - *ஏழ்சுரம்.*

**சத்தசுராக்கரம்** - *ஏழ்சுரத்திற்குரிய வக்கரம், அவை ச-ரி-க-ம-ப-த-நி.*

**சத்ததனமாத்திரை** - *ஒலிப்பிரகிருதி.*

**சத்ததாது** - *ஏழ்தாது, உடல்.*

**சத்ததாரணை** - *நவதாரணையி னொன்று.*

**சத்ததானம்** - *வெடியுப்பு.*

**சத்தபருணி** - *ஏழிலைம்பாலை.*

**சத்தபுரி** - *காஞ்சிமுதலேழுதலம்.*

**சத்தப்படுதல்** - *ஒலிப்படுதல்.*

**சத்தப்பிரதி** - *சத்தவுணர்ச்சி.*

**சத்தப்பிரமம்** - *எழுத்தொலியே தெய்வ மென்னுந் நூல், கலை ஞானமறு பத்தினான்கி னொன்று.*

**சத்தப்பிரமவாதம்** - *ஓர்சமயம்.*

**சத்தப்பிரமவாதி** - *ஓர்சமயி.*

**சத்தமி** - *ஏழாந்திதி.*

**சத்தம்** - *ஏழு, ஒலி, அஃது பஞ்ச விடயத் தொன்று, வார்த்தை.*

**சத்தயோனி** - *சொன்மூலம்.*

**சத்தவருக்கம்** - *ஏழ்வகைமருந்து, அஃது இலவங்கம், ஏலம், குரு வேர், சடாமாஞ்சி, திராட்சம், நெல்லிக் காய், வெட்டிவேர்.*

**சத்தவிதம்** - *தோத்திரஞ்செய்தல்.*

**சத்தவெடி** - *இலக்கங்குறியாது வைக்கும் வெடி.*

**சத்தாபாசம்** - *அசத்து.*

**சத்தார்** - *மூலையோட்டம்.*

**சத்தார்த்தம்** - *சொற்பயன்.*

**சத்தி** - *இந்துப்பு, கக்கல், கந்தகம், குடை, குமட்டிக்கொடி, கைவேல், சத்திசாரம், சத்தி யென்னேவல், சவுக்காரம், சிவதத்துவமைந்தி னொன்று, அஃது கிரியைநாடல், சூலம், தேரிடக்கியம், நீர்முள்ளி, பார்வதி, பெண், பெண்கலை, பெலம், பொன்னிமிளை, மறியல், வலிமை, விருதுக்கொடி, வெண் குடை, உபாயவழி, சத்திசாரணை, சுரோணிதம், வேம்பு.*

**சத்திகம்** -*குதிரை.*

**சத்திகர்** - *சத்துவகர்.*

**சத்திகீலம்** - *வீணைமுறுக்காணி.*

**சத்திகுன்மம்** - *ஓர்நோய்.*

**சத்திக்கொடி** - *குமட்டிக்கொடி.*

**சத்திசாரணை** - *ஓர்பூடு.*

**சத்திசாரம்** - *ஒருப்பு.*

**சத்திதத்துவம்** - *சிவதத்துவமைந்தி னொன்று, அஃது கிரியையாயி ருப்பது.*

**சத்தித்தல்** - *உவாந்தித்தல், ஒலித்தல்.*

**சத்தநாதம்** - *பொன்னிமிளை.*

**சத்திநிபாதம்** - *சத்தியைவிடுதல்.*

**சத்தியநாதர்** - *நவநாதசித்தரிலொருவர்.*

**சத்தியநிருவாணம்** - *தீட்சைகளிற்சி ரேட்டதீட்சை, பிறவியறுத்தல்.*

**சத்தியபாமை** - *கிருட்டிணன் மனைவி களிலொருத்தி.*

**சத்தியப்பிரமாணம்** - *உண்மைப் பிரமாணம்.*

**சத்தியம்** - *ஆணை, சபதம், மெய்.*

**சத்தியன்** - *பஞ்சகோசவுற்பத்திக்கு முன்னும் அவையழிந்த பின்னும் ஒரு படித்தாக விருக்குமான் மாவை யுடையவன்.*

**சத்தியயுகம்** - *கிரேதாயுகம்.*

**சத்தியலோகம்** - *பிரமலோகம், அஃது மேலேழுலகினொன்று.*

**சத்தியவசனம், சத்தியவாசகம்** - *மெய்மொழி.*

**சத்தியவாசகன்** - *பேச்சுத் தவறாதோன்.*

**சத்தியவாதி, சத்தியவான்** - *மெய்யன்.*

**சத்தியவிரதன்** - *உண்மையினிலை நிற்போன், ஓர்மனு, தருமன்.*

**சத்தியவேதம்** - *மெய்வேதம்.*

**சத்தியோசாதம்** - *சிவனைம்முகத் தொன்று.*

**சத்திரக்கத்தி** - *இரணவைத்தியத்துக்கு வழங்குங்கத்தி.*

**சத்திரசாலை** - *அன்னசத்திரம், ஆயுத சாலை.*

**சத்திரபதி** - *தனிக்குடைநிழற்றி அரசு புரிவோன்.*

**சத்திரப்பிரயோகம்** - *இரணவைத்தியம்.*

**சத்திராப்பை** - *இருப்புச்சட்டி.*

**சத்திரமிடுதல், சத்திரம் வைத்தல்** - *கத்திவைத்தல்.*

**சத்திரம்** - *அன்னசத்திரம், கத்தி, கை விடாப்படை, கைவேல், பாணம், மடம், யாகம், வெண்குடை.*

**சத்திரயாகம்** - *ஓர்யாகம்.*

**சத்திரவிதி, சத்திரவித்தை** - *இரண வைத்திய சாத்திரம்.*

**சத்திரவைத்தியம்** - *இரணவைத்தியம்.*

**சத்திரி** - *யானை.*

**சத்திரித்தல்** - *சத்திரம் வைத்தல்.*

**சத்திரியர்** - *இரண்டாம் வருணத் தோர், அவர் அரசர்.*

**சத்திலி** - *கருப்பூரம்.*

**சத்து** - *அவுபலபாஷாணம், உண்மை, நன்மை, பெரியோர், பெலன், பிரமம்.*

**சத்துச்சாரணை** - *ஓர்பூடு.*

**சத்துராதி, சத்துரு** - *பகைவன்.*

**சத்துருசகம்** - *பொறுமை.*

**சத்துருதை** - *பகை.*

**சத்துருத்தனம்** - *பகைக்குணம்.*

**சத்துருத்தானம்** - *சென்மத்துக்கைந் தாமிடம்.*

**சத்துருநாமத்தி** - *ஏகம்பபாஷாணம்.*

**சத்துவகர்** - *கடவுளருளாலற்புதஞ் செய்வோர்.*

**சத்துவக்குறிவிளக்கம்** - *பாவனா வுரூவகம்.*

**சத்துவக்கேடு** - *பலவீனம்.*

**சத்துவம்** - *சாத்துவிககுணம், சுபாவம், வலி.*

**சத்துவரம்** - *வேதிகை.*

**சத்துவாங்கல், சத்தெடுத்தல்** - *பாஷா ணங்களின் சத்தெடுத்தல்.*

**சத்தை** - *இருக்கை.*

**சத்துவாங்குதல்** - *தத்துவத்தைக் குறைத்தல்.*

**சத்துவாலம்** - *ஓமகுண்டம், கருப்பம், தருப்பைப்புல்.*

**சத்துவேது** - *காரணகாரியவேது.*

**சந்தகபுட்பம்** - *கராம்பு.*

**சந்தகம்** - *சந்தோஷம்.*

**சந்தகன்** - *சந்திரன்.*

**சந்தடி** - *இரைச்சல், சனக் கூட்டத் தாலாகுந்தொந்தறை.*

**சந்தணி** - *சந்தனம்.*

**சந்தணுகி** - *பாம்பு.*

**சந்ததம்** - *எப்பொழுதும், பலகாற் கேட்டல்.*

**சந்ததி** - *சந்தானம், மகன்.*

**சந்தப்பா** - *இருபத்தாறெழுத்து நான் கடியாய்வரும்பா.*

**சந்தப்பாணம்** - *ஓர்மருந்து.*

**சந்தம்** - *அழகு, கவியின் வண்ணம், கற்பரிபாஷாணம், குணம், சந்தனம், நிறம், வடிவு, ஆசை.*

**சந்தரி** - *துளசி.*

**சந்தவாக்கு** - *இளந்தகுணம், சுய குணம்.*

**சந்தவிருத்தம்** - *இன்னோசையான விருத்தம்.*

**சந்தற்பம்** - *தருணம்.*

**சந்தனகுடம்** - *ஓர்திருவிழா.*

**சந்தனக்காப்பு** - *சந்தனாபிஷேகம்.*

**சந்தனக்குழம்பு** - *கலவைச்சாந்து, இழைத்த சந்தனம்.*

**சந்தனக்கூட்டு** - *அகில் முதலிய பஞ்சவாசம்.*

**சந்தனக்கோரை** - *ஓர்புல்.*

**சந்தனத்திரி** - *சந்தனத்தாற் செய்யுந்திரி.*

**சந்தனமிழைத்தல்** - *சந்தனஞ் சேர்த்தல்.*

**சந்தனம்** - *ஓர்மரம், அஃது பஞ்ச விரையினொன்று.*

**சந்தனாசலம்** - *பொதியம்.*

**சந்தனுமைந்தன்** - *வீடுமன்.*

**சந்தனாத்திரி, சந்தாத்திரி** - *பொதிய மலை.*

**சந்தாதிகம்** - *சந்திவிக்கிரகம்.*

**சந்தாபம்** - *மன்மதன் கணையி னொன்று, வெப்பம்.*

**சந்தாபிதம்** - *அக்கினியில் மரித்தல்.*

**சந்தாயம்** - *சஞ்சாயம்.*

**சந்தானகரணி** - *முரிந்தவுறுப்பு களைச் சந்துசெய்மருந்து.*

**சந்தானகுரு** - *பாரம்பரியகுரு.*

**சந்தானக்கூர்மை** - *பிடாலவணம்.*

**சந்தானசருவோத்தம்** - *சிவாகம மிருபத்தெட்டினொன்று.*

**சந்தானதீபிகை** - *ஓர் நூல்.*

**சந்தானந்தழைத்தல்** - *வமிசம் வாழ்தல்.*

**சந்தானபாரம்பரை** - *தொன்று தொட்டு வருங்குலமுறை.*

**சந்தானம்** - *ஐந்தருவினொன்று, சம்பந்தம், வமிசம், கூடல்.*

**சந்தானவிரதம்** - *ஓர்விரதம்.*

**சந்தானவிருத்தி** - *வமிசவத்திப்பு.*

**சந்தானவுவமை** - *சிலேடையுவமை, அஃது ஓராச் சரியங்காட்டிப் பொருளையு முவமையையு மொப்புமை செய்தல், (உம்) மரை மலரும் முகமுந்தடத்துளுந் தலைவியிடத்து மிருப்ப தொன்றே யன்றி மற்றொரு வேற்றுமை யின்று.*

**சந்தானி** - *வெண்காரம்.*

**சந்தி** - *இசைப்பு, எழுத்துச் சொற் களின்புணர்ச்சி, காலை, காலை நியமம், சந்தியென்னேவல், சுரங்கம், பலவழிகூடு மிடம், பொருத்து, மாலைநேரம், பகுபதவுறுப்பி லொன்று, மூங்கில்.*

**சந்திகம்** - *ஓர்நோய்.*

**சந்திகாரகன்** - *கள்வன்.*

**சந்திகாவலன்** - *ஓர்தேவதை.*

**சந்தித்தல்** - *எதிர்த்தல், கூடல், பொருந்துதல்.*

**சந்திபண்ணுதல்** - *நியமநிட்டை முடித்தல்.*

**சந்திபந்தனம்** - *நரம்பு.*

**சந்திப்பாடு** - *சந்திப்பிற்றேவதை களால்வரும்பிணி.*

**சந்திப்பு** - *எதிர்தல், பலவழிகூடு மிடம், பொருத்து, பொருந்தல், வெளிப்பாடு.*

**சந்திமான்** - *இடையெழுவள்ளலி லொருவன்.*

**சந்திமிதித்தல்** - *பிறந்த ஆறாமாதத் திற்செய்யுமோர் சடங்கு.*

**சந்திமுடித்தல்** - *நியமநிட்டை முடித்தல்.*

**சந்தியாகாலம்** - *சாயங்காலம்.*

**சந்தியாவந்தனை** - *திரிகாலகருமம்.*

**சந்தியை** - *இணக்கம், எல்லை, காலை மாலையின்வெளிச்சம், தியானம், மல்லிகை.*

**சந்தியோகம்** - *மழைபெய்தல்.*

**சந்திரகம்** - *நகம், பொன்வண்டு, மயிற்றோகைக்கண், மிளகு.*

**சந்திரகலை** - *இடைகலை, ஓர்பறை, சந்திரன் கூறு.*

**சந்திரகாந்தம்** - *சந்திரன் சன்னிதியினீர்காலுங்கல், வெள்ளாம்பல்.*

**சந்திரகாந்தி** - *ஓர்பூச்செடி.*

**சந்திரகாந்தை** - *இரவு.*

**சந்திரகாவி** - *ஓர்சீலை, ஓர்நிறம்.*

**சந்திரகி** - *மயில்.*

**சந்திரகுத்தன்** - *யமன்கணக்கரிலொருவன்.*

**சந்திரகும்பம்** - *வருணகலசம்.*

**சந்திரகுலம்** - *சந்திரவமிசம்.*

**சந்திரசம்பவன்** - *புதன்.*

**சந்திரசாலிகை, சந்திரசாலை** - *நிலாமுற்றம்.*

**சந்திரசாலோக்கிய**ம் - *சந்திரலோகமடைதல்.*

**சந்திரசுவணம்** - *குதிரைப்பற்பாஷாணம்.*

**சந்திரசூடன்** - *சிவன்.*

**சந்திரசேகரன்** - *சிவன்.*

**சந்திரசேகரி** - *உமை, சிவன், விநாயகன்.*

**சந்திரசைலம்** - *ஓர்மலை.*

**சந்திரஞானம்** - *சிவாகமமிருபத்தெட்டினொன்று.*

**சந்திரதரிசனம்** - *பிறைதொழுதல்.*

**சந்திரதிலகம்** - *சந்தனம்.*

**சந்திரநாகம்** - *ஓர்சரக்கு.*

**சந்திரபாகை** - *ஓர்யாறு, சந்திரன் பங்கு.*

**சந்திரமணி** - *சந்திரகாந்தம்.*

**சந்திரமண்டலம்** - *நிலாமண்டலம், இலாடத்தானம், இஃது மும்மண்டலத்தொன்று.*

**சந்திரமந்தோச்சம்** - *சந்திரன் சூரியனுக்குத் தூரமாய்ப் போகத்தக்க முனை.*

**சந்திரமானம்** - *சந்திரன் சஞ்சரிக்குமளவு.*

**சந்திரமுத்து** - *ஓர்முத்து.*

**சந்திரமோலி, சந்திரமௌலி** - *சிவன்.*

**சந்திரம்** - *கருப்பூரம், நீர், பொன், மயிற்றோகைக்கண்.*

**சந்திரரேகை** - *சந்திரகலை.*

**சந்திரரோகம்** - *குஷ்டரோகம்.*

**சந்திரலவணம்** - *இந்துப்பு.*

**சந்திரலோகம்** - *சந்திரமண்டலம், வெள்ளி.*

**சந்திரவட்டம்** - *அருகன்முக்குடையினொன்று, தவளச்சத்திரம்.*

**சந்திரவமிசம்** - *சத்திரியரதுமுக்குலத்தொன்று.*

**சந்திரவளையம்** - *ஓர்விளையாட்டுக்கருவி.*

**சந்திரவாதம்** - *ஓர் சமயம்.*

**சந்திரவாலை** - *பேரேலம்.*

**சந்திரவிரதம்** - *ஓர்விரதம்.*

**சந்திரனாள்** - *திதி.*

**சந்திரன்** - *சந்திரபகவான். அஃது அட்டமூர்த்தத்தொன்று, சிவன்.*

**சந்திரன் சிப்பி** - *முத்துச்சிப்பி.*

**சந்திராதம்** - *தாளகம்.*

**சந்திராதபம்** - *சந்திரகிரணம்.*

**சந்திராபீடன்** - *சிவன்.*

**சந்திராந்தம்** - *பெயரெச்சம்.*

**சந்திரிகம்** - *செந்துருக்கம்.*

**சந்திரிகாபாயி** - *சகோரப்புள்.*

**சந்திரிகாம்புயம்** - *வெண்டாமரை.*

**சந்திரிகை** - *சந்திரகிரணம், பேரேலம்.*

**சந்திரேகம்** - *கார்போகரிசி.*

**சந்திரோதயம்** - *நிலவுதையம்.*

**சந்திரோபலம்** - *சந்திரகாந்தக்கல்.*

**சந்திரோபாலம்பனம்** - *சந்திரனால் வருங்காமநோய்.*

**சந்தில்** - *சனி.*

**சந்திவந்தனை** - *நியமநிட்டை.*

**சந்திவழு** - *எழுத்திலக்கணத்திற்கு வழுவாய்த் தொடுப்பது.*

**சந்திவிக்கிரகம்** - *சத்துருசினேகம்.*

**சந்திவிசட்சனன்** - *சமாதானஞ் செய் தூதன்.*

**சந்து** - *சந்தனமரம், தூது, தொடை, பலவழிகூடுமிடம், பொருத்து.*

**சந்துசெய்தல்** - *பொருத்தல்.*

**சந்துஷடியம்** - *சொல்லல்.*

**சந்துட்டம், சந்துஷம், சந்துட்டி, சந்துஷடி** - *மகிழ்ச்சி.*

**சந்துநயத்தான்** - *தூதுளை.*

**சந்துமந்து, சந்துமுந்து** - *குழப்பம், முடுக்கு.*

**சந்துயிர்** - *எலும்பு.*

**சந்துவாதம்** - *ஓர்நோய்.*

**சந்துவாய்** - *பொருத்து.*

**சந்துவிப்புருதி** - *ஓர்சிலந்தி.*

**சந்தேகநிவாரணம்** - *ஐயந்தீர்த்தல், அஃது தயாவிருத்திபதினான்கினு மொன்று.*

**சந்தேகம்** - *ஐயம்.*

**சந்தை** - *கடைவீதி.*

**சந்தோஷம், சந்தோடம்** - *மனமகிழ்ச்சி.*

**சந்தோபிசிதம், சந்தோபிசிதி** - *வேதாங்கமாறினொன்று.*

**சந்நிகருஷணம்** - *சமுகம்.*

**சந்நிபம்** - *உவமை.*

**சந்நியம்** - *போர்.*

**சபக்கம், சபட்சம்** - *ஒத்தபட்சம்.*

**சபடம்** - *விரித்தகை.*

**சபதமொட்டுதல்** - *சபதங்கூறல்.*

**சபதம்** - *ஆணை, சபிப்பு, சாபம், மெய், வாக்குநிண்ணயம்.*

**சபதரித்தல்** - *ஆதரித்தல்.*

**சபதி** - *விரைவு.*

**சபத்துவம்** - *சேபித்தல்.*

**சபம்** - *மூங்கில், வீழ்.*

**சபரணை** - *ஆதரவு, ஆயத்தம், பூரணம்.*

**சபரம்** - *கெண்டைமீன்.*

**சபா** - *பிரயாணம்.*

**சபலத்துவம்** - *அனுகூலம்.*

**சபலம்** - *இரதம், இலாபம், நடுக்கம் நிறைவேறல், மின்னல்.*

**சபலி** - *மாலைவெளிச்சம்.*

**சபலை** - *இலக்குமி, திப்பிலி, நா, மஸ்துள்ளது, மின்னல், வேசி.*

**சபனம்** - *சபதம்.*

**சபாகம்பம்** - *சபைக்கோழை.*

**சபாசனம்** - *சங்கம், சந்தோஷிப் பித்தல்.*

**சபாநாதன், சபாநாயகன், சபாபதி** - *சிவன்.*

**சபாமண்டபம்** - *சபைமண்டபம்.*

**சபாரஞ்சிதம்** - *சபையாருக் குளுண் டான கொள்கை.*

**சபிண்டர்** - *பிதிர்கள்.*

**சபிண்டி** - *பிதிர், பிதிர்பிண்ட மூன் றோடு பிரேதபிண்டத்தைக் கூட்டல்.*

**சபிண்டிகரணம்** - *பிதிர்பூசை.*

**சபித்தல்** - *சாபமிடல், திட்டுதல்.*

**சபிப்பு** - *சாபம், திட்டு.*

**சபீனம்** - *வசம்பு.*

**சபேடம்** - *விரித்தகரம்.*

**சபை** - *சங்கம், சபைமண்டபம், திருச் சபை, புலவர்.*

**சபைச்சேகரத்தார்** - *சபையார்.*

**சபைநாயகன்** - *சங்கத்தலைவன்.*

**சபையார்** - *கூட்டத்தார், சங்கத்தார்.*

**சபையுள்ளார்** - *கூத்தாடிகட்குதவி யாய்ப் படிப்போர்.*

**சபையேறுதல்** - *கூட்டத்திலறியப் படுதல்.*

**சபையேற்றுதல்** - *அரங்கேற்றுதல்.*

**சப்பங்கி** - *ஓர்தேயம், ஓர்மரம், வீர மற்றவன்.*

**சப்பட்டை** - *பதர்.*

**சப்பணங்கூட்டுதல், சப்பணங் கோலுதல்** - *அட்டணைக் காலிடுதல்.*

**சப்பணம்** - *அட்டணைக்கால்.*

**சப்பரமஞ்சம்** - *சப்பிரமஞ்சம்.*

**சப்பரம்** - *ஓர்வகைச்சித்திரவிருக்கை, யானைமேற்றவிசு.*

**சப்பல்** - *சப்பப்பட்டது, சப்புதல்.*

**சப்பளிதல்** - *சழிதல்.*

**சப்பளியல், சப்பளியன்** - *சப்பையாய்ச் சழிந்திருப்பது.*

**சப்பாணி** - *கைகொட்டல், நடக்கக் கூடாதவன்.*

**சப்பாணிகொட்டுதல்** - *கால்மடித் திருத்தல், கைகொட்டல்.*

**சப்பாணிமாடன்** - *ஓர்பிசாசம்.*

**சப்பாத்து** - *ஓர்தொடுதோல்.*

**சப்பி** - *சாவி.*

**சப்பியம்** - *சபைக்கேற்றவார்த்தை.*

**சப்பியன்** - *சபைக்கேற்றவன்.*

**சப்பிரமஞ்சம்** - *அலங்கரித்தகட்டில்.*

**சப்பிரமை** - *வாஞ்சை.*

**சப்பிரம்** - *சப்பரம்.*

**சப்புச்சப்பெனல்** - *ஒலிக்குறிப்பு, அசுவைக்குறிப்பு.*

**சப்புச்சவர்** - *கழிகடை, கழிநிலம், சவர்நிலம்.*

**சப்புதல்** - *குதப்புதல், பல்லானருக்கல்.*

**சப்பெனல்** - *ஒலிக்குறிப்பு, விரைவின் குறிப்பு.*

**சப்பை** - *தட்டை, ஆட்டின் முன் றொடை, விபசாரி.*

**சமகட்சி** - *சரிவந்தபக்கம்.*

**சமகம்** - *சமாதானம்.*

**சமகன்** - *சமாதானஞ்செய்வோன்.*

**சமகன்னி** - *பக்குவமானபெண்.*

**சமகாலம்** - *தற்சமயம்.*

**சமகை** - *பூரணம்.*

**சமஸ்காரம்** - *அறிந்ததை ஞாபகப் படுத்தல், நிலை பெறுத்தல், மந்திரத் தினாலே சுத்தம் பண்ணுகிற கிரியை.*

**சமக்கிரம்** - *எல்லாம்.*

**சமக்கிராமம்** - *ஒத்தகிராமம்.*

**சமக்கிருதம், சமஸ்கிருதம்** - *ஆரிய மொழி.*

**சமங்கை** - *வரட்சுண்டி, தொட்டால் வாடி.*

**சமசக்கிரம்** - *சமரேகை.*

**சமசந்தி** - *இணக்கம்.*

**சமசனம்** - *அடக்குதல்.*

**சமசி** - *பூரணம்.*

**சமஞ்சசம்** - *தகுதி, நன்முறை.*

**சமட்சம்** - *சமுகம், சுருக்கம்.*

**சமட்டி** - *எல்லாம்.*

**சமட்டியுரூபம்** - *சூக்குமமாயடங்கிய ரூபம்.*

**சமணகன்** - *சமணன்.*

**சமணம்** - *புறச்சமையமாறி னொன்று.*

**சமணர்** - *அமணர்.*

**சமண்** - *சமண்மதம்.*

**சமண்டலை** - *சவண்டலை.*

**சமண்மை** - *குறை.*

**சமதக்கினி** - *ஓரிருடி.*

**சமதரிசனம்** - *அத்தாட்சி.*

**சமதரிசி** - *சமாதிமான்.*

**சமதளம்** - *கூட்டம்.*

**சமதம்** - *பொறுமை.*

**சமதன்** - *சங்காத்தி.*

**சமதாளம்** - *நவதாளத்தொன்று.*

**சமதி** - *யுத்தம்.*

**சமதீதப்பிரயோசனம்** - *பொதுநயம்.*

**சமதீதம்** - *ஐக்கம்.*

**சமதை** - *ஒப்பு, நான்கடியுமெழுத்துத் தொடுத்துவரும்பா.*

**சமத்தம், சமஸ்தம்** - *எல்லாம், சரி.*

**சமத்தானம், சமஸ்தானம்** - *அரசவை, நகரம், பிரதானவிடம், ஆதாரம்.*

**சமத்தவம்** - *நெடுநாட்கூடியிருத்தல்.*

**சமத்தாவம்** - *யாகதோத்திரம்.*

**சமத்து** - *சமர், வீரம், சாமாத்தியம்.*

**சமநிலை** - *குணவலங்காரத்தொன்று. அஃது மூவினவெழுத்தும் விரவத் தொடுப்பது, நடுநிலை.*

**சமநிலைச்செய்யுள்** - *ஓர்பிரபந்தம். அஃது மூவினவெழுத்தும் வரத் தொடுப்பது.*

**சமநிலைவெண்பா** - *சவலை வெண்பா.*

**சமந்தம்** - *சமஸ்தம், பலவிதம்.*

**சமபந்தி** - *ஒத்தவர்களிருக்கும் போசன பந்தி, சரியிடம்.*

**சமபலம்** - *சரியொத்தபலன்.*

**சமபாகம்** - *சரிபங்கு.*

**சமபூமி** - *ஒப்பரவானநிலம்.*

**சமபோகம்** - *இருவருக்குமொத்த போகம்.*

**சமப்பால்** -*நெய்தனிலம், முல்லைநிலம்.*

**சமமுகம்** - *தலையசையாதிருத்தல்.*

**சமம்** - *உவமை, எல்லாம், ஒப்பம், சரி, தாளப்பிரமாணத்தொன்று, அஃது குரலுந்தாளமுமொத்தது, நடு, நியாயம், போர், மனோலயம், மோக்கம், இந்திரியநிவிர்த்தி, பொறுமை.*

**சமயகருமம்** - *சமயசடங்கு.*

**சமயக்கட்டு** - *சமயமுறை.*

**சமயசாத்திரம்** - *சமய நூல்.*

**சமயதீட்சை** - *தீட்சைவகையி னொன்று. அஃது சமயானு சரிப்பின் முதலுபதேசம்.*

**சமயத்தறுவாய்** - *உற்றசமயம்.*

**சமயநிலை** - *சமயஒழுங்கு.*

**சமயநூல்** - *சமயசாத்திரம்.*

**சமயபேதம்** - *காலவிகற்பம், மதவி கற்பம்.*

**சமயபேதி** - *புறச்சமயத்தான்.*

**சமயமானம்** - *சமயப்பற்று.*

**சமயம்** - *அடையாளம், உடம்படிக் கை, எல்லை, காலம், சமயமதம், நியாயத்தீர்ப்பு.*

**சமயம் பார்த்தல்** - *தருணம்பார்த்தல்.*

**சமயவாதி** - *மதானுசாரி.*

**சமயாசமயம்** - *சமயத்தறுவாய்.*

**சமயாசாரம்** - *சமயவொழுக்கம்.*

**சமயி** - *சமயவாதி.*

**சமயுத்தம்** - *ஒத்தபோர்.*

**சமயை** - *ஏற்றகாலம், சமீபம், நடு.*

**சமரசம்** - *ஒன்றிப்பு, சமாதானம், வித்தியாசமின்மை, தொகை நிலை.*

**சமரசர்** - *ஒன்றினர்.*

**சமரம்** - *போர்.*

**சமராத்திரம்** - *கிரகவீதிவரியும் பூமி யின் நடுரேகையு மொன்றிக்கு மிடம்.*

**சமரி** - *துற்கை, பாம்பு.*

**சமரேகை** - *மையவரி.*

**சமர்** - *போர், முட்பன்றி.*

**சமர்த்தகம்** - *உபகாரம்.*

**சமர்த்தம்** - *சரிநிலம்.*

**சமர்த்தனம்** - *சமப்படுத்தல், தியானம்.*

**சமர்த்தன்** - *சாமார்த்தியன், வல்லபன்.*

**சமர்த்தி** - *சமசி, சமர்த்துள்ளவள், சமுத்தி.*

**சமர்த்தித்தல்** - *பூரணப்படுத்தல்.*

**சமர்த்து** - *சமத்து, பலம், வீரம்.*

**சமர்ப்பகம், சமர்ப்பணை** - *உயர்ந் தோர்க்குக் கொடுத்தல்.*

**சமர்ப்பிதம்** - *ஒப்புக்கொடுத்தல், பூரணம்.*

**சமர்ப்பித்தல்** - *உயர்ந்தோர்க்குக் கொடுத்தல், ஒப்புக்கொடுத்தல்.*

**சமலம், சமலை** - *அழுக்கு.*

**சமலாம்பம்** - *பூசுதல்.*

**சமவற்சி** - *நமன்.*

**சமவாசி** - *நடுத்தரம், பூரணம்.*

**சமவாதம்** - *சமானதருக்கம்.*

**சமவாயம்** - *கூட்டம், தற்கிழமை.*

**சமவணி, சமவுவமை** - *ஓரலங்காரம், (உம்) தந்தையொக்கு மகன்.*

**சமழ்த்தல்** - *தாழ்த்தல், நாணுதல், வருத்தல்.*

**சமழ்ப்பு** - *நாணம், வருத்தம்.*

**சமற்கரணம், சமற்காரம்** - *அதிசயம், ஆடம்பரம், திருவிழா, நற்காட்சி.*

**சமற்கிருதம்** - *அதிசயப்படத்தக்கது.*

**சமற்கிருதி** - *நற்காட்சி.*

**சமற்சனம்** - *வணக்கம்.*

**சமற்பகம், சமற்பனை, சமற்பித்தல்** - *கொடுத்தல், செலுத்தல்.*

**சமனம்** - *புழுக்கொல்லி, போசனம், வசம்பு.*

**சமனாதம்** - *உவர்மண்.*

**சமனிக்கை** - *சவனிக்கை.*

**சமனிசை** - *ஓரிசை.*

**சமனியகரணி** - *ஓர்மருந்து.*

**சமனிலை** - *மூவினவெழுத்தும் விரவத்தொடுப்பது.*

**சமன்** - *ஒப்பு, காலன், சமம், நடு, நமன்.*

**சமன்** - *சங்கலிதம், ஓர் கணிதம். அஃது இரட்டைநிரை யிலக்கங் களைக் கூட்டல்.*

**சமன்சமன் சங்கலிதம்** - *ஓர்கணிதம், அஃது இரட்டைத்தானத்திரட்டை நிரைகூட்டல்.*

**சமன்வியன்சங்கலிதம்** - *ஓர்கணிதம், அஃது இரட்டைத்தானத்தொற்றை நிரை கூட்டல்.*

**சமாகதம்** - *ஒன்றிப்பு, சமீபம்.*

**சமாகாதம்** - *போர்.*

**சமாகாரம்** - *எழுத்துப்புணர்ச்சி, கூட்டம், சொற்புணர்ச்சி.*

**சமாகிதம்** - *ஓரலங்காரம்.*

**சமாசம்** - *இலிங்கபாஷாணம், தொகைப்பட்டுநிற்பது.*

**சமாசாரம், சமாச்சாரம்** - *சுகசெய்தி, செய்தி, நன்னடை.*

**சமாதானகரணி** - *இரணந்தீர்க்கும் மருந்து.*

**சமாதானம்** - *இணக்கம், முற்றத்துறந் திருத்தல், உபாதிநீக்கியுள்ளொளி கருதல்.*

**சமாதானவுருவகம்** - *யாதொன்று தீங்கு செயினுமத்தீங்கதிலுள்ள தன் றெனக்கூறுமுருவகம்.*

**சமாதானி** - *சமாதானமுடையோன்.*

**சமாதி** - *அட்டயோகத்தொன்று, அஃது இந்திரியமுதலியதத்துவ சேட்டை கட்கேதுவாய யாக்கை யுணின்றவற்றோடு கூடினு மவற்றிற் பற்றின்றியிருக்குமான் மாவாகிய தன்னைத்தான் காண்டல், அமைதி, ஓரலங்காரம், அஃது முக்கியப் பொருள துவினையை யொப் புடைப் பொருண்மேலேற்றிக் கூறுவது, சமப்படுத்தல், சாவு, பிரேதக்குழி.*

**சமாதிக்குழி** - *பிரேதக்குழி.*

**சமாதிட்டற்கசம்பத்தி** - *உபாதி, சமம், சமாதானம், சிரத்தை, தமம், தீட்சை.*

**சமாதிபண்ணுதல்** - *சமாதிருத்தல், யோகாப்பியாசஞ்செய்தல்.*

**சமாதிமான்** - *தியானநிட்டை செய் வோன்.*

**சமாதியில் வைத்தல்** - *பிரேத மடக்கல்.*

**சமாதிவைத்தல்** - *யோகிகளிருக்கு முறையாய்ப் பிரேதத்தை வைத்தல்.*

**சமாபிகாரம்** - *கூறியதுகூறல்.*

**சமாயிதம்** - *சம்மதித்தல், முயல்வுறுந் தொழிற் பயன்பிறிதொன்றான் முடிந்ததாகக் கூறுமலங்காரம்.*

**சமாயுதம்** - *ஓரலங்காரம்.*

**சமாயோகம்** - *ஏது, ஐக்கம், கூட்டம்.*

**சமாரம், சமுச்சியம்** - *சிதறியதைக் கூட்டல்.*

**சமாராதனை** - *திருத்தி, பிராமண போசனம்.*

**சமார்ச்சனம்** - *தூர்த்தல்.*

**சமாலம்** - *பீலிக்குஞ்சம்.*

**சமாலி** - *பூஞ்செண்டு.*

**சமாலித்தல்** - *சமாளித்தல்.*

**சமாலுகம்** - *குறிஞ்சா.*

**சமாலேபனம்** - *மெழுகல்.*

**சமாவத்தனை, சமாவருத்தனம்** - *ஓர்சடங்கு.*

**சமாவிருத்தன்** - *பிரமசரிய முடித்தவன்.*

**சமாளம்** - *சந்தோஷம்.*

**சமாளித்தல்** - *சந்தோஷித்தல், சரிக் கட்டிநடத்தல்.*

**சமாளிப்பு** - *சந்தோஷம், சரிக்கட்டி நடத்துதல்.*

**சமானகட்சி** - *வாதிகளினொத்தபுறம்.*

**சமானகரணி** - *இரணத்தழும்பு தீர்க்கும் மருந்து.*

**சமானஸ்தர்** - *சரிவந்தவர்கள்.*

**சமானம்** - *உவமை, சன்மார்க்கம்.*

**சமானரகிதம்** - *ஒப்பின்மை.*

**சமானன்** - *தசவாயுவினொன்று, அஃது கந்தரக்குழியிற் சந்திடை நிற்கும் வாயு.*

**சமானி** - *சரியொத்தவன்.*

**சமானித்தல்** - *ஒப்பாதல், ஒப்பிடுதல்.*

**சமானியம்** - *பொது.*

**சமி** - *அருகன், சமியென்னேவல், தணக்கு, வன்னிமரம்.*

**சமிக்கை** - *சயிக்கை.*

**சமிட்சேபம்** - *சுருக்கம்.*

**சமிட்சேபித்தல்** - *சுருக்குதல்.*

**சமிதம்** - *அமைதி, தீ, போர்.*

**சமிதர்** - *பூதங்கள்.*

**சமிதன்** - *அக்கினிதேவன்.*

**சமிதி** - *கூட்டம், போர்.*

**சமிதை** - *ஓமவிறகு, விறகு.*

**சமித்தம்** - *ஓமமண்டபம், தயை.*

**சமித்தல்** - *சகித்தல், சீரணித்தல்.*

**சமித்து** - *ஓமப்பண்டம், ஓமவிறகு, கஞ்சா.*

**சமிந்தனம்** - *விறகு.*

**சமிபாடு** - *சீரணிக்குந்நேரம்.*

**சமிப்பாகம்** - *கொன்றைமரம்.*

**சமிப்பு** - *சீரணிப்பு.*

**சமியம்** - *விசாரித்தல்.*

**சமியன்** - *அருகன்.*

**சமியாமை** - *அசீரணம்.*

**சமிரட்சணை** - *தற்காத்தல்.*

**சமிர்த்து** - *ஓமவிறகு.*

**சமிலாகி** - *திப்பிலி.*

**சமீகம்** - *அம்பு, போர்.*

**சமீகரணம்** - *சமதை செய்தல்.*

**சமீகிரணம்** - *சமதை.*

**சமீட்சணம்** - *ஆராய்வு.*

**சமீபம்** - *அருகு, கிட்டுமானம்.*

**சமீபித்தல்** - *கிட்டுதல்.*

**சமீரணம்** - *எறிதல், வீசல்.*

**சமீரணன்** - *காற்று.*

**சமீரம்** - *காற்று, போர்.*

**சமீரன்** - *காற்று.*

**சமீனம்** - *வருடாந்தம்.*

**சமீனிகை** - *ஆட்டைக்கற்றா.*

**சமீன்** - *நிலம்.*

**சமு** - *சமுகம், படை, படையிலோர் தொகை.*

**சமுகசேவை** - *சமுகஞ்சேவித்தல்.*

**சமுகம்** - *கூட்டம், முன்னிலை.*

**சமுகவிலாசம்** - *சமுகத்திற்கூறுமோர் வகைப்புகழ்ச்சி.*

**சமுக்கா** - *காந்தப்பெட்டி.*

**சமுக்காரம், சமுஸ்காரம்** - *ஓர் சடங்கு நிறைவேற்றம்.*

**சமுக்காளக்கோட்டுப்புலி** - *ஓர்புலி.*

**சமுக்காளம்** - *கம்பளம்.*

**சமுசயம்** - *சந்தேகம்.*

**சமுசாரக்கட்டு** - *சமுசாரமுறை.*

**சமுசாரக்காரன்** - *இல்லறம் பொறுத்தவன்.*

**சமுசாரசன்னியாசம்** - *இல்லறத்தை விடுதல்.*

**சமுசாரபந்தம்** - *குடித்தனமுறை, அபிமானம்.*

**சமுசாரப்பொறுப்பு** - *இல்லறச்சுமை.*

**சமுசாரமார்க்கம்** - *இல்லறநெறி.*

**சமுசாரம்** - *குடும்பம், மனைவி.*

**சமுசாரவிருத்தி** - *சமுசாரவத்திப்பு.*

**சமுசாரி** - *இல்லாச்சிரமத்துக்குட்பட்ட ஆள், கற்புடையாள்.*

**சமுசு** - *கலகக்கூட்டம்.*

**சமுச்சயம்** - *கூட்டம், சந்தேகம், சிறியதைக் கூட்டல்.*

**சமுச்சயவுவமை** - *இதனானேயன்றி மற்றிதனானு மொக்கு மெனக் கூறுவது.*

**சமுச்சரணம்** - *பிள்ளைபிறப்பு.*

**சமுச்சேபனம்** - *விரிவைக்குறுக்கல்.*

**சமுதாடு** - *ஓராயுதம்.*

**சமுதாயக்கிராமம்** - *பொதுக்கிராமம்.*

**சமுதாயம்** - *கூட்டம், பின்னணி, பொது, போர்.*

**சமுதீதம்** - *பொது.*

**சமுத்தானம்** - *செய்துமுற்றல், வளர்ச்சி.*

**சமுத்தி** - *பாடும்படி எதிரி கொடுக்குமுள்ளூறை வசனம்.*

**சமுத்திகட்டுதல்** - *பாட்டுக்கடி தொடுத்தல்.*

**சமுத்திரகோஷம்** - *கடற்குமிறல்.*

**சமுத்திரகோஷடம்** - *கடனுரை.*

**சமுத்திரசுண்டி** - *ஏரல்.*

**சமுத்திரச்சோகி** - *ஓர்பூடு.*

**சமுத்திரதோயம்** - *கடனீர், முடக்கொற்றான்.*

**சமுத்திரபகவான்** - *வருணன்.*

**சமுத்திரப்பாலை** - *ஓர்பூடு.*

**சமுத்திரம்** - *ஒரெண், கடல், படையினோர்தொகை, அஃது பிரளயம் மூன்றுகொண்டது, பத்துலட்சங் கோடாகோடி.*

**சமுத்திரயானம்** - *கடல்யாத்திரை.*

**சமுத்திரராசன்** - *வருணன்.*

**சமுத்திரவருணச்சிலை** - *ஓர்கல்.*

**சமுத்திரவன்னச்சீலை** - *ஓர்பட்டு.*

**சமுத்திரவேலை** - *கடற்றிரை.*

**சமுத்திராதேவி** - *வருணன்றேவி.*

**சமுத்திராந்தம்** - *சாதிக்காய்.*

**சமுத்திராப்பச்சை** - *ஓர்செடி.*

**சமுத்திராப்பழம்** - *குந்தாழங்காய்.*

**சமுத்திராம்பரை** - *பூமி.*

**சமுப்பவம்** - *தைவேளை.*

**சமுருதம்** - *அதிகம்.*

**சமுற்பத்தி, சமுற்பன்னம்** - *பிறப்பு.*

**சமுனையம்** - *ஈரம்.*

**சமூ** - *சமுகம்.*

**சமூகம்** - *கூட்டம், சபை, முன்னிலை.*

**சமூகனி** - *துடைப்பம்.*

**சமூசரன்** - *படைவீரன்.*

**சமூபதி** - *சேனாபதி.*

**சமூர்ச்சனம்** - *பரம்புதல்.*

**சமூலம்** - *வேர்முதலிலையீறாக.*

**சமேதம்** - *கூடியிருத்தல்.*

**சமேதர்** - *கூடியொன்றாயிருப்பவர்.*

**சமை** - *அமவாசி, சமை யென்னேவல், சேர்த்தல், படை, பொறாமை, வருடம்.*

**சமைகடை** - *ஈறு.*

**சமைதலை, சமைதலைப்பு** - *புடைவையில் நெய்து முடிந்த தலைப்பு.*

**சமைதல்** - *இருதுவாதல், உண்டு பண்ணப்படல், ஒழிதல், பாகமாதல்.*

**சமைதார்** - *பன்னிரண்டு படைச்சனத்துக்குத் தலைவன்.*

**சமைத்தல்** - *உணவு சமைத்தல், உண்டாக்கல், ஒழிவித்தல்.*

**சமைந்தவள்** - *பக்குவமானவள்.*

**சமையம்** - *சமயம்.*

**சமையல்** - *சமைக்கப்படுதல்.*

**சமையல்வீடு** - *அடுக்களை.*

**சமையற்காரன்** - *மடைத்தொழிலாளன்.*

**சமோதீதம்** - *பொதுவானது.*

**சம்** - *அழகு, அன்பு, கலக்கம், சீக்கிரம், சுகம், சுத்தம், நன்மை, பிறப்பு, வெற்றி, கூட, பூரணம்..*

**சம்பகம்** - *சண்பகம்.*

**சம்பங்கி** - *சாலங்கபாஷாணம், வாசனைத்திரவியம்.*

**சம்பங்கியெண்ணெய்** - *வாசனைத் தைலம்.*

**சம்பங்கூடு** - *சம்பம்புல்லாற் செய்த கூடு.*

**சம்பங்கோரை** - *ஓர்புல்.*

**சம்பங்கோழி** - *ஓர்கோழி.*

**சம்படம்** - *சீலை, சோம்பல்.*

**சம்பதி** - *பாக்கியம்.*

**சம்பத்து** - *செல்வம், தளபாடம்.*

**சம்பத்துவேட்டம்** - *பஞ்சதாளத் தொன்று.*

**சம்பந்தக்குடியார்** - *சம்பந்தங்கலந்தவர்கள்.*

**சம்பந்தங்கலத்தல்** - *விவாகவழியாற் கலத்தல்.*

**சம்பந்தப்பொருள்** - *ஆறாம் வேற்றுமைப் பொருள்.*

**சம்பந்தமூர்த்தி** - *சண்பையர்கோன்.*

**சம்பந்தம்** - *இணக்கம், விவாகம்.*

**சம்பந்தம் பண்ணுதல்** - *விவாகஞ் செய்தல்.*

**சம்பந்தவெதிரேகம்** - *இணக்கம், எதிர்.*

**சம்பந்தி** - *ஒற்றுமையானவன், மாப்பிள்ளை பெண் பிள்ளையின் பிதா.*

**சம்பந்தித்தல்** - *கலத்தல், சம்பந்தம் பண்ணல்.*

**சம்பம்** - *அங்கதேயம், இடி, இரண்டா முழவு தண்ணீர், மரவயிரம், மேட்டிமை, வச்சிராயுதம், வயிரமணி.*

**சம்பம்புல்** - *ஓர்புல்.*

**சம்பரசூதனன்** - *காமன்.*

**சம்பரம்** - *எண்காற்புள், சீலை, செல்வம், நீர், வரம்பு.*

**சம்பரன்** - *ஓரசுரன்.*

**சம்பராரி** - *இந்திரன், காமன்.*

**சம்பலவனம்** - *இருந்தது.*

**சம்பவப்பிரமாணம்** - *ஓரளவை, அஃது ஒருகல் இரும்பையீர்க்குமென்றுளி அது காந்தமெனக் கோடல்.*

**சம்பவம்** - *அழிவு, இணக்கம், ஒன்றின் காரணம், ஓரளவை, கலப்பு, சம்பவிப்பு, பிறப்பு.*

**சம்பவித்தல்** - *நடந்தேறுதல்.*

**சம்பளம்** - *கரை, களஞ்சியம், கூலி, பொறாமை, வழிச்சேறற்கு வேண்டும் பொருள், வழியுணவு.*

**சம்பளி** - *அடைப்பை.*

**சம்பற்கார்த்தம்** - இராகுதேகஞ்சசிதேகமிவற்றின்றொகை.

**சம்பன்** - ஓரிராக்கதன்.

**சம்பன்னகரணி** - இரணந்தீர்க்கும் மருந்து.

**சம்பன்னகிரகஸ்தன்** - பேர் பெற்றவன்.

**சம்பன்னம்** - குறைவில்லாமை.

**சம்பன்னன்** - நிறைவுள்ளவன்.

**சம்பா** - ஓர்வகைநெல், ஓர்விளையாட்டு, நால்விரலளவை.

**சம்பாகம்** - நாடு.

**சம்பாஷணம், சம்பாஷணை, சம்பாடணை, சம்பாஷித்தல்** - கூடிப்பேசல்.

**சம்பாதனை** - தேட்டம்.

**சம்பாதி** - அருணன்மகன், சம்பாதியென்னேவல்.

**சம்பாதித்தல்** - தேடல்.

**சம்பாதிபன்** - கன்னன்.

**சம்பாத்தியம்** - தேட்டம், ஒன்றை முடித்தல்.

**சம்பாரமிடுதல்** - சம்பாரம்போடல்.

**சம்பாரம்** - சாமான்.

**சம்பாரி** - அக்கினி, இந்திரன்.

**சம்பாலம்** - ஆட்டுக்கடா.

**சம்பாவனம், சம்பாவனை** - சங்கை, மதிப்பு.

**சம்பாளம்** - சேறு.

**சம்பானோட்டி** - படகோட்டுவோன்.

**சம்பான்** - படகு.

**சம்பான்காரர்** - படகுகாரர்.

**சம்பிரகாசம்** - மகிழ்ச்சிநகை.

**சம்பிரகாரம்** - யுத்தம்.

**சம்பிரசாதம்** - நம்பிக்கை.

**சம்பிரதம்** - சித்து.

**சம்பிரதாயம்** - உபாயம், குலாசாரம், பாரம்பரியவாக்குவிச்சித்திரம்.

**சம்பிரதாயவிளக்கம்** - ஓர் நூல்.

**சம்பிரதாரணை** - தீர்ப்பு, நான்கனுருபு.

**சம்பிரதானம்** - வெகுமதி.

**சம்பிரதி** - ஓர்பிரதானவெழுத்துக் கணக்கன்.

**சம்பிரமம்** - கலியாணம், சந்தோஷம், செல்விக்கை, பறங்கிப் பாஷாணம், தீவிரம்.

**சம்பிரம்** - எலுமிச்சை, செல்விக்கை, உடலசைத்தல்.

**சம்பிரேட்சியம்** - ஆராய்ந்தறிந்தது..

**சம்பீரம்** - எலுமிச்சை.

**சம்பு** - அருகன், ஆதித்தன், எலுமிச்சை, ஓர்தீவு, ஓர்நதி, ஓர்புல், கடவுள், சிவன், சீர்பந்த பாஷாணம், நரி, நாவல்மரம், பிதா, பிரமன், புத்தன், விட்டுணு, தட்டை.

**சம்புகம்** - சம்பூகம், வருணன்.

**சம்புகேச்சுவாம்** - திருவானைக்கா.

**சம்புச்சயனம்** - ஆலமரம், பாம்பு.

**சம்புத்தி** - அழைத்தல், நற்புத்தி.

**சம்புத்தீவு** - சத்ததீவுகளினொன்று. அஃது நாவலந்தீவு.

**சம்புநாவல்** - ஓர்நாவல்.

**சம்பூகம்** - சங்கு, நத்தை, நரி, நாவல்.

**சம்பூதம், சம்பூதி** - பிறப்பு.

**சம்பூயகாரி** - உடன்வேலையாள்.

**சம்பூரணம்** - நிறைவு.

**சம்பூலமாலிகை** - புதுமணப் பெண்ணுக்கும் மணவாளனுக்கும் பெண்ணின் தோழி களெழுதும் வினோதவெழுத்து.

**சம்பேசன்** - கன்னன்.

**சம்பேதம்** - யாற்றுப்பொருத்து.

**சம்பை** - இளந்தது, சத்ததாளத் தொன்று, செழிப்பு, மின்னல், ஓரிராகம், சம்பு.

**சம்போகம்** - அனுபவம், புணர்ச்சி.

**சம்போதனம்** - எட்டாம் வேற்றுமை.

**சம்போதனை** - *விளிவேற்றுமை.*

**சம்மட்டி** - *ஓர்பூடு, குதிரையோட்டுங் கருவியினொன்று, கூடம்.*

**சம்மணம்** - *அட்டணைக்கால்.*

**சம்மதம்** - *இணக்கம், உத்தரவு, கோட்பாடு.*

**சம்மதி** - *சம்மதம், சம்மதியென் னேவல்.*

**சம்மதித்தல்** - *இணங்குதல்.*

**சம்மந்தம் –** *சம்பந்தம்.*

**சம்மனசு** - *தேவதூதுன், நன்மனசு.*

**சம்மாணம், சம்மாணி** - *அட்டணைக் கால.*

**சம்மாதுரன்** - *கற்புடையாள் புத்திரன்.*

**சம்மார்ச்சனம்** - *மூடல்.*

**சம்மானம்** - *உபசரிப்பு, சருவமானியம்.*

**சம்மானனம்** - *வணக்கம்.*

**சம்மியத்துவம்** - *சம்பூரணம்.*

**சம்மியம்** - *கூத்தினோர்விகற்பம்.*

**சம்மோகம்** - *பேராசை.*

**சம்மோதிதம்** - *தகுதியானகூலி.*

**சம்யாமம்** - *விசாரித்தல்.*

**சம்யோகம்** - *புணர்ச்சி.*

**சம்ரட்சணை** - *சமிரட்சணை.*

**சம்வர்த்தம்** - *சத்தமேகத்தொன்று, அஃது மணிபொழிவது, தரும நூல் பதினெட்டினொன்று.*

**சம்வற்சரம்** - *வருடம்.*

**சம்வாகம்** - *மலைமேலேற்றியவூர்.*

**சம்வன்னம்** - *வசிகரித்தல்.*

**சம்வாயிகாரணம்** - *முதற்காரணம்.*

**சம்வேதம்** - *அனுபவித்தல்.*

**சய** - *ஓராண்டு, போற்றி.*

**சயகண்டை** - *பரந்தவட்டிகை.*

**சயகம்** - *பூவரும்பு.*

**சயசய** - *போற்றிபோற்றி.*

**சயதாளம்** - *நவதாளத்தொன்று.*

**சயத்தம்பம்** - *வெற்றித்தம்பம்.*

**சயத்திரதன்** - *ஓரரசன்.*

**சயந்தனம்** - *தேர்.*

**சயந்தன்** - *இந்திரகுமரன், சந்திரன், சிவன்.*

**சயந்தி** - *இந்திரன்மகள், துகிற் கொடி, துற்கை.*

**சயபத்திரம்** - *வெற்றிச்சீட்டு.*

**சயபாலன்** - *அரசன், திருமால், பிரமன்.*

**சயபித்தம்** - *ஓர்நோய்.*

**சயமகள்** - *துற்கை, மிதுனவிராசி, விந்தை.*

**சயமங்களம்** - *இராசயானை.*

**சயமடந்தை** - *துற்கை, விந்தை.*

**சயமரம்** - *சுவயம்வரம்.*

**சயம்** - *ஆம்பல், ஓர்வியாதி, கூட்டம், கெடுதல், கை, சருக்கரை, சாரம், சூரியன், மாலை, வெற்றி, நட்டம், படுக்கை.*

**சயம்பு** - *அருகன், சிவன், சுயம்பு.*

**சயம்புனைதல்** - *வெற்றிபுனைதல்.*

**சயரோகம்** - *ஓர் வியாதி.*

**சயனகிரகம்** - *பள்ளியறை.*

**சயனம்** - *நித்திரை, படுக்கை, புணர்ச்சி.*

**சயனார்த்தம்** - *படுக்கை.*

**சயனி** - *சயனிப்போர், சயனியென் னேவல்.*

**சயனித்தல்** - *நித்திரைசெய்தல், புணர்தல்.*

**சயனிப்பு** - *நித்திரை, புணர்ச்சி.*

**சயன்** - *சயந்தன்.*

**சயாபாகம்** - *வெற்றி.*

**சயாலு** - *நித்திரைச்சோம்பன்.*

**சயிக்கச்சீலை** - *மெல்லியபுடைவை.*

**சயிக்கம்** - *மென்மை.*

**சயிக்கா** - *அரசு.*

**சயிக்கினை, சயிக்கை** - *சாடை.*

**சயித்தகம்** - *சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.*

**சயித்தல்** - *சகித்தல், வெல்லுதல்.*

**சயித்தியம்** - *குளிர்.*

**சயித்திரம்** - *சித்திரைமாதம்.*

**சயித்திரியம்** - *அனுபவவிசித்திரம், நானாவிந்தை.*

**சயிந்தலவணம், சயிந்தனம்** - *இந்துப்பு.*

**சயிந்தவம்** - *சைந்தவம்.*

**சயிரேகம்** - *மேகவண்ணப் பூவுளமரு தோன்றிமரம்.*

**சயிலம்** - *சைலம்.*

**சயை** - *சந்திரன் மூன்றாம், எட்டாம், பதின்மூன்றாம் பக்கங்கள், பார்வதி.*

**சயோத்தியம்** - *சுகம்.*

**சய்யோகம்** - *சையோகம்.*

**சரகம்** - *தேனீ, வண்டு.*

**சரகன்** - *தூதாள்.*

**சரகாண்டபாஷாணம்** - *பாஷாணம் முப்பத்திரண்டினொன்று.*

**சரகாண்டம்** - *அம்புக்கூடு, ஓர்பாஷாணம்.*

**சரகூடம்** - *அத்திரத்தாற்றொடுக்கும் பின்னற்செறிவு.*

**சரக்கு** - *கறிச்சரக்கு, பொருள், மருந்துச்சரக்கு, வியாபாரப் பொருள்.*

**சரக்குச்சுண்ணம்** - *சவ்வீரம்.*

**சரக்கொன்றை** - *ஓர்கொன்றை.*

**சரங்கட்டல்** - *தனித்தனிப்பூவான் மாலைகட்டல்.*

**சரங்கம்** - *சங்கபாஷாணம்.*

**சரசம்** - *இனியகுணம், பரிகாசம், வெண்ணெய்.*

**சரசரப்பு** - *சரசரத்தல்.*

**சரசரெனல்** - *ஈரடுக்கொலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.*

**சரசவித்தை** - *இன்பசேட்டைப் பயிற்சி, பரிகாசம்.*

**சரசன்மசன்** - *குமரன்.*

**சரசாத்திரம்** - *சுவாசக்குறியறியுமோர் சாத்திரம்.*

**சரசி** - *இனியகுணி.*

**சரசித்தல்** - *சரசம்பண்ணுதல்.*

**சரசு** - *குளம்.*

**சரசுவதி** - *பிரமன்றேவி, மனோசிலை.*

**சரசுவதிநெய்** - *ஓர் மருந்து.*

**சரசுவதிபீடம்** - *ஓர்பிரதானகல்விச் சங்கவாசனம்.*

**சரசுவதிமாலை** - *ஓர் நூல்.*

**சரசுவதியாறு** - *ஓர்யாறு.*

**சரசுவதிவாக்கு** - *கற்றறியாதுவருங் கல்விவல்லபம்.*

**சரடம்** - *ஓணான், கடுமை, குரூரம், பல்லி, பழயது.*

**சரடு** - *நிரைபடவிருப்பது, நூல், பொன் முதலியவற்றாற் செய்யுங் கொடி.*

**சரட்டுத்தாலி** - *கொடித்தாலி.*

**சரணக்கிரந்தி** - *கணுக்கால்.*

**சரணம்** - *அபலம், அரசு, கால், புகலிடம், பெருங்காயம், மயில், மயிற்றோகை, மருதநிலத்தூர், வணக்கம், வீடு.*

**சரணம்புகுதல்** - *அடைக்கலம் புகுதல்.*

**சரணவாதம்** - *ஓர்நோய்.*

**சரணாகதம், சரணாகதி** - *அடைக்கலம்.*

**சரணாபரணம்** - *காலணி.*

**சரணாமிருதம்** - *பாதப்பிரட்சாளண நீர்.*

**சரணாயுதம்** - *கோழி.*

**சரணாரவிந்தம்** - *பாதபங்கயம்.*

**சரணி** - *பாதை.*

**சரணியம்** - *அடைக்கலம், வீடு.*

**சரணோதகம்** - *சரணாமிருதம்.*

**சரண்** - *கால், புகல்.*

**சரண்டம்** - *பல்லி, பழயது, புட்பொது.*

**சரண்புகல்** - *அடைக்கலம்புகல்.*

**சரதம்** - *மெய்.*

**சரதிசம்** - *கோடைகாலம்.*

**சரநட்சத்திரம்** - *இயங்குந் நட்சத்திரம்.*

**சரநூல்** - *சரசாத்திரம்.*

**சரந்தம்** - *எருது.*

**சரபத்திரம்** - *அம்புக்குப்பி.*

**சரபடி** - *வமிசம், வழி, வாடிக்கை.*

**சரபம்** - *எண்காற்புள், ஒட்டகம், குறும்பாடு, தத்துக்கிளி, யானைக் கன்று, வரையாடு.*

**சரபலம்** - *அம்பலகு.*

**சரபாதஸ்தானம்** - *எய்த அம்பு விழுந் தூரம்.*

**சரபுங்கை** - *அம்பிறகு.*

**சரப்பணி, சரப்பளி** - *ஓராபரணம்.*

**சரப்பம்** - *மயிர்.*

**சரமசரம்** - *சராசரம்.*

**சரமணி** - *அரைப்பட்டிகை.*

**சரமண்** - *சுதைமண்.*

**சரமண்டலம்** - *ஓர்வாச்சியம்.*

**சரமம்** - *முடிவு.*

**சரமாதம்** - *ஆடி - ஐப்பசி - சித்திரை - தை.*

**சரமாலை** - *தோரணமாலை.*

**சரமுல்லை** - *பல்லு.*

**சரமோடல்** - *மூச்சோடல்.*

**சரம்** - *அம்பு, இருவகைத் தோற்றத்தி னொன்று, அஃது மூச்சுள்ளது, கொறுக்கை, சரராசி, சுவாச நடை, நடை, நாணல், நீர், பாலேடு, மணிவடம், மாலை.*

**சரம்பரம்** - *சரகாண்டபாஷாணம்.*

**சரம்பார்த்தல்** - *சுவாசநடைபார்த்தல்.*

**சரயு** - *ஓர்யாறு, காற்று.*

**சரராசி** - *கற்கடகம், துலாம், மகரம், மேடம்.*

**சரலகம்** - *நீர்.*

**சரவட்டை** - *அற்பம், பிரயோசன மற்றது.*

**சரவணபவன், சரவணோற்பவன்** - *கந்தன்.*

**சரவணம்** - *கொறுக்கை, நாணல்.*

**சரவருடம்** - *அம்புமாரி.*

**சரவழகி, சரவாசி** - *குதிரைப்பற் பாஷாணம்.*

**சரவாணி** - *அம்பெய்வோன்.*

**சரவியம்** - *இலக்கு.*

**சரவை** - *அற்பம், குறை, பரும்படி, மாலை.*

**சரளம்** - *ஒழுங்கு, தகுதி, நேர்மை.*

**சரளி** - *கோழை.*

**சரளிக்கட்டு, சரளிக்கூடு** - *சளிக்கூடு.*

**சரளிபாடுதல்** - *சத்தசுரங்களையும் பாடிப்பயிலல்.*

**சரளியலங்காரம்** - *சரளிபாடுதல்.*

**சரற்காலம்** - *மாரிகாலம்.*

**சரன்** - *தூதாள்.*

**சராகம்** - *தடையின்மை, போர், வண்டு.*

**சராகை** - *வட்டில்.*

**சராங்கம்** - *உறுதி, தடையின்மை.*

**சராசந்தன்** - *ஓரரசன்.*

**சராசரம்** - *அவுபலபாஷாணம், ஆகாயம், நடையுள்ளது மில்ல தும், பிரபஞ்சம், முத்தி.*

**சராசரி** - *சரிபங்கு.*

**சராசரிக்கணக்கு** - *வீதக்கணக்கு.*

**சராசனம்** - *வில்.*

**சராடி** - *ஓர் புள்.*

**சராதுரம்** - *துற்பலம்.*

**சராத்திரயம்** - *அம்புக்கூடு.*

**சராப்பியாசம்** - *சரந்தொடுக்கப் பயிலுதல், சுவாசநடையறியப் பழகுதல்.*

**சராயணி** - *சராசந்தன்.*

**சராய** - *கருப்பாசயம்.*

**சராயுசம்** - *கருப்பையிற்பிறப்பன.*

**சராரோபம்** - *வில்.*

**சராவம்** - *அகன்மணி, மூடி, சலாகை.*

**சராளம்** - *சராகம்.*

**சராளித்தல்** - *பிராந்தித்தல்.*

**சரி** - *ஒப்பு, கூட்டம், கைவளை, சமன், சரியென்னேவல், நிதானம், பிசகின்மை, மலைச்சாரல், வழி.*

**சரிகமபதநி** - *சத்தசுரங்களினட்சரம்.*

**சரிகாணுதல்** - *அத்தாட்சிகாணுதல், ஒப்புக்காணுதல், சரிக்கட்டுதல், முடிவுகாணுதல்.*

**சரிகை** - *சரியை.*

**சரிகைப்பட்டை** - *சரியைத்தலைப்பு.*

**சரிகைமலை** - *பித்தளைமலை.*

**சரிக்கட்டுதல்** - *ஒப்பிடுதல், குறைதீர்த்தல், சரிவரப்பண்ணுதல், திருத்தல், நேர்பிடித்தல், பதிற்சாதித்தல்.*

**சரிக்குச்சரி கட்டல்** - *பதிற்செலுத்தல்.*

**சரிசமானம்** - *ஏற்றத்தாழ்ச்சியின்மை.*

**சரிசாமம்** - *நடுச்சாமம்.*

**சரிசு** - *ஓராபரணம், வளை.*

**சரிதம்** - *சரித்திரம், சுபாவம், நடை, வாசம்.*

**சரிதர்** - *சஞ்சரிப்போர்.*

**சரிதல்** - *சாய்தல், பின்னிடல்.*

**சரிதாப்பிரசங்கன்** - *புராணிகன்.*

**சரிதை** - *ஒழுக்கம், கதை, நான்கு பாதத்தினொன்று, வரலாறு.*

**சரித்தல்** - *சஞ்சரித்தல், சரியச் செய்தல், நடத்தல்.*

**சரித்திரம்** - *இயல்பு, ஒழுக்கம், கதை, நடக்கை.*

**சரித்திரை** - *புளியமரம்.*

**சரித்து** - *கங்கை.*

**சரிபங்கு, சரிபாதி** - *அரைவாசி.*

**சரிபம்** - *அசோகு.*

**சரிபொழுது** - *பின்பொழுது.*

**சரிபோதல்** - *இணக்கமாதல்.*

**சரிப்படுதல்** - *கைகூடுதல், சம்மதித்தல், சரிபோதல், திருத்தமடைதல்.*

**சரிப்படுத்தல்** - *இணக்கமாக்கல், ஒப்பனை செய்தல், நேர்ப்படுத்தல்.*

**சரிப்பிடித்தல்** - *சரிக்கட்டுதல், நிறைவேற்றல், நேர்படுத்தல்.*

**சரிப்பு** - *சரித்தல், சாய்ப்பு.*

**சரிப்போகுதல்** - *இணங்கல், சம்மதித்தல்.*

**சரியம்** - *சிறுநன்னாரி.*

**சரியாகுதல்** - *சமனாக்குதல், முற்றுதல்.*

**சரியாக்குதல்** - *சமனாக்குதல், செய்துமுடித்தல், நிறைவேற்றுதல்.*

**சரியிடுதல்** - *ஒப்பிடுதல்.*

**சரியை** - *ஒழுக்கம், பிச்சை, பொன்முதலியவற்றினூல்.*

**சரியொத்தல்** - *ஒப்பாயிருத்தல்.*

**சரிலம்** - *தண்ணீர்.*

**சரிவயது** - *ஒத்தவயது, நடுவயது.*

**சரிவருதல்** - *இணங்குதல், ஒத்துவருதல், சமனாதல், நேர்வருதல்.*

**சரிவு** - *சாய்வு.*

**சரிவைக்குதல்** - *ஒப்பிடுதல்.*

**சரிற்பதி** - *சமுத்திரம்.*

**சரிற்புதல்வன்** - *வீடுமன்.*

**சரீரகம்** - *சுகதேகம்.*

**சரீரகோடணம்** - *மெலிவு.*

**சரீரக்கட்டு** - *இறுகியசரீரம்.*

**சரீரக்கனப்பு** - *சரீரக்கொழுப்பு, திமிர்க்குணம்.*

**சரீரக்கூறு, சரீரக்கூறுபாடு** - *சரீரவியல்பு.*

**சரீரசஞ்சலம்** - *சரீரவருத்தம்.*

**சரீரசுத்தி** - *சரீரபலம்.*

**சரீரசமிரட்சணை** - *சரீரத்தைப் பேணல்.*

**சரீரசுகம்** - *தேகசவுக்கியம்.*

**சரீரசுத்தி** - *சரீரபுனிதம்.*

**சரீரத்திரயம்** - *முத்தேகம், அவை தூலம், சூக்குமம், காரணம்.*

**சரீரஸமரணை** - *சரீரவுணர்ச்சி.*

**சரீரப்போக்கு, சரீரப்போங்கு** - *உடம் பின்றன்மை.*

**சரீரம்** - *உடல்.*

**சரீராவச்சின்னவான்மா** - *சீவியத்துக் கடுத்தவான்மா.*

**சரீராவரணம்** - *தோல்.*

**சரீரி** - *சரீரமுள்ளது.*

**சரு** - *சோறு, தேவருணவு.*

**சருகட்டை** - *ஓரட்டை.*

**சருகாமை** - *ஓராமை.*

**சருகு** - *உலர்ந்த இலை.*

**சருகுசன்னாயம்** - *இருப்புக்கவசம்.*

**சருகுசாதனம்** - *ஓலையுறுதி.*

**சருகுண்ணி** - *ஒருண்ணி, சருகுநுகர் வோன்.*

**சருகுதிரி** - *ஒருதிரிநோய்.*

**சருகுபித்தளை** - *உயர்ந்தபித்தளை.*

**சருகுபுலி** - *ஓர்சிறுபுலி.*

**சருகுமடைப்பளி** - *மடைப் பளியாரி னோர்பேதம்.*

**சருகுமுசல்** - *உக்குளான்.*

**சருகொட்டி** - *ஓர்புள்.*

**சருக்கம்** - *இலக்கியச்செய்யுட் கூறு பாடு.*

**சருக்கரை** - *கன்னிலம், சற்கரை, துண்டு.*

**சருக்கரைக்கொம்மட்டி** - *ஓர்கொம் மட்டி.*

**சருக்கரைநாரத்தை** - *ஓர்நாரத்தை.*

**சருக்கரையமுது** - *சித்திரான்னத் தொன்று.*

**சருக்கரைவள்ளி** - *ஓர்கிழங்கு.*

**சருசபம்** - *கடுகு.*

**சருசுரபணம்** - *நெய்பால்கூட்டித் தெளித்தல்.*

**சருச்சரை** - *எண்வகையூறி னொன்று, அஃது ஒப்பரவின்மை.*

**சருத்தி** - *தேரிடக்கியம், விருதுக் கொடி.*

**சருப்பகங்கணி** - *காளி, பார்ப்பதி.*

**சருப்பகணை** - *நாகஸ்திரம்.*

**சருப்பகுண்டலன்** - *சிவன்.*

**சருப்பசாத்திரம்** - *விஷவித்தை.*

**சருப்பசாந்தி** - *நாகசாபநிவிர்த்தி.*

**சருப்பதானம்** - *உலகங்களாற் சருப்பம் போலச் செய்து பண்ணுந்தானம்.*

**சருப்பதோபத்திரம்** - *மிறைக்கவியி னொன்று. அஃது ஒருநிரையே எவ்வெட்டாக அறுபத்து நான் கறை கீறி ஒரு செய்யுளை யெட் டெட்டெழுத்தோரடியாக நான் கடிபாடி அஃதை மேனின்று கீழிழிய நான்கடியுமெழுதி அதனைக் கீழ்நின்று மேலேற நான் கடியுமெழுதி மேனின்று கீழிழியவும் கீழ்நின்று மேலேற வும் முதறுடங்கி இறுதிவரவும் இறுதிதுடங்கி முதல்வரவும் மாலை மாற்றாக நான்குமுகத் தானும் வாசிக்கவச் செய்யுளே யாவது.*

**சருப்பம்** - *பாம்பு.*

**சருப்பயாகம்** - *நாகத்தைத் தலை கீழாகக்கட்டித் தீவளர்த்துச் சத்துருவைக் கொல்லல்.*

**சருப்பராசி** - *நாணல்.*

**சருப்பராச்சியம்** - *சங்கங்குப்பி.*

**சருப்பாத்திரம்** - *நாகாஸ்திரம்.*

**சருப்பாபரணன்** - *சிவன்.*

**சருப்பாபரணி** - *காளி, பார்ப்பதி.*

**சருப்பாராதி** - *கருடன், கீரி, மயில்.*

**சருமகரணன்** - *செம்மான்.*

**சருமகாரகன், சருமகாரன், சருமகாரியன்** - *சக்கிலியன்.*

**சருமக்கருவி** - *தோற்கருவி.*

**சருமசம்** - *இரத்தம், மயிர்.*

**சருமணி** - *தோவிடம்.*

**சருமதண்டம், சருமநாசிகை, சருமயட்டி** - *சவுக்கு.*

**சருமம்** - *தோல், தோற்பாய், பரிசை.*

**சருமர்** - *சக்கிலியர்.*

**சருமன்** - *சக்கிலியன், சற்குணன்.*

**சருவகத்திருத்துவம்** - *சருவ அதிகாரம்.*

**சருவகாரணன்** - *கடவுள்.*

**சருவகாருண்ணியம்** - *சகலத்திற்குங் கிருபையாயிருப்பது.*

**சருவக்கியத்துவம்** - *சருவஞ்ஞத்துவம்.*

**சருவக்கியன்** - *சருவஞ்ஞன்.*

**சருவக்கியானம்** - *எல்லாமறிகிற அறிவு.*

**சருவக்கியானி** - *சருவரவத்தைகளையு மறிகின்றஞானி.*

**சருவசங்கபரித்தியாகம்** - *முற்றத் துறத்தல்.*

**சருவசங்கராதனம்** - *சுகாதனமாகக் காலைப் போட்டுக்கை யிரண்டையுங் காலுக்குட் செருகிக் காலிரண்டையும் பிடித்து முழங்கையிரண்டும் வயிற்றிற்படக் குழிந்திருப்பது.*

**சருவசங்காரகாலம்** - *யுகமுடிவு காலம்.*

**சருவசங்காரமூர்த்தி** - *உருத்திரன்.*

**சருவசங்காரம்** - *உருத்திரசங்காரம், முற்றுமழிதல்.*

**சருவசங்காரி** - *உருத்திரன்.*

**சருவசத்தித்துவம்** - *சருவவல்லமை பொருந்தல்.*

**சருவசனவசீகரம்** - *சமஸ்தசனங் களையும் வசமாக்கும் வித்தை.*

**சருவசாட்சி** - *கடவுள், சூரியன்.*

**சருவசாதகம்** - *வேங்கைமரம்.*

**சருவசித்தி** - *சகலவிதசித்தி.*

**சருவசித்து** - *ஓர்வருடம்.*

**சருவசிரேட்டன், சருவச்சிரேட்டன்** - *சகலத்துக்கும் அதிகாரி.*

**சருவசீவதயாபரன்** - *கடவுள், சிவன், திருமால்.*

**சருவஞானம்** - *எல்லாமறிதல்.*

**சருவஞ்ஞத்துவம்** - *எல்லாவற்றையு மறியுந்தத்துவம்.*

**சருவஞ்ஞன்** - *கடவுள்.*

**சருவதப்பறை** - *முற்றுந்தவறு.*

**சருவதா** - *எப்போழ்தும்.*

**சருவதாரி** - *ஓர்வருடம்.*

**சருவத்தியாகம்** - *முற்றத்துறத்தல்.*

**சருவத்திரம்** - *எல்லாம்.*

**சருவத்திரவித்தியேகம்** - *எங்கும்.*

**சருவப்பிரகாசம்** - *சொப்பனாவத்தை.*

**சருவநியந்திருத்துவம்** - *சருவத்தையு மேவலல்லனாதல்.*

**சருவமானியம்** - *ஊர்ப்பொதுவாய்க் கொடுக்கப்படுவது.*

**சருவம்** - *எல்லாம், பித்தளைமுதலிய வுலோகங்களாற் செய்யும் பாத்திரம், வெண்கலம்.*

**சருவரசம்** - *கறியுப்பு.*

**சருவரி** - *இரவு, பெண், மஞ்சள்.*

**சருவல்** - *சருவுதல்.*

**சருவவல்லபம், சருவவல்லமை** - *எல்லாஞ்செய்ய வல்லபம்.*

**சருவவியாபகம்** - *எல்லாவற்றினுமி, சாக்கிராவத்தை.*

**சருவவாயாபி** - *கடவுள்.*

**சருவாங்கதகணம்** - *முற்றுஞ்சுடுதல்.*

**சருவாங்கம்** - *முழுச்சரீரம்.*

**சருவாணி** - *பார்வதி.*

**சருவாந்தரியாமி** - *கடவுள்.*

**சருவாதரன்** - *எல்லாவற்றிற்குமாதாரன்.*

**சருவாதிட்டானம்** - *காரியஞ்யாவற்றிற்குங் காரணமாயிருப்பது.*

**சருவாந்தரியாமித்துவம்** - *சருவத்திலும்வியாபித்திருத்தல்.*

**சருவாலங்காரம்** - *வத்திராபரண முதலியபூஷணம்.*

**சருவானுகூலம்** - *சருவசித்தி.*

**சருவிதம்** - *பட்சித்தல்.*

**சருவித்திரவிதேயம்** - *எவ்விடத்தும்.*

**சருவுதல்** - *இலீலைபாராட்டல், கிட்டுதல், கொழுவிப்போதல், பொருதல் மருவுதல்.*

**சருவேசுரன், சருவேசுவரன், சருவேச்சுவரன்** - *கடவுள்.*

**சருவேச்சுரத்துவம்** - *எல்லாவற்றிற்கும் மேலாயிருக்குந் தத்துவம்.*

**சரேந்திரன்** - *வில்வல்லவன்.*

**சரேரிடுதல், சரேரெனல், சரேலெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**சரை** - *ஓரரக்கி, கிழத்தன்மை, நரை, முதிர்வயது, வைக்கோல் முதலிய வற்றாற்செய்யுஞ்சரை.*

**சரையாப்பித்தல்** - *உள்ளேசெலுத்தல்.*

**சரையு** - *ஓர்நதி.*

**சரோசம், சரோருகம்** - *தாமரை.*

**சரோருகசரம்** - *தாமரைமாலை.*

**சரோருகன்** - *பிரமா.*

**சலகண்டகம்** - *ஓர் நீர்ப்பூடு, முதலை.*

**சலகண்டம்** - *மிகுவேர்வை.*

**சலகந்தி** - *சகத்திரபேதி.*

**சலகம்** - *சங்கு, நீராடல், நீருளவீடு, பொட்டுப்பூச்சி.*

**சலகற்கம்** - *சேறு.*

**சலகனனம்** - *பூமிக்குங்கிரகத்திற்குமுள்ள தூரம்.*

**சலகாங்கம்** - *சங்கு, தாமரை, திரை, தேங்காய்.*

**சலகாங்கிஷம்** - *நீர் வேட்பு.*

**சலகாந்தாரன்** - *வருணன்.*

**சலகாமி** - *நீர்மேனடக்குங்குதிரை.*

**சலகிராடம்** - *முதலை.*

**சலகு** - *கப்பாத்து.*

**சலகுந்தலம்** - *ஓர்நீர்ப்பூடு.*

**சலகுபிடித்தல்** - *கப்பாத்துப் பண்ணுதல்.*

**சலகை** - *வெளிப்பாடு, தெப்பம், மரக்கலம்.*

**சலக்கடுப்பு** - *நீர்க்கடுப்பு.*

**சலக்கமனை** - *மலசலங்கழிக்கு மிடம்.*

**சலக்கமாடுதல்** - *நீராடுதல்.*

**சலக்கம்** - *நீராட்டு.*

**சலக்கரணை** - *விடுதலை.*

**சலக்கழிச்சல்** - *சலரோகம்.*

**சலக்கி** - *நவட்சாரம்.*

**சலக்கிரீடை** - *நீர்விளையாட்டு.*

**சலக்குடர், சலக்குடல்** - *சலப்பை.*

**சலக்கூர்மை** - *அமுரியுப்பு.*

**சலக்கோவை** - *விஷநீரேற்றம்.*

**சலங்கு** - *வள்ளம்.*

**சலங்கை** - *சதங்கை.*

**சலங்கைக்கொதி** - *கடுங்கொதி.*

**சலங்கைச்செடி** - *ஓர்பூடு.*

**சலசந்தி** - *என்புப்பொருத்து.*

**சலசம்** - *தாமரை.*

**சலசயனன், சலசயன்** - *திருமால்.*

**சலசரக்குழி** - *சலதாரை.*

**சலசரம்** - *மீனவிராசி, மீன்.*

**சலசலப்பு, சலசலித்தல், சலசலெனல்** - *ஈரடுக்கொலிக்குறிப்பு.*

**சலசலோசனன்** - *விட்டுணு.*

**சலசற்பிணி** - *நீரட்டை.*

**சலசன்மம்** - *தாமரை.*

**சலசாதி** - *நீர் வாழ்வன.*

**சலசாயி** - *திருமால்.*

**சலசாலை** - *நீர்க்கால்.*

**சலசூகரம்** - *கடற்பன்றி, முதலை.*

**சலசூசி** - *நீரட்டை.*

**சலசூத்திரம்** - *நீரிறைக்குஞ்சூத்திரம்.*

**சலசெந்து** - *சலப்பூச்சி, மீன்.*

**சலசை** - *இலக்குமி.*

**சலஞ்சலம்** - *சங்கு, வலம்புரியாயிரஞ் சூழந்தசங்கு.*

**சலஞ்சாதித்தல்** - *பகைசாதித்தல்.*

**சலதசங்கதி** - *மந்தாரம்.*

**சலதம்** - *முகில்.*

**சலதரம்** - *குளம், சமுத்திரம், முகில்.*

**சலதரன்** - *சிவன்.*

**சலதளம்** - *அரசமரம்.*

**சலதாகமம்** - *மழைக்காலம்.*

**சலதாரை** - *மதகு.*

**சலதி** - *சமுத்திரம்.*

**சலதோஷம்** - *நீர்த்தோஷம்.*

**சலத்தம்பம்,சலஸதம்பம்,சலத்தம்பனம்** - *கலைஞானமறு பத்தினான்கி னொன்று, அஃது நீரினியல் பைத் தடுத்தல்.*

**சலத்திரம்** - *ஓலைக்குடை.*

**சலத்துவாரம்** - *சலவாயில்.*

**சலநிதி** - *கடல்.*

**சலபடலம்** - *மேகம்.*

**சலபதி** - *வருணன்.*

**சலபந்தகம்** - *நீர்க்கால்.*

**சலபம்** - *விட்டிற்பறவை.*

**சலபாதை** - *சிறுநீர்க்கழித்தல்.*

**சலபானம்** - *நீரருந்தல்.*

**சலபிதம்** - *சொல்லல்.*

**சலபித்தம்** - *தீ.*

**சலபிப்பிலி** - *நீர்த்திப்பிலி.*

**சலபுட்பம், சலபெந்து** - *மீன்.*

**சலப்பரிசம்** - *நீராட்டு.*

**சலப்பிரவாகம்** - *நீர்ப்பெருக்கு.*

**சலப்பிரளயம்** - *உலகத்தைச் சமுத்திரம் மூடல்.*

**சலப்பிராயம்** - *நீர்சூழ்ந்த நாடு.*

**சலப்பிலாவனம்** - *நீர்ப் பெருக்கு.*

**சலப்பை** - *சலக்குடர்.*

**சலமடைப்பு, சலமறிப்பு** - *சிறுநீரடை படல்.*

**சலமலம்** - *நீர்ப்பஞ்சு.*

**சலமானம்** - *போதல்.*

**சலமூர்த்தி** - *சிவன்.*

**சலமூர்த்திகை** - *ஆலாங்கட்டி.*

**சலமை** - *குளிர்மை, சன்னி.*

**சலம்** - *அசைவு, ஓர்வாசனை, குளிர், சலஞ்சாதித்தல், தணியாக் கோபம், நீர், பன்றிமுள், பொய்.*

**சலம்புரி** - *சங்கு.*

**சலயந்திரம்** - *சலசூத்திரம்.*

**சலரசம்** - *உப்பு.*

**சலராகம்** - *வெண்சிவப்பு.*

**சலராசி** - *கடல்.*

**சலருகம்** - *தாமரை.*

**சலரோகம்** - *ஓர்நோய்.*

**சலலம், சலவி** - *முட்பன்றிமுள்.*

**சலவியம்** - *முட்பன்றி.*

**சலவகு** - *இலவம்பிசின்.*

**சலவர்** - *நெய்தனிலமாக்கள்.*

**சலவன்** - *பரதவன், பெரு நூலுள்ளது.*

**சலவாசயம்** - *சலக்குடர்.*

**சலவாண்டம்** - *கொப்புளம்.*

**சலவாதி** - *கோபி, சிறுநீர்விடுதல், முட்பன்றிமுள், முரண்டன், மரணவோலை கொண்டு செல்வோன்.*

**சலவாதை** - *சிறுநீர்விடுதல்.*

**சலவாயில்** - *சலங்கழியுமிடம்.*

**சலவிசுவம்** - *ஐப்பசிதொடங்கிப் பங்குனிமட்டுஞ் சூரியனிற்கு மிடம்.*

**சலவிந்து** - *நீர்த்துளி.*

**சலவியாழம்** - *நீர்ப்பாம்பு.*

**சலவு** - *ஆண்குறி.*

**சலவை** - *எண்குறித்திடுமுறை, புடைவை முதலியவற்றை வெண்மையாக்கல்.*

**சலவைக்கல்** - *கருங்கல்.*

**சலவைமண்** - *சுதைமண்.*

**சலனகாலம்** - *உபத்திரவகாலம், பஞ்சகாலம்.*

**சலனப்படுதல்** - *அசைதல்.*

**சலனம்** - *அசைவு, கால், காற்று, சஞ்சலம், போதல், மான்.*

**சலனன்** - *காற்று.*

**சலன்** - *கால்.*

**சலாகம்** - *நீரட்டை.*

**சலாகு** - *சலாகை.*

**சலாகை** - *அகன்மணி, அம்பு, ஈட்டி, ஊசிக்காந்தம், சலாகு, சூதாடு கருவி, நாராசம், முட்பன்றி முள்.*

**சலாகையாணி** - *தையலாணி.*

**சலாக்கியம்** - *செல்வம், மேன்மை.*

**சலாங்கம்** - *ஓர்நாரை.*

**சலாங்கு** - *பொய்யாட்புள்.*

**சலாசம்** - *உப்பு.*

**சலாசயம்** - *சலவாசயம், நீர்நிலை.*

**சலாசலம்** - *நிலையின்மை, பசு.*

**சலாசிரயம்** - *நீர்மண்டபம்.*

**சலாஞ்சலி** - *தத்தநீர்.*

**சலாஞ்செய்தல்** - *வணங்கல்.*

**சலாத்தி** - *திரைச்சீலை.*

**சலாத்தியம்** - *நீர்ப்பிடியானது.*

**சலாபக்குழி, சலாபம்** - *முத்துக் குளித்தல்.*

**சலாபாகரம்** - *கடல், நீரூற்று, நீர்நிலை.*

**சலாம்** - *வணக்கம்.*

**சலாலோகை** - *நீரட்டை.*

**சலிகை** - *அதிகாரம், செல்வாக்கு, தத்துவம், நீரட்டை, பெருமை.*

**சலிகைக்கிராமம்** - *தலைக்கிராமம்.*

**சலித்தல்** - *அசைவுகொள்ளுதல், இளைத்தோய்தல், ஒலித்தல், சலனமுறுதல், துக்கப்படுதல்.*

**சலிப்பு** - *அசைவு, இளைப்பு, துக்கம்.*

**சலியாமை** - *அசைவின்மை.*

**சலிலக்கிரியை** - *பிரேதத்தைக் குழிப் பாட்டடல்.*

**சலிலசம்** - *தாமரை.*

**சலிலம்** - *நீர்.*

**சலினி** - *திப்பிலி.*

**சலு** - *சிறங்கைநீர்.*

**சலுகை** - *சலிகை.*

**சலுப்பு** - *சலதோஷம், சிறுச்செலுப்பு.*

**சலேசரம்** - *நீர்ப்புள், மீன்.*

**சலேந்திரயம்** - *அடக்கமின்மை.*

**சலேந்திரன்** - *வருணன்.*

**சலோகசம், சலோகை** - *நீரட்டை.*

**சலோபாதை** - *சலவாதை.*

**சலோர்க்கம், சலோர்ச்சம்** - *குங்கிலியம்.*

**சல்லகண்டம்** - *புறா.*

**சல்லகம்** - *கைத்தாளம், நார்.*

**சல்லகி** - *ஆத்திமரம், இலவு.*

**சல்லக்கடுப்பு** - *சரீரநோ.*

**சல்லடம்** - *குறுங்காற்சட்டை.*

**சல்லடை** - *தானியமுதலியவற்றைச் சல்லுங்கருவி, துவாரம்.*

**சல்லடைக்கண்** - *அரிப்பெட்டிக் கண்.*

**சல்லடைக்கொப்பு** - *ஓர் காதணி.*

**சல்லபம்** - *முட்பன்றி.*

**சல்லம்** - *நார், பன்றிமுள்.*

**சல்லரி** - *ஓர்கைமணி, சல்லரி யென்னேவல், பம்பைமேளம்.*

**சல்லரிதல்** - *துண்டுதுண்டாய் வெட்டல்.*

**சல்லா** - *ஓர்வகைச்சீலை.*

**சல்லாபம்** - *வினாவும்விடையுங் கூடியசொல், நாடகவகைபத்தி னொன்று.*

**சல்லாரி** - *அபாத்திரன், வேஷக் காரன்.*

**சல்லி** - *கலவோடு, தகட்டுக்கல், தூக் கங்கள், பொய், மூன்றுசின்னங் கொண்டகாசு.*

**சல்லிக்கல்** - *சிறுதகட்டுக்கல்.*

**சல்லித்தல்** - *துண்டாக்கல்.*

**சல்லியகண்டம்** - *முட்பன்றி.*

**சல்லியகரணி** - *இரணமாற்றும் மருந்து.*

**சல்லியகரு** - *சல்லியவித்தைக்குரிய கரு.*

**சல்லியம்** - *அம்பு, ஆயுதநுனி, இக் கட்டு, ஈட்டி, எலும்பு, ஓர்வித்தை, கலக்கம், செஞ் சந்தனம், நஞ்சு, முட்பன்றி.*

**சல்லியர்** - *ஓர்சாதியார்.*

**சல்லியவித்தை** - *சல்லியத்தொழில்.*

**சல்லியன்** - *ஓரரசன், சுக்கிரன்.*

**சல்லியாதேவி** - *ஓர்தேவதை.*

**சல்லுதல்** - *அரித்தல்.*

**சவக்கம்** - *சோப்பம்.*

**சவக்களித்தல்** - *சவர்க்களித்தல்.*

**சவக்காடு** - *இடுகாடு, சுடுகாடு.*

**சவக்காமியம்** - *நாய்.*

**சவக்காலை** - *பிரேதம்புதைக்குமிடம்.*

**சவக்கிரியை** - *பிரேதக்கிரியை.*

**சவக்குழி** - *பிரேதக்குழி.*

**சவங்குதல்** - *சோம்புதல்.*

**சவசாதனம்** - *பிரேதலங்காரம்.*

**சவசேமம்** - *பிணமடக்கல்.*

**சவடி, சவடிக்கோவை** - *ஓராபரணம், ஓர்பாம்பு.*

**சவடிக்கதிர், சவடிமுள்** - *சவடி பின்னுங் கருவி.*

**சவடியெலும்பு** - *பூணாரவெலும்பு.*

**சவடு** - *நெரிவு, வண்டல்.*

**சவட்டல்** - *அதிகப்படச்செய்தல், அழித்தல், துவட்டல், மெல்லல், வளைத்தல்.*

**சவட்டுக்கூர்மை** - *சவட்டுப்பு.*

**சவட்டுதல்** - *சவட்டல்.*

**சவட்டுப்பு** - *ஓருப்பு.*

**சவண்டலை** - *ஓர்மரம்.*

**சவதம்** - *சபதம்.*

**சவதரித்தல்** - *சம்பாதித்தல்.*

**சவதாகம்** - *பிரேததகனம்.*

**சவப்பெட்டி** - *பிரேதம்வைக்கும் பெட்டகம்.*

**சவம்** - *சீக்கிரம், நீர், பிசாசம், பிணம்.*

**சவரகன்** - *சௌளகன்.*

**சவரணை** - *ஆயத்தம், நேர்த்தி.*

**சவரட்சணைசெய்தல், சவரணை செய்தல்** - *காப்பாற்றல்.*

**சவரம்** - *சாமரம், மயிர், வால்மயிர்.*

**சவரம் பண்ணுதல்** - *மயிர்கழித்தல்.*

**சவரர்** - *கீழ்மக்கள், குறவர், வேடர்.*

**சவரன்** - *கீழ்மக்கள்,சிவன், மிலேச்சன்.*

**சவராலையம்** - *கீழ்மக்கள் குடியிருப்பு.*

**சவரி** - *கவரிமா, சாமரம், ஓர்கீரை, கதம்பைத்தும்பு.*

**சவரிக்கொடி** - *கொடியாள் கூந்தல்.*

**சவரிலோத்திரம்** - *ஓர்மருந்து.*

**சவர்** - *உப்பூறனிலம்.*

**சவர்க்கம்** - *கல்லுப்பு.*

**சவர்க்களி** - *சவருங்களியுஞ் சேர்ந்த மண்.*

**சவர்க்களித்தல்** - *உப்புச்சுவை கொள்ளல்.*

**சவர்க்காரம்** - *ஓர்மருந்து.*

**சவர்நாயகம்** - *ஓர்நெல்.*

**சவர்நிலம்** - *உவர்த்தரை.*

**சவலம்** - *அவுபலபாஷாணம், நீர், பிரயோசனம்.*

**சவலை** - *இளமையுள்ளது, மெலிவு.*

**சவலைப்புத்தி** - *பிள்ளைமை.*

**சவலைவெண்பா** - *ஓர்வெண்பா, அஃது முதலாமடியும் மூன்றாமடியும் நாற்சீராய்க் கடையடியும் இரண்டாமடியு முச்சீராயத்தனிச் சொல்லின்றி ஒரு விகற்பத்தான் வருவது.*

**சவளசோழியம்** - *நாகரீகம், விற்பன்னம்.*

**சவளச்சி** - *சத்திசாரம்.*

**சவளம்** - *ஈட்டி, ஓர்மீன்.*

**சவளி** - *சவடி, சவண்டகாலுள்ளது, புடைவை.*

**சவளிக்கடை, சவிளிக்கடை, சவுளிக் கடை** - *புடைவைக்கடை.*

**சவளுதல்** - *வளைதல்.*

**சவளை** - *வங்கமணல்.*

**சவள்** - *தோணியோட்டுங்கோல்.*

**சவறுகேடு** - *தாழ்ச்சி, மெலிவு.*

**சவற்சலம்** - *கல்லுப்பு.*

**சவனம்** - *புண்ணியநீராடல், வேகம்.*

**சவனன்** - *வேகி.*

**சவனிகை** - *திரைச்சீலை.*

**சவனிக்கை** - *சவனிகை.*

**சவாசு** - *வியப்பிடைச்சொல்.*

**சவாது** - *ஒன்றைப்பார்த்தெழுதும் பிரதி, ஓர்வாசனைப்பண்டம்.*

**சவாதுப்பிள்ளை, சவாதுப்பூனை** - *நாவிப்பிள்ளை.*

**சவாபுட்பம்** - *முட்செவ்வந்தி.*

**சவாரி** - *உலாத்து.*

**சவானிலம்** - *தென்றல்.*

**சவி** - *அழகு, ஒளி, சரமணிக்கோவை, செவ்வை, பெலன், மிளகுகொடி.*

**சவிகம்** - *திப்பிலிக்கொடி, விட்டுணு கரந்தை.*

**சவிகை** - *சதுக்கம்.*

**சவிசங்கவாதம்** - *ஓர்வாதநோய்.*

**சவிதா** - *சூரியன்.*

**சவித்தல்** - *சபித்தல்.*

**சவிஸ்தாரம்** - *விஸ்தாரம்.*

**சவித்திரு** - *துவாதசாதித்தரிலொருவன்.*

**சவிர்ச்சங்கி** - *சிறுபீரங்கி.*

**சவுகரியம்** - *சோகரியம்.*

**சவுக்கம்** - *அகலம்நீளஞ்சரி கொண்ட புடைவைத்துண்டு, சதுக்கம்.*

**சவுக்களி** - *சவளி.*

**சவுக்களித்தல்** - *புளித்தல்.*

**சவுக்காரம்** - *ஓர்வகைச்சரக்கு.*

**சவுக்கியம்** - *சுகம்.*

**சவுக்கு** - *அடிக்குங்கயிறு.*

**சவுக்கை** - *ஆயத்துறை, இளைத்துப் போதல், இளைப்பாறுமிடம், சதுக்கம், சவுக்கம், சவுத்தல்.*

**சவுக்கைதார்** - *தீர்வைக்காரன்.*

**சவுங்குதல்** - *சோம்புதல்.*

**சவுசம்** - *சுத்திபண்ணுதல், தூய்மை.*

**சவுசயம்** - *முருக்கு.*

**சவுசன்னியம்** - *பட்சம்.*

**சவுடோல்** - *சப்பரம்.*

**சவுண்டம்** - *திப்பிலி.*

**சவுண்டிகர்** - *கள்விற்போர்.*

**சவுதம்** - *இளைத்தல், தணிவு, பலவீனம், விலைக்குறைவு.*

**சவுதரித்தல்** - *ஆதாயப்படுத்தல், ஆயத்தமாக்கல், சம்பாதித்தல், தாங்கல்.*

**சவுத்தல்** - *அலுத்தல், இளகுதல், குறைதல், மெலிதல்.*

**சவுத்து** - *முன்மாதிரி.*

**சவுந்தரமுகம்** - *மலர்ந்தமுகங் காட்டடல்.*

**சவுந்தரம், சவுந்தரியம்** - *அழகு.*

**சவுந்தரி** - *பார்பதி.*

**சவுபாக்கியம்** - *ஐசுவரியம், நித்திய யோகத்தொன்று.*

**சவுமம்** - *சிற்பநூன்முப்பத்திரண்டி னொன்று.*

**சவுரகன்** - *சௌளகன்.*

**சவுரமானம்** - *சௌரமானம்.*

**சவுரம்** - *சௌளம்.*

**சவிரி** - *முதியாள்கூந்தல்.*

**சவை** - *அம்பலம், கூட்டம், புலவர்.*

**சவ்வரிசி** - *ஓர்மரச்சோற்றியரிசி.*

**சவ்வாசு** - *சவாசு.*

**சவ்வாது** - *மரவள்ளி.*

**சவ்வியசாசி** - *அரிச்சுனன்.*

**சவ்வியம்** - *இடப்பக்கம், மிளகு.*

**சவ்வியை** - *தெற்கு, பார்பதி.*

**சவ்வீரம்** - *தேசமன்பத்தாறி னொன்று, பறங்கிப்பாஷாணம்.*

**சவ்வு** - *சவ்வரிசி, தசைமுதலிய வற்றை மூடியவெண்ணிறத்தோல்.*

**சழக்கு** - *அறியாமை, ஒலிக்குறிப்பு, குற்றம், பொய்.*

**சழிதல்** - *சப்பளிதல்.*

**சழியல், சழுங்கல்** - *சப்பளிதல், சப் பளிந்தது.*

**சழுக்கம்** - *தளர்ச்சி.*

**சழுங்குதல்** - *நுகைந்துசழிந்து போதல், பிதுங்குதல்.*

**சளகந்தம்** - *வசம்பு.*

**சளக்குப்புளக்கெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**சளசண்டி** - *சகசண்டி.*

**சளசளத்தல்** - *நீர்ப்பிடிகொள்ளல், விருதாவாயலட்டுதல்.*

**சளசளப்பு** - *நீர்ப்பிடிகொண்ட விளக்கம், விருதாவலட்டு.*

**சளசளெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு, நீர்ப்பிடி கொண்டிளகி யிருத்தல்.*

**சளபுளத்தல்** - *இளகுதல், ஒலிக் குறிப்பு, நீர்ப்பிடி கொண்டிளகி யிருத்தல்.*

**சளப்புதல்** - *அளப்புதல், பிதற்றுதல்.*

**சளம்** - *பொய், வஞ்சனை.*

**சளவட்டை** - *இளந்தது.*

**சளாரிடுதல்** - *ஒலிக்குறிப்பு.*

**சளார்ப்பிளாரெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**சளி** - *கோழை.*

**சளிச்சல்** - *புளிச்சல்.*

**சளித்தல்** - *புளிப்பாதல்.*

**சளிப்பு** - *புளிப்பு.*

**சளுக்கன்** - *அகந்தைக்காரன், வீணன்.*

**சளுக்கு** - *கீழ்மை, திரிகையினோ ருறுப்பு, துணிகரம்.*

**சளுக்குவேந்தர்** - *சாளுவர்.*

**சளுக்கையர்** - *சாளுவர்.*

**சளுவுவாயன்** - *அலப்புவாயன், பேச்சுக்காரன்.*

**சளூகம்** - *அட்டை.*

**சள்ளட்டியெனல், சள்ளிடுதல்** - *ஒலிக் குறிப்பு.*

**சள்ளல்** - *சேறு, சாரமற்றது.*

**சள்ளு** - *தொந்தறை.*

**சள்ளுப்புள்ளு** - *சண்டை, தொந்தரவு.*

**சள்ளெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**சள்ளை** - *ஓர்மீன், தொந்தரவு, வயிற்றருகு.*

**சறசறெனல்** - *ஒலிக்குறிப்பு, சீக்கிரக் குறிப்பு.*

**சறடு** - *சரடு.*

**சறுகுதல்** - *வழுவுதல்.*

**சறக்கல்** - *வழுக்கல்.*

**சறுக்கார்** - *தாழ்வாரம், பொறிவு.*

**சறுக்கு** - *சறுக்குதல், சறுக்கென் னேவல், சில்லுமுதலிய திருப்பும் மிண்டி, தவறு.*

**சறுக்குதல்** - *பெலப்படாமற் போதல், வழுக்குதல்.*

**சறுதாகம்** - *வேங்கைமரம்.*

**சறுவசனவசீகரம்** - *ஓர்வசியம்.*

**சறுவம்** - *சமஸ்தம்.*

**சற்கதம், சறுகம்** - *நீர், பங்கு, மீன்முள்.*

**சற்கம்** - *சகலம், முறிசல்.*

**சற்கருமம்** - *நற்கருமம்.*

**சற்கரை** - *சருக்கரை.*

**சற்காரம்** - *உபசரிப்பு, சங்கிப்பு.*

**சற்காரித்தல்** - *உபசரித்தல், சங்கித்தல்.*

**சற்கிருதம்** - *உபசரணை, சங்கை, நல்லொழுக்கம்.*

**சற்கிருதி** - *நல்லொழுக்கம்.*

**சற்குணம்** - *சன்மார்க்கம், நற்குணம்.*

**சற்குணன்** - *சன்மார்க்கன், நற்குணன்.*

**சற்குரு** - *காரணக்குரு.*

**சற்சகுனம்** - *நற்சகுனம்.*

**சற்சங்கம்** - *நல்லோர்கூட்டம்.*

**சற்சரை** - *சருச்சரை.*

**சற்சலம்** - *தெளிநீர்.*

**சற்சனன்** - *நற்குணன்.*

**சற்சன்னிதானம்** - *நல்லோர்முகதா.*

**சற்சிதம்** - *வாசனை, விருப்பம்.*

**சற்சுகாதி** - *பெருமருந்து.*

**சற்பகன்** - *விக்கல்வசனன்.*

**சற்பம்** - *சருப்பம்.*

**சற்பனை** - *சதி.*

**சற்பன்னபாஷை** - *சமஸ்தபாஷை.*

**சற்பாகாரம்** - *அலகுவைக்குமுறையி னொன்று.*

**சற்பாத்திரம்** - *உத்தமன், சன்மார்க்கி.*

**சற்பிணி** - *கூத்தினோர்விகற்பம்.*

**சற்பிதம்** - *விக்கிப்பேசல்.*

**சற்பிரசாதம்** - *தேவபிரசாதம், தேவர் கள்பெரியோர்களினனுக்கிரகம், நற்கருணை.*

**சற்புத்தி** - *நற்புத்தி.*

**சற்புத்திரன்** - *நற்குணமுள்ள பிள்ளை.*

**சற்புருடன்** - *சன்மார்க்கன்.*

**சற்று** - *அற்பம், கொஞ்சநேரம்.*

**சனகத்துவம்** - *பிறப்பிக்குங் காரணம்.*

**சனகந்தகம்** - *வசம்பு.*

**சனகம்** - *புளியாரை.*

**சனகன்** - *சீதையின்பிதா, பிதா, பிரம புத்திரர்நால்வரிலொருவன், இவன் திருமால் பதினைந் தவதாரத் தொருவன்.*

**சனசதளம்** - *சனத்திரள்.*

**சனசமுகம்** - *சனக்கூட்டம்.*

**சனசித்திரம்** - *புளியாரை.*

**சனச்சச்சடி** - *சனக்கூட்டத்தின் றொந்தரை.*

**சனதை** - *சனம்.*

**சனந்தரன்** - *பிரமபுத்திரர்நால்வரி லொருவன்.*

**சனந்தனன்** - *ஓரிருடி, இவன் திருமால் பதினைந்தவதாரத் தொருவன்.*

**சனபதம்** - *நாடு.*

**சனப்பிரவாதம்** - *பேசலாலெழு மொலி.*

**சனமேசயன்** - *குருகுலவரசரி லொரு வன்.*

**சனம்** - *இனம், மனுஷர்.*

**சனலோகம்** - *மேலேழுலகி னொன்று.*

**சனற்காரம்** - *பணிகளானெழு மொலி.*

**சனற்குமாரம்** - *ஓர் நூல்.*

**சனற்குமாரன்** - *பிரமபுத்திரர்நால்வரி லொருவன், இவன் திருமால் பதினைந்தவதாரத்தொருவன்.*

**சனனகாலம்** - *சென்மகாலம்.*

**சனனசாபல்லியம்** - *சனனமெடுத்த பலன்.*

**சனனசூதகம்** - *சன்மவாசூசம்.*

**சன்னபூமி** - *சென்மபூமி.*

**சனனமரணம்** - *பிறப்பிறப்பு.*

**சனைமாலி** - *சதகுப்பி.*

**சனனமெடுத்தல்** - *பிறத்தல்.*

**சனனமோசனம்** - *பிறவிநீங்கல்.*

**சனனம்** - *பிறப்பு, வமிசம்.*

**சனனாசூசம்** - *சென்மசூதகம்.*

**சனனி** - *உருக்கம், ஓர்மல்லிகை, சனனியென்னேவல், தாய், பிதா, பிள்ளை, பிறந்தது.*

**சனனனித்தல்** - *உற்பத்தியாதல், பிறத்தல்.*

**சனாசனம்** - *கோணாய்.*

**சனாசாரம்** - *நன்னடை.*

**சனாதரன்** - *பிரமபுத்திரர்நால்வரி லொருவன்.*

**சனாதனன்** - *ஓரிருடி இவன் திருமால் பதினைந்தவதாரத் தொருவன்.*

**சனாதிகம்** - *தலைமை.*

**சனாதிநாதன்** - *அரசன், விட்டுணு.*

**சனாந்தம்** - *குடியிருக்குமிடம்.*

**சனாந்திகம்** - *இரகசியம்.*

**சனார்த்தனன்** - *திருமால்.*

**சனார்ப்பியம்** - *மூழ்கல்.*

**சனி** - *ஓர்கிரகம், ஓர்வாரம், கெட்ட வன், சனியென்னேவல், தாய்.*

**சனிகை** - *பெண்.*

**சனிதம்** - *பிறந்தது, பிறப்பு, பெண், மருமகள்.*

**சனித்தல்** - *உண்டாதல், பிறத்தல்.*

**சனித்துவன்** - *பிதா.*

**சனிபிடித்தல்** - *கேடுபிடித்தல்.*

**சனிப்பாட்டு** - *ஓர்கவி.*

**சனிப்பித்தல்** - *பிறப்பித்தல்.*

**சனிப்பு** - *பிறப்பு.*

**சனிமூலை** - *வடகிழக்கு.*

**சனியன்** - *அதிட்டங்கெட்டது, ஓர் கிரகம்.*

**சனிவிந்து** - *நீலக்கல்.*

**சனிவேதை** - *சனியினால்வருந்நோய்.*

**சனீச்சுவரன்** - *சனிபகவான்.*

**சனு** – *உதவி, சுகிர்தம், தயவு, பிறப்பு.*

**சனுசம்** - *மிளகு.*

**சன்மகீலன்** - *விட்டுணு.*

**சன்மசாபல்லியம்** - *இறத்தல், பிறவிப் பேறு.*

**சன்மதன்** - *பிதா.*

**சன்மபாவம்** - *செனனபாவம்.*

**சன்மபூமி** - *பிறந்தவூர்.*

**சன்மப்பகை** - *பிறவிப்பகை.*

**சன்மம்** - *பிறப்பு.*

**சன்மலி** - *இலவு.*

**சன்மவைலட்சண்ணியம்** - *பிறப் பொழுக்கங்குன்றல்.*

**சன்மனசு** - *சம்மனசு.*

**சன்மனம்** - *உற்பத்தி.*

**சன்மன்** - *சருமன்.*

**சன்மாந்தரம், சன்மாந்திரம்** - *பிறவி தோறும், மறுமை.*

**சன்மார்க்கம்** - *நல்லொழுக்கம்.*

**சன்மானம்** - *உபசாரம்.*

**சன்மி** - *செனித்தோன்.*

**சன்மித்தல்** - *பிறத்தல்.*

**சன்மினி** - *காளியேவல்செய்வாள்.*

**சன்னகாரை, சன்னக்காறை** - *அரை சாந்திடுதல்.*

**சன்னசம்பா** - *ஓர்சம்பா.*

**சன்னசாலை** - *ஓர்பூடு.*

**சன்னசிலம்புரி** - *ஓர்விதப்புடைவை.*

**சன்னதம்** - *ஆவேசம், மிகுகோபம்.*

**சன்னதி** - *சன்னிதானம்.*

**சன்னத்தம்** - *போர்க்காயத்தம்.*

**சன்னத்தன்** - *போருக்காயத்த மானோன்.*

**சன்னபின்னப்படுத்தல்** - *துண்டு துண்டாய்வெட்டல்.*

**சன்னபின்னம்** - *கண்டதுண்டம்.*

**சன்னம்** - *குறுணி, சிறுமுத்து, சிற்றரும்பு, மென்மை, மறைக்கப் பட்டது.*

**சன்னயம்** - *கூட்டம்.*

**சன்னராட்டகம்** - *சிற்றரத்தை.*

**சன்னல்பின்னல்** - *கொடிமுதலிய வொன்றொடொன்றுநெருங்கிப் பின்னியிருத்தல்.*

**சன்னவாளப்பூச்சோலை** - *ஓர்சீலை.*

**சன்னவாளம்** - *ஓர்தேயம்.*

**சன்னவீரம்** - *வென்றிமாலை.*

**சன்னவோரா** - *ஓர்மீன்.*

**சன்னாகம்** - *போர்க்கவசம்.*

**சன்னாசம்** - *சன்னியாசம்.*

**சன்னாசி** - *துறவி.*

**சன்னி** - *சீதநோய்.*

**சன்னிகணாயன்** - *ஓர்பூடு.*

**சன்னிகுன்மம்** - *ஓர்நோய்.*

**சன்னிக்கட்டு** - *சன்னிதோஷக்கட்டு.*

**சன்னிதானம், சன்னிதி** - *சமுகம்.*

**சன்னிநரம்பு** - *காலிற்பெரு விரலிற் றொட்ட நரம்பு.*

**சன்னிநாயகம்** - *ஓர் தும்பை.*

**சன்னிபம்** - *உவமையுருபு.*

**சன்னிபாதம்** - *இறங்குதல், ஓர்நோய், கலப்பு, கூட்டம், கூத்தினோர் விகற்பம்.*

**சந்நியம்** - *கடைவீதி, பிறந்தஇயல்பு, போர், மரமஞ்சள்.*

**சன்னியன்** - *தோழன், பிதா.*

**சந்நியாசமுத்திரை** - *தண்டு, கமண் டலம் முதலியபஞ்ச முத்திரை.*

**சந்நியாசம்** - *துறவு, அஃது நால்வகை யாச்சிரமத்தொன்று.*

**சந்நியாசி** - *முற்றத்துறந்தோன்.*

**சன்னியை** - *தோழி, மாதா.*

**சந்நிரோதனம்** - *தடை.*

**சந்நிவேசம்** - *வெளிநிலம்.*

**சன்னிவாதசுரம்** - *ஓர்நோய்.*

**சன்னை** - *சரசம்.*

**சன்னைகாட்டுதல், சன்னை பண்ணுதல்** - *சரசம்பண்ணுதல்.*

## சா

**சா** - *ஓரெழுத்து, சாவென்னேவல், பேய்.*

**சாககம்** - *படுக்கை, பூனை.*

**சாகங்காரம்** - *பெருமை.*

**சாகசம்** - *ஓர்பட்சி, கொடுமை, திடன், பகை, மெய்ம்மை, யானை, வலோர்க்காரம், வீரம்.*

**சாகசரியம்** - *தோழமை.*

**சாகச்சூம்பி, சாகச்சோம்பி** - *மெலி வானவன்.*

**சாசதம்** - *சாகசம்.*

**சாகமனம்** - *உடன்கட்டையேறுதல்.*

**சாகம்** - *ஆடு, இலைச்சாறு, கீரை, சத்ததீவினொன்று, சிறுகீரை, தேக்கமரம், தேனீ, வெள்ளாட்டுக் கடா, தாழை.*

**சாகயகம்** - *தோழமை.*

**சாகரணம்** - *விழிப்பு.*

**சாகரநேமி** - *பூமி.*

**சாகரப்பிரவை** - *ஏழ்நரகவட்டத் தொன்று, அஃது துயிலாமை.*

**சாகரமேகலை** - *பூமி.*

**சாகரம்** - *கடல், பதினாயிரங்கோடி, கோடாகோடி, விழிப்பு.*

**சாகராம்பரை** - *பூமி.*

**சாகரி** - *ஓர்பண்.*

**சாகல்லியம்** - *சகலம்.*

**சாகவில்வம்** - *சேம்பு.*

**சாகாங்கம்** - *மிளகு.*

**சாகாசிவை** - *விழுது.*

**சாகாடு** - *உரோகணி, பண்டி.*

**சாகாதுண்டம்** - *அகில்.*

**சாகாமருந்து** - ஓர்மூலி, தேவாமுதம்.

**சாகாமிருகம்** - அணில், குரங்கு.

**சாகாமூலி** - சாவாமூலி, சீந்தில்.

**சாகாமை** - அழியாமை.

**சாகி** - மரப்பொது.

**சாகித்தியம்** - கூட்டம், சங்கீத சாத்திரத்தின் படிதவறாதுபாடல்.

**சாகியகிருது** - தோழன்.

**சாகியம்** - கூட்டம்.

**சாகிரகம், சாகிரியம்** - விழித்தல்.

**சாகிரதை** - சாக்கிரதை.

**சாகினி**-சிறுகீரை,சேம்பு, வெள்ளாடு.

**சாகுதல்** - சாதல்.

**சாகுந்தலேயன்** - பாரதன்.

**சாகுலிகர்** - கரையார்.

**சாகுனிகம்** - சகுனசாத்திரம்.

**சாகேதம்** - அயோத்தி.

**சாகை** - இலை, சாதல், தங்குமிடம், பிரிவு, புயம், மரக்கொப்பு, வட்டில், வீடு, வேதநூற்பிரிவு, கஞ்சி, வேதம்.

**சாகைமாமிருகம்** - சாகாமிருகம்.

**சாக்கடை** - சேறு.

**சாக்காடு** - சாவு, பத்தாமவத்தை, அஃது இறந்துபடல்.

**சாக்காட்டுதல்** - சாகிறவர்களைப் பிராமரித்தல்.

**சாக்கி** - சாட்சி.

**சாக்கிடுதல்** - போக்குச்சொல்லுதல்.

**சாக்கியநாயன்** - அறுபத்துமூவரி லொருவன்.

**சாக்கியம்** - கூட்டம், சமணமதம், புத்தமதம்.

**சாக்கியர்** - புத்தர்.

**சாக்கிரதை** - கவனிப்பு, விழிப்பு.

**சாக்கிரத்தானம்** - இலலாடத்தானம்.

**சாக்கிரம்** - ஓரவத்தை, கவனிப்பு, விழிப்பு.

**சாக்கிரிகம்** - வட்டமானது.

**சாக்கிரிகன்** - எண்ணெய்வாணிபன், சூதன், புகழ்ந்துபாடுவோன்.

**சாக்கு** - சாட்டு, பை, பொன்.

**சாக்குமாண்டி, சாக்கும்மாண்டி** - பருத்தவன், விபரீதமற்றவன்.

**சாக்குருவி** - ஆந்தை.

**சாக்குறி** - மரணவடையாளம்.

**சாக்கை** - நிமித்திகன், புரோகிதன்.

**சாங்கம்** - ஒழுங்கு, கரசரணாதி யவயவம், சங்கபாஷாணம், சங்கொலி, சாயல்.

**சாங்கரன்** - தோழன்.

**சாங்கரிகம், சாங்கரியம்** - கலப்பு.

**சாங்காலம்** - மரணகாலம்.

**சாங்கியம்** - ஓர்மதம், சாத்திரம் மூன்றினொன்று, அஃது கபிலர் செய்தநூல்.

**சாங்கியாயநீயம்** - உபநிடதம் முப்பத் திரண்டினொன்று.

**சாங்கியயோகம்** - பிரமமேசீவன் சீவனேபிரமமென்னுமதம்.

**சாங்கிருதம்** - சதங்கை.

**சாங்கு** - ஓர்விதமானஅம்பு.

**சாங்குகௌரி** - புளிநறளை.

**சாங்குசித்தன்** - குருவிடத்துபதேசம் பெறவிரும்புவோன்.

**சாங்குலம்** - நஞ்சு.

**சாங்குலி** - விடவைத்தியம்.

**சாங்குவாதி** - சாங்கியமதக்காரன்.

**சாங்குவாதிகன்** - தற்கசாத்திரி.

**சாங்கோபாங்கம்** - அந்தசந்தம், அவயவங்களுமணியப்பட்டதும், உதவி.

**சாசயந்தகம்** - பல்லி.

**சாசற்புடம்** - பஞ்சதாளத்தொன்று.

**சாசனகரன்** - ஓலைகொண்டு போவோன்.

**சாசனபத்திரம்** - *இராசகட்டளை, பத்திரிகை.*

**சாசனம்** - *அரசனாணை, ஆணை, இறையிறாதவூர், ஒழுங்கு, தண்டனை, தானபத்திரிகை, பத்திரிகை, புலனடக்கல், வலையர்சேரி, உறுதிப்பத்திரம்.*

**சாசி** - *திராய்.*

**சாசிபம்** - *தவளை.*

**சாசுவதம்** - *அசையாநிலை, நிச்சயம், நித்தியம்.*

**சாச்சடங்கு** - *மரணச்சடங்கு.*

**சாச்சரியம்** - *ஆச்சிரியம்.*

**சாச்சா** - *சாரிலோத்திரம்.*

**சாஞ்சலியம்** - *அநித்தியம்.*

**சாஞ்சிதம்** - *மரகதக்குற்றத்தொன்று, அஃது எலுமிச்சையிலை நிறம் அலரிநிறம்.*

**சாடன்** - *நம்பிக்கைத்துரோகி.*

**சாடாத்திரகம்** - *வத்தகு.*

**சாடி** - *ஆண்மயிர், கும்பவிராசி, குற்றஞ்சாட்டுதல், சீலை, தாழி, திப்பிலி, பஸ்மம்.*

**சாடிலி** - *மனிதர்தசைதின்போன்.*

**சாடு** - *சாடென்னேவல், சாதுரியம், பண்டி, புலவர்கூட்டம், மணி முற்றாதசோளம், முகமன் வார்த்தை.*

**சாடுதல்** - *அசைதல், அடித்தல், கடிந்து கொள்ளுதல், கொல்லுதல், சாய்தல், முரிதல், வாருதல்.*

**சாடை** - *கோள், சயிக்கை, சாயல், சாய்வு.*

**சாடைக்காரன்** - *கோட்காரன்.*

**சாட்குண்ணியம்** - *ஆறுகுணங் கூடியது, ஆறுமடங்கு.*

**சாட்குலம்** - *மாமிசவூண்.*

**சாட்குலிகம்** - *முறுக்குப்பணிகாரம்.*

**சாட்கூலி** - *தசையுண்போன்.*

**சாட்சாது** - *சமுகம்,நிலைபெற்றமகிமை.*

**சாட்சாற்காரம்** - *கருவிகரணாதிகட்கெல்லாஞ்சாட்சியாயிருப்பது.*

**சாட்சி** - *அத்தாட்சி, நடந்ததைக் கண்டவர்கள்.*

**சாட்சிவிளக்கம்** - *சாட்சிவிசாரணை.*

**சாட்டம்** - *நூற்றெட்டு.*

**சாட்டாங்கதெண்டன், சாட்டாங்கம், சாஷ்டாங்கம்** - *எட்டங்கம் நிலத்திற்பட வணங்கல், நமஸ்காரம்.*

**சாட்டி** - *சவுக்கு, பயிர்செய்தறுத்த நிலம், மிலாறு.*

**சாட்டித்தரை** - *பயிர்செய்த தரை.*

**சாட்டியம்** - *பொல்லாங்கு, வஞ்சகம், வருத்தம்.*

**சாட்டு** - *சாட்டிவிடுதல், சாட்டென்னேவல், புற்றரை, போக்கு.*

**சாட்டுதல்** - *சாட்டிவிடுதல், சாரப்பண்ணுதல், போக்குச்சொல்லுதல்.*

**சாட்டுவலம்** - *பசும்புற்றரை.*

**சாட்டை** - *ஓர்விதசவுக்கு, ஓர் விதபலகை.*

**சாணகம்** - *சாணாகம்.*

**சாணக்கியம்** - *ஓர்நூல்.*

**சாணங்கி** - *துளசி.*

**சாணம்** - *அம்மிக்கல், சாணகம், சாணைக்கல்.*

**சாணளப்பான்** - *ஓர்புழு.*

**சாணன்** - *கெட்டிக்காரன்.*

**சாணாகமுதலை** - *ஓர்முதலை.*

**சாணாகமூக்கன்** - *ஓர்பாம்பு, ஓர் வண்டு.*

**சாணாகம்** - *சாணி.*

**சாணாக்கி** - *ஓர்பூடு.*

**சாணான்** - *சான்றான்.*

**சாணி** - *சாணாகம், விபூதி.*

**சாணிக்கெண்டை** - *ஓர்மீன்.*

**சாணை** - *அம்மி, சாணைக்கல், சிறு குழந்தைகளுடைய படுக்கைச் சீலை.*

**சாணைக்கல்** - *ஆயுதந்தீட்டுமோர் கருவி, கருந் தண்ணீர்க்கல்.*

**சாணைக்கூறை** - *பெண்ணை விவாகம் பண்ணிக் கொள்ளும் படி சாணையிற் பெண்பிள்ளைக் கிட்ட புடைவை.*

**சாணைச்சீலை** - *குழந்தைகட்கிடும் மெத்தைச் சீலை.*

**சாணைபிடித்தல்** - *சாணைக் கல்லி லாயுதந் தீட்டல்.*

**சாணைப்பனங்கட்டி** - *தட்டையாய் வார்த்தபனங்கட்டி.*

**சாணைப்பிள்ளை** - *நான்கு மாத வயசுக்குட்பட்ட பிள்ளை.*

**சாண்** - *அரைமுழம்.*

**சாண்சீலை** - *கௌபீனம்.*

**சாண்மாதுரன்** - *கந்தன்.*

**சாண்வயிறு** - *கீழ்வயிறு.*

**சாதககட்சி** - *காந்தம்.*

**சாதககிள்ளையோன்** - *காச்சற் பாஷாணம்.*

**சாதககுணசலம்** - *கந்தகம்.*

**சாதகக்கோடு** - *சங்கபாஷாணம்.*

**சாதகசக்கிலி** - *சத்திசாரம்.*

**சாதகசூதகம்** - *பிறவித்தீட்டு.*

**சாதகச்சீர்த்தி** - *சாதகவானத்தி.*

**சாதகதிசை** - *முத்திதிசை.*

**சாதகநீர்ச்சிலை** - *கண்டகிச்சிலை.*

**சாதகபலன்** - *பிறப்பின்படி கிரகங் களாலாகும் பலாபலம்.*

**சாதகபுட்பம்** - *கடனுரை.*

**சாதகப்புள்** - *வானம்பாடி.*

**சாதகம்** - *ஓர்பிரபந்தம், அஃது திதி நிலை முதலிய ஏழ்வகை யுறுப்புக் கணிலையையுஞ் சோதிட நூலா னுணர்ந்து அவற்றால் வருபயன் கூறுவது, காரியசித்தி, சனனம், துணைக்காரணம், பயிற்சி, பிர மாணம், பூதகணம், வானம்பாடி, எருக்கு.*

**சாதகராகத்தி** - *கோழித்தலைக் கந்தகம்.*

**சாதகருமம், சாதகன்மம்** - *பிறந்த போதுசெய்யுமோர் சடங்கு.*

**சாதகர்** - *மெய்காப்பாளர்.*

**சாதகலங்காரம்** - *சாதகவோலை யெழுதும்விபரமறியுமோர் நூல்.*

**சாதகலம்பம்** - *தாலம்பபாஷாணம்.*

**சாதகவன்னி** - *அக்கினிக்கட்டி.*

**சாதகவாதி** - *நாகமணல்.*

**சாதகவானத்தி** - *இரதபாஷாணம்.*

**சாதகவித்தை** - *பயின்று கைவந்த செய்கை.*

**சாதகன்** - *சாதகமுடையோன், சாதிப் போன், யாசகன்.*

**சாதகாசாரியன்** - *குருப்பட்டத்துக்குப் பக்குவவான், துணைக் குரு.*

**சாதகி** - *சாதகக்காரி.*

**சாதகும்பம்** - *பொன்.*

**சாதக்கல்** - *தேகக்கல்.*

**சாதசூத்திரம்** - *வைடூரியம்.*

**சாதம்** - *உண்மை, சந்தோஷம், சுத்தம், சேறு, சோறு, பிறப்பு, பூதம், மேன்மை, இளம்புல்.*

**சாதரூபம்** - *நால்வகைப்பொன்னி னொன்று, பொன்.*

**சாதரூபி** - *அருகன், கந்தகம்.*

**சாதல்** - *இறத்தல்.*

**சாதவண்டு** - *ஓர் வண்டு.*

**சாதவாகனன்** - *அய்யன், சாலி வாகனன்.*

**சாதவேதா** - *நெருப்பு.*

**சாதனசதுட்டயம்** - *இகபரபுத்தி ரார்த்த பரபோகவிராகம், சமா திட்டற்க சம்பத்தி, நித்தியா*

*நித்திய வத்து விவேகம், முமூட்சுத்துவ நான்கும்.*

**சாதனசாத்தியம்** - *காரணகாரியம்.*

**சாதனபத்திரம், சாதனமுறி** - *உரிமைப் பத்திரம், உறுதிப் பத்திரம்.*

**சாதனம்** - *அடையாளம், அழித்தல், ஆண்குறி, இடம், உறுதி, ஊர், ஏது, ஐக்கம், கருவி, கிராமம், சமையாசாரத்தைச் சாதித்தல், சாச்சடங்கு, சாத்தியப் பொருளையுறுதிப் படுத்துமத் தாட்சி, சித்தியாதல், செல்வம், சேனை, தகுதி, பதார்த்தம், பஸ்மமாக்கல், பயிற்சி, முயற்சி, மெலிவு, வீடு.*

**சாதனம் பண்ணுதல்** - *அப்பியாசித்தல், உறுதிமுடித்தல்.*

**சாதனன்** - *பிறந்தவன்.*

**சாதனாந்தரம்** - *துணையுறுதி.*

**சாதனை** - *சலஞ்சாதித்தல், பயிற்சி, பொய்.*

**சாதா** - *பருமட்டுவேலை.*

**சாதாக்கியம்** - *சிவதத்துவமைந்தினொன்று, அஃது ஞானமுங்கிரியையு மொத்தது.*

**சாதாபத்தியை** - *மாதா.*

**சாதாரண** - *ஓராண்டு.*

**சாதாரணம்** - *இலேசு, பழக்கம், பொது, பொதுமுறை.*

**சாதாரண்ணியம்** - *எங்கும்.*

**சாதாரி** - *ஓர்பண், முல்லைநிலத்திராகம்.*

**சாதாவேலி** - *சதாவேரி.*

**சாதாழை** - *கடற்பயிரினொன்று.*

**சாதாழைநிம்பம்** - *எருக்கிலை.*

**சாதான்மம்** - *தருமநூல் பதினெட்டினொன்று.*

**சாதி** - *ஆடாதோடை, உயர்வானது, கள், குலம், சாதிமரம், சாதியென்னேவல், சிறுசண்பகம், சீந்தில், தாளப்பிரமாணம் பத்தினொன்று, தேக்கமரம், தேர்ப்பாகன், பிரம்பு, பிறப்பு, மரப்பொது, யுத்தவீரன்.*

**சாதிகம்** - *சாதியின்றன்மை.*

**சாதிகோசம்** - *சாதிக்காய்.*

**சாதிகை** - *சாமாத்தியம்.*

**சாதிக்கட்டு** - *சாதியாசாரம், சாதியினொருமிப்பு.*

**சாதிக்கலப்பு** - *பலகுலங்கலந்திருத்தல்.*

**சாதிக்காய்** - *ஓர்சரக்கு, அஃது பஞ்சவாசத்தொன்று.*

**சாதிக்காரை** - *தகுதி.*

**சாதிக்குறைவிசேடம்** - *குலவிழிபானுயர்வு தோன்றக்கூறுவது, (உம்) ஆயனாய் வாழ்மாயனாயோதனம் வென்றான்றூயபுரந்தரனோ தோற்றாளும்.*

**சாதிசம்** - *நறும்பிசின்.*

**சாதிசாங்கரியம்** - *சாதிக்கலப்பு.*

**சாதிட்டம்** - *மிகநீளம்.*

**சாதிதம்** - *மறைக்கப்பட்டது.*

**சாதித்தருமம்** - *குலதருமம்.*

**சாதித்தலைமை** - *வமிசத்தலைமை, மேன்மை.*

**சாதித்தலைவன்** - *சாதியாரெல்லார்க்கு முதலீடா யிருப்பவன், மேன்மையுள்ளவன்.*

**சாதித்தல்** - *அழுத்தல், எண்ணெய் முதலியன தேய்த்தல், சலஞ்சாதித்தல், பழகல், வெல்லுதல்.*

**சாதித்தன்மை** - *தன்மையலங்காரக் குறியினொன்று, அஃது சாதிப் பொதுவியல்பு.*

**சாதிபத்திரி** - *வசுவாசி.*

**சாதிப்பதங்கம்** - *சாதிலிங்கம்.*

**சாதிப்பாய்** - *பிரப்பம்பாய்.*

**சாதிப்பிரஞ்சகரம்** - *ஈனசாதிப் புணர்ச்சி, குலாசாரந்தவறுதல்.*

**சாதிப்பிரஞ்சம்** - *குலாசாரத்தவறு.*

**சாதிப்பு** - *சாதித்தல்.*

**சாதிப்பூ** - *ஓர்சரக்கு.*

**சாதிமல்லிகை** - *ஓர்மல்லிகை.*

**சாதிமானம்** - *குலமொத்திருத்தல்.*

**சாதிமான்** - *நற்குலத்தோன்.*

**சாதியாசாரம்** - *சாதியொழுக்கம்.*

**சாதியுவமம்** - *சாதியாலுவமிப்பது. (உம்) கரணம்போலுமான்மா.*

**சாதிரம்** - *விட்டுணுகரந்தை.*

**சாதிரேகம்** - *குங்குமப்பூ.*

**சாதிலிங்கம்** - *ஓர்சரக்கு.*

**சாதினி** - *கம்பளி, பீர்க்கு.*

**சாதீகம், சாதீயம்** - *சாதிக்கடுத்தது.*

**சாது** - *அருகன், சற்குணத்தோன், சற்குணம், தயிர், பதமை, மேன்மை.*

**சாதுகம்** - *பெருங்காயம்.*

**சாதுசங்கம்** - *சற்சனரின் கூட்டம்.*

**சாதுதி** - *மாமி.*

**சாதுத்துவம்** - *மேலானதன்மை.*

**சாதுரங்கம்** - *சதுரங்கம்.*

**சாதுரம்** - *இரதம்.*

**சாதுரன்** - *சூதன், விவேகி.*

**சாதுரிகன்** - *சூதன்.*

**சாதுரியம்** - *கண்டுங்காணாமையுமாயிருத்தல், சாமாத்தியம், நாகரீகம்.*

**சாதுருசியம்** - *ஒப்புமை.*

**சாதூரியம்** - *நாகரீகம், வாசாலகம்.*

**சாதுருமாசியம்** - *யாகமிருபத்தொன்றினொன்று.*

**சாதுர்ப்பாகம்** - *நாலத்தொன்று.*

**சாதேட்டி** - *சனனச்சடங்கினொன்று.*

**சாதேவம்** - *குழிநாவல், சிறுநாவல்.*

**சாதேவன்** - *பஞ்சபாண்டவரிலொருவன்.*

**சாத்தல்** - *அப்புதல், ஆடையணி மாலை முதலியன சாத்தல்.*

**சாத்தவர்** - *குதிரைவீரர்.*

**சாத்தன்** - *அருகன், ஐயன், தண்டிப் போன், தெரிவிக்கிறவன், வயிரவன், புத்தன்.*

**சாத்தாவாரி** - *நீர்மீட்டான்.*

**சாத்திகம்** - *அனுகூலப்படத்தக்கது, சாத்துவிகம், சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.*

**சாத்தியதேவர்** - *வியாசர்.*

**சாத்தியந்தன்** - *பிறவிக்குருடன்.*

**சாத்தியம்** - *சாதிக்கத்தக்கது, சாதனத்தாலுறுதிப்பட்டது, நித்தியயோகத்தொன்று, பூரணம், உண்மை.*

**சாத்தியரோகம்** - *மாற்றத்தக்கவியாதி.*

**சாத்தியவதேயன்** - *ஓரிருடி.*

**சாத்தியன்** - *ஒத்தகுலத்திற் பிறந்தோன்.*

**சாத்திரகாரர்** - *சோதிடர்.*

**சாத்திரசக்கு** - *இலக்கணம்.*

**சாத்திரசித்தம்** - *நூற்கருத்து.*

**சாத்திரதீட்சை** - *ஞானசாத்திரம் போதித்துவிளக்கல்.*

**சாத்திரபேதி** - *ஓர்பூடு.*

**சாத்திரப்பிரசங்கம்** - *வேதப்பொருள்.*

**சாத்திரம்** - *ஒழுங்கு, கட்டளை, கல்வி நூல், சோதிடம், புத்தகம், வேதம்.*

**சாத்திரம் பார்த்தல்** - *குறிபார்த்தல், சோதிட நூலானன்மை தீமை பார்த்தல்.*

**சாத்திரவதேயன்** - *வியாசன்.*

**சாத்திரவேரி** - *நீர்விட்டான்.*

**சாத்திராசரணன்** - *பண்டிதன்.*

**சாத்திரி** - *கணிதன், நிமித்தகாரன், வேத நூன் முதலியன வோது விட்போன்.*

**சாத்திரை** - *ஓர்திருவிழா.*

**சாத்தீகம்** - *சாத்துவிகம்.*

**சாத்து** - *அடி, அணிகை, அப்புகை, சாத்தென்னேவல்.*

**சாத்துக்கவி** - *ஒருவர்செய்யும் பாவி கையைப் பார்த்துப்பாடுவோன்.*

**சாத்துதல்** - *அடித்தல், அணிதல், அப்புதல், சார்த்துதல், மூடுதல்.*

**சாத்துநாற்று** - *நடுந்நாற்று.*

**சாத்துப்படி** - *மாலைமுதலிய சாத்தி யலங்கரித்தல்.*

**சாத்துப்பெட்டி** - *சார்த்துப்பெட்டி.*

**சாத்துவசம்** - *பயம்.*

**சரத்துவாலம்** - *யாககுண்டம்.*

**சாத்துவிகம்** - *முக்குணத்தொன்று, அஃது அருள்,ஐம்பொறி யடக்கல், ஞானம், தவம், பொறை மேன்மை, மோனம், வாய்மை என்னு மெண் குணம்.*

**சாத்துவிகன்** - *பிரமா.*

**சாநித்தியம்** - *சமுகம்.*

**சாந்தகப்பை** - *ஓர்கருவி.*

**சாந்தகம், சாந்தகைமை** - *மெத்தெனவு.*

**சாந்தபனம்** - *ஓர்விரதம்.*

**சாந்தமுகம்** - *தண்ணெனவானமுகம்.*

**சாந்தம்** - *அமைதி, கலவை, குளிர்ச்சி, சந்தனம், சாணி, தண்ணெனவு, நவரசத்தினொன்று, அஃது பொறுமை, தயவு.*

**சாந்தரூபம்** - *தண்ணெனவான காட்சி, தண்ணெனவான கோலம்.*

**சாந்தலிங்கதேசிகன்** - *வயிராக்கிய சதகஞ்செய்தோன்.*

**சாந்தவம்** - *மலைப்பக்கம்.*

**சாந்தவாரி** - *நீர்விட்டான்.*

**சாந்தனிகம்** - *சந்தனக்கலவை.*

**சாந்தனு** - *சந்தனு.*

**சாந்தனையும்** - *சாமளவும்.*

**சாந்தன்** - *அருகன், சந்திரன், தண்ணெனவானவன், புத்தன், பிரகிருதியைச் சுட்டவன்.*

**சாந்தாற்றி** - *கால்செய்வட்டம், சிற்றாலவட்டம், பீலிக்குஞ்சம்.*

**சாந்தானிகபிச்சை** - *பெரியோர் பரம்பரையாயனுபவிக்கும் படி கொடுக்கப்பட்டன.*

**சாந்தி** - *ஆற்றுதல், கழிப்பு, சாந்தம், தணிவு, தோஷநிவாரணம்.*

**சாந்திகலை** - *பஞ்சகலையினொன்று.*

**சாந்தியாதீதகலை** - *பஞ்சகலையி னொன்று.*

**சாந்திரகம்** - *இஞ்சி.*

**சாந்திரமாதம்** - *சந்திரன் சுற்றிவருவதி னாலுண்டானமாதம்.*

**சாந்திரமானம்** - *சாந்திரமாதங்களால் வரும்வருடம்.*

**சாந்திரம்** - *சந்திரகாந்தம், சுக்கில பக்கம், நெருக்கம், மிகுதி, மிருது.*

**சாந்திராண்டு** - *சாந்திரமானம்.*

**சாந்திராயணம்** - *ஓர்விரதம்.*

**சாந்திராயனம்** - *சந்திரன் வீதி.*

**சாந்திவிருத்தி** - *சாத்துவிகவிருத்தி.*

**சாந்து** - *கலவைச்சாந்து, சந்தனம், சாந்தகுணம், சுண்ணச்சாந்து, பராகம், வாசனைத்தூள்.*

**சாந்துக்காறை** - *சுண்ணத்தளம்.*

**சாந்துருவம்** - *சுண்ணச்சீலை.*

**சாந்துப்பொடி** - *வாசனைத்தூள்.*

**சாந்துவாரி** - *சுத்திசெய்பவன், பீவாரி.*

**சாந்தை** - *கங்கை, பூமி.*

**சாந்தோக்கியம்** - *உபநிடதத்தொன்று.*

**சாபத்திரி** - *சாதிபத்திரி.*

**சாபத்தீடு** - *சாபம்.*

**சாபம்** - *சபிப்பு, தனுவிராசி, வட்டத் திற்பாதி, வில்.*

**சாபலம், சாபலாச்சிரயம்** - *அநித்தியம், சாபங்கொண்டு பெற்றபலம், இஃது கணிதமுறையினொன்று.*

**சாபலன்** - *ஆட்டுவாணிபன்.*

**சாபல்லியம்** - *அநித்தியம், அனுகூலம், பேறு.*

**சாபறை** - *நெய்தனிலப்பறை, பிணப்பறை.*

**சாபாலி** - *ஓர்முனி.*

**சாபிணம்** - *அறக்கிழடு.*

**சாபித்தல்** - *சபித்தல்.*

**சாபிள்ளை** - *செத்துப்பிறக்கும் பிள்ளை, பிறந்தவுடன் சாகும் பிள்ளை.*

**சாபினை** - *சபிப்பு.*

**சாபேட்சை** - *தீராதவாஞ்சை.*

**சாப்படுதல்** - *உண்ணல், பருகல்.*

**சாப்பாடு** - *உணவு.*

**சாப்பை** - *சப்பை, சாட்டை, புற்பாய்.*

**சாப்பைச்சொண்டன்** - *ஓர்நாரை.*

**சாமகம்** - *சாணைக்கல்.*

**சாமகானம்** - *சாமவேதகீதம்.*

**சாமகானன்** - *சிவன்.*

**சாமக்காவல்** - *சாமந்தோறும் மாறிக் காத்தல்.*

**சாமக்கிரிகை** - *தளபாடம்.*

**சாமணம்** - *சாவணம்.*

**சாமத்தியம்** - *சாமர்த்தியம்.*

**சாமத்துரோகி** - *குரூரன், மிகுபாதகன்.*

**சாமந்தம்** - *அயல், ஓர்பண்.*

**சாமந்தர்** - *அமைச்சர், தானைத் தலைவர்.*

**சாமந்தி** - *ஓர்பூமரம்.*

**சாமம்** - *இரா, ஓருபாயம், கருமை, சமாதானம், பச்சை, பஞ்சம், பாதியிரா, மரணம், மூன்றாம் வேதம், யாமம், பலவீனம்.*

**சாமயோனி** - *பிரமன்.*

**சாமரபுட்பம்** - *கமுகு, மாமரம்.*

**சாமரம், சாமரை** - *கவரி, இஃது அட்ட மங்கலத்துமொன்று.*

**சாமரி** - *குதிரை.*

**சாமரீகரம்** - *பொன்.*

**சாமர்த்தியம்** - *இருது, சாமாத்தியம்.*

**சாமளம்** - *பச்சை.*

**சாமளாதேவி, சாமளை** - *ஓர்தேவதை.*

**சாமன்** - *காமன்றம்பி, புதன்.*

**சாமாசி, சாமாஞ்சி** - *யோசனை.*

**சாமாத்தியம்** - *சமத்து.*

**சாமானியசங்கமம்** - *சிற்றின்ப நிவாரணம்.*

**சாமானியசுபாபம்** - *பொதுச்சுபாபம்.*

**சாமானியம்** - *பொது.*

**சாமான்** - *சரக்கு, தளபாடம்.*

**சாமி** - *அருகன், கடவுள், கந்தன், கற்புடையாள், குரு, தலைவன், தலைவி, தாய், பொன், மூத்தோன், கடந்தஞானி.*

**சாமிநாதன்** - *சுவாமிநாதன்.*

**சாமியம்** - *போசனம், ஒப்புமை.*

**சாமியன்** - *பிறர்கடனுக்கீடு நின்றோன்.*

**சாமீகரம்** - *பொன்.*

**சாமீபம், சாமீப்பியம்** - *ஓர்பதவி, அஃது கடவுளது சமீபத்திருத்தல்.*

**சாமுகுர்த்தம்** - *அசுபமுகுர்த்தம்.*

**சாமுண்டி** - *காளி, துற்கை.*

**சாமுத்திரிகம், சாமுத்திரிகலெட்சணம்** - *அங்கலட்சணம், ஓர் நூல்.*

**சாமேளம்** - *சாபறை.*

**சாமை** - *ஓர்பயிர், கற்சேம்பு.*

**சாமோபாயம்** - *நான்குபாயத்தி னொன்று, அஃது இணக்குமு பாயம்.*

**சாம்பம்** - *யானைநெருஞ்சில்.*

**சாம்பர்** - *சாம்பல்.*

**சாம்பலச்சி** - *எவட்சாரம்.*

**சாம்பல்** - *ஒடுங்கல், சாம்பர், பழம்பூ.*

**சாம்பலமொந்தன்** - *ஓர்வாழை.*

**சாம்பலொட்டி** - *எருக்கு.*

**சாம்பவம்** - *அட்டாதசவுப புராணத் தொன்று, சம்புநாவல், பொன்.*

**சாம்பவன்** - *இராமன் படைத்தலைவரிலொருவன், சிவன்.*

**சாம்பவி** - *பார்வதி, பெருநாவல்.*

**சாம்பவிவிந்து** - *கௌரிபாஷாணம்.*

**சாம்பற்பூசணி** - *நீற்றுப்பூசணி.*

**சாம்பனாரை** - *ஓர்நாரை.*

**சாம்பாத்தி** - *பறைச்சி.*

**சாம்பான்** - *பறையன்.*

**சாம்பி** - *கப்பியல்.*

**சாம்பிராச்சியம்** - *ஆளுகை, சக்கிரவத்தித்தன்மை, தத்துவம், பாக்கியம், மேன்மை.*

**சாம்பிராச்சியலட்சுமி** - *பாக்கிய லட்சுமி.*

**சாம்பிராணி** - *ஓர்வாசனைப் பண்டம், ஓர்மரம்.*

**சாம்பிராணித்தயிலம்** - *ஓர்வாசனைத் தயிலம்.*

**சாம்பிராணிப்பட்டயம்** - *எழுதிக் கொடுத்த பத்திரம்.*

**சாம்பிராணிப்பதங்கம்** - *ஓர் மருந்து.*

**சாம்பு** - *சாம்பென்னேவல், பறைச்சாதி, புடைவை.*

**சாம்புசண்பகம்** - *நாவற்பூ.*

**சாம்புதல்** - *இழுத்தல், ஒடுங்குதல், கூம்புதல், அடித்தல்.*

**சாம்புவன்** - *சுடலைகாப்பவன்.*

**சாம்பூனதம்** - *நால்வகைப்பொன்னினொன்று, பொன்.*

**சாம்வத்தம்** - *சமவத்தம்.*

**சாயகம்** - *அம்பு, வாள்.*

**சாயக்காரர்** - *வன்னக்காரர்.*

**சாயங்காலம், சாயந்திரம்** - *அந்திப் பொழுது.*

**சாயசாந்தி** - *அந்தியேட்டி.*

**சாயந்தீருதல்** - *வன்னமிடுதல்.*

**சாயப்பணி** - *செஞ்சாயம் போடுதல், சாயவேலை.*

**சாயம்** - *அந்திநேரம், அம்பு, நிறம்.*

**சாயரட்சை** - *அந்தி.*

**சாயரி** - *ஓர்பண்.*

**சாயல்** - *அழகு, ஒப்பு, சாய்தல், நிறம், நுண்மை, மக்கட்படுக்கை, மஞ்சள், மாதிரி, மேன்மை.*

**சாயவிடுதல்** - *மரக்கலத்தைக் கரைக் கடுக்கவிடுதல்.*

**சாயவேர்** - *ஓர்பூண்டு.*

**சாயவேளாகொல்லி** - *கொல்லித் திறத்தினொன்று.*

**சாயனதம்** - *சாயானதம்.*

**சாயனம்** - *கள்.*

**சாயாகவுளம்** - *ஓரிசை.*

**சாயாக்கிரகம்** - *இராகு, கேது.*

**சாயாதேவி** - *சூரியன் மனைவிகளிலொருத்தி.*

**சாயாத்துவம்** - *நல்லில்லாட்குரிய குணம்.*

**சாயாபதி** - *சூரியன்.*

**சாயாபுத்திரன்** - *சனி.*

**சாயானதம்** - *ஓந்தி.*

**சாயித்தியம்** - *சேர்மானம், புலமை.*

**சாயுச்சியகாரர்** - *இலிங்கதாரிகள்.*

**சாயுச்சியம்** - *ஒன்றிப்பு, ஓர்பதவி, அஃது கடவுளோடயிக்கப் பட்டிருத்தல், கலத்தல், மோக்கம்.*

**சாயை** - *சாயாதேவி, நிழல், நிறம், மனைவி.*

**சாய்** - *ஓர்வகைக்கோரை, சாயென்னேவல்.*

**சாய்கை** - *பன்னகசாலை.*

**சாய்தல்** - *அசைதல், அழிதல், இரிதல், சரிதல், திரும்புதல், நுண்மை, இறத்தல்.*

**சாய்த்தல்** - *அசைத்தல், சரித்தல், திருப்புதல்.*

**சாய்ப்பு** - *சரிப்பு, சார்மானம், தாழ்வாரம், தாழ்வு, நடத்தல், பத்தி, வெற்றிலை.*

**சாய்மானம்** - ஒப்பாசாரம், சாருதற்கிடுமணை, சார்வு.

**சாய்வு** - சரிவு, பக்கம்.

**சாரகந்தம்** - சந்தனம்.

**சாரகம்** - தேன்.

**சாரகன்** - குதிரைப்பாகன், தோழன்.

**சாரங்கபாணி** - விட்டுணு.

**சாரங்கம்** - ஆபரணம், இரா, இராகம் முப்பத்திரண்டினொன்று, ஓரிசை, கருப்பூரம், குயில், சங்கு, சாதகப்புள், சிங்கம், சிறுகுறிஞ்சா, புடைவை, பூமி, மயில், மான், மேகம், யானை, வண்டு, விட்டுணுவின் வில்லு, வெளிச்சம்.

**சாரங்கன்** - விட்டுணு.

**சாரங்கி** - ஓர்யாழ்.

**சாரசம்** - குருகு, தாமரை, மாதரிடையணி, வெண்ணாரை.

**சாரசனம்** - மாதரிடையணியினொன்று.

**சாரசன், சாரசாதன்** - சோரபுத்திரன்.

**சாரசி** - இலக்குமி.

**சாரசியம்** - விற்பன்னம்.

**சாரசுவதம்** - சாதுரியம், பஞ்சகௌடத்தொன்று.

**சாரணத்தி** - சாரணை.

**சாரணம்** - உலகங்களைப் பஸ்மமாக்குதல், போதல்.

**சாரணர்** - ஒற்றர், அவர் அரசர்க்குப் பஞ்சகுழுவிலொருவர், கூத்தாடி, சமண்முனிவர், புலவர்.

**சாரணை** - ஓர்பூடு, பிடாலவணம்.

**சாரதம்** - இனியபண், ஓர்பூடு, ஓர்வகைப்பாட்டு, அஃது அடி களினிறுதி ஒரே தொடையாகவுங் கடைக் கட்டனிச் சொல்லாய்ச் செயாரதமென முடிவ து, பூதம்.

**சாரதன்** - சாரதி.

**சாரதி** - தேர்ப்பாகன், புலவன், விட்டுணு.

**சாரதிகம்** - ஓர்சாச்சடங்கு.

**சாரதீயம்** - கூதிர்காலம்.

**சாரதை** - ஓர்வீணை, சரச்சுவதி, துற்கை.

**சாரத்தியம்** - தேர்முதலிய செலுத்துந் தொழில்.

**சாரஸ்திரி** - வேசி.

**சாரத்தின், சத்துரு** - முட்டை.

**சாரத்துவம்** - விபசாரம்.

**சாரபதம்** - முச்சந்தி.

**சாரபூமி** - நன்னிலம்.

**சாரப்பருப்பு** - காட்டுமாவிரை.

**சாரமிறக்குதல்** - சாரம்வடித்தல்.

**சாரமேயன்** - நாய்.

**சாரம்** - இலுப்பை, இனிமை, உருக்கு, ஏதண்டை, சத்து, நடை, நிலாமுக்கிப்புள், பாலாடை, புடைவையமுக்ககற்றுங்காரம், மரவயிரம், முந்திரிகை, மேடு, விபசாரம்.

**சாரர்** - ஒற்றர், நட்பாளர்.

**சாரலம்** - எள்.

**சாரவி** - ஓர்நெல்.

**சாரல்** - கிட்டல், குளிர்காற்று, சாருதல், மருதயாழிசை, மலைப்பக்கம்.

**சாரவறுதி** - இலேசு.

**சாரவாக்கியம்** - கிரகமானம்.

**சாரன்** - விபசாரன்.

**சாராசாரி** - கூட்டமாய்ப்போதல்.

**சாராயப்பாவாலை** - சாராயப்பானை.

**சாராயம்** - அரக்கு, மது.

**சாரி** - அஞ்சனபாஷாணம், உலாப்போதல், சூதாடுகருவி, சூறைக்காற்று, யானை மேற்றவிசு, அரசர்க்குச் செங்கோல் செல்லல், பரதவுறுப்புளொன்று.

**சாரிகை** - கடமை, கவசம், சுங்கம், சுழல்காற்று, சூதாடுகருவி, நாகண

*வாய்ப்புள், யாழ்வாசிக்குங் கருவி, வட்டமாயோடல்.*

**சாரிசம்** - *கறியுப்பு.*

**சாரிசாதன்** - *கத்தூரிமிருகம்.*

**சாரிசிருங்கலை** - *சூதாடுகருவி.*

**சாரிசெய்தல்** - *இழந்த உத்தியோகத் தைத்திரும்பக்கொடுத்தல், தீர்த் தல், முறையிடுதல்.*

**சாரிதம், சாரீரம்** - *ஒழுக்கம்.*

**சாரித்திரம்** - *ஒழுக்கம், கதை, வரலாறு.*

**சாரிபம்** - *நன்னாரி.*

**சாரியம்** - *எட்டி.*

**சாரியல்** - *இந்துப்பு.*

**சாரியை** - *சார்ந்துவருமிடைச்சொல்.*

**சாரிரத்தை** - *எட்டி.*

**சாரீரம்** - *ஆன்மா, இன்னிசை, மலம்.*

**சாரீரிகம்** - *சரீரம்.*

**சாரு** - *அழகு, கிள்ளை.*

**சாருகம்** - *கொலை.*

**சாருகன்** - *கொலைசெய்வோன்.*

**சாருசம்** - *கல்லுப்பு.*

**சாருதல்** - *அடுத்துக்கொள்ளுதல், சாய்தல்.*

**சாருலோசனம்** - *மான்.*

**சாருவபூமம்** - *சார்வபூமம்.*

**சாருவாகம்** - *உலசாயிதமதத்தினோர் பேதம்.*

**சாரூபம்** - *கண்டுசாய்ப்பு, சாயல், நாலுபதவியினொன்று, அஃது கடவுளதுருப்பெற்றிருக்குதல், பொன்.*

**சாரூப்பியம்** - *இசைதல், ஒரே தன்மை, சாதுரியம், சாரூபம்.*

**சாரூரகம்** - *கல்லுப்பு.*

**சாரை** - *ஓர்பாம்பு.*

**சாரையோட்டம்** - *நேரோட்டம்.*

**சாரைவாலன்** - *நீண்டவாலெருது, புகைமரத்திலோரினம்.*

**சாரோசி** - *நவட்சாரம்.*

**சார்** - *அழகு, இடம், இளமோலை, கடலுண்மேடு, சாரென்னேவல், தட்டி, திண்ணை, பகுதி, பக்கம்.*

**சார்கேசபுஞ்சம்** - *இலவம்பிசின்.*

**சார்க்ககம்** - *கற்கண்டு, பாலாடை.*

**சார்ங்கம்** - *சாரங்கம்.*

**சார்ச்சி, சார்தல்** - *அடைதல், கலத்தல், கிட்டல், கூடுதல், சாருதல், பட்ச பாதமாயிருத்தல்.*

**சார்த்தவகன்** - *வியாபாரி.*

**சார்த்துதல்** - *கதவுமுதலியனவற்றை யணைத்தல், சாரச்செய்தல்.*

**சார்த்துப்பெட்டி** - *அரிப்பெட்டியின் கீழ்ப்பெட்டி.*

**சார்த்தூலம்** - *ஓர்பட்சி, ஓர்பண், புலி.*

**சார்ந்தார், சார்ந்தோர்** - *உறவோர், சினேகிதர்.*

**சார்பறுத்தல்** - *துறவு.*

**சார்பிலார்** - *பகைவர், முனிவர்.*

**சார்பு** - *அடைக்கலம், அணைவு, இடம், உதவி, கடவுள், குணம், சேர்பு, தன்மை.*

**சார்புநூல்** - *முதநூல்வழி நூல்களது பொருட் கூட்டித் திரிபு வேறு டைய நூல்.*

**சார்பெழுத்து** - *சார்ந்துவருமெழுத்து.*

**சார்மனை** - *சாருகிறதற்கிடுமணை.*

**சார்மானம்** - *சார்பு.*

**சார்வகாலம்** - *எப்போழ்தும்.*

**சார்வபூமம், சார்வபௌமம்** - *வடதிசை யானை.*

**சார்வபூமன், சார்வபௌமன்** - *ஒரு வனைப்பணியாதுலகாள்வோன்.*

**சார்வரி** - *ஓராண்டு.*

**சார்வாகம்** - *புறச்சமயமாறி னொன்று.*

**சார்வாய்** - *அறுத்தவித்தனங்காய்.*

**சார்வாரம்** - *கச்சின்கடைக்கயிறு, முன்றானை.*

**சார்வு** - *ஆசைப்பெருக்கம், இளமோலை, சார்பு.*

**சால** - *மிகுதி.*

**சாலகடங்கடர்** - *இராக்கதர்.*

**சாலகம்** - *அதலலோகம், இளம் பூவரும்பு, கூட்டம், சலதாரை, பலகணி, பறவைக்கூடு, பெருமை, வலை.*

**சாலகன்** - *விரிவாய்ப் பேசுகிறவன்.*

**சாலகாரகன்** - *சிலம்பி, வலைசெய்வோன்.*

**சாலகிரி** - *அழுக்ககற்றுமிடம்.*

**சாலக்காரன்** - *மாயவித்தைக்காரன்.*

**சாலக்கிராமம்** - *ஒரூர், ஓர்வகைச் சிலை.*

**சாலசாரம்** - *ஓர்மரம், பெருங்காயம்.*

**சாலடிமேடு** - *உழவிடைப்பிட்டி.*

**சாலபஞ்சி** - *சித்திரப்பாவை.*

**சாலபஞ்சிகை** - *பாவை, வேசி.*

**சாலப்பிராயம்** - *போர்க்கவசம்.*

**சாலமாலம்** - *கண்டுசாய்ப்பு, மாயம்.*

**சாலம்** - *அரண், ஆச்சாமரம், இளம் பூவரும்பு, எசுர்வேதம், கடம்பு, கூட்டம், சவை, செடி, தாழ்வாரம், பலகணி, பெருமை, மரப்பொது, மாயவித்தை, வலை, விகற்பம், விலங்கின் கூட்டம், வலைபோன்ற தோரணம்.*

**சாலம்பம்** - *ஓர்மரம்.*

**சாலரி** - *ஓர்வாத்தியம்.*

**சாலர்** - *நெய்தனிலமாக்கள்.*

**சாலல்** - *மிகுதியாயிருத்தல், மேன்மையுடைத்தாதல்.*

**சாலவகன்** - *திருமால்.*

**சாலவம்** - *தேயமன்பத்தாறி னொன்று.*

**சாலன்** - *சாலிவாகனன்.*

**சாலாங்கபாஷாணம்** - *ஓர் மருந்து.*

**சாலாங்கி** - *பாவை.*

**சாலாரம்** - *ஏணி, படி, பறவைக்கூடு.*

**சாலாவிரகம்** - *குரங்கு.*

**சாலி** - *அருந்ததி, கவசம், கள், நாவி, மிக்கோன்.*

**சாலிகர்** - *நெய்வோர்.*

**சாலிகை** - *கவசம்.*

**சாலிகோத்திரம்** - *குதிரை.*

**சாலிச்சி** - *சாலியப்பெண்.*

**சாலியர்** - *சாலிகர்.*

**சாலிவாகனன்** - *ஓரரசன்.*

**சாலினி** - *கள்வாணிச்சி, தேவராட்டி, பீர்க்கு.*

**சாலினிகரணம்** - *நிந்தை.*

**சாலீனத்துவம்** - *மரியாதை.*

**சாலுகம், சாலூகம்** - *சாதிக்காய், தாமரைக்கிழங்கு.*

**சாலூரம்** - *தவளை, மேன்மை.*

**சாலேகம்**-*சந்தனம்,சிந்தூரம், பலகணி, பூவரும்பு.*

**சாலேயம்** - *கம்பளப் புடைவை, நெல்விளை நிலம்.*

**சாலை** - *அரசன்மனை, அறத்தின் சாலை, அறை, இருமருங்கும் விருட்சங்கள் செறிந்த பாறை, குதிரைப்பந்தி, வெளிமண்டபம்.*

**சாலோகம், சாலோக்கியம்** - *ஓர்பதவி, அஃது கடவுள துலகத்திருத்தல்.*

**சால்** - *சாலென்னேவல், தண்ணீர் மொள்ளும்பாத்திரம், நீர்ச்சால், படைச்சால், மிகுதி.*

**சால்கட்டுதல், சால்வளைத்தல்** - *உழவு சால்விடுதல்.*

**சால்பு** - *இசைவு, ஊக்கம், கல்வி, குணம், மாட்சிமை, மேன்மை.*

**சால்வை** - *உத்தரீகம்.*

**சாவகம்** - *செபம், பதினெண் பாடையினொன்று.*

**சாவகர்** - *ஓர்பாடைக்காரர், சமணர்.*

**சாவகன்** - *சனி.*

**சாவகன் குறிஞ்சி** - *குறிஞ்சித்திறத்தி னொன்று.*

**சாவகாசம்** - *வசதி.*

**சாவகாரியம்** - *பகுத்தறிதல்.*

**சாவகேலம்** - *நிந்தை.*

**சாவசேடம்** - *மிச்சம்.*

**சாவடி** - *சத்திரம்.*

**சாவட்டை** - *சாவீர், வண்ணாத்திப் பூச்சி, வாடல்.*

**சாவணம்** - *ஓர்கருவி.*

**சாவதானம்** - *கவனம், விழிப்பு, மிருது.*

**சாவம்** - *விலங்கின் பிள்ளை.*

**சாவரம்** - *இகழ், தப்பு, பாவம்.*

**சாவருணன்** - *இரண்டாம்மனு.*

**சாவருணியம்** - *கலப்பற்றசாதி.*

**சாவல்** - *சேவல்.*

**சாவறுதி** - *மரணகாலம்.*

**சாவனம்** - *பூரணாகுதி.*

**சாவாக்கியம்** - *கணிதமுறையி னொன்று.*

**சரவாக்கிழங்கு** - *கருடன் கிழங்கு.*

**சாவாமூலி** - *மயிர்ச்சிகைப்பூடு, வேம்பு.*

**சாவாமை** - *அழியாமை.*

**சாவாளை** - *ஓர்மீன், மெலிந்தது.*

**சாவி** - *சப்பட்டை, சாவீர்.*

**சாவிகை** - *மருத்துவிச்சி.*

**சாவிசேடம்** - *மரணச்செய்தி.*

**சாவித்திரன்** - *காற்று, சிவன், சூரியன், பிரமன்.*

**சாவித்திரி** - *உமை, சூரியகிரணம், பிரமன் மனைவிகளிலொருத்தி, பூணூலணியாதவன்.*

**சாவித்திரிசூத்திரம்** - *பூணூல்.*

**சாவீர்** - *செத்தவீர்.*

**சாவு** - *பிசாசம், மரணம்.*

**சாவுன்** - *சவுக்காரம்.*

**சாவெடில்** - *பிணநாற்றம்.*

**சாவெழுத்து** - *நச்செழுத்து.*

**சாவேரி** - *ஓர்பண்.*

**சாவோடுதல்** - *வாடுதல்.*

**சாவோலை** - *மரணச்சீட்டு.*

**சாழல்** - *ஓர்பிரபந்தம், கரடி, மகளிர் விளையாட்டினொன்று.*

**சாழை** - *குச்சு, கைகொட்டல்.*

**சாழையகத்தி** - *ஓரகத்தி.*

**சாளக்கிராமம்** - *சாலக்கிராமம்.*

**சாளம்** - *குங்கிலியம், மணல்.*

**சாளரம்** - *பலகணி.*

**சாளிகம்** - *வண்டு.*

**சாளிகை** - *சாடி, பணப்பை, வண்டு.*

**சானியா** - *ஓர்சரக்கு.*

**சாளுவர்** - *சளுக்குவேந்தர்.*

**சாளேசுரம்** - *குறும்பார்வை, வெள் ளெழுத்து.*

**சாளை** - *ஓர்மீன்.*

**சாளைக்கெண்டை** - *ஓர்மீன்.*

**சாறடை, சாறணை** - *ஓர்பூடு.*

**சாறயர்தல்** - *விழாவயர்தல்.*

**சாறல்** - *குளிர்காற்று, சாறுதல்.*

**சாறு** - *ஆணம், கள், குலை, கொத்து, சாரம், சாறென்னேவல், திருவிழா.*

**சாறுதல்** - *களங்கூட்டுதல், சறுகக் கொத்துதல், சறுக்குதல், வடிதல்.*

**சாறுதாரி** - *கையாந்தகரை.*

**சாறுவேளை** - *சாறணை.*

**சாற்சமந்தம்** - *மலையாத்தி.*

**சாற்றுதல்** - *சொல்லுதல்.*

**சாற்றுவாய்** - *நீர்வடியும்வாய்.*

**சானகம்** - *வில்.*

**சானகி** - *ஓரரக்கன், சீதை, பொன் னாங்காணி, மூங்கில்.*

**சானசி** - *பொன்.*

**தாழக்கோல்** - *திறப்பு.*

**தாழாமை** - *இறுமாப்பு.*

**தாழி** - *அரிதாரம், குடம், சாடி, சிவதை, பரணிநாள்.*

**தாழிசை** - *ஓர்கவி.*

**தாழுகை, தாழுதல்** - *தாழ்தல்.*

**தாழை** - *தாழைமரம், தென்னமரம், தாழ், இரௌவுக்கைக்கச்சு, சுவர்ப் புறத்துநீண்டவுத்திரம், தாழ்க் கோல், தாழென்னேவல், நீளம்.*

**தாழ்குழல்** - *பின்சாய்ந்தவளகம், பெண்.*

**தாழ்சடை** - *நீண்டசடை.*

**தாழ்ச்சி** - *குறைவு, தவறு, தாழ்மை, நட்டம்.*

**தாழ்ச்சிவளர்ச்சி** - *சிறுமை பெறுமை.*

**தாழ்தல்** - *அமிழ்ந்துதல், ஆசை, ஆசைப்பெருக்கம், குறைதல், சரிதல், தங்கல், தாமதித்தல், தூங்குதல்.*

**தாழ்த்தல்** - *அடக்கம்பண்ணல், இருத்தல், கீழ்ப்படுத்துதல், குறைத் தல், தாமதித்தல், புதைத்தல், மந்தப்படுதல்.*

**தாழ்த்துதல்** - *அமிழ்த்துதல், கீழ்மைப் படுத்துதல், குறைத்தல், சாய்த்தல், தாமதித்தல், பணித்தல்.*

**தாழ்ப்பம்** - *ஆழம்.*

**தாழ்ப்பு** - *தாழ்ச்சி, தாழ்த்துதல்.*

**தாழ்மை** - *ஒடுக்கம், கீழ்மை.*

**தாழ்வடம்** - *முத்துக்கோவைமுதலியன.*

**தாழ்வயிறு** - *சரிந்தவயிறு.*

**தாழ்வாய், தாழ்வாய்க்கட்டை** - *தாடி.*

**தாழ்வாரம்** - *வீட்டிறப்பு.*

**தாழ்வு** - *கீழ்மை, குறைவு, தவறு, பள்ளம்.*

**தாளகம், தாளக்கம்** - *அரிதாரம்.*

**தாளப்பிரமாணம்** - *சங்கீதசுருதிப் பிரமாணம், அஃது அங்கம், இலயை, களை, காலம், கிரகம், கிரியை, சாதி, பிரத்தாரம், மார்க்கம், யதி.*

**தாளம்** - *ஓர்வாச்சியம், கலை ஞான மறு பத்தினான்கி னொன்று, சதி.*

**தாளம்போடுதல்** - *தாளங்கொட்டுதல்.*

**தாளாண்மை** - *ஊக்கம், முயற்சி.*

**தாளாளர்** - *ஊக்கமுள்ளோர், வைசியர் பொது.*

**தாளி** - *அனுடநாள், ஓர்கொடி, தாளியென்னேவல், பனைமரம்.*

**தாளிக்கம்** - *தளைப்பு, திடன்.*

**தாளிசபத்திரி** - *ஓர்மருத்திலை.*

**தாளிசம்** - *ஓர்மரம்.*

**தாளிதம்** - *தாளிப்பு.*

**தாளித்தல்** - *மசித்தல்.*

**தாளிப்பனை** - *ஓர்மரம்.*

**தாளிப்பு** - *மசிப்பு, மதர்ப்பு.*

**தாளுதல்** - *இயலுதல்.*

**தாள்** - *அரிவி, ஆதி, ஒட்டு, கதவுறு தாள், கால், தாளென்னேவல், பணிகளின் கடைப்பூட்டு, பூட்டு, முயற்சி.*

**தாள் கழுவல்** - *பாதசுத்திபண்ணல், அஃது புண்ணிய மொன்பதி னொன்று.*

**தாறு** - *அளவு, இருப்புமுள், ஐது, கமுகு வாழை முதலியவற்றின் குலை, நூனாழி, விற்குதை.*

**தாறுமாறு** - *குழப்பம், விரோதம்.*

**தாற்கரியம்** - *களவு.*

**தாற்பரியம்** - *கருத்து, கொள்கை, விபரம்.*

**தாற்பரியம்பண்ணுதல்** - *பருப்பித்துப் பேசுதல்.*

**தாற்பரியவுரை** - *விபரவுரை.*

**தாற்றுக்கதிர்** - *கொத்தாய்க் காய்க்குங் கதிர்.*

**தாற்றுக்கோல்** - *துறட்டி, முட்கோல்.*

**தாற்றுதல்** - *தரித்தல், புடைத்தாற்றிக் கழித்தல்.*

**தாற்றுப்பூ** - *கொத்துப்பூ.*

**தானக்கை** - *பொறுப்பிடம்.*

**தானங்கொடுத்தல்** - *காயத்தினற் குண மூன்றினொன்று, கோதான முதலிய வீதல்.*

**தானசீலம்** - *கொடைக்குணம்.*

**தானஞ்செய்தல்** - *தானங்கொடுத்தல்.*

**தானத்தார்** - *கோயில் விசாரணைக் குரியோர்.*

**தானபதி** - *கொடையாளன்.*

**தானபத்திரம், தானபத்திரிகை** - *நன்கொடையுறுதி.*

**தானப்பிரட்டன்**-*உத்தியோகமிழந்தவன்.*

**தானப்பிரதிபாவியம்** - *அடகு.*

**தானப்புழு** - *மலக்குடலிற்புழு.*

**தானம்** - *அடித்தல், இடம், ஈகை, (அஃது இராசதகுணத்தொன்று, உபாயநாலினொன்று - புண்ணிய மேழினொன்று) தரிசனப் படுவது, துண்டித்தல், தேவலோகம், தேன், நீராட்டு, யானைமதம், வலி.*

**தானவம்** - *மிருது.*

**தானவர்** - *அசுரர்.*

**தானவன்** - *அசுரன், சந்திரன்.*

**தானவாரி** - *இந்திரன், திருமால்.*

**தானவியத்தியாசம்** - *அதமதானம்.*

**தானவீரன்** - *மிகுகொடையாளன்.*

**தானாகுதல்** - *தானாயாதல்.*

**தானாபதி** - *தூதன், படைத்தலைவன்.*

**தானாபதிக்கம், தானாபத்தியம்** - *தானாபதியுத்தியோகம்.*

**தானானமூவர்** - *சாலக்கிராமம்.*

**தானி** - *இருப்பிடம், தானத்திலுள் ளது, பண்டசாலை.*

**தானியகற்கம்** - *பதர்.*

**தானியகோட்டகம்** - *கோரியை, தானியக்களஞ்சியம்.*

**தானியசங்கிரகம்** - *தானியஞ் சேர்த்து வைத்தல், பண்டசாலை.*

**தானியசாரம்** - *தூற்றினபொலி.*

**தானியப்பொட்டு** - *அந்துப்பூச்சி. பயிர்நோயினொன்று.*

**தானியமாயன்** - *தானியம்விற்போன்.*

**தானியம்** - *நென்முதலியமணிகள்.*

**தானியராசன்** - *கோதுமை.*

**தானியவத்தனன்** - *பொலியைக்குக் கொடுப்போன்.*

**தானியவிலக்குமி** - *அட்டவிலக்குமி யினொருத்தி.*

**தானியாகுபெயர்** - *தானத்திலிருக்கும் பொருளானாகும்பெயர், (உம்) விளக்கு.*

**தானியாதிபன்** - *தானியத்துக்கதிபன்.*

**தானியார்த்தம்** - *தானியசம்பத்து.*

**தானியோத்தமம்** - *அரிசி.*

**தானீயம்** - *கொடை.*

**தானு** - *காற்று, கொடையாளன், வெற்றியாளன்.*

**தானூரம்** - *சுழல்காற்று.*

**தானை** - *ஆயுதப்பொது, தூசு, படை.*

**தானைத்தலைவன்** - *சேனாபதி.*

**தானைத்தறுகணாளர்** - *படைவீரர்.*

**தானைமாலை** - *ஓர்பிரபந்தம், அஃது அகவலோசை பிறழாதாசிரியப் பாவாற் கொடிப்படையைச் சிறப் பித்துப்பாடுவது.*

**தான்** - *அசைச்சொல், (உம்) நீதான்.*

**தான்றி** - *ஓர்மரம்.*

**தான்றிக்காய்** - *ஓர்மருத்துக்காய் அஃது திரிபலையினொன்று, துவர்பத்தினுமொன்று.*

**தான்றோன்றி** - *ஒருவராலுண்டாக்கப் படாதது, வலியமுளைத்தது.*

# தி

**திகசம்** - *அசமோதம்.*

**திகதி** - *தேதி.*

**திகந்தம** - *திகாந்தம்.*

**திகந்தராலம்** - *ஆகாயம்.*

**திகம்பரம்** - *இருள், நிருவாணம்.*

**திகம்பரர்** - *சமண்முனிவர், நிருவாணிகள்.*

**திகம்பரன்**-*அருகன்,சிவன், நிருவாணி.*

**திகம்பரி** - *துற்கை, பார்ப்பதி.*

**திதகரடி** - *சோர்வு.*

**திகரம்** - *அவா, இளைப்பு, ஓரெழுத்து, சோர்வு, முட்டுத்தொய்வு.*

**திகழல்** - *ஒளிசெய்தல்.*

**திகழ்** - *ஒளி, திகழெனேவல்.*

**திகழ்ச்சி** - *ஒளி, தோற்றம், விளக்கம்.*

**திகழ்தல்** - *தோற்றல், பிரகாசித்தல், விளங்கல்.*

**திகழ்வு** - *திகழ்ச்சி.*

**திகனா** - *கொடுவேலி.*

**திகாந்தம்** - *திக்கின்முடிவு.*

**திகாந்தரம்** - *ஆகாயம்.*

**திகிரி** - *உருளை, சக்கராயுதம், தண்டசக்கரம், திரிகை, தேர், பண்டி. மலை, மூங்கில், வட்டம்.*

**திகிரிக்கல்** - *ஆட்டுக்கல், சக்கிரவாளகிரி.*

**திகில்** - *திடுக்காட்டம், பயம்.*

**திகிலிடுதல், திகிற்படுதல்** - *திடுக்கிடுதல், பயப்படுதல்.*

**திகுதிகெனல்** - *ஒலிக்குறிப்பு, சீக்கிரக் குறிப்பு.*

**திகை** - *திகையென்னேவல், திசை, தேமல்.*

**திகைத்தல்** - *பிரமித்தல், மயங்கல்.*

**திகைப்பு** - *திடுக்காட்டம், மயக்கம்.*

**திகைப்பூடு** - *ஓர்செந்து.*

**திகைமயக்கு** - *திக்குத்தடுமாற்றம்.*

**திக்கங்கம்** - *அட்டபாலாகுறி, அஃது கிழக்காதிமுறையே கொடி -புகை - சீயம் - நாய் - இடபம் - கழுதை - யானை - காகம்.*

**திக்கடைப்பு** - *திக்கெல்லை.*

**திக்கம்** - *இளயானை.*

**திக்கயம்** - *அட்டயானை, அவைகிழக்காதிமுறையே, ஐராபதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாரவபூமம், சுப்பிரதீபம்.*

**திக்கற்றவன்** - *தாபரமற்றவன்.*

**திக்காரம்** - *நிந்தை.*

**திக்கிடுதல்** - *துணுக்குறல்.*

**திக்கு** - *திக்கென்னேவல், திசை, பேச்சுத்தடக்கு.*

**திதிவிரதம்** - *திதிகுறித்தநோன்பு.*

**தித்தகம்** - *மலைவேம்பு.*

**தித்தம்** - *அக்கினி, எண்ணெய், கசப்பு, கட்டுக்கதை, நச்சம்பு, நிலவேம்பு, மலைவேம்பு, வாசனை.*

**தித்தா** - *பீதரோகிணி,வட்டத்திருப்பி.*

**தித்தி** - *ஒருதுகுழல், ஓர்பனை, குரவம், சதி, தித்திப்பு, தித்தியென்னேவல், திற்றி, வேள்விக் குண்டம்.*

**தித்தித்தல்** - *இனித்தல்.*

**தித்திப்பு** - *இனிப்பு.*

**தித்திமுளை** - *தித்திப்பனங்கட்டி.*

**தித்தியர்** - *அசுரர்.*

**தித்திரி** - *சிச்சிலிக்குருவி.*

**தித்திருச்சி** - *நாணல்.*

**திந்திடம், திந்திருணி** - *புளியமரம்.*

**திபதிச்சம்** - *வாலுழுவை.*

**திப்பி** - *கோது.*

**திப்பியம்** - *அசமதாகம், திவ்வியம், விளக்கம்.*

**திப்பிலாட்டம்** - *தொந்தறை.*

**திப்பிலி** - *அலைவி, ஓர்சரக்கு.*

**திப்பிலிக்கொச்சிக்காய்** - *சிறுமிளகுகாய்.*

**திப்பிலிமூலம்** - *ஓர்சரக்கு.*

**திப்பிலியரிசி** - *திப்பிலிக்கொட்டை.*

**திப்பிலியாட்டம்** - *அலைவு.*

**திப்பிலியாட்டல், திப்பிலியாட்டுதல்** - *அலைவுபண்ணல்.*

**திப்பை** - *மேடு.*

**திமி** - *குத்தல், சமுத்திரம், திமிங்கிலம்.*

**திமிகோடம்** - *கடல்.*

**திமிங்கிலகிலம்** - *திமிங்கிலத்தை விழுங்குமீன்.*

**திமிங்கிலம்** - *யானையைவிழுங்கு மீன்.*

**திமிசு** - *வேங்கைமரம்.*

**திமிதகுமுதம்** - *இரைச்சல், பம்பல், மிகுதி.*

**திமிதம்** - *ஈரம், உறுதி, பேரொலி.*

**திமிதம்போடுதல்** - *குதியன்குத்துதல்.*

**திமிதிமி** - *யானையைவிழுங்குமீன்.*

**திமிதிமியெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு, தாளக்குறிப்பு, விரைவுக் குறிப்பு.*

**திமிரகாசம்** - *கண்ணோயுளொன்று.*

**திமிரடைசல்** - *திமிர்மிகுத்தல்.*

**திமிரம்** - *இருள், நரகம், பாரம், விறைப்பு.*

**திமிரரிபு** - *சூரியன்.*

**திமிரன்** - *விறைப்புள்ளவன்.*

**திமிராரி** - *சூரியன்.*

**திமிரேறுதல்** - *விறைப்புக் கொள்ளு தல்.*

**திமிர்** - *சன்னி, சோம்பு, திமிரென் னேவல், விறைப்பு.*

**திமிர்ச்சி** - *திமிர்*

**திமிர்தம்** - *ஒலி.*

**திமிர்தல்** - *பூசுதல், வளர்தல்.*

**திமிர்த்தல்** - *திமிர்கொள்ளுதல்.*

**திமிர்ப்பு** - *திமிர்ச்சி.*

**திமிர்முரித்தல்** - *சோம்புமுரித்தல்.*

**திமிர்மொய்த்தல்** - *விறைப்புக் கொள் ளுதல்.*

**திமிர்வாதம்** - *ஓர்நோய்.*

**திமிர்வாயு** - *திமிர்வாதம்.*

**திமிர்வு** - *பூச்சு.*

**திமிலம்** - *பேரொலி, யானைமீன்.*

**திமிலர்** - *நெய்தனிலமாக்கள்.*

**திமிலிடுதல்** - *ஒலித்தல், நெருக்கல்.*

**திமிலை** - *பம்பைமேளம்.*

**திமில்** - *எருத்தினேரி, மரக்கலம், வேங்கைமரம்.*

**திமிறல்** - *துலுக்குதல், தேய்த்தல், பறித்தல், மீறுதல், வளர்தல்.*

**திமைத்தல்** - *கிளப்புதல்.*

**திம்மலி** - *தடித்தசரீரக்காரி.*

**தியக்கடி** - *தியக்கம்.*

**தியக்கம்** - *அசைவு, கலக்கம், சோர்வு.*

**தியக்கு** - *தியக்கம், தியக்கென்னேவல்.*

**தியக்குதல்** - *சோருதல்.*

**தியசம்** - *மரமஞ்சள்.*

**தியந்தி** - *திராய்.*

**தியாகங்கூறுதல்** - *கொடையைப் பிரசித்தப்படுத்தல்.*

**தியாகம்** - *கைவிடல், கொடை, துறத்தல்.*

**தியாகராயன்** - *சிவன்.*

**தியாகன், தியாகி** - *கொடையாளன், சிவன், தவத்தி.*

**தியாச்சியம்** - *ஒவ்வொரு நாளிற் கழி வாகிய மூன்றேமுக் கானாழிகை.*

**தியாமம்** - *நான்முகப்புள்.*

**தியாம்பதி** - *ஆன்மா.*

**தியாலம்** - *திசாலம்.*

**தியானசமாதி** - *யோகநிலையி னொன்று.*

**தியானம்** - *அட்டாங்கயோகத் தொன்று, அஃது ஐம்புலனடக்கிச் சிவயோகஞ் செய்தல், அனுட் டானம், சந்திப்பு, நினைவு.*

**தியானம்பார்த்தல்** - *அனுட்டானம் பண்ணல்.*

**தியானி** - *தியானியென்னேவல், யோகி.*

**தியானித்தல்** - *அனுட்டானம் பண்ணல், சிந்தித்தல்.*

**தியானிப்பு** - *தியானம்.*

**தியு** - *பகல், மோட்சம்*

**தியுகணம்** - *தவணை.*

**தியுகம்** - *புள்.*

**தியுகாரி** - *காகம்.*

**தியுதம்** - *கிரணம்.*

**தியுதி** - *கிரணம், வெளிச்சம்.*

**தியுதிகரம்** - *அழகு, பிரவை.*

**தியுதிகரன்** - *துருவன்.*

**தியுநிசம்** - *இராப்பகல்.*

**தியுபதி** - *இந்திரன், சூரியன்.*

**தியுமணி** - *சூரியன்.*

**தியோதம்** - *பிரகாசம், வெயில்.*

**திரகமூலம்** - *முடக்கொத்தான்.*

**திரக்கத்தாரு** - *நிலப்பனை.*

**திரக்கம்** - *கொன்றை.*

**திரக்கரித்தல்** - *நிந்தித்தல்.*

**திரக்காரம்** - *நிந்தை.*

**திரங்கம்** - *நகரம்.*

**திரங்கலம்** - *மிளகு.*

**திரங்கல்** - *திரைதல், மிளகு.*

**திரங்குதல்** - *திரைதல்.*

**திரச்சீனமுகம்** - *நாணத்தாற்றலை யாட்டுமுகம்.*

**திரட்கோரை** - *ஓர்புல்.*

**திரட்சி** - *உண்டை, கூட்டம், திரண்ட தன்மை, முத்து.*

**திரட்டல்** - *கூட்டல்.*

**திரட்டு** - *இருது, சேர்த்தொன்றாக்கி யிருப்பது, சேர்ப்பு, திரட்டென் னேவல், திரண்டகை மரம், திரளை, முழுமை.*

**திரட்டுக்கலியாணம்** - *இருதுக் கலியாணம்.*

**திரட்டுக்கோவை** - *ஓர்கோவை.*

**திரட்டுதல்** - *உருட்டுதல், சேர்த்தல்.*

**திரட்டுப்பால்** - *திரளக்காய்ச்சும்பால், அஃது முப்பாலினொன்று.*

**திரணச்சி** - *எவட்சாரம்.*

**திரணபதி** - *வாழை.*

**திரணப்பிராயம்** - *வெறுமை.*

**திரணம்** - *திருணம்.*

**திரணி** - *ஓர்செடி.*

**திரணிக்கல்** - *காக்கைக்கல்.*

**திரணை** - *கம்பி, திரண்டது, திரளை.*

**திரண்டகொடிச்சி** - *புற்றாம்பழம்.*

**திரண்டபால்** - *திரைந்தபால்.*

**திரண்டவடிவு** - *உண்டை.*

**திரஸ்தம்** - *பயங்கரம்.*

**திரந்திகம்** - *திப்பிலிமூலம்.*

**திரபம்** - *வெட்கம்.*

**திரபாகன்** - *மிலேச்சன்.*

**திரபாரண்டை** - *வேசி.*

**திரபானிரத்தம்** - *வெட்கக்கேடு.*

**திரபுட்பம், திரபுலம்** - *துத்துநாகம்.*

**திரப்படுதல்** - *உறுதிப்படல்.*

**திரமம்** - *சாதிலிங்கம்.*

**திரமாக்குதல்** - *அத்தாட்சியாக்கல், நிலைப்படுத்தல்.*

**திரமாதம்** - *ஆவணி, கார்த்திகை, மாசி, வைகாசி.*

**திரமிடம்** - *திராவிடம்.*

**திரம்** - *உறுதி, திரராசி,நிலை, பெலன்.*

**திரயப்பிணிகடம்** - *தூலதேகம்.*

**திரயம்** - *மூன்று.*

**திரயாங்கம்** - *மூவங்கம், அஃது திதிவார, நட்சத்திரங்கள்.*

**திரயாட்சரி** - *மூன்றுவரியெழுத்தான் முடியுமோரலங்காரம்.*

**திரயோதசி** - *பதின்மூன்றாந்திதி.*

**திரராசி** - *இடபம், கும்பம், சிங்கம் விருச்சிகம்.*

**திரராசிகம்** - *முத்தொகைவினா.*

**திரவடி** - *ஏலம்.*

**திரவணம்** - *பாய்தல், போதல், வெப்பம், திரவியம்.*

**திரவம்** - *பாய்தல், பொசிதல்.*

**திரவிடம்** - *திராவிடம்.*

**திரவிடன்** - *சத்திரியகுலத்துக் கீழ்மகன்.*

**திரவிணம்** -*பாக்கியம்,பெலன், பொன்.*

**திரவித்தல்** - *நீர்முதலியபொசியப் பண்ணல்.*

**திரவியசம்பன்னன்** - *சம்பாத்திய காரன்.*

**திரவியசித்தி** - *பாக்கியசம்பாத் தியம், பாக்கியத்தினால் வருஞ்செல் வாக்கு.*

**திரவியசுத்தி** - *பஞ்சசுத்தியிலொன்று.*

**திரவியம்** - *ஓர் மருந்து, நிதி, பாக்கியம், பித்தளை, பொருள், பொன்.*

**திரவியலோபம்** - *பொருட்குறைவு.*

**திரவியவான்** - *செல்வன்.*

**திரவீகரணம்** - *உருக்குதல்.*

**திரளி** - *ஓர்மீன்.*

**திருளுதல்** - *உருட்சியாதல், கூடுதல், திரட்சியாதல், தெருளுதல்.*

**திரளை** - *கட்டி, திரட்டப்பட்டது.*

**திரள்** - *குழியம், கூட்டம், திரட்சி, திரளென்னேவல், திரளை, படை.*

**திரா** - *ஓர்மரம், தரா.*

**திராகம்** - *உயரவெறித்து பிடித்தல்.*

**திராகிட்டம்** - *மிகநீளம்.*

**திராசம்** - *அச்சம்.*

**திராட்சம், திராட்சை** - *முந்திரிகை.*

**திராணதம்** - *இரட்சித்தல்.*

**திராணம்** - *இரட்சித்தல், உறை.*

**திராணி, திராணிக்கம்** - *தகுதி, தத்துவம்.*

**திராணிக்கை** - *திராணி.*

**திராபம்** - *ஆகாயம், சேறு, மூடன்.*

**திராமரம்** - *பவளமல்லிகை.*

**திராமிடம்** - *திராவிடம்.*

**திராய்** - *ஓர்கீரை.*

**திராவகத்துக்கடுங்காரம், திராவகத் துக்காதி** - *அன்னபேதி.*

**திராவகநீறு** - *வெடியுப்புச்சுண்ணம்.*

**திராவகம்** - *காந்தக்கல், செய்நீர், மெழுகு.*

**திராவகன்** - *அறிஞன், கள்வன்.*

**திராவிடம்** - *ஓரெண், சாதிநான்கி னொன்று, தமிழ், தேயமைம் பத்தாறி னொன்று.*

**திரி** - *காரத்திரி, திரியென்னேவல், பெண், மூன்று, விளக்குத்திரி.*

**திரிகடுகம், திரிகடுகு** - *ஓர் நூல், சுக்கு - திப்பிலி - மிளகு.*

**திரிகண்டம்** - *நெருஞ்சில்.*

**திரிகதம்** - *மும்மடங்கு.*

**திரிகத்தம்** - *ஓர் தேயம்.*

**திரிகம்** - *திரிகடுகம், முச்சந்தி, மூன்று கூடியது.*

**திரிகாயன்** - *புத்தன்.*

**திரிகாலசந்தி** - *காலை, மாலை, உச்சி களிற்பண்ணுமனுட்டானம்.*

**திரிகாலஞானம்** - *முக்காலமறியு ஞானம்.*

**திரிகாலம்** - *முக்காலம், அவை உச்சி, காலை, மாலை அன்றியும் இறப்பு, எதிர்வு, நிகழ்வு.*

**திரிகாலவர்த்தமானம்** - *முக்கால நிகழ்ச்சி.*

**திரிகாலோசிதம்** - *சூசைப்புல்.*

**திரிகுணம்** - *முக்குணம்.*

**திரிகூடம்** - *ஓர்மலை.*

**திரிகூர்ச்சகம்** - *முக்கருவுள்ளது.*

**திரிகை** - *இடக்கைமேளம், ஏந்திரம், குலாலசக்கிரம், திரிதல்.*

**திரிகோணசாத்திரம்** - *முக்கோண சாத்திரம்.*

**திரிகோணமலை** - *திருக்கோண மலை.*

**திரிகோணம்** - *முக்கோணம்.*

**திரிசங்கு** - *அரிச்சந்திரன்றந்தை.*

**திரிசங்குமண்டலம்** - *ஓர்நட்சத்திர மண்டலம்.*

**திரிசணம்** - *வாஞ்சை.*

**திரிசயம்** - *காணப்படுவது.*

**திரிசாரம்** - *எவட்சாரம், சத்திசாரம், தவச்சாரம்.*

**திரிசி** - *சமுசாரி, குயவன் சக்கிரம், நினைத்தல்.*

**திரிசியம்** - *தோற்றப்படத்தக்கது.*

**திரிசியாதிரிசியம்** - *தோற்றப்படத் தக்கவைகளுந்தோற்றப்படாத வைகளும்.*

**திரிசிரபுரம்** - *திரிசிராப்பள்ளி.*

**திரிசிரா** - *ஓரிராக்கதன்.*

**திரிசிராப்பள்ளி** - *ஓர்பட்டினம்.*

**திரிசிராமலை** - *ஓர்மலை.*

**திரிசிருங்கம்** - *முக்கோணம், திரி கடலசை.*

**திரிசுடர்** - *முச்சுடர்.*

**திரிசூலம்** - *முத்தலைவேல்.*

**திரிசொல்** - *செய்யுட்சொல்.*

**திரிச்சல்** - *திரிதல்.*

**திரிச்சிரமம்** - *முக்காலநியமநிட்டை.*

**திரிஞ்சில்** - *துரிஞ்சில்.*

**திரிதசன்** - *கடவுள்.*

**திரிட்டை** - *காணப்படல்.*

**திரிதசாசாரியன்** - *வியாழம்.*

**திரிதசாலையம்** - *சுவர்க்கம், மேருகிரி.*

**திரிதசி** - *திரயோதசி.*

**திரிதண்டதாரணம்** - *முக்கோறரித்தல்.*

**திரிதண்டம்** - *திரிதண்டு.*

**திரிதண்டி** - *முக்கோற்பகவன்.*

**திரிதண்டு** - *முக்கோல்.*

**திரிதயம்** - *மூன்று.*

**திரிதரல்** - *சுழலல், திரிதல், மீளல்.*

**திரிதராட்டிரன்** - *திரியோதனன்றந்தை.*

**திரிதலை** - *ஓர்பூடு.*

**திரிதல்** - *அலைதல், உலாவல், கெடுல் சுழலல், நடத்தல், மாறுதல், மீளல்.*

**திரிதல் விகாரம்** - *எழுத்துத்திரிபு விகாரம்.*

**திரிதாது** - *விநாயகன்.*

**திரிதிகை** - *மூன்றாந்திதி.*

**திரிதியம்** - *செவ்வள்ளி.*

**திரிதியை** - *மூன்றாந்திதி.*

**திரிதிவம்** - *முத்தி.*

**திரிதிவேசன்** - *தேவன்.*

**திரிதீர்க்கம்** - *மணப்பொருத்தம் பத்தினொன்று.*

**திரிதூளி** - *சிலலபொல்லம்.*

**திரிதேகம்** - *காரணதேகம், சூச்சும தேகம், தூலதேகம்.*

**திரிதோஷம்** - *ஓர்நோய், முப்பிணி.*

**திரித்தல்** - *சுழற்றுதல், மாறுபடுத்தல், மாற்றுதல், முறுக்குதல்.*

**திரித்துவம்** - *மூன்றுதத்துவம்.*

**திரிநாயகம்** - *பெண்டலைமை.*

**திரிநேத்திரசூடாமணி** - *சந்திரன்.*

**திரிநேத்திரன்** - *சிவன்.*

**திரிபங்கி** - *மிறைக்கவியினொன்று, அஃது ஒருசெய்யுளாய்நின்று மூன்றாய்ப் பிரித்தோத மூன்று செய்யுளாயுந்நிற்குங்கவி.*

**திரிபணி** - *உபமானப்பொருள் நிகழ் கின்ற செய்கையிற்பயன்படுதற் பொருட்டு உபமேயத்தின் உருவத் தைக் கொண்டுபமித்தல். (உம்) தாட் கமலத்தானடந்து கட்கு வளையானோக்கி.*

**திரிபதகை** - *கங்கை.*

**திரிபதம்** - *முத்தெருக்கூடுமிடம்.*

**திரிபதாகம்** - *நெற்றியிலுள்ள மூவிரேகை.*

**திரிபதார்த்தம்** - *பசு, பதி, பாசம்.*

**திரிபலம்** - *திரிபலை.*

**திரிபலை** - *கடுக்காய்-தான்றிக்காய்-நெல்லிக்காய்.*

**திரிபழுகம்** - *பால், நெய், தேன்.*

**திரிபரகி** - *மிறைக்கவியினொன்று, அஃது ஓர் மொழி மூவெழுத் தானின்றோர் பயனுமதினிடை யெழுத்து நீங்கவேறோர்பயனும் அதன் முதலெழுத்து நீங்கவே றோர் பயனுங்கொண்டு முடிவது.*

**திரிபு** - *முத்திவிக்கின மூன்றினொன்று, வேறுபாடு.*

**திரிபுக்காட்சி** - *ஒன்றைவே றொன் றாய்க் காணுதல்.*

**திரிபுடகம்** - *முக்கோணம்.*

**திரிபுடி** - *ஆத்துமா, ஞாதுரு, ஞேயம்.*

**திரிபுடிபலம்** - *ஆமணக்கு.*

**திரிபுடை** - *சத்ததாளத்தொன்று.*

**திரிபுண்டரகம், திரிபுண்டரம்** - *மூன்று வரியாய்ப் பூசும்வீபூதிப்பூச்சு.*

**திரிபுரசுந்தரி** - *பார்ப்பதி.*

**திரிபுரதகனன்** - *சிவன்.*

**திரிபுரமல்லிகை** - *ஓர்மல்லிகை.*

**திரிபுரமெரித்தான்** - *நொச்சி, மா விலங்கை.*

**திரிபுரம்** - *முப்புரம்.*

**திரிபுராந்தகன்** - *சிவன்.*

**திரிபுரி** - *சாறடை.*

**திரிபுருஷம்** - *முத்தலைமுறை.*

**திரிபுரை** - *ஓர்சத்தி, பார்ப்பதி.*

**திரிபுவனம்** - *சுவர்க்கம், மத்தியம், பாதலம்.*

**திரிபோகம்** - *பெண்போகம்.*

**திரிப்பு** - *மாற்றுதல், முறுக்கு.*

**திரிமஞ்சள்** - *கத்தூரிமஞ்சள், மஞ்சள், மரமஞ்சள்.*

**திரிமணை** - *திருமணை.*

**திரிமனம்** - *சித்தம்-புத்தி-மனம்.*

**திரிமார்க்கம்** - *முச்சந்தி.*

**திரிமூர்த்தி** - *மும்மூர்த்தி.*

**திரிமூலம்** - *கண்டுமூலம்- சித்திர மூலம், திப்பிலிமூலம்.*

**திரிய, திரியவும்** - *திரும்ப.*

**திரியம்பகன்** - *அரன், அருகன், விட்டுணு, வினாயகன், வீரபத்திரன்.*

**திரியாங்கம்** - *திரயாங்கம்.*

**திரியாமயம்** - *முத்திவிக்கினம் மூன்று.*

**திரியாமை** - *இரவு, நீலக்கல், யமுனை யாறு.*

**திரியாவிரம்** - *புரளி.*

**திரியேகத்துவம்** - *மூன்றொன்றா யிருத்தல்.*

**திரியேகம்** - *முப்பொருளொன்றா யிருத்தல்.*

**திரியேகன்** - *கடவுள்.*

**திரிரேகம்** - *சங்கு.*

**திரிலிங்கம்** - *திரீலிங்கம்.*

**திரிலோகசிந்தூரம்** - *ஓர்மருந்து.*

**திரிலோகம்** - *திரிபுவனம், பூமி-அந்தரம்-சுவர்க்கம்.*

**திரிலோகவசியம்** - *சருவவசீகரம்.*

**திரிலோகாதிபதி** - *இந்திரன், கடவுள்.*

**திரிலோகி** - *விட்டுணுகரந்தை.*

**திரிலோகேசன்** - *சூரியன்.*

**திரிலோசனன்** - *திரியம்பகன்.*

**திரிவசியம்** - *பெண்வசியம்.*

**திரிவட்டம்** - *இயந்திரத்தினோருறுப்பு.*

**திரிவருக்கபாரீணன்** - *திரிவருக்க மடைந்தவன்.*

**திரிவருக்கம்** - *அகவியல்மூன்று, அஃது அசுத்தம், அறியாமை, சுத்தம், அரசியல்மூன்று, அஃது ஆதாயம், நட்டம், மத்திமம், இயல்பாய் விரும்புவது மூன்று,*

*அஃது கடைமை, செல்வம், பெண் போகம்.*

**திரிவாய்** - *தீவாய்.*

**திரிவிக்கிரமன்** - *ஓரரசன், விட்டுணு.*

**திரிவு** - *திரிபு.*

**திரிவேணிசங்கமம்** - *ஓர் தலம், அஃது கங்கை, சரச்சுவதி, யமுனை யென்னு மூவாறுகளின் சந்திப்பு.*

**திரீ, ஸ்திரீ** - *பெண்.*

**திரீசனப்பிரியன்** - *தூர்த்தன்.*

**திரீயத்துவம்**- *மூன்றொன்றாயிருப்பது.*

**திரீலிங்கம்** - *சிறீலிங்கம்.*

**திரு** - *அழகு, இலக்குமி, செல்வம், தெய்வீகம், மங்கல மொழியி னொன்று, மேன்மை, யானையைப் பாகனதட்டு மொலி.*

**திருகணி** - *சங்குதிரி.*

**திருகணை** - *புரிமணை.*

**திருகம்** - *சாதிக்காய், துவாரம்.*

**திருகல்** - *முறுகல், வளைதல்.*

**திருகல்முறுகல்** - *திருக்கானது.*

**திருகாணி** - *சுரியாணி.*

**திருகு** - *கள்ளம், திருகென்னேவல், முறுக்கு, வஞ்சனை.*

**திருகுகள்ளி** - *ஓர்கள்ளி.*

**திருகுதல்** - *திருப்பிமுரித்தல், திரும்பு தல், பறித்தல், முறுகுதல்.*

**திருகுதாழை** - *ஓர்தாழை.*

**திருகுதாளம்** - *மாறுபாடு.*

**திருகுதாளி** - *மாறுபாடுள்ளஆள்.*

**திருகூசி** - *தமரூசி.*

**திருக்கடைக்காப்பு** - *கோவிற்கதவு சார்த்தல், திவ்வியபிரபந்தத்தின் முடிவுப் பாட்டு.*

**திருக்கடையூர்** - *ஓர்தலம்.*

**திருக்கண்சார்த்துதல்** - *கிருபை யாய்ப்பார்த்தல்.*

**திருக்கரணம்** - *பாம்பு.*

**திருக்களிற்றுப்படி** - *ஓர்நூல்.*

**திருக்காட்சி** - *தேவதரிசனம்.*

**திருக்காளாத்தி** - *ஓர்தலம்.*

**திருக்கு** - *கண், குற்றம், முறுக்கு, வஞ்சம்.*

**திருக்குழப்பம்** - *திருவிளையாட்டு, தேவசெயற் குழப்பம், புரளித் தனம்.*

**திருக்குளம்** - *கோயிற்குளம்.*

**திருக்குன்றாமலை** - *திருக்கோணா மலை.*

**திருக்கூட்டம்** - *தேவதொண்டர் கூட்டம்.*

**திருக்கூத்து** - *திருநடனம்.*

**திருக்கை** - *ஓர்மீன்.*

**திருக்கொன்றை** - *ஓர்மரம்.*

**திருக்கோணமலை** - *திரிகோணமலை.*

**திருக்கோலம்** - *திருவேடம், துருவ மண்டலம், தேவகோலம்.*

**திருக்கோவில்** - *தேவகோயில்.*

**திருசி** - *கண்.*

**திருசியத்துவம்** - *பார்வை.*

**திருசை** - *கண்.*

**திருசோபமம்** - *வெண்டாமரை.*

**திருச்சவை** - *திவ்வியசங்கம், தேவ சபை.*

**திருச்சித்தம்** - *திவ்வியசித்தம்.*

**திருச்சுண்ணம்** - *அபிஷேகச்சுண்ணம்.*

**திருடகம்** - *அடுக்கு.*

**திருடகாண்டம், திருடக்கிரந்தி** - *மூங்கில்.*

**திருடதை** - *உறுதி, பெலம், வயிரம்.*

**திருடமூலம்** - *தேங்காய்.*

**திருடம்** - *இரும்பு, தத்துவம், பெலம், மிகுதி.*

**திருடலோமை** - *காட்டுப்பன்றி, பரு மயிர்.*

**திருடல்** - *திருடுதல்.*

**திருடழம்** - *தேங்காய்.*

**திருடன்** - *கள்வன்.*

**திருடாபத்தி** - *நம்பிக்கையானமனையாள்.*

**திருடார்த்தி** - *மிகுவருத்தம், வின்னுதி.*

**திருடு** - *களவு, திருடென்னேவல்.*

**திருடுதல்** - *களவெடுத்தல்.*

**திருட்டகூடம்** - *நொடிக்கதை.*

**திருட்டம், திருஷ்டம்** - *தெளிவு.*

**திருட்டாந்தம், திருட்டாந்தரம்** - *அத்தாட்சி உதாரணம், சாத்திரம், மரணம்.*

**திருட்டாபோகம்** - *இம்மையிற் கண்ணாலனுபவிக்குமனுபவம்.*

**திருட்டி** - *அறிவு, கண், பாம்பு, பார்வை, விஷம்.*

**திருட்டிணிபாதம்** - *பார்வை.*

**திருட்டித்தல்** - *காண்டல்.*

**திருட்டிபந்து** - *மின்மினி.*

**திருட்டிபாதம்** - *பார்வை.*

**திருட்டிபூதம்** -*காக்கப்பட்டது.*

**திருட்டிபோகம்** - *கட்பார்வைப் புணர்ச்சி.*

**திருட்டியம்** - *ஞானம்.*

**திருட்டு** - *அணாப்பு, களவு.*

**திருட்டுத்தனம்** - *கள்ளக்குணம், தந்திரம்.*

**திருட்டுமாயம்** - *திருக்கு, மாறுபாடு.*

**திருணகம்** - *வாளுறை.*

**திருணகேது** - *மூங்கில்.*

**திருணசாதி** - *மரமுதல்மருந்து.*

**திருணசாரை** - *வாழை.*

**திருணசிங்கம்** - *தறிகருவி.*

**திருணசூனியம்** - *தாழை.*

**திருணதை** - *வில்.*

**திருணத்தானியம்** - *புன்பயிர்.*

**திருணத்துருமம்** - *பனைதெங்கு முதலிய மரம்.*

**திருணபூலி** - *பற்பாய்.*

**திருணம்** - *உடைவாள், திரணம், துரும்பு, தேள், தேனீ, புல், வில்.*

**திருணராசன்** - *பனை.*

**திருணியை** - *புற்றிரள்.*

**திருணோற்பவம்** - *காட்டுப்பயிர்.*

**திருதபதம்** - *கெதிநடை.*

**திருதம்** - *தரித்தல்.*

**திருதி** - *உறுதி, ஓர்மீன், சந்தோஷம், திருத்தி, துணை, தோல், நித்திய யோகத் தொன்று, நீர்த்துருத்தி, யாகம்.*

**திருதிகரி** - *நாய்.*

**திருதியபிரகிருதி** - *அண்ணகன்.*

**திருதியை** - *மூன்று.*

**திருத்தம்** - *ஒப்பரவு, ஒழுங்கு, திருந்தல், தீர்க்கம்.*

**திருத்தல்** - *திருந்தச்செய்தல்.*

**திருத்தாண்டவம்** - *திவ்வியநடனம்.*

**திருத்தி** - *பூரணம்.*

**திருத்து** - *செய்கை, திருத்தென்னேவல்.*

**திருத்துதல்** - *சமனாக்குதல், சீர்திருத்துதல், செவ்வைப்படுத்தல், தேற்றுதல், நிலமுதலியவற்றைப் பண்படுத்தல்.*

**திருத்தொண்டர்** - *தெய்வதொண்டர்.*

**திருத்தொண்டு** - *தேவதொண்டு.*

**திருநடனம்** - *திருத்தாண்டவம்.*

**திருநாதன்** - *விட்டுணு.*

**திருநாமச்செட்டி, திருநாமத்துத்தி, திருநாமப்பாலை** - *ஓர்பூடு.*

**திருநாமம்** - *தெய்வீகநாமம், மேன்மையானநாமம்.*

**திருநாளைப்போவார்** - *சிவதொண்டரிலொருவன்.*

**திருநாள்** - *விசேடாராதனைத்தினம்.*

**திருநீலகண்டன்** - *ஓர்தேள், சிவதொண்டரிலொருவன்.*

**திருநீறு** - *விபூதி.*

**திருநீற்றுக்காப்பு** - *விபூதியீட்டிரட்சை.*

**திருநீற்றுக்கோவில்** - *திருநீற்றுப்பை.*

**திருநீற்றுப்பச்சை, திருநீற்றுப்பத்திரி** - *ஓர்செடி.*

**திருநீற்றுப்பழம்** - *திருநீற்றுண்டை.*

**திருநோக்கு** - *திவ்வியபார்வை.*

**திருந்தகை** - *பெருமையிற்சிறந்தோன்.*

**திருந்தகைமை** - *பெருமை, மேன்மை.*

**திருந்தலர், திருந்தார்** - *பகைவர்.*

**திருந்துகை** - *செவ்வைப்படுதல்.*

**திருந்துதல்** - *செய்துமுடித்தல், திருத்தமாதல், திருந்தல், தேறுதல்.*

**திருபலை** - *ஓர்கொடி.*

**திருப்படைவீடு** - *தேவர்கள் பெரியோர்கள் கூட்டத்துடனிருக்கும் வாசஸ்தலம்.*

**திருப்பணி** - *கோவில்வேலை, திவ்விய தொண்டு.*

**திருப்பணித்தல்** - *யானையைநிற்கப் பண்ணல்.*

**திருப்பணிமுட்டு** - *கோவிற்றளபாடம்.*

**திருப்பதி** - *தேவதலம், விட்டுணு.*

**திருப்பரங்குன்று** - *ஓர்மலை.*

**திருப்பரம்** - *சோறு.*

**திருப்பள்ளித்தாமம்** - *கோவிற்பூமாலை.*

**திருப்பள்ளியெழுச்சி** - *ஓர்பிரபந்தம், தேவர்களனந்தல் விட்டெழுதல்.*

**திருப்பிரம்** - *நெய்.*

**திருப்புகழ்** - *ஓர்பாடல்.*

**திருப்புதல்** - *திரும்பச்செய்தல், மாறவைத்தல், மீட்குதல்.*

**திருப்பூட்டு** - *மங்கலியதாரணம்.*

**திருப்பூட்டுதல்** - *மங்கலியந்தரித்தல்.*

**திருமகண்மைந்தன்** - *மன்மதன்.*

**திருமகள்** - *இலக்குமி.*

**திருமஞ்சனம்** - *அபிஷேகம்.*

**திருமடந்தை** - *இலக்குமி.*

**திருமண்டலம்** - *துருவமண்டலம்.*

**திருமரம்** - *அரசு.*

**திருமலர்** - *தாமரை.*

**திருமலை** - *ஓர்மலை திருப்பதி.*

**திருமறுமார்பன்** - *அருகன், திருமால்.*

**திருமாலுந்தி** - *தாமரை.*

**திருமால்** - *விட்டுணு.*

**திருமால்புதல்வன்** - *மன்மதன்.*

**திருமானகரம்** - *வைகுண்டம்.*

**திருமுகம்** - *தேவசன்னிதானம், வரைந்தனுப்புமோலை.*

**திருமுதல்** - *திரும்புதல்.*

**திருமுழுக்காட்டுதல்** - *அபிஷேகம் பண்ணுதல்.*

**திருமுழுக்கு** - *திவ்வியபிடேகம்.*

**திருமுறை** - *புத்தகம்.*

**திருமுற்றம்** - *குதிரைவையாளிவீதி, கோயிற்சன்னிதானம்.*

**திருமுன், திருமுன்பு** - *தேவ சன்னிதானம், பெரியோர்முன்பு.*

**திருமெழுக்கு** - *கோவில்மெழுகுதல்.*

**திருமேற்பூச்சு** - *திருமேனியிற்பூசும் பூச்சு.*

**திருமேனி** - *குப்பைமேனி, திவ்விய தேகம்.*

**திருமேனிக்கடுக்கன்** - *கைம்பெண் காதணியினொன்று.*

**திரும்பல்** - *திரும்புதல்.*

**திரும்பு** - *இடியேறு,சக்கிரம், சந்திரன், திரும்பென்னேவல், பாம்பு.*

**திரும்புதல்** - *மாறுதல், மீளல், வளைதல்.*

**திருவடி** - *திவ்வியபாதம்.*

**திருவடிநிலை** - *ஓரூர்.*

**திருவடிப்புண்** - *ஆறாதகலும்புண்.*

**திருவடியிராச்சியம்** - *முறைகெட்ட விராச்சியம்.*

**திருவடையாளம்** - *சமயசாதனம்.*

**திருவட்டம்** - *திரிவட்டம்.*

**திருவட்டி** - *கள்ளி.*

**திருவணை** - *சேது.*

**திருவண்ணாமலை** - *அருணாசலம்.*

**திருவமுது** - *திவ்வியவுணவு.*

**திருவருட்பயன்** - *ஓர் நூல்.*

**திருவலகு** - *கோவில்விளக்குமாறு.*

**திருவள்ளுவர்** - *ஓர் நூல், வள்ளுவ நூலாசிரியன்.*

**திருவனந்தபுரம்** - *ஓர்பட்டினம்.*

**திருவன்** - *திருவாலி.*

**திருவாக்கு** - *திவ்வியவாக்கு.*

**திருவாசகம்** - *திருவாக்கு, மாணிக்க வாசகர் செய்த நூல்.*

**திருவாசி** - *ஓராபரணம்.*

**திருவாசிகை** - *ஓர்மாலை.*

**திருவாடுதண்டு** - *திருவுருவைக்காவு மரம்.*

**திருவாட்சி** - *ஓர்பூமரம்.*

**திருவாதரம், திருவாதிரம்** - *புரளி.*

**திருவாதிரை** - *ஓர்நாள்.*

**திருவாத்தி** - *ஓர்பூமரம்.*

**திருவாபரணம்** - *தெய்வாபரணம்.*

**திருவாயில்** - *கோவில்வாயில், மடம்.*

**திருவாய்** - *திருவாக்கு.*

**திருவாய்மலர்தல்** - *தேவவாக்கு விள்ளுதல்.*

**திருவாய்மொழி** - *ஓர்திருப்பாடல், தெய்வவாக்கு, பெரியோரது சொல்.*

**திருவாரூர்** - *ஓர்தலம்.*

**திருவாலி** - *கள்வன், திருவாதிரக் காரன்,பொய்யன்.*

**திருவாவினன்குடி** - *சுப்பிரமணிய ராறிடத்தொன்று, அஃது பழனி.*

**திருவாழங்கோடு** - *ஓர்தலம்.*

**திருவாழித்தண்டு** - *திருவாடுதண்டு.*

**திருவாளன்** - *செல்வன்.*

**திருவானைக்கா** - *ஓரூர்.*

**திருவான்கோடு** - *ஓர்பட்டினம்.*

**திருவிருந்து** - *திவ்வியவிருந்து, அஃது சத்தியவேதத்தார் உடன் படிக்கையினொன்று.*

**திருவிலி** - *கைம்பெண், வறியர்.*

**திருவிழா** - *உற்சவம்.*

**திருவிளக்கு** - *கோவிற்றீபம்.*

**திருவிளையாடல், திருவிளையாட்டு** - *ஓர் புராணம்,தெய்வ விளையாட்டு.*

**திருவுந்தியார்** - *ஓர் நூல்.*

**திருவுரு** - *விக்கிரகம்.*

**திருவுளச்சீட்டு** - *தெய்வசித்தமறியுஞ் சீட்டு.*

**திருவுளமத்தியஸ்தம்** - *தேவமத்தி யட்சம்.*

**திருவுளம்** - *திவ்வியசித்தம்.*

**திருவுளம்பற்றுதல்** - *கிருபையாய்ச் சொல்லுதல்.*

**திருவுளம்வைத்தல்** - *கிருபைபுரிதல்.*

**திருவுறுப்பு** - *நுதன்மேலணி.*

**திருவூஞ்சல்** - *தெய்வவூஞ்சலாட்டு.*

**திருவெனற்சாரம்** - *காசிச்சாரம்.*

**திருவேடம்** - *சமயவேடம், சிவவேடம்.*

**திருவேரகம்** - *சுப்பிரமணியராறிடத் தொன்று.*

**திருவொற்றாடை** - *விக்கிரகங்கட்குச் சார்த்துமாடை.*

**திருவோணம்** - *ஓர்நாள்.*

**திருவோலக்கம்** - *மகாதிவ்வியசபை.*

**திருனகம்** - *திருணகம்.*

**திரேககரணம்** - *இராசியைமூன்றாய்ப் பகிருதல்.*

**திரேககரணாதிபன்** - *திரேககரணத் ததிபன்.*

**திரேகம்** - *தேகம், மூன்று.*

**திரேசந்தி** - *திராய்.*

**திரேதம், திரேதாயுகம்** - *இரண்டாம் யுகம்.*

**திரேதாக்கினி** - *முத்தீ.*

**திரேத்து** - *நிறைவு.*

**திரை** - *இடுதிரை, உடற்றிரை, கடல், திரையென்னேவல், திரைவு, புனற்றிரை, யாறு.*

**திரைச்சீலை** - *மறைப்பீட்டுச்சீலை.*

**திரைதல்** - *சுருங்குதல், பால்முதலிய கண்விடுதல்.*

**திரைத்தல்** - *திரைக்குதல்.*

**திரைப்பு** - *திரைதல்.*

**திரைப்புடைவை** - *திரைச்சீலை.*

**திரையல்** - *சுருங்கல், வெற்றிலை.*

**திரையன்** - *தொண்டைமான், நெய் தனிலத்தலைவன்.*

**திரையெறிதல்** - *திரைவீசுதல்.*

**திரைவிழுதல்** - *உடறிரங்குதல், சுருங்குதல், திரைதல்.*

**திரைவு** - *திரைப்பு.*

**திரோகதம்** - *அதரிசனம்.*

**திரோகிதம்** - *மறைவு.*

**திரோதசத்தி** - *பஞ்சசத்தியினொன்று.*

**திரோதம், திரோதயம்** - *பஞ்சகிருத் தியத்தொன்று, மறைவு.*

**திரோதாயி, திரோதானசத்தி** - *பஞ்ச சத்தியினொன்று.*

**திரோதானம்** - *திரைச்சீலை, மறைப்பு.*

**திரோபவம், திரோபாவம்** - *மயக்கம்.*

**திரோபவித்தல்** - *மறைத்தல்.*

**திலகடம், திலகற்கம்** - *பிண்ணாக்கு.*

**திலகம்** - *கலித்துறை, சிந்தூரம், சுட்டி, திலோதகம், பொட்டு, மஞ்சாடிமரம், மேன்மை.*

**திலகலம்** - *செக்கு.*

**திலகாசிரயம்** - *நெற்றி.*

**திலகாளகம்** - *கரும்புள்ளி.*

**திலதம்** - *சுட்டி, நெற்றித்திலதம்.*

**திலதயிலம்** - *நல்லெண்ணெய்.*

**திலதற்பனம்** - *எள்ளுந்தண்ணீரு மிறைத்தல்.*

**திலதேனு** - *தானஞ்செய்யஎள்ளினாற் செய்தபசு.*

**திலபகம்** - *தூபம்.*

**திலபருணி, திலபருணிகை** - *சந்தனம்.*

**திலபிச்சடம்** - *எட்பாகு.*

**திலபுஞ்சம்** - *ஆணெள்.*

**திலமயூரம்** - *ஓர்விதமயில்.*

**திலமலம்** - *பிண்ணாக்கு.*

**திலம்** - *எள், மஞ்சாடிமரம்.*

**திலரசம்** - *எண்ணெய்.*

**திலவகம்** - *வெள்ளிலோத்திரம்.*

**திலாட்சாரம்** - *திலாலவணம்.*

**திலு** - *மூன்று.*

**திலோதகம்** - *எள்ளுந்நீரும்.*

**திலோத்தமை** - *ஓரரம்பை.*

**தில்** - *அசைச்சொல், ஒழியிசை, காலம், விழைவு.*

**தில்லமெழுகு** - *தில்லைமெழுகு.*

**தில்லம்** - *காடு.*

**தில்லியம்** - *எட்சாட்டி.*

**தில்லுப்பில்லு** - *சண்டை, தருக்கம், மாறுபாடு.*

**தில்லை** - *ஓர்மரம், சிதம்பரம்.*

**தில்லைநாயகம்** - *ஓர்நெல்.*

**தில்லைநாயகர்** - *சிதம்பரேசுபரன்.*

**தில்லைமூவாயிரர்** - *சிதம்பரசேத்திர வுரிமைப்பார்ப்பார்.*

**தில்லையம்பலம்** - *கனகசவை.*

**தில்லையம்பலவாணன்** - *சிதம்பரேசு பரன்.*

**தில்லைவனம்** - *சிதம்பரதலம்.*

**திவசகரன்** - *சூரியன், விடியல்.*

**திவசம்** - *சிராத்தம், நாள்.*

**திவசாத்தியம், திவசாவசானம்** - *அந்தி.*

**திவச்சுவான்** - *துவாதசாதித்தரிலொருவன்.*

**திவடல்** - *துவளுதல்.*

**திவண்டல்** - *துவளல்.*

**திவம்** - *ஆகாயம், காடு, தோற்றம், நாள், மோக்கம், விளக்கம்.*

**திவரம்** - *நாடு.*

**திவலுதல்** - *சாதல்.*

**திவலை** - *துளிமழை, மழைத்துளி.*

**திவவு** - *படி, வீணைவலிக்கட்டு.*

**திவளல்,திவளுதல்**-*துவளல், மெலிதல்.*

**திவறல்** - *சாதல்.*

**திவா** - *பகல்.*

**திவாகரம்** - *ஓர்நிகண்டு, காகம், சூரிய காந்தப்பூ.*

**திவாகரன்** - *ஓர் நூலாசிரியன், சூரியன், நாவிதன்.*

**திவாக்கீர்த்தி** - *ஆந்தை, சண்டாளன், நாவிதன்.*

**திவாசுத்தம்** - *பகனித்திரை.*

**திவாடனம்** - *காக்கை.*

**திவாநிசம்** - *இராப்பகல்.*

**திவாந்தம்** - *ஆந்தை.*

**திவாபீதம்** - *ஆந்தை, வெண்டாமரை.*

**திவாபீதன்** - *கள்வன்.*

**திவாபீதி** - *ஆந்தை.*

**திவாமணி** - *சூரியன்.*

**திவாமத்தியம்** - *நடுப்பகல்.*

**திவாராத்திரம், திவாராத்திரி** - *இராப்பகல்.*

**திவோதாசன்** - *ஓரரசன்.*

**திவ்வியகந்தம்** - *கராம்பு.*

**திவ்வியகாயனன்** - *கந்தருவன்.*

**திவ்வியதிருட்டி** - *ஞானநோக்கு, தெய்வீகபார்வை.*

**திவ்வியது** - *திவ்வியமானது.*

**திவ்வியநானம்** - *சூரியகிரணம் பாயு மழைத்தூறலிற்படிதல், இஃது ஏழ்வகைநானத்தொன்று.*

**திவ்வியம்** - *ஆணை, இனிமை யானது, ஓர்வகைச்சந்தனம், கராம்பு, தெய்வீகமானது, மேன்மையானது.*

**திவ்வியரதம்** - *நறுஞ்சுவை.*

**திவ்வியரத்தினம்** - *சிந்தாமணி, சூடாமணி.*

**திவ்வியவருஷம்** - *தேவவருடம்.*

**திவ்வியாதிவ்வியம்** - *தெய்வீகமும் மனுஷீகமும்.*

**திவ்வியாத்திரம்** - *தேவர்களாற் கொடுக்கப்பட்டஅம்பு.*

**திவ்வியோதகம்** - *தீர்த்தநீர், மழைத் தண்ணீர்.*

**திளைத்தல்** - *அழுந்துதல், அனுபவித்தல், நிறைதல், நெருங்குதல், பெருகுதல்.*

**திறக்கு** - *காரியம்.*

**திறக்குதல்** - *அதிகப்படல், திறத்தல், துறக்குதல்.*

**திறத்தல்** - *திறக்குதல், வலுத்தல், வழிவெட்டிவிடுதல், விரித்தல், விளக்குதல்.*

**திறத்தார்** - *பக்கத்தார்.*

**திறத்தி** - *மருத்துவிச்சி.*

**திறந்தறை** - *அரணற்றது.*

**திறபு** - *ஈயம், துத்துநாகம்.*

**திறப்படுதல்** - *தேறுதல், பலப்படுதல்.*

**திறப்பணம்** - *துறப்பணம்.*

**திறப்பாடு** - *வகை, வலிமை.*

**திறப்பு** - *காவலின்மை, துறப்பு.*

**திறமை** - *தகுதி, வகை, வலி.*

**திறம்** - *உச்சிதம், காரணம், குணம், குறைநரம்புள்ளவீணை, கூறுபாடு, தத்துவம், தன்மை, திறமை, பக்கம், பாக்கியம், மேன்மை, வலி.*

**திறம்பல், திறம்புதல்** - *தவறுதல், மாறுபடல்.*

**திறயம்** - *திரயம்.*

**திறலோன்** - *திண்ணியன்.*

**திறல்** - *பகை, போர், வலி.*

**திறவறிதல்** - *மறைத்திருப்பதையறிதல், உளவுபார்த்தல்.*

**திறவாளி** - *காரியகிரகஸ்தன், விவேகி திறவான், வலியவன்.*

**திறவு** - *திறத்தல், வழி, உளவு.*

**திறவுகோல்** - *திறப்பு.*

**திறவுண்ணல்** - *திறபடல்.*

**திறனில்யாழ்** - *நெய்தல்யாழ்த்திறம்.*

**திறன்** - *காரணம், குணம், கூறுபாடு.*

**திறுதட்டம், திறுதிட்டம்** - *நேரேநிற்றல்.*

**திறுதியை** - *திருதியை.*

**திறுதிறுத்தல்,திறுதிறுப்பு, திறுதிறெனல்** - *அச்சக்குறிப்பு.*

**திறேதம்** - *திரேதம்.*

**திறை** - *அரசிறை.*

**திறைகொள்ளுதல்** - *திறைவாருதல், வெல்லுதல்.*

**திறையளத்தல்** - *இறைகொடுத்தல்.*

**திற்றி** - *தின்றற்குரியன.*

**தினகரன்** - *சூரியன்.*

**தினகவி** - *அரசர்க்குப் புகழ்ச்சி யாயந்தி சந்திசொல்லுங்கவி, தினகவிப்புலவன்.*

**தினகாலம்** - *நித்தமும்.*

**தினகேசவம்** - *இருள்.*

**தினசேரி** - *நித்தம்.*

**தினத்திரயம்** - *ஒருநாளில்மூன்று பெருநாள்சம்பவிப்பது.*

**தினந்தினம்** - *நாளுக்குநாள்.*

**தினபலம்** - *ஐந்தாம்,ஆறாம்,ஏழாம், எட்டாம், பதினொன்றாம், பன்னி ரண்டாமிராசிகள், நிதநடக்கும் பலன்.*

**தினப்பாடு** - *தினசேரி.*

**தினப்பிரணி, தினமணி** - *சூரியன்.*

**தினமானம்** - *நித்தமும்.*

**தினம்** - *நாள், பகல்.*

**தினவிருத்தி** - *நாடோறும், நாள் வேலை, நித்தம்.*

**தினவு** - *சொறிவு.*

**தினவுதின்றல், தினவெடுத்தல்** - *சொறிதல்.*

**தினாங்கிசம்** - *சாமம்.*

**தினாதி** - *விடியல்.*

**தினாதினம்** - *பிரதானநாள், பிரதானப் பிரதானநாள்.*

**தினாந்தகம்** - *இரவு.*

**தினாந்தம்** - *மாலைப்பொழுது.*

**தினாந்தரம்** - *ஒன்றைவிட்டொரு நாள், நாடோறும்.*

**தினாமசம்** - *நாளின்பங்கு.*

**தினாரம்பம்** - *வைகறை.*

**தினாவசானம்** - *அந்தி.*

**தினிகை** - *நாட்கூலி.*

**தினுசு** - *வகை.*

**தினுசுவாரி** - *பலவகை.*

**தினை** - *ஓர்சாமை, சிறுமை.*

**தினைக்குருவி** - *ஓர்குருவி.*

**தினைச்சாமை** - *ஓர்சாமை.*

**தினைப்புனம்** - *தினைவிளைபுலம்.*

**தின்பனவு** - *உணா.*

**தின்மை** - *தீமை.*

**தின்றல்** - *மெல்லுதல், அஃது நால் வகையுணவினொன்று.*

**தின்றி** - *தீன்.*

**தின்னல்** - *தின்றல்.*

**தின்னாத்தீன்** - *இழிந்தபோசனம், நிந்தைப்பட்டு வாங்கிப் புசிக்கும் புசிப்பு.*

**தின்னுகை** - *தின்னுதல்.*

**தின்னுதல்** - *தின்னல்.*

## தீ

**தீ** - *அறிவு, இனிமை, ஓரெழுத்து, தீமை, தீயென்னேவல், நரகம்,*

நெருப்பு, அஃது அட்ட மூர்த்தத் தொன்று, பஞ்ச பூதியத்து மொன்று, உபாயவழி.

**தீக்கஞ்சி** - கருப்பூரம்.

**தீக்கடன்** - ஈமக்கடன்.

**தீக்கடைகோல்** - ஞெலிகோல்.

**தீக்கட்டி** - அக்கினிக்கட்டி.

**தீக்கணம்** - நேரசை நடுவுந் நிரை யசையிருபாலுந்நிற்பன.

**தீக்கதர்** - தீட்சதர்.

**தீக்கதிகரும்பச்சை** - நாகப்பச்சை.

**தீக்கதிர்** - உலையாணிக் கோல் சூரியன்.

**தீக்கரண்டி** - நெருப்பகப்பை.

**தீக்கருமம்** - ஈமக்கிரியை, துற்கிரியை.

**தீக்கல்** - நெருப்புக்காலுங்கல்.

**தீக்காய்தல்** - குளிர்காய்தல்.

**தீக்காரியம்** - அக்கினிகருமம், பொல் லாங்கு.

**தீக்கித்தல்** - தீட்சித்தல்.

**தீக்குணம்** - துற்குணம்.

**தீக்குணர்** - கீழ்மக்கள்.

**தீக்குண்டம்** - அக்கினிவளர்க்குங்குழி.

**தீக்குதல்** - கருகுவித்தல், தீயச்செய்தல்.

**தீக்குதித்தல்** - ஆவேசமுதலியவற் றாற்றீய்ப் பாய்தல்.

**தீக்குருவி** - தழல்விழுங்கி.

**தீக்குவெறுங்குகை** - சவுக்காரம்.

**தீக்குளித்தல்** - அக்கினியிற்படிதல்.

**தீக்குறி** - துற்குறி.

**தீக்கூர்மை** - இந்துப்பு, திலாலவணம்.

**தீக்கை** - தீட்சை, விரதநியமம்.

**தீக்கையோன்** - அரன், குரு, தீட்சை பெற்றோன்.

**தீக்கோள்** - துற்கிரகம்.

**தீங்கனி, தீங்காய்** - உருசியானபழம்.

**தீங்கு** - குற்றம், தீமை.

**தீங்குணர்** - துட்டர்.

**தீசகன்** - ஆலோசனைகாரன், உபாத்தி.

**தீச்சகுனம்** - துற்சகுனம்.

**தீச்சடம்** - அமுரி.

**தீச்சட்டி** - நெருப்புச்சட்டி.

**தீச்சலம்** - கடனுரை.

**தீச்சுடர்** - வெடியுப்பு.

**தீச்சொல்** - பழிச்சொல்.

**தீஞ்சுவை** - நற்சுவை.

**தீஞ்சொல்** - இனியசொல், நற்சொல்.

**தீட்சணகண்டகம்** - முண்ணாவல்.

**தீட்சணகந்தகம்** - ஈரவெண்காயம்.

**தீட்சணகம்** - வெண்கடுகு.

**தீட்சணதண்டுலம்** - திப்பிலி.

**தீட்சணபத்திரம்** - அலரி.

**தீட்சணபுட்பம்** - கராம்பு.

**தீட்சணம்** - ஆயுதம், இரும்பு, உக்கிரம், உப்பு, உறைப்பு, கூர்மை, கொள் ளை நோய், கோபம், சீக்கிரம், நஞ்சு, போர், மரணம், வெப்பம்.

**தீட்சணரசம்** - வெடியுப்பு.

**தீட்சதர்** - ஓர்வகைப்பார்ப்பார், தீட்சைபெற்றோர்.

**தீட்சதன், தீட்சாவான்** - தீட்சை பெற்றோன்.

**தீட்சம்** - சம்பவிப்பதைவெறாதனு பவித்தல்.

**தீட்சித்தல்** - தீட்சைகொடுத்தல்.

**தீட்சை** - உபதேசம்.

**தீட்சைகேட்டல்** - உபதேசம் பெறுதல்.

**தீட்சைகொடுத்தல், தீட்சை பண்ணு தல், தீட்சைவைத்தல்** - உபதேசங் கொடுத்தல்.

**தீட்டம்** - ஆசூசம்.

**தீட்டலரிசி** - தவிடுநீங்கமினுக்கின வரிசி.

**தீட்டல்** - தீட்டுதல்.

**தீட்டு** - அழுக்கு,ஆசூசம், எழுதுதல், சூதகம், தீட்டென்னேவல், மகளிர் சூதகம்.

**தீட்டுகோல்** - எழுதுகோல்.

**தீட்டுக்கல்** - சாணைக்கல், மாக்கல்.

**தீட்டுக்கழித்தல்** - துடக்குக்கழித்தல்.

**தீட்டுக்காரி** - சூதககாரி.

**தீட்டுக்குற்றி** - ஆயுதந்தீட்டுந்தடி.

**தீட்டுச்சீலை** - அழுக்குச்சீலை.

**தீட்டுதல்** - அழுத்துதல், எழுதுதல், கட்டுதல், கூராக்கல், சாதித்தல், சித்திரித்தல், மினுக்குதல்.

**தீட்டுத்தடி** - ஆயுதந்தீட்டுதடி.

**தீட்டுப்படுதல்** - அழுக்குப்படுதல், அனாசாரப்படுதல், குற்றப்படு தல், சூதகநீர்ப்பாய்தல்.

**தீட்பு** - இழிவு, கீழ்மை.

**தீண்டல்** - தொடல்.

**தீண்டியம்** - பவளக்குறிஞ்சி.

**தீண்டுகை** - தீண்டுதல்.

**தீண்டுதல்** - தொடுதல், அஃது மெய்ப் பரிசமெட்டினொன்று.

**தீல்** - கருகுதல், தீஞ்சுபோதல்.

**தீதி** - தாகம்.

**தீதிலி** - குற்றமில்லான்.

**தீது** - குற்றம், தீமை.

**தீதை** - அறிவு, கன்னி.

**தீத்தகம்** - பொன்.

**தீத்தசிகுவை** - நரி.

**தீத்தட்டி** - தீதருங்கருவி.

**தீத்தட்டிக்கல்** - தீக்கல்.

**தீத்தட்டிக்குடுக்கை** - சக்கைமுக்கி.

**தீத்தட்டிவளையம்** - தீக்கல்லைத் தட்டும்வளையம்.

**தீத்தபிங்கலம்** - சிங்கம்.

**தீத்தம்** - சிங்கம், சிவாகமமிருபத் தெட்டினொன்று, பிரகாசம், பெருங்காயம், பொன்.

**தீத்தரசம்** - நாங்கூள்.

**தீத்தலோகம்** - நிறம், மாந்துளிர்க்கல், வெண்கலம்.

**தீத்தலோசனம்** - பூனை.

**தீத்தாங்கம்** - மயில்.

**தீத்தாங்கி** - ஓர் கருவி.

**தீத்தாட்சம்** - பூனை, மயில்.

**தீத்தி** - அழகு, சரகதி, பிரகாசம், வெண்கலம்.

**தீத்திரள்** - ஊழித்தீ, சுவாலைக் கூட்டம்.

**தீத்ததீண்டல்** - கலியாணம்.

**தீத்தீண்டுகையான்** - சிவன்.

**தீத்தெய்வம்** - அக்கினி.

**தீத்தொழில்** - அக்கினிகருமம், துற் செய்கை.

**தீத்தோபலம்** - சூரியகாந்தக்கல்.

**தீநா** - கப்பற்காரர்துறைபிடிக்கக் கொளுத்தினவெளிச்சம்.

**தீநாற்றம்** - முடை.

**தீநிறம்** - மாந்துளிர்க்கல்.

**தீநுரை** - கடனுரை.

**தீந்தமிழ்** - இனியதமிழ், நற்றமிழ்.

**தீந்திரியம்** - அறிகருவி.

**தீபகம்** -ஓரலங்காரம்,அஃது ஓரிடத்து நின்ற மொழி பலவிடத்து நின்று பொருடருவது, சந்திரகிரணம், புட்படுக்கும்படி கொண்டு போகிறபுள், மஞ்சள், விளக்கு.

**தீபகம்பம்** - விளக்குத்தண்டு.

**தீபகாந்தி, தீபகாந்தியோன்** - வயிரக்கல்.

**தீபகூபி, தீபகோரி** - விளக்குத்திரி.

**தீபக்கல்** - தீபக்கருவி.

**தீபக்கொடிச்சி** - கருப்பூரம்.

**தீபங்காட்டல்** - தீபாற்சனைசெய்தல், அஃது புண்ணிய மொன்பதி னொன்று.

**தீபசிகை** - விளக்கச்சுவாலை.

**தீபதைலி** - ஆமணக்கு.

**தீபபாதவம்** - விளக்குத்தண்டு.

**தீபபுட்பம்** - சண்பகப்பூ.

**தீபமத்திகை** - *விளக்குத்தண்டு.*

**தீபம்** - *சோதிநாள், தீவு, விளக்கு, அஃது இராசசின்னத்தொன்று.*

**தீபவதி** - *யாறு.*

**தீபவராடி** - *வராடித்திறத்தினொன்று.*

**தீபவிருட்சம்** - *விளக்குத்தண்டு.*

**தீபனம்** - *ஆகாரம், பசி, பிரகாசம், மஞ்சள், நைவேத்தியஞ்செய்தல், மிகப்பிரகாசம்.*

**தீபாக்கினி** - *ஓர்சுடர்கொண்டெரியு நெருப்பு.*

**தீபாராதனை** - *விளக்காலாத்தி.*

**தீபாலி, தீபாவலி, தீபாவளி** - *தீவாளி.*

**தீபிகை** - *விளக்கு.*

**தீப்படுதல்** - *அழிதல், எரிச்சலடைதல், எரிந்துபோதல்.*

**தீப்பாய்தல்** - *தீக்குதித்தல், தீமிதித்தல்.*

**தீப்பி** - *நெருப்பு.*

**தீப்பியமானம்** - *பிரவை.*

**தீப்பியம்** - *சுவாலை.*

**தீப்பிரகாசி** - *குங்குவியம்.*

**தீப்பிரம்** - *பிரவை.*

**தீப்பிரயகம்** - *ஓமம்.*

**தீப்பு** - *எரிப்பு, கருக்குதல்.*

**தீப்பொறி** - *கங்கம்.*

**தீப்போடுதல்** - *குரூரஞ்செய்தல், கோபித்தல், நெருப்பிட்டுச் சுடுதல்.*

**தீமலம்** - *கரி.*

**தீமிதித்தல்** - *நெருப்பினடத்தல்.*

**தீமுகம்** - *உலைமுகம், நெருப்பெரியுமிடம்.*

**தீமுறுகல்** - *ஓர்சரக்கு, அஃது வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினொன்று.*

**தீமை** - *பொல்லாங்கு.*

**தீமைக்கஞ்சல்** - *பொல்லாங்கிற்குப் பயப்படல், அஃது தயாவிருத்தியெட்டினொன்று.*

**தீமொழி** - *சாபம், பொல்லா வார்த்தை.*

**தீம்** - *இனிமை, தித்திப்பு.*

**தீம்பண்டம்** - *நற்பண்டம்.*

**தீம்பர்** - *கீழ்மக்கள், தீங்குசெய்வோர்.*

**தீம்பால்** - *தித்திப்பானபால்.*

**தீம்பி** - *துட்டை.*

**தீம்பு** - *கீழ்மை, தீது.*

**தீம்புகை** - *நறும்புகை.*

**தீய** - *இனிமையான, சுத்தமான, தீதான.*

**தீயகம்** - *நரகம்.*

**தீயது** - *ஆரதம், இனியது, தீங்குள்ளது.*

**தீயம்** - *தித்திப்பு.*

**தீயர்** - *கீழ்மக்கள், பொல்லாதவர்கள், வேடர்.*

**தீயல்** - *தீய்ந்தது, பொரிக்கறி.*

**தீயளி** - *காய்.*

**தீயறம்** - *பொல்லாங்கு.*

**தீயன** - *இனிமையுள்ளன, சுத்தமுள்ளன, தீங்குள்ளன.*

**தீயன்** - *தீயோன்.*

**தீயாக்கீரை** - *பொன்னாங்காணி.*

**தீயார்** - *தீயோர்.*

**தீயின்வயிரம்** - *மீனம்பர்.*

**தீயொழுக்கம்** - *துன்மார்க்கம்.*

**தீயோர்** - *தீம்பர்.*

**தீய்ச்சலம்** - *அக்கினிக்கட்டி.*

**தீர** - *முற்றாக.*

**தீரத்துவம்** - *அறிவுடைமை, உறுதி, தைரியம்.*

**தீரம்** - *அம்பு, அறிவு, கரை, குளிர், சிறுவரம்பு, பெலன், மஞ்சள், மனத்தைரியம், வலி*

**தீரன்** - *திண்ணியன்.*

**தீராந்தரம்** - *மறுகரை.*

**தீராந்தி** - *மச்சுமரம்.*

**தீராப்பசியன்** - *மகோதரன்.*

**தீராமை** - *கொடுமை.*

**தீரை** - *அறிவுடையாள்.*

**தீர்க்ககதி, தீர்க்ககாடிகம்** - *ஒட்டகம்.*

**தீர்க்ககேசம்** - *நெடுமயிர்.*

**தீர்க்கக்கிரீபம்** - *ஒட்டகம்.*

**தீர்க்கசங்கம்** - *ஒட்டகம், ஓர்நாரை, தொடை.*

**தீர்க்கசதுரம்** - *சரிசதுரம், நீண்ட சதுரம்.*

**தீர்க்கசத்திரம்** - *ஓர்யாகம்.*

**தீர்க்கசந்தி** - *எழுத்து விகாரப் பட்டுப் புணரும் புணர்ச்சியினொன்று, அஃது நிலைமொழியீறும் வரு மொழி முதலுநிற்கும் அகர ஆகாரங் கெட ஆகாரமும் இகர ஈகாரங்கெட ஈகாரமும் உகர ஊகாரங்கெட ஊகாரமுந் தோன் றுதல்.*

**தீர்க்கசாலம்** - *சாலமரம்.*

**தீர்க்கசிகுவம்** - *பாம்பு.*

**தீர்க்கசீவம்** - *நெடாயுள்.*

**தீர்க்கசுமங்கலி** - *பூரணசுமங்கலி.*

**தீர்க்கசூரதம்** - *நாய்.*

**தீர்க்கசூரம்** - *நெட்டுயிரெழுத்து.*

**தீர்க்கதண்டம்** - *ஆமணக்கு, சாட் டாங்கம், பூரணவணக்கம்.*

**தீர்க்கதரிசனம்** - *முக்கால வருத்த மான மறிதல்.*

**தீர்க்கதரிசி** - *முக்காலவருத்தமான மறிவோன்.*

**தீர்க்கதரு** - *பனைமரம்.*

**தீர்க்கதிருட்டி** - *உற்றுப்பார்த்தல்.*

**தீர்க்கநாதம்** - *சங்கு.*

**தீர்க்கநிச்சுவாசம்** - *பெருமூச்சு.*

**தீர்க்கநித்திரை** - *மரணம்.*

**தீர்க்கபத்திரகம், தீர்க்கபத்திரம்** - *உள்ளி.*

**தீர்க்கபாதபம்** - *தென்னமரம்.*

**தீர்க்கபிருட்டம்** - *பாம்பு.*

**தீர்க்கமாருதம்** - *யானை.*

**தீர்க்கமூலம்** - *ஓர்வகைவில்வம், தொட்டாற்சுருங்கி.*

**தீர்க்கம்** - *அந்தரம், ஆறாமேழாமி ராசிகள், திட்டம், தெளிவு, நிச்சயம், நீளம், நெட்டுயிரடையாளம், நெட்டுயிரெழுத்து, பூரணம்.*

**தீர்க்கரதம்** - *பன்றி.*

**தீர்க்கராத்திரம்** - *நீண்டராத்திரி, நெடுங்காலம்.*

**தீர்க்கவசனம்** - *உறுதிச்சொல்.*

**தீர்க்கவத்திரம்** - *யானை.*

**தீர்க்கவருணம்** - *நெட்டுயிரெழுத்து.*

**தீர்க்கவற்சிகை** - *முதலை.*

**தீர்க்கவைரம்** - *நெடு நாளையில் விரோதம்.*

**தீர்க்காசனம்** - *பாம்பு.*

**தீர்க்காயு, தீர்க்காயுசு** - *காகம், நீடிய ஆயு, பட்டுப் பருத்தி, மார்க் கண்டன்.*

**தீர்க்காயுஷியம்** - *நெடுங்காலம்.*

**தீர்க்காயுதம்** - *ஈட்டி, பன்றி*

**தீர்தல்** - *இட்டமாதல், எழுதல், செல்லுதல், நடத்தல், நிசமாமதல், நீளம், நீளித்தல், முடிதல், விடுதல், வெடிதீர்தல், வெட்டல்.*

**தீர்த்தகர்** - *சமணகுரு.*

**தீர்த்தம்** - *திருவிழா, தீ, நீர், பிறப்பு, புண்ணியதீர்த்தம், பெண்குறி, யாகம்.*

**தீர்த்தர்** - *கடவுளர், பரிசுத்தர்.*

**தீர்த்தல்** - *இட்டமாக்கல், நீக்கல், முடித்தல், விடுத்தல்.*

**தீர்த்தவாகம்** - *மயிர்ச்சுருள்.*

**தீர்த்தவாசி** - *யாத்திரைகாரன்.*

**தீர்த்தன்** - *அருகன், ஆசான், ஆலோ சனைக்காரன், குரு, சிவன், பரிசுத்தன்.*

**தீர்த்தி** - *பரிசுத்தவாட்டி, பார்ப்பதி, யாறு.*

**தீர்த்திகை** - *யாறு.*

**தீர்ந்தவன்** - *துறந்தவன், தேறினவன், தைரியவான்.*

**தீர்ப்பு, தீர்மானம்** - *நியமம், நிவிர்த்தி, முடிப்பு.*

**தீர்மானித்தல்** - *நிச்சயித்தல்.*

**தீர்மானிப்பு** - *தீர்மானம்.*

**தீர்வு** - *தீர்வை, முடிப்பு, விலக்கு.*

**தீர்வைகீரி** - *சுங்கம், தீர்மானம், பிரேதக்கிரியையினொன்று.*

**தீர்வைக்காரன்** - *ஆயக்காரன்.*

**தீர்வைச்சரக்கு** - *ஆயமிறுக்குஞ்சாமான்.*

**தீர்வைத்துறை** - *ஆயத்துறை.*

**தீவகம்** - *தீபகம்.*

**தீவட்டி** - *தீவத்தி.*

**தீவத்தி** - *ஓர்விளக்கு.*

**தீவரம்** - *திவிரம்.*

**தீவலஞ்செய்தல்** - *கலியாணச்சடங்கினொன்று, கலியாணம்.*

**தீவளர்த்தல்** - *அக்கினிவளர்த்தல்.*

**தீவளர்ப்போர்** - *முனிவர்.*

**தீவறை** - *பெருநெருப்பெரிக்குங் குழியடுப்பு.*

**தீவாந்தரம்** - *தீவு, வெளி.*

**தீவலஞ்செய்தல்** - *அஃது அக்கினிப் பிரதட்சணம்பண்ணல்.*

**தீவாளி** - *தீபாவலி.*

**தீவான்** - *கரையான்.*

**தீவி** - *புலி.*

**தீவிகை** - *தீபிகை.*

**தீவியது** - *இனியது.*

**தீவிரம்** - *சடுதி, சூரியகிரணம், நரகம், பெருங்கோபம், மூர்க்கம்.*

**தீவிரவேதனை** - *மிகுவேதனை.*

**தீவிரித்தல்** - *சீக்கிரம்பண்ணல்.*

**தீவிளக்கும்வயிரம்** - *மீனம்பர்.*

**தீவினை** - *பாவம், அஃது இருவினையினொன்று.*

**தீவு** - *கடலிடைக்குறை, கடலுட்டிடர், கண்டம், சுவை, தீவாந்தரம், தூரதேசம்.*

**தீவுபற்று** - *தீவுப்புறம்.*

**தீவேட்டல்** - *கலியாணம், யாகம் பண்ணல்.*

**தீவேள்வி** - *கலியாணம்.*

**தீழ்ப்பு** - *கீழ்மை, தீட்டு.*

**தீற்றுக்கல்** - *மணியாசிக்கல்.*

**தீற்றுதல்** - *ஊட்டுதல், சுத்தம் பண்ணுதல், சுவர்முதலிய மெழுகுதல்.*

**தீற்றுப்பலகை** - *மணியாசிக்கட்டை.*

**தீனம்** - *இட்டம், எளிமை, குரூரம், கேடு.*

**தீனர்** - *இரப்போர், தீம்பர்.*

**தீனன்** - *தரித்திரன், பெருந்தீனன்.*

**தீனி** - *தீன்.*

**தீன்** - *உணவு, உண்டல்.*

**தீன்பண்டநல்கல்** - *உணாப்பொருளீதல், அஃது அறம்முப்பத்திரண்டினொன்று.*

**தீன்பண்டம்** - *இரசவஸ்து.*

# து

**து** - *அனுபவம், ஒரெழுத்து, சேர்மானம், இருதிணை முப்பாலொருமைத் தன்மை விகுதி (உம்) யான்நடத்து, துவ் வென்னேவல், பிரிவு, அசைத்தல், எரித்தல் கெடுத்தல், நடத்தல், நிறைதல், வருத்தல், வளர்தல், பிறவினை விகுதி.*

**துகளிதமாடல்** - *துகளாக்கல்.*

**துகளிதம்** - *தூள்.*

**துகள்** - *குற்றம், பராகம், புழுதி.*

**துகிதுபதி** - *மகளின்கணவன்.*

**துகிர்த்தாளி** - *பவளமல்லிகை.*

**துகிரிகை** - *சாந்து, சித்திரம்.*

**துகிர்** - *பவளம்.*

**துகிலிகை** - *எழுதுகோல், சித்திரம்.*

**துகில்** - *சீலை, விருதுக்கொடி.*

**துகினசயிலம்** - *இமயமலை.*

**துகினம்** - *சந்திரகிரணம், பனி.*

**துகினாத்திரி** - *இமயம்.*

**துகு** - *வருத்தம்.*

**துகூலம்** - *நொய்யபுடைவை.*

**துகைத்தல்** - *இடித்தல், உழக்கல், நசுக்கல், வருத்தல், வருந்துதல்.*

**துகையல்** - *துகைத்தபொருள்.*

**துக்ககன்** - *துயரமுள்ளோன்.*

**துக்கங்கொண்டாடுதல்** - *இழவு கொண்டாடுதல், புலம்புதல்.*

**துக்கசாகரம்** - *உலகம், பெருந்துக்கம்.*

**துக்கதோக்கியை** - *உதைகாலி.*

**துக்கத்திரயம்** - *கடவுளாலுமுயிர்த் தோற்றங்களாலும் பஞ்சபூதியங் களாலுமுண்டாகிறதுக்கம்.*

**துக்கம்** - *கிலேசம், குற்றம், துன்பம், நரகம், நோ.*

**துக்கராகம்** - *துக்கப்பாட்டிற்குரிய ராகம்.*

**துக்கவீடு** - *செத்தவீடு.*

**துக்காதீதம்** - *சுகம்.*

**துக்கி** - *துக்கமுடையோன், துக்கி யென்னேவல்.*

**துக்கிதம்** - *வருத்தம்.*

**துக்கித்தல்** - *கிலேசித்தல், புலம்பல், மனநோதல்.*

**துக்கிப்பு** - *துக்கம்.*

**துக்கு** - *கீழ்மை.*

**துக்குணி** - *அற்பம்.*

**துக்கை** - *மகளிர்சூதகம்.*

**துக்கைச்சி** - *குதகமுள்ளவள்.*

**துங்கசேகரம்** - *மலை.*

**துங்கதை** - *துங்கம்.*

**துங்கமந்தோச்சம்** - *கிரகவட்டத் தினதுதூரமானநிலை.*

**துங்கபத்திரி, துங்கபத்திரை** - *ஓர்யாறு.*

**துங்கம்** - *உயர்ச்சி, நுனி, பரிசுத்தம், பெருமை, மலை, வெற்றி.*

**துங்கரிகம்** - *காவிக்கல்.*

**துங்கன்** - *கிரகவட்டத்தின் தூரமான முனை, மேன்மையுடையோன்.*

**துங்கி** - *இரவு.*

**துங்கீசன்** - *சந்திரன், சிவன், சூரியன், திருமால்.*

**துசகம்** - *மாதளை.*

**துசம்** - *இருபிறப்புள்ளன, உமி, குங்கிலியம், கொடி, தவிடு, துவசம், பல்லு.*

**துசானலம்** - *உமித்தீ.*

**துச்சகம்** - *சுகந்தம்.*

**துச்தானியம்** - *பதர்.*

**துச்சத்துரு** - *ஆமணக்கு.*

**துச்சம்** - *கீழ்மை, கொம்மட்டி, பதர், பொய், வெறுமை.*

**துச்சவனன்** - *இந்திரன்.*

**துச்சன்** - *கீழ்மகன்.*

**துச்சி** - *அனுபவம், பரிட்சை, புசிப்பு, பூநீறு.*

**துச்சிமை** - *கீழ்மை.*

**துச்சில்** - *ஒதுக்கிடம், சூட்டு, தங்கு மிடம்.*

**துஞ்சர்** - *அசுரர்.*

**துஞ்சல்** - *துஞ்சுதல்.*

**துஞ்சற** - *முற்றாக.*

**துஞ்சுதல்** - *உறங்கல், சாதல், சோம் பல், நிலைபெறுதல், வாடுதல்.*

**துஞ்சுநிலை** - *கட்டில்.*

**துடக்கம்** - *தொடக்கம்.*

**துடக்கறுப்பான்** - *ஓர்செடி.*

**துடக்கு** - *ஆசூசம், கட்டு, சிக்கு, துடக் கென்னேவல், மகளிர் சூதகம்.*

**துடக்குதல்** - *கட்டுதல், தொடங்குதல், பொருத்துதல்.*

**துடங்கு** - *துடங்கென்னேவல், துலங்கு மரம்.*

**துடங்குதல்** - *தொடங்குதல்.*

**துடப்பம்** - *துடைப்பம்.*

**துடராமுறி** - *தொடராமுறி.*

**துடரி** - *தொடரி.*

**துடர்ச்சி** - *தொடர்ச்சி.*

**துடர்தல்** - *தொடர்தல்.*

**துடவை** - *உழவுகொல்லை, பூந்தோட்டம்.*

**துடி** - *அகில், இசங்கு, உடுக்கை, உதடு, ஏலம், காலதசப்பிரமாணத் தொன்று, அஃது நிமிடமெட்டுக் கொண்டது, காலநுட்பம், குமரனாடல், குறிஞ்சிப்பறை, கூதாளிச் செடி, சத்தகன்னிகை களாடல், துடியென்னேவல், பாலைநிலப் பறை, மேன்மை, வலி.*

**துடிசாத்திரம்** - *துடிநூல்.*

**துடிதுடிக்குதல்** - *துடிக்குதல், துட்டத் தனம்பண்ணல்.*

**துடிதுடிப்பு** - *துடியாட்டம், துட்டத் தனம், மிகுசுறுக்கு.*

**துடித்தல்** - *அசைதல், அதிகப்படுதல், உருக்கங்கொள்ளுதல், குதித்தல், கெறுவங்கொள்ளல், துள்ளுதல், பதறல், மின்னல்.*

**துடிநூல்** - *சரீராங்கத்துடிப்பினால் வருநயநட்டஞ்சொல்லுமோர்சாத்திரம்.*

**துடிப்பு** - *அசைவு, உருக்கம், கதிப்பு, சுறுக்கு, துட்டத்தனம், பதைப்பு.*

**துடியடி** - *யானைக்கன்று.*

**துடியன்** - *கோபமுள்ளவன், துட்டன், விரைவுள்ளவன்.*

**துடியாஞ்சி** - *இசங்கு.*

**துடியாட்டம்** - *துடிப்பு.*

**துடியிடை** - *பெண்.*

**துடுக்கன்** - *தீம்பன், துடியன்.*

**துடுக்கு** - *குறும்பு, தீக்குணம், விரைவு.*

**துடுப்பாற்றி** - *ஓர்மீன்.*

**துடுப்பு** - *நெய்த்துடுப்புமுதலியன, பூங்கொத்து, அகப்பை, மரக் கோற்கை.*

**துடுப்புக்கீரை** - *ஓர்கீரை.*

**துடுப்புள்ளான்** - *ஓர்குருவி.*

**துடுமெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**துடுவை** - *நெய்த்துடுப்பு.*

**துடை** - *சுவர்ப்புறத்து நீண்டவுத்திரம், துடையென்னேவல், தொடை.*

**துடைக்குதல், துடைத்தல்** - *அழித்தல், சீய்த்தல், தள்ளுதல், நாசம் பண்ணுதல், விட்டுவிடுதல், வீழ்த்தல்.*

**துடைப்பம்** - *வாருகோல்.*

**துடைப்பு** - *துடைத்தல்.*

**துடைவாசி** - *விஷமூங்கில்.*

**துடைவாழை** - *தொடைவாழை.*

**துட்கரம்** - *ஆகாயம், வருத்தப்பட்டு நிறைவேற்றுங்கிரியை.*

**துட்கல்** - *அச்சக்குறிப்பு.*

**துட்கிரமம்** - *எட்டாதது, ஒழுங்கற்றது.*

**துட்குதல்** - *வெருவுதல்.*

**துட்குலேயன்** - *இழிகுலன்.*

**துட்கெனல்** - *அச்சக்குறிப்பு.*

**துட்சணத்துவம்** - *பொல்லாங்கு.*

**துட்சணம்** - *அசப்பியம், பொல்லாங்கு*

**துட்டகண்டகன்** - *துட்சணன், நிற்பந்தன், மகாகுரூரன்.*

**துட்டகம்** - *பொல்லாங்கு.*

**துட்டக்குணம்** - *தீக்குணம்.*

**துட்டசித்தன்** - *கொடியோன்.*

**துட்டசிரோமணி** - *கொடியன்.*

**துட்டதேவதை** - *அக்கிரமதேவதை.*

**துட்டத்தனம்** - *தீக்குணம்.*

**துட்டத்தொழில்** - *துற்செய்கை.*

**துட்டநிக்கிரகம்** - *துட்டரையழித்தல்.*

**பிரட்டை** - *ஓர் செடி.*

**பிரணம்** - *பழமை.*

**பிரணயகலகம்** - *கலவியிற்பிணங்கல்.*

**பிரணயமானம்** - *தலைவனுக்குந் தலை விக்கு நடக்குநேயவிவாதம்.*

**பிரணயம்** - *அன்பு, கீழ்ப்படிதல், கலவி, கேட்டல், நம்பிக்கை, பழக்கம், மோக்கம்.*

**பிரணயனம்** - *கொடுத்தல், நடத்தல், பரப்புதல்.*

**பிரணருத்தினம்** - *ஆடல்.*

**பிரணவம்** - *ஓங்காரம், ஓர்பறை.*

**பிரணாசம்** - *அழிவு.*

**பிரணாதம்** - *காதுநோயினொன்று, பேரொலி.*

**பிரணாயம்** - *இணங்காமை, நிதார்த் தம், வெறுப்பு.*

**பிரணாலம்** - *மதகு.*

**பிரணி** - *தானம், தியானம், முயற்சி வாயில்.*

**பிரணிதி** - *ஒற்றன், கேட்டல், தோழன்.*

**பிரணிநாதம்** - *பேரொலி.*

**பிரணிபதனம், பிரணிபாதம்** - *வணங்கல்.*

**பிரணீதம்** - *உண்டாக்கப்பட்டது.*

**பிரண்டை** - *புரண்டை.*

**பிரதகம்** - *முன்பு.*

**பிரதக்கணம், பிரதட்சணம்** - *வலம் வருதல்.*

**பிரதமகற்பிகன்** - *பாலமாணாக்கன்.*

**பிரதமகாலம்** - *பூருவகாலம்.*

**பிரதமசிருட்டி** - *பூருவசிருட்டி.*

**பிரதமம்** - *முதல், விசேஷித்தது.*

**பிரதமை** - *ஒன்று, கடுக்காய், முதல், முதற்றிதி.*

**பிரதம்** - *கொடை, புகழ், பிரசித்தம்.*

**பிரதரம்** - *அம்பு, சுருக்கு, சுழலல், பிளப்பு, விறைப்பு.*

**பிரதலம்** - *அம்பு, பாதலம்.*

**பிரதனம், பிரதனை** - *கிழித்தல், நீளுதல், படையிலோர்தோகை, அஃது வாகினி மூன்று கொண்டது, புராதனம், யுத்தம், விரித்தல்.*

**பிரதன்** - *ஈகையாளன்.*

**பிரதாபதி** - *பாண்டு.*

**பிரதாபம்** - *உயர்ச்சி, பிரகாசம், மகிமை, வீரம், வெப்பம்.*

**பிரதாபனம்** - *நரகம்.*

**பிரதாரகம்** - *எத்து.*

**பிரதாரம்** - *கடத்தல்.*

**பிரதாவனம்** - *காற்று.*

**பிரதானதாது** - *சுக்கிலம்.*

**பிரதானம்** - *அங்குசம், கடவுள், கொடை, சுபாபம், புத்தி, விசேடம், வீம்பு.*

**பிரதானன்** - *முதன்மந்திரி, யானைப் பாகன்.*

**பிரதானி** - *அதிகாரி.*

**பிரதானிக்கம்** - *அதிகாரம்.*

**பிரதானியம்** - *பிரதானம்.*

**பிரதி** - *அற்பம், எதிர், எழுதிச் சேர்த்தல், பகுதி, பதில், மூலம், தடை, விகாதம்.*

**பிரதிகதி** - *அதைப்பு.*

**பிரதிகம்** - *அவல், குழந்தை.*

**பிரதிகஸ்தகன், பிரதிகஸ்தன்** - *பதிலாள்.*

**பிரதிகரணம்** - *வெறுத்தல்.*

**பிரதிகருமம்** - *அலங்கரித்தல், பதிற் கிரியை, மாற்று.*

**பிரதிகாசம்** - *பரிகாசம்.*

**பிரதிகாதம்** - *அதைத்தல், தடுத்தல், மோதுதல்.*

**பிரதிகாதனம்** - *கொல்லல்.*

**பிரதிகாந்தி** - *பிரதிவிம்பம்.*

**பிரதிகாயம்** - *அடையாளம், குறிப்பு.*

**பிரதிகாரகன்** - *வஞ்சகன், வாயில் காப்போன்.*

**பிரதிகாரணம்** - *உட்படுதல்.*

**பிரதிகாரம்** - *அணாப்பு, கதவு, பழிவாங்குதல், பதில்.*

**பிரதிகாரன்** - *வாயில்காப்போன்.*

**பிரதிகிரகணம்** - *பதில்வாங்கல்.*

**பிரதிகிருதி** - *பதில்செய்தல், பிரதிகாயம், பிரதிவிம்பம்.*

**பிரதிகூலம்** - *எதிர், கைகூடாமை, மாறுபாடு.*

**பிரதிகூலியம்** - *எதிரிடை.*

**பிரதிக்கியாதம்** - *சம்மதித்தல்.*

**பிரதிக்கினம்** - *சரீரம்.*

**பிரதிக்கினை** - *அத்தாட்சி, அறிக்கையிடுதல், சம்மதி, நேர்த்திக்கடன், பொருத்தனை, வேண்டியது.*

**பிரதிசங்காரம்** - *அழித்தல், குறைத்தல்.*

**பிரதிசங்கை** - *பயம்.*

**பிரதிசத்தம்** - *எதிரொலி.*

**பிரதிசந்தானம்** - *இச்சையடக்கம்.*

**பிரதிசமாதானம்** - *மாற்றுமருந்து.*

**பிரதிசம்** - *கோணதிசை.*

**பிரதிசரம்** - *கைக்கடகம், படைவகுப்பு, மாலை.*

**பிரதிசரன்** - *வேலைகாரன்.*

**பிரதிசருக்கம்** - *சிருட்டிப்பு, புராணத்தினோருறுப்பு.*

**பிரதிசாகிரம்** - *எச்சரிக்கை.*

**பிரதிசாந்தானிகன்** - *புலவன்.*

**பிரதிசாபம்**-*எதிர்ச்சபிப்பு, நிதானித்தல்.*

**பிரதிசாயை** - *சுரூபம், நிழல், பிரதிவிம்பம்.*

**பிரதிசாரணம்** - *இரணங்கட்டல், தள்ளல்.*

**பிரதிசிகுவை** - *உண்ணா.*

**பிரதிசிந்தனம்** - *ஆலோசித்தல்.*

**பிரதிசிரயம்** - *அடைக்கலவிடம், இருப்பிடம், கூட்டம், யாகசாலை.*

**பிரதிசிரவணம், பிரதிசிரவம்** - *சம்மதித்தல்.*

**பிரதிசீரை** - *திரைப்படாம்.*

**பிரதிசூரியகம்** - *சூரியமண்டலம், பல்லி.*

**பிரதிசூரியம்** - *பல்லி.*

**பிரதிசேதம்** - *எதிரிடை.*

**பிரதிஞ்ஞாபத்திரகம்** - *உறுதிச்சீட்டு.*

**பிரதிஞ்ஞாலிவிரோதம்** - *எதிர்நியாயம்.*

**பிரதிஞ்ஞானம்** - *சம்மதி.*

**பிரதிஞ்ஞேயன்** - *புகழ்வோன்.*

**பிரதிட்டாகலை** - *பஞ்சகலையினொன்று.*

**பிரதிட்டாபனம்** - *நிறுத்துதல்.*

**பிரதிஷ்டாவான்** - *கீர்த்தியுள்ளோன்.*

**பிரதிட்டை, பிரதிஷ்டை** - *இடம், எல்லை, ஓர்பா, கீர்த்தி, சடங்கு முடித்தல், தாபனம், நிறைவேற்றல், நேர்தல், பூமி.*

**பிரதிதன்** - *அறிவாளி.*

**பிரதிதாரணம்** - *யுத்தம்.*

**பிரதிதானம்** - *கைமாறு, திரும்பக்கொடுத்தல், பொருண்மாற்றுதல்.*

**பிரதிதி** - *கீர்த்தி.*

**பிரதிதிசம்** - *சகலஇடமும்.*

**பிரதிதினம்** - *நாடோறும்.*

**பிரதிதுரை** - *பதிற்றுரை.*

**பிரிதிதுவந்துவம்** - *எதிரிடை, விரோதம்.*

**பிரதிதுவனி** - *எதிரொலி.*

**பிரதிதேவன் –** *சூரியன், நாள்.*

**பிரதிதொனி** - *எதிரொலி.*

**பிரதித்தல்** - *உருபுகாட்டுதல், தோற்றுதல்.*

**பிரதிநாதம்** - *எதிரொலி.*

**பிரதிநிசம்** - *இரவோடிரா.*

**பிரதிநிதி** - *உருநாட்டு, பிரதிவிம்பம்.*

**பிரதிநியாயம்** - *பதில்நியாயம்.*

**பிரதிபட்சன்** - *எதிரி.*

**பிரதிபதகன்** - *எதிரிடைகாரன்.*

**பிரதிபதம்** - *அடிக்கடி.*

**பிரதிபதூரியம்** - *உவகைப்பறை.*

**பிரதிபத்தி** - *அடக்குதல், அதிகரித்தல், ஏய்த்தல், கீர்த்தி, சம்பாதித்தல், சம்மதித்தல், நன்னடை, நிதானிப்பு, நோக்கம், பாவிப்பு.*

**பிரதிபத்திபடகம்** - *பெரும்பறை.*

**பிரதிபத்திரம்** - *மறுமொழிச்சீட்டு.*

**பிரதிபந்தம்** - *கட்டுப்பாடு, தடை.*

**பிரதிபம்** - *முரடு.*

**பிரதிபலம்** - *விம்பம்.*

**பிரதிபன்னம்** - *அறியப்படுதல்.*

**பிரதிபாகம்** - *பங்கு.*

**பிரதிபாதகம்** - *செயற்படுத்துவது.*

**பிரதிபாதனம்** - *ஈகை, உலகநடை, செயல், செய்துமுடித்தல், நிதானித்தல், பிறப்பித்தல், முடித்தல்.*

**பிரதிபாதுகம்** - *தெளியப்பண்ணல், நிதானித்தல்.*

**பிரதிபாலகன்** - *அரசன், தற்காப்போன்.*

**பிரதிபாலனம்** - *காத்தல், பழகுதல்.*

**பிரதிபாவியம்** - *அடகு.*

**பிரதிபானம்** - *தைரியம், பிரபை.*

**பிரதிபிம்பம்** - *பிரதிவிம்பம்.*

**பிரதிபுருடன்** - *ஒவ்வொருவன்.*

**பிரதிபூசகன்** - *வணங்குவோன்.*

**பிரதிபூசனம்** - *வணக்கம்.*

**பிரதிபேதனம்** - *பிரித்தல், வெட்டுதல்.*

**பிரதிபை** - *அறிவு, கூர்மை, பிரகாசம், பிரதிகாந்தி.*

**பிரதிபோதம்** - *கற்பித்தல்.*

**பிரதிமண்டலம்** - *சுற்றளவு.*

**பிரதிமதை** - *விம்பம்.*

**பிரதிமாலை** - *ஈற்றெழுத்துக்கலி.*

**பிரதிமானம்** - *சாரூபம், யானைக்கொம்பினடு, யானைநெற்றி.*

**பிரதிமூர்த்தி** - *உருபுத்தோற்றம்.*

**பிரதிமை** - *ஒப்பு, பதுமை, மாதிரி, யானைநெற்றி.*

**பிரதியத்தினம்** - *எதிரிடை, சிறைப்படுத்தல், பழிவாங்குதல், விருப்பம்.*

**பிரதியாதனை** - *சாயல்.*

**பிரதியுத்தரம்** - *பிரத்தியுத்தரம்.*

**பிரதியுபகாரம்** - *பிரத்தியுபகாரம்.*

**பிரதியெழுதல்** - *ஒன்றைப் பார்த்தது போலெழுதல்.*

**பிரதியோகம்** - *எதிரிடை, கூட்டம்.*

**பிரதியோகி** - *எதிரி, கூட்டாளி.*

**பிரதிராத்திரம்** - *இராவுக்கிரா.*

**பிரதிரூபம்** - *சாயல்.*

**பிரதிரோதகன்** - *எதிரி, கள்வன்.*

**பிரதிரோதம்** - *எதிரிடை, களவு, மறைத்தல், முத்திக்கைபோடுதல்.*

**பிரதிலோமசன், பிரதிலோமன்** - *இழிபுயர்பாண்பெண்ணிற் பிறந்தோன்.*

**பிரதிவசனம்** - *இணக்கம், எதிரொலி, மறுமொழி.*

**பிரதிவாக்கியம், பிரதிவாணி** - *மறுமொழி.*

**பிரதிவாசரம்** - *நாளுக்குநாள்.*

**பிரதிவாதம்** - *எதிர்வாதம்.*

**பிரதிவாதி** - *எதிர்வாதி.*

**பிரதிவாதிப்பு** - *மறுமொழி.*

**பிரதிவாபம்** - *மருந்தனுபானம்.*

**பிரதிவிம்பம்** - *கண்ணாடிமுதலியவற்றிற்றோற்றும்போலியுரு.*

**பிரதிவிம்பித்தல்** - *போலியுருத்தோற்றுதல்.*

**பிரதிவேசம்** - *அயல்வீடு.*

**பிரதீகம்** - *அவையவம், பங்கு.*

**பிரதீகாரம்** - *இணக்கம், கதவு, சீர்திருத்தல், பழிவாங்கல், மருந்துசெய்தல்.*

**பிரதீசி, பிரதீசீனம்** - *மேற்கு.*

**பிரதீதம்** - *கீர்த்தி, சங்கை, சந்தோஷம்.*

**பிரதீதி** - *அறிவு, கீர்த்தி, விருப்பம்.*

**பிரதீபம்** - *எதிர், ஒப்பிடல், வக்கிரித்தல்.*

**பிரதீபவசனம்** - *எதிரிடை வசனம், முகங்கொடாது மறுமொழி கொடுத்தல்.*

**பிரதீபனம்** - *ஏவுதல், ஓர் மருந்து.*

**பிரதீபாலங்காரம்** - *எதிர்நிலையணி.*

**பிரதீரம்** - *கரை.*

**பிரதீவாபம்** - *அனுபானஞ்சேர்த்தல், உபத்திரவம், உலோகநீற்றல்.*

**பிரதீவேசம்** - *அயல்.*

**பிரதுகம்** - *அலகுள்ளபட்சி.*

**பிரதெட்சணம்** - *பிரதட்சணம்.*

**பிரதேகம்** - *அபிஷேகம்.*

**பிரதேசனம்** - *காணிக்கை, வெகுமதி, வெளிப்பாடு.*

**பிரதேசனி, பிரதேசினி** - *முன்விரல்.*

**பிரதை** - *ஈகை, கீர்த்தி, குந்திதேவி.*

**பிரதோஷகாலம், பிரதோஷ புண்ணிய காலம்** - *திரயோத சித்திதியிற் பொழுதத்தமிக்க முன் மூன்றே முக்கானாழிகை தொடங்கி அத்தமித்து மூன்றே முக்கானாழிகை பரியந்தமுள்ளநேரம்.*

**பிரதோடம், பிரதோஷம்** - *இராவின் முதற்சாமம், திரயோதசிவிரதம்.*

**பிரதோதம்** - *அங்குசம்.*

**பிரஸ்தம்** - *ஓரளவு, மலைமேற் பரந்த தலம், வயிரமானது, விசாலித்தல், பின்பக்கம்.*

**பிரஸ்தரம்** - *இரத்தினம், ஓரிசை, கல், படுக்கை.*

**பிரஸ்தாபம்** - *அத்தியாயம், அறிவித்தல், சமயம், புகழ்ச்சி, வெளிப்படுத்தல்.*

**பிரஸ்தாபனம்** - *அனுப்பல், நியமித்தல்.*

**பிரஸ்தாபனை** - *கட்டியம், துவக்கம், வெளிப்படுத்தல்.*

**பிரஸ்தாரம்** - *காடு, படுக்கை, புட்ப சயனம்.*

**பிரத்தாபம்** - *அவசரம்.*

**பிரத்தாரம்** - *தாளப்பிரமாணம் பத்தினொன்று.*

**பிரத்திக்கினை** - *பிரதிக்கினை.*

**பிரத்திட்சம்** - *பிரத்தியட்சம்.*

**பிரத்திதம்** - *கேட்கும் பொருள்.*

**பிரத்தியக்கதரிசனம்** - *கண்ணாற் கண்டகாட்சி.*

**பிரத்தியக்கப்பிரமாணம்** - *பிரத்தியட்சப்பிரமாணம்.*

**பிரத்தியக்கம்** - *காட்சியளவை.*

**பிரத்தியக்காசாபதி** - *வருணன்.*

**பிரத்தியக்கு** - *பிரிவு, மேற்கு.*

**பிரத்தியங்கம்** - *உபாங்கம், பரதவுறுப்புளொன்று.*

**பிரத்தியங்கிரி** - *ஓர் தேவதை.*

**பிரத்தியசனம்** - *போசனம்.*

**பிரத்தியட்சப்பிரமாணம்** - *ஓரளவை, அஃது கண்ணாலேகண்டு நிச்சயிப்பு.*

**பிரத்தியட்சம், பிரத்தியபாயம்** - *காணத்தக்கது.*

**பிரத்தியட்சாபாசம்** - *காட்சிப் பிரமாணம்.*

**பிரத்தியநீகன்** - *சத்துரு.*

**பிரத்தியபரதம்** - *விகுதி.*

**பிரத்தியபகாரம்** - *தீமைக்குத்தீமை சரிக்கட்டுதல்.*

**பிரத்தியபம்** - *அறிவு, ஆணை, கீர்த்தி, தியானம், நம்பிக்கை, நிச்சயம், நோக்கம், வழக்கம்.*

**பிரத்தியம்** - *குறுக்கு, விகுதி.*

**பிரத்தியயம்** - *விகுதி.*

**பிரத்தியருத்தம்** - *எதிரிடை, மறுமொழி.*

**பிரத்தியவசிதம்** - *பட்சித்தல்.*

**பிரத்தியவாயம்** - *எதிர், நம்பிமோசம் போதல், பாவம்.*

**பிரத்தியவியோகம்** - *எதிர்வழக்கு.*

**பிரத்தியாகரணம்** - *புலனடக்கல்.*

**பிரத்தியாகாரம்** - *உபாதியைநீக்கி யுண்ணோக்கல், இஃது அட்ட யோகத்தொன்று, எடுத்துக் கொள்ளுதல், சுருக்கம், படை யுறை, பற்றுதல், இருந்துவாங்கல்.*

**பிரத்தியாக்கியானம்** - *தள்ளுதல், நிந்தை, மறுத்தல், தள்ளல்.*

**பிரத்தியாசரம்** - *சேனை.*

**பிரத்தியாசாரம்** - *அணிவகுப்பு, சேனை.*

**பிரத்தியாசை** - *நம்பிக்கை.*

**பிரத்தியாதேசம்** - *அசரீரிவார்த்தை, அறிவித்தல், எச்சரித்தல், தள்ளு தல், மறுத்தல், தள்ளல்.*

**பிரத்தியாபாசம்** - *ஓரளவை.*

**பிரத்தியாலீடம்** - *வலக்கான் முன் வைத்திடக்கான் மண்டலித்து நிற்குநிலை.*

**பிரத்தியுத்தரம், பிரத்தியுத்தாரம்** - *மறுமொழி.*

**பிரத்தியுத்தானம்** - *உபசரித்தல்.*

**பிரத்தியுத்தி** - *மறுமொழி.*

**பிரத்தியுபகாரம்** - *கைமாறு.*

**பிரத்தியுற்பன்னம்** - *ஆயத்தம், பெருக்கம்.*

**பிரத்தியுற்கம், பிரத்தியோகார்த்தம்** - *யுத்தநிமித்தம்.*

**பிரத்தியூகம்** - *தடை.*

**பிரத்தியூசன்** - *அட்டவசுக்களி லொருவன்.*

**பிரத்தியேகம்** - *தனிமை, பிறநீங்கல்.*

**பிரத்தியேகராச்சியம்** - *தனியரசு.*

**பிரத்தியோகம்** - *மனவேற்றுமை, நாடு.*

**பிரத்தியோதம்** - *கிரணம், பிரவை.*

**பிரத்தியோதனன்** - *சூரியன்.*

**பிரத்துவமிசாபாவம்** - *அழிவு.*

**பிரத்துலம்** - *பருத்தல்.*

**பிரத்தோங்கிசம்** - *தீமைக்குத்தீமை சரிக்கட்டல்.*

**பிரநிகாதனம்** - *கொலை.*

**பிரந்தயோகம்** - *கூட்டம்.*

**பிரந்தாகாரம்** - *அதிசயம்.*

**பிரந்தாரம்** - *அழகு.*

**பிரந்திட்டம்** - *மிகுகூட்டம்.*

**பிரந்தை** - *சமுகம்.*

**பிரபஞ்சக்கட்டு** - *இலௌகீக மயக்கம்.*

**பிரபஞ்சசாகரம்** - *இலௌகீக மயக்கப் பெருக்கம்.*

**பிரபஞ்சபந்தம்** - *பிரபஞ்சக்கட்டு.*

**பிரபஞ்சபாசம்** - *இலௌகீகபந்தம்.*

**பிரபஞ்சமாயை** - *இலௌகீகமாயை.*

**பிரபஞ்சமூலம்** - *பிரபஞ்சகாரண மானமாயை.*

**பிரபஞ்சம்** - *உலகம், எத்து, கூட்டம், சேனை, பகிடி, மாயை, மாறு, விசாலம்.*

**பிரபஞ்சலட்சணம்** - *அசத்து, சடம், துக்கம்.*

**பிரபஞ்சவாதனை** - *இலௌகீகாப் பியாசம்.*

**பிரபஞ்சவாழ்வு** - *இலௌகீகசம் பாஷணை, இலௌகீக வாழ்க்கை.*

**பிரபஞ்சவியாபாரம்** - *இலௌகீக காரியம்.*

**பிரபஞ்சவிருத்தி** - *மாயாகாரிய விருத்திப்பு.*

**பிரபஞ்சவிலாசம்** - *மாயாகாரியசம் பிரமம்.*

**பிரபஞ்சனன்** - *காற்று.*

**பிரபஞ்சானுக்கிரகம்** - *உலகதயை.*

**பிரபதனம்** - *அழிவு, மரணம், விழுதல்.*

**பிரபந்தகற்பனை** - *கட்டுக்கதை.*

**பிரபந்தம்** - *சதை, தொடர்பு, பாமாலை.*

**பிரபம்** - *நீர்ப்பந்தர்.*

**பிரபா்** - *பந்தல்.*

**பிரபலம்** - *கீர்த்தி, தளிர், பெலன், முக்கியம்.*

**பிரபலன்** - *சௌரியவான், பேர் போனவன்.*

**பிரபலியம்** - *கீர்த்தி, முக்கியம்.*

**பிரபவ** - *ஓராண்டு.*

**பிரபவம்** - *ஆதாரம், காரணம், பிறப்பு, பெலன்.*

**பிரபன்னம்** - *அடைதல், ஒதுங்குதல், சேருதல்.*

**பிரபாகரம்** - *ஆறுசாத்திரத்தொன்று.*

**பிரபாகரன்** - *அக்கினி, ஓர் நூலாசிரியன், சந்திரன், சமுத்திரம், சூரியன்.*

**பிரபாகீடம்** - *மின்மினி.*

**பிரபாசன்** - *அட்டவசுக்களினொருவன்.*

**பிரபாணி** - *உள்ளங்கை.*

**பிரபாதம்** - *கரை, செங்குத்து, தெரு, மலையின்வீழருவி, வைகறை.*

**பிரபாதிகம்** - *மயில்.*

**பிரபாலன்** - *மாணாக்கன்.*

**பிரபாவம்** - *ஒளி, கீர்த்தி, சமனாக்கல், பெலன், மகத்துவம், மகிமை.*

**பிரபாவனம்** - *கொல்லை.*

**பிரபானம்** - *பிரகாசம்.*

**பிரபித்தம்** - *கிடைக்கும்பொருள்.*

**பிரபு** - *அதிகாரி, இரதம், உயர்குலத்தவன், கொடையாளி, தலைவன், தொனி, பெருமையிற் சிறந்தோன், வல்லவன், விட்டுணு.*

**பிரபுதை** - *பெருமை, மகத்துவம்.*

**பிரபுத்தனம்** - *மேம்பாடு.*

**பிரபுத்துவம்** - *பிரபுதத்துவம்.*

**பிரபுமோடி** - *மேம்பாடானநடை.*

**பிரபூரணம்** - *அம்பு, நாணேற்றல்.*

**பிரபேதம்** - *விதம்.*

**பிரபை** -*ஒளி,குபேரனகரம், தண்ணீர்ப் பந்தல், திருவாசி, துற்கை.*

**பிரபோதம்** - *அறிவு, சுறுசுறுப்பு, தெளிதல், புத்தி.*

**பிரபோதனம்** - *எழுப்புதல், படிப்பித்தல்.*

**பிரஸ்போடனம்** - *அலர்தல், குல்லம், புடைத்தநெல், வீங்குதல்.*

**பிரப்பங்கூடை** - *ஓர் கூடை.*

**பிரபங்கோரை** - *ஓர் புல்.*

**பிரப்பு** - *ஒருகலத்திற்பல்லுணாப் பரப்புவது, பேருண்டி.*

**பிரமகத்தி, பிரமகத்திதோஷம், பிரமகத்தியாதோஷம், பிரமகத்தியை** - *பிராமணரைக்கொன்ற தோஷம்.*

**பிரமகற்பம்** - *பிரமன்வாழ்நாள், அஃது ஆயிரங்கோடாகோடி வருடம்.*

**பிரமகன்னிகை** - *சரச்சுவதி.*

**பிரமகாதகன்** - *பிராமணகொலை பாதகன்.*

**பிரமகாயத்திரி** - *ஓர் மந்திரம்.*

**பிரமகுலம்** - *பிராமணசாதி.*

**பிரமகைவர்த்தம்** - *பதினெண் புராணத் தொன்று.*

**பிரமக்கியானம்** - *பிரமஞானம்.*

**பிரமக்கியானி** - *பிரமஞானி.*

**பிரமக்கிரந்தி** - *ஓர் முடிச்சு.*

**பிரமக்கொலை** - *பிராமணக் கொலை.*

**பிரமசடங்கம்** - *ஆறங்கத்தோடு செய்யுமோர் செபம்.*

**பிரமசரியம், பிரமசரியவிரதம்** - *கற்று விரதங்காத்துவிவாகமின்றியிருக்கு நிலை, இஃது ஆச்சிரமநான்கினொன்று.*

**பிரமசாபாலம்** - *உபநிடத முப்பத் திரண்டினொன்று.*

**பிரமசாரி** - *பிரமசரியமனுட்டிப் போன், வீடுமன், வேதம்படிக்கு மாணாக்கன்.*

**பிரமசாரிச்சந்நியாசி** - *பிரமசரிய நிலையிலிருந்து சந்நியாசத்திற் புகுவோன்.*

**பிரமசாரித்துவம்** - *பிரமசரியநிலை.*

**பிரமசித்தி** - *தேவஞானசித்தி.*

**பிரமசூத்திரம்** - *முப்புரிநூல்.*

**பிரமசைதன்னியம்** - *மூலகாரணம்.*

**பிரமஞானம்** - *கடவுளையறியுஞானம்.*

**பிரமஞானி** - *தேவஞானமுள்ளோன்.*

**பிரமஞ்ஞும்** - *தேவவறிவு.*

**பிரமஞ்ஞானம்** - *பிரமஞானம்.*

**பிரமணம்** - *சுழற்சி, திரிதல்.*

**பிரமதண்டம்** - *குருக்கு, பிராமணர்க் குரியகோல்.*

**பிரமதண்டு** - *பிரமதண்டம்.*

**பிரமதத்துவம்** - *தேவத்தன்மை, தேவ வறிவு.*

**பிரமதம்** - *சந்தோஷம், வெறி.*

**பிரமதனம்** - *கடைதல், கொலை, வருந்தல்.*

**பிரமதாகானனம், பிரமதாவனம்** - *நந்தனவனம்.*

**பிரமதாதிபன்** - *சிவன்.*

**பிரமதாலயம்** - *நரகம்.*

**பிரமதானம்** - *வேதபோதனை.*

**பிரமதிதம்** - *கடைதயிர்.*

**பிரமதேவன்** - *பிரமா.*

**பிரமதை** - *உரூபவதி.*

**பிரமத்தம்** - *அசட்டை, பிழை, மதிம யக்கு, வெறி.*

**பிரமத்தி** - *பிரமகத்தி.*

**பிரமத்துவம்** - *பிரமதத்துவம்.*

**பிரமநிருவாணம்** - *கடவுளுடனொன் றித்தல்.*

**பிரமபதம், பிரமபதவி** - *பிரமலோகம்.*

**பிரமபத்திரம், பிரமபத்திரி** - *புகையிலை.*

**பிரமபந்து** - *பிராமணன்.*

**பிரமபிங்கை** - *வெள்ளி.*

**பிரமபிந்து, பிரமவிந்து** - *உபநிடத முப்பத்திரண்டினொன்று.*

**பிரமபுத்திரம்** - *ஓர் நதி.*

**பிரமபுரம்** - *சீகாழிப்பதி.*

**பிரமபுராணம்** - *விறுமபுராணம்.*

**பிரமபூதி** - *சந்திவெளிச்சம்.*

**பிரமப்பிரளயம்** - *விறுமப்பிரளயம்.*

**பிரமமணம்** - *பிரமசாரிக்குக் கன்னி யைத்தீ முன்னர்க் கொடுக்குமணம், அஃது எண்வகை மணத்தொன்று.*

**பிரமமுனி** - *பிரமரிஷி.*

**பிரமமூலி** - *பிரமி.*

**பிரமம்** - *அக்கினி, அட்டாதசவுப புராணத்தொன்று, ஆதித்தன், இருடி, உபநிடத முப்பத்திரண்டி னொன்று, கடவுள், கலக்கம், சந்திரன், சிவன், சுழல்காற்று, சுழற்சி, ஞானம், தண்டசக்கிரம், தத்துவம், தவம், தவறு திரிதல், திருமால், நடு, நித்தியயோகத் தொன்று, நீர்ப்பாய்ச்சல், பஞ்ச மாவெச்சத்தொன்று, அஃது வேத மோதல், பதினெண் புராணத் தொன்று, பிரமசாரிக்குக்கன்னி யைத்தீமுன்னர்க் கொடுக்கு மணம், பிரமன், மந்திரம், மாயை, முத்தி, யாகம், யோகமிருபத்தேழி னொன்று, வேதம், வேதாந்தம்.*

**பிரமயம்** - *கொலை.*

**பிரமயாகம்** - *பஞ்சமாவெச்சத் தொன்று, அஃது வேதமோதல்.*

**பிரமயோனி** - *பிராமணப்பிறப்பு.*

**பிரமரந்திரம்** - *உச்சித்துவாரம்.*

**பிரமரம்** - *வண்டு.*

**பிரமராட்சதன், பிரமராட்சதை** - *அவ மரணமடைந்தபிராமணனாவி யெடுக்குமிராட்சதப் பேய்.*

**பிரமரி** - *கூத்தின்விகற்பம், சுழலல்.*

**பிரமரிஷி** - *பிராமணரிஷி.*

**பிரமரீதி** - *பித்தளை.*

**பிரமலிபி** - *பிரமாவினெழுத்து.*

**பிரமலோகம்** - *சத்தியலோகம்.*

**பிரமவமிசம்** - *பிராமணச்சாதி.*

**பிரமவருத்தனம்** - *செம்பு.*

**பிரமவாதம்** - *வேதமதம்.*

**பிரமவித்து** - *ஞானிகளிலோர் வகை.*

**பிரமனாள்** - *உரோகணி.*

**பிரமன்** -*பிரமா,பிராமணன், முதற்குரு.*

**பிரமன்றந்தை** - *விட்டுணு.*

**பிரமா** - *பிரமதேவன்.*

**பிரமாஞ்சலி** - *இருகையுங்குவித்து நெஞ்சிடைவைத்துவணங்கல்.*

**பிரமாட்சரம்** - *மூலவெழுத்து.*

**பிரமாணஞ்செய்தல்** - *சத்தியம் பண்ணல்.*

**பிரமாணம்** - *அத்தாட்சி, அளவு, அளவை, ஆணை, உண்மை, எல்லை, போழ்து, மூகாந்திரம், முதல்வேதம்.*

**பிரமாணன்** - *மெய்யன், விட்டுணு.*

**பிரமாணாதீதம்** - *பிரமாணத்திற்குக் கடந்தது.*

**பிரமாணாபாவம்** - *அத்தாட்சி யில்லாமை.*

**பிரமாணிகம், பிரமாணிக்கம்** - *ஆணை, உண்மை, திட்டாந்தம்.*

**பிரமாணிக்கன்** - *மெய்யன்.*

**பிரமாணித்தல்** - *அளவுபடுத்தல், நிதானித்தல், மதித்தல்.*

**பிரமாண்டநாயன்** - *சிவன்.*

**பிரமாண்டம்** - *உலகம், பதினெண் புராணத்தொன்று.*

**பிரமாண்ணியம்** - *பிராமணர் கூட்டம்.*

**பிரமாதம்** - *அசட்டை, உவாதித்தல் கொல்லல், தவறல், மதியீனம், வருத்தம், வலோற்காரம், வெறி.*

**பிரமாதா** - *மாதாவழிப் பாட்டன்.*

**பிரமாதாமகன்** - *அப்பாட்டன்.*

**பிரமாதி** - *ஓராண்டு.*

**பிரமாதிகமனம்** - *வேதம்படித்தல்.*

**பிரமாதிகை** - *தீண்டப்பட்டவள், புத்திகெட்டவள்.*

**பிரமாதிட்சு** - *அறிவித்தல்.*

**பிரமாதீச** - *ஓராண்டு.*

**பிரமாத்தியம்** - *அசட்டை, மதிமயக்கு.*

**பிரமாத்திரம், பிரமாஸ்திரம்** - *பிரம பாணம்.*

**பிரமாபணம்** - *கொலை.*

**பிரமாம்பசு** - *கோசலம்.*

**பிரமாயு** - *பிரமகற்பம்.*

**பிரமாயுதம்** - *பத்திலட்சம்.*

**பிரமாரண்ணியம்** - *வேதாரணியம்.*

**பிரமானந்தம்** - *பேரின்பம்.*

**பிரமி** - *ஓர்பூடு, சுழலல், சுழல்காற்று, சண்டாக்கிரம், தவறு, பிழை.*

**பிரமி** - *நடத்தல்.*

**பிரமிதம்** - *அறியப்பட்டது.*

**பிரமிதி** - *அளத்தல், அனுமனம், மெய்யறிவு.*

**பிரமித்தல்** - *அதிசயத்தாலுமச்சத் தாலுமலிறைத்தல் ஏங்குதல், திகைத்தல்.*

**பிரமிப்பு** - *திகைப்பு.*

**பிரமியம், பிரமியன்** - *ஓர் பூண்டு, ஓர் வியாதி.*

**பிரமுகதம்** - *மிகுமேன்மை.*

**பிரமுகம்** - *அதிகநல்லது, நிகழ்காலம்.*

**பிரமுதிகம்** - *சந்தோஷம்.*

**பிரமூடன்** - *மடையன், மருண்டவன்.*

**பிரமேகம்** - *ஓர் மேகநோய்.*

**பிரமேயம்** - *அளவிடப்படுவது, அறியப்படுவது, ஓரலங்காரம் அஃது சரீரம் ஆன்ம முதலிய பன்னிரண்டு பொருளையுடைத் தாயத் தாட்சிப்படுத்தப்பட வேண் டியது, சமுசயம்.*

**பிரமை** - *அறியாமை, காட்சி, பைத்தியம், மயக்கம், மெய்யறிவு, நடத்தல்.*

**பிரமோகம்** - *மயக்கம்.*

**பிரமோசனம்** - *இட்டமாதல்.*

**பிரமேநதம்** - *உவகை.*

**பிரமோதூத** - *ஓராண்டு.*

**பிரமோத்தரகாண்டம்** - *பிரம புராணத் துக்கடைக்காண்டம்.*

**பிரம்பு** - *சூரல், தேர், தேர்முட்டி, வரம்பு.*

**பிரயதன்** - *பரிசுத்தன்.*

**பிரயத்தினம்** - *எத்தினம், செயல், நிறைவேற்றம், முயற்சி.*

**பிரயாகம்** - *குதிரை, பிரயாகை, யாகம்.*

**பிரயாகன், பிரயாபயன்** - *இந்திரன்.*

**பிரயாகை** - *ஓர் தலம், ஓர் நதி.*

**பிரயாசம்** - *ஓர் யாகம், தெண்டிமை, வருத்தம்.*

**பிரயாசி** - *பிரயாசக்காரன், பிரயாசக் காரி.*

**பிரயாசை** - *பிரயாசம், பிரயாசி.*

**பிரயாணகாலம்** - *மரணகாலம்.*

**பிரயாணம்** - *சா, பயணம், போதல்.*

**பிரயாமசியாதம்** - *கிட்டவிருத்தல்.*

**பிரயாமம்** - *அருந்தல், நீளம், பஞ்சை.*

**பிரயுதம்** - *பத்திலட்சம்.*

**பிரயுத்தம்** - *முகாந்திரம், யுத்தம்.*

**பிரயுத்தார்த்தம்** - *யுத்தம்.*

**பிரயோகசாரம்** - *ஓரிலக்கண நூல்.*

**பிரயோகம்** - *உதாரணம், உவமானம் ஏவல், காரியம் குதிரை, சாதனை, சூட்சம், செயல், செலுத்துதல், தம்பனம், நியமம், நிவிர்த்தி, பலம், மயக்கம், மருந்துசெய்தல், முகாந் திரம், முதற்பணம், மூல வாக்கியம்.*

**பிரயோகம் பண்ணல்** - *அத்தாட்சி பண்ணல், அப்பியாசித்தல், யூகித் தல்.*

**பிரயோகி** - *பிரயாசி, யூகி, வல்லவி.*

**பிரயோகித்தல்** - *செலுத்துதல்.*

**பிரயோசகம்** - *பிரயோசனம்.*

**பிரயோசகன்** - *பிரயோசனப்பட்டவன்.*

**பிரயோசனம்** - *ஏது, நோக்கம், பலன், முகாந்திரம்.*

**பிரயோசனம் பண்ணுதல்** - *நயம் பண்ணுதல்.*

**பிரயோசனன், பிரயோசிகன்** - *உத்தம புருஷன், பரோபகாரி.*

**பிரரோகம்** - *தளிர்.*

**பிரலம்பம்** - *அசைவு, எத்து, கிளை, தளிர், தனம், துத்தநாகம், தூக்கங் கள், பூமாலை.*

**பிரலாபசன்னி** - *ஓர் நோய்.*

**பிரலாபம்** - *அசைத்திசைத்தல், ஓர் சன்னி சம்பாஷணை, துக்கம், நாக்குளறுதல், பயனிலசொல்.*

**பிரலாபித்தல்** - *ஊன்றிப்பேசுதல், நாக்குளறுதல், புலம்பல்.*

**பிரலோடனம்** - *உருளுதல்.*

**பிரலோபம்** - *காமம்.*

**பிரலோபனம்** - *காமவிகாரம்.*

**பிரவகம்** - *காற்று.*

**பிரவசயோகம்** - *பரதேசம்போகல்.*

**பிரவசனம்** - *சுற்றுதல்.*

**பிரவஞ்சம்** - *உலகம், வித்தியாசம்.*

**பிரவணம்** - *நாற்றெருக்கூடுமிடம், கதி, வளைவு, பள்ளப்பூமி.*

**பிரவத்தகம்** - *செயல்.*

**பிரவத்தம்** - *சமுசாரம்.*

**பிரவபணம்** - *விதைத்தல்.*

**பிரவயணம்** - *அங்குசம்.*

**பிரவரம்** - *சந்ததி, வமிசம்.*

**பிரவருக்கம்** - *ஓமத்தீ.*

**பிரவருத்தகன்** - *ஆக்கியோன், தொல் லாசிரியன், நீதவான்.*

**பிரவருத்தனம்** - *தீர்மானம், முயற்சி.*

**பிரவருத்தித்தல்** - *தீர்மானித்தல், முயறல்.*

**பிரவாகம்** - *குளம், தத்துவம், தொழில், பெருக்கு, வேலை, வரவு.*

**பிரவாகனம்** - *கொலை, பிரதேசவாசம்.*

**பிரவாசம்** - *வெளிப்புறப்படல்.*

**பிரவாணி** - *நாடா.*

**பிரவாரணம்** - *கொடை, தடை.*

**பிரவாரம்** - *புடைவை.*

**பிரவாளம்** - *பவளம்.*

**பிரவிக்கிதி** - *கீர்த்தி.*

**பிரவிசெடம்** - *விலகல்.*

**பிரவிடை** - *பெண்பருவநான்கி னொன்று.*

**பிரவிதாரணம்** - *அரும்புதல், கிழித்தல், சந்தடி, யுத்தம்.*

**பிரவிருத்தர்** - *முயற்சியுடையோர்.*

**பிரவிருத்தி** - *செய்கை, செய்தி, சேர் மானம், நடை, நீர்ப்பாய்ச்சல், பெருக்குந்தொகை, முயற்சி, யானை, மதம், விரிவு.*

**பிரவிருத்தித்தல்** - *அதீகப்படுதல், விரிதல்.*

**பிரவிருத்தியம்** - *வரவு.*

**பிரவீணதை** - *சமர்த்து, தேற்றம்.*

**பிரவீனம்** - *சாமர்த்தியம்.*

**பிரவேசகம்** - *உட்படல், முயற்சி.*

**பிரவேசகன்** - *தூதன்.*

**பிரவேசப்படுத்தல்** - *பிரவேசிப் பித்தல்.*

**பிரவேசமாதல்** - *தோற்றுதல்.*

**பிரவேசம்** - *உட்படல், கூத்தினோர் விகற்பம், தோற்றுதல், முயற்சி.*

**பிரவேசவுபநிடதம்** - *ஒருபநிடதம்.*

**பிரவேசனம்** - *வாயில்.*

**பிரவேசித்தல்** - *உட்படல், தோற்றப் படல்.*

**பிரவேட்டம்** - *புயம், மணிக்கட்டு, யானைமேற்றவிசு.*

**பிரவேட்சணம்** - *முன்னுறக்காணல்.*

**பிரவேணி** - *சடை, யானைமேற்றவிசு.*

**பிரவேனாம்** - *வணக்கம்.*

**பிரவை** - *ஒளி.*

**பிரளயகாலம்** - *உலகமுடிவு.*

**பிரளயகாலருத்திரன்** - *சங்கார ருத்திரன்.*

**பிரளயகாலவெள்ளம்** - *உகாந்த வெள்ளம்.*

**பிரளயமுடிவு** - *உகாந்தம்.*

**பிரளயம்** - *அழிவுகாலம், படையி லோர் தொகை, அஃது வாகினி மூன்று கொண்டது, வெள்ளம்.*

**பிரளயாகலா** - *பிரளயகாலத்து முத்தி யடைபவர்.*

**பிரளயாக்கினி** - *ஊழித்தீ.*

**பிரளல்** - *எழுத்திலாவோசை, புரளல்.*

**புரளையம்** - *பிரளயம்.*

**பிரனாலம்** - *நீர்க்கால்.*

**பிராகபாவம்** - *மாயை.*

**பிராகம்** - *கிழக்கு.*

**பிராகரியம்** - *உறைப்பு, கூர்மை, பொல்லாங்கு.*

**பிராகாதம்** - *யுத்தம்.*

**பிராகாமியம்** - *அட்டசித்தியி னொன்று, அஃது குறைவின்றி யிருத்தல்.*

**பிராகாரம், பிரகாரம்** - *வார்த்தல்.*

**பிராகிண்ணம்** - *முன்பொழுது.*

**பிராகிருதசனம்** - *நடுத்தரமானசனம்.*

**பிராகிருதபிரளயம்** - *உலகநாசம்.*

**பிராகிருதமித்திரன்** - *துணைவன்.*

**பிராகிருதம்** - *எல்லாநாட்டுமேலோர் மொழி, திசைமொழி, பிரகிருதம்.*

**பிராகிருதன்** - *உண்மையறிவில்லாத வன்.*

**பிராக்கிஞன்** - *அறிவுள்ளவன்.*

**பிராக்கு** - *சென்றது, பராக்கு.*

**பிராங்கணம், பிராங்கம்** - *ஓர் பறை.*

**பிராசகம்** - *பித்தம்.*

**பிராசகன்** - *தேர்ப்பாகன்.*

**பிராசங்கம்** - *தொழுவம்.*

**பிராசம்** - *இறகம்பு.*

**பிராசயம்** - *ஆதி.*

**பிராசனம்** - *அங்குசம், சோறூட்டல்.*

**பிராசாதம்** - *கோயில்.*

**பிராசாபத்தம்** - *அட்டமங்கலத் தொன்று.*

**பிராசாபத்தியம்** - *ஓர் விரதம்.*

**பிராசாரம்** - *ஒழுக்கவழு.*

**பிராசாரியன்** - *மாணாக்கன்.*

**பிராசி, பிராசீ** - *கிழக்கு, முன்.*

**பிராசிகன்** - *ஈட்டிக்காரன், எறிபடை காரன்.*

**பிராசிகை** - *கொசுகு.*

**பிராசிதம்** - *காணிக்கை.*

**பிராசீபதி** - *இந்திரன்.*

**பிராசீரம்** - *சுவர், வேலி.*

**பிராசீனம்** - *கிழக்கு, சுவர், பழமை.*

**பிராசீனவாக்கிசன்** - *அரசன், இந்திரன்.*

**பிராசீனாநீதம்** - *சூத்திரர்மார்பிலணியு நூல்.*

**பிராச்சித்தம்** - *பிராயச்சித்தம்.*

**பிராசு** - *கிழக்கு.*

**பிராசேதசன்** - *வான்மீகரிஷி.*

**பிராஞ்ஞும்** - *அறிவு.*

**பிராட்டி** - *பெருமாட்டி.*

**பிராணசகி** - *உயிர்த்தோழி.*

**பிராணசங்கடம்** - *உயிர்போகத்தக்க நெருக்கம்.*

**பிராணசமை** - *மனைவி.*

**பிராணசவுக்கியம்** - *செல்வம்.*

**பிராணசினேகிதன்**-*உயிர்த்துணைவன்.*

**பிராணசேதம்** - *உயிர்ச்சேதம்.*

**பிராணதம்** - *இரத்தம், காற்று, நீர், தோத்திரஞ் செய்தல்.*

**பிராணதன்** - *பிறப்பித்தோன், வலியன்.*

**பிராணதாரகம்** - *பத்தியபோசனம்.*

**பிராணதாரணம்** - *சீவனத்திற்குரியன.*

**பிராணதுக்கம்** - *உயிரையும் போக்கத் தக்க கவலை.*

**பிராணத்தறுவாய்** - *மரணத்தறுவாய்.*

**பிராணத்தியாகம்** - *சீவனைக் கொடுத் தல், தற்கொலை.*

**பிராணநதம்** - *காற்று.*

**பிராணநாதம்** - *பிராணலயம்.*

**பிராணநாதன், பிராணநாயகன்** - *கடவுள், கணவன்.*

**பிராணநாயகி** - *மனைவி.*

**பிராணந்தியம்** - *நவக்கிரகம்.*

**பிராணப்பிரதிட்டை** - *பிராணஸ்தா பனம்.*

**பிராணமயகோசம்** - *கருமேந் திரியமும் பிராணனுங்கூடிய சம்பந்தம், அஃது பஞ்சகோசத் தொன்று.*

**பிராணமயம்** - *பஞ்சமயகோசத் தொன்று.*

**பிராணமித்துரு** - *பிராணசினேகிதன்.*

**பிராணம்** - *கவிவல்லபம், காற்று, சீவன், சுவாசம், பெலன்.*

**பிராணலயம், பிராணவியோகம்** - *சீவ ஒடுக்கம்.*

**பிராணவாயு** - *பிராணன்.*

**பிராணவீனன்** - *அம்பிராணி.*

**பிராணவேதனை** - *மரணவேதனை.*

**பிராணவ்வியயம்** - *மரணம்.*

**பிராணனம்** - *சீவன், தொண்டை.*

**பிராணன்** - *உயிர், தசவாயுவினொன்று, அஃது இதயத்தியங்குவது.*

**பிராணாதிநாதன்** - *கணவன்.*

**பிராணாந்தம்** - *மரணம்.*

**பிராணாந்திகம்** - *கொலை.*

**பிராணாபாதம்** - *சீவனுக்கிடை யூறானது.*

**பிராணாயாமம்** - *அட்டாங்கயோகத்தொன்று, அஃது பிராணவாயுவை இரேசக பூரககும் பகஞ்செய்தல்.*

**பிராணி** - *சீவனுடையது.*

**பிராணித்தியூதம்** - *கடாப்போர், சேவற்போர்.*

**பிராணிபீடை** - *சீவனைவருத்தல்.*

**பிராணேசன்** - *கணவன்.*

**பிராணேசை** - *மனைவி.*

**பிராதகம்** - *காப்பாற்றல்.*

**பிராதக்காலம்** - *விடியல்.*

**பிராதக்கிருத்தியம்** - *காலைப்பலி.*

**பிராதசாந்தி** - *வைகறைவெளிச்சம்.*

**பிராதச்சந்தியை** - *காலைப்பலி, வைகறை.*

**பிராதர்** - *மூதாக்கள்.*

**பிராதமிகர்** - *வானோர்கணமொன் பதினொருவர், இவர் கடவுட்டிருவுளப்படியே இராச்சிய சம்பந்தமான சாதாரண நன்மைகளை நடத்துந் தலைமை பெற்றோர்.*

**பிராதம்மியம்** - *முதன்மை.*

**பிராதா** - *அண்ணன்.*

**பிராதி** - *பிரியாது.*

**பிராதிரு** - *சகோதரன்.*

**பிராதிருசாயை, பிராதிருபத்தினி** - *சகோதரன்மனைவி.*

**பிராது** - *அத்தாட்சி, முறைப்பாடு.*

**பிராதேசம்** - *ஒட்டை, தானம்.*

**பிராதேசனம்** - *கொடை.*

**பிராத்தனை** - *நேர்கடன், வேண்டுதல்.*

**பிராத்தி** - *அட்டசித்தியினொன்று, அஃது வேண்டுவனவடைதல், ஆதாயம், ஏறுதல், கூட்டம், சம்பாத்தியம், சித்தி, பேறு.*

**பிராத்திதம்** - *கேட்கும் பொருள்.*

**பிராந்திதாதான்மியம்** - *பிரமபூரணத்திலகங்காரங்கலத்தல்.*

**பிராத்தித்தல்** - *பிராத்தனை செய்தல்.*

**பிராத்திப்பு** - *பிராத்தனை.*

**பிராத்தியக்கு** - *மேற்கு.*

**பிராந்ததுருக்கம்** - *நகரம்.*

**பிராந்தம்** - *அருகு, கடை.*

**பிராந்தரம்** - *காடு, மரப்பொந்து வனபாதை.*

**பிராந்தி** - *உறுதியின்மை, கழிதல், சுழலல், தப்பிதம், திரிதல், நிலையின்மை, மயக்கம்.*

**பிராந்திகரன்** - *மந்திரி.*

**பிராந்திமதலங்காரம்** - *மயக்கவணி.*

**பிராந்திரம்** - *புறவெளி.*

**பிராந்து** - *பருந்து, பிராந்தி.*

**பிராபவநியம்** - *தத்துவம்.*

**பிராபவம்** - *முதன்மை.*

**பிராபோதிகம்** - *விடியல்.*

**பிராப்பியம்** - *பேறு.*

**பிராமகம்** - *எத்து, காந்தம், நரி.*

**பிராமணத்தி** - *பார்ப்பனிச்சி.*

**பிராமணநாகம், பிராமணப்பாம்பு** - *ஓர் நாகம்.*

**பிராமணபோசனம்** - *சமாராதனை.*

**பிராமணம்** - *பார்ப்பனக்கூட்டம், வேதப்பகுதி.*

**பிராமணன்** - *பார்ப்பான், சீவன்முத்தன்.*

**பிராமணாதிகிரமம்** - *பிராமணநிந்தனை.*

**பிராமணி** - *பார்ப்பனி, பார்ப்பான்.*

**பிராமணிக்கம்** - *பிராமணயோக்கியம்.*

**பிராமம்** - *பெருவிரலடி.*

**பிராமரம்** - *கிராமம், சுழலல், தேன், விறைப்பு.*

**பிராமாணியம்** - *அத்தாட்சி.*

**பிராமாதிட்சு** - *அறிவித்தல்.*

**பிராமி** - *உரோகணி, சரச்சுவதி, பார்ப்பனத்தி, முசுறு.*

**பிராமியம்** - *தலைப்புறம்.*

**பிராமீத்தியம்** - *கடன்.*

**பிராயச்சித்தம்** - *காமப்பகுதி, சாந்தி, தவம், நிவிர்த்தி, தண்டனை.*

**பிராயச்சித்தவிதி** - *சாந்திமுறை, தவமுறை.*

**பிராயணம்** - *மரணம்.*

**பிராயப்படல்** - *பக்குவப்படல்.*

**பிராயமறிதல்** - *புத்தியறிதல்.*

**பிராயம்** - *அளவு, பக்குவம், பாவம், மரணம், வயது.*

**பிராயோபவேசனம்** - *உபவாசம் பண்ணல்.*

**பிராய்** - *பராய்.*

**பிரார்த்தகன்மம்** - *அனுபவகன்மம்.*

**பிரார்த்தகன்மவாதனை** - *ஊழ் வினைப்பயன்.*

**பிரார்த்தநீயம்** - *துவாபரயுகம்.*

**பிரார்த்தம், பிரார்த்துவம்** - *அனுப விக்குங்கன்மம், ஊழ்.*

**பிரார்த்தவினை** - *அனுபவிக்குமூழ் வினை.*

**பிரார்த்தனம், பிரார்த்தனை** - *மன்றாட்டு, விண்ணப்பம்.*

**பிரார்த்துவதேகம்** - *வினைப்பகுதியின் படி பெற்றவுடம்பு.*

**பிராலம்பம்** - *பூமாலை.*

**பிராலம்பிகை** - *மாலை.*

**பிராலேயம்** - *உறைந்தபனி.*

**பிராவம்** - *கொல்லை.*

**பிராவரணம்** - *வெளியங்கி.*

**பிராவரம்** - *வேலி.*

**பிராவிருதம்** - *காணிக்கை, முக்காடு.*

**பிராவிருதி** - *வேலி.*

**பிராவேசனம்** - *வேலைகொள்ளிடம்.*

**பிராறு** - *நீந்துபுனல்.*

**பிரான்** - *எப்பொருட்குமிறைவன், கடவுள், சிவன்.*

**பிரி, பிரியென்னேவல்** - *பிரிவு.*

**பிரிசம்** - *பிரியம்.*

**பிரிசல்** - *வேறுபாடு.*

**பிரிசாலம்** - *கலக்கம்.*

**பிரிச்சல்** - *பிரிக்குதல்.*

**பிரிட்டிகி, பிரித்தம்** - *பரிசனம்.*

**பிரிதல்** -*அகலல்,குலைதல், கூறுபடல், போகல்.*

**பிரிதி** - *பிரீதி.*

**பிரித்தல்** - *குலைத்தல், கூறுசெய்தல், நீக்கல்.*

**பிரிநிலை** - *பலவற்றுளொன்றைப் பிரித்துக் கொள்வது, இஃது இடைச் சொற்பொருள்களினு மொன்று.*

**பிரிநிலையுயர்பு நவிற்சியணி** - *ஓரலங் காரம், அஃது உபமானத்திற்குப மேயம் யாதொன்றானுயர் புடைத் தெனப் பிரித்துச் சொல்லுதல்.*

**பிரிநிலையெச்சம்** - *பிரிநிலை யாக்கு மோரெச்சம் (உம்) அவனோ கொண்டான்.*

**பிரிநிலையெஞ்சணி** - *பிரிநிலை யெச்சம்.*

**பிரிந்திசைக்குறள்** - *அம்போதரங்கம்.*

**பிரிந்திசைத்துள்ளல்** - *கலித்தளையும், பிறதளையும் பொருந்தியகலிப்பா.*

**பிரிந்திசைத்தூங்கல்** - *கலித்தளையும் பிற தளையுமயங்கிவரும் வஞ்சி.*

**பிரிபொருட்சொற்றொடர்** - *செய்யுள் வழுவினொன்று, அஃது கவி முழுதுமோர் பொருள் கொள் ளாது நோக்கப் பொருள் பிரிந்து நிற்பது, (உம்) பாலும்மதுவும் பனை பொழியும்.*

**பிரிப்பு** - *குலைப்பு, பகுப்பு, பிரித்தல்.*

**பிரிமணை** - *புரிமணை.*

**பிரிமொழிச்சிலேடை** - *ஓர்வகை யானின்ற சொல்லைப்பிரித்துத் தொகை வேறுபடுத்திப் பல பொருள் கொள்வது.*

**பிரியகம்** - *கடம்பு.*

**பிரியசத்தியம்** - *இனியசம்பாஷனை.*

**பிரியஞ்செய்தல்** - *நேசித்தல்.*

**பிரியத்தம்** - *நன்கொடை.*

**பிரியப்படுதல்** - *அன்புவைத்தல்.*

**பிரியம்** - *அன்பு, உவகை, விருப்பம்.*

**பிரியலர்** - *சினேகிதர்.*

**பிரியன்** - *தலைவன், பிரியமுள்ளவன்.*

**பிரியாது** - *பிராது.*

**பிரியாவிடை** - *உள்ளம் பிரியாவன்புடன்விட்டு நீங்கல்.*

**பிரியை** - *ஏலம், ஓரிசை, ஓர்பண், செய்தி, பெண், மது, மனைவி.*

**பிரியோதிதம்** - *இன்சொல்.*

**பிரிவனை, பிரிவினை** - *வேறுபாடு.*

**பிரிவாற்றாமை** - *புலவியாற்றாது வருந்தல்.*

**பிரிவு** - *பகுதி, பிரிதல், வெறுப்பு, வேற்றுமை.*

**பிரிவுகணக்கு** - *கழிவுகணக்கு.*

**பிரீணனம்** - *திருத்தியடைவித்தல்.*

**பிரீதம்** - *உவப்பு.*

**பிரீதி** - *இரதி, உருக்கம், உவப்பு, நித்தியயோகத்தொன்று, அஃது பிரியம்.*

**பிரீதிதன்** - *பகிடிக்காரன்.*

**பிரீது** - *பட்சி.*

**பிருகதாரணியம்** - *உபநிடதமுப்பத்திரண்டினொன்று.*

**பிருகதி** - *கத்தரிச்செடி.*

**பிருகு** - *சமதக்கினி, சிவன், சுக்கிரன், பிருங்கிருஷி இவன் தசப்பிரமாவிலொருவன், மலைமேற்பரப்பு, மிகவுமிளங்கிழங்கு.*

**பிருகுசுதன்** - *சுக்கிரன், பரசிராமன்.*

**பிருகுடி** - *புருவம்.*

**பிருகுபதி** - *இராமன், பரசிராமன், பலராமன்.*

**பிருங்கம்** - *வண்டு.*

**பிருங்கரீடன்** - *ஓர் சிவகணத் தலைவன்.*

**பிருங்கீசன்** - *சிவன்.*

**பிருச்சகன்** - *விசாரணைகாரன்.*

**பிருச்சணம்** - *கேட்டல்.*

**பிருடை** - *சுழலாணி, சுழல் துறப்பு.*

**பிருட்டம்** - *பரப்பு, பிடரி, பின்பக்கம், முதுகு.*

**பிருட்டி** - *கிரணம், பரிசம்.*

**பிருதகசனன்** - *கீழ்மகன், துட்டன், மூடன்.*

**பிருதகன்** - *கூலிக்காரன், வேலைக்காரன்.*

**பிருதகரணம்** - *பகுத்தறிதல்.*

**பிருதத்துவம்** - *தனிமை.*

**பிருதனை** - *பிரதனை.*

**பிருதாகன்** - *பிருதகன்.*

**பிருதாகி** - *எலி, தேள், பாம்பு, யானை.*

**பிருதி** - *கூலி, போசனம்.*

**பிருதிவி** - *பூமி.*

**பிருதிவிசக்கிரன், பிருதிவிபதி, பிருதிவி** - *அரசன், இயமன்.*

**பிருது** - *அங்கி, அவின், பெரியது.*

**பிருதுசேகரம்** - *மலை.*

**பிருதுமானம்** - *யானைக்கொம்பினடு.*

**பிருதுரோமை** - *மீன்பொது.*

**பிருதுவி** - *பூமி.*

**பிருதுவிகை** - *ஏலம்.*

**பிருதுவியண்டம்** - *பூமியண்டம்.*

**பிருதூதரம்** - *ஆட்டுக்கடா.*

**பிருதூதரன்** - *பெருவயிறன்.*

**பிருத்தம்** - *ஆஸ்தி.*

**பிருத்தியத்தவம்** - *ஊழியம்.*

**பிருத்தியர்** - *அடிமைகள்.*

**பிருந்தம்** - *கூட்டம், துளசி.*

**பிருந்தை** - *துளசி, விருந்தை.*

**பிரேஷ்ணம், பிரேடணம்** - *போதல்.*

**பிரேட்சணம்** - *கண், களரி.*

**பிரேட்சணிகை** - *ஆடம்பரப்பிரியை.*

**பிரேட்சை** - *அறிவு, ஆடல், காண்டல், புத்தி, மரக்கொம்பு.*

**பிரேதகருமம், பிரேதகாரியம், பிரேத கிருத்தியம்** - *அபரக்கிரியை.*

**பிரேதகிரகம்** - *கோரி.*

**பிரேதகும்பம்** - *ஓர் வகைக்கும்பம்.*

**பிரேதக்குழி** - *சவக்குழி.*

**பிரேதசுத்தி** - *பிரேதத்தைக் குளிப் பாட்டல்.*

**பிரேதநதி** - *நரகம்.*

**பிரேதநிற்காரகன், பிரேதநிஸ்காரகன்** - *சலங்காவி.*

**பிரேதபக்கம்** - *அபரபக்கம்.*

**பிரேதபதி** - *நமன்.*

**பிரேதம்** - *தெற்கு, பிசாசம், பிணம், பிதிர், பின்.*

**பிரேதலங்காரம்** - *சவவலங்கரிப்பு.*

**பிரேதலோகம்** - *பிதி, திசை.*

**பிரேதவனம்** - *மயானம்.*

**பிரேதான்னம்** - *பிண்டம், பிதிரூண்.*

**பிரேதோத்தேசம்** - *பிதிர்பலி.*

**பிரேமபாதனம்** - *பீழை.*

**பிரேயம்** - *கள்.*

**பிரேரகம்** - *காரியப்படுத்தல்.*

**பிரேரகன்** - *காரியநடத்துவோன்.*

**பிரேரணம்** - *அனுப்பல், ஏவல், ஒட்டு தல், நடத்துதல், விகாரம்.*

**பிரேராவத்தை** - *ஆன்மாக்கிரியை களை நடத்துமவத்தை.*

**பிரேரித்தல்** - *காரியப்படுத்தல், நடத்துதல்.*

**பிரை** - *அரைப்பங்கு, உறை.*

**பிரைக்காற்சின்னி** - *அரைக்காற்படி.*

**பிரோகம்** - *முடிச்சு, யானைக் கணைக் கால், யானைக்கால்.*

**பிரோட்சணம்** - *கொலை, தெளித்தல், மிருகபலி.*

**பிரோதம்** - *கந்தை, குதிரைமூக்கு, தொடை, முதிராக்கருப்பம்.*

**பிரோற்சாகம், பிரோற்சாசனம்** - *முயற்சி.*

**பிரௌடை** - *பிரவிடை.*

**பிலகரி** - *ஓரிராகம்.*

**பிலஞ்சுலோபம்** - *எறும்பு.*

**பிலத்துவாரம்** - *பாதாளவழி.*

**பிலம்** - *கீழறை, குகை, வளை.*

**பிலவ** - *ஓராண்டு.*

**பிலவகதி** - *தவளைப்பாய்ச்சல்.*

**பிலவகம்** - *குரங்கு, தேரை.*

**பிலவகன்** - *அருணன்,கம்பங்கூத்தாடி.*

**பிலவங்க** - *ஓராண்டு.*

**பிலவங்கமம்** - *குரங்கு, தவளை.*

**பிலவங்கம்** - *குரங்கு, தேரை, மான்.*

**பிலவம்** - *ஆடு, ஓர்பட்சி, ஓர்புல், காப்பு, கீழ்சாதி, குரங்கு, சாயல், கவளை, தெப்பம், நீந்தல், நீர் நிலை, நெட்டிசை, பாய்தல்.*

**பிலன்** - *எறும்பு, பிலம்.*

**பிலாக்கு** - *ஓர் மூக்கணி.*

**பிலாச்சை** - *கடற்றவளை.*

**பிலாவம்** - *தோய்த்தல், நிறைத்தல்.*

**பிலிற்றல்** - *கொப்பளித்தல், தூறல்.*

**பிலுக்கு** - *ஆடம்பரம், வீம்பு.*

**பிலுபிலுத்தல்** - *ஈரடுக்கொலிக்குறிப்பு.*

**பிலோடம்** - *சுடுதல்.*

**பில்கல், பில்குதல்** - *கொப்பளித்தல், பொசிதல்.*

**பில்லடை** -*அப்பவருக்கம், இடியப்பம்.*

**பில்லம்** - *ஓர் கண்ணோய்.*

**பில்லி** - *ஓர் வகைப்பேய், சூனிய வித்தை, பூஞை.*

**பில்லிப்படை** - *பில்லிப்பேய்ப் பரிகளம்.*

**பிழக்கடை** - *கோடிப்புறம்.*

**பிழம்பு** - *தம்பம், திரட்சி.*

**பிழா** - *ஓலைக்கலம்.*

**பிழார்** - *இறைகூடை.*

**பிழி** - *கள் பிழியென்னேவல்.*

**பிழிதல்** - *சாரமூறல், சாரம்வடித்தல்.*

**பிழியர்** - *கள்விற்போர்.*

**பிழிவு** - *பிழிதல்.*

**பிழுக்கை** - *விட்டையெரு.*

**பிழை** - *குற்றம், தவறு, பிழையென் னேவல், பொய்.*

**பிழைகாயம்** - *இலேசானகாயம்.*

**பிழைக்கை** - *பிழைத்தல்.*

**பிழைத்தல்** - *உய்தல், சீவனம் பண்ணு தல், தவறுதல், பிழை செய்தல், பிழையாதல்.*

**பிழைபாடு –** *குற்றம், பிழைபடுதல்.*

**பிழைபார்த்தல்** - *திருத்தல்.*

**பிழைப்பித்தல்** - *தாபரித்தல், பிழைக்கச் செய்தல்.*

**பிழைப்பு** - *உயர்வு, சீவனம், சீவிப்பு.*

**பிழைப்பூட்டு** - *சீவனவேது.*

**பிழைப்பூட்டுதல்** - *சீவன்வேது காட்டல்.*

**பிளகு** - *பிசவு.*

**பிளச்சு** - *பிளாச்சு.*

**பிளத்தல்** - *அறுத்தல், கீழ்தல், போழ் தல்.*

**பிளப்பு** - *பிளத்தல், வெடிப்பு.*

**பிளவு** - *கீற்று, துண்டு, பிளப்பு, வெடிப்பு.*

**பிளவை** - *விப்புருதி, வெடித்தபுண்.*

**பிளாச்சி, பிளாச்சு** - *சிறுசலாகை, தட்டை.*

**பிளிச்சி** - *சீனக்காரம்.*

**பிளிர்த்தல்** - *கொப்பளித்தல்.*

**பிளிறல்** - *ஒலித்தல், கீண்டல், பேசலா னெழுமொலி.*

**பிளிறு** - *ஆரவாரம், எழுத்திலா வோசை, சேறு, பிளிறென்னெவல், பேரொலி.*

**பிளிறொலி** - *யானைமுதலியபிளிறு மொலி.*

**பிள்ளுதல்** - *போழுதுல், வெடித்தல்.*

**பிள்ளை** - *அன்றிற்குஞ்சு, இளமை யோன், கரிக்குருவி, காகம், கிளி, கீரி, குரங்காதிகோட்டில் வாழ் விலங்கின் பிள்ளை, தெங்கு, கமுகு இவற்றின் கன்று, நாகண வாய்ப் புள், பறவைக்குஞ்சு, பன்றி, பூனை, மான், முயல் இவற்றின் குட்டி, மகன், மரக்கன்று, வயிரவன்.*

**பிள்ளைகொல்லி** - *ஓர் நோய்.*

**பிள்ளைக்கட்டி** - *கருப்பக்கட்டி.*

**பிள்ளைக்கவி** - *ஓர் பிரபந்தம், அஃது காப்பு, செங்கீரை, தால, சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறு பறை, சிற்றில், சிறுதேர் எனும் பத்துறுப்புக்களையுங் கொண்டு கலி விருத்தத்தான் முடிவதாண் பாற்பிள்ளைக்கவி, அவற்றுட் கடைமூன்றுறுப் பொழிய, கழங்கு, அம்மனை, ஊசல் எனுமூன்றுறுப் பையுங் கூட்டிக் கூறுவது பெண் பாற் பிள்ளைக் கவி, தொன்னூல் மொழிகளைத் தெரிந்து தொடுக் குங்கவி.*

**பிள்ளைக்கற்றாழை** - *ஓர் கற்றாழை.*

**பிள்ளைக்கிணறு** - *உட்கிணறு.*

**பிள்ளைக்கைவளை** - *சிறுவளையல்.*

**பிள்ளைக்கோட்டை** - *அரையாப்பு.*

**பிள்ளைசோமன்** - *சிறுசோமன்.*

**பிள்ளைத்தக்காளி** - *ஓர் செடி.*

**பிள்ளைத்தமிழ்** - *பிள்ளைக்கவி.*

**பிள்ளைத்தாய்ச்சி** - *கருப்பஸ்திரி, வாலசூதி.*

**பிள்ளைத்தேங்காய்** - *நாற்றுத் தேங்காய்.*

**பிள்ளைத்தேள்** - *ஓர் தேள்.*

**பிள்ளைப்பாட்டு** - *பிள்ளைக்கவி.*

**பிள்ளைப்பிறை** - *இளம்பிறை.*

**பிள்ளைப்பூச்சி** - *ஓர் பூச்சி.*

**பிள்ளைப்பேறு** - *மக்கட்பேறு.*

**பிள்ளைமாபிரபு** - *பெருமையிற் சிறந்தோன்.*

**பிள்ளைமை** - *பிள்ளைத்தன்மை.*

**பிள்ளையாண்டான்** - *வாலிபன்.*

**பிள்ளையார்** - *விநாயகன்.*

**பிள்ளையார்சுழி** - *ஊமையெழுத்து.*

**பிள்ளைவங்கு** - *பாய்மரநிற்குங்குழி.*

**பிள்ளைவிழுதல்** - *கருவழிதல்.*

**பிற** - *அசைச்சொல் (உம்) யாஞ்சில வரிசி வண்டினேமாகத்தான பிற வரிசையறிதவிற்றன்னுந் தூக்கி, பிறவென்னேவல், வேறு.*

**பிறகரம்** - *காவல், சாமம்.*

**பிறகரித்தல்** - *காத்தல், சாமங்காத்தல்.*

**பிறகிடல்** - *சேறல், பின்றல்.*

**பிறகு** - *பின்பு, பின்புறம்.*

**பிறகுகாட்டுதல்** - *பின்காட்டுதல், தோற்றல்.*

**பிறக்கணித்தல்** - *இகழ்தல், நிந்தித்தல்.*

**பிறக்கணிப்பு** - *இகழ்ச்சி.*

**பிறக்கம்** - *அச்சம், கடைக்கணிப்பு, மரக்கொம்பு.*

**பிறக்கிடல்** - *பின்றல்.*

**பிறக்கியாதி, பிறக்கினை** - *புறக்கியாதி.*

**பிறக்கு** - *அசைச்சொல், (உம்) எண்ணிய பிறக்குயுட்செலான், பின், பின்புறம், வழு.*

**பிறக்குதல்** - *உண்டாதல், உற்ப வித்தல், வெளிவரல்.*

**பிறங்கடை** - *மகன், வழித்தோன்றல்.*

**பிறங்கல்** - *அரசன், உயர்ச்சி, ஒலித்தல், ஒழுக்கம், ஒளிசெய்தல், சிறுமலை, நிறைதல், பெருமை, மலை, மிகுதி.*

**பிறங்கியல்** - *முதுகாடு.*

**பிறங்கு**-*பிறங்கென்னேவல், விரலிறை.*

**பிறங்குதல்** - *உயர்தல், ஒலித்தல், நிறைதல், பிரகாசித்தல்.*

**பிறதாரம்** - *பிறர்மனை.*

**பிறகிக்கினை** - *பிரதிக்கினை.*

**பிறத்தல்** - *பிறக்குதல்.*

**பிறத்தானம்** - *புறத்தானம்.*

**பிறத்தியுத்தாரம்** - *மறுமொழி.*

**பிறநீங்கல்** - *புறநீங்கல்.*

**பிறநூன் முடிந்தது தானுடன்படல்** - *பிற நூலின் முடிந்த முடிப்பைத் தானங் கீகரித்தல், அஃது யுத்திமுப்பத் திரண்டினொன்று.*

**பிறந்தகம்** - *தாய்மனை, பரிசம்.*

**பிறந்தகோலம்** - *நிருவாணம்.*

**பிறந்தநாள்** - *பிறந்ததினம்.*

**பிறந்தமேனி** - *நிருவாணம்.*

**பிறந்தவம்** - *பிறப்பு.*

**பிறந்தாள்** - *புறங்கால்.*

**பிறந்தை** - *சுபாபம், பாவம், பிறப்பு.*

**பிறபாஷை** - *அன்னியபாஷை.*

**பிறப்பிடம்** - *உறைவிடம், பிறந்தவிடம் மூலம்.*

**பிறப்பித்தல்** - *உண்டாக்கல், சனிப் பித்தல்.*

**பிறப்பிலி, பிறப்பில்லான்** - *கடவுள், சிவன்.*

**பிறப்பு** - *அச்சம், உற்பத்தி, சகோதரம், துவக்கம், நெருக்கம்.*

**பிறப்புவாசி** - *சென்மசுபாபம், பிறப் பிலுண்டானது.*

**பிறரையந்தீர்த்தல்** - *பிறருடைய சந் தேகமாற்றல், அஃது தயாவிருத்தி யெட்டினொன்று.*

**பிறர்** - *அயலோர், அன்னியர், மறு பெயர்.*

**பிறர்கருமத்திற்குடன்படல்** - *தயா விருத்தியெட்டினொன்று.*

**பிறர்பொருட்டனுமானம்** - *தானனு மானித்ததைப் பிறர்க்குரைத்தல்.*

**பிறர்கருமம் முடிக்கவிரைதல்** - *தயா விருத்தியெட்டினொன்று.*

**பிறர்க்குப்பொருள் வரவையுவத்தல்** - *தயாவிருத்தியெட்டினொன்று.*

**பிறர்செல்வம் பொறுத்தல்** - *தயா விருத்தியெட்டினொன்று.*

**பிறர்தம்மதமேற்கொண்டு கனைதல்** - *பிறர்மதத்திற்குடன் பட்டுப் பின்பு மறுத்தல், அஃது ஆசிரிய மதமேழி னொன்று.*

**பிறர்துயர்காத்தல்** - *அறமுப்பத்தி ரண்டினொன்று.*

**பிறர்துயர்க்கிரங்கல்** - *தயாவிருத்தி யெட்டினொன்று.*

**பிறர்நூற்குற்றங்காட்டல்** - *ஆசிரிய மதமேழினொன்று.*

**பிறர்முகம்பார்த்தல்** - *பரதாரம் விரும்பல்.*

**பிறலாபம்** - *பிரலாபம்.*

**பிறவி** - *சகோதரம், பிறப்பு.*

**பிறவிக்குணம்** - *சுபாபக்குணம்.*

**பிறவிக்குருடன்** - *குருடனாய்ப் பிறந்த வன்.*

**பிறவிச்சுபாபம்** - *பிறக்கை யிலுள்ளது, பிறவியிலுள்ளது.*

**பிறவிசாரம்** - *பரதவுறுப்புளொன்று.*

**பிறவிச்செல்வம்** - *பிறந்தநாடொட்ட செல்வம்.*

**பிறவிடுதி** - *புறவிடுதி.*

**பிறவித்துயர்** - *சகோதர நிரியாண துக்கம்,பிறப்பிலுண்டாம் வருத்தம்.*

**பிறவித்துவந்தம், பிறவித்தொந்தம்** - *பிறப்புத்தோறுந் தொடரும் வினை, பிறவித்தொடர்பு.*

**பிறவிநோக்கல், பிறவிநோக்குதல்** - *பிறக்கத் தொடங்கல்.*

**பிறவிநோய்** - *சென்மதுக்கம், பிறப் பிலேயுண்டானவியாதி.*

**பிறவிப்பயன்** - *சனனபலன்.*

**பிறவிமயக்கு** - *உற்பத்திமயக்கு.*

**பிறவியாரதம்** - *புலான்மறுப்பு.*

**பிறவினை** - *காமம், பாவம், பிறகருத் தாவின் புடை பெயர்ச்சியாய்த் தொழிற் படுஞ்சொல்.*

**பிறழ்ச்சி, பிறழ்தல், பிறழ்வு** - *ஒளி செய்தல், சொல்லல், திரும்புதல், நடுக்கம், வெறுப்பு, வேறாதல்.*

**பிறனில்** - *பிறன்மனை.*

**பிறன்** - *அயலவன், அன்னியன், மற்றவன்.*

**பிறன்கோட்கூறல்** - *தன்னூலிற் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதல், அஃது யுத்தி முப்பத்திரண்டி னொன்று.*

**பிறன்மனை** - *பிறத்தியான் மனைவி.*

**பிறாக்காண்டம்** - *சரகாண்ட பாஷா ணம்.*

**பிறாண்டுதல்** - *வறுகுதல்.*

**பிறிதல்** - *நீங்குதல், பங்குபடுதல், வேறுபடல்.*

**பிறிதாராய்ச்சியணி** - *ஓரலங்காரம், அஃது உலகறிகாரணமில்லா திருப்பக் காரியம் பிறத்தலைச் சொல்லுதல்.*

**பிறிதி** - *பிரதி.*

**பிறிதிக்கினை** - *பிரதிக்கினை.*

**பிறிதினவிற்சி** - *பரியாயவலங்காரம்.*

**பிறிதின்கிழமை** - *தன்னோடொற்று மையில்லது.*

**பிறிது** - *வேறு.*

**பிறிதுபடுபாட்டு** - *மிறைக்கவியி னொன்று, அஃது ஒரு செய்யுளை யே தொடையுமடியும் வேறுபடுத் துரைப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறோர் செய்யு ளாய் முடிவது.*

**பிறிதொடுபடான்றன் மதங்கொளல்** - *பிறர்மதத்திற் குடன்படானா கித்தன் மதத்தைக் கொளல், அஃது ஆசிரியமதமேழினொன்று.*

**பிறித்தல்** - *பங்குபடுத்தல், வேறுபடுத் தல்.*

**பிறிப்பு** - *பிரிப்பு.*

**பிறியம்** - *பிரியம்.*

**பிறியாவிடை** - *பிரியாவிடை.*

**பிறிவினை** - *பிரிவினை.*

**பிறிவு** - *பிரிவு.*

**பிறீதி** - *பிரீதி.*

**பிறை** - *வாலசந்திரன்.*

**பிறைக்கொழுந்து** - *இளம்பிறை.*

**பிறைக்கோடு** - *பிறைநுதி.*

**பிறைசூடி** - *சிவன்.*

**பிறைச்சிந்தாக்கு** - *கழுத்தணியி னொன்று.*

**பிறைதொழல்** - *புதுப்பிறை வணங்கு தல், அஃது அகப் பொருட்டுறை யினொன்று.*

**பிறைமலர்** - *அகத்தி.*

**பிறைமுகாத்திரம்** - *பிறைமுகஅம்பு.*

**பிறைவடிவு** - *வில்வளைவு.*

**பிற்கழித்தல்** - *பின்வாங்குதல்.*

**பிற்கூறு** - *பிற்பகுதி.*

**பிற்கொழுங்கோல்** - *உத்திரட்டாதி.*

**பிற்சாமம்** - *நான்காஞ்சாமம்.*

**பிற்பக்கம்** - *அபரபட்சம்.*

**பிற்படுதல்** - *பின்போதல்.*

**பிற்படை** - *பின்னணி.*

**பிற்பாடு** - *பிறகு.*

**பிற்றல்** - *பித்தல், பின்றுதல்.*

**பிற்றி** - *பிந்திப்போனது.*

**பிற்றை** - *பின்னைநாள்.*

**பினற்றல், பினற்றுதல்** - *பிதற்றுதல்.*

**பினாகபாணி** - *சிவன்.*

**பினாகம்** - *சிவன்வில், திரிசூலம், மணி மாலை, மண்மாரி, சிவன் சூலம், சூலம், தம்பனம்.*

**பினாகி** - *ஓரிருடி, ஒருருத்திரன், சிவன், பெண்ணையாறு.*

**பினாகிநதி, பினாகினி** - *பெண்ணை யாறு.*

**பினைச்சல்** - *பினைதல்.*

**பினைதல்** - *பிசைதல்.*

**பினைவு** - *பினைதல்.*

**பின்** - *ஏழனுருபு (உம்) காதலி பின் சென்றதம்மகடை, காரணம், பின் னென்னேவல், பெருமை, வழி.*

**பின்கட்டு** - *பின்பக்கத்திற்கட்டு, வீட்டின்பிற்புறம்.*

**பின்காட்டுதல்** - *தோற்றோடுதல்.*

**பின்குடுமி** - *பின்சிகை.*

**பின்கொடுத்தல்** - *பிறகிடல்.*

**பின்கொண்டை** - *பின்குடுமி.*

**பின்கொம்பு** - *பல்லக்கின் பின்புறத் துக்கொம்பு.*

**பின்கோக்கி** - *ஆபரணக்கடைப் புணர்வு.*

**பின்சந்ததி** - *பின்னடியார்.*

**பின்சந்து** - *பின்னாரி.*

**பின்சரிவு** - *பின்னேரம்.*

**பின்சிகை** - *பஞ்சசிகையினொன்று, அஃது பிடர்மயிர்முடி.*

**பின்செல்லல்** - *தொடர்ந்து போதல், மன்றாடுதல்.*

**பின்தட்டு** - *தோணியிற் பிற்பக்கம் பின்னந்தண்டு.*

**பின்பத்தி** - *பின்வரிசை.*

**பின்பற்றல், பின்பற்றுதல்** - *ஒருவர் செய்தது போலச் செய்தல், கீழ மைந்து நடத்தல், பின்போதல்.*

**பின்பனி** - *ஆறுபருவத்தொன்று, அஃது மாசிபங்குனி.*

**பின்பனியுரிமை** - *உலவைக்காற்று வீசலும் பலபுறவினமுங்கானங் கோழி மகிழ்தலுங் கோங்கு மிலவும் பூத்தலும் பேரீந்து பனை யிவை பழுத்தலும் பருத்தி வெண் சுளை வெடித்தலுமாகும்.*

**பின்பிறந்தாள்** - *தங்கை.*

**பின்பிறந்தோன்** - *தம்பி.*

**பின்பு** - *பின்.*

**பின்புறணி** - *ஒருவனை முன்னிலையிற் புகழ்ந்து இல்லாவுளி யிகழ்தல்.*

**பின்புறம்** - *பின்பக்கம்.*

**பின்போகுதல்** - *பின்செல்லுதல்.*

**பின்போடுதல்** - *நாட்கடத்துதல்.*

**பின்மாரி** - *மார்கழிதை மாதங்களின் மழை.*

**பின்முடுகு வெண்பா** - *பின்னிரண்டடி முடுக்காவருது.*

**பின்முரண்** - *இரண்டாஞ்சீரும் இறுதிச்சீரும் முரணிவருவது.*

**பின்மோனை** - *இரண்டாஞ் சீர்க் கண்ணு மிறுதிச் சீர்க்கண்ணு மோனை வருவது.*

**பின்வரிசை** - *பின்பகுதி.*

**பின்வருநிலை** - *ஓரலங்காரம், அஃது முன்வாக்கியத்தில் வந்த சொல் லேனும் பொருளேனுஞ் சொல் லும் பொருளுமேனும் பின்வாக் கியத்திலும் வருதல்.*

**பின்வருவிளக்கணி** - *ஓரலங்காரம், அஃது முன்வாக்கியத்து வந்த விளக்கச் சொல்லேனும் பொரு ளேனுஞ் சொல்லும் பொருளு மேனும் பின் வாக்கியத்துள்ளும் வருதல்.*

**பின்வாங்கல்** - *தோற்றல், பிற்கழித்தல்.*

**பின்வைத்தல்**-*பின்போடுதல், பின்னடி யாருக்கு வைத்தல்.*

**பின்றல், பின்றுதல்** - *பிறகிடல்.*

**பின்றளை** - *பின்னங்கால் பிணைக்குங் கயிறு, பின்னங்காற்பிணைப்பு.*

**பின்றை** - *பின்னைநாள்.*

**பின்றொடரி** - *ஓர்செடி.*

**பின்றொடர்தல்** - *பின்செல்லல்.*

**பின்றோன்றல்** - *தம்பி.*

**பின்னகம்** - *பேதம், மயிர்முடி.*

**பின்னகனம்** - *கீழ்வாயிலக்கத்தைச் சமமாகிய அவ்விலக்கத்தாற்றாக்கி வந்த இலக்கத்தை மறு முறையும் பெருக்கல்.*

**பின்னகன்** - *பேதி.*

**பின்னகுணனம்** - *கீழ்வாயிலக்கத்தைப் பெருக்கல்.*

**பின்னங்கால்** - *பின்கால்.*

**பின்னசங்கலிதம்** - *கீழ்வாய்க் கூட்டல்.*

**பின்னசத்தி** - *பங்கப்படத்தக்கது.*

**பின்னடி** - *கடைசி, பிற்சந்ததி, வருகாலம்.*

**பின்னடியார்** - *பின்சந்ததியார்.*

**பின்னடைப்பன்** - *பசுநோயி னொன்று.*

**பின்னணி** - *பிற்படை.*

**பின்னணியம்** - *தோணியிற்பிற்புறம், பிற்படை.*

**பின்னதுநிறுத்தல்** - *யுத்திமுப்பத்தி ரண்டினொன்று, அஃது ஒரு பொருட்குக் கருவியாய் முன் வைத்தற்குரியதை முன் வைத்தற் கிடம்பெறாதாயின் அப்பொரு ளின் பின்னே அதனை வைத்தல்.*

**பின்னந்தண்டு** -*பின்காற்சீப்பு.*

**பின்னந்தலை** - *பிடர்.*

**பின்னந்தொடை** - *பின்றொடை.*

**பின்னபேதகம், பின்னபேதம்** - *விரோதம்.*

**பின்னம்** - *கிழிவு, தடை, தவறு, பங்கு, பராகம், பழுது, பிணக்கு, வேற் றுமை, பிழைத்தல், பிளத்தல்.*

**பின்னரை** - *பின்பாதி.*

**பின்னர்** - *சூத்திரர், பிறகு.*

**பின்னல்** - *சடை, சிக்கு, பிசகு, பின்னப் பட்டது, பின்னுதல்.*

**பின்னவருக்கம்** - *கீழ்வாயிலக் கத்தைச் சமமாகியவவ்விலக்கத் தாற் பெருக்கல்.*

**பின்னவர்** - *சூத்திரர்.*

**பின்னவன்** - *தம்பி.*

**பின்னவியவகலிதம்** - *கீழ்வாய்க்கழிவு கணக்கு.*

**பின்னவையகத்திணை** - *பின்வருவதைக் காட்டல், (உம்) பகைபாவ மச்சம் பழியென நான்குமிக வாவா மில்லிறப்பான் கண்.*

**பின்னளபெடை** - *இரண்டாஞ்சீரு மிறுதிச் சீருமளபெடுத்து வருவது.*

**பின்னறுவிடை** - *வீடுகாலிவிளைவு.*

**பின்னற்காரன்** - *பின்னல் வேலை செய்பவன்.*

**பின்னனை** - *சிறியதாய்.*

**பின்னாரி** - *முதுகின்கீழ்ப்புறம்.*

**பின்னால்** - *பின்பு.*

**பின்னிடல், பின்னிடுதல்** - *அதைத்தல், தோற்றல், பின்னேபோதல்.*

**பின்னிடைதல்** - *பின்னிடுதல்.*

**பின்னிதம்** - *பேதம்.*

**பின்னியாசம்** - *பெருங்காயம்.*

**பின்னியைபு** - *முதற்சீர்க்கண்ணு மீற்றயற் சீர்க்கண்ணுமியைபு வருவது.*

**பின்னிரக்கம்** - *பிற்றயவு.*

**பின்னிருட்டு** - *பின்னிராவிருள்.*

**பின்னிரை** - *பின்வரிசை.*

**பின்னிலவு** - *அபரபக்கம்.*

**பின்னிழுக்கு** - *பின்வருங்குறை.*

**பின்னிளவல்** - *தம்பி.*

**பின்னிற்றல்** - *பிறகிடல், மறுத்தல்.*

**பின்னுதல்** - *தெற்றல்.*

**பின்னும்** - *மேலும்.*

**பின்னேரம்** - *சாயங்காலம்.*

**பின்னெதுகை** - *இரண்டாஞ்சீர்க் கண்ணுமிறுதிச் சீர்க்கண்ணு மெதுகை வருவது.*

**பின்னை** - *இலக்குமி, இளையவள், இளையவன், பின்பு, பின்னை நாள்.*

**பின்னைகேள்வன்** - *திருமால்.*

**பின்னைநாள்** - *பின்னாள், மறுநாள்.*

**பின்னோக்கு** - *பிற்பார்வை.*

**பின்னோர்** - *சூத்திரர்.*

**பின்னோன்** - *தம்பி.*

# பீ

**பீ** - *அச்சம், ஓரெழுத்து, மலம்.*

**பீக்கருவேல்** - *ஓர் மரம்.*

**பீக்கலாட்டம்** - *பித்தலாட்டம்.*

**பீக்கிலாத்தி** - *சங்கங்குப்பி.*

**பீங்கான்** - *ஓர் பாண்டம்.*

**பீசகம்** - *யானைவிரல்.*

**பீசதீட்சை** - *ஓர் தீட்சை.*

**பீசநியாயம்** - *மூலநியாயம், வெளிப் படாதது.*

**பீசம்** - *ஆண்குறி, சுக்கிலம், தாடி, தாமரைப்பூச்சுருள், மூலம், விதை.*

**பீசாங்குரநியாயம்** - *காரணகாரிய மிதுவதுவென முற்பிற்பாடு வரை யறுக்கப்படாவழக்கு.*

**பீசாட்சரம்** - *விந்து.*

**பீசி** - *பீசத்தையுடையது.*

**பீச்சல்** - *கழிச்சல்.*

**பீச்சாக்கத்தி, பீச்சாங்கத்தி** - *பூச்சார்த்தி.*

**பீச்சாங்குழல்** - *மலசலம் வாங்கும் ஓர் சூத்திரக்குழல்.*

**பீச்சாங்கொள்ளி** - *அச்சமுடையோன்.*

**பீச்சுவிளாத்தி** - *ஓர்மரம்.*

**பீச்சைக்கால்** - *இடக்கால்.*

**பீச்சைக்கை** - *இடக்கை.*

**பீடகேலி** - *வேசி.*

**பீடணம், பீஷணம்** - *அச்சம்.*

**பீடம்** - *ஆசனம், குதம், சிங்காதனம், தருப்பைப்பாய்.*

**பீடரம்** - *தேவாலயம்.*

**பீடனம்** - *பீடை.*

**பீடாபஞ்சனம்** - *ஐவகைப்பீடை.*

**பீடாபயம்** - *பீடையினால் வரும்பயம்.*

**பீடார்த்தம்** - அவத்தை.

**பீடிகை** - அணிகலச்செப்பு, ஆசனம், கடைவீதி, பூந்தட்டு, முகவுரை, முனிவரிருக்குமிடம்.

**பீடித்தல்** - இரங்கல், துன்புறுதல், துன்புறுத்தல்.

**பீடிப்பு** - உருக்கம், துன்பம்.

**பீடு** - பெருமை, வலி.

**பீடை** - உருக்கம், துன்பம், பாழாதல், முடிமாலை.

**பீடைகழித்தல்** - துன்பநிவாரணஞ் செய்தல், மார்கழி மாதத்திற் செய்யுமோர் சடங்கு.

**பீடைமாதம்** - மார்கழிமாதம்.

**பீட்டகம்** - உத்தியோகம், தொழில்.

**பீட்டன்** - பாட்டன்.

**பீட்டி** - பாட்டி.

**பீட்டை** - இளங்கதிர், இளஞ்சூல்.

**பீதகதலி** - செவ்வாழை.

**பீதகந்தம்** - பன்றி.

**பீதகம்** - அரிதாரம், இருவேலி, சாந்து, தேன், பித்தளை, பொன்னிறம், மஞ்சள்.

**பீதகன்** - வியாழன்.

**பீதகாட்டம்** - செஞ்சந்தனக்கட்டை.

**பீதகாரகம்** - வேங்கைமரம்.

**பீதகாவேரம்** - பித்தளை, மஞ்சள்.

**பீதசாரம், பீதசாலம்** - சந்தனம், வேங்கைமரம்.

**பீதசாரி** - சந்தனம்.

**பீததுண்டம்** - பொன்வாய்ப்புள்.

**பீததுத்தை** - இளங்கற்றா.

**பீதம்** - அச்சம், அரிதாரம், குடித்தல், சந்தனம், சிவப்பு, நால்வகைச் சாந்தினொன்று, நீர், நேரம், பருமை, பொன், பொன்னிறம், மஞ்சள்.

**பீதயூதி** - செம்மல்லிகை.

**பீதராகம்** -தாமரை நூல், பொன்மை.

**பீதராசாவருத்தம்** - ஓர்கல்.

**பீதரோசனை** - ஓர்மருந்து.

**பீதலகம், பீதலம், பீதனேகம்** - பித்தளை.

**பீதன்** - அச்சமுள்ளோன், சூரியன், தீ.

**பீதாம்பரம்** - கனகவத்திரம்.

**பீதாம்பரன்** - திருமால்.

**பீதி** - அச்சம், குடிப்பு, மதுக்கடை.

**பீதிகை** - செம்மல்லிகை, பொன்மை மஞ்சணிறம்.

**பீது** - சூரியன், தீ, யானைகட்குத் தலையானை.

**பீதை** - பொன்னிறப்பூவுள் மருதோன்றிமரம், மஞ்சள்.

**பீத்தல்** - பீற்றல்.

**பீத்தை** - நாடா.

**பீநாறி** - பெருமரம்.

**பீநாறிச்சங்கு** - ஓர்செடி.

**பீப்பாக்கு** - நுங்குப்பாக்கு.

**பீமசாசனம்** - பெருங்கொலை.

**பீமசாசனம்** - நமன்.

**பீமநாதம்** - சிங்கம், பேரொலி.

**பீமபீசம்** - அண்டநோயினொன்று.

**பீமம்** - அச்சம், பருமை.

**பீமரதி** - பிறந்த எழுபத்தேழாமாண்டினேழாமாதத்தேழாமிரவு.

**பீமரம்** - யுத்தம்.

**பீமரன்** - யுத்தவீரன்.

**பீமன்** - உருத்திரன்.

**பீயாக்குதல்** - கெடுத்தல்.

**பீயூசம்** - அமுதம், இளங்கற்றிப்பால்.

**பீரம்** - பலம், பீர்க்கு, பூவரசமரம், வாகைமரம், வீரம்.

**பீராய்தல்** - வீராய்தல்.

**பீரிடுதல்** - கம்பிபோலப்பாய்தல், நுட்பமாயாராய்தல்.

**பீரிறங்கல்** - பீரோடல்.

**பீரு** - அச்சமுள்ளோன், புருவம், புலிவெள்ளாடு.

**பூமத்தை** - *ஓர்செடி.*

**பூமஸ்நானம்** - *ஏழ்வகைநானத் தொன்று, அஃது துளசிமுதலிய திவ்விய மரத்தருகின் மிருத்திகை யாற்பூசுதல்.*

**பூமன்,** *செவ்வாய், பிரமன்.*

**பூமாலை** - *புட்பமாலை, இஃது இராச சின்னத்தொன்று.*

**பூமான்** - *புமான்.*

**பூமி** - *இடம், கோணங்களின் கீழ்வரி, தேசம், பூநீறு, பூவுலகு, மூவுலகத் தொன்று, குவியல்.*

**பூமிகாமி** - *பூகாமி.*

**பூமிகொழுநன்** - *திருமால்.*

**பூமிக்கூர்மை** - *வெடியுப்பு.*

**பூமிசம்** - *நரகம்.*

**பூமிசம்பவை** - *சீதை.*

**பூமிசன்** - *செவ்வாய், நரகாசுரன்.*

**பூமிசாரம்** - *ஓர் நூல்.*

**பூமிசை** - *இலக்குமி, சீதை.*

**பூமிசைநடந்தோன்** - *அருகன், புத்தன்.*

**பூமிச்செருக்கன்** - *உவர்மண்.*

**பூமிதேவி** - *பூமிலட்சிமி.*

**பூமித்திரம்** - *மலை.*

**பூமித்தைலம்** - *மண்டயிலம்.*

**பூமிநடுக்கம்** - *பூமியதிர்ச்சி.*

**பூமிநாதம்** - *இந்துப்பு, கரந்தம், பூநீறு.*

**பூமிநாயகன்** - *காலமீரப்படிகம்.*

**பூமிபரிட்சை** - *கலைஞான மறுபத்தி னான்கினொன்று.*

**பூமிபாரம்** - *சிருட்டிப்பொருள்களாற் பூமிக்குண்டானபாரம்.*

**பூமிபாலன்** - *அரசன்.*

**பூமிபிசாசம்** - *பனை.*

**பூமிப்பிரவேசம்** - *விளைநிலத்திற் செய்கைபண்ணநாளுக்குப்போதல்.*

**பூமியதிர்தல்** - *பூமிநடுங்கல்.*

**பூமியதிர்த்தல்** - *பூமிநடுக்கம்.*

**பூமிலட்சிமி, பூமின்** - *இலக்குமி, பூமி தேவி.*

**பூமிலாபம்** - *மரணம்.*

**பூமிலேபனம்** - *மெழுகுதல்.*

**பூமிவெளுப்புமண்** - *சுதைமண்.*

**பூமிவேர்** - *பூநாகம்.*

**பூம்பட்டாடை, பூம்பட்டு** - *ஓர்பட்டுப் புடைவை.*

**பூம்பந்து** - *பூவினாலாயபந்து.*

**பூம்பறியல்** - *தட்டுக்கேடு.*

**பூம்பனை** - *ஆண்பனை.*

**பூம்பாளை** - *பூப்பாளை.*

**பூம்பிஞ்சு** - *இளம்பிஞ்சு.*

**பூம்பிரயோசனம்** - *புன்பயிர்ப் பிர யோசனம்.*

**பூம்புகை** - *நறும்புகை.*

**பூயாரி** - *வேம்பு.*

**பூயாலசம்** - *கட்பீழை.*

**பூரகம்** - *பிதுர்பிண்டம், பூரித்தல், பெருக்குந்தொகை, மூச்சுள்ளே வாங்கல்.*

**பூரங்களித்தல்** - *தீபாராதனை.*

**பூரட்சகன்** - *அரசன்.*

**பூரட்டாதி** - *ஓர்நாள்.*

**பூரணகருப்பம்** - *நிறைகருப்பம்.*

**பூரணகருப்பனி** - *நிறைகருப்பிணி.*

**பூரணகலசம், பூரணகும்பம்** - *சலம் பூரித்தகலசம், நிறைகுடம்.*

**பூரணசந்திரன்** - *நிறைகலாசந்திரன்.*

**பூரணசற்குணம்** - *நிறைந்தநற்குணம்.*

**பூரணசற்குணன்** - *நிறைந்த நற்குணன்.*

**பூரணசாத்திரம், பூரணசூத்திரம்** - *அகத்தியர்செய்தவோர் நூல்.*

**பூரணதிசை** - *சரஞ்செல்லுந்திசை.*

**பூரணபலன்** - *நிறைபலன்.*

**பூரணபாத்திரம்** - *இருநூற்றைம் பத்தாறு சிறங்கையரிசி கொண்ட பாத்திரம், பூரணகும்பம்.*

**பூரணபிண்டம்** - *நிறைகரு.*

**பூரணமாசம்** - *பிரசூதிமாதம்.*

**பூரணமி** - *பூரணை.*

**பூரணமை** - *பௌரணமி.*

**பூரணம்** - *ஊடைநூல், எல்லாம், கடல், நிறைவு, பிதுர்பிண்டம், பெருக்கம், மழை, மூடல்.*

**பூரணலேகியம்** - *ஓரிலேகியம்.*

**பூரணவடிவு** - *மகாலங்காரம்.*

**பூரணவயசு** - *நிறைவயசு.*

**பூரணவித்தை** - *முழுக்கல்வி.*

**பூரணவிரதம்** - *உத்தமவிரதம்.*

**பூரணன்** - *அரன், அருகன், கடவுள், மூர்த்தபாஷாணம்.*

**பூரனாகுதி** - *ஓமச்சடங்கைநிறை வேற்றுங்கடைசியாகுதி.*

**பூரணாயு** - *பூரணவயசு.*

**பூரணானகம்** - *சந்திரகிரணம், மேளம்.*

**பூரணி** - *இளவமரம், காடு, நிறை வுள்ளவன், பூமி.*

**பூரணேந்து** - *பூரணசந்திரன்.*

**பூரணை** - *ஐயன்றேவிகளிலொருத்தி, சந்திரனைந்தாம் பத்தாந்திதி, பௌரணை.*

**பூரணைகேள்வன்** - *ஐயன்.*

**பூரபதி** - *பச்சைக்கருப்பூரம்.*

**பூரம்** - *ஓர்நாள், ஓர்மருந்து, கருப்பூரம், சூழ்தல், தேள், நீர்க்குண்டு, பூரணம்.*

**பூரவாகனி** - *சரச்சுவதி.*

**பூராசி** - *பூத்திரள்.*

**பூராடமாசு** - *பால்வீதிமண்டலம்.*

**பூராடம்** - *ஓர்நாள்.*

**பூராயக்கதை** - *பழங்கதை*

**பூராயம்** - *பூருவம், விருப்பம்.*

**பூராவாய** - *நிறைவு.*

**பூரான்** - *ஓர்விஷசெந்து, பனங் கொட்டைமுதலியவற்றினுட்பருப்பு.*

**பூரான் காவிக்கல்** - *மஞ்சற்காவி.*

**பூரி** - *ஓரிசை, ஓர்பணிகாரம், ஓர்வீரன், கலப்புநெல், சிராத்தக் கிரியையினொன்று, சிவன், திரு மால், நாணி, நூறுகோடி கோடி கோடாகோடி, பகல், பிரமன், பூரியென்னேவல், பொன், மிகுதி, புல்.*

**பூரிகம்** - *அப்பவருக்கம்.*

**பூரிகலியாணி** - *ஓரிசை.*

**பூரிகை** - *அப்பவருக்கம், ஊதிடும் பூரிகை.*

**பூரிகொடுத்தல்** - *சிராத்தச்சடங்கி னொன்று.*

**பூரிதம்** - *பூரணம்.*

**பூரித்தல்** - *உவத்தல், நிரப்புதல் நிறைத்தல், பருத்தல், வாயுவை நிறைத்தல்.*

**பூரிபோசனம்** - *சிராத்தத்தின்பிற் கொடுக்கும்போசனப்பொருள்.*

**பூரிப்பு** - *பூரணம், மிகுகளிப்பு, மிகுதி.*

**பூரிமாயு** - *ஆணரி, பழமை.*

**பூரியம்** - *அரசிருக்கை, ஊர், மருத நிலத்தூர், வேந்தர்வீதி.*

**பூரியர், பூரியோர்** - *கீழ்மக்கள்.*

**பூரு** - *குருகுலத்தரசரிலொருவன், புருவம்.*

**பூருகம்** - *மரம்.*

**பூருண்டி** - *மல்லிகை.*

**பூருபூரெனல்** - *பூர்பூரெனல்.*

**பூருவகங்கை** - *நருமதை.*

**பூருவகதை** - *பழங்கதை.*

**பூருவகருமம், பூருவகன்மம்** - *ஊழ் வினை.*

**பூருவகாட்டை** - *கிழக்கு.*

**பூருவகாலம்** - *முற்காலம்.*

**பூருவகௌளம்** - *ஓரிசை.*

**பூருவக்கியானம்** - *பிறார்த்தஞானம்.*

**பூருவசந்தியை** - *விடியல்.*

**பூருவசனனம், பூருவசன்மம்** - *முற் பிறப்பு.*

**பூருவசன்** - *தலைமகன், முன்னோன்.*

**பூருவசாகசம்** - *கடுந்தண்டம்.*

**பூருவசைலம்** - *உதயமலை.*

**பூருவஞானம்** - *முன்னனுபவத்தையறியுமறிவு.*

**பூருவதிக்கு, பூருவதிசை** - *கிழக்கு.*

**பூருவதுவந்தம்** - *ஊழ்வினைப்பயன்.*

**பூருவதேகம்** - *பூருவசரீரம்.*

**பூருவதேசம்** - *கிழக்கு.*

**பூருவதொடர்ச்சி** - *பழவினைத்தொடர்.*

**பூருவபக்கம், பூருவபட்சம்** - *வளர்பிறைப்பக்கம்.*

**பூருவபதம்** - *நிலைமொழி.*

**பூருவபருபதம்** - *உதயமலை.*

**பூருவபற்குனி** - *உத்திரம்.*

**பூருவபற்குனிபவன்** - *வியாழன்.*

**பூருவபுண்ணியம்** - *முற்றருமம்.*

**பூருவப்படுதல்** - *தொன்றுதொட்டுரித்தாயிருத்தல்.*

**பூருவமீமாஞ்சை** - *மீமாஞ்சையின் முற்பகுதி.*

**பூருவம்** - *ஆதி, எல்லாம், கிழக்கு, சந்திரன்முன்பக்கம், பழமை, முன்பு.*

**பூருவாசாடம்** - *பூராடம்.*

**பூருவாண்ணம், பூருவாண்ணியம்** - *முன்னேரம்.*

**பூருவாபரம்** - *அத்தாட்சி.*

**பூருவாப்பியாசம்** - *பழயவழக்கம்.*

**பூருவீகம், பூருவோத்திரம்** - *ஆதி, பழமை.*

**பூருவோத்தரம்** - *பூருவோத்திரம், வடகிழ்த்திசை.*

**பூருவோத்திரசங்கதி** - *பூருவத்தின் வரலாறு.*

**பூரை** - *குறைவின்மை, பூரணம்.*

**பூரையிடுதல்** - *அலுத்துப்போதல்.*

**பூர்தல்** - *நிறைதல்.*

**பூர்த்தம்** - *தருமம்.*

**பூர்த்தி** - *நிறைவு.*

**பூர்ப்பியம்** - *நூதனம், பழங்கதை.*

**பூர்ப்பூரெனல்** - *பொலிந்துபருத்தல்.*

**பூர்வம்** - *பூருவம்.*

**பூர்வீகன்** - *பழையோன்.*

**பூலதை** - *நாங்கூழ், படர்கொடி.*

**பூலத்தி** - *மருதமரம்.*

**பூலா** - *பூல்*

**பூலித்தகடு** - *மணியழுத்தவைக்குந்தகடு.*

**பூலோகம்** - *பூமி, இஃது மேலேழுலகினொன்று.*

**பூல்** - *ஓர்செடி.*

**பூவசியர்** - *பூவைசியர்.*

**பூவணம்** - *ஓர்சிவதலம்.*

**பூவணை** - *பூமெத்தை.*

**பூவந்தவம்** - *நிலாவிரை.*

**பூவந்தி** - *புன்குமரம், பொன்னாங்காய் மரம், ஓர்மரம், ஓர்மருந்து.*

**பூவமளி** - *புட்பசயனம், இஃது அட்டபோகத்தொன்று.*

**பூவம்பன்** - *மன்மதன்.*

**பூவரசு** - *ஓர்மரம்.*

**பூவலயம்** - *பூகோளம்.*

**பூவல்** - *சிவப்பு, துரவு.*

**பூவளலை** - *பூநீறு.*

**பூவாணம்** - *ஓர்விதவாணம்.*

**பூவாமற்காய்க்குமரம்** - *ஆல் முதலியன.*

**பூவாளி** - *ஓர்பாணம், மதன்பாணம், மன்மதன்.*

**பூவிதழ்** - *பூந்தோடு.*

**பூவிந்து** - *அப்பிரகம், வீரம்.*

**பூவிளம்** - *கற்பாஷாணம்.*

**பூவுலகு** - *பூமி.*

**பூவெண்ணெய்** - *ஓர்நற்றயிலம்.*

**பூவை** - *காயாமரம், கிளி, குயில், நாகணவாய்ப்புள், பெண்.*

**பூவைசியர்** - *உழவர், வேளாளர், இவர் மூவைசியரிலொருவர்.*

**பூவொல்லி** - *தேங்காயிலோர் வகை யொல்லி.*

**பூவோடு** - *தொட்டிபாஷாணம்.*

**பூள்** - *காடை.*

**பூழான்** - *கவுதாரி, கானாங்கோழி.*

**பூழி** - *குழைசேறு, கொடுந்தமிழ் நாட்டினொன்று, சேற்றிற்குமிழி, பராகம், புழுதி.*

**பூழியன்** - *சேரன், பாண்டியன், பூழில் - அகில் பூமி.*

**பூழை** - *கோபுரவாயிற்கதவிலிட்டுப் புகும்வழி, துவாரம்.*

**பூழ்க்கை** - *புழைக்கை, யாழியானை, யானை.*

**பூழ்தி** - *பராகம், புலால், புழுதி.*

**பூளை** - *இலவம்பஞ்சு, ஓர்செடி.*

**பூனை** - *பூஞை.*

**பூனைக்கண்புருடராகம்** - *ஓர்மணி.*

**பூனைக்கழற்சி** - *ஓர்செடி.*

**பூனைக்காஞ்சொறி** - *ஓர்காஞ்சொறி.*

**பூனைக்காய்வேளை** - *ஓர்செடி.*

**பூனைக்காலி** - *ஓர்செடி.*

**பூனைத்திசை** - *தென்கிழக்கு.*

**பூனைப்பகைவன்முள்** - *எலிமுள்ளு.*

**பூனைமயிர்** - *பூனைக்கழற்சி.*

**பூனைவணங்கி** - *குப்பைமேனி.*

## பெ

**பெங்கு** - *கள்ளினோர்பேதம்.*

**பெடம்** - *மிகுதி.*

**பெடை** - *பறவைப்பெண்.*

**பெட்டகத்துத்தி** - *ஓர்துத்தி.*

**பெட்டகம்** - *பெட்டி.*

**பெட்டல்** - *ஆசைப்பெருக்கம், விரும்பல்.*

**பெட்டார்** - *சினேகிதர்.*

**பெட்டி** - *பேழை, மூளிவாய்.*

**பெட்டிக்கோரை** - *ஓர்புல்.*

**பெட்டு** - *பொய்.*

**பெட்டை** - *ஒட்டகம், கழுதை, குதிரை, சிங்கம், நாய், மரையிவற்றின் பெண், பறவைப்பெண், பெண் பொது.*

**பெட்டைக்கடல்** - *சிறுகடல்.*

**பெட்டைக்கட்டு,** *பெட்டைமுடிச்சு - வளமற்றகட்டு.*

**பெட்டைக்கண்** - *சிறுகண்.*

**பெட்டைக்கண்ணன்** - *சிறுகண் ணுள்ளவன்.*

**பெட்டையன்** - *ஆண்மையற்றவன்.*

**பெட்பு** - *அன்பு, ஆசை, பெருமை.*

**பெண்** - *திரீ, மனைவி, விலங்கின் பெண்பொது.*

**பெண்கரு** - *சுரோணிதம்,*

**பெண்கலை**-*வண்ணத்தின் சிற்றின்பப் பகுதி.*

**பெண்குமஞ்சான்** - *சாம்பிராணி.*

**பெண்குறி** - *யோனி.*

**பெண்கேட்டல்** - *பெண்ணை மணம் பேசுதல்.*

**பெண்கொடி** - *பெண்.*

**பெண்கொடுத்தல்** - *பெண்ணை விவாகஞ் செய்துகொடுத்தல்.*

**பெண்சாதி** - *மனைவி.*

**பெண்சோடினை** - *பெண்வேஷவணி.*

**பெண்டகர், பெண்டர்** - *அலியர்.*

**பெண்டகை** - *பெண்டன்மை.*

**பெண்டாட்டி** - *பெண், மனையாட்டி.*

**பெண்டிர், பெண்டில்** - *பெண்.*

**பெண்டீர்** - *பெண்கள்.*

**பெண்டு** - *பெண்மகள்.*

**பெண்ணரசி** - *இராசாத்தி, விவேகமுள்ளவள்.*

**பெண்ணரசுநாடு** - *பெண்ணாளுகை செய்யுமிராச்சியம்.*

**பெண்ணலம்** - *பெண்ணிலுள்ள வின்பம்.*

**பெண்ணழைத்தல்** - *பெண்ணை விவாகஞ்செய்தல்.*

**பெண்ணன்** - *ஆண்மையற்றவன்.*

**பெண்ணாசை** - *திரீவிருப்பம், இஃது மூவாசையினொன்று.*

**பெண்ணாள்** - *பெண்நட்சத்திரம்.*

**பெண்ணீலி** - *ஓர்பெண்தேவதை, துட்டை.*

**பெண்ணுறுப்பு** - *பெண்குறி, பெண்ணிலட்சணம்.*

**பெண்ணெடுத்தல்** - *பெண் கொள்ளுதல்.*

**பெண்ணெழுத்து** - *நெட்டெழுத்து.*

**பெண்ணை** - *அனுடநாள், ஓராறு, பனைமரம்.*

**பெண்தண்டு** - *காதினுட்புறத்தண்டு.*

**பெண்பழி** - *பெண்துரோகம்.*

**பெண்பனை** - *காய்ம்பனை.*

**பெண்பால்** - *திரீலிங்கம், இஃது ஐம்பாலினொன்று.*

**பெண்பால்விகுதி** - *பெண்பகுதியை விளக்கிநிற்கும் விகுதி.*

**பெண்பாற்பிள்ளைக்கவி** - *ஆண்பாற்பிள்ளைக்கவியுறுப்புள் சிறுதேர், சிறுபறை, சிற்றில் எனு மூன்றொழித்து ஏனையுறுப் பேழுடன் அம்மனை, ஊசல், கழங்கெனுமூன்றுறுப்புங் கூட்டி யுறுப்புக்குப்பப்பத்து விருத்தத் தான்முடிவது.*

**பெண்பிடித்தல்** - *கூத்திபிடித்தல்.*

**பெண்பிள்ளை** - *சிறுமி, பெண், மணவாட்டி.*

**பெண்பிறந்தவள்** - *பெண்ணாய்ப் பிறந்தவள்.*

**பெண்புத்தி** - *பேதைப்புத்தி.*

**பெண்பேதை** - *ஏழைப்பெண்.*

**பெண்போகம்** - *அறம்முப்பத்திரண்டினொன்று, அஃது மணமுடிப் பித்தல், திரீபோகம், இஃது அட்டபோகத்தொன்று.*

**பெண்மகள்** - *திரீ.*

**பெண்மதி** - *பெண்புத்தி.*

**பெண்மயக்கம், பெண்மயல்** - *பெண் மோகம்.*

**பெண்மயிர்** - *அளகம்.*

**பெண்மரம்** - *பிறவயிரமுள்ளமரம்.*

**பெண்மாயம்** - *பெண்மயக்கம்.*

**பெண்மூச்சு** - *பெண்மூர்க்கம்.*

**பெண்மை** - *பெண்டன்மை, மாட்சிமை.*

**பெண்மைச்சினைப்பெயர்** - *பெண்பான்முப்பகுதிக்கும் பொதுவானவுறுப்பானாய பெயர் (உம்) முடத்தி.*

**பெண்மைச்சினைமுதற்பெயர்** - *பெண்பான் முப்பகுதிக்கும் பொதுவானவுறுப்பு முதற்பொருட் பெயர், (உம்) முடக்கொற்றி.*

**பெண்மை முதற்பெயர்** - *பெண்பான் முப்பகுதிக்கும் பொதுவான முதற் பெயர் (உம்) கொற்றி.*

**பெண்மைமுறைப்பெயர்** - *முறையைக் காட்டிவரும் பெண் பெயர், (உம்) தாய்.*

**பெண்வகை** - *பெண்வகுப்புநாலு, அஃது பதுமினி, சித்தினி, சங்கினி அத்தினி.*

**பெண்வழி, பெண்வழிச்சுற்றம்** - *பெண்ணைப்பற்றியவினம்.*

**பெதும்பை** - *பதினொருவயதிற் பெண், பெண்பொது.*

**பெத்தகாலம்** - *இலயகாலம்.*

**பெத்ததிசை** - *ஆன்மாபாசத்திற்குட் பட்டிருக்குங்காலம்.*

**பெத்தமுத்தி** - *இலயமுத்தி.*

**பெத்தம்** - *ஒடுக்கம், கட்டு, சேர்மானம், நிலைபரம்.*

**பெத்தரிக்கம்** - *அகந்தை, கலம்பகம்.*

**பெத்தர்** - *அடிமைகள், பாசபந்தர்.*

**பெந்தம்** - *பந்தம்.*

**பெந்தர்** - *பந்தர்.*

**பெந்தனம்** - *பந்தனம்.*

**பெந்தித்தல்** - *பந்தித்தல்.*

**பெந்திப்பு** - *கட்டு.*

**பெந்து** - *சுற்றம்.*

**பெந்தை** - *அவலட்சணமாய்ப் பருத்தது, கலப்பையினோருறுப்பு.*

**பெந்தைக்கண்** - *பெரியகண்.*

**பெந்தைக்கயிறு** - *படைவாளை மேழியோடிணைக்குங்கயிறு.*

**பெம்மான்** - *பெருமான்.*

**பெயரடி** - *பெயர்ச்சி, பேர்மூலம்.*

**பெயரன்** - *பாட்டன்.*

**பெயராளி** - *கீர்த்திமான்.*

**பெயரிடுதல்** - *நாமந்தரித்தல்.*

**பெயரியற்சொல்** - *செந்தமிழ்நிலத்து மொழிகளாய் உலக வழக்கினுஞ் செய்யுள்வழக்கினு நின்றுதம் பொருளையியல்பாக விளக்கும் பெயர்ச் சொல்.*

**பெயரின்னிசை** - *ஓர்பிரபந்தம், அஃது பாட்டுடைத்தலைவன் பெயரினைச் சாரவின்னிசை வெண்பாவாற்பாடுவது.*

**பெயருதல்** - *நிலைவிலகுதல்.*

**பெயரெச்சம்** - *பெயரையவாவி நிற்குஞ் சொல், அஃது அகரமும் உம்மு மாகிய இருவிகுதிகளையும் பெற்று கருத்தா, காரணம், இடம், காலம், செயல், செயப்படுபொருள் எனு மாறனுள் ஒன்றைக்கொண்டு முடியும்.*

**பெயரெடுத்தல்** - *கீர்த்தியடைதல்.*

**பெயரெடுப்பு** - *நாமப்பிரபலியம்.*

**பெயர்** - *கீர்த்தி, நாமம், பெயரென் னேவல், பெயர்ச்சொல்.*

**பெயர்ச்சி** - *திரும்புதல், புரட்சி.*

**பெயர்ச்சூத்திரம்** - *இடுகுறி காரணக் குறியாலிதற்கிது பெயரென்றிடுதல்.*

**பெயர்ச்சொல்** - *இடுகுறியாயுங் காரணக்குறியாயும் வேற்றுமை யுருபுகள் சார்தற்கிடனாய் ஒன்றன் பெயரைவிளக்கி நிற்குஞ்சொல்.*

**பெயர்த்தல்** - *ஆடல், உரிஞ்சல், எடு படல், திரும்பல், போகல், வேறு படல்.*

**பெயர்த்தல்** - *கிளப்புதல், திருப்புதல், வேறுபடுத்தல்.*

**பெயர்த்தி** - *பாட்டி, பெயர்ச்சி.*

**பெயர்நேரிசை** - *ஓர்பிரபந்தம், அஃது பாட்டுடைத் தலைவன் பெய ரினைச்சார நேரிசை வெண்பா வாற்பாடுவது.*

**பெயர்போதல்** - *கீர்த்திபிரபலமாதல்.*

**பெயர்ப்பகுதி** - *பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எனுமறுவகைக்காரணங்கொண்ட பெயர்.*

**பெயர்ப்பிரஸ்தாபம்** - *கீர்த்தி.*

**பெயர்ப்பு** - *பெயர்ச்சி.*

**பெயர்வழி** - *பெயர்முறை.*

**பெயர்விகுதி** - *பெயர்ச்சொல்லின் விகுதி.*

**பெயர்விளங்கல்** - *கீர்த்தியுண்டாதல்.*

**பெயர்வு** - *பெயர்தல்.*

**பெயர்வேற்றுமை** - *எழுவாய்வேற்றுமை.*

**பெயலை** - *மழை.*

**பெயல்** - *மழை, மழைத்துளி.*

**பெய்கலம்** - *கொள்கலம்.*

**பெய்தல்** - *செறித்தல், சொரிதல், விடுதல்.*

**பெய்துரை** - *பாயிரம்.*

**பெய்வளை** - *பெண்.*

**பெய்வு** - *பெய்தல்.*

**பெரிசு, பெரிது** - *கனங்கொண்டது, பருத்தது.*

**பெரியகை** - *கொடைக்கரம்.*

**பெரியதகப்பன்** - *தந்தைதன்றமையன்.*

**பெரியதம்பிரான்** - *ஓர்தேவதை.*

**பெரியதனம்** - *பெருந்தன்மை.*

**பெரியதாய்** - *தாயக்கை.*

**பெரியது** - *பெரிது.*

**பெரியநடை** - *நல்லொழுக்கம்.*

**பெரியபுராணம்** - *அறுபத்து மூவர் கதை.*

**பெரியப்பன்** - *பெரியதகப்பன்.*

**பெரியம்மான்பச்சரிசி** - *ஓர்பூடு.*

**பெரியம்மை** - *வைசூரி.*

**பெரியர், பெரியார்** - *பெரியோர்.*

**பெரியவர்** - *மேன்மையுடையோர்.*

**பெரியவன்** - *தத்துவசாலி, மேம்பாடுடையோன், வளர்ந்தவன்.*

**பெரியாணங்கை** - *ஓர்பூடு.*

**பெரியாத்தாள், பெரியாயி** - *பெரியதாய்.*

**பெரியோர்** - *பெரியவர்கள்.*

**பெருகல்** - *பெருகுதல்.*

**பெருகியல்** - *இராகத்தகுதியினொன்று.*

**பெருகு** - *தயிர், பெருகென்னேவல்.*

**பெருகுதல்** - *பாய்தல், மிகுதல், விருத்தித்தல்.*

**பெருக்கமரம்** - *பப்பப்புளிமரம்.*

**பெருக்கம்** - *செல்வம், பெருகுதல், பெருக்கிக்கண்டபேறு, மிகுதி, விசாலம், விருத்தி.*

**பெருக்கம்பண்ணுதல்** - *போகுதல்.*

**பெருக்கல்** - *அதிகப்படுத்தல், எண் கூட்டித்தாக்கல், சீய்த்தல், நிறைத்தல், பருத்தல், மிகுவித்தல், விசாலித்தல்.*

**பெருக்கன்** - *பருக்கன்.*

**பெருக்காச்சவட்டு** - *கவலையீனம், வேண்டாவெறுப்பு.*

**பெருக்காளர்** - *போதியவர்கள்.*

**பெருக்கு** - *கணக்குவகை நான்கினொன்று, பாய்ச்சல், பெருக்கென்னேவல், விசாலம், வெள்ளம்.*

**பெருக்குக்கணக்கு** - *கணக்குவகை நான்கினொன்று.*

**பெருக்குதல்** - *பெருக்கல்.*

**பெருக்குவேளை** - *உச்சிப்பொழுது.*

**பெருங்கடல்** - *சமுத்திரம்.*

**பெருங்கடி** - *தொடுகடி.*

**பெருங்கணக்கு** - *பெருநிரவி, பெருந்தொகை.*

**பெருங்கதை** - *பிள்ளையார் நோன்பு முடிவில் வாசிக்குங் கதை.*

**பெருங்கலையன்** - *ஓர்நெல்.*

**பெருங்காஞ்சொறி** - *ஓர் காஞ்சொறி.*

**பெருங்காப்பியம்** - *ஓர்பிரபந்தம், அஃது தெய்வவணக்கமும், செயப்படுபொருளும், வாழ்த்தும், முன்னுளதாய் அறம், பொருள், இன்பம், வீடு எனுநாற்பொருட் பயத்ததாய் கவிநாயகனையுடைத் தாய்மலை, கடல், நாடு, நகர், பருவமுதலியவற்றின் வழங் கூறு தலும் மணமுடித்தல், முடி கவித் தல், பொழில்விளையாட்டு, நீர் விளையாட்டு, உண்டாட்டு, புலவி, கலவி என்றிவற்றைப் புகழ் தலும் மந்திரம், தூது, செலவு, போர், வென்றி என்பவற்றைக் கூறலுமாகிய விவைதொடரச் சருக்கம், இலம்பகம்,பரிச்சேதம் என்னும் பகுதியையுடைத்தாய் வருவது.*

**பெருங்காயம்** - *ஓர்மருந்து.*

**பெருங்காரை** - *ஓர்மரம், ஓர்மீன்.*

**பெருங்காற்று** - *உரத்தகாற்று.*

**பெருங்கிடை, பெருங்கிடைச்சி** - *ஓர் கிடைச்சி.*

**பெருங்கிரந்தி** - *ஓர்நோய்.*

**பெருங்கிராமம்** - *அஞ்ஞூறுகுடி கொண்டவூர்.*

**பெருங்கிழங்கு** - *ஈசுரவேர், ஓர்பூடு.*

**பெருங்கிழமை** - *முழுவுரிமை.*

**பெருங்குடல்** - *ஓர்குடல்.*

**பெருங்குமிழ்** - *ஓர்குமிழ், அஃது தசமூலத்தொன்று.*

**பெருங்குரல்** - *பெருஞ்சத்தம்.*

**பெருங்குருகு** - *சக்கரவாகப்புள்.*

**பெருங்குருந்து** - *ஓர்குருந்து.*

**பெருங்குரும்பை** - *ஓர்மருந்து.*

**பெருங்குளவி** - *ஓர்குளவி.*

**பெருங்குறடு** - *பெரியகுறடு.*

**பெருங்குறட்டை** - *ஓர்செடி.*

**பெருங்குறிஞ்சாய்** - *ஓர்குறிஞ்சா.*

**பெருங்கொடி** - *ஓர்துவசம்.*

**பெருங்கொண்டலாத்தி** - *புழுக்குத்திப் புள்.*

**பெருங்கொன்றை** - *ஓர்கொன்றை.*

**பெருங்கோடணை** - *முரசு.*

**பெருச்சாளி** - *ஒரெலி.*

**பெருஞ்சீரகம்** - *ஓர்சரக்கு.*

**பெருஞ்செய்யான்** - *ஓர்தேள்.*

**பெருஞ்செருப்படி** - *ஓர்பூடு.*

**பெருஞ்சொல்** - *பலரறிசொல்.*

**பெருத்தல்** - *அதிகப்படல், பருமை யாதல்.*

**பெருநகை** - *பெருஞ்சிரிப்பு, பெரு மகிழ்வு, இஃது சுபாபக் குணத்தி னொன்று.*

**பெருநண்டு** - *ஓர்நண்டு.*

**பெருநயப்புரைத்தல்** - *பெருவிருப் பைக்கூறல், இஃது அகப்பொருட் டுறையினொன்று.*

**பெருநறுவிலி** - *ஓர்மரம்.*

**பெருநாரை** - *ஓர்நாரை.*

**பெருநாள்** - *அச்சுவினிமுதலியநாள், இரேபதி, கொண்டாட்டமான நாள்.*

**பெருநிம்பம்** - *வேம்பு.*

**பெருநிரவி** - *குமுக்கு.*

**பெருநீர்** - *கடல்.*

**பெருநூல்** - *விரிவுநூல்.*

**பெருநெருஞ்சி** - *ஓர்நெருஞ்சி.*

**பெருநெருப்பு** - *தீச்செறிவு.*

**பெருநெல்** - *ஓர்நெல்.*

**பெருநையல்** - *வைசூரி.*

**பெருந்தகை** - *அரசன், பெருமை யுடையோன்.*

**பெருந்தக்காளி** - *ஓர்செடி.*

**பெருந்தலைக்கறையான்** - *ஓர்கறை யான்.*

**பெருந்தன்மை** - *அகந்தை, மானம், மேன்மை.*

**பெருந்தாரா** - *ஓர்தாரா.*

**பெருந்திணை** - *பொருந்தாக்காமம்.*

**பெருந்திணைமணம்** - *பெருந் திணைக்குரிய மணநான்கு, அவை பிரமம், பிரசாபத்தியம், ஆரிடந், தெய்வம்.*

**பெருந்தில்லை** - *ஓர்மரம்.*

**பெருந்தீன்** - *பேரூண்.*

**பெருந்துத்தி** - *ஓர்பூடு.*

**பெருந்துளசி** - *ஓர்துளசி.*

**பெருந்தேன்** - *பேரிலையான் கூட்டுந் தேன்.*

**பெருந்தொகை** - *மிகுதொகை.*

**பெருந்தொடை** - *ஆடுதொடை.*

**பெருப்பம்** - *பருப்பம்.*

**பெருப்பித்தல்** - *பருப்பித்தல்.*

**பெருமகன்** - *அரசன், சிறந்தோன்.*

**பெருமகிழ்ச்சிமாலை** - *ஓர் பிரபந்தம், அஃது தலைவியது சிறப்பைக் கூறுவது.*

**பெருமக்கள்** - *பெரியோர்.*

**பெருமங்கலம்** - *ஓர் பிரபந்தம்.*

**பெருமணிக்கோட்டுவான்** - *ஓர் நீர்ப்புள்.*

**பெருமரம்** - *ஓர் மரம்.*

**பெருமருந்து** - *ஓர் கொடி.*

**பெருமலை** - *மகாமேருகிரி.*

**பெருமல்லரி** - *பெருங்கள்ளி.*

**பெருமல்லிகை** - *ஓர் மல்லிகை, இஃது தசமூலத்தொன்று.*

**பெருமழை** - *மிகுமழை.*

**பெருமன்** - *பருத்தது.*

**பெருமா** - *யானை.*

**பெருமாட்டி** - *தலைவி.*

**பெருமாந்தம்** - *ஓர்நோய்.*

**பெருமாரி** - *பெருமழை.*

**பெருமாள்** - *திருமால், பெருமையிற் சிறந்தோன்.*

**பெருமான்** - *அரசன், குரு, சிவன், தலைவன், திருமால், பெருமை யிற் சிறந்தோன், மூத்தோன்.*

**பெருமிட்டை** - *பீநாறி.*

**பெருமிதம்** - *சளிப்பு, மிகுதி.*

**பெருமீன்** - *யானைமீன்.*

**பெருமுட்டி** - *கூடம்.*

**பெருமுத்தரையர்** - *செல்வர், சொந்தப் பொருட்காரர்.*

**பெருமூச்சு** - *நெடுமூச்சு.*

**பெருமை** - *ஆங்காரம், பொலிவு, மாட்சிமை, மிகுதி, வீம்பு.*

**பெருமைபண்ணுதல்** - *ஆங்காரங் காட்டுதல்.*

**பெருமைபாராட்டுதல்** - *வீம்புபேசுதல்.*

**பெரும்பசிரி** - *ஓர்கீரை.*

**பெரும்பஞ்சமூலம்** - *தழுதாழை, பாதிரி, பெருங்குமிழ், வாகை, வில்வம்.*

**பெரும்படி** - *பரும்படி.*

**பெரும்படை** - *ஓர்தேவகூட்டம்.*

**பெரும்பதி** - *தலைக்கிராமம், மருங்கி லூர்சூழ்பதி.*

**பெரும்பயறு** - *ஓர்வகைப்பயறு.*

**பெரும்பயன்** - *மிகுபேறு.*

**பெரும்பராக்கு** - *அசட்டைத்தனம்.*

**பெரும்பருந்து** - *கூகை.*

**பெரும்பறவை** - *எண்காற்புள்.*

**பெரும்பற்றப்புலியூர்** - *சிதம்பரம்.*

**பெரும்பனையன்** - *வைசூரியினோர் வகை.*

**பெரும்பாடு** - *தீட்டுதிரமிறைப்பு.*

**பெரும்பாந்தள், பெரும்பாம்பு** - *ஓர்பாம்பு.*

**பெரும்பாலும்** - *மிகுதியும்.*

**பெரும்பாவி** - *மிகுபாவி.*

**பெரும்பாழ்வெளி** - *சூனியவெளி, துவாதசாந்தம்.*

**பெரும்பாற்சோற்றி** - *ஓர் பூடு.*

**பெரும்பான்மை** - *மிகுபான்மை.*

**பெரும்பிராந்து** - *பெரும்பருந்து.*

**பெரும்பிரண்டை, பெரும்புரண்டை** - *ஓர் புரண்டை.*

**பெரும்புலால்** - *பெருமீன்.*

**பெரும்புலி** - *ஓர் புலி.*

**பெரும்புழுக்கல், பெரும்புழுக்கு** - *பேரவியல்.*

**பெரும்புள்** - *கூகை.*

**பெரும்புறா** - *ஓர் புறா.*

**பெரும்பூண்** - *பதக்கம்.*

**பெரும்பூழை** - *கதவிலிடும்வாயில்.*

**பெரும்பூளை** - *ஓர் பூடு.*

**பெரும்பேச்சு** - *பலரறிசொல்.*

**பெரும்பெயர்** - *பராசியம்.*

**பெரும்பொங்கல்** - *ஊர்ப்பொங்கல்.*

**பெரும்பொழுது** - *ஆறுபருவம், அவை, கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முது வேனில்.*

**பெரும்போகம்** - *பேரனுபவம்.*

**பெருவயிறு** - *ஓர்நோய், குடவயிறு.*

**பெருவலி** - *பெருநோ.*

**பெருவழக்கம்,பெருவழக்கு** - *பலராலும் வழங்கப்படுவது.*

**பெருவள்ளி** - *ஓர் கிழங்குக்கொடி.*

**பெருவாகை** - *ஓர் மரம்.*

**பெருவாஞ்சை** - *பேராசை.*

**பெருவாரி** - *கொள்ளைநோய்.*

**பெருவாரிக்காய்ச்சல்** - *கோதாரிக் காய்ச்சல்.*

**பெருவாழ்வு** - *மிகு செல்வம்.*

**பெருவிடை** - *நெடுவிடை.*

**பெருவியாதி** - *கிரந்திநோய், குஷ்டம், வைசூரி.*

**பெருவிரல்** - *அங்குட்டம்.*

**பெருவிரியன்** - *ஓர்பாம்பு.*

**பெருவெக்கைநோய்** - *உவாந்தி பிராந்தி.*

**பெருவெளி** - *ஏகவெளி.*

**பெருவெள்ளம்** - *மிகுவெள்ளம்.*

**பெருவெள்ளை** - *ஓர்நெல்.*

**பெலக்குதல்** - *பலத்தல்.*

**பெலசாலி** - *பெலனுள்ளோன்.*

**பெலட்சயம்** - *பெலவீனம்.*

**பெலத்தல்** - *பலப்படல், மிகுத்தல்.*

**பெலபிடி** - *பெலன், பேருதவி.*

**பெலப்படுதல்** - *உறுதிப்படல், திரப் படுதல்.*

**பெலப்படுத்துதல்** - *உறுதிப்படுத்துதல், திரப்படுத்துதல்.*

**பெலப்பித்தல்** - *பெலப்படுத்துதல்.*

**பெலப்பு** - *உதவி, பெலன்.*

**பெலப்பேறுதல்** - *பெலப்படுதல்.*

**பெலம்** - *பலம்.*

**பெலவந்தம்** - *பலவந்தம்.*

**பெலவறுதி** - *பலகீனம்.*

**பெலன்** - *உறுதி, வலிமை.*

**பெலன்செய்தல்** - *உறுதிப்படல், பலித்தல், வலிமைகொள்ளுதல்.*

**பெலி** - *காணிக்கை.*

**பெலிபீடம்** - *பலிபீடம்.*

**பெல்லி, பெல்லித்தடி** - *பட்டைப்பிடி.*

**பெறல்** - *பெறுதல்.*

**பெறாவிலை** - *அதிகவிலை, குறைந்த விலை.*

**பெறுதல்** - *அடைதல், கிடைத்தல், பிரசவித்தல்.*

**பெறுதி** - *பெறுதல், பெறும்விலை.*

**பெறுத்தல்** - *பெறுவித்தல்.*

**பெறுமதி** - *பெறும்விலை.*

**பெறுமானம்** - *பெறத்தக்கவிலை.*

**பெறுவகொள்வோர், பெறுவது கொள் வோர்** - *கூத்தியர்.*

**பெற்றம்** - *இடபவிராசி, எருது, காற்று, பசுசாதிப்பொது.*

**பெற்றார்** - *ஈன்றார்.*

**பெற்றி, பெற்றிமை** - *தன்மை.*

**பெற்றிடல்** - *பெறுதல்.*

**பென்னம்பெரிது** - *மிகப்பெரிது.*

## பே

**பே** - *ஓரெழுத்து, நுரை.*

**பேகம்** - *தவளை, முகில்.*

**பேகன்** - *கடையெழுவள்ளலிலொரு வன்.*

**பேகி** - *பெண்டவளை.*

**பேசகம்** - *ஆந்தை, முகில், யானை வாலடி, யானைவானுனி, வாயில்.*

**பேசகம்** - *கூகை.*

**பேசலம்** - *ஊமை, தகுதி.*

**பேசல்** - *சொல்லல்.*

**பேசாதபேச்சு** - *அசப்பியம்.*

**பேசி** - *இடியேறு, உடை, ஓர் யாறு, தசை, நரம்பு, பூமொட்டு, முட்டை.*

**பேசிலம்** - *யானை.*

**பேசுதல்** - *பறைதல்.*

**பேசுவாயன்** - *பரிந்துபேசுபவன், வாயாடி.*

**பேச்சல்** - *பறைச்சல்.*

**பேச்சழிதல்** - *பேச்சுத்தப்புதல்.*

**பேச்சறுதல்** - *மௌனம்.*

**பேச்சறுதி** - *தீர்மானம்.*

**பேச்சற்றவன்** - *பேசமாட்டாதவன், பொய்யன், மௌனி.*

**பேச்சாட்டுத்துணை** - *பேச்சுத் துணை.*

**பேச்சாளி** - *நிதானி.*

**பேச்சு** - *சம்பாஷனை, சொல், பாஷை, பேசுதல்.*

**பேச்சுக்குற்றம்** - *சொற்குற்றம்.*

**பேச்சுக்கொடுத்தல்** - *பேச்சு வளர்த்தல்.*

**பேச்சுநடத்தல்** - *சம்பாஷித்தல்.*

**பேச்சுவளர்த்தல்** - *நீடிக்கப்பேசல்.*

**பேச்சுவாயன்** - *வாயாடி.*

**பேச்சுவார்த்தை** - *வாக்குவாதம்.*

**பேச்சுறுதி** - *பேச்சுநிதானம்.*

**பேடகம்** - *கூடை, திரள்.*

**பேடணம்** - *திரிகைக்கல், பொடி செய்தல்.*

**பேடம்** - *தெப்பம், வெள்ளாடு.*

**பேடர்** - *அலியர்.*

**பேடி** - *அலி.*

**பேடிகை** - *கூடை.*

**பேடிசம்** - *மயக்கு.*

**பேடிசவித்தை** - *மயக்குத்தொழில்.*

**பேடியர்** - *அலியர்.*

**பேடு** - *அலி, ஊர், காமனாடல், பறவைப்பெண், பெண்.*

**பேடுமூஞ்சி** - *பெண்முகம்.*

**பேடை** - *கூடை, பறவைப்பெண்.*

**பேட்டி** - *பெரியவரதுவரவு காத்திருத் தல்.*

**பேட்டை** - *நகரத்தருகுஞ் சந்தை கூட லுமாகியவூர்.*

**பேணகம்** - *ஓர்பணிகாரம்.*

**பேணம், பேணரவு** - *பேணுதல்.*

**பேணலர்** - *பேணார்.*

**பேணல்** - *ஆசைப்பெருக்கம், கருத்து, காத்தல், குறித்தல், விரும்பல்.*

**பேணார்** - *பகைவர்.*

**பேணுதல்** - *பேணல்.*

**பேண்** - *துலாத்தாங்கி, பேணென் னேவல்.*

**பேதகமணி** - *வெண்காரம்.*

**பேதகம்** - *பேதம்.*

**பேதகன்** - *தப்பிதகாரன்.*

**பேதசைவம்** - *ஓர் சைவம்.*

**பேததாரணை** - *நவதாரணையி னொன்று, அஃது இயமாதியோக சாதனையாற் பிராணன், அபா னன், உதானன், வியானன் எனு நான்கு வாயுக்களையுஞ்சமான வாயுவுடன் சேர்த்து அதோ முக மாயிருக்குமிதைய கமலத்தைப் பிராணவோச் சாரணத்தாலுன் முகமாக்குவது.*

**பேதம்** - *ஒவ்வாமை, சிவாகம்மிருபத் தெட்டினொன்று, பகை, பிரி வினை, வேற்றுமை.*

**பேதலித்தல்** - *மறுப்பு, இஃது உபாய நான்கினொன்று, வேற்றுமைப் படல்.*

**பேதலிப்பு, பேதலிமை** - *வேற்றுமை.*

**பேதனம்** - *பேதிப்பு, இஃது அட்ட கருமத்தொன்று.*

**பேதாதிபேதம், பேதாபேதம்** - *பல பேதம்.*

**பேதி** - *இரதம், கழிச்சல், பேத மானவன், பேதிப்பது, பேதியென் னேவல், வெளி.*

**பேதிகாரி** - *ஆற்றுத்தும்மட்டி, பேதி மருந்து, பேய்க்குமட்டி.*

**பேதித்தல்** - பகைத்தல், விரேசனித்தல், வேற்றுமைப்படுதல், வேற்றுமைப் படுத்தல்.

**பேதிபண்ணுதல்** - விரேசனஞ்செய்தல்.

**பேதிப்பு** - பேதம்.

**பேது** - மதிமயக்கம்.

**பேதுறல்** - பேதுறுதல், மதிமயங்குதல்.

**பேதுறவு** - மதிமயக்கு.

**பேதுறுதல்** - புத்திகலங்குதல்.

**பேதை** - அறிவிலான், ஏழுவயதிற் பெண், சுபாவி, தரித்திரன், பெண், பேடி.

**பேதைமை** - அறிவின்மை, எழைமை, சுபாபம்.

**பேதையர்** - அறிவீனர், ஏழுவயதிற் பெண்கள், கீழ்மக்கள், தரித்திரர், பாலைநிலமகளிர்.

**பேத்தி** - பேர்த்தி.

**பேத்துவம்** - அமுதல், நெய்.

**பேத்தை** - ஓர் மீன், கெளிசு, பற் பேத்தை.

**பேத்தைபற்றுதல்** - கெளிசுபற்றுதல்.

**பேம்** - பயம்.

**பேயகற்றுதல்** - பேயோட்டுதல்.

**பேயத்தி** - ஓர் மரம்.

**பேயம்** - கஞ்சி, நீர், பால்.

**பேயவரை** - ஓரவரை.

**பேயம்** - மதிகேடன்.

**பேயன்வாழை** - ஓர் வாழை.

**பேயாடுதல்** - பேயுருக்கொள்ளுதல்.

**பேயாட்டி** - பேய்வித்தைவான்.

**பேயாட்டுதல்** - பசாசையுருக் கொள்ளு வித்தல்.

**பேயாமணக்கு** - ஓராமணக்கு.

**பேயுள்ளி** - ஒருள்ளி.

**பேயுறைதல்** - பேய்குடிகொள்ளுதல்.

**பேயூடம், பேயூஷம்** - அமுதம், ஈன்ற வேழா நாட்கறக்கும்பால், நவநீதம்.

**பேயூமத்தை** - மருளூமத்தை.

**பேயேற்றுதல்** - பேயையேவிவிடுதல்.

**பேயோடாடி** - சிவன்.

**பேயோட்டி** - ஓர் மரம், பேய்துரத்து வோன்.

**பேயோட்டுதல்** - பேயகற்றல்.

**பேயோணான்** - ஓர் வகையோணான்.

**பேய்** - பிசாசம், மதிகெட்டது.

**பேய்க்கண்** - வெருண்டபார்வை.

**பேய்க்கரும்பு** - ஓர் கரும்பு.

**பேய்க்காடு** - பேயுறையுங்காடு.

**பேய்க்காளான்** - ஓர் காளான்.

**பேய்க்குணம்** - பேய்த்தனம்.

**பேய்க்குப்பார்த்தல்** - பேயைத்துரத்து தல்.

**பேய்க்குமட்டி** - ஓர் கொடி.

**பேய்க்குறை** - பேய்த்தொடர்ச்சி.

**பேய்க்குன்றி** - ஓர் குன்றி.

**பேய்க்கூண்டு** - மாயவித்தை படிக்கு மோரிடம்.

**பேய்க்கொம்மட்டி** - பேய்க்குமட்டி.

**பேய்க்கோலம்** - கோலக்கேடு.

**பேய்ச்சத்தம்** - அவசத்தம்.

**பேய்ச்சாளை** - ஓர் மீன்.

**பேய்ச்சி** - பேய்க்குணமுள்ளாள்.

**பேய்ச்சுரை** - ஓர் சுரை.

**பேய்த்தக்காளி** - ஓர் செடி.

**பேய்த்தண்ணீர்** - மதுநீர்.

**பேய்த்தனம்** - அறிவின்மை.

**பேய்த்திமிட்டி** - ஓர் பூடு.

**பேய்த்தும்பை** - ஓர் தும்பை.

**பேய்த்தேர்** - கானல்.

**பேய்நரி** - விசர்நரி.

**பேய்நாய்** - விசர்நாய்.

**பேய்பிடித்தல்** - பசாசுபிடித்தல்.

**பேய்ப்பசலை, பேய்ப்பயளை** - ஓர் கீரை.

**பேய்ப்பலவன்** - படுவன்கீரை.

**பேய்ப்பள்ளி** - *பேய்க்கூண்டு.*

**பேய்ப்பார்வை** - *மருட்பார்வை.*

**பேய்ப்பாற்சோற்றி** - *ஓர்பாற்சோற்றி.*

**பேய்ப்பிடி** - *வீண்பிடி.*

**பேய்ப்பிரம்பு** - *ஓர் பிரம்பு.*

**பேய்ப்பீர்க்கு** - *ஓர் பீர்க்கு.*

**பேய்ப்புடல், பேய்ப்புடோல்** - *ஓர் புடோல்.*

**பேய்ப்புத்தி** - *மதியீனம்.*

**பேய்ப்புல்** - *கணைப்புல்.*

**பேய்ப்போக்கு** - *ஒழுங்கின்மையான நடை.*

**பேய்மகன்** - *கெட்டவன்.*

**பேய்மருட்டி** - *ஓர் செடி.*

**பேய்மனம்** - *அங்கலாய்த்தமனம்.*

**பேய்முகம்** - *அவலட்சணமுகம்.*

**பேய்முசுட்டை** - *ஓர் கொடி.*

**பேய்முல்லை** - *ஓர் கொடி.*

**பேய்முன்னை** - *ஓர் மரம்.*

**பேய்வித்தை** - *சூனியவித்தை.*

**பேய்வெருட்டி** - *ஓர் பூடு.*

**பேரகத்தி** - *ஓரகத்தி.*

**பேரடிபடுதல்** - *பெயர்பிரபலியமாகுதல்.*

**பேரணி** - *நடுச்சேனை.*

**பேரணிகலம்** - *பெரும்பதக்கம்.*

**பேரண்டம்** - *உலகம், நரி.*

**பேரப்பிள்ளை** - *பாட்டப்பிள்ளை.*

**பேரமட்டி, பேரமுட்டி** - *ஓர் செடி.*

**பேரம்பலம்** - *சிதம்பரத்துச்சபைகளி னொன்று.*

**பேரரத்தை** - *பஞ்சமூலத்தொன்று.*

**பேரருளுடைமை** - *கடவுளெண் குணத்தொன்று.*

**பேரவியல்** - *பெரும்புழுக்கு.*

**பேரறிவு** - *மூதறிவு.*

**பேரன்** - *பெயரன்.*

**பேரன்புடைமை** - *மிகுந்தவன்பாயி ருத்தல், இஃது அறத்துறுப்பி னொன்று.*

**பேராசை** - *மிகாசை.*

**பேராட்டி** - *பெருமையுடையவள்.*

**பேராண்டு** - *அறுபது வருடங் கொண்டகாலம்.*

**பேராண்மை** - *அரியசெயல்.*

**பேராந்தை** - *நிலாமுக்கிப்புள்.*

**பேராமட்டி** - *பேரமட்டி.*

**பேராமணக்கு** - *ஓராமணக்கு.*

**பேராமுட்டி** - *ஓர் கொடி.*

**பேராலவட்டம்** - *ஓராலவட்டம்.*

**பேராளன்** - *கீர்த்தியுடையோன், மிருகசீரிடம்.*

**பேராளி** - *பெருங்கடல், பேருள்ளவன்.*

**பேராளிமாமுனி** - *வள்ளுவன்றந்தை.*

**பேரானந்தம்** - *மோட்சசந்தோஷம்.*

**பேரி, பேரிகை** - *பறைப்பொது, முரசு.*

**பேரிடி** - *முழுக்கம்.*

**பேரிடுதல்** - *நாமஞ்சூட்டுதல்.*

**பேரியாழ்** - *நால்வகையாழினொன்று.*

**பேரிலக்கம்** - *முழுவிலக்கம்.*

**பேரிளம்பெண்** - *நாற்பது வயதுப் பெண்.*

**பேரின்பம்** - *ஆனந்தம், மோட்ச சந்தோஷம்.*

**பேரீஞ்சு, பேரீந்து** - *ஓர்மரம்.*

**பேரு** - *சமுத்திரம், சூரியன், தீ, பொன் மலை.*

**பேருண்டி** - *பேருணவு, இஃது தாமத குணத்தொன்று.*

**பேருமரி** - *ஓர்பூடு.*

**பேருறுதி** - *திடவத்தாட்சி.*

**பேரூர்** - *பெரும்பதி.*

**பேரூழி** - *உருத்திரசங்காரம்.*

**பேரெடுத்தல்** - *கீர்த்திபெறுதல்.*

**பேரெடுபடுதல்** - *பிரபலமாதல்.*

**பேரெண்** - *பேரிலக்கம், அளவடி யீரடியாக இரண்டு வருவது.*

**பேரெல்லைவெண்பா** - *எட்டடி வெண்பா.*

**பேரெழும்புதல்** - *பிரபலமாதல்.*

**பேரேடு** - *கணக்கேட்டிலோர்வகை.*

**பேரொலி** - *மிகுவொலி.*

**பேரொளி** - *மிகுபிரவை.*

**பேரோசை** - *பேரொலி.*

**பேர்** - *பெயர்.*

**பேர்க்குறி** - *பெயர்க்குறி.*

**பேர்ச்சி** - *பெயர்ச்சி.*

**பேர்தரித்தல்** - *நாமஞ்சூட்டுதல்.*

**பேர்தல்** - *பெயர்தல்.*

**பேர்த்தல்** - *பெயர்த்தல்.*

**பேர்த்தி** - *பெயர்த்தி.*

**பேலகம்** - *தெப்பம்.*

**பேலம்** - *சிறுபங்கு, பீசம், போதல்.*

**பேலவம்** - *மிருது.*

**பேலுதல்** - *மலங்கழித்தல்.*

**பேழை** - *பெட்டகம், பெட்டி.*

**பேழ்** - *பெருமை.*

**பேழ்வாய்** - *பெருவாய்.*

**பேறு** - *இலாபம், கொடை, செல்வம், நல்லூழ், பெறுதல், வரம், வாய்ப்பு.*

**பேறுகாலம், பேற்றுக்காலம்** - *பெறுங் காலம்.*

**பேனம்** - *நுரை.*

**பேனவாகி** - *இடி.*

**பேனன்** - *சந்திரன், சூரியன்.*

**பேனாக்கிரம்** - *நீர்க்குமிழி.*

**பேனாசனி** - *இந்திரன்.*

**பேன்** - *தலையிற்பற்றும்பூச்சி.*

## பை

**பை** - *அழகு, ஓரெழுத்து, குடர், நிறம், பசுமை, பச்சைநிறம், பாம்பின் படம், பையென்னேவல், பொக் கணம், மந்தக்குணம், மெத்தெனவு.*

**பைகோவு, பைகோவை** - *ஓர் தேயம்.*

**பைகோவைச்சிவப்பு** - *ஓர் வகை மாணிக்கம்.*

**பைக்கூறை** - *பை.*

**பைங்கண்** - *பசியகண்.*

**பைங்காய்** - *பசுங்காய்.*

**பைங்கிளி** - *பச்சைக்கிளி.*

**பைங்கூழ்** - *நோய், பயிர்.*

**பைசந்தி** - *வாக்கு நான்கினொன்று.*

**பைசாசநிலை** - *ஒருதாளினின்று மற்றைத்தாண்முடக்கிநிற்றல், இஃது யுத்தநிலைநான்கினொன்று.*

**பைசாசமணம்** - *துயின்றாளைச் சென்றுகூடுங்கூட்டம்.*

**பைசாசம்** - *இரும்பு, பிசாசம்.*

**பைசாசி** - *இராக்கதத்தி.*

**பைசார்** - *ஓர் வகைத்தொடுதோல்.*

**பைசுனம்** - *உலோபத்தனம்.*

**பைஞ்ஞீலம்** - *பசியநீலம், மக்கட்பரப்பு.*

**பைஞ்ஞீவி** - *ஓர்பட்டினம்.*

**பைண்டின்னியம்** - *யாசகம்பண்ணி வயிறுவளர்த்தல்.*

**பைதல்** - *துன்பம், பையல்.*

**பைதிரம்** - *நாடு.*

**பைத்தம், பைத்திகம்** - *பித்தம்.*

**பைத்தல்** - *கோபம், சினக்குறிப்பு, பசு மையாதல், பாம்புபடம் விரித்தல்.*

**பைத்தியம்** - *பயித்தியம்.*

**பைத்திராகோராத்திரம்** - *பிதிர்களின தோர்நாள், அஃது மனிதருக் கோர் மாதம்.*

**பைத்து** - *பசுமை.*

**பைந்தினை** - *ஓர் தினை.*

**பைந்தொடி** - *பெண், வளையல்.*

**பைபீலம்** - *எறும்பு.*

**பைபீலவாதம், பைபீலிகாவாதம்** - *எறும்புகளின் பேச்சறிதல். அஃது கலைஞானமறுபத்தினான்கி னொன்று.*

**பைபீலிகை** - *எறும்பு.*

**பைபைய** - *மெல்லமெல்ல.*

**பைமை** - *தவப்பெண், பசுமை.*

**பைம்பல்** - *பம்பல்.*

**பைம்பூண்** - *பொன்னாபரணம்.*

**பைம்பொன்** - *பசும்பொன், மேருகிரி.*

**பைய** - *மெல்ல.*

**பையல்** - *பயல்.*

**பையன்** - *சிறுவன்.*

**பையுள்** - *அற்பம், சிறுமை, துன்பம், நோய்.*

**பையெனல்** - *மந்தக்குறிப்பு.*

**பைரவம்** - *அச்சம், உட்சமயமாறி னொன்று.*

**பைரவன்** - *சிவன், வயிரவன்.*

**பைரவி** - *ஓரிராகம், காளி.*

**பைலவான், பைலன்** - *ஓரிருடி.*

## பொ

**பொகுட்டு** - *சேற்றிலெழுங்குமிளி, தாமரைக்கொட்டை, மலை.*

**பொகுத்தல்** - *பொத்தல் செய்தல்.*

**பொக்கசம்** - *திரவியசாலை, திரவியம்.*

**பொக்கசவைப்பு** - *புதைத்ததிரவியம்.*

**பொக்கணம்** - *ஓர் வகைப்பை, சோளி.*

**பொக்கணி** - *ஓர் பானபாத்திரம், குழியுரல்.*

**பொக்கணை** - *கல்வளை, குழியுரல், மரப்பொந்து.*

**பொக்கம்** - *பொய், பொலிவு, மிகுதி.*

**பொக்கல்வாய்** - *பொக்குவாய்.*

**பொக்கிஷகாரன்** - *திரவியவான், பொக்கிஷவிசாரணைகாரன்.*

**பொக்கிஷம்** - *பொக்கசம்.*

**பொக்கிலவணம்** - *திலாலவணம்.*

**பொக்கு** - *குற்றம், பொள்ளல்.*

**பொக்குப்பொக்கெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**பொக்குவாய்** - *பல்லற்றவாய்.*

**பொக்குளிப்பான்** - *கொப்புளிப்பான்.*

**பொக்கெனல்** - *விரைவின்குறிப்பு.*

**பொக்கை** - *சிறுதுளை.*

**பொக்கைவாய்** - *பொக்குவாய்.*

**பொக்கைவாய்ச்சி** - *பொக்குவாய்ச்சி.*

**பொங்கடி** - *யானை.*

**பொங்கம்** - *நெற்றி, பரிமளிப்பு, பொலிவு.*

**பொங்கர்** - *சோலை, மரக்கொப்பு, மலை.*

**பொங்கலாண்டி** - *பொங்கற்காரன்.*

**பொங்கல்** - *உயர்ச்சி, கிளர்தல், சமைத்தல், பொலிதல், மிகுதி.*

**பொங்கழி** - *தூற்றாநெல்.*

**பொங்காரம்** - *பொங்கல்.*

**பொங்குசனி** - *இரண்டாமுறை ஏழரையாய்வருஞ் சனி.*

**பொங்குதல்** - *கொதித்துக்கிளர்தல், கோபித்தல், சாதஞ்சமைத்தல், நொதித்தல், பொலிதல்.*

**பொசிதல்** - *இரகசியம்வெளித்தல், நீரரும்பல், நீர்பரிதல்.*

**பொசித்தல்** - *புசித்தல்.*

**பொசிவு** - *அருகிச்செல்லல்.*

**பொசுக்குதல்** - *சுடுதல்.*

**பொசுங்கல்** - *கருகினது, கருகுதல்.*

**பொசுங்குதல்** - *வெம்மையாற்றீய்தல்.*

**பொசுபொசுத்தல்** - *இரகசியம்பேசல், கொஞ்சம்கொஞ்சமாய் வெளிப் படுதல்.*

**பொசுபொசெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**பொச்சடித்தல்** - *வெறுநாக்கடித்தல்.*

**பொச்சம்** - *உணவு, குற்றம், விருப்பம்.*

**பொச்சாத்தல், பொச்சாப்பு** - *பொல்லாங்கு, மறதி.*

**பொச்சாலி நெல்** - *ஓர் நெல்.*

**பொச்சாவாமை** - *மறவாமை.*

**பொச்சு** - *பொய்ச்சு.*

**பொச்சை** - *கரிக்காடு, காடு, சிறுமலை, புழுக்கூடு, மலை.*

**பொஞ்சுதல்** - *ஒவ்வுதல்.*

**பொடி** - *சிறிசு, பராகம், புழுதி, பொடியென்னேவல்.*

**பொடிச்சி** - *சிறுபெண்.*

**பொடிச்சிலை** - *மஞ்சட்கல்.*

**பொடிதல்** - *கெடுதல், திட்டுதல், தூளாதல்.*

**பொடித்தல்** - *கெடுத்தல், தூளாக்கல், மயிர்சிலிர்த்தல், முளைத்தல்.*

**பொடிபண்ணல்** - *துண்டித்தல், மாவாக்கல்.*

**பொடிபொடிதல்** - *மிகத்தூளாதல்.*

**பொடிப்பு** - *புளகம்.*

**பொடியன்** - *சிறுவன்.*

**பொடியாதல்** - *துகளாதல்.*

**பொடிவிளக்கணம்** - *பொன்முதலியவற்றைப் பொருத்திச்சுடுதல்.*

**பொடிவு** - *திட்டு, பொடிதல்.*

**பொடிவெட்டி** - *பொன் வெள்ளி முதலிய வெட்டுங் கத்திரிகை.*

**பொடுகன்** - *சிற்றாள்.*

**பொடுகு** - *ஓர்பூடு, சிறிசு, சொடுகு.*

**பொடுதலை** - *ஓர்பூண்டு.*

**பொடுபொடுத்தல், பொடுபொடுப்பு பொடுபொடெனல்** - *அபூரணம், ஒலிக்குறிப்பு, காய்தல், சீக்கிரக் குறிப்பு.*

**பொட்டணம், பொட்டணி, பொட்டளி, பொட்டிலம்** - *பொக்கணம்.*

**பொட்டிலுப்பு** - *வெடியுப்பு.*

**பொட்டு** - *ஓர் பூச்சி, சங்கை, தாலிப் பொட்டு, தானியப்பொட்டு, நுழை, நெற்றித்திலகம்.*

**பொட்டுக்கட்டுதல்** - *தாலிகட்டுதல்.*

**பொட்டுக்குலைதல்** - *சங்கைகெடுதல்.*

**பொட்டுக்குற்றுதல்** - *திலகமெழுதல்.*

**பொட்டுக்கேடு** - *சங்கைகேடு.*

**பொட்டுத்தாலி** - *பொட்டாகாரத்தாலி.*

**பொட்டுப்பூச்சி** - *ஓர் சிலந்திப்பூச்சி.*

**பொட்டெனல்** - *சீக்கிரக்குறிப்பு.*

**பொதி** - *அம்பலம், ஓலைக்குடை, கரிகாடு, பொதியப்பட்டது, பொதியென்னேவல்.*

**பொதிகாரன்** - *பொதிமாடுசெலுத்துவோன்.*

**பொதிகை** - *பொதியம்.*

**பொதிசோறு** - *கட்டுச்சோறு.*

**பொதிதல்** - *திணித்தல்.*

**பொதிப்போதா** - *பெருநாரை.*

**பொதியம்** - *தென்மலை.*

**பொதியவெற்பன்** - *பாண்டியன்.*

**பொதியன்** - *அகத்தியன்.*

**பொதியில்** - *அம்பலம், பொதியமலை.*

**பொதியெருது** - *பொதியெடுக்கு மெருது.*

**பொதிர்** - *பொதிரென்னேவல், மிகுதல்.*

**பொதிர்தல்** - *மிகுதல்.*

**பொதிர்ப்பு** - *அச்சம், நடுக்கம்.*

**பொதிர்வு** - *மிகுதல்.*

**பொதிவு** - *பொதிதல்.*

**பொதின்பொதினெனல், பொதீர் பொதீரெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**பொது** - *சாதாரணம் பலர் முன்னிலை.*

**பொதுக்கட்டுதல்** - *நடுக்கட்டுதல்.*

**பொதுக்கு** - *ஒதுக்கு, பொதுக்கென்னேவல், மறைப்பு.*

**பொதுக்குதல்** - *மறைத்தல்.*

**பொதுச்சீர்** - *நான்கசையாய் வருஞ்சீர்.*

**பொதுச்சூத்திரம்** - *தொகைச் சூத்திரம்.*

**பொதுச்சொம்** - *பொதுப்பொருள்.*

**பொதுச்சொல்** - *திணை, பால், இடம், காலங்களைக்குறித்துப் பொதுவாயிருக்குஞ்சொல்.*

**பொதுத்தல்** - *துளைத்தல்.*

**பொதுத்தன்மை** - *பொதுவியல்பு.*

**பொதுத்தன்மைத் தொகை** - *பொதுத் தன்மை தொக்குநிற்பது, (உம்) காந்தட் போதினை நிகர்க்குங்கை.*

**பொதுத்தன்மையுருபுத் தொகை** - *பொதுத் தன்மையுமுருபுந் தொக்கு நிற்பது, (உம்) கயற்கண்.*

**பொதுத்தன்மையுருபுபமானத் தொகை** - *பொதுத்தன்மையுமுருபுமுப மான முந்தொக்கது, (உம்) குயிற்கிழவி.*

**பொதுத்தன்மையுவமானத் தொகை** - *பொதுத் தன்மையுமுபமானமுந் தொக்குநிற்பது, (உம்) நாசி போல்வது மற்றாகும்.*

**பொதுத்திணை** - *பலதிணைக்கும் பொதுச்சொல்.*

**பொதுத்திரீ, பொதுஸ்திரீ** - *வேசி.*

**பொதுநடுவர்** - *மத்தியட்சர்.*

**பொதுநலம்** - *பலர்நன்மை.*

**பொதுநிறம்** - *பலநிறக்கலப்பு.*

**பொதுநீங்குவமை** - *உவமையைக் கூறி மறுத்துப் பொருடன்னை யே யுவமையாய்க் கூறுவது, (உம்) திங்களில் வதனஞ் சிறப்புடைத்த தனாலது வேயதற்கு நிகர், இயை பின்மையணி.*

**பொதுபொதுத்தல், பொதுபொதெனல்** - *ஒலிக்குறிப்பு மெதுமெதுத்தல்.*

**பொதுப்பெண்** - *பொதுமகள்.*

**பொதுப்பெயர்** - *திணை, பால், இடங் களைக்குறித்தும் பொதுவாய் வரும் பெயர்.*

**பொதுமகள்** - *வேசி.*

**பொதுமத்தியம்** - *பொது.*

**பொதுமனிதன்** - *நடுவன்.*

**பொதுமுதல்** - *பங்கானமுதல்.*

**பொதுமை** - *பொதுத்தன்மை.*

**பொதுமொழி** - *பொதுப்பெயர்.*

**பொதும்பர்** - *மரச்செறிவு, மரப்பொந்து.*

**பொதும்பு** - *பொந்து.*

**பொதுவகத்திணை** - *அகத்திணைப் பொது, தனக்குறுப்பெனப் பல வற்றை யடக்கிக் கொள்ளல்.*

**பொதுவசனம்** - *பலவற்றை நோக்குஞ் சொல்.*

**பொதுவர்** - *இடையர்.*

**பொதுவனுமானம்** - *ஓரளவை, அஃது சாதனசாத்தியங்களினொற்று மையுணராது பொதுவாயனு மானித்தல்.*

**பொதுவடி** - *இயற்சீருரிச்சீர் பொதுச் சீரென்னும் மூன்றானும் வருமடி.*

**பொதுவி** - *முல்லைநிலப் பெண்.*

**பொதுவிதி** - *பொதுவானநிருணயம்.*

**பொதுவியர்** - *இடைச்சியர்.*

**பொதுவில்** - *அம்பலம்.*

**பொதுவெழுத்து** - *தமிழிற்கு மாரியத் திற்கும் பொதுவாய் வழங்கு மெழுத்து.*

**பொதுவைத்தல்** - *நடுக்கட்டுதல்.*

**பொதுளல், பொதுளுதல்** - *செழித்தல், நெருங்குதல்.*

**பொத்தகம்** - *புத்தகம்.*

**பொத்தலூசி** - *பொள்ளல்செய்யு மோர்கருவி.*

**பொத்தல்** - *துவாரம், துளைத்தல், புரைதல், மூடுதல்.*

**பொத்தாறு, பொத்தாறுகட்டை** - *ஏற்கால்*

**பொத்தி** - *வாழை முதலியவற்றின் காய்ப்பொத்தி, பிருகுக்கிழங்குத் தோற்பொத்தி.*

**பொத்திக்கரப்பன்** - *தண்டுக்கிரந்தி.*

**பொத்திக்காளான்** - *ஓர் காளான்.*

**பொத்திதள்ளுதல்** - *வாழை முதலிய பொத்திபோடுதல்.*

**பொத்து** - *தவறு, புரைவு, பொத்தென் னேவல், பொந்து, பொய், மூடுதல்.*

**பொத்துதல்** - *புரைதல், மூடுதல்.*

**பொத்துப்பாய்** - *பருக்கன்பாய்.*

**பொத்பொத்தெனல்** - *ஒலிக்குறிப்பு.*

**பொத்துமான்** - *ஓர் வகைமான்.*

**பொத்தை** - *பருத்தது.*

**பொத்தைச்சி** - *கும்மலி.*

**பொத்தையன்** - *நீர்ப்பிடியான சரீர முள்ளவன்.*

**பொந்தி** - *சரீரம், மொத்தி.*

**பொந்து** - *மரப்பொந்து, வங்கு.*

**பொந்தையக்கோல்** - *ஓர் வகைப் பற்றுக்கோல்.*

**பொம்மலாட்டம்** - *பாவைக்கூத்து.*

**பொம்மலி** - *பொந்தைச்சி.*

**பொம்மல்** - *சோறு, பொம்மை, பொருமல், பொலிவு, மிகுதி.*

**பொம்மெனல்** - *அனுகரணவோசை.*

**பொம்மை** - *புதுமை.*

**பொய்** - *அசத்தியம், இஃது தாமத குணத்தொன்று, பஞ்சபாதகத்து மொன்று, பொய்யென்னேவல், மரப்பொந்து.*

**பொய்கை** - *குளம், கோட்டான்.*

**பொய்கையார்** - *ஓர் புலவன்.*

**பொய்க்கடி** - *பருங்கடி.*

**பொய்க்கண்** - *கண்மண்டை.*

**பொய்க்கண்ணி** - *பிஞ்சுபிடியாத கண்ணி.*

**பொய்க்கண்ணுறக்கம்** - *குறைக்கணித் திரை.*

**பொய்க்கதை** - *கட்டுக்கதை.*

**பொய்க்கால்** - *போலிக்கால்.*

**பொய்க்கிளை** - *பிஞ்சுபிடியாதமுளை.*

**பொய்க்குதல்** - *பொய்சொல்லுதல், பொய்யாய்ப்போதல்.*

**பொய்க்குரல்** - *போலிச்சத்தம்.*

**பொய்க்குழி** - *நாற்றுநட்டகுழி, பொறிக்கிடங்கு.*

**பொய்க்கூடு** - *சரீரம், பொய்ச்சரீரம்.*

**பொய்க்கை** - *பொய்த்தல், போலிக்கை.*

**பொய்க்கொட்டை** - *பொய்ப்பிஞ்சு.*

**பொய்க்கோலம்** - *கரவடவேடம், போலிவேடம்.*

**பொய்சொல்லல்** - *தப்புப்பேசல், இஃது வாக்கின்றீக்குணநான்கி னொன்று.*

**பொய்ச்சத்தம்** - *பொய்க்குரல்.*

**பொய்ச்சத்தியம்** - *பொய்யாணை*

**பொய்ச்சாட்சி** - *கள்ளச்சாட்சி.*

**பொய்ச்சாத்தல்** - *மறத்தல்.*

**பொய்ச்சு** - *கொட்டைசுளையற்றது.*

**பொய்தல்** - *மகளிர்கூட்டம், மகளிர் விளையாட்டு.*

**பொய்த்தலை** - *போலித்தலை.*

**பொய்த்தல்** - *பொய்சொல்லல், பொய்யாதல்.*

**பொய்ந்நீர்** - *கானல்.*

**பொய்படுதல், பொய்ப்படுதல்** - *பொய் யாதல்.*

**பொய்ப்பத்திரம்** - *கள்ளச்சீட்டு.*

**பொய்ப்பிஞ்சு** - *நிலையாப்பிஞ்சு.*

**பொய்ப்பு** - *பொய்த்தல்.*

**பொய்ப்பூ** - *பிஞ்சுபிடியாதபூ.*

**பொய்முளை** - *பொய்க்கிளை.*

**பொய்மூக்கு** - *உண்மூக்கு.*

**பொய்மை** - *பொய், பொய்வேஷம்.*

**பொய்யடி** - *பகடம், வெருட்டு.*

**பொய்யன்** - *பொய்சொல்வோன்.*

**பொய்யாணை** - *பொய்ச்சத்தியம்.*

**பொய்யாமை** - *தவறாமை, பொய்மொழி கூறாமை.*

**பொய்யாமொழி** - *சத்தியம், தவறாமை.*

**பொய்யுறக்கம்** - *குறைநித்திரை.*

**பொய்வார்த்தை** - *பொய்ப்பேச்சு.*

**பொய்வாழ்க்கை** - *அநித்தியவாழ்வு.*

**பொய்வாழ்வு** - *பொய்வாழ்க்கை.*

**பொய்வேஷம்** - *கரவடவேஷம், போலிக் கோலம்.*

**பொரி** -*கரிகாடு, நெற்பொரி முதலியன, பொரியென்னேவல்.*

**பொரிகாரம்** - *வெண்காரம்.*

**பொரிக்கறி** - *பொரியல்.*

**பொரிதல்** - *எரிச்சற்படுதல், தீதல், பொரியாதல், பொருக்கு வெடித்தல்.*

**பொரித்தல்** - *குஞ்சுபிறப்பித்தல், பொரியச்செய்தல், குறைத்து விற்றல்.*

**பொரிபொரிச்சான்** - *வெடிபலவன்.*

**பொரிப்பூண்டு** - *ஓர்பூண்டு.*

**பொரிமா** - *பொரியரிசிமா.*

**பொரிமாச்சிந்தி, பொரிமாத்தட்டி** - *வீணெண்ணமெண்ணுவோன்.*

**பொரியரிசி** - *பொரித்தரிசி.*

**பொரியல்** - *பொரிக்கறி, பொரிதல்.*

**பொரிவிளாங்காய்** - *பொரிமாத் திரளை.*

**பொரிவு** - *சிலிர்ப்பு.*

**பொருகளம்** - *போர்க்களம்.*

**பொருகு** - *சோறு.*

**பொருக்காங்கட்டி** - *பொருக்குமண் கட்டி.*

**பொருக்கு** - *பொருக்காய்வெடிக்கும் வண்டல்.*

**பொருக்கெனல்** - *சீக்கிரக்குறிப்பு.*

**பொருட்காட்சியணி** - *ஓரலங்காரம், அஃது ஒன்றன் செய்கையினானற் பொருளையாயினுந் தீப்பொருளையாயினுந் தெரிவித்தல்.*

**பொருட்குறைவிசேடம்** - *பொருட் குறைவினால் விசேடித்துக் காட்டுவது, (உம்) இருநாழி நெற்கொண்டு யிரனைத்து மூடும்.*

**பொருட்சிதைவு** - *பொருட்சேதம்.*

**பொருட்சிறப்பு** - *அத்தாலங்காரம்.*

**பொருட்சுவை** - *அருத்தரசம்.*

**பொருட்செல்வம்** - *திரவியசம்பத்து.*

**பொருட்செல்வி** - *இலக்குமி.*

**பொருட்டிரிபு** - *கருத்துத்திரிபு.*

**பொருட்டு** - *காரணம்.*

**பொருட்டொடர் நிலைச்செய்யுள்** - *ஓர் பிரபந்தம், அஃது பொருளாற் றொடர்ந்துவருவது.*

**பொருட்படுதல்** - *பயன்படுதல்.*

**பொருட்படுத்தல்** - *ஒருபொருளாக மதித்தல் - பயன்படுத்தல்.*

**பொருட்பால்** - *பொருளின்பகுதி.*

**பொருட்பிறிதின்கிழமை** - *தன்னோ டொற்றுமையில்லாப்பொருள், (உம்) குமரன்வேல்.*

**பொருட்பின் வருநிலை** - *மொழிந்து பொருளே பொருளாயினுஞ் சொல் வேறாய் வருவது.*

**பொருட்பெண்டீர்** - *வேசிகள்.*

**பொருட்பெற்றி** - *பொருளின்குணம்.*

**பொருணயம்** - *கருத்து, நயப்பு.*

**பொருணி** - *கள்.*

**பொருணிலை** - *பயனிலை.*

**பொருண்முடிவு** - *கருத்துமுடிவு.*

**பொருண்மை** - *பொருட்டன்மை.*

**பொருதல்** - *ஒப்புதல், பொருந்தல், போர்செய்தல், இஃது அரசரறு தொழிலினொன்று.*

**பொருதுதல்** - *பொருந்தல்.*

**பொருத்தக்கடுதாசி** - *உடம்படுகைக் கடுதாசி.*

**பொருத்தம்**-இணக்கம், பொருத்தனை.

**பொருத்தல்** - பொருத்துதல்.

**பொருத்தனை** - பொருத்தம்.

**பொருத்து** - சந்து, பொருத்தென்னேவல்.

**பொருத்துதல்** - அமைத்தல், பொருந்தச்செய்தல்.

**பொருத்தோலை** - பொருத்தச்சீட்டு.

**பொருநர்** - அரசர், கூத்தர், நாடகர், படைத்தலைவர், படைவீரர், புகழ்வோர்.

**பொருநன்** - அரசன், குறிஞ்சிநிலத்தலைவன், திண்ணியன், நாடகன், படைத்தலைவன், படைவீரன்.

**பொருநை** - ஓராறு.

**பொருநைத்துறைவன்** - சேரன்.

**பொருந்தநதி** - சூதநதி.

**பொருந்தம்** - பொருநை.

**பொருந்தர்** - நெய்வார்.

**பொருந்தலர்** - பகைவர்.

**பொருந்தல்** - அடுத்தல், அமைதல், இயைதல், கலத்தல், சம்மதித்தல்.

**பொருந்தாமை** - இயையாமை, வெறுப்பு.

**பொருந்துதல்** - பொருந்தல்.

**பொருபுவி** - பாலைநிலம்.

**பொருபொருத்தல்** - அறத்தீதல், மனவெரிச்சற்படல்.

**பொருபொருப்பான்** - ஓர் மரம்.

**பொருபொரெனல்** - ஒலிக்குறிப்பு.

**பொருப்பன்** - குறிஞ்சிநிலத்தலைவன்.

**பொருப்பு** - கொல்லிமலை, மலை.

**பொருமலி** - கொழுத்தபெண்.

**பொருமல், பொருமுதல்** - அழுதல், வீங்கல்.

**பொருவ** - உவமவுருபு.

**பொருவாய்** - ஓர் மீன்.

**பொருவு** - உவமை, குற்றம், பொருவென்னேவல்.

**பொருவுதல்** - ஒப்பல்.

**பொருளகத்திணை** - தனக்குறுப்பெனப்பலவற்றை யடக்கிக் கொள்வது.

**பொருளணி** - பொருளான்வருமலங்காரம்.

**பொருளந்தாதி** - ஈற்றுப்பொருளை முதற்பொருளடியாகப்பாடல்.

**பொருளவனுதி** - பொருளானுயர்பு தோன்றக் கூறுமலங்காரம்.

**பொருளாகுபெயர்** - முதற்பொருளின் பேரைச் சினைப்பொருட்கு வழங்குவது, (உ.ம்) மரையிதழ்.

**பொருளாசை** - திரவியவாஞ்சை.

**பொருளாலணையும் பெயர்** - சுற்றம்-எண்குழூஉ-பொருண் முதலிய வற்றான் வரும்பெயர்.

**பொருளானந்தம்** - சொற்பொருட்குற்றம்.

**பொருளிலக்கணம்** - அறம்பொருளின்பமென்பவைகளை விளக்குமிலக்கணம், இஃது பஞ்சலக்கணத்தொன்று.

**பொருளின்பம்** - பொருட்சுவை.

**பொருளீட்டல்** - பொருட்சம்பாதித்தல், இஃது சூத்திரர் வைசியர்க்குரிய வறு தொழிலினொன்று.

**பொருளுவமம்** - பொருட்டன்மையையுவமிப்பது, (உ.ம்) நீர்போலுந் திருவுளம்.

**பொருள்** - அருத்தாபத்தி, உடைமை, உண்மை, குணம், சம்பத்து, இஃது நூற்பயனான்கினொன்று, சொற்பொருள், தலைமை, பணம், பல பண்டம், பிள்ளை, பொன், வஸ்து.

**பொருள்கோள்** - ஆசுரமணம், பயனிலை.

**பொருள்பண்ணுதல்** - அருத்தம் பண்ணுதல், மதித்தல்.

**பொருள்விலக்கு** - *ஓரலங்காரம், அஃது குறித்த பொருளை மறுத்துக் கூறுவது.*

**பொருள்விளங்கவைத்தல்** - *அருத்தம், விளங்கவைத்தல், இஃது நூற் குணம் பத்தினொன்று.*

**பொருள்வீடு** - *பொருட்பற்றறுதல்.*

**பொருனன்** - *பொருநன்.*

**பொருனை** - *பொருநை.*

**பொலங்கலம்** - *ஆபரணம்.*

**பொலந்துறவு** - *பெருந்தவம்.*

**பொலம், பொலன்** - *அழகு, பொல் லாங்கு, பொன், பொன்மைநிறம்.*

**பொலி** - *தூற்றாநெல், பொலியென் னேவல்.*

**பொலிகடா** - *பொலியெருது.*

**பொலிக்கந்து** - *பொலியருகிற்கந்து.*

**பொலிக்கடா** - *பட்டிக்கடா.*

**பொலிக்கட்டை** - *பொலியெருது கட்டுங்கட்டை.*

**பொலிக்கொடி** - *வைக்கோல்.*

**பொலிசை** - *இலாபம்.*

**பொலிதல்** - *எழுச்சி, சிறத்தல், தாராளம், புணர்தல், மிகுதல்.*

**பொலிதூற்றுதல்** - *தானியந்தூற்றுதல்.*

**பொலிநடையன்** - *பொலியெருது.*

**பொலியளவு** - *நிறையளவு.*

**பொலியெருது** - *போரடிக்கிற எருது களிற்பொலிக்கட்டைக்கடுத்த எருது, மாப்பிளைமாடு.*

**பொலிவு** - *அழகு, பொலிதல்.*

**பொலுகுதல்** - *நீர் பரிதல்.*

**பொலுபொலுத்தல்** - *உதிருதல்.*

**பொலுபொலுப்பு** - *உதிர்வு.*

**பொலுபொலெனல்** - *பொலுபொலுத் தல்.*

**பொல்** - *பொல்லு.*

**பொல்லம்** - *துண்டு, தைத்தல்.*

**பொல்லர்** - *சக்கிலியர், செம்மார், தையற்காரர்.*

**பொல்லன்** - *பொல்லான்.*

**பொல்லாங்கு** - *ஈனம், தீங்கு, மறதி.*

**பொல்லாப்பு** - *பொல்லாங்கு.*

**பொல்லாமணி** - *பொள்ளாமணி.*

**பொல்லாமை** - *பொல்லாங்கு.*

**பொல்லார்** - *தீயோர்.*

**பொல்லு** - *ஊன்றுகோல், தடி, பதர்.*

**பொழிதல்** - *ஈதல், சொரிதல், மழை பெய்தல்.*

**பொழிப்பளபெடை** - *முதற்சொற் கண்ணும் மூன்றாஞ்சோற் கண் ணுமளபெடைவரத்தொடுப்பது.*

**பொழிப்பியைவு** - *முதற்சீர்க் கண்ணும் மூன்றாஞ் சீர்க்கண்ணும் இயைபு வரத் தொடுப்பது.*

**பொழிப்பு** - *குறிப்பு, தொகைப்பொருள்.*

**பொழிப்புத்திரட்டல்** - *பொழிப்புரை யுரைத்தல்.*

**பொழிப்புத்திரட்டு**-*பொருட்டொகுப்பு.*

**பொழிப்புமுரண்** - *முதற்சீர்க்கண்ணும் மூன்றாஞ்சீர்க்கண்ணும்முரண்வரத் தொடுப்பது.*

**பொழிப்புமோனை** - *முதற்சீர்க்கண்ணு மூன்றாஞ் சீர்க்கண்ணு மோனை வரத் தொடுப்பது.*

**பொழிப்புரை** - *பொருடொகுத் துரைக்குமுரை.*

**பொழிப்பெதுகை** - *முதற்சீர்க் கண்ணும் மூன்றாஞ்சீர்க் கண்ணும் எதுகை வரத் தொடுப்பது.*

**பொழில்** - *உலகப்பொது, சோலை, நாடு,பூந்தோட்டம், பூமி, பெருமை.*

**பொழிவு** - *பலன், புகழ்ச்சி, பொழிதல், மேன்மை.*

**பொழுதறுதி** - *அத்தமனபரியந்தம்.*

**பொழுதிற்கூடல்** - *பொழுதொடு புணர்தல்.*

**பொழுது** - *காலம், சூரியன்.*

**பொழுதுசாய்தல்** - *பொழுதுமதியந் திரும்பல்.*

**பொழுதுபடுதல்** - *சூரியனத்தமித்தல்.*

**பொழுதுபுகுதல்** - *பொழுதத்தமித்தல்.*

**பொழுதுபோக்கல்** - *பொழுதுகழித்து விளையாடல்.*

**பொழுதுபோக்கு** - *பராக்கு, பாராட்டு.*

**பொழுதுபோக்குதல்** - *காலம்விடுதல், பராக்குப்பண்ணல்.*

**பொழுதுவணங்கி** - *ஓர் பூச்செடி.*

**பொழுதுவிடிதல்** - *சூரியனுதித்தல்.*

**பொழுதுவிடுதல்** - *பொழுது போக்கு தல்.*

**பொழுதொடுபுணர்தல்** - *வணிகரெண் குணத்தொன்று.*

**பொளி** - *துளை, மண்வெட்டி வெட்டு.*

**பொளிதல், பொளிவு** - *கன்முதலிய கோதல்.*

**பொள்ளல்** - *அப்பவருக்கம், தழும்பு, பொத்தல், பொளிதல், மரப் பொந்து.*

**பொள்ளாமணி** - *துளையாமணி.*

**பொள்ளுதல்** - *பொந்துபோதல்.*

**பொள்ளெனல்** - *அனுகரணவோசை, சீக்கிரக்குறிப்பு, சீக்கிரம்.*

**பொறாமை** - *எரிச்சல், தரியாமை.*

**பொறி** - *அடையாளம், அறிவு, இயந்திரம், இலக்குமி, இலபி, எழுத்து, கைவரை, செல்வம், தீய்ப் பொறி, தேமல், தேர், புலப்பொறி, புள்ளி, பொருள், பொலிவு, பொறி, பொறியப் படுவது, பொறியென்னேவல், பொறிவு, மதிலுறுப்பு, மரக்கலம், முத்திரை.*

**பொறிக்கல்** - *சிலாநாகக்கல், சுக்கான் கல்.*

**பொறிக்குதல்** - *பொறித்தல்.*

**பொறிதல்** - *சறுக்குதல், பறிதல்.*

**பொறித்தட்டுதல்** - *கண்மின்னுதல், பறிதல்.*

**பொறித்தல்** - *எழுதல், சித்திர மெழுதல், பொறியச்செய்தல்.*

**பொறிப்பு** - *பொறித்தல்.*

**பொறியார்த்தல்** - *கண்மின்னுதல்.*

**பொறியிலார்** - *அதிட்டகீனர், கீழ் மக்கள்.*

**பொறியிலி** - *அறிவிலி, விதிகேடன்.*

**பொறியேற்றுதல்** - *பொறிவைத்தல்.*

**பொறிவு** - *சாய்ந்தபதிவு, தொங்கு பறிவு, பொறிதல்.*

**பொறுக்கல், பொறுக்குதல்** - *தாங்குதல், பெறுக்கல்.*

**பொறுக்கி** - *பெறுக்கி.*

**பொறுக்கு** - *பொறுக்கி, பொறுக் கென்னேவல்.*

**பொறுதி** - *தாமதம், பொறுமை.*

**பொறுத்தல்** - *தரித்தல், தாங்குதல், பொறுமை, மன்னித்தல்.*

**பொறுப்பாளி** - *பொறுப்புக்காரன்.*

**பொறுப்பானவன்** - *பிரதானமானவன்.*

**பொறுப்பித்தல்** - *சுமத்துதல்.*

**பொறுப்பு** - *சென்மானம், பாரம், பிரதானம், பொறுத்தல் பொறுமை.*

**பொறுமை** - *பொறுதி.*

**பொறை** - *கருப்பம், சலதாரை முதலிய வடைக்குங்கல், சிறுமலை, சுமை, பாரம், பூமி, பொறுமை, இஃது பெரியோரியல்பு ளொன்று, சாத்துவிதகுணத்துமொன்று, மலை.*

**பொறைசாலி** - *பொறுதிக்காரன்.*

**பொறையன்** - *சேரன், தருமராசன்.*

**பொறையிலார்** - *பூரியர், வேடர்.*

**பொறையுயிர்த்தல்** - *மகப்பெறுதல்.*

**பொற்கசை** - *பொற்கம்பி.*

**பொற்கணக்கு** - *பொன்னிறையளவு.*

**பொற்கண்டை** - *பொற்கெண்டை.*

**பொற்கம்பி** - *பொன்கம்பி.*

**பொற்காசு** - *பொன்னின்காசு.*

**பொற்சரக்கு** - *உயர்ந்தசரக்கு.*

**பொற்சரிகை** - *பொன்னூல்.*

**பொற்சீந்தில்** - *ஓர் சீந்தில்.*

**பொற்சுண்ணம்** - *பொற்றூள்.*

**பொற்ப** - *பொற்புக்கொள்ள.*

**பொற்பணதி** - *பொன்னாபரணம்.*

**பொற்பாளம்** - *பொற்சலாகை.*

**பொற்பிரகாசம்** - *பொன்மயம்.*

**பொற்பு** - *அழகு, ஒப்பனை, பொலிவு, மிகுதி.*

**பொற்புறுத்தல்** - *அலங்கரித்தல்.*

**பொற்பூ** - *பொன்மலர்.*

**பொற்பூச்சு** - *மலாம்பூச்சு.*

**பொற்பூவராகன்** - *ஓர் வராகன்.*

**பொற்றகடு** - *பொன்னின்றகடு.*

**பொற்றலைக்கையாந்தகரை** - *ஓர் கையாந்தகரை.*

**பொற்றாமரை** - *பொன்னுருவத் தாமரை.*

**பொற்றிக்கீரை** - *ஓர் கீரை.*

**பொற்றை** - *சிறுதூறு, சிறுமலை, மலை.*

**பொற்றொடி** - *பெண், பொன்வளை.*

**பொன்** - *அழகு, இரும்பு, இலக்குமி, ஓர் நாணயம், சூரியன், பஞ்ச லோகப்பொது, பொலிவு, பொன், வியாழம்.*

**பொன்காத்தபூதம்** - *புதையல்காத்த பூதம்.*

**பொன்செய்கொல்லர்** - *தட்டார்.*

**பொன்பூணுதல்** - *கடுக்கன்முதலிய வணிதல்.*

**பொன்மணி** - *பொன்னினாற் செய்த மணி.*

**பொன்மயம்** - *பொற்பிரகாசம்.*

**பொன்மயிர்க்கொன்றை** - *ஓர் கொன்றை.*

**பொன்மலாம்** - *பொற்பூச்சு.*

**பொன்மலை** - *மகாமேரு.*

**பொன்மழை** - *புட்கலாவர்த்தமுகில் பொழியுமழை.*

**பொன்முழை** - *பொற்காசினச்சு.*

**பொன்மெழுகு** - *ஓர் மெழுகு.*

**பொன்மை** - *பொன்னிறம்.*

**பொன்வண்டு** - *பொன்னிறவண்டு.*

**பொன்வண்ணத்தந்தாதி** - *ஓர் பாடல்.*

**பொன்வலையம்** - *பொன்வளையம்.*

**பொன்வன்னக்காரிளை** - *கெந்தகம்.*

**பொன்வாய்ப்புள்** - *சிச்சிலிக்குருவி.*

**பொன்வானம்** - *பித்தளைமலை.*

**பொன்வித்து** - *நாகமணல்.*

**பொன்விலை** - *அரியவிலை.*

**பொன்வினைமாக்கள்** - *தட்டார்.*

**பொன்றல், பொன்றுதல்** - *அழிதல், குறைதல், சாதல்.*

**பொன்னகர்** - *தேவலோகம்.*

**பொன்னகர்க்கிறைவன்** - *இந்திரன்.*

**பொன்னகை** - *பொன்னாபரணம்.*

**பொன்னத்துப்பெட்டி** - *தாலி கூறை வைத்துக் கொண்டு போம் பெட்டி.*

**பொன்னப்பிரகம்** - *ஓர்ப்பிரகம்.*

**பொன்னம்பர்** - *ஓர் மருந்து.*

**பொன்னரிமாலை, பொன்னரியமாலை** - *ஓர் ஆபரணம்.*

**பொன்னவண்டு** - *பொன்னிறவண்டு.*

**பொன்னவன்** - *இரணியன், வியாழன்.*

**பொன்னாங்கண்ணி** - *பொன்னாங் காணி.*

**பொன்னாங்காணி** - *ஓர் கீரை.*

**பொன்னாசை** - *திரவியவாஞ்சை, அஃது ஆசைமூன்றினொன்று.*

**பொன்னாந்தட்டான்** - *ஓர் பட்சி.*

**மாருண்டம்** - *பாதை, பாம்புமுட்டை.*

**மாருதம்** - *காற்று.*

**மாருதவன்னக்கல்** - *காக்கைக்கல்.*

**மாருதவீமன்** - *ஏகம்பபாஷாணம்.*

**மாருதி** - *அனுமன் - காற்று, வீமன்.*

**மாருதிச்செங்கை** - *கண்டகிச்சிலை.*

**மாருதிநாதம்** - *வங்கமணல்.*

**மார்** - *பன்மைவிகுதி, (உம்) தாய்மார், மார்பு, வருகாலங்காட்டி நிற்கு மோர்வினைமுற்றுவிகுதி, (உம்) உண்மார்.*

**மார்கழி** - *ஓர்மாதம், மிருகசீரிடம்.*

**மார்க்கசிரம்** - *மார்கழிமாதம்.*

**மார்க்கணம்** - *அம்பு, இரப்பு, தேடல்.*

**மார்க்கணர்** - *இரப்போர்.*

**மார்க்கண்டர், மார்க்கண்டேயர்** - *ஓர் முனிவர்.*

**மார்க்கண்டேயம்** - *பதினெண் புராணத்தொன்று.*

**மார்க்கம்** - *ஆராய்வு, உலகம், ஓர் கூத்து, கத்தூரி, சமயம், தாளப் பிரமாணம் பத்தினொன்று, தெரு, மறுதலை, மார்கழிமாதம், மூலம், வழி.*

**மார்ச்சரியம்** - *பொறாமை, இஃது உட்பகையாறினொன்று, விகார மெட்டினுமொன்று.*

**மார்ச்சனம்** - *துடைத்தல்.*

**மார்ச்சன்** - *விளக்குமாறு.*

**மார்ச்சனை** - *முழவின்வாய்வார், முழவொலி.*

**மார்ச்சாரகம்** - *மயில்.*

**மார்ச்சாரம்** - *பூனை.*

**மார்ச்சாலம்** - *கோமேதகம், பூனை.*

**மார்த்தண்டன்** - *சூரியன்.*

**மார்த்தம்** - *ஓர் நீதிசாத்திரம்.*

**மார்த்தாண்டம்** - *பதினெண் புராணத் தொன்று, அஃது சூரியபுராணம்.*

**மார்த்தாண்டன்** - *சூரியன்.*

**மார்த்தோல்** - *மரமேறிகள் மார்பி லிடுந்தோல்.*

**மார்பகம், மார்பம்** - *நெஞ்சு.*

**மார்பதை** - *மாதம்.*

**மார்பு** - *அகலம், நெஞ்சு.*

**மாலதி** - *இரவு, இளம்பெண், ஓர் மல்லிகை, சந்திரகிரகணம், சிறு சண்பகம், புட்பம், மல்லிகை, முல்லை.*

**மாலமாயம்** - *பேயின்றந்திரம்.*

**மாலம்** - *குங்குமமரம், பேய், வயல்.*

**மாலயம்** - *சந்தனம், மாளயம்.*

**மாலயற்கரியான்** - *சிவன்.*

**மாலர்** - *கவசம், பார்ப்பனப் பெண்ணுக் குஞ்சூத்திரனுக்கும் பிறந்தோர், புலைஞர், வேடர்.*

**மாலவன்** - *புதன்.*

**மாலன்** - *விட்டுணு, வேடன்.*

**மாலாதீபகம்** - *தீபகச் சொன்மாலை யாய் வருவது, (உம்) மனைக்கு விளக்கு மடவாண் மடவாடனக் குத்தகை சால்புதல்வர்.*

**மாலி** - *ஆதித்தன், ஓரரக்கன், கள், மாலையணிந்தவன்.*

**மாலிகை** - *ஓர்மது, கழுத்தணி, நிரல் படநிற்குங்குழு, மகள், மாலை.*

**மாலிங்கம்** - *இலிங்கபாஷாணம்.*

**மாலிமி** - *இளமைப்பருவத்திற் செய் நட்பு, மாலுமி.*

**மாலிமை** - *மாலுமி, மாலுமித்தனம்.*

**மாலியம்** - *மானம்.*

**மாலியவான்** - *ஓரரக்கன்.*

**மாலினி** - *உமை, கங்கை, காளி, பூ மாலைகாரி.*

**மாலினிகரணம்** - *நவபாதகத் தொன்று.*

**மாலுகம்** - *வேம்பு.*

**மாலுக்கிளையாள்** - *துற்கை.*

**மாலுடைக்கண்டன்** - *புருடராகம்.*

**மாலுதல்** - *மயங்குதல்.*

**மாலுதாசனன், மாலுதானம்** - *கண் குத்திப்பாம்பு.*

**மாலுந்திவந்தோன்** - *பிரமன்.*

**மாலுமி** - *மீகாமன்.*

**மாலுமிசாத்திரம்** - *கடலோடிகளின் கணிதம்.*

**மாலூரம்** - *வில்வமரம்.*

**மாலூர்தி** - *கருடன்.*

**மாலை** - *அந்திப்பொழுது, அரசன் மனை, இயல்பு, இரா, ஒழுங்காயி ருப்பது,ஒழுங்கு, சொல்லாலேனும் பூவாலேனு பொன்னாலேனும், மணியாலேனுத் தொடுத்த தொடை, நோய், முறை, வரி.*

**மாலைகாலம்** - *மாலைநேரம்.*

**மாலைக்கண்** - *மாலைகாலத்திருட் பிடிக்குங்கண்.*

**மாலைக்காமாலை** - *மாலைக்கண்.*

**மாலைசூட்டு** - *சுயம்வரம்.*

**மாலைநுழைஞ்சான்** - *ஓர்பூடு.*

**மாலைநேரம்** - *அந்திப்பொழுது.*

**மாலைப்படிகம்** - *பளிங்கு.*

**மாலைப்பண்** - *மாலைப்பொழுது.*

**மாலைமாற்று** - *முதறொடுத்துங் கடை தொடுத்தும் வாசிக்கவொரு படித்தாய்முடியும்பா.*

**மாலையணி** - *ஓரலங்காரம், அஃது பின்பின்வருவனவற்றிற்கு முன் முன் வந்தவற்றை விசேடியங் களாக வேனும்விசேடணங்களாகவேனுஞ் சொல்லுதல், (உம்) மன்னிவள் கண்காதளவுங் காது தோண் மட்டிசையும் எனவும் புனலும தினுறுமலருமதன் மணமுமென வும் வரும்.*

**மாலையாகாலம்** - *மாலைநேரம்.*

**மாலையீடு** - *மாலைசூட்டு.*

**மாலையுவமை** - *ஓரலங்காரம்,அஃது ஒரு பொருட்கு வரும் பல வுவமையை மாலையாகத் தொடுத்துக் கடைக்கட் பொருளைக் கூட்டி யுரைப்பது.*

**மாலைவாரம்** - *மாலைப்பொழுது.*

**மாலைவெள்ளி** - *அந்திவெள்ளி.*

**மாலோன்** - *திருமால், புதன்.*

**மால்** - *அருகன், இந்திரன், கண்ணேணி, கம்மாளர்கருவியி னொன்று, கருமை, காற்று, கொட்டில், சோழன், திருமால், பழமை, புகர் நிறம், புதன், பெருமை, மயக்கம், மேகம், வலை, வீடு, வெற்பு, வேட்கை.*

**மால்தங்கை** - *உமை, ஏகம்ப பாஷாணம்.*

**மால்பாகலட்சிமி** - *அரிதாரம்.*

**மால்பு** - *கண்ணேணி.*

**மால்மைத்துனன்** - *சிவன், துருசு.*

**மால்விந்து** - *அப்பிரகம்.*

**மால்வீடு** - *சாலக்கிராமம்.*

**மால்வெட்டல்** - *தெல்லுவெட்டல்.*

**மாவட்டை** - *செவ்வட்டை.*

**மாவதை** - *தேனில்லாவதை.*

**மாவலர்** - *குதிரைப்பாகர், யானைப் பாகர்.*

**மாவலி** - *ஓர் சக்கிரவர்த்தி.*

**மாவிடை** - *மரச்செறிவு.*

**மாவிட்டம்** - *கடனுரை.*

**மாவிரதம்** - *உட்சமயமாறினொன்று.*

**மாவிரதியர்** - *இலிங்கிகள்.*

**மாவிலங்கு, மாவிலங்கை** - *ஓர்மரம்.*

**மாவிலைத்தோரணம்** - *மாவிலையா லிடுந்தோரணம்.*

**மாவிளக்கு** - *மாவினாற்செய்தநெய் விளக்கு.*

**மாவிளம்** - *வில்வம்.*

**மாவிறங்கல்** - *மாப்பிடிப்புக் கீழ்ப் படுதல், மாவிறங்கியது.*

**மாவீரன்** - *அதிவீரன்.*

**மாவுத்தன்** - குதிரைப்பாகன், யானைப் பாகன்.

**மாவுரம்** - வலி.

**மாவெனல்** - அழைத்தல்.

**மாவொல்லி** - ஓர் விதவொல்லி.

**மாழாத்தல்** - மயங்குதல்.

**மாழை** - அழகு, அறிவின்மை, ஆயம், உலோகக்கட்டி, ஓலை, திரட்சி, புளிமா, பொன், மாமரம்.

**மாழ்கல்** - சாதல், மயக்கம், மாழ்தல், மேவல்.

**மாழ்கு** - சா, மயக்கம், மாழ்கென் னேவல், மிருகசீரிடம்.

**மாழ்தல்** - சோம்பல், மயக்கம், மேவல்.

**மாள** - முன்னிலையசைச்சொல். (உம்) சிறிதுதவிர்ந்தீகமாள நின்பரி சிலருய்ம்மார்.

**மாளயபட்சம்** - புரட்டாசிமாதத்து அபரபக்கத்துப்பிரதமை முதற் பூருவ பக்கத்துச்சதுர்த்தி மட்டும்.

**மாளயம்** - புரட்டாதி மாதத்திற் பண்ணும் பொதுச்சிராத்தம்.

**மாளல்** - மாளுதல்.

**மாளவகவுளம்** - ஓரிசை.

**மாளவம்** - தேயமைம்பத்தாறி னொன்று.

**மாளவி** - ஓரிராகம்.

**மாளிகை** - அரசன்மனை, வீடு.

**மாளிகைத்தேவர்** - ஓர் ஞானாசிரியர்.

**மாளுதல்** - சாதல், தாழ்தல்.

**மாறக்கட்டுதல்** - இல்லையென்று புரட்டுதல்.

**மாறல்** - ஆடல், கொடுத்து வாங்கு தல், தவிர்தல், மறுபுறமாக்கல், விடுதல், விற்றல், வேறாக்கல்.

**மாறன்** - பாண்டியன் - மாறிவருவது.

**மாறாடி** - மாறுபாடுகாரன்.

**மாறாடுதல்** - எதிராடுதல், மயங்குதல்.

**மாறாட்டம்** - மயக்கம், மாறுபாடு.

**மாறி** - மாறாடி.

**மாறு** - துடைப்பம், பிரதி, மாறென் னேவல், மிலாறு, விகாரம்.

**மாறுகண்** - சாய்ந்தகண்.

**மாறுகம்** - சீலை.

**மாறுகூலி** - மரமேற்றுக்காரர்கூலி.

**மாறுகோள்** - விரோதம்.

**மாறுதல்** - மாறல்.

**மாறுத்தரம்** - மறுமொழி.

**மாறுபடல்** - மாறிப்போதல், விரோ தித்தல்.

**மாறுபடுபொருள்** - ஓரலங்காரம், அஃது கருதியபொருளை மறைத்த தனைப் பழித்தற்கு மற்றொன் றைப் புகழ்வது.

**மாறுபகை, மாறுபாடு** - பிசகு, மறு தலிப்பு, விரோதம்.

**மாற்கண்டேயம்** - மார்க்கண்டேயம்.

**மாற்சரியம்** - மார்ச்சரியம்.

**மாற்றம்** - சொல், பகை, வேற்றுமை.

**மாற்றலர்** - பகைவர்.

**மாற்றல்** - ஒன்றுகொடுத்தொன்று, வாங்கல், ஒன்றையொன்றாக்கல், கொடாமை, தீர்த்தல், விற்றல்.

**மாற்றவள், மாற்றாடிச்சி, மாற்றாட்டி** - சக்களத்தி, வேற்றுப்பெண்.

**மாற்றாந்தகபன்** - மாதாவின் பின் தாரத்துக் கணவன்.

**மாற்றாந்தாய்** - பிதாவின் பின் தாரத்துப்பெண்.

**மாற்றார்** - பகைவர்.

**மாற்றான்** - பகைவன்.

**மாற்று** - எதிர், கிரயம், பொன் வெள் ளியின்தரம், மாற்றிய பொருள்.

**மாற்றுதல்** - மாற்றல்.

**மாற்றுநொடி** - பிரதிநொடி.

**மாற்றுவஸ்திரம்** - வதிட்புடைவை, விலையுயர்ந்தபுடைவை.

**மான** - *உவமைச்சொல், (உம்) கொங்கை முகைமான, முன்னிலை யசைச்சொல்.*

**மானக்குறை** - *மானக்கேடு.*

**மானக்கேடு** - *சங்கையீனம்.*

**மானசம்** - *கருத்து, புத்தி, மனதுமான தவாவி.*

**மானசாரம்** -*சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.*

**மானசோத்தா, மானசோத்திரம்** - *இயம்புரம்.*

**மானதக்காட்சி** - *பொறிவழியிற் கண்ட வுருவை மனதாற்குறித் துணர்தல்.*

**மானத்தீட்சை** - *அகத்தீட்சை.*

**மானதநானம்** - *ஏழ்வகைநானத் தொன்று, அஃது சற்குருவருளால் மூல மலமறுத்தல்.*

**மானதபூசை** - *மனோபூசை.*

**மானதப்பிரத்தியட்சம்** - *மானதக் காட்சி.*

**மானதம்** - *மனதுக்கடுத்தது.*

**மானதவாவி** - *பிரமலோகவாவி.*

**மானதீபம்** - *உபநிடத முப்பத்திரண்டி னொன்று.*

**மானத்தாழ்ச்சி** - *மானக்கேடு.*

**மானபங்கம்** - *மானகீனம்.*

**மானபாவி** - *பெரும்பாவி.*

**மானபேதம்** - *சிற்பநூன் முப்பத் திரண்டி னொன்று.*

**மானமா** - *கவரிமா.*

**மானம்** - *அகங்காரம், அபிமானம், அளவு, உவமை, கணிதம், குற்றம், நேசம், பிடிப்பு, மரியாதை, வலி, வானம், விமானம், வெட்கம்.*

**மானம்பாடி** - *வானம்பாடி.*

**மானரந்தரி** - *நாழிகைவட்டில்.*

**மானரியம்** - *பூராயம், விடுப்பு.*

**மானல்** - *இலச்சை, ஐயம், ஒத்தல், மயக்கம்.*

**மானவம்** - *உபபுராணத்தொன்று.*

**மானவர்** - *ஆண்மக்கள் , படைவீரர், முனிதர், மானமுடையோர்.*

**மானவன்** - *ஆண்மகன், மனிதன்.*

**மானவு** - *தெளிவு.*

**மானனம்** - *சங்கை.*

**மானன்** - *தலைவன், மூடன், வேடன்.*

**மானாகர்** - *கோவலன்றந்தை.*

**மானார்** - *பகைவர்.*

**மானாவரி** - *வானாவாரி.*

**மானி** - *மானமுடையோன், மானி யென்னேவல்.*

**மானிடச்சட்டை** - *மானிடதேகம்.*

**மானிடத்தன்** - *சிவன்.*

**மானிடத்தன்மன்** - *குபேரன்.*

**மானிடமுடையோன், மானிடமேந்தி** - *சிவன்.*

**மானிடம், மானிஷம்** - *மனுப்பிறப்பு.*

**மானிடர், மானிடவர்** - *மனிதர்.*

**மானிடவைத்தியம்** - *ஓடதிகொண்டு செய்யும்வைத்தியம்.*

**மானிடன்** - *மனிதன்.*

**மானிதம்** - *மானம்.*

**மானிதை** - *மகத்துவம்.*

**மானித்தல்** - *சங்கித்தல்*

**மானிபம்** - *மானம், வெட்கம்.*

**மானியக்காரன்** - *சொந்தநிலக்காரன்.*

**மானியம்** - *அரசர்கள்சம் மானத்தால் விட்டநிலம், சங்கை.*

**மானினீ** - *பெண்.*

**மானுடம், மானுஷம்** - *மனுப்பிறப்பு.*

**மானுடயாகம்** - *பஞ்சமா வெச்சத் தொன்று, அஃது இரப் போர்க் குணவு முதலியவீதல்.*

**மானுடர்** - *மனிதர்.*

**மானுடவைத்தியம்** -*மானிட வைத்தியம்.*

**மானுஷீகம்** - *மனுஷீகம்.*

**மானுதல்** - *மானல்.*

**மானுபாவி** - *மானபாவி.*

**மானேறு** - *உத்திரநாள், கலைமான்.*

**மானோக்கியம்** - *சிறப்பு.*

**மான்** - *உருவம், ஓர்மிருகம், குதிரை, பெண், மகரமீன், மகரராசி, மானென்னேவல், விலங்கின் பொது.*

**மான்களங்கம்** - *சந்திரகளங்கம்.*

**மான்களிக்கண்** - *இருவட்டக்கம்பி.*

**மான்கொடி** - *ஓர்படர்கொடி.*

**மான்செவி** - *ஓர் பூடு.*

**மான்மகன்** - *பிரமன், மன்மதன்.*

**மான்மதம்** - *கஸ்தூரி.*

**மான்மியம்** - *மகிமை.*

**மான்றலை** - *மிருகசீரிடம்.*

**மான்றல்** - *மயக்கம், மயங்கல்.*

## மி

**மிகபடச்சொல்லல்** - *மிகுதியாய்ப் பேசல், அஃது நூற்குற்றம்பத்தி னொன்று.*

**மிகபடல்** - *மிகுதல்.*

**மிகல்** - *கடத்தல், மிகுதல்.*

**மிகவல்லோர்** - *அறிஞர்.*

**மிகவும்** - *மிகுதியும்.*

**மிகன்** - *பெருமை.*

**மிகன்மக்கள்**-*பெருமையிற் சிறந்தோர்.*

**மிகிரம்** - *காற்று, முகில்.*

**மிகிரன்** - *சந்திரன், சூரியன்.*

**மிகிராணன்** - *சிவன்.*

**மிகுகொடையாளன்** - *கன்னன், தியாகி.*

**மிகுக்குதல்** - *மிகுத்தல்.*

**மிகுதம்** - *மிகுதி.*

**மிகுதல்** - *அதிகப்படல், கடத்தல், பூரித்தல்.*

**மிகுதி** - *அதிகம், பூரிப்பு, பொலிவு, மதர்ப்பு.*

**மிகுத்தல்** - *அதிகப்படல்.*

**மிகுத்துச்சொல்லல்** - *விதந்து சொல்லல்.*

**மிகை** - *குற்றம், கேடு, துன்பம், மிகுதி, வருத்தம்.*

**மிகைபடல்** - *குற்றப்படல், மிகுதல்.*

**மிகையதன்செய்கையுருவகம்** - *ஓரலங் காரம், அஃது உருவகம் செய்கை யிலொத்துமயாதோர் மிக்குள தெனச் சொல்வது.*

**மிகையொற்றுமையுருவகம்** - *உரு வகத்தில் யாதுமோர் மேம்பாடு தோன்றச் சொல்வது, (உம்) தடங்கட் கெண்டை.*

**மிக்கது** - *மிகுதியானது.*

**மிக்கவன்** - *பெருமையிற்சிறந்தோன்.*

**மிக்கவை** - *உச்சிட்டம், ஊண், சோறு, நியாயமல்லவை, நிறை.*

**மிக்கான்** - *மேலானோன்.*

**மிக்கிளமை** - *சுட்டிளமை.*

**மிக்கு** - *மிகுதி.*

**மிக்கோர்** - *அறிஞர், பெரியோர்.*

**மிசிரம்** - *கலப்பு, சமம்.*

**மிசிர்வானம்** - *கலப்பு, நிறம்.*

**மிசுக்கன்** - *ஈனன், தரித்திரன்.*

**மிசுக்கை** - *சின்னத்தனம்.*

**மிசுரம்** - *உச்சவிசை.*

**மிசை** - *உணர்வு, உயர்ச்சி, சோறு, தரித்திரம், மிசையென்னேவல், மீமிசைச்சொல், மேடு, மேல்.*

**மிசைதல்** - *அனுபவித்தல், உண்டல்.*

**மிசைத்திரள்** - *கரடு.*

**மிச்சம்** - *சேடம், மிகுதி.*

**மிச்சிரம்** - *கலப்பு.*

**மிச்சில்** - *எச்சில், ஒழிபொருள்.*

**மிச்சை** - *அஞ்ஞானம், தரித்திரம், பொய்.*

**மிஞிறு** - *வண்டு.*

**மிஞ்சல், மிஞ்சுதல்** - *கடத்தல், மீதியாதல்.*

**மிஞ்சி** - *காலணியினொன்று.*

**மிடல்** - *வலி.*

**மிடறு** - *கழுத்து, கீழ்வாய், தொண்டை.*

**மிடா** - *குழிசி, பானை.*

**மிடி** - *மிடியென்னேவல், வறுமை.*

**மிடித்தல்** - *வறுமையுறல்.*

**மிடிமை** - *வறுமை.*

**மிடியன்** - *வறியன்.*

**மிடிவு** - *மிடிமை.*

**மிடுக்கன்** - *பெலப்பானது, பெலப்பானவன், வலிமையுள்ளவன்.*

**மிடுக்கு** - *பெலப்பு, வலிமை.*

**மிடுமிடுத்தல்** - *விரைதல்.*

**மிடுமிடுப்பு** - *விரைவு.*

**மிடுமிடெனல்** - *விரைவுக்குறிப்பு.*

**மிடை** - *தூறு, மிடையென்னேவல்.*

**மிடைதல்** - *நெருங்கல்.*

**மிடைதூறு** - *நெருங்கியகாடு.*

**மிட்டா** - *அனுபவம், ஆட்சி, சுதந்திரம்.*

**மிணுமிணுத்தல்** - *இரகசியம்பேசல்.*

**மிணுமிணுப்பு** - *ஒலிக்குறிப்பு.*

**மிணுமிணெனல்** - *மிணுமிணுத்தல்.*

**மிண்டல்** - *நெருங்குதல், மிண்டுதல்.*

**மிண்டன்** - *திண்ணியன்.*

**மிண்டி** - *கிளப்புமோர்கருவி.*

**மிண்டிபோடுதல்** - *மிண்டிட்டுப் பெயர்த்தல்.*

**மிண்டு** - *சார்த்தும்மிண்டு, மதத்தாற் பிழைத்தல், மிண்டென்னேவல்.*

**மிண்டுதல்** - *நெருங்கல், மதத்தாலடர்த்தல்.*

**மிதிக்குதல்** - *மேலேகிளர்தல், மேற்படல்.*

**மிதசுரம்** - *மத்திமசுரம்.*

**மிதத்தல்** - *கிளர்தல், கிளர்த்தல்.*

**மிதத்துதல்** - *உயர்த்தல், -கிளர்ப்புதல்.*

**மிதப்பு** - *உயர்ச்சி, கிளர்வு, மேடு, மேற்படுகை, வலை முதலியவற்றிற் கட்டிவிடுமறிகுறி.*

**மிதம்** - *அளவு, மிருதம்.*

**மிதலை** - *கொப்பூழ்.*

**மிதவை** - *சோறு, தெப்பம்.*

**மிதாசனம்** - *அற்பவுணவு.*

**மிதி** - *அத்தாட்சி அழகு, அறிவு, கிணற்றுமிதி, மிதித்தல், மிதியென்னேவல், விலை.*

**மிதித்தல்** - *உழக்கல், குதித்தல்.*

**மிதிபட்டடை, மிதிபலகை** - *பாதம் வைக்கும் பலகை.*

**மிதிபாகல்** - *ஓர்பாகல்.*

**மிதிப்பு** - *மிதித்தல்.*

**மிதிமரம்** - *மிதிபலகை.*

**மிதியடி** - *பாதகுறடு.*

**மிதியல்** - *மிதிப்பு.*

**மிதியிடுதல்** - *மிதித்தல்.*

**மிதுலை** - *சனகனகர்.*

**மிதுனம்** - *இரட்டை, ஓரிராசி, புணர்ச்சி.*

**மிதுனவீதி** - *அருக்கன்வீதியுளொன்று.*

**மித்தியம்** - *பொய்.*

**மித்தியாமதி** - *அறியாமை, பிழை.*

**மித்தியாவாசகம்** - *பொய்மொழி.*

**மித்தியாவாதி** - *பொய்யன்.*

**மித்தியை** - *கபடம், பொய்.*

**மித்தியோத்தரம்** - *பொய்மறுமொழி.*

**மித்தியோபசாரம்** - *சத்துருவுக்கு மித்துருப்போற்காட்டல்.*

**மித்திரதுரோகி** - *சினேகசத்துரு.*

**மித்திரத்துருகன்** - *மாய்மால சினேகிதன்.*

**மித்திரநாள்** - *அனுடம்.*

**மித்திரபேதம்** - *மித்துருபேதம்.*

**மித்திரம்** - *நட்பு.*

**மித்திரர்** - *சினேகிதர்.*

**மித்திரலாபம்** - *சினேகசம்பாதனை.*

**மித்திரன்** - *சினேகிதன், சூரியன், துவாதசாதித்தரிலொருவன்.*

**மித்திரை** - *தோழி.*

**மித்துரு** - *சினேகிதன்.*

**மித்துருதுரோகி** - *சினேகத்திற்று ரோகம் பண்ணுவோன்.*

**மித்துருத்தானம்** - *சென்மத்துக்கு நாலாமிடம்.*

**மித்துருபேதம்** - *சினேகமாயிருந்து பேதித்தல், இஃது பஞ்சதந்திரத்தி னொன்று.*

**மித்துருப்பதமை** - *ஈயமணல்.*

**மித்தை** - *பொய்.*

**மியா** - *முன்னிலையசைச்சொல், (உம்)கேண்மியா.*

**மியூல்** - *ஓர் பூடு.*

**மிரட்டல்** - *அதட்டல்.*

**மிரட்டுதல்** - *பயமுறுத்துதல்.*

**மிரதம்** - *பாம்பு.*

**மிரளுதல்** - *சங்காவியக்கொள்ளுதல், பயப்படுதல்.*

**மிராசி, மிராசு** - *முதுசொம்.*

**மிரிகை** - *முறுக்காணி.*

**மிரியல்** - *மிளகு.*

**மிருககீரம்** -*மான்பால்.*

**மிருகக்குணம்** - *ஒழுங்கற்றகுணம், துட்டகுணம், வனகுணம்.*

**மிருகசஞ்சாரம்** - *ஒழுங்கற்றநடை, மிருகத்துடன்புணர்தல்.*

**மிருகசயிடகம்** - *வெருகு.*

**மிருகசாதி** - *விலங்குசாதி.*

**மிருகசாவிகை** - *மான்வலை.*

**மிருகசீரிடம்** - *ஓர் நாள்.*

**மிருகசீவனன்** - *வேட்டக்காரன்.*

**மிருகண்டகன்** - *மார்க்கண்டன்.*

**மிருகண்டன், மிருகண்டு** - *ஓரிருஷி.*

**மிருகதஞ்சகன்** - *நாய்.*

**மிருகதந்தம்** - *பன்றிக்கொம்பு.*

**மிருகதரன்** - *சந்திரன்.*

**மிருகதூர்த்தகன்** - *நரி.*

**மிருகத்தனம்** - *மிருகத்தின்றன்மை.*

**மிருகதீதியு** - *வேட்டைகாரன்*

**மிருகநாபி** - *கத்தூரி, கத்தூரிப்பூனை.*

**மிருகநாபிசம்** - *கத்தூரி.*

**மிருகபதி** - *சிங்கம்.*

**மிருகபந்தினி** - *மான்வலை.*

**மிருகபாலிகை** - *நாவி.*

**மிருகமதம்** - *கத்தூரி.*

**மிருகமாதிருகை** - *பெண்மான்.*

**மிருகம்** - *கத்தூரி, மான், மிருகசீரிடம், யானை, விலங்கின் பொது, வேட்டை.*

**மிருகராசன், மிருகரிபு** - *சிங்கம்.*

**மிருகவாஞ்சனன்** - *சந்திரன்.*

**மிருகவாகனன்** - *வாயு.*

**மிருகவ்வியம்** - *வேட்டை.*

**மிருகாங்கம்** - *காற்று, சந்திரன்.*

**மிருகாங்கன்** - *சந்திரன், சிவன்.*

**மிருகாசனம்** - *சிங்கம், புலி.*

**மிருகாண்டி** - *மிருகத்தனமுள்ளவன்.*

**மிருகாதி** - *புலி.*

**மிருகாயினம்** - *மான்றோல்.*

**மிருகாரசிங்கி** - *மிருதாரசிங்கி.*

**மிருகாராதி, மிருகாரி** - *சிங்கம், நரி, நாய், புலி.*

**மிருகேந்திரன்** - *சிங்கம்.*

**மிருசம்** - *காட்சி.*

**மிருடங்கனம்** - *பிள்ளை.*

**மிருடன்** - *சிவன்.*

**மிருடார்த்தகம்** - *அபாவஅளவை, (உம்) ஆமை மயிர்.*

**மிருடாலகம்** - *மாமரம்.*

**மிருடாவாதம்** - *இதழாவிகழ்ச்சி.*

**மிருடோத்தியம்** - *பொய்.*

**மிருட்டி** - *சமைத்தல், சுத்தி, தெளித்தல், நெருக்கம்.*

**மிருட்டேருகன்** - *கொடையாளன் தற்பிரிடன்.*

**மிருணாலம்** - *தாமரை நூல்.*

**மிருதகாந்தகம்** - *நரி.*

**மிருதங்கம்** - *ஒலி, கலைஞான மறு பத்தினான்கினொன்று, முழவு, மூங்கில்.*

**மிருதசங்கை** - *மரணசங்கை.*

**மிருதசஞ்சீவி, மிருதசஞ்சீவினி** - *இறந்தவர்களையெழுப்புமருந்து, ஓர் மந்திரம்.*

**மிருதசூதகம்** - *மரணசூதகம்.*

**மிருதச்சேதம்** - *இறத்தல்.*

**மிருதண்டன்** - *சூரியன்.*

**மிருதஸ்நானம்** - *குளிப்பாட்டு.*

**மிருதபம்** - *பிரேதம்.*

**மிருதபாலூரணம்** - *பாஷாண மறு பத்தினான்கினொன்று.*

**மிருதமத்தம்** - *நரி.*

**மிருதம்** - *போர், மரணம், மித்துரு, விளைவுபாஷாண முப்பத்திரண்டினொன்று.*

**மிருதவற்சை** - *கன்றிழந்தபசு, மகவிழந்த பெண்.*

**மிருதாகரம்** - *இடி.*

**மிருதாண்டன்** - *சூரியன்.*

**மிருதாமதம்** - *துருசி.*

**மிருதாரசிங்கி** - *ஈயம், ஓர்பூடு, சிங்கிபாஷாணம்.*

**மிருதி** - *தருமநூல், நினைப்ப, மரணம்.*

**மிருதிமதலங்காரம்** - *நினைப்பணி.*

**மிருதினி** - *நன்னிலம்.*

**மிருது** - *நொய்மை, மந்தம், மழுங்கல், மென்மை.*

**மிருதுநட்சத்திரம்** - *இலகு நட்சத்திரம்.*

**மிருதுபாடிதம், மிருதுபாஷிதம்** - *மெத்தன வானமொழி.*

**மிருதுமூர்த்தம்** - *மரணமுகுர்த்தம்.*

**மிருதுலோமகம்** - *முசல்.*

**மிருதுவாதம்** - *சிறுதென்றல்.*

**மிருதுன்னகம்** - *பொன்.*

**மிருதூற்பலம்** - *நீலோற்பலம்.*

**மிருதை** - *பூமி.*

**மிருதோற்பவம்** -*கடல்.*

**மிருத்தஞ்சசியன்** - *சிவன்.*

**மிருத்திகை** - *நிலம், மண்.*

**மிருத்தியம்** - *மண்.*

**மிருத்தியு** - *இயமன், மரணம்.*

**மிருத்தியுஞ்சயன்** - *சிவன்.*

**மிருத்தியுபுட்பம்** - *கரும்பு.*

**மிருத்து** - *மண், மரணம்.*

**மிருத்துகரன்** - *குசவன்.*

**மிருத்துகாரகன்** - *மரணத்தைச் செய்யுங்கிரகம்.*

**மிருத்துகிரகம்** - *மிருத்துகாரகன்.*

**மிருத்துசாந்தி** - *அவமிருத்தை நீக்குஞ்சாந்தி.*

**மிருத்துசூதகம்** - *மரணசூரகம்.*

**மிருத்துசூதி** - *நண்டு.*

**மிருத்துஞ்சயம்** - *மரணத்தை விலக்கு மந்திரம்.*

**மிருத்துஞ்சயன்** - *சிவன்.*

**மிருத்துநாசகம்** - *இரதம்.*

**மிருத்துநிலை** - *மிருத்துக்கிரகநிலை.*

**மிருத்துபயம்** - *மரணபயம்.*

**மிருத்துமூர்த்தம்** - *சாமூர்த்தம்.*

**மிருத்துவங்குரகம்** - *சாபறை.*

**மிருத்துவஞ்சனன்** - *சிவன்.*

**மிருத்துவீசம்** - *மூங்கில்.*

**மிருநாளம்** - *தாமரைக்கொடி.*

**மிலாந்தி** - *வெருட்கொண்டு பார்ப்போன்.*

**மிலாந்துதல்** - *அலமலந்துபார்த்தல்.*

**மிலாரடி** - *மலாரடி.*

**மிலாறு** - *வளார்.*

**மிலேச்சகந்தகம்** - *உள்ளி.*

**மிலேச்சதேசம்** - *இந்துதேசத்தைச் சூழ்ந்திருக்குந்தேசம், சோனகர் முதலியோர்தேசம்.*

**மிலேச்சத்தனம்** - *அறிவின்மை.*

**மிலேச்சமண்டலம்** - *மிலேச்சதேசம்.*

**மிலேச்சமுகம்** - *செம்பு.*

**மிலேச்சம்** - *சரச்சுவதியாற்றின் வட தேசம்.*

**மிலேச்சர்** - *சோனகர், மதிகேடர்.*

**மிலேச்சன்** - *அறிவீனன், ஈனன், சோனகன், மிலேச்சகண்டத்தவன், வேடன்.*

**மிலேச்சாசம்** - *கோதும்பை.*

**மிலேச்சாசியம்** - *செம்பு.*

**மிலேச்சிதம்** - *இலக்கணவழுவான பேச்சு, சமஸ்கிரதமுமதற்குச் சேர்ந்த பாஷைகளுமல்லாத பிற பாஷை.*

**மிலைச்சல், மிலைச்சுதல், மிலைதல்** - *அணிதல்.*

**மிழலை** - *மழலை.*

**மிழற்றல்** - *சொல்லல், நிரம்பாமென் சொல், பேசலானெழுமொலி.*

**மிழற்றுதல்** - *மிழற்றல்.*

**மிழி** - *விழி.*

**மிழுங்கல், மிழுங்குதல்** - *விழுங்குதல்.*

**மிளகறையன்** - *ஓர் புடைவை.*

**மிளகாய்** - *மிளகுகாய்.*

**மிளகாய்ச்சக்களத்தி** - *ஓர் செடி.*

**மிளகாய்ப்புள்** - *ஓர் புள்.*

**மிளகு** - *ஓர் சரக்கு.*

**மிளகுகாய்** - *ஓர் கார்ப்புக்காய்.*

**மிளகுசம்பா** - *ஓர் நெல்.*

**மிளகுசாதம்** - *சித்திரான்னத்தொன்று.*

**மிளகுசாறு** - *மிளகுநீர்.*

**மிளகுதக்காளி** - *ஓர் தக்காளி.*

**மிளகுதிரி** - *ஓர் குருநோய்.*

**மிளகுநீர்** - *அதிரசம்.*

**மிளப்பு** - *இலவுங்கம்.*

**மிளிர்** - *ஒளி, பெருமை, மிளிரென் னேவல்.*

**மிளிர்தல்** - *ஒளிசெய்தல்.*

**மிளிர்வு** - *ஒளிவிடுதல்.*

**மிளிறு** - *கரடி.*

**மிறல்** - *பெருமை.*

**மிறாண்டி** - *மிருகாண்டி.*

**மிறிதாறிசிங்கி** - *மிருதாரசிங்கி பாஷாணம்.*

**மிறை** - *அச்சம், குற்றம், மிறை யென்னேவல், வருத்தம்.*

**மிறைக்கவி** - *சித்திரக்கவி.*

**மிறைத்தல்** - *துன்பப்படல், பாடுபடல்.*

**மினவுதல்** - *வினவுதல்.*

**மினுக்கம்** - *ஒளி.*

**மினுக்கல்** - *மினுக்குதல்.*

**மினுக்கு** - *ஒளி, மினுக்கென்னேவல்.*

**மினுக்குதல்** - *ஒளி தோன்றச்செய்தல்.*

**மினுக்குப்பசை** - *நறும்பச்சை, நெய் வாரிடும்பசையினொன்று.*

**மினுக்கெண்ணெய்** - *ஓரெண்ணெய்.*

**மினுங்குதல்** - *மிளிர்தல்.*

**மினுங்குபொழுது, மினுங்குவாரப் பொழுது** - *சாய்பொழுது.*

**மினுமினுத்தல்** - *ஒளிசெய்தல்.*

**மினுமினுப்பு** - *மிளிர்வு.*

**மின்** - *ஒளி, பெண், மகள், மின்னல், மின்னென்னேவல்.*

**மின்மினி** - *இருளில்மின்னும்புழு.*

**மின்னல்** - *ஒளிசெய்தல், மின்.*

**மின்னற்கொடி** - *மின்மாலை.*

**மின்னற்றளுக்கு** - *நாகமணல்.*

**மின்னிப்பயறு** - *ஓர் பயறு.*

**மின்னிபார்த்தல்** - *சோதிவீசியாடுதல்.*

**மின்னுதல்** - *பிரகாசித்தல், மின்னற் காலுதல்.*

**மின்னெறிதல்** - *மின்னுதல்.*

## மீ

**மீ** - *ஆகாயம் - உயர்ச்சி, ஓரெழுத்து, மேல்.*

**மீகண்** - *இடத்தின்மேல்.*

**மீசுரம்** - *அதிகம்.*

**மீகாமன், மீகான்** - *மாலுமி.*

**மீக்குவம்** - *மருதமரம்.*

**மீக்கூந்தல்** - *பெருகுதல்.*

**மீக்கூறல்** - *கொண்டாடல், புகழ்தல், மெய்ச்சல்.*

**மீக்கூறு** - *புகழ்.*

**மீக்கூற்று** - *புகழ்ச்சி.*

**மீக்கோள்** - *ஏறுதல் மேற்போர்வை.*

**மீசரம்** - *மேலானது, அதிகம்.*

**மீசாடுதல்** - *மீதேவிரைத்தல், மேலாலேகையாடுதல்.*

**மீசு** - *மிகுதி.*

**மீசுபொவி** - *முதலள்ளுந்தானியம்.*

**மீசுமீட்டல்** - *மேலாலேகவர்தல்.*

**மீசுரம்** - *மிகுஉக்கிரம்.*

**மீசுவைத்தல்** - *மேலேவைத்தல்.*

**மீசை** - *மேல்வாய்ப்புறமயிர்.*

**மீச்செலவு** - *மேற்போதல்.*

**மீட்குதல்** - *இரட்சிக்குதல், சோறு முதலிய வள்ளுதல் - திருப்புதல்.*

**மீட்சி** - *மீளுரல்.*

**மீட்சியின்விரி** - *தலைவிசேணகன்றமை செவிலித்தாய்க் குணர்த்தன் முதலாக நற்றாய் கேட்டவனுளங் கொளவேலனை வினாதலீறாயவையாம்.*

**மீட்டல்** - *அள்ளுதல், இரட்சித்தல், வீணைவாசித்தல்.*

**மீட்டிடுதல், மீட்டுதல்** - *சுண்டுதல், வீணைவாசித்தல்.*

**மீட்டும்** - *திரும்பவும்.*

**மீட்டெடுத்தல்** - *இரட்சித்தல், இரையெடுத்தல், மேலாலேயெடுத்தல்.*

**மீட்பர்** - *மீட்கிறவர்.*

**மீட்பு** - *மீட்குதல்.*

**மீதல்** - *மிகுதல்.*

**மீதி** - *மிச்சம்.*

**மீது** - *மேல்.*

**மீதுரை** - *பலகால்விளம்பல்.*

**மீதூர்தல்** - *நெருங்கல்.*

**மீந்தோல்** - *மீத்தோல்.*

**மீழாஞ்சை** - *பிரமாணத்தாலுண்மையறிதல், புறச்சமயமாறினொன்று.*

**மீமிசை** - *மேலுக்குமேல், மேல்.*

**மீமிசைச்சொல்** - *ஒருபொருட்பன்மொழியடுக்கு, (உம்) இடைநடு.*

**மீரம்** - *சமுத்திரம்.*

**மீராசு** - *பிரயோசனம்.*

**மீலனம்** - *கண்சிமிட்டு.*

**மீள, மீளவும்** - *திரும்பவும்.*

**மீளல்** - *திரிதரல், திரும்பல்.*

**மீளாக்கதி** - *மோக்கம்.*

**மீளி** - *அரசன், திண்ணியன், நமன், பாலைநிலத்தலைவன், பெருமை, மேன்மக்கள், வலி.*

**மீளிமை** - *வீரத்திறம்.*

**மீளுதல்** - *திரும்புதல், மீட்டெடுத்தல்.*

**மீள்வித்தல்** - *மீளச்செய்தல்.*

**மீறல், மீறுதல்** - *அடங்காமற் போதல், அதிகரித்தல்.*

**மீன்கேதனன், மீனக்கொடியோன்** - *பாண்டியன், மன்மதன்.*

**மீனங்கம்** - *மீனெலும்பு.*

**மீனஞ்சு** - *அக்கினிக்கட்டி, ஓர்பூடு.*

**மீனமாதம்** - *பங்குனிமாதம்.*

**மீனம்** - *ஓரிராசி, மீன்.*

**மீனம்பல்** - *ஓர் மருந்து.*

**மீனவன்** - *பாண்டியன்,*

**மீனாட்சி** - *குபேரன்மகள்.*

**மீனாய்** - *ஓர்மீன்.*

**மீனாலயம்** - *கடல்.*

**மீனெரிஞ்சான்** - *மீனஞ்சு.*

**மீனெறி** - *மீன் குத்திக்குருவி.*

**மீனேறு** - *மகரமீன்.*

**மீன்** - *சித்திரைநாள், நெய்தற்பறை, மகரமீன், மச்சம், விண்மீன்.*

**மீன்குத்தி** - *ஓர் புள்.*

**மீன்கூடு** - *மீன் பிடிக்குங்கருவியி னொன்று.*

**மீன்கொடியோன்** - *பாண்டியன், மன் மதன்.*

**மீன்கொத்தி** - *மீன் குத்திப்புள்.*

**மீன்கொல்லி, மீன் கொள்ளி** - *மீனஞ்சு.*

**மீன்சிதள்** - *மீன் செலு.*

**மீன்சிறகு** - *மீன் செட்டை.*

**மீன்சினை** - *மீன் கரு, மீன் கொழுப்பு.*

**மீன்சுவை** - *சித்திரைநாள்.*

**மீன்செகிள், மீன் செதில், மீன் செதிள், மீன் செலு** - *மீனின்புறமுள்.*

**மீன்தலைவாளம்** - *மீனெலும்பு.*

**மீன்பாடு** - *மீன்படுதல்.*

**மீன்பிடிகாரர்** - *வலைஞர்.*

**மீன்பிரால்** - *மீன்செகிள்.*

**மீன்பீலி** - *கெண்டைப்பீலி மீன்.*

**மீன்மலம்** - *மீனம்பல்.*

**மீன்முள்** - *மீனெலும்பு.*

**மீன்வேட்டை** - *மீன்பிடி.*

## மு

**முகஆட்டம்** - *முகமன்.*

**முகக்கடுப்பு** - *முகச்சினப்பு.*

**முகக்கட்டு** - *நாணமின்மை.*

**முகக்கட்டை** - *நாடி.*

**முகக்களை** - *முகச்செழிப்பு, முகச் சோபை.*

**முகக்கிளர்ச்சி** - *முகக்குளிர்த்தி.*

**முகக்குறாவுதல்** - *முகக்கோட்டரவு.*

**முகக்குறி** - *முகச்சாடை.*

**முகக்குறிப்பு** - *முகத்தோற்றம்.*

**முகக்கோட்டம்** - *முகப்பொலிவழிவு.*

**முகங்குப்புறல்** - *முகங்கீழ்ப்புறமாதல்.*

**முகங்குறாவுதல்** - *முகங்கோடல்.*

**முகங்கொடுத்தல்** - *இசைதல்.*

**முகங்கொள்ளுதல்** - *சிலந்தியுடைக்க முனைகொள்ளுதல்.*

**முகங்கோடுதல், முகங்கோணுதல்** - *முகங்குறாவுதல்.*

**முகசம்** - *பல்லு.*

**முகசிங்கி** - *ஓர் நோய்.*

**முகசீரி** - *நாக்கு.*

**முகசோதனம்** - *முகங்கழுவுதல்.*

**முகச்சரக்கு** - *பார்வைச்சரக்கு, முதற் சரக்கு.*

**முகச்சாடை, முகச்சாயல்** - *முகக்குறி.*

**முகச்சாய்ப்பு** - *முகப்பழக்கத்திற்காகச் சாருதல்.*

**முகச்சித்தி** - *மறுபேர்மோகிக் கத்தக்க முகமாயிருத்தல்.*

**முகச்செழிப்பு** - *தாராளம்.*

**முகஞ்சின்னம்போதல்** - *வேட்க மடைதல்.*

**முகஞ்சுண்டுதல்** - *முகங்கருகுதல்.*

**முகஞ்செய்தல்** - *சிலந்திகுமிழ்த்தல், பலித்தல்.*

**முகடி** - *மூதேவி.*

**முகடு** - *சுவர்ப்புறத்து நீண்டவுத் திரம், மலை வீடு முதலியவற்றி னுச்சி.*

**முகடோடி** - *முகட்டினீளம்.*

**முகதலை, முகத்லைப்பு** - *முதனெய்யுஞ் சீலைத்தலைப்பு.*

**முகதா** - *சமுகம்.*

**முகத்த** - *முகத்தின் கண்ணுடைய.*

**முகத்தலளவு** - *கொத்துமுதலிய வற்றாலளக்குதல்.*

**முகத்தலளவையாகுபெயர்** - *அளத்தற் குரிய பெயரையளக்குங் கருவிக்கு வழங்குவது, (உம்) நாழி.*

**முகத்தலைத்தல்** - *கூடிப்பேசல், சந்தித்தல், முகாமுகமாதல்.*

**முகத்தல்** - *மணத்தல், மொள்ளல், இஃது அளவைநான்கினொன்று.*

**முகத்தறிய** - *முகங்கீழாக.*

**முகத்தாட்சணியம்** - *முகக்காட்சி.*

**முகத்தாட்சிணை** - *கண்ணோட்டம்.*

**முகத்தாராளம்** - *முகப்பொலிவு.*

**முகத்தாலடித்தல்** - *முகவெறுப்பை முகக்குறியாற்காட்டல்.*

**முகத்தீடு** - *பிரேதலங்காரத்தொன்று, இஃது பிரேதத்தை மூடிப்புடை வை போடுதல்.*

**முகத்துதி** - *முகமன்வார்த்தை.*

**முகத்துரோணி** - *முகஞ்செல்லாதவன்.*

**முகத்துவாரம்** - *கடலுமாறும் பொருந்துமிடம், முகப்பு, வாயில்.*

**முகத்தெளிவு** - *முகத்தாராளம்.*

**முகநட்பு** - *முகத்திற்குமுன் காட்டு நட்பு.*

**முகநாடி** - *முகரூபு.*

**முகநிவாசினி** - *இலட்சிமி.*

**முகந்தகம்** - *ஈரவெண்காயம்.*

**முகபங்கம்** - *முகமாறு.*

**முகபடாம்** - *யானையின் முகப் போர்வை.*

**முகபாடம்** - *வாய்ப்பாடம்.*

**முகபூஷணம்** - *வெற்றிலை.*

**முகபூரணம்** - *தாராளமுகம், வாய் நிரம்பியது.*

**முகப்பணி** - *முகவேலை.*

**முகப்பரிட்சை,முகப்பழக்கம்**- *அறிமுகம்.*

**முகப்பரு** - *முகக்குரு.*

**முகப்பிரியம்** - *முகவாட்டம்.*

**முகப்பு** - *தலைப்பு, முகத்தல், முகனை, முட்டு, முன்.*

**முகப்பூச்சு** - *முகமன், முகமாற்று வேஷம்.*

**முகப்பொருத்தம்** - *முகராசி.*

**முகப்போதரவு** - *முகப்பொலிவு.*

**முகமண்டலம்** - *முகவட்டம்.*

**முகமலர்ச்சி** - *சந்தோஷம்.*

**முகமலர்தல்** - *முகந்தழைத்தல்.*

**முகமறிதல்** - *முகப்பழக்கமாதல்.*

**முகமறியாமை** - *அன்னியம், தூரம், பிறத்தி.*

**முகமறுத்தல்** - *கண்டித்தல், முகத் தாட்சணையின்மை.*

**முகமன்** - *உபசாரம்.*

**முகமன்சொல், முகமன்வார்த்தை** - *உபசாரப்பேச்சு.*

**முகமாயம்** - *முகமயக்கு.*

**முகமாட்டம்** - *முகமன்.*

**முகமாற்று** - *ஓர்மயக்குவித்தை.*

**முகமுகமாய்** - *முகத்திற்குமுன்னாய்.*

**முகமுகெனல்** - *ஈரடுக்கொலிக் குறிப்பு.*

**முகமுறிதல்** - *வெறுத்தல்.*

**முகமுறித்தல்** - *கோபமூட்டுதல், வெறுப்பித்தல்.*

**முகமுறிவு** - *வெறுப்பு.*

**முகமுன்னிலை** - *முகதா.*

**முகமூடி** - *பிறக்கையில் முகத்தை மூடியிருக்கும் பை.*

**முகமூடிவத்திரம்** - *முக்காட்டங்கி.*

**முகமொட்டுதல்** - *முகங்கொடுத்தல்.*

**முகம்** - *இடம், சந்தி, தொனி, பட்சிச் சொண்டு, பருவின்முகப்பு, புறம்,*

*முகப்பு, முந்தல், வதனம், வாய், வாயில், வேதம்.*

**முகம்பார்த்தல்** - *கணித்தல், முகமன் செய்தல்.*

**முகம்வாடல்** - *முகங்குறாவுதல்.*

**முகரதம்** - *புணர்ச்சிவகையினொன்று.*

**முகரம்** - *காகம், சங்கு.*

**முகராசி** - *முகவிணக்கம்.*

**முகரி** - *முகனை, மூக்கினடி, மூரி.*

**முகரிகுளித்தல்** - *அள்ளுகொள்ளை.*

**முகரிமை** - *பேரறிவு.*

**முகருதல்** - *முகத்தல்.*

**முகரூபம், முகரூபு** - *முகலட்சணம்.*

**முகரெனல்** - *அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு.*

**முகரை** - *மூக்கினடி.*

**முகலதேசம்** - *ஓர் தேயம்.*

**முகவங்கு** - *முகத்திற்படருங் கருந் தேமல்.*

**முகவசிகரம்** - *பட்சமானபார்வை.*

**முகவசியம், முகவசீகரம்** - *ஓர் வித்தை, முகஞ்செல்லுதல்.*

**முகவணை** - *முகவுரை.*

**முகவணைக்கல்** - *உத்திரப்படிக்கல்.*

**முகவாசம்** - *முகப்பழக்கம்.*

**முகவாசல்** - *தலைவாசல்.*

**முகவாசை** - *முகப்பிரியம்.*

**முகவாட்டம்** - *முகஆட்டம், முகக் கோட்டம்.*

**முகவாதம்** - *ஓர் நோய்.*

**முகவங்கு** - *முகத்திற் படருங்கருந் தேமல்.*

**முகவிச்சகம்** - *முகமன்.*

**முகவிச்சை** - *முகமன்.*

**முகவிலாசம்** - *முகச்சிறப்பு.*

**முகவுண்ணிபிடுங்குதல்** - *முகமன் காட்டுதல்.*

**முகவுரை** - *பாயிரம், மேல்வாசகம்.*

**முகவெட்டு** - *முகத்தினந்தம்.*

**முகவெள்ளைப்ருந்து** - *ஓர் பருந்து.*

**முகவேலை** - *முகப்பணி.*

**முகவை** - *இராமனாதபுரம், கண்கயில்.*

**முகனை** - *முதலீடு, முதல், முதன்மை, முனை.*

**முகனை முடிவு** - *மூலாக்கிரம்.*

**முகன்** - *முகம்.*

**முகாக்கினி** - *ஓமாக்கினி, ஓர் பைசாசம், கட்டையில்வைத்த பிரேத்திற்கு வாயிலிடுநெருப்பு, காட்க்கினி.*

**முகாந்தரம், முகாந்திரம்** - *ஏது, நியாயம்.*

**முகாமுகம்** - *சமுகம்.*

**முகாமை** - *முதன்மை.*

**முகாரி** - *ஓரிராகம், முதன்மைக்காரன்.*

**முகிதல்** - *முற்றுதல்.*

**முகித்தல்** - *முற்றச்செய்தல்.*

**முகிரம்** - *அன்பு, காமம்.*

**முகிரன்** - *காமன், மூடன்.*

**முகில்** - *மேகம்.*

**முகிவு** - *அந்தம், கடை.*

**முகிவுகாலம்** - *கடைசிகாலம், மரண காலம்.*

**முகிழம்** - *மலரும்பருவத்தரும்பு.*

**முகிழிதம்** - *அரும்பு.*

**முகிழித்தல்** - *குவிதல்.*

**முகிழ்** - *அரும்பு, காம்படி, முகிழென் னேவல்.*

**முகிழ்த்தல்** - *அரும்புதல், குவிதல்.*

**முகிழ்ப்பு** - *குவிவு.*

**முகிழ்ப்புறம்** - *முகிழ்வளம்.*

**முகிற்குன்றம்** - *வக்கிராந்தபாஷாணம்.*

**முகினி** - *புளியமரம்.*

**முகு** - *இட்டம்.*

**முகுடம்** - *முடி.*

**முகுந்தநிதி** - *குபேரனவநிதிகளி னொன்று.*

**முகுந்தம்** - இரசம், ஓரிரத்தினம், குபேரனிதிகளினொன்று.

**முகுந்தன்** - விட்டுணு.

**முகுரம்** - ஓர் மல்லிகை, கண்ணாடி, தண்டசக்கிரத்தின்பிடி, தளிர், பளிங்கு.

**முகுர்த்தபலன்** - முகுர்த்தநயம்.

**முகுர்த்தமெடுத்தல்** - முகுர்த்தங் குறித்தல்.

**முகுர்த்தம்** - முகூர்த்தம்.

**முகுர்த்தவிசேஷம்** - முகூர்த்தபலன்.

**முகுலம்** - ஆற்றுமா, சரீரம், மலரிதழ்.

**முகூர்த்தம்** - இரண்டுநாழிகை கொண்டநேரம்.

**முகேரன்** - மூடன்.

**முகை** - கூட்டம், மலரும்பருவத் தரும்பு, மிடா, முகையென்னேவல்.

**முகைத்தல்** - அரும்புதல்.

**முக்கணவன்** - ஓர் கொடி.

**முக்கண்ணன்** - சிவன், விநாயகன், வீரபத்திரன்.

**முக்கண்ணி** - காளி, பார்வதி.

**முக்கம்** - பேராலவட்டம், முக்காரம்.

**முக்கம்பி** - மூன்றுகம்பிக்குறி.

**முக்கரணம்** - மனம்வாக்குகாயம்.

**முக்கல்** - உண்டல், பேசலானெழு மொலி, முக்குதல்.

**முக்கவீனம்** - மக்கனம்.

**முக்கறட்டை** - ஓர் செடி.

**முக்கனி** - முப்பழம், அஃது கதலி பலா, மா, இவற்றின்கனி.

**முக்காடு** - முட்டாக்கு.

**முக்காட்டங்கி** - முக்காடு.

**முக்காணி** - சிற்றிலக்கத்தொன்று.

**முக்காணியர்** - பிராமணரிலோர் வகை.

**முக்காரம்** - எருதுபொர்வளைக்குங் குறி.

**முக்காலம்** - திறிகாலம், அஃது இறப்பு, எதிர், நிகழ்வு.

**முக்காலி** - கலம்வைக்கும்மரத்தட்டு.

**முக்கால்** - மூன்றுகால், மூன்றுமுறை.

**முக்காழி** - மூன்றுகொட்டையுள்ளது.

**முக்கானோக்கு** - கிரகநோக்கி னொன்று.

**முஸ்கான்** - துட்டன்.

**முக்கியம்** - பிரதானம், மேன்மை.

**முக்கியர், முக்குகர்** - ஓர் சாதியார்.

**முக்குடுமி** - சூலம்.

**முக்குடை** - சந்திரவட்டம், சகல பாசனம், நித்தியவினோதம், அவை நிரையே முத்துக்குடை, காரக்குடை, மணிக்குடை.

**முக்குடைச்செல்வன்** - அருகன்.

**முக்குணம்** - மூன்றுகுணம், அவை இராசதம், சாத்துவிதம், தாமதம்.

**முக்குதல்** - முட்டுப்பட்டனுங்குதல், விழுங்கல்.

**முக்குலம்** - மூன்றுகுலம், அவை அக்கினிவமிசம்-சந்திரவமிசம், சூரியவமிசம்.

**முக்குளம்** - கங்கை, சரஸ்பதி, யமுனை யென்னும் நதிகளைப் பொருந்தி யிருக்குமோர்கிராமம், பூராடம்.

**முக்குளி** - கோழிமுளையான்.

**முக்குளித்தல்** - அமிழ்ந்துதல்.

**முக்குளிப்பான்** - ஓர் நோய், ஓர் பட்சி.

**முக்குற்றங்கடிந்தோன்** - கடவுள், புத்தன்.

**முக்குற்றம்** - மூன்றுகுற்றம், அவை காமம், வெகுளி, மயக்கம்.

**முக்கூடல்** - ஓர் மலை.

**முக்கூடற்பள்ளு** - ஓர் பிரபந்தம்.

**முக்கூட்டு** - பரணி.

**முக்கூட்டெண்ணெய்** - ஓர் மருத் தெண்ணெய்.

**முக்கோணசாத்திரம்** - *அளவறியுஞ் சாத்திரத்தொன்று.*

**முக்கோணம்** - *மூன்றுமூலை, மூன்று மூலைவடிவம்.*

**முக்கோல்** - *திரிதண்டு, திருவோணம்.*

**முக்கோற்பகவர்** - *திரிதண்டசநி யாசிகள்.*

**முசகம்** - *எலி.*

**முசரு, முசர்** - *தயிர்.*

**முசலம்** - *இருப்புலக்கை, உலக்கை, தண்டம்.*

**முசலி** - *உடும்பு, ஓந்தி, சந்திரன், தாழை, பலபத்திரன், பல்லி, முதலை.*

**முசலிகாதனம்** - *இருகாலுமிருகை யுஞ்சமமணமாக மடக்கிமார்பு நிலத்திலேதோயக் கிடப்பது.*

**முசலிகை** - *உடும்பு.*

**முசலை** - *முயலை.*

**முசல்** - *முயல்.*

**முசல்வலி** - *ஓர் வலிப்பு.*

**முசற்காது** - *ஓர் பூண்டு.*

**முசற்கொம்மட்டி** - *ஓர் கொம்மட்டி.*

**முசிகுதல்** - *முசித்தல்.*

**முசித்தல்** - *இளைத்தல், மெலிதல்.*

**முசிப்பாறல், முசிப்பாறுதல்** - *இளைப் பாறுதல்.*

**முசிப்பாற்றல்** - *இளைப்பாற்றல்.*

**முசிப்பாற்றி** - *இளைப்பாற்றி.*

**முசிப்பு** - *இடை, மெலிவு, வெளிப்பு.*

**முசிரம்** - *வள்ளற்றன்மை.*

**முசிலாப்பு** - *புடைவையைச்சுருக்கிக் கட்டுவது.*

**முசிறு** - *முயிறு.*

**முசு** - *ஓர்சாதிக்குரங்கு.*

**முசுகுந்தன்** - *அறுவகைச்சுக்கிர வத்திகளிலொருவன்.*

**முசுக்கட்டைச்செடி** - *கம்பளிக் கொண்டான்.*

**முசுக்கட்டைப்பூச்சி** - *ஓர்பூச்சி.*

**முசுடர்** - *கீழ்மக்கள்.*

**முசுடி** - *நொடி.*

**முசுடு** - *பொல்லாங்கு, முயிறு.*

**முசுட்டை** - *ஓர் கொடி.*

**முசுட்டைப்பெண்** - *ஓர் புழு.*

**முசுண்டர்** - *கீழ்மக்கள்.*

**முசுண்டி** - *ஓர் வாச்சியம், படைக்கலம்.*

**முசுப்பதி** - *பாசறை.*

**முசுப்பு** - *எருத்தினேரி.*

**முசுமுசுக்கை** - *ஓர் கொடி.*

**முசுமுசுத்தல்** - *நீர் முதலிய கொதித்த தற்குறிப்பு.*

**முசுமுசெனல்** - *தினவுக்குறி.*

**முசும்புதல்** - *மிணுமிணுத்தல், முறு முறுத்தல்.*

**முசுறுப்புல்** - *அளத்துப்புல்.*

**முச்சகம்** - *மூன்றுலோகம்.*

**முச்சங்கம்** - *முதலிடைகடையாய் மதுரையில் வழங்கிய சங்கம்.*

**முச்சதுரம்** - *முக்கோணம்.*

**முச்சட்டை** - *அழகு.*

**முச்சத்தி** - *ஞானக்கிரியா சத்திகள், அவை சிருட்டி, திதி, சங்காரம்.*

**முச்சந்தி** - *திரிகாலசந்தி, அஃது, காலை, உச்சி, மாலை, மூன் றொன்றாய்ப் பொருந்துமிடம், முத்தெருக்கூடுமிடம்.*

**முச்சி** - *உச்சி, உச்சிக்கொண்டை, சிறுசுளகு, மயிர்முடி.*

**முச்சியர்** - *உறைகாரர், மரவினை யாளர், வன்னக்காரர்.*

**முச்சிலிக்கை** - *உடன்படிக்கை யுறுதி.*

**முச்சில்** - *சிறுமுறம்.*

**முச்சினியக்கேடு, முச்சினியம்** - *சோம்பு.*

**முச்சீரடி** - *சிந்தடி.*

**முச்சுடர்** - *மூன்றுசுடர், அவை அக்கினி, ஆதித்தன், சந்திரன்.*

**முச்சுழி** - *ணகரம்.*

**முச்சூடும்** - *முழுதும்.*

**முச்செயல்** - *மூன்றுசெய்கை, அஃது படைத்தல், காத்தல், அழித்தல்.*

**முச்சை** - *மூன்றொன்றாய்முடிவது.*

**முச்சொல்லலங்காரம்** - *ஓரலங்காரம், அஃது ஒரு மொழிமுப்பயன் விளைவிப்பது.*

**முஞல்** - *கொசுகு.*

**முஞ்சகேசன், முஞ்சகேசி** - *திருமால்.*

**முஞ்சபந்தனம்** - *பூணூலணிதல்.*

**முஞ்சம்** - *அம்பு, பூணூற்பூண்டு.*

**முஞ்சரம்** - *தாமரைக்கிழங்கு.*

**முஞ்சல், முஞ்சுதல்** - *சாதல், முற்றல்.*

**முஞ்சி** - *உபவீதத்திற்கட்டும்புல்.*

**முஷகரம்** - *முரட்டாட்டம்.*

**முஷகரன்** - *முரண்டன்.*

**முடக்கம்** - *முடங்குதல்.*

**முடக்கல்** - *தடுத்தல், மடக்குதல்.*

**முடக்கு** - *மடக்கு, முடக்கென்னேவல், விரலணியினொன்று.*

**முடக்குக்குடர்** - *மடிப்புக்குடர்.*

**முடக்குச்சரக்கு** - *அவியற்சரக்கு, கிடையன்சரக்கு.*

**முடக்குற்றான்** - *ஓர் கொடி.*

**முடங்கல்** - *தாழை, நோய், மடங்கல், மூங்கில், வரைந்தனுப்புமோலை.*

**முடங்கி** - *கிடைப்பாடானவன்.*

**முடங்கு** - *நோய், முடங்கென்னேவல்.*

**முடங்குதல்** - *மடங்குதல்.*

**முடங்குளை** - *குதிரையின் பிடரு ரோமம், சிங்கம்.*

**முடத்தி** - *முடப்பெண், வளை வுள்ளது.*

**முடமுடெனல்** - *ஈரடுக்கொலிக்குறிப்பு.*

**முடம்** - *நொண்டி, அஃது உறுப்புக் குறையெட்டினொன்று.*

**முடலை** - *உண்டை, கழலை, திரட்சி, நாற்றம், பெருங்குறடு, பெருமை, முருடு, வலி.*

**முடவன்** - *அருணன், சனி, நொண்டி.*

**முடவாட்டுக்கல்** - *ஆட்டுக்கல்.*

**முடவுதல்** - *நொண்டுதல்.*

**முடி** - *ஐம்பாலினொன்று, அஃது உச்சியின் முடித்தல், கிரீடம், அஃது இராசசின்னத்தொன்று, குடுமி, தலை, தேங்காய் முடி, நாற்று, முடிமயிர், முடியென் னேவல், மொக்கு.*

**முடிகாணிக்கை** - *நேர்ந்தசடை கழித்தல்.*

**முடிக்கோரை** - *ஓர் புல்.*

**முடிசூட்டு** - *கிரீடதாரணை.*

**முடிசூடுதல், முடிசூட்டுதல்** - *முடி தரித்தல்.*

**முடிச்சவிழ்க்கி, முடிச்சுமாறி** - *திருடன், புரட்டன்.*

**முடிச்சு** - *கழுத்தின்முடிச்சு, தந்திரம், முடித்தல், முடியப்பட்டது, மூட்டு.*

**முடிதரித்தல்** - *முடிசூட்டுதல்.*

**முடிதல்** - *கட்டுதல், கெடுதல், சாதல், தொடுத்தல், முற்றுதல்.*

**முடிதும்பை** - *ஓர் பூடு.*

**முடித்தல்** - *அழித்தல், கெடுதல், சூடுதல், முற்றுவித்தல்.*

**முடித்துக்காட்டல்** - *மேலோர் முடித்த வாறு முடித்துக்காட்டல், அஃது தந்திரயுத்திகளினொன்று.*

**முடிநாதம்** - *இந்திரகோபம்.*

**முடிந்ததுமுடித்தல்** - *ஓர் யுத்தி அஃது சிறப்புவாய் பாடான் முடிந்ததைப் பொதுவாய் பாடான் முடித்தல்.*

**முடிபொறுத்தராசா** - *கிரீடாதிபத்திய வரசன்.*

**முடிபொறுத்தவன்** - *முடிதரித்தராசன்.*

**முடிப்பீரி, முடிப்புரி** - *இறை முதலிய சேர்க்கிறவன்.*

**முடிப்பு** - *தீர்மானம், முடிச்சு, முற்றான தொகை.*

**முடிப்புக்கட்டுதல்** - *தீர்த்தல்.*

**முடிப்புச்செலுத்தல்** - *இறைமுதலிய செலுத்தல்.*

**முடிப்புச்சொல்லுதல்** - *தீர்ப்புச் சொல்லுதல்.*

**முடிமயிர்** - *தொற்றுவைக்குமயிர்.*

**முடிமாலை** - *முடியின்மேன்மாலை.*

**முடியல்** - *எல்லாம்.*

**முடியாமை** - *கட்டுப்படாமை, முற்றாமை.*

**முடியிறக்குதல்** - *கிரீடாபமானஞ் செய்தல்.*

**முடியுண்குதல்** - *கட்டுப்படுதல்.*

**முடியுறுப்பு** - *முடியினங்கம்.*

**முடிவறிதல்** - *துறைபோதல்.*

**முடிவிடங்கூறல்** - *ஓர் யுத்தி, அஃது தான்சொல்லுமிலக்கணத்திற்கு இலக்கியந் தோன்றுமிடத்தைச் சொல்லுதல்.*

**முடிவிடம்** - *முடியுமிடம்.*

**முடிவில்லாமை** - *அனந்தம், நித்தியம்.*

**முடிவு** - *சடை, சாவு.*

**முடிவுரை** - *கடைக்காப்பு.*

**முடுகடி** - *கிட்டுமானம்.*

**முடுகல்** - *எதிர்த்தல், கிட்டல், சீக்கிரம், மொய்த்தல், வலி.*

**முடுகியல்** - *வண்ணம்.*

**முடுகு** - *அராகம், கடமைப்பெண், முடுகென்னேவல்.*

**முடுக்கர்** - *மலைக்குகை.*

**முடுக்கல், முடுக்குதல்** - *அவசரப் படுத்தல், ஊன்றுதல், ஒட்டல், நெருக்கல், மொய்த்தல்.*

**முடுக்கன்** - *பலமுள்ளவன்.*

**முடுக்கு** - *ஒடுக்கம், கோணத்தெரு, கோண், நெருக்குதல், மூலை.*

**முடுக்குவழி** - *ஒடுக்கவழி.*

**முடுங்குதல்** - *நெருங்குதல்.*

**முடுவல்** - *செந்நாய், நாய், பெண்ணாய்.*

**முடுவற்படையோன்** - *வயிரவன்.*

**முடை** - *ஓலைக்குடை, தீயவாசனை, நாற்றம், புலால் முடையென்னேவல்.*

**முடைச்சேரி** - *முல்லைநிலத்தூர்.*

**முடைஞ்சல்** - *மிடைதல்.*

**முடைதல்** - *இளைத்தல், நிணத்தல், பின்னுதல்.*

**முடைநாற்றம்** - *நெய்ப்புமணம், புலான் மணம்.*

**முட்கடு** - *ஓர் கடுமரம்.*

**முட்காடு** - *முள்ளுக்காடு.*

**முட்காய்வேளை** - *ஓர் செடி.*

**முட்கிளுவை** - *ஓர் மரம்.*

**முட்கீரை** - *ஓர் செடி.*

**முட்கொன்றை** - *ஓர் கொன்றை.*

**முட்கோல்** - *இருப்புமுள்.*

**முட்சங்கு** - *ஓராயுதம், ஓர் சங்கு.*

**முட்செடி** - *முள்ளுப்பற்றை.*

**முட்செவ்வந்தி** - *ஓர் செவ்வந்தி.*

**முட்ட** - *ஒட்ட, முடிய.*

**முட்டக்கலிப்பு** - *தராமலை.*

**முட்டடி** - *கிட்டுமானம்.*

**முட்டடைப்பன்** - *ஓர் நோய்.*

**முட்டத்தனம்** - *முறட்டுத்தனம், மூடத்தனம், மூர்க்கத்தனம்.*

**முட்டமுடிய** - *ஆகநிறைவேறுமளவு.*

**முட்டம்** - *ஓரூர், களவு.*

**முட்டரிசி** - *முற்றஅவியாதசோறு.*

**முட்டல்** - *உதைத்தல், கிட்டல்.*

**முட்டற்றது** - *தாபரமற்றது.*

**முட்டன்** - *கோபி, முட்டாள்.*

**முட்டா** - *ஓர் பணிகாரம், சம்பாரம்.*

**முட்டாக்கு** - *போர்வை, முக்காடு.*

**முட்டாட்டம்** - *முட்டத்தனம், முட்டுத் தனம்.*

**முட்டாள்** -பருவேலைகாரன், முட்டன், மூடன்.

**முட்டி** - ஆயுதப்பிடி, எட்டிமரம், ஓர் செடி, கலசம், கலைஞான மறு பத்தினான்கினொன்று, கைப் பொத்து, சம்மட்டி, பிச்சை.

**முட்டிகன்** - தட்டான்.

**முட்டிகாந்தகன்** - பலதேவன்.

**முட்டிகை** - இலைக்குறடு, கைக்குத்து, சாவணம், மத்திகை.

**முட்டிக்கத்தரி** - ஓர் வழுதலை.

**முட்டிக்கால்** - ஒன்றோடொன்று தட்டப்படுங்கால்.

**முட்டிச்சுரை** - ஓர் சுரை.

**முட்டிபாதம்** - கைப்போர்.

**முட்டியுத்தம்** - கைக்குத்துப்போர்.

**முட்டு** - அடைப்பு, அரண்வளைதல், இலம்பாடு, கடிவாளம், குறைவு, தடை, தளபாடம், நெருக்கம், பூப்பம், முட்டுதல், முட்டென் னேவல், முழந்தாள், மேடு, வருத்தம்.

**முட்டுக்கட்டுதல்** - பாத்திகட்டுதல், மிண்டுகொடுத்தல்.

**முட்டுக்கட்டை** - எதிர்க்கட்டை, மிண்டுதடி.

**முட்டுக்களிக்கண்** - பணிகளினோ ருறுப்பு.

**முட்டுக்காய்** - இளந்தேங்காய்.

**முட்டுக்கால்** - உடைகால், முழந்தாள்.

**முட்டுக்கொடுத்தல்** - மிண்டுகொடுத் தல்.

**முட்டுதல்** - அணைதல், எதிர்த்தல், ஒற்றுதல், குத்துதல், குறைதல், தடுத்தல், தீண்டல், நிறைவுறல், நெருக்குதல்.

**முட்டுத்தொய்வு** - ஓர் நோய்.

**முட்டுப்பாடு** - இலம்பாடு, திக்குமுக் கடைத்தல், தீமை, நெருக்கிடை, வருத்தம்.

**முட்டுயுத்தம்** - நெருங்கினபோர்.

**முட்டுற்றவன்** - மூடன்.

**முட்டை** - அண்டம், ஓர் நோய், தவிடு.

**முட்டைக்கண்** - பெந்துக்கண்.

**முட்டைக்கண்ணீர்** - சொட்டுச் சொட்டாய் விழுங்கண்ணீர்.

**முட்டைப்பாசி** - ஓர் நீர்ப்பூடு.

**முட்பன்றி** - முள்ளம்பன்றி.

**முட்பாஷாணம்** - பன்றிமுள்.

**முட்பூல்** - ஓர் செடி.

**முணங்கல், முணங்குதல்** - அடக்குதல்.

**முணங்கு** - அடக்கம்.

**முணுமுணெனல்** - ஒலிக்குறிப்பு.

**முண்டகம்** - கடல், கருக்குவாளிமரம், கள், தலை, தாமரை, தாழை, நெற்றி, முட்செடி, முள்ளிச்செடி.

**முண்டகன், முண்டகாசனன்** - பிரமன்.

**முண்டகாசனி, முண்டகாசனை** - இலக்குமி.

**முண்டபலம்** - தேங்காய்.

**முண்டம்** - உடற்குறை, உபநிடதமுப் பத்திரண்டினொன்று, குற்றி, தலை, திரட்சி, நெற்றி, மொட் டைத்தலை.

**முண்டனம்** - முண்டித்தல்.

**முண்டன்** - இராகு, நாவிதன், மொட் டந்தலையன்.

**முண்டாகாரம்** - அவயவப்பகிர்வற்றது.

**முண்டாசு** - தலைப்பா.

**முண்டாயி** - தீம்பண்டம்.

**முண்டி** - நாவிதன், முண்டியென் னேவல், மொட்டைத் தலையன்.

**முண்டிதம்** - மொட்டை.

**முண்டித்தல்** - மழித்தல்.

**முண்டிரம்** - உபநிடதமுப்பத்திரண்டி னொன்று.

**முண்டு** - உள்வேட்டி, முட்டத்தனம், முரண்டுத்தனம்.

**முண்டை** - *மொட்டை, விதவை.*

**முண்டைக்கண்** - *பருத்தகண்.*

**முண்ணாயகி** - *ஓர் செடி.*

**முண்மா** - *முட்பன்றி.*

**முண்முருக்கு** - *ஓர் முருக்கு.*

**முதம்** - *உவகை.*

**முதலது** - *முதலானது.*

**முதலல்** - *துவங்குதல், முதலாதல்.*

**முதலனுமானம்** - *முதற்காரணத்தைக் கொண்டனுமானித்தல்.*

**முதலாளி** - *முதன்மைக்காரன்.*

**முதலி** - *முதலவன்.*

**முதலிச்சாதி** - *ஓர் சாதி.*

**முதலிலனாதல்** - *கடவுளறுகுணத் தொன்று, அஃது தானொன்றிலுந் தோற்றாமை.*

**முதலுதல்** - *துவங்குதல், முதலாதல்.*

**முதலெழுஞ்சனி** - *மகம்.*

**முதலெழுத்து** - *தனியெழுத்து, அஃது உயிருமெய்யுமாகிய முப்பதெழுத்து.*

**முதலை** - *செங்கிடை - வன்மீன்.*

**முதலைக்கோரை** - *ஓர் புல்.*

**முதலைப்பூண்டு** - *ஓர் பூண்டு.*

**முதலோன்** - *கடவுள்.*

**முதல்** - *ஆதி, ஏழனுருபு, (உம்) சுரன் முதல்வந்த வுரன்மாய மாலை, கடவுள், முதலென்னேவல், வட்டிக்குக் கொடுக்கும் பணம், வியாபாரஞ் செய்யும் பணம்.*

**முதல்முதல்** - *துவக்கம்.*

**முதல்வடி, முதல்வடிப்பு** - *முதற்சாரத்தயிலவடிப்பு.*

**முதல்வர்** - *அதிபதிகள், வானோர்.*

**முதல்வள்ளல்** - *குறிப்பறிந்துகொடுப்போர்.*

**முதல்வன்** - *அரசன், அரன், அருகன், கடவுள், முதலாளி, முன்னவன்.*

**முதல்வி** - *தலைவி, தேவி.*

**முதல்வேதம்** - *இருக்குவேதம்.*

**முதளை** - *ஓர் நீர்ப்பூண்டு, முதலை.*

**முதற்கண்** - *முதலிடம்.*

**முதற்காரணகாரியம்** - *அதிகாரணகாரியம்.*

**முதற்காரணம்** - *காரணத்திற்காதியாயிருப்பது.*

**முதற்பட்சம்** - *முதற்றரம்.*

**முதற்பலபாகம்** - *விளைவின்முதற்கண்வருமானம்.*

**முதற்பலம், முதற்பலன்** - *முதற்பேறு.*

**முதற்பா** - *வெண்பா.*

**முதற்பெயர்** - *முதனிலைப்பெயர்.*

**முதற்பேறு** - *தலைப்பிள்ளை, முதற்பலன்.*

**முதனாள்** - *அசுபதி, முந்தினநாள்.*

**முதனிலைத்தீபகம்** - *செய்யுளலங்காரத்தினொன்று, அஃது தீபகச்சொல் முதனிற்பது.*

**முதனிலைத்தொழிற்பெயர்** - *பகுதிப்பொருண்மாத்திரமாய் நிற்கும் வினைச் சொல், (உம்) வருதல்.*

**முதனிலைவிளக்கு** - *தீபகாலங்காரத்தினொன்று.*

**முதனிறம்** - *மாங்கிஷச்சிலை.*

**முதனூல்** - *முதல்வன் வாக்கு.*

**முதன்மடக்கு** - *மடக்கலங்காரத்துளொன்று, அஃது அடிகளுளொன்றேனும் பலவேனுமடி முதலில் மடக்கி வருவது.*

**முதன்மறிநிலை** - *ஓரலங்காரம், அஃது சினைப்பெயர்முதற்கு முதற்பெயர் சினைக்குஞ் செல்லவுரைத்தல்.*

**முதன்மாணாக்கர்** - *முதற்பட்சமான சீடர்.*

**முதன்மை** - *அதிகாரம், முன்னீடு.*

**முதாரி, முதாரு** - *நிறைகன்றுத்தாய்ச்சி, முதுகன்று.*

**முதாருகன்று** - ஊட்டுமறந்தகன்று.

**முதிதம்** - உவகை.

**முதியகொல்லை** - பழங்கொல்லை.

**முதியன்** - முதியான், மூத்தோன்.

**முதியர், முதியோர்** - மூத்தோர்.

**முதியான்** - ஓர் பட்சி, முதியது, முது கன்று.

**முதிரம்** - மேகம்.

**முதிரன்** - தூர்த்தன்.

**முதிரிமை** - முதுமை.

**முதிருதல்** - முதிர்தல்.

**முதிரை** - அவரை, காராமணி, துவரை முதலியன், ஓர் மரம்.

**முதிர்காற்று** - கடுங்காற்று.

**முதிர்ச்சி** - முதிர்வு, மேட்டிமை.

**முதிர்தல்** - காய்தல்,தேறுதல், பழுத்தல், வயசாதல், வறத்தல்.

**முதிர்பிறை** - சதுர்த்திப்பிறை முதலாக வருநிலவு.

**முதிர்பு** - முதிர்வு.

**முதிர்ப்பு** - கலக்கம், முதிர்ச்சி.

**முதிர்பு** - மூப்பு.

**முதிர்வேனிலுரிமை** - கோடைக் காற்று வீசலுங்கானறோன்றலுங் காடை வலியான் வானம்பாடி காகங்கவுதாரியிவை மகிழ்தலும் மல்லிகை புளி பாதிரியிவை மலர் தலும் பாலைகாஞ்சிரம் நாவல் இலுப்பையிவை காய்த் தலுமாம்.

**முதிர்வேனில்** -ஆனிஆடியின் பருவம்.

**முதீ** - சந்திரகிரணம்.

**முது** - பழமை.

**முதுகாஞ்சி** - ஓர்பிரபந்தம், அஃது முதுக்குறைந்தோர் முதுக்குறை யாமாக்கட்குக்கூறுவது.

**முதுகாடு** - சுடுகாடு.

**முதுகால்** - முந்தின்வருடத்தின் வெற் றிலைக்கொழுந்து.

**முதுகு** - உரப்பு, பின்புறம்.

**முதுகுகாட்டுதல்** - புறங்காட்டுதல்.

**முதுகுகொடுத்தல்** - துணைச் செய்தல், புறங்கொடுத்தல்.

**முதுகுதாங்கி** - சார்மனை.

**முதுக்குறைதல், முதுக்குறைவு** - பேரறிவு.

**முதுசொல்** - பழஞ்சொல், மூதுரை.

**முதுநிலம்** - களர்,பாலைநிலம், பெரும் பாழ்நிலம்.

**முதுமகன்** - சனி.

**முதுமை** - பழமை, பழமொழி, மூப்பு.

**முதுமொழி** - பழஞ்சொல்.

**முதுவர்** - புலவர், மந்திரியர், மூது ணர்ந்தோர், மூத்தோர்.

**முதுவு** - பருக்கன்.

**முதை** - காடுவெட்டிச் சுட்ட கொல்லை, சந்தோஷம்.

**முதைப்புனம்** - பழங்கொல்லை.

**முதையல்** - முதுகாடு.

**முத்தகச்செய்யுள்** - தனித்தனியே முற்றுப்பெறுஞ் செய்யுள்.

**முத்தகம்** - எறியாயுதம், கருக்குவாளி மரம், தனித்தனியே முற்றுப் பெறுஞ்செய்யுள்.

**முத்தக்காசு** - கோரைக்கிழங்கு, இஃது துவர்பத்தினொன்று, அட்ட மூலத்துமொன்று.

**முத்தஞானவுரூபி** -கடவுள்.

**முத்தமிழுரியோன்** - அகத்தியன், வயிரவன்.

**முத்தமிழ்** - இயலிசைநாடகமென்னும் மூவகைத்தமிழ்.

**முத்தம்** - இட்டம், உதடு, கொஞ்சு தல், பிரியம், மருதநிலம், முத்து, விடுதல், நவமணிக்குற்றத்தொன்று, அஃது குல்லைநிறம், விடப் படுவது.

**முத்தர்** - திடர், முத்திக்குரியோர்.

**முத்தலை** - சூலம்.

**முத்தலையிருதலைவேல்** - *அறு தலைக்கழுமுள்.*

**முத்தலைவேலோன்** - *சிவன், வயிரவன்.*

**முத்தன்** - *அரன், அருகன், சுத்தன், புத்தன், முத்திபெற்றோன், வயிர வன்.*

**முத்தாகலாபம்** - *முத்துமாலை.*

**முத்தாகாரம்** - *முத்துச்சிப்பி.*

**முத்தாடல்** - *கொஞ்சுதல்.*

**முத்தாதனம்** - *இடக்காற்பரட்டாற் சீவனியையழுத்தி வலக்காற் பரடப்பாட்டின் கீழமுந்தவிருத்தல்.*

**முத்தாத்துமா** - *பக்குவன்.*

**முத்தாபலம்** - *இயங்கஞ்செடி. முத்து.*

**முத்தாமணக்கு** - *ஓராமணக்கு.*

**முத்தி** - *திசை.*

**முத்திக்கை** - *அரண்வளைப்பு.*

**முத்தி** - *கொஞ்சுதல், மோக்கம்.*

**முத்திதிசை** - *ஞானபட்சம்.*

**முத்திநெறி** - *ஞானமார்க்கம்.*

**முத்திபதம்** - *மோட்சபதவி, ஞான நிலை.*

**முஸ்திப்பு, முஸ்தீது** - *அசீர்.*

**முத்திப்பேறு** - *மோட்சவாழ்வு.*

**முத்திமார்க்கம்** - *விதிமார்க்கம்.*

**முத்திரி** - *அடையாளம்.*

**முத்திரிகை** - *முத்திரை, முத்திரை மோதிரம்.*

**முத்திரித்தல்** - *முத்திரைவைத்தல்.*

**முத்திருக்கஞ்செடி** - *ஓர் செடி.*

**முத்திரை** -*அடையாளம்.*

**முத்திரைக்கம்பு** - *முத்திரைஅச்சு.*

**முத்திரைக்கூடம்** - *காவலறை.*

**முத்திரைக்கோல்** - *முத்திரைக்கம்பு.*

**முத்திரைப்பல்லவம்** - *பதத்தினடி தோறு மொட்டிப் படிக்கும் பல்லவம்.*

**முத்திரைமோதிரம்** - *ஓர்வகைக்கணை யாழி.*

**முத்திவிக்கினம்** - *முத்திக்கிடையூறு, அஃது அறியாமை, ஐயம், திரிபு.*

**முத்தீ** - *உதரத்தீ, உயிர்த்தீ, சினத்தீ, அன்றியும்ஆகவனீயம், காருக பத்தியம், தக்கணாக்கினியம், எனும் மூவகையங்கி.*

**முத்து** - *ஓரிரத்தினம், சங்குமுதலிய வற்றின்முட்டை, பருப்பு, மேலானது, வைசூரிக்குரு.*

**முத்துக்கற்கம்** - *ஓர் மருந்து.*

**முத்துக்குமாரன்** - *முருகன்.*

**முத்துக்குளி, முத்துக்குளித்தல்** - *முத்தெடுக்கநீரில்முழுகல்.*

**முத்துக்கொட்டை** - *ஆமணக்கங் கொட்டை.*

**முத்துச்சம்பா** - *ஓர் நெல்.*

**முத்துச்சலாபம்** - *முத்துக்குளிப்பின் பேறு.*

**முத்துச்சனிப்பு** - *முத்துண்டாகு மிடம், அஃது உடும்பு, கமுகு, கரும்பு, கொக்கு, சங்கு, சிப்பி, செந்நெல், தாமரை, நங்கையர் கழுத்து, நந்து, நாகம், பசுவின் பல், மீன், முதலை, மூங்கில், மேகம், யானைக் கொம்பு.*

**முத்துச்சிப்பி** - *முத்திருக்குமிப்பி.*

**முத்துச்சிவிகை** - *முத்துப்பல்லக்கு.*

**முத்துச்சோளம்** - *வெள்ளைச் சோளம்.*

**முத்துமாதளை** - *ஓர் மாதளை.*

**முத்துமாலை** - *முத்துக்கோவை.*

**முத்துருவி** - *ஓர்வகைக்காதணி.*

**முத்துவடம்** - *ஓர்சீலை, முத்துமாலை.*

**முத்துவன்னச்சேலை** - *ஓர்சேலை.*

**முத்தெறிதல்** - *குருநோய்பிடித்தல்.*

**முத்தை** - *கவளம், திரட்சி, மிகவுந் தெரிவிலாள்.*

**முத்தையன்** - *சுப்பிரமணியன்.*

**முத்தொகைவினா** - *ஓர்வகைக்கணக்கு.*

**முத்தொழிலோர்** - *வைசியர்பொது.*

**முத்தொழில்** - *முச்செயல், அஃது சிருட்டி, சங்காரம்.*

**முத்தொழிற்பகவன்** - *கடவுள்.*

**முத்தொள்ளாயிரம்** - *ஓர் பாடல்.*

**முத்தோஷம்** - *முப்பிணி.*

**முந்த** - *முன்னே.*

**முந்தல்** -*தலைப்பு, முச்சந்தி, முந்துதல்.*

**முந்தன்** - *மூத்தோன்.*

**முந்தானை** - *முன்றானை.*

**முந்தி** - *முன்றானை, முன்னே.*

**முந்திரி** - *ஓர் சிற்றிலக்கம்.*

**முந்திரிகை** - *ஓரெண், ஓர் செடி.*

**முந்து** - *பொந்து, முந்தென்னேவல், வெண்ணாரை.*

**முந்துதல், முந்துறல்** - *முற்படுதல்.*

**முந்தூள்** - *மூங்கில்.*

**முந்தை** - *பழைமை.*

**முந்தைநாள்** - *முன்னாள்.*

**முந்தையோர்** - *முன்னோர்.*

**முந்நீர்** - *கடல்.*

**முந்நூல்** - *பூணூல், மூவகைநூல் அஃதுமுதனூல், சார்புநூல், வழி நூல்.*

**முப்பகை** - *காமம், மயக்கம், வெகுளி, முத்திவிக்கினமாய பகை மூன்று, அஃது உடல், உலகு, பசாசு.*

**முப்பலை** - *திரிபலை.*

**முப்பழம்** - *முக்கனி அஃதுமா-பலா-வாழையிவற்றின் கனி.*

**முப்பா** - *ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா.*

**முப்பாட்டன்** - *பாட்டனுடைய பாட்டன்.*

**முப்பாட்டி** - *முப்பாட்டன் மனைவி.*

**முப்பால்** - *முப்பகுதி, அஃது ஆண் பால், பெண்பால், அலிப்பால், மூன்றுவிதப்பால், அஃது காய்ச்சுப் பால், திரட்டுப்பால், குழம்புப் பால்.*

**முப்பாழ்** - *உடம்புக்குட்சூனியமாய மூன்றிடம்.*

**முப்பான்** - *முப்பது.*

**முப்பிணி** - *முத்தோஷம், அவை வாதபித்த சிலேற்பனம்.*

**முப்புடி** - *முக்குணம்.*

**முப்புடைக்காய்** - *தேங்காய்.*

**முப்புரம்** - *திரிபுரம், அவை இருப்பு மதில், பொன்மதில், வெள்ளி மதில்.*

**முப்புரிநூலோர்** - *பார்ப்பார்.*

**முப்புரிநூல்** - *பூணூல்.*

**முப்புள்ளி** - *ஆய்தவெழுத்து.*

**முப்பூரம்** - *பூரட்டாதி, பூரம், பூராடம்.*

**முப்பேதம்** - *சுகதபேதம், சுசாதி பேதம், விசாதிபேதம்.*

**முப்பொறி** - *மனம்-வாக்கு-காயம்.*

**முமுடசத்துவம், முமுடம்** - *முற்றத் துறத்தல்.*

**முமுடசு** - *துறவு.*

**முமூடசுத்துவம்** - *பரவிராகம்.*

**மும்மடங்கு, மும்மடி** - *மூன்று.*

**மும்மடியாகுபெயர்** - *ஒன்றற் கிருமடி யாகு பெயராய்நிற்பது அதனா லாயமற்றொன்றற்கும் பெயராய் வழங்குவது, (உம்) கார்.*

**மும்மணிக்கோவை** - *ஓர் பிரபந்தம், அஃது வெண்பாவு மாசிரியப் பாவுங் கலித்துறையு முறையே தொகை முப்பதுபெறவடுக்கியந் தாதித் தொடையாய்ப்பாடுவது.*

**மும்மணிமாலை** - *ஓர் பிரபந்தம், அஃது வெண்பாவுங் கலித்துறை யும் அகவலும் அந்தாதித் தொடை யான் முப்பதுபாடுவது.*

**மும்மண்டலம்** - *பூமி, அந்தரம், சுவர்க்கம்.*

**மும்மதக்கோடு** - *தாலம் பாஷாணம்.*

**மும்மரம்** - *மும்முரம்.*

